Sri:

Srīmatē Rāmānujāya namaha

# Bagavat Vishayam

# TIRUVĀYMOḺI

## ĪṬṬIṈ TAMIḺĀKKAM

VOLUME - IV (Hymns 333 - 442)

by

VIDWAN

B. R. PURUSHOTHAMA NAIDU

*Junior Lecturer in Tamil*

UNIVERSITY OF MADRAS.

UNIVERSITY OF MADRAS

1954

MADRAS UNIVERSITY TAMIL DEPARTMENT

PUBLICATION No. 18 - 4.

*General Editor* :

R. P. SETHU PILLAI, B.A., B.L.,

*Professor of Tamil*

UNIVERSITY OF MADRAS.

---

# TIRUVĀYMOḺI

## ĪṬṬIṈ TAMIḺĀKKAM

### VOLUME - IV (Hymns 333 - 442.)

Sri:

Srīmatē Rāmānujāya namaha

## Bagavat Vishayam

# TIRUVĀYMOḺI

## ĪṬṬIṈ TAMIḺĀKKAM

VOLUME - IV (Hymns 333 - 442)

by

VIDWAN

B. R. PURUSHOTHAMA NAIDU

*Junior Lecturer in Tamil*

UNIVERSITY OF MADRAS.







UNIVERSITY OF MADRAS

1954

Price Rs. 10-0-0.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## பகவத் விஷயம்

# திருவாய்மொழி

## பகுதி - 4. (நான்காம் பத்து)

## ஈட்டின் தமிழாக்கம்

சென்னை
சருவகலாசாலைத் தமிழ் ஜூனியர் லெக்சரர்
வித்வான்
பு. ரா. புருஷோத்தம நாயடு
ஆக்கியது.



சென்னைச் சருவகலாசாலை

1954

விலை ரூ. 10-0-0.

ஸ்ரீ:

# இப்புத்தகத்தில் அடங்கியவை

—:o:—

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க.

---

# முகவுரை

---

இருளாய்ப் பரந்த உலகங் களைவிளக் கும்மிரவி
பொருளாய்ப் பரந்தது தான்பொது நிற்றலின் மற்றதுபோல்
மருளாய்ப் பரந்த மயக்கத் துயக்கற்ற மாறன்எங்கோன்
அருளாற் சமயமெல் லாம்பரன் உண்டென் றறிவுற்றதே.

(கம்பநாடர்)

இறைவனுல் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வாருடைய அருளிச்செயலாகிய திருவாய்மொழியின் நான்காம் பத்திற்கு '**ஈட்டின் தமிழாக்கம்**' என்னும் பெயரிய உரை எங்குலக் கொழுந்தாகிய ஆழ்வாருடைய திருவருளால் இப்பொழுது வெளிவருகின்றது. முன்னர் வெளிவந்த முதல் மூன்று பத்துக்களையும் ஏற்ற தமிழுலகம் இதனையும் ஏற்று அடியேற்கு ஊக்கம் அளிக்கும் என்பது அடியேனது துணிவு.

"அதிரதர் தம்மை எண்ணில் அணிவிரல் முடக்கல் ஒட்டா முதிர்சிலை முனி" என்கிறபடியே, மேதாவிகட்கெல்லாம் மேலாய மேன்மையாளரும், உற்ற நோய் நீக்கி உறுமை முற்காக்கும் பெற்றியாளரும், பரம வைதிககுல திலகருமான **பாரதரத்நம் சக்கரவர்த்தி இராஜகோபாலாசாரியர் அவர்கள்**, இத்திருவாய்மொழியின் மற்றைய பத்துக்களும் விரைவில் வெளிவரல் வேண்டும் என்னும் பரம கிருபையால் நிர்ஹேதுகமாக, தாம் சென்னை அரசாங்க முதல் அமைச்சராக இருந்த காலத்தில், ரூ. இரண்டாயிரம் கொடுப்பித்து உதவி செய்தார்கள்; அப் பெரியார்க்கு அடியேன் தாளும் தடக்கையும் கூப்பித் தொழும் வணக்கத்தோடு என்றென்றும் நன்றி செலுத்துங் கடப்பாடுடையேன்.

இவ்வுரையை எழுதிவந்த காலத்தும் பதிப்பித்த காலத்தும் ஆங்காங்கு வேண்டிய உதவிகளைச் செய்த பெரியார்கட்கும் நண்பர்கட்கும் நன்றி செலுத்துதலையுடையேன்.

இந்நூலைச் சென்னைப் பல்கலைக் கழகத்தார் அச்சிடுதற்குக் காரணராய் இருந்த சொல்லின் செல்வர் தமிழ்ப் பேராசிரியர் உயர்திரு. ரா. சேதுப்பிள்ளை, B.A., B.L., அவர்கட்கும், தொடர்ச்சியாக வெளியிட்டு உதவிவரும் சென்னைப் பல்கலைக் கழக அதிகாரிகட்கும் நன்றி செலுத்துங் கடப்பாடுடையேன்.

குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

சென்னை,
23-8-1954.

இங்ஙனம்,
பு. ரா. புருஷோத்தம நாயடு.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
மாறன் மலரடி வாழ்க.

—(०)—

# திருவாய்மொழி

## நான்காம்பத்து

### முதல் திருவாய்மொழி — "ஒரு நாயகம்"

### முன்னுரை

—(०)—

ஈடு:—முதற்பத்தால், [1]பகவத் கைங்கர்யம் புருஷார்த்தம் என்று அறுதியிட்டார்; இரண்டாம் பத்தால், அந்தக் கைங்கர்யத்தில் களை அறுத்தார்; மூன்றும் பத்தால், களை அறுக்கப்பட்ட அந்தக் கைங்கர்யமானது [2]பாகவத சேஷத்வ பர்யந்தமான பகவத் கைங்கர்யம் என்றூர்; இப்படிப்பட்ட கைங்கர்யத்திற்கு விரோதிகள் ஐஸ்வர்ய [3]கைவல்யங்கள் என்கிறார் இந்த நான்காம்பத்தால்.

முதல் மூன்று பத்துக்களாலும் [4]துவயத்தில் பின் வாக்

---

1. பகவத் கைங்கர்யம் - பகவானுக்குச் செய்யும் தொண்டு. புருஷார்த்தம் - புருஷனாலே பிரார்த்தித்துப் பெறத்தக்கது; பேறு.

2. பாகவத சேஷத்வ பர்யந்தமான - அடியார்கட்கு அடிமையா யிருத்தலை எல்லையாக வுடையதான.

3. கைவல்யம் - ஆத்ம அநுபவம்.

4. துவயம் - ஒரு மந்திரம்.
ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம:
என்று இரண்டு வாக்கியமாக அமைந்திருத்தலின் இது துவயம் எனப் பெயர் பெற்றது. இதில் பின் வாக்கியம், 'ஸ்ரீமதே நாராயணாய நம:' என்பது. பெரிய பிராட்டியாரோடு சேர்ந்திருக்கின்ற எல்லார்க்கும் இறைவனான நாராயணனுக்கு அடிமை செய்வேனாக வேணும்; அவ்வாறு செய்யும் அடிமையும் அவனுக்கேயாகவேணும் என்பது இதன்பொருள். இப்பொருளையே,

கியத்தின் பொருளை அருளிச்செய்தார்; இனி, [1]மேல் வருகின்ற மூன்று பத்துக்களாலே அதில் முன் வாக்கியத்தின் பொருளை அருளிச்செய்கிறார். முதல் மூன்றுபத்துக்களாலும் சொன்ன புருஷார்த்தத்துக்கு உரிய உபாயத்தை[2] அடியிலே அறுதியிடுகிறார். [3]இவ்வடி அறியாதாரே அன்றோ வேறு உபாயங்களாகிற விலக்கடிகளில் செல்லுகின்றவர்கள். [4]நிரவதிகப் பிரீதியோடேயன்றோ, மேல் திருவாய்மொழியை இவர் அருளிச் செய்தது. தாமும் குறைவற்று, பற்றினர் குறைகளையும் தீர்க்கவல்லராம்படி இருந்தார் மேல். சம்சாரிகளைப்

---

மேல் மூன்றுபத்துக்களாலும் அருளிச்செய்தார் என்பதனைத் தெரிவிக்கின்றார்.

1. 'மேல் வருகின்ற மூன்று பத்துக்களாலே' என்றது, 4-ஆம் பத்து, 5-ஆம் பத்து, 6-ஆம் பத்துக்களைக் குறித்தபடி. இம் மூன்று பத்துக்களாலே 'ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே' என்ற முன் வாக்கியத்தின் பொருளை அருளிச்செய்கிறார் என்றபடி. பெரிய பிராட்டியார் புருஷகாரமாக, வாத்சல்யம் ஸ்வாமித்வம் சௌசீல்யம் சௌலப்யம் ஞானம் சக்திகளாகிற குணங்களையுடைய எம்பெருமானுடைய திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன் என்பது இவ்வாக்கியத்தின் பொருள். இப் பொருள் தன்னையே 4, 5, 6-ஆம் பத்துக்களில் அருளிச்செய்கிறார் என்பதனைத் தெரிவிக்கின்றார். முதல் பத்து அவதாரிகை - 'திருமகள் கேள்வன் இரண்டு' காண்க. "இதில் (துவயத்தில்) முற்கூற்றால், பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈசுவரன் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது; பிற்கூற்றால், அச்சேர்த்தியிலே அடிமை இரக்கிறது" என்பது ஸ்ரீ பிள்ளைலோகாசார்யர் ஸ்ரீ சூக்தி.

2. 'அடியிலே' என்றது, சிலேடை; முதல் திருவாய்மொழியிலே என்றும், திருவடிகளிலே என்றும் பொருள். திருவடிகளிலே என்று பொருள் கொள்ளும்போது 'உபாயத்தை' என்பதற்கு உபாயத்தின் தன்மையை என்று பொருள் கொள்க. "சிந்தித்துய்ம்மினோ" என்பது போன்ற இடங்களில் உபாயத்வம் கூறப்பட்டிருத்தல் தெளிவு. உபாயத்வம் - உபாயத்தினது தன்மை. உபாயம் - வழி.

3. அல்லாதார் கர்மம் ஞானம் பக்திகளை உபாயமாகக் கொள்ளாநிற்க, இவர் திருவடிகளை உபாயம் என்கிறது என்? என்னும் வினாவிற்கு விடையாக 'இவ்வடி யறியாதாரே யன்றோ' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். அடி - திருவடிகள்.

4. மேல் திருவாய்மொழிக்கும் இத் திருவாய்மொழிக்கும் இயைபு அருளிச்செய்கிறார், 'நிரவதிகப் பிரீதியோடே' என்று தொடங்கி. நிரவதிகம் - தனக்கு மேல் ஒன்று இல்லாதது.

பார்த்து, 'நீங்கள் பற்றின விஷயங்கள் [1]தண்ணியவான பின்பு அவற்றைவிட்டுத் திருமகள்கேள்வனைப் பற்றுங்கோள்' என்று பரோபதேசத்தில் இழிகிறார் இத் திருவாய்மொழியில்.

நன்று; "வீடுமின்முற்றவும்" என்ற திருவாய்மொழியிலும் பரோபதேசம் செய்தார்; "சொன்னால் விரோதம்" என்ற திருவாய்மொழியிலும் பரோபதேசம் செய்தார்; இந்தத் திருவாய்மொழியும் பரோபதேசமா யிருக்கின்றது; இவற்றிற்குக் கருத்து என்? எனின், இவை எல்லாவற்றிலும் எல்லா அர்த்தங்களும் உளவேயாகிலும் ஒவ்வொன்று ஒவ்வோர் அர்த்தத்தில் நோக்காயிருக்கும். யாங்ஙனம்? எனில், "வீடுமின்முற்றவும்" என்ற திருவாய்மொழியில் 'இதர விஷய வைராக்கியம் முன்னாகப் பகவத் பக்தியைச் செய்யுங்கோள்' என்றார்; "சொன்னால் விரோதம்" என்ற திருவாய்மொழியில் 'பகவானைத் துதிப்பதற்குத் தக்கனவான உறுப்புக்களைக் கொண்டு பிறரைத் துதி செய்யாமல் சர்வேசுவரனைத் துதி செய்யப் பாருங்கோள்' என்றார்; இத் திருவாய்மொழியில் 'இவர்கள்தாம் பிறரைத் துதி செய்வது சில பிரயோஜனத்திற்காகவே யன்றே' என்று அவற்றினுடைய சிறுமை நிலையின்மை முதலிய தோஷங்களின் மிகுதியை அருளிச்செய்கிறார்.

செல்வம், அல்பமானது நிலையாதது முதலிய தோஷங்களையுடையதாகையாலே தண்ணிது; ஆத்மலாபமாகிய கைவல்யம் நிலைத்து நிற்பதாயினும் புருஷார்த்தம் அல்லாதது ஆகையாலே தண்ணிது; இப்படி ஐஸ்வரிய கைவல்யங்களுக்கு உண்டான தண்மையைச் சொல்லி, 'சர்வேசுவரனாகிறான் மங்களம் பொருந்திய எல்லா நற்குணங்களையுமுடையனாய் விரும்பினவை அனைத்தையும் கொடுக்கக் கூடியவனாய் இருப்பான் ஒருவன்; ஆனபின்பு, அவற்றை விட்டுப் பகவானைத் துதி செய்யப் பாருங்கோள்' என்று இங்ஙனே பகவானைப் பற்றுவதற்கு உண்டான நன்மையை விளக்கிப் பேசாநின்றுகொண்டு பரோபதேசம் செய்ய இழிகிறார்.

---

1. தண்ணிய - இழிந்தன; தாழ்ந்தவை என்றபடி.

[1]இவர்தாம், சம்சாரிகள் இந்திரியங்களை வென்றவர்களாய் வந்து நின்றுகொண்டு, 'எங்களுக்கு நலத்தை உபதேசிக்கவேண்டும்' என்று கேட்க, உபதேசிக்கிறார் அன்றே? பிராட்டியும் ஸ்ரீவிபீஷணாழ்வானும் இராவணனை நோக்கி நலத்தைக் கூறினாற்போன்று இருப்பது ஒன்றேயன்றோ இவருடைய பரோபதேசம்? [2]"எல்லா ஆத்மாக்களையும் அபஹரிக்கின்றதான காலபாசத்தினால் கட்டுஉண்டவனும் நாசத்தை அடைகின்றவனுமான இராவணனை, பற்றி எரிகின்ற வீட்டினைப் போன்று உபேக்ஷை செய்யமாட்டேன்" என்பது ஸ்ரீ விபீஷணாழ்வான் வார்த்தை. என்றது, என்சொல்லியவாறோ? எனின், வெந்து அற்ற வீட்டிலே 'ஒரு கம்பாகிலும் கிடைக்குமோ?' என்று அவிக்கப் பார்ப்பாரைப் போன்று, நானும் நலத்தைக் கூறுவேன் என்கிறார் என்பது.

---

### 333.

ஒருநா யகமாய் ஓட உலகுடன் ஆண்டவர்
கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்
பெருநாடு காண இம்மையிலே பிச்சைதாம் கொள்வர்[3]
திருநா ரணன்தாள் காலம்பெறச் சிந்தித்து உய்ம்மினோ.

**பொழிப்புரை :**—ஒற்றை வெண்கொற்றக்குடையின் நிழலிலே தன் ஆணையானது தடையின்றிச் செல்லும்படி உலகத்தைஎல்லாம்

---

1. பரோபதேசம் செய்யும்போது "உய்ம்மின்" என்று பன்மையிலே அருளிச் செய்வதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'இவர்தாம்' என்று தொடங்கி. பேரருளாலே உபதேசிக்கிறார் என்று கருத்து.

2. ஸ்ரீராமா. யுத். 16 : 21.

3. அறுசுவை உண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட
மறுசிகை நீக்கி உண்டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்பர் ஓரிடத்துக் கூழெனிற் செல்வமொன்று
உண்டாக வைக்கற்பாற் றன்று.

என்பது நாலடியார்.

முல்லை முகைசொரிந்தாற் போன்றினிய பாலடிசில் மகளி ரேந்த
நல்ல கருனையா னள்வாயும் பொற்கலத்து நயந்துண் டார்கள்
அல்ல லடைய அடகிடுமி னேட்டகத்தென் றயில்வார்க் கண்டும்
செல்வ நமரங்காள் நினையன்மின் செய்தவமே நினைமின் கண்டீர்.

என்பது சிந்தாமணி. 2623.

ஒருசேர ஆண்ட சக்கரவர்த்திகள், கரிய நாயால் கவ்வப்பட்ட காலை யுடையவர்களாய் உடைந்த பானையை யுடையவர்களாய்ப் பெரிய நாட்டிலேயுள்ள மக்கள் எல்லாரும் காணும்படியாக இப் பிறவியிலேயே இரந்து உண்ணும் தொழிலைத் தாங்களே மேற்கொள்வார்கள்; ஆதலால், திருமகள் கேள்வனான நாராயணனுடைய திருவடிகளைக் காலம் நீட்டிக்காமல் (மிக விரைவில் என்றபடி) மனத்தால் நினைத்து உஜ்ஜீவிக்கப் பாருங்கோள் என்கிறார்.

**விசேடக் குறிப்பு :**—நாயகம் - முதன்மை. ஆக ஒட ஆண்டவர் என்க். ஆண்டவர் கொள்வர் எனக் கூட்டுக. காலர், யானையர் என்பன: முற்றெச்சங்கள். கவர்ந்த என்பது, ஈண்டுச் செயப்பாட்டு வினையின்கண் வந்தது.

இத்திருவாய்மொழி, கலிநிலைத்துறை.

ஈடு :—முதற்பாட்டில், [1]சார்வபௌமராய்ப் போந்த இராஜாக்கள் அந்த ராஜ்யஸ்ரீயை இழந்து இரந்து உயிர்வாழ வேண்டும்படி வறியர் ஆவார்கள்; ஆனபின்பு, [2]"ஸ்ரீவத்ஸ வக்ஷா நித்யஸ்ரீ—ஸ்ரீவத்சத்தை மார்பிலே யுடையவன்; நித்ய மான ஸ்ரீயையுடையவன்" என்கிறபடியே, அழியாத செல்வ மான சர்வேசுவரனைப் பற்றப் பாருங்கோள் என்கிறார்.

ஒரு நாயகமாய் - தனி அரசாக. [3]"உலகங்கட்கு எல்லாம் தலைவன்" எனப்படுகின்ற சர்வேசுவரனுடைய ஐஸ்வரியத்தைப் [4]பௌண்ட்ரகவாசுதேவன் அநுகரித்தாற்போலே அநுகரிக்கிறவாற்றைத் தெரிவித்தபடி. நிலை நில்லாத ஐஸ்வரி

---

1. சார்வபௌமராய்ப் போந்த இராஜாக்கள் - ஒரு நாயகமாய் உலகுடன் ஆண்ட சக்கரவர்த்திகள்.

2. ஸ்ரீ ராமாயணம் யுத்தகாண்டம். இது, மண்டோதரி வார்த்தை.

3. தைத்திரீய நாராய. உப. 11 : 8.

4. பௌண்ட்ரக வாசுதேவன் :
செங்கதிர்க் கற்றை காலும் திகிரியஞ் செல்வன் யானே
சங்கொடு தழல்வாய் நேமி தாங்குதல் விடுத்தா லுய்ந்தான்
அங்கவை விடுக லானேல் ஆடமர்க் கெழுக என்னு
வெங்கடக் களிறட் டார்க்கு விடுத்தனன் தூது மன்னே.

என்பது பாகவதம். இவன் சரிதையைப் பாகவதம் பத்தாங் கந்தம் 38-வது அத்தியாயத்தில் உணரலாகும்.

யத்தைப்பற்றி [1] நீர்க்குமிழிபோலே உடைந்து போகின்ற மனிதர்களாதலின் 'நாயகம்ஆய்' என்கிறார். ஓட - இப்படி ஆளுவது எத்துணைக்காலம் என்றால், நெடுங்காலம். என்றது, 'அறுபதினாயிரம்யாண்டு, எழுபதினாயிரம்யாண்டு' என்கிறபடியே, நெடுக என்றபடி. இப்படி நெடுங்காலம் ஆள்வது எவ்வளவு? என்னில், உலகு - கடல் சூழ்ந்த பூமிப்பரப்பு அடங்கலும்; [2]"எங்கிருந்து சூரியன் உதிக்கின்றானோ எங்கு மறைகின்றானோ அதற்கு இடைப்பட்ட பூமிமுழுதும் யுவநாஸ்வனுடைய புதல்வனான மாந்தாதா என்ற அரசனுடைய க்ஷேத்ரம் என்று சொல்லப்படுகிறது" என்கிறபடியே, [3]முந்திரிகை நிலம் உடையவனைப்போலே ஆயிற்று ஆள்வது. உடன் ஆண்டவர் - இந்தப் பூமிப்பரப்பில் ஓர் இடம் குறைகிடவாதபடி ஆண்டவர் என்னுதல். அன்றிக்கே, [4]"பாப காரியங்களை நினைத்தவர் முன்பே கையும்வில்லுமாய் நின்று நோக்கிக்கொண்டு போந்த கார்த்தவீர்யார்ச்சுனனை"ப் போன்று ஆண்டவர்கள் என்னுதல்.

இப்படிச் சக்கரவர்த்திகளாய் இருந்துகொண்டு தனி அரசாக நெடுநாள் உலகத்தை ஆண்டு போந்தவர்கள் பின்னை என் செய்வர்கள்? என்னில், [5]"இராஜ்யம் என்பது, வைத்யம் செய்யமுடியாததும் நாசத்தைவிளைவிப்பதுமான பெரியதொரு நோய்; அதன்பொருட்டு, அரசர்கள் சகோதரனையும் பிள்ளையையும் விடுகிறார்கள்அல்லவா?" என்கிறபடியே, அவற்றை இழந்து வருந்துவார்கள் என்கிறார் மேல்: கருநாய் கவர்ந்த காலர் - இப்படி நெடுநாள் மதிப்போடே ஜீவித்துப் போந்தவன் 'எளிமைப்பட்டு ஜீவிக்கிறது என்? ஒரு பட்டினி

---

1. "நீரிற் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டும் நெடுந்திரைகள்"

என்றார் பிறரும்.

2. விஷ்ணு புரா. 4. 2: 65.

3. எய்யென எழுபகை எங்கு மின்மையான்
மொய்யெனத் தினவுறு முழுவுத் தோளினன்
வையக முழுவதும் வறிஞன் ஓம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றான்.

என்பர் கம்ப நாட்டாழ்வார். (அரசியற்ப.-12.)

4. ரகுவம்சம். சர்க். 6.

5. —.

விடுவோம்' என்று இருக்கமாட்டானே! ஜீவிக்கையில் உண்டான நசையாலே பிக்ஷை எடுப்பதற்குப் பார்ப்பான்; முன்பு குறைவற ஜீவித்துப்போந்தவன் ஆகையாலே, பலர் காண வெளியில் புறப்படமாட்டானே! நிலாநாளிலே [1] இருட்டுப் புரைகளிலும் இருட்டுநாளிலும் ஆயிற்றுப் புறப்படுவது; இருள் ஓர் இடத்திலே திரண்டாற்போலே கறுத்த நாய்கள் கிடக்கும்; அதனை அறியாதே அவற்றின் வாயிலே காலை இடும்; அவை கடிக்கும். அன்றிக்கே, கருநாய் என்பதற்கு, கருமை - [2]சீற்றமாய், வெட்டிய நாய் என்னுதல். அன்றிக்கே, கருநாய் - கருவையுடைத்தான நாய் என்னுதல்; என்றது, குட்டி இட்டநாய் என்றும் குட்டியைக்காத்துக்கொண்டு கிடக்குமாகையாலே 'அதற்கு ஏதேனும் தீங்கு வருகிறதோ?' என்று கண்டாரை ஓடிக் கடிக்குமேயன்றோ? அதனைச் சொல்லுகிறது என்றபடி. காலர்—'**வீரக் கழல் இட்ட கால்**' என்றேயன்றோ முன்னர் நிரூபிப்பது; இப்போது '**நாய் கடித்த கால்**' என்றாயிற்றுச் சொல்வது என்பார் '**நாய் கவர்ந்த காலர்**' என்கிறார். சிதைகிய பானையர் - கண்ட இடம் எங்கும் பொளிந்து உபயோகத்திற்குத் தகுதியின்றிக்கே போகட்டுக் கிடந்தது ஒன்றனை எடுத்துக்கொள்ளும். இட்டது உண்டாகில் ஒரு மூலையிலே கீழே போம்படியாயிற்று இருப்பது என்பார் '**சிதைகிய**' என்றும், முன்பு பொற்கலத்திலே உண்டு வாழ்ந்தவனுக்கு இப்போது ஒரு புத்தோடு கிடையாதபடியாயிற்று என்பார் '**சிதைகியபானையர்**' என்றும் அருளிச்செய்கிறார்.

பெரு நாடு காண - [3]முன்பு பச்சை கொண்டு வந்தவர்கள் ஓர் யாண்டு ஆறுமாதங்களும் உள்ளும் புகப்பெறாதே நின்று உலரும் இத்தனை அன்றோ? அதற்கும்போர இப்போது தடை அற்று இருந்ததே குடியாகக் காணும்படியாக. அன்றிக்கே,

---

1. இருட்டுப் புரை - இருள் நிறைந்துள்ள இடம்.

2. "கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள" என்பது தொல்காப்பியம்.

3. பெருநாடு காண்கிறது எதற்காக என்ன? விடை அருளிச்செய்கிறார் 'முன்பு பச்சை கொண்டு வந்தவர்கள்' என்று தொடங்கி. பச்சை - காணிக்கை; கையுறை. இச் சொல், நச்சினார்க்கினியர் எழுதிய சிந்தாமணி உரையில் பல இடங்களில் பயின்று வருதல் காணலாகும். 'இருந்ததே குடியாக' என்றது, எல்லாரும் என்றபடி.

முன்பு போர வாழ்ந்து எளிமைப்பட்டவன் ஆகையாலே எல்லாரும் காண வருவர்கள் ஆதலின், '**பெருநாடுகாண**' என்கிறார் என்னுதல். இப்படிச்செய்வது ஒரு பிறவியில் வாழ்ந்து மற்றொரு பிறவியிலேயோ? என்னில், இம்மையிலே - அப்படி வாழ்ந்த இந்தப் பிறவியிலேயே. பிச்சை - [1]முன்பு அரசர்களுக்கு இராஜ்யம் வழங்கினையன்றோ போந்தது; இப்போது ஒருபிச்சை மாத்திரமேயாயிற்று இவன் விரும்புவது. [2]முன்பு இராஜாக்கள் கொண்டு வந்த பச்சையை, சிலர் இடத் தாம் கொண்டார் என்பது ஆகாமைக்கு ஆள் வைத்தேயன்றோ வாங்குவது; இப்போது தாமே கொள்வர். அன்றிக்கே, இடுகின்றவர்கள்பக்கல் நினைவு இன்றிக்கே, தம் விருப்பம் மாத்திரமே உள்ளது என்பார் '**தாம்கொள்வர்**' என்கிறார் என்னுதல்.

இராச்சியத் திரு இங்ஙனேயான பின்பு, திரு நாரணன் தாள் காலம்பெறச் சிந்தித்து உய்ம்மினோ - ஸ்ரீமானான நாராயணன் திருவடிகளை அடைந்து உஜ்ஜீவித்துப் போருங்கோள். [3]"இடர் கெடுத்த திருவாளன் இணை அடி" என்றும்,

---

1. "பிச்சை" என்றதற்கு பாவம், 'முன்பு அரசர்களுக்கு' என்று தொடங்கும் வாக்கியம்.

2. "தாம்" என்றதற்கு பாவம், 'முன்பு இராஜாக்கள்' என்று தொடங்கும் வாக்கியம். "தாம் கொள்வர்" என்றதற்கு, இரண்டாவதாக ஒரு கருத்து அருளிச்செய்கிறார், 'இடுகின்றவர்கள் பக்கல்' என்று தொடங்கி. என்றது, வாங்க வேண்டும் என்ற எண்ணம் இவனுக்கு உண்டு; கொடுக்கவேண்டும் என்ற எண்ணம் கொடுக்கின்றவனுக்கு இல்லை என்றபடி.

3. "பிச்சை தாம் கொள்வர்" என்று இடர் பட்டமை சொல்லுகையாலே, சர்வேசுவரனை அடைந்தால் இடர் இல்லையோ? என்னும் வினாவிற்கு விடையாக 'இல்லை' என்பதற்கு இரண்டு பிரமாணங்கள் காட்டுகிறார் "இடர் கெடுத்த திருவாளன்" என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி. 6. 9: 1.

> பெடையடர்த்த மடவன்னம் பிரியாது மலர்க்கமலம்
> மடலெடுத்து மதுநுகரும் வயலுடுத்த திருநறையூர்
> முடையடர்த்த சிரமேந்தி மூவுலகும் பலிதிரிவோன்
> இடர்கெடுத்த திருவாளன் இணையடியே அடைநெஞ்சே.

என்பது அத் திருப்பாசுரமாகும்.

[1]"அங்கு ஸ்ரீமந் நாராயணனிடத்தில் நான் பிச்சையை யாசித்தேன்" என்றும் வருகின்ற பிரமாணங்களைக் காணல் தகும். இதனால், [2]ஓடுகொண்டு இரப்பார்க்கு எல்லாம் இவனை ஒழியக் கதி இல்லை என்பது போதரும்; [3]"ஓட்டுண் ஒழித்த" வன் அன்றோ? தாள் - [4]"'பிள்ளாய்! உன் உள்வெதுப்பு ஆறுவது எப்போது? என்ன, 'நானும் எனக்கு வகுத்த முடிசூடி அவரும் தமக்கு வகுத்த முடி சூடின அன்றே" என்றான் அன்றோ ஸ்ரீபரதாழ்வான்; அப்படித் [5]தலையாகப் பிரார்த்திக்கப்பட்ட திருவடிகளை. [6]"அடி சூடும் அரசு" என்னக்கடவது அன்றோ? காலம் பெற - அரைநாழிகையாகிலும் முற்பட்டது உடலாக; [7]"வாழ்வு சாதலை முடிவாக உடையது; ரூபம் யௌவனம் இவைகள் முதுமையை முடிவாக உடையன; செல்வம் நாசத்தை முடிவாக உடையது; என்னும் இவற்றை அறிந்த எவன்தான் தைரியத்தை அடைவான்" என்ப ஆதலின், 'நாளைச்செய்கிறோம்' என்னுமது அன்று என்பார் '**காலம்பெற**' என்கிறார். அன்றிக்கே, [8]"ஒரு முகூர்த்தகாலமாவது ஒருகணநேரமாவது வாசுதேவனை நினைக்கவில்லை என்பது யாதுஒன்று உண்டு; அதுவே, இவனுக்கு "அஸந்நேவ பவதி - இல்லாதவன் ஆகிறான்" என்னும்படி வருகிற கேடு ஆகிறது; கேடு

---

1. இது, மச்ச புராணம்.

2. ரசோக்தியாக பாவம் அருளிச்செய்கிறார் 'இதனால், ஓடு கொண்டு இரப்பார்க்கெல்லாம்' என்று தொடங்கி.

3. "நக்கன், ஊன்முகமார் தலையோட்டுண் ஒழித்த எந்தை" என்பது அப் பாசுரப் பகுதி. பெரிய திருமொழி. 3. 4: 2.

4. ஸ்ரீராமா. அயோத். 98: 8.

5. தலையாக - தலையிலே ஆம்படியாக.

6. மேலே காட்டியதற்குப் பிரமாணம் "அடிசூடும் அரசு" என்பது. இது, பெருமாள் திரு. 10: 7.

7. அற்கா வியல்பிற்றுச் செல்வ மது பெற்றால்
அற்குப வாங்கே செயல்.
நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

என்பன திருக்குறள்.

8.

வருகைக்கு அவகாசமும் அதுவே; திரிபுஉணர்ச்சி ஆகிறதும் அதுவே; விலக்கப்பட்ட அநுஷ்டானம் ஆகிறதும் அதுவே" என்ப ஆதலின், '**காலம்பெற**' என்கிறார் என்னலுமாம்.

சிந்தித்து - இனி, 'பரிகரம் இல்லை' என்று கண்ணழிவு சொல்லவேண்டா; அவன் தந்த கரணங்களை அவனுக்கு ஆக்க அமையும்; நெஞ்சிலே [1] அடிபட அநுசந்திக்க அமையும் என்றபடி. உய்ம்மின் - அந்த அநுசந்தானம் பலத்தோடே கூடியிருக்குமாதலின் '**உய்ம்மின்**' என்கிறது. [2] "அந்தப் பகவானை நினைப்பதில் என்ன சிரமம் இருக்கிறது; நினைத்தால் மங்களத்தைக் கொடுக்கிறார்; இரவு பகல் எந்நேரத்திலும் அவரை நினைக்கின்றவர்களுக்குப் பாவங்களின் நாசமும் உண்டாகின்றன" என்றான் ஸ்ரீபிரஹ்லாதாழ்வான். 'பேறு எல்லார்க்கும் வேணும்' என்று இருக்கையாலே எல்லார்க்குமாக '**உய்ம்மின்**' எனப் பன்மையாக அருளிச்செய்கிறார். தாள் சிந்தித்து உய்ம்மின் - [3] அடிஅற்றால் வாடும் அத்தனையேயன்றோ? ஆதலால், அடியைப் பேணி நோக்கி உய்ந்து போருங்கள். (1)

334.

உய்ம்மின் திறைகொணர்ந் தென்றுலகாண்டவர் இம்மையே
[4]தம்மின் சுவைமட வாரைப் பிறர்கொளத் தாம்விட்டு
வெம்மின் ஒளிவெயில் கானகம் போய்க்குமை தின்பர்கள்
செம்மின் முடித்திரு மாலை விரைந்தடி சேர்மினோ.

**பொ - ரை :**—திறைப்பொருளைக் கொணர்ந்து கொடுத்து உயிர் வாழ்ந்து போமின் என்று கூறி, உலகத்தை எல்லாம் ஒரு குடையின்

---

1. 'அடிபட' என்பது, சிலேடை; திருவடிகள் படும்படி என்றும், பயில என்றும் பொருள்.

2. விஷ்ணு புரா. 1. 17 : 78.

3. 'அடியற்றால்' என்பது, சிலேடை; திருவடிகளும் மூலமும் என்பது பொருள்.

4. யானை எருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும்—ஏனை
வினைஉலப்ப வேறாகி வீழ்வர்தாம் கொண்ட
மனையாளை மாற்றார் கொள.

என்பது நாலடியார்.

கீழே ஆண்ட சக்கரவர்த்திகள் இன்பத்தை அளிக்கின்ற தம் பெண்களை இப் பிறவியிலேயே பிறர் கொள்ளும்படியாகத் தாமே விட்டு, கொடிய மின் ஒளி பரக்கின்ற காட்டிற்குச் சென்று, அங்கும் பகைவர்களாலே துன்புறுத்தப் படுவார்கள்; ஆகையாலே, ஒளி பொருந்திய திருமுடியைத் தரித்த திருமகள்கேள்வனுடைய திருவடிகளை விரைந்து சேர்மின் என்றவாறு.

வி - கு :—திறை கொணர்ந்து உய்ம்மின் என மாறுக. திறை - கப்பம். தம்மின் - தம்முடைய. இனி, தம் இன் என்பதில் 'இன்' என்பதனைச் சுவைக்கு அடையாக்கலுமாம். குமைதின்பர் - நலியப் படுவர். திருமாலை அடி விரைந்து சேர்மின் எனக் கூட்டுக. திருமாலை: உருபு மயக்கம்.

ஈடு :—இரண்டாம்பாட்டு. [1]இராச்சியத்தை இழத்தலே அன்றிக்கே, இராச்சியம்பண்ணுகிற காலத்தில் மணஞ்செய்து கொள்ளப்பட்ட இன்சுவை மடவார்களையும் பகைவர்களுக்குக் கொடுத்து எளிமைப்படுவர் என்கிறார்.

திறை கொணர்ந்து உய்ம்மின் என்று உலகு ஆண்டவர் - [2]பகைவர்களுடைய இராச்சியத்தைத் தனக்கு ஆக்கக் கோலினால் போர்செய்து ஆக்கிக்கொள்ளுகை அன்றிக்கே, 'நீ உன் பிராணனை நோக்கிக் கொள்ள வேண்டியிருந்தாயாகில், உன் செல்வம் அனைத்தையும் நம் பக்கலிலே கொண்டுவந்து தந்து உன்னைக்கொண்டு பிழைத்து ஓடிப்போ' என்கிற வார்த்தையாலே ஆயிற்றுத் தனக்கு ஆக்குவது; என்றது, படையும் குதிரையும் கொண்டு போர்செய்து தனக்கு ஆக்கிக்கொள்ள வேண்டா; திறையைக் கொண்டுவந்து கொடுத்து உயிர் பிழைத்துப் போகுங்கள் என்கிற சொல்லாலே உலகத்தை ஆண்டவர்கள் என்றபடி. இம்மையே - இப்படி அரசு ஆண்ட இந்தப் பிறவியிலேயே. தம் இன்சுவை மடவாரைப் பிறர் கொள்ள- தத்தமக்கு நிரதிசய [3]போக்யைகளான பெண்

---

1. "தம்மின் சுவை மடவாரைப் பிறர் கொள்ளத் தாம் விட்டு" என்பதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "என்று" என்பதிலே நோக்காக பாவம் அருளிச்செய்கிறார் 'பகைவர்களுடைய' என்று தொடங்கி.

3. போக்யைகளான - இனிய பெண்களான.

களைப் பகைவர்கள் கொள்ளும்படியாக; என்றது, தான் அரசு ஆளுங்காலத்தில் அந்தத் தேசத்திலேயுள்ள பெண்மணி களைஎல்லாம் திரட்டுமே? இவன் திரட்டினபடியே வேறு ஒரு வன் வந்து கைக்கொள்ளும் என்றபடி. இது, [1]நரகபுரம் அழிந்த அன்று கண்டதே அன்றோ? பாண்டவர்களுடைய இராஜசூயமும் செருக்கும் எல்லாம் கிடக்க, திரௌபதி சபை யிலே மானபங்கம் அடைந்த அதுவே அன்றோ இதில் பிரமா ணம். தாம் விட்டு - தம்முடைய உயிரைப் பாதுகாத்துக்கொள் ளுவதில் உண்டான நசையாலே, மனப்பூர்வமாகத் தாங்களே [2]கூறைப் பையும் சுமந்துகொண்டு போய் விட்டுப் போவர்கள்; [3]"ஆபத்தின் பொருட்டுச் செல்வத்தைச் செலவு செய்யாமல் காக்கக் கடவன், அப் பொருள்களைச் செலவு செய்தாகிலும் மனைவிமார்களைக் காக்கக் கடவன், **அம் மனைவிமார்களைக் கொண்டும் அப் பொருள்களைக் கொண்டும் தன்னைப் பாது காத்துக்கொள்ளக்கடவன்**" என்றார் பிறரும்.

வெம் மின் ஒளி வெயில் கானகம் போய் - பேய்த்தேரையும் வெயிலையுமுடைத்தான காட்டிலே போய். அன்றிக்கே, வெவ் விய மின்னின் ஒளிபோலே இருந்துள்ள வெயிலையுடைத்தான காட்டிலே போய் என்னுதல். என்றது, 'பின்னையும் இவன் இங்கே காணில் நலியும்' என்று, தண்ணீர் அற்றதாயும் மனித சஞ்சாரம் இல்லாததாயும் இருக்கின்ற காட்டிற்குச் செல் லும் என்றபடி. குமைதின்பர்கள் - நலிவுபடுவர்கள்; என்றது, [4]'செல்வ முடையவர்களுக்கு எங்கும் ஆள் ஓடுமே? 'அவன் போன இடத்தேபோய்க் கொன்று வருகிறோம்; [5]"எங்களுக்கு

---

1. பிறர் கொண்டதற்கு உதாரணம், 'நரகபுரம் அழிந்த அன்று' என்று தொடங்கும் வாக்கியம். நரகபுரம் - நரகாசுரனுடைய நகரம். மற் றும் ஓர் உதாரணம் காட்டுகிறார் 'பாண்டவர்களுடைய' என்று தொடங்கி.

2. கூறைப்பை - வஸ்திரம் வைத்துள்ள பை. கூறை - உடை.

3. தான் கொண்டு போய் விடவேண்டுமோ? என்னும் வினவிற்கு விடையாக 'ஆபத்தின் பொருட்டு' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

4. ஈட்டி எட்டினவரையில் பாயும்; பணம் பாதாளம் வரையிலும் பாயும் என்பது பழமொழி.

5. 'வெற்றிலை இட்டருளீர்' என்றது, உதவி செய்து உத்தரவு கொடுத்து அனுப்பவேண்டும் என்றபடி.

வெற்றிலை இட்டருளீர்' என்பர்கள்; அருகே நின்று. 'அப்படிச்செய்து வாருங்கோள்' என்று அவர்களுக்கு வேண்டுவன எல்லாம் கொடுத்து விடுவார்கள்; அங்கும்போய்க் கொலை தப்பாது என்றபடி.

[1]அடியிலே நாய் அடி இட்டு நலியத் தொடங்கிற்றே அன்றோ? [2]நாய் முதலிலே காற்கூறு கொண்டதே அன்றோ? ஆனபின்பு, செம் மின் முடித் திருமாலை விரைந்து அடி சேர்மின்- சிவந்து மின்னுகின்ற முடியையுடைய திருமகள்கேள்வனுடைய திருவடிகளை விரைவில் பற்றுவதற்குப் பாருங்கோள். தன்னை அடைந்தார்க்குக் கொடுக்கைக்குத் தலையான முடி உண்டு; கொடுப்பிக்கைக்கு அருகே இருப்பாரும் உண்டு; விரையாமையால் உள்ள இழவே உள்ளது என்பார் '**செம் மின் முடித் திருமாலை விரைந்து**' என்கிறார். அவன் முடியைத் தரினும் நீங்கள் திருவடியைச் சேருங்கோள் என்பார் '**அடி சேர்மினே**' என்கிறார். நீங்கள் [3] உங்கள் அடிவிடாதே கொள்ளுங்கோள் என்பதாம். (2)

## 335.

அடிசேர் முடியின ராகி அரசர்கள் தாம்தொழ
இடிசேர் முரசங்கள் முற்றத்து இயம்ப இருந்தவர்
பொடிசேர் துகளாய்ப் போவர்கள் ஆதலில் நொக்குஎனக்
கடிசேர் துழாய்முடிக் கண்ணன் கழல்கள் நினைமினே.

**பொ - ரை :**—தம்முடைய அடிகளிலே பொருந்திய முடியினையுடையவர்களாகி அரசர்கள் தாங்கள் தொழாநிற்க, இடியைப்

---

1. மேல் திருப்பாசுரத்தோடு கூட்டி ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'அடியிலே' என்று தொடங்கி. அடியிலே என்பதற்கு முதற் பாசுரத்திலே என்றும், காலிலே என்றும் இரு பொருள். அடியிட்டு என்பதற்கும் தொடங்கி என்றும், காலிலே பிடித்து என்றும் இரு பொருள்.

2. மேலே கூறியதை ரசோக்தியாக விவரிக்கிறார் 'நாய் முதலிலே' என்று தொடங்கி. 'காற் கூறு' என்றது, சிலேடை; காலாகிற பாகம் என்றும், நாலில் ஒரு பாகம் என்றும் பொருள். 'காற்கூறு கொண்டதே அன்றோ' என்றதனால், முக்காற் கூறும் வெற்றிலை பிடித்தவர்கள் கொள்ளுகிறார்கள் என்பது தொனி.

3. 'உங்கள் அடி விடாதே கொள்ளுங்கோள்' என்றது, சிலேடை; அடி - திருவடியும் மூலமும்.

போன்ற முரசங்கள் வீட்டின் முன்னிடத்திலே ஒலித்துக் கொண்டிருக்க வீற்றிருந்த சக்கரவர்த்திகள், (அங்ஙிலை கெட்டு) பொடியோடு சேர்ந்த தூளியாய்ப் போவார்கள்; ஆகையால், வாசனை சேர்ந்திருக்கின்ற திருத்துழாயினைத் தரித்த முடியினையுடைய கண்ணபிரானது திருவடிகளை விரைவில் நினையுங்கோள் என்பதாம்.

வி - கு:—முடியினராகித் தொழ இருந்தவர் என்க. இருந்தவர் துகளாய்ப் போவர் என முடிக்க. ஆதலில், கழல்கள் நினைமின் என்க. சொக்கு என்பது, விரைவுக் குறிப்பினைக் காட்டுகின்ற இடைச்சொல்.

ஈடு:—மூன்றும்பாட்டு. [1]இராஜாக்கள், தங்கள் காலிலே விழுந்து கிடந்தால் அதனை ஒருபொருளாக நினைத்து நோக்காத மதிப்பினையுடையவர்கள்[2] 'ஒருசேதநன்' என்று நினைக்க முடியாதபடி மதிப்பு அறுவர்கள் என்கிறார்.

அடி சேர் முடியினராகி - தன்னோடு ஒக்க 'அரசு' என்று இருந்த இராஜாக்கள் தன்காலிலே சேர்க்கப்பட்ட முடியையுடையராய். அரசர்கள் - இராஜாக்கள். தாம் தொழ - தாங்கள் அறிந்ததாகத் தொழும் இத்தனை போக்கி, 'இவன் இப்படித் தொழுதான்' என்னும் நினைவு அவனுக்கு இல்லை என்பார் '**தாம்தொழ**' என்கிறார். [3]'இன்று ஸ்ரீ பாதத்திலே தலை தாக்கத் தெண்டன் இடப்பெற்றோம்' என்று இவன் தான்

---

1. "அடிசேர் முடியினராகி அரசர்கள் தாம் தொழப் பொடி சேர் துகளாய்ப் போவர்கள்" என்பதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. சேதநன் - அறிவை யுடையவன். சேதநம் - அறிவு.
பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் வீயவும்
கல்லாதார் வாழ்வ தறிதிரேல் - கல்லாதார்
சேதன மென்னும் அச் சேறகத் தின்மையால்
கோதென்று கொள்ளாதாம் கூற்று.
என்பது நாலடியார்.

3. **கண்டிலன் என்னை என்பார் கண்டனன் என்னை என்பார்**
குண்டலம் வீழ்ந்த தென்பார் குறுகரி தினிச்சென் றென்பார்
உண்டுகோல் எழுச்சி என்பார் ஒலித்தது சங்க மென்பார்
மண்டல வேந்தர் வந்து நெருங்கினர் மயங்க என்பார்.
என்ற கம்பநாட்டாழ்வார் திருவாக்கு இங்கு ஒரு புடை ஒப்பு நோக்கலாகும்.
(பாலகாண். எழுச்சிப். 75.)

நினைத்திருக்கும் இத்தனை என்பதாம். [1]"தலையாலே யாசித்த அந்தப் பரதாழ்வானுடைய வேண்டுகோள் என்னால் முடிக்கப்படவில்லை" என்கிறபடியே, 'பிள்ளை தலையாலே இரக்க, நாம் மறுத்துப் போந்தோம்' என்று புண்பட்டுத் தலைசீய்க்கும் விஷயத்தைத் தொழுகிறார்கள் அன்றே? இவன் இப்படித் தொழ, அவன் செய்தது என்? என்னில்,

இடி சேர் முரசங்கள் முற்றத்து இயம்ப இருந்தவர் - 'இன்ன அரசன் காணப் புகுகிறான்' என்று ஓலக்கம் இருந்து, நாடகச்சாலையிலுள்ளாரை அழைத்து அருளப் பாடிட்டு, நாட்டில் மரங்களை அடையத் தொளைத்துத் [2]தோலை மேவி அதனை இடியைப் போன்று ஒலிக்கச்செய்து அநாதரித் திருப்பான். 'இன்னான் வந்து காலில் விழுந்து கிடந்தான்; அவன், இதனை அநாதரித்துக் கூத்துக் காண்பது பாட்டுக் கேட்பது ஆனான்' என்று உலகத்திலே பிரசித்தமாக வேணும்' என்று ஆயிற்று இவன் இருப்பது. [3]அங்கு நிற்கிற தூணைக்காட்டிலும் ஒருவாசி இல்லைகாணும் இவருடைய நினைவால்; ஆதலின், '**இருந்தவர்**' என்கிறார். இப்படி இருந் தவர்கள் என் ஆவர்? என்றால், பொடிபடுவர் என்கிறார் மேல்: பொடி சேர் துகளாய்ப் போவர்கள் - 'தனக்கு' என்று ஓர் ஆகாரம் இன்றிக்கே, 'பொடியோடே சேர்ந்த தூளி' என்று வேறு ஒன்றனோடே சேர்த்து நிரூபிக்க வேண்டும்படி ஆவர் கள். என்றது, தம்காலிலே ஒருவன் குனிந்தால் அநாதரிக்கும்

---

1. தொழுகின்றவன் ஆதரத்தோடு தொழ, தொழப்படுகின்றவன் குண ஹீநன் ஆகையாலே அநாதரித்திருக்கின்றான் என்பதனை உதாரண முகத் தாலே விளக்குகிறார் 'தலையாலே யாசித்த' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. யுத். 24 : 19.

"எந்தப் பரதாழ்வான் என்னை மீட்டு அழைத்துக்கொண்டு போகச் சித்திரகூட மலையை அடைந்தான், அடைந்து தலையாலே என்னை வணங்கி னான், வணங்கின அந்தப் பரதாழ்வானுடைய வார்த்தை என்னால் செய்யப் படவில்லை" என்பது அச் சுலோகத்தின் பொருள். வியாக்கியானத்தில் 'பிள்ளை' என்றது, பரதாழ்வானை. தலை சீய்க்கும் விஷயம் - ஸ்ரீராமபிரான். தலை சீய்த்தல் - துன்புறுத்தல்.

2. தோலை மேவி - தோலைக் கட்டி.

3. "இருந்தவர்" என்பதற்கு வியாக்யாதாவின் ஈடுபாடு: 'அங்கு நிற்கிற' என்று தொடங்கும் வாக்கியம். இவருடைய - ஆழ்வாருடைய.

படியான மதிப்பையுடையவர், தம்தலையிலே ஒருவன் அடி இட்டால் 'நாம் இவன் தலையிலே அடி இட்டோம்' என்று நினைக்க வேண்டாதபடி அல்ப தூளியாய்ப் போவர்கள் என்றபடி.

ஆதலில் - பொருளின் உண்மை நிலை இதுவான பின்பு, நொக்கு என - சடக்கு என. கடி சேர் துழாய் முடிக் கண்ணன் கழல்கள் நினைமின் - [1]முடி கொடுத்தால் மாலையும் கொடுக்க வேணுமே! திருமேனியின் பரிசத்தால் நாட்செல்ல நாட்செல்ல வாசனை ஏறி வாராநின்றுள்ள திருத்துழாய் மாலையைத் திருமுடியிலேயுடையனாய் அடியார்கட்குச் சுலபனான கிருஷ்ணன் திருவடிகளை அநுசந்திக்கப் பாருங்கோள். [2]நினைத்தல் மாத்திரம் போதியதாமோ? துதிசெய்தல் வேண்டாவோ? எனின், நினைத்த மாத்திரத்தில் கொண்டு முழுகுமேயன்றோ திருவடிகளின் இனிமை. அன்றிக்கே, இவ்வடியை நினைக்கவே சம்சாரம் அடி அறும் என்னுதல். என்றது, [3]"யமன், கையில் பாசத்தைத் தரித்த தன்னுடைய கிங்கரனைப் பார்த்துப் பகவானிடத்தில் பக்தியுள்ளவர்களை விட்டு விடு; நான் மற்றையோர்க்கே எஜமானன்; பாகவதர்களுக்கு எஜமானன்

---

1. 'முடிகொடுத்தால்' என்று தொடங்கும் வாக்கியம், ரசோக்தி. மேல் திருப்பாசுரத்தில் முடி கொடுத்தமை சொல்லிற்று. இங்கு மாலை கொடுத்தமை சொல்லுகிறது என்றபடி. "செம்மின் முடித் திருமாலை." என்றதன்றோ மேல் திருப்பாசுரத்தில்.

2. "நினைமினோ" என்பதற்கு இரண்டு வகையில் கருத்து அருளிச்செய்கிறார். முதலது, இனிமையிலே நோக்கு; இரண்டாவது, விரோதி அழிவதிலே நோக்கு.

3. விஷ்ணு புரா. 3. 7 : 14. இங்கே,

திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம்
மறந்தும் புறந்தொழா மாந்தர் - இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்கள் என்றான் நமனுந்தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு. (நான்முகன் திரு. 68.)

காவலில் புலனை வைத்துக் கலிதன்னைக் கடக்கப் பாய்ந்து
நாவலிட் டுழிதரு கின்றோம் நமன்தமர் தலைகள் மீதே
மூவுல குண்டு மிழ்ந்த முதல்வ நின் நாமங் கற்ற
ஆவலிப் புடைமை கண்டாய் அரங்கமா நகரு ளானே.

(திருமாலை. 1.)

என்னும் திருப்பாசுரங்களை அநுசந்திக்கத் தகும்.

அலன் என்று காதின் அடியில் சொன்னன் அல்லவா?" என்கிறபடியே, யமன் முதலானேர் அஞ்சும்படியான மதிப்பைப் பெறுவர் என்றபடி. (3)

336

[1] நினைப்பான் புகின்கடல் எக்கலின் நுண்மண லிற்பலர்
எனைத்தோர் உகங்களும் இவ்வுலகு ஆண்டு கழிந்தவர்
மனைப்பால் மருங்கற மாய்தல்அல் லால்மற்றுக் கண்டிலம்
பனைத்தாள் மதகளிறு அட்டவன் பாதம் பணிமினே.

பொ - ரை:—நினைப்பதற்குப் புகுந்தால், பல யுகங்களும் இந்த உலகத்தைஎல்லாம் ஆண்டு இறந்து போனவர்கள், கடல் எக்கலிலே உள்ள நுண்மையான மணல்களைக்காட்டிலும் பலர்ஆவர்; அவர்கள் அனைவரும் தாங்கள் வாழ்ந்த வீடுகள் இருந்த இடமும் தெரியாதபடி அழிந்தார்களேஅன்றி, வேறு ஒன்றனையும் பார்த்தோம் இல்லை; ஆதலால், பனைமரம்போன்ற கால்களையுடைய மதம்பொருந்திய யானையைக் கொன்ற கிருஷ்ணனது திருவடிகளை வணங்குங்கள் என்றவாறு.

வி - கு:—நினைப்பான்: வினையெச்சம் எக்கல் - மணல்மேடு. ஆண்டு கழிந்தவர் பலர் என்க. மனைப்பால் - மனை இடம்.

ஈடு:—நாலாம்பாட்டு. [2]செல்வத்தின் நிலையாமையும் மதிப்பு அறுகையும் கிடக்கச்செய்தே, இன்பத்தை அநுபவிக்கின்றவர்களுடைய நிலையாமையாலும் அவனைப் பற்றவேணும் என்கிறார்.

நினைப்பான்புகில் - நினைக்கப்புக்கால். 'புகில்' என்றதனால், [3]கடலிலே இழிவாரைப்போலே, நினைத்ததாய்த் தலைக்

1. " திரையிடு மணலினும் பலரே யுரைசெல
மலர்தலை யுலக மாண்டு கழிந் தோரே." (மதுரைக்காஞ். 236. 7.)
" தம்பெயர் தம்மொடு கொண்டனர் மாய்ந்தோர்
நெடுவரை இழிதரும் நீத்தஞ்சா லருவிக்
கடுவரற் கலுழிக் கட்கின் சேயாற்று
வடுவாழ் எக்கர் மணலினும் பலரே." (மலைபடுகடா. 553-6.)
இன்னும், சிலப்பதிகாரம் நடுநற் காதையில் 133-150 அடிகளிற் கூறப்படும் பகுதிகளையும் ஈண்டு ஒப்பு நோக்கல் தகும்.

2. மேலே கூறிய மூன்று பாசுரங்களின் பொருளையும் அநுவதித்துக் கொண்டு, "இவ்வுலகு ஆண்டு கழிந்தவர், மாய்தல் அல்லால் மற்றுக் கண்டிலம்" என்றதிலே நோக்காக அவதாரிகை அருளிச்செய்கிறார்.

3. 'கடலிலே இழிவாரைப் போலே' என்றது, கடலிலே இழிவார் நீந்தித் தலைக்கட்ட ஒண்ணாதாப் போலே என்றபடி.

கட்ட ஒண்ணாத படியாயிருக்கிற இருப்பும், தாம் உலக யாத்திரையை நினையார் என்னுமிடமும் தோற்றுகிறது. ஆயின், இப்பொழுது நினைக்கிறது என்? எனின், ஆனாலும், [1]பிறருடைய நலத்திற்காக அநுசந்திக்குமது உண்டேயன்றோ? கடல் எக்கலில் நுண்மணலில் பலர்-அலைவாய் எக்கலில் நுண்ணிய மணலிற் காட்டில் பலர் ஆவர். இப்படி யாண்டு முடிந்து போகிறவர்கள் தாம் யார்? என்னில், அல்ப மனிதர்கள் அல்லர்; [2]"பிரமாவினுடைய ஒருபகலை ஆயிரம் சதுர்யுகம் உள்ளதாகவும் ஓர் இரவை ஆயிரம் சதுர்யுகம் உள்ளதாகவும் அறிகிறார்கள்" என்கிறபடியே, [3]ஆயிரம் சதுர்யுகம் கூடியது ஒருபகலாய், இப்படி இராத்திரியாய், இங்ஙனம் நூறு ஆண்டு இருந்து துவிபரார்த்தகாலம் உயிர்வாழ்ந்து முடிந்து போகும் பிரமன் முதலானோர் என்கிறார்மேல்: எனைத்தோர் உகங்களும் இவ்வுலகு ஆண்டு கழிந்தவர் - பல யுகங்களும் இவ்வுலகை யாண்டு '[4]இது குறியழியாதே இருக்க, இவர்கள் '**என்னது**' என்று அபிமானித்து முடிந்து போனவர்கள். கழிந்தவர் கடல் எக்கலில் நுண்மணலில் பலர் எனக் கூட்டுக. [5]"உலகில் கழிந்த பிரமர்கள் கங்கையிலேயுள்ள மணல்போலவும் இந்திரனாலே பெய்

---

1. "வம்மின் புலவீர்!" என்ற பாசுர வியாக்கியானம் பார்க்கவும். 3. 9: 6.

2. ஸ்ரீ கீதை. 8 : 17.

3. 15-நிமிஷம் ஒரு காஷ்டை, 30-காஷ்டை ஒரு கலை, 30-கலை ஒரு முகூர்த்தம், 30-முகூர்த்தம் ஒரு நாள், 15-நாள் ஒரு பக்ஷம், 2-பக்ஷம் ஒரு மாதம், 2-மாதம் ஒரு ருது, 2-ருது ஒரு அயனம், 2-அயனம் ஒரு வருஷம், இப்படி மனித வருஷம் 360-கொண்டது ஒரு தேவ வருஷம், தேவ வருஷம் 12000-கொண்டது ஒரு சதுர் யுகம், 71-சதுர்யுகம் ஒரு மந்வந்தரம், 14-மந்வந்தரம் ஆயிரம் சதுர்யுகம், இது பிரமனுக்கு ஒரு பகல்; இரண்டாயிரம் சதுர்யுகம் பிரமனுக்கு ஒரு நாள். இந்த நாட்களால் மாதங்களையும் மாதங்களால் வருஷங்களையும் பெருக்கி, அதனால் வருகின்ற வருஷம் நூறு ஆனால் பிரமனுடைய ஆயுள் முடிவாகும் என்பர்.

4. 'இது குறியழியாதே இருக்க' என்றது, "கழிந்தவர்" என்றதற்கு பாவம். உலகம், பிரவாஹ ரூபேண நித்தியமாகையைப் பற்றிக் 'குறியழியாதே' என்கிறார்.

5. வைஷ்ணவ தர்ம சாஸ்திரம்.

விக்கப்படுகின்ற மழைத்தாரைகள் போலவும் எண்ணுதற்கு முடியாதவர்கள் ஆவர்'' எனப்படுதலால் '**கழிந்தவர் நுண் மணலிற் பலர்**' என்கிறார்.

மனைப்பால் மருங்கு அற - அசலிட்டுப் பக்கத்திலுள்ளார்க்கும் நாசமாம்; மனைப்பால் - மனைஇடம். மருங்கு - அயல். சிறுக ஜீவித்தானாகில் தன்னளவிலேபோம்; பரக்க ஜீவித்தானாகில் தன் அயலில் உள்ளாரையும் கொண்டுபோம்; பெரு மரம் முறிந்தால் அருகு உள்ளவற்றையும் கொண்டுபோம் அன்றோ? ஆதலின், '**மனைப்பால் மருங்கு அற**' என்கிறார். மாய்தல் அல்லால் மற்றுக் கண்டிலம் - 'இப்படி முடியுமது ஒழிய நிலைத்திருப்பாரை ஒருவரையும் கண்டிலோம். ஆனால், செய்யஅடுப்பது என்? என்னில், பனைத்தாள் மதகளிறு அட்டவன் பாதம் பணிமின் - பனைபோலே இருக்கையாலே அச்சத்தை உண்டாக்குகிற காலையுடைத்தான மதயானை உண்டு, குவலயாபீடம்; அதனை முடித்தவன் திருவடிகளைப் பற்றுதற்குப் பாருங்கோள். [2]அவன் உங்களுடைய பிரபலமான தடைகளைப்போக்க, நீங்கள் அவன்காலிலே தலைசாய்க்கப் பாருங்கோள் என்கிறார். மேற்பாசுரத்தில். [3]"மாம்"என்ற

---

1. தேங்கொள் பூங்கண்ணித் திருமுடித் திலகவெண் குடையோய்!
ஈங்கி தன்றியும் இமையவர் அமையலர்க் கடந்த
தாங்கு மாவண்கைச் சக்கர மிக்குயர் பிறரும்
யாங்க ணரவ ரூரொடு பேரெமக் குரையாய்.

அரசனே! யாம் இவ்வுலகில் மக்கட்குரியனவாகக் கூறிய நிலையாமையே யன்றியும் அவரிற் சிறந்த சக்கரவர்த்திகளும் நிலைபெற்றிருந்தாரில்லை; அவர்கள் ஊரும் பெயரும் நிலை பெருமையின், யாமுணர்ந்திலேம்; நீ நிலைபேறுணர்ந்தன உளவேல் கூறு என்றான் என்க. (சிந். முத். 163.)

2. "மதகளிறு அட்டவன்" என்றதனாற் போந்த பயனை அருளிச் செய்கிறார் 'அவன் உங்களுடைய' என்று தொடங்கி. களிறு அட்டது, விரோதிகளைப் போக்குதலுக்குச் சூசகம். இரண்டும் இருவர்க்கும் சொரூபம் என்றபடி.

3. "மாம்", "அஹம்" என்ற இரண்டும் சரம சுலோகத்திலுள்ள பதங்கள். மேல் பாசுரத்தில் "கண்ணன்" என்றதனால், சௌலப்யம் தோன்றுகிறது. அதனால், "மாம்" என்ற பதத்தின் பொருள் கூறப்பட்டது என்கிறார். இப் பாசுரத்தில் "மதகளிறு அட்டவன்" என்றதனால் சக்தி தோன்றுகிறது. அதனால், "அஹம்" என்ற பதத்தின் பொருள் சொல்லப்பட்டது என்கிறார்.

பதத்தின் பொருள் சொல்லப்பட்டது; இப்பாசுரத்தில் "அஹம்" என்ற பதத்தின் பொருள் சொல்லப்படுகிறது.[1] (4)

## 337.

பணிமின் திருவருள் என்னும்அம் சீதப் பைம்பூம்பள்ளி
அணிமென் குழலார் இன்பக் கலவி அமுதுண்டார்
துணிமுன்பு நாலப் பல்ஏழையர் தாம்இழிப் பச்செல்வர்
மணிமின்னு மேனிநம் மாயவன் பேர்சொல்லி வாழ்மினே.

**பொ - ரை:**—திருவருள் புரிதல்வேண்டும் என்று கூறுகின்ற அழகிய மிருதுவான கூந்தலையுடைய பெண்களோடு அழகிய குளிர்ந்த பரந்த பூக்களாலான படுக்கையிலே சேர்க்கையால் உண்டான இன்பமாகிய அமுதை உண்டவர்கள் அங்கிலேகெட்டு, துணி முன்னே தொங்கவும் பெண்கள்பலர் இழித்துக்கூறவும் செல்லுவார்கள்; ஆதலால், நீலமணிபோன்று பிரகாசிக்கின்ற திருமேனியையுடைய நம் மாயவனது திருநாமத்தைச் சொல்லி வாழுங்கோள் என்கிறார்.

**வி - கு:**—என்னும் குழலாரோடு பூம் பள்ளியிலே இன்ப அமுதுண்டார் என்க. உண்டார்: பெயர். உண்டார் செல்வர் என முடிக்க. நால இழிப்பச் செல்வர் என்க. செல்வர்: முற்று. இப் பாசுரத்திற்குப் பட்டர் அருளிச்செய்யும் வியாக்கியானம் இன்பச் சுவையிலே தோய்ந்தது; கவில்தொறும் இன்பம் பயப்பது. அம் சீதம் பைம் பூம் பள்ளியிலே கிடக்கும் அணி மென் குழலாரைப் பார்த்துத் திருவருள் பணிமின் என்னும் இன்ப அமுது உண்டார் என்றும், கலவி இன்பஅமுது உண்டார் என்றும் தனித் தனியே கூட்டிப் பொருள் காணல்வேண்டும் என்பது அப்பெரியார் திருவுள்ளம். இதனை வியாக்கியானத்தில் காணலாகும்.

---

1. "கையும் உழவுகோலும், பிடித்த சிறுவாய்க் கயிறும், சேநாதூளி தூசரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற சாரத்ய வேஷத்தை 'மாம்' என்று காட்டுகிறான்." (சூத். 218.)

"சர்வஜ்ஞனாய், சர்வசக்தியாய், பிராப்தனான நான்", "கீழ்நின்ற நிலையும், மேல் போக்கடி அறிகைக்கும் அறிந்தபடியே செய்து தலைக்கட்டுகைக்கும் ஏகாந்தமான குண விசேஷங்களையும், தன் பேறாகச் செய்து தலைக்கட்டுகைக்கு ஈடான பந்த விசேஷத்தையும் காட்டுகிறது", "தனக்காகக் கொண்ட சாரத்ய வேஷத்தை அவனையிட்டுப் பாராதே தன்னையிட்டுப் பார்த்து, அஞ்சின அச்சம் தீரத் தானான தன்மையை (அஹம்) என்று காட்டுகிறான்." என்பன ஸ்ரீ பிள்ளை லோகாசார்யர் ஸ்ரீ சூக்திகள்; முமுக்ஷுப்படி. (244, 245, 246.)

ஈடு :—ஐந்தாம்பாட்டு. [1]செல்வநிலையைப் போன்றே மக ளிருடைய சேர்க்கையும் நிலைஅற்றது என்கிறார்.

'பணிமின் திருவருள் என்னும் அணி மென் குழலார்' என்று [2]முன்புள்ள முதலிகள் நிர்வஹிப்பர்கள்; இவர்கள் நிர் வாஹத்தில் 'என்னும்' என்னும் எச்சம் 'குழலார்' என்னும் பெயருக்கு அடைமொழி. பட்டர், அங்ஙன் அன்றிக்கே, 'திரு வருள் பணிமின் என்னும்' என்னும் இதனை 'இன்பக் கலவி அமுதுஉண்டார்' என்றதனோடே சேர்த்து அருளிச்செய்வர். பணிமின் திருவருள் என்னும் - தான் இராச்சியத்தைப் பரி பாலனம் பண்ணுகிற நாளில் தன் இராச்சியத்தை அவர்களுக் குப் [3]படுக்கைப்பற்று ஆக்கி, அவர்களைப் படுக்கையிலே வைத்துத் தான் தாழ நின்று 'திருவுள்ளத்தில் கிடக்கிறத்தை அருளிச்செய்யலாகாதோ?' என்னும்; [4]தன்னைத் தொழுது வணங்குகின்றவர்கள் புறம்பே உண்டே? இனி, ரசிகத்வ மாவது, தான் இவர்களுக்குத் தாழ நிற்கையே அன்றோ? அம்

---

1. மேலே போந்த பாசுரங்களில் கூறிய பொருளைத் தளமாக்கிக் கொண்டு, "அணிமென் குழலார் இன்பக்கலவி அமுதுண்டார்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "பணிமின் திருவருள்" என்பதற்கு இருவகையான நிர்வாஹங் கள் கூறப்படுகின்றன. ஒன்று, முன்புள்ள முதலிகள் நிர்வாஹம்; இவர்கள் நிர்வாஹத்திலே, திருவருள் புரியவேண்டும் என்று கேட்பது பெண்கள். 'முன்புள்ள முதலிகள்' என்றது, பட்டருக்கு முன்னேயுள்ள ஆசாரியர்களை. பட்டர் நிர்வாஹத்திலே, திருவருள் புரியவேண்டும் என்று கேட்பது ஆட வர்கள்.

3. படுக்கைப் பற்று - சீதனம்.

4. இப்படி, பெண்களுக்குத் தாழ நின்றால் தன் பெருமைக்குத் தாழ் வன்றோ? என்னும் வினாவைத் திருவுளத்தே கொண்டு அதற்கு விடை அரு ளிச் செய்கிறார் 'தன்னைத் தொழுது' என்று தொடங்கி. என்றது, மேல் பாசுரங்களில் கூறிய படியே, புறம்பே இராஜாக்கள் தன்னைத் தொழுது வணங்கும்படி இருக்கிற ஏற்றம் பொருந்தியவனுக்கு, பெண்கள் வணங்கு கிறார்கள் என்பதில் ஓர் ஏற்றம் இன்றே? ஆதலால், ரசிகத்வத்திற்குச் சேர இங்ஙனே ஆகவேணும் என்றபடி. ரசிகத்வம் - ரசிகனது தன்மை.

கொந்தழல் வேற்க ணால் என் னுவி கூட் டுண்ட கொம்பே!
செந்தழை யலங்க லேந்திச் சேரடி பரவ வந்தேன்
உய்ந்தினிப் பணிசெய் வேனோ உடம்பொழித் தேகு வேனோ
பைந்தழை யல்குற் பாவாய் பணியெனப் பரவி னானே.

சீதம் பைம் பூம் பள்ளி - காட்சிக்கு இனியதாய்க் குளிர்ந்து பரந்து பூக்களாலே செய்யப்பட்ட படுக்கையிலே: அவன் இப் படுக்கையிலே வைத்துத் 'திருவருள்பணிமின்' என்றால், அவர் கள் செய்வது என்? என்னில், அணி மென் குழலார்-அவன் கொண்டாடுகிற கொண்டாட்டத்தை அநாதரித்து, ஆபரணத் தைத் திருத்துவது குழலைப் பேணுவதாகாநிற்பர்கள். இன்பக் கலவி அமுது உண்டார் - அவர்களுடைய [1] அந்த ஊடலை முதலாகக் கொண்டதான கலவியால் வந்த ஆனந்த அமிரு தத்தை உண்டவர்கள். அன்றிக்கே, [2]அநாதரவான அமிரு தத்தை உண்டவர்கள் என்னுதல். [3]"அல்லிமலர்மகள் போக மயக்கு"க்களை அநுகரிக்கிறார்கள் என்பதனைத் தெரிவித்த படி.

[4]'வேறு ஒருவன்வந்து அவர்களைக் கொண்டுசென்று இன் பக்கலவி அமுது உண்ணாநிற்குமே? இவன் பின்னைத் தன் னுடைய சரீரத்தைக் காப்பதற்காக அவர்கள் பக்கலிலே

---

வீணையுங் குழலும் பாலும் அமுதமும் கரும்புந் தேனும்
பாணியாழ் கனியும் வென்ற பைங்கிளி மழலைத் தீஞ்சொல்
வாணிக மகளிர் தாமே வாணிகம் வல்ல ரென்னப்
பூண்முலை பொதிர்ப்பப் புல்லிப் புனைநலம் பருகி னானே.

என்பன சிந்தாமணி. 1499-1500.

"மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய"

என்பது இலக்கணம். தொல். பொருள். 227.

1. ஊடல் உணர்தல் புணர்தல் இவை காமம்
கூடியார் பெற்ற பயன்.
ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.

2. உணலினும் உண்ட தறலினிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது.
ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல் வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய உப்பு.

என்னுங் குறட்பாக்களை இங்கு நினைவு கூர்க.

3. திருவாய்மொழி. 3. 10 : 8. அநுகரித்தல் - பின்பற்றுதல்.

4. மேலே கூறப்போகும் விஷயத்திற்கு அவதாரிகை அருளிச்செய் கிறார் 'வேறு ஒருவன்' என்று தொடங்கி.

சென்று இரக்கத் தொடங்கும். துணி முன்பு நால - [1]“அந்தத் திரிஜடன் என்னும் பிராஹ்மணன் மனைவியின் வார்த்தை யைக் கேட்டு **உடுத்துவதற்குப் போராத துணியை உடுத்திக் கொண்டு** புறப்பட்டான்” என்கிறபடியே, பின்பு கொண்டு வந்து இணைக்க எட்டம் போராமையாலே முன்னே தொங்கா நிற்கும். பல் ஏழையர்தாம் இழிப்ப-[2] இவன்பக்கல் தங்களுக்கு உண்டான அன்புதோன்றச் [3]செத்துக் காட்டுவர்கள் முன்பு; இப்போது, தங்களை வைத்துக்கொண்டிருப்பவனுக்குப் பிரிய மாக, இவன் இன்பத்தை அனுபவிப்பதற்குத் தகுதிஇல்லாத வன் என்பதனையும், இவனிடத்துள்ள உலோபத்தன்மையை யும் சொல்லி விருப்பம்இல்லாத சொற்களைக் கூறுநிற்பர்கள். இவர்கள் தாம், பலராதலின் ‘**பல்ஏழையர்**’ என்கிறார். செல் வர் - ‘நம்மிடத்துள்ள அன்புத்தளை அன்றோ இவர்களை இங்ங னம் சொல்லச் செய்கிறது’ என்று, அவர்கள் கூறிய வார்த் தைகளையும் புத்திபண்ணுதே செல்வார்கள்; என்றது,

---

1. “முன்பு நால” என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் ‘அந்தத் திரிஜடன்’ என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. அயோத். 32: 32. எட் டம் - நீளம்.

> “நீர்ப்படு பருந்தின் இருஞ்சிற கன்ன
> பாறிய சிதாரேன்” (பதிற். 12. 19–20.)

> “கையது கடனிறை யாழே, மெய்யது
> புரவல ரின்மையிற் பசியே, அரையது
> வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்
> ஓம்பி உடுத்த உயவற்பாண!” (புறம். 69.)

> “வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த
> துன்னற் சிதாஅர் துவர நீக்கி” (பொருநராற். 80–81.)

என்பன ஈண்டு ஒருபுடை ஒப்பு நோக்கத் தக்கன.

2. “ஏழையர்” என்பதற்கும், “இழிப்ப” என்பதற்கும் வாசனை ‘இவன்பக்கல்’ என்று தொடங்கும் வாக்கியம்.

3. அங்கோட் டகலல்குல் ஆயிழையாள் நம்மோடு
செங்கோடு பாய்துமே என்றாள்மன்—செங்கோட்டின்
மேற்காண மின்மையால் மேவா தொழிந்தாளே
காற்கால்நோய் காட்டிக் கலுழ்ந்து. (நாலடியார்)

என்ற செய்யுள் ஈண்டு ஒருபுடை ஒப்பு நோக்கலாகும்

[1] முன்பு "திருவருள் பணிமின்" என்ற போது ஊடல் காரணமாகக் கூறிய வார்த்தையைப் போன்றதாக இதனையும் நினைத்துச் செல்வர் என்றபடி. நன்று; இன்பத்தை அநுபவிப்பதற்குத் தகுதி இன்றிக்கே இருக்க, செல்லுதற்குக் காரணம் என்? எனின், [2]"கிழத்தன்மை அடைந்தவனுக்குத் தலைமயிர்கள் உதிர்கின்றன; பற்கள் விழுகின்றன; கண்கள் பார்வை குறைகின்றன; காதுகளுக்குக் கேட்குந்தன்மை குறைகின்றது; ஆசை ஒன்று மாத்திரம் ஒருவித கேடும் இன்றி இருக்கின்றது" என்னக் கடவது அன்றோ?

ஆன பின்பு, [3]"பக்தாநாம்-பக்தர்களுக்காகவே" என்று இருக்கிற உடம்பைப் பற்றப் பாருங்கோள் என்கிறார் மேல்: மணி மின்னு மேனி-நீலமணிபோன்று காந்தியையுடைத்தான திருமேனி; அன்றிக்கே, நீலமணியைக்காட்டிலும் விஞ்சின அழகையுடைத்தான திருமேனி என்னுதல். நன்று; திருமேனி பக்தர்களுக்காகவே இருக்குமோ? எனின், [4]"இரண்டு சரீரத்தைக் கொடுத்து உதவிய மஹாத்மாவான அந்த அநுமா

---

1. அவர்கள் கூறிய வார்த்தைகளைப் புத்தி பண்ணாதே செல்லுகைக்கு அடி ஏது! என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'முன்பு' என்று தொடங்கி.

2.

3. ஜிதந்தா ஸ்தோத்திரம். 5.

"தேவரீருடைய திவ்யாத்ம சொரூபமானது தேவரீருக்கு அன்று, திவ்ய மங்கள விக்கிரஹமும் தேவரீருக்கு அன்று, திருவாழி முதலான ஆயுதங்களும் தேவரீருக்கு அன்று, அப்படியிருந்தும், திவ்ய மங்கள விக்ரஹத்தை யுடையவராகவே இருக்கிறீர்; தேவரீர் பக்தர்களுக்காகவே பிரகாசிக்கின்றீர்" என்பது அச் சுலோகத்தின் பொருள்.

4. ஸ்ரீராமா. யுத். 1: 13. இச் சுலோகத்திற்கு வியாக்யாதா அருளிச்செய்த பொருள் கீழே வருமாறு: ஏஷ: – தான் அநுபவித்துத் 'தனக்கு ரசித்தது' என்று பிறர்க்குக் கொடுப்பாரைப் போலே; 'இச்சா க்ருஹீதாபிமதோருதேஹ:' (விஷ்ணு புரா. 6. 5: 84.) என்னக் கடவதிறே. 'இச்சா க்ருஹீதம்' என்கையாலே, கர்ம நிபந்தனம் அல்ல என்று தோற்றுகிறது; 'அபிமதம்' என்கையாலே, தனக்கும் போக்யம் என்று தோற்றுகிறது. சர்வ ஸ்வபூத: - இது ஒழிய மற்றொன்றைக் கொடுத்தாலும் இது கொடாதத்தால் வரும் குறை கிடக்குமே? திருமேனியைக் கொடுக்கவே எல்லாங்கொடுத்ததாயிறே; சர்வ அபாஸ்ரயமாயன்றோ திருமேனிதான்

னுக்கு, விலக்காதது ஒரு சமயத்தைப்பெற்று என்னல் கொடுக்கப்பட்டதான் இந்த ஆலிங்கனமானது எல்லாக் கொடைக்கும் சமானமாகக்கடவது என்று [1] கொடுக்கும் படி அன்றோ? நம் மாயவன் - அடியார்கள் விஷயத்தில் அவன் இருக்கும்படி எல்லை காணப்போமோ? இப்பேற்றுக்குச் செய்யவேண்டுவது என்? எனில், பேர் சொல்லி வாழ்மினோ - செய்யவேண்டிய முயற்சி இவ்வளவே; பின்னை வாழ்வோடே தலைக்கட்டும். [2] வாழ்கைக்கு ஒரு பேரோ! "அச்சுவை பெறினும் வேண்டேன்" என்னும்படி அன்றோ இது தன்னுடைய இனிமை இருப்பது. (5)

---

இருப்பது! மற்றுக் கொடுக்குமதிலும் இதுக்கு உண்டான வியா விருத்தி தோற்றி இருக்கிறது. பரிஷ்வங்கோ ஹநூமதஃ - அமிருதாசிக்குப் புல்லை யிட ஒண்ணாதே! ஸ்நேஹோமே பரமஃ - (உத்தரராமாயணம்) – என்று இவ்வுடம்பை விரும்பினவனுக்கு இத்தையே கொடுக்கவேணுமே. மயா கால மிமம் பிராப்ய தத்தஃ "இவன் ஒன்று கொள்வான் ஒருவன் அல்லன்; நாம் இவனுக்கு ஒன்று கொடுக்கப் பெறுவது காண்" என்று குறைபட்டிருந்தவர், இவன் விலக்காத தொரு சமயம் பெற்று இப்படி கொடுத்துக்கொண்டு நின்றார். தஸ்ய மஹாத்மநஃ - ஒரு படி கொடுத்தாராய் ஒன்று செய்த இத்தனை போக்கி, இரண்டு உடம்பு கொடுத்தவனுக்கு ஓர் உடம்பு தரம் அன்றிறே. வேணி யுத்க்ரதனத்திலே பிராட்டி ஒருப்பட்ட அன்று அவளை உளள் ஆக்கினன்; "அவகாஹ்யார்ணவம் ஸ்வப்ஸ்யே" [ஸ்ரீராமா. யுத்.) என்ற பெருமாளை மீட்டு அவரை உளராக்கி இப்படி இவர்க்கு இரண்டு உடம்பு கொடுத்தானிறே அவன். அவன் பலபடி உபகரிக்கையாலே இவர் ஒருபடி உபகரித்தார்" என்பது.

1. கொடுக்கும் படி - கொடுக்கக் கூடிய சரீரம்.

2. "பேர் சொல்லி வாழ்மினோ" என்பதற்கு மேலே உபாய பரமாகப் பொருள் அருளிச்செய்தார். பேர் சொல்லுகை தானே வாழ்ச்சியா யிருக்கும் என்று உபேய பரமாகப் பொருள் அருளிச்செய்கிறார் 'வாழ்கைக்கு ஒரு பேரோ!' என்று தொடங்கி. "அச்சுவை பெறினும்" என்ற இது, திருமாலை 2-வது பாசுரம். என்றது, வாழ்வு என்று வேறு ஒன்று வேண்டுமோ? "எனக்கு என்றும் தேனும் பாலும் அமுதுமாய திருமால் திருநாமம்" என்கிறபடியே, திருநாமத்தைச் சொல்லுகை தானே போக்கியமா யிருக்குமே யன்றோ என்றபடி.

338

[1]வாழ்ந்தார்கள் வாழ்ந்தது மாமழை மொக்குளின் மாய்ந்துமாய்ந்து
ஆழ்ந்தாரென் றல்லால் அன்றுமுதல் இன்று அறுதியா
வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பர் என்பதில்லை நிற்குறில்
ஆழ்ந்தார் கடற்பள்ளி அண்ணல் அடியவர் ஆமினே.

பொ - ரை :—வாழ்ந்திருந்தவர்கள் வாழ்ந்தது பெரிய மழை நீரிலே தோன்றுகிற குமிழிபோன்று அழிந்து அழிந்து நரகத்திலே விழுந்து அழுந்தினார்கள் என்பதே; அது அல்லாமல், அன்று முதல் இன்று வரையிலும் வாழ்ந்தவர்கள் ஒரே தன்மையாக வாழ்ந்தே இருந்தார்கள் என்பது இல்லை; ஆதலால், நிலைபெற்ற பேற்றினைப் பெற வேண்டும் என்று இருந்தீர்களாகில், ஆழ்ந்து நிறைந்திருக்கின்ற கடலைப் படுக்கையாகவுடைய இறைவனுக்கு அடியவர் ஆகுங்கோள் என்கிறார்.

வி - கு :—வாழ்ந்தது மொக்குளின் மாய்ந்து மாய்ந்து ஆழ்ந்தார் என்பதே; அது அல்லால், வாழ்ந்தே நிற்பர் என்பது அன்று முதல் இன்று அறுதியா இல்லை; ஆதலால், நிற்குறில், அண்ணல் அடியவர் ஆமின் என்க. நிற்குறில் என்பது, நிற்க உறில் என்பதன் விகாரம்.

ஈடு :—ஆறாம்பாட்டு. [2]மருத்துவர்கள் பிழைத்தாரை எண்ணுமாறுபோன்று இறந்தவர்களை எண்ணுகிறது என்? ஜீவித்தவர்களும் சிலர் இலரோ? என்ன, அது இருந்தபடி கேட்கலாகாதோ பின்னை? என்கிறார்.

வாழ்ந்தார்கள் வாழ்ந்தது - வாழ்ந்தாராயிருக்கிறவர்கள் வாழ்ந்தது எல்லாம். [3]அவர்கள் வாழ்ந்தார்களாக நினைத்திருக்கிறார்கள்; இவர் 'கேடு' என்று இருக்கிறார். அவர்கள்

1. "படுமழை மொக்குளின் பல்காலுந் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணி"
என்பது நாலடியார்.

2. "அன்று முதல் இன்று அறுதியா வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பர் என்பதில்லை" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

3. "வாழ்ந்தார்கள்" என்று தம்மோடு சம்பந்தம் அறச் சொல்லுதற்குக் காரணம் அருளிச்செய்கிறார் 'அவர்கள் வாழ்ந்தார்களாக' என்று தொடங்கி. அவர்கள் வாழ்வாக நினைத்திருந்ததை இவர் கேடு என்று நினைத்திருப்பரோ? என்னும் வினாவிற்கு விடையாக 'அவர்கள் வாழ்வாக' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

வாழ்வாக நினைத்திருக்கிற இதனை அன்றோ, [1] "இன்னம் கெடுப்பாயோ" என்று கேடாகவே நினைத்திருக்கிறது இவர். மாமழை மொக்குளின் - பெருமழைக் குமிழிபோலே. [2] "தண்ணீரில் தோன்றுகிற குமிழிக்குச் சமம்" என்றார் பிறரும். பின் விழுந்த துளியோடே நசிக்கும் என்பார் **'மாமழை'** என்கிறார். மாய்ந்து மாய்ந்து - அழிந்து அழிந்து. ஆழ்ந்தார் என்று அல்லால் - உயிர்வாழ்கின்ற நாட்களில் செய்த பாபத்தாலே கீழான கதியில் வீழ்ந்து தறைப்படுமது ஒழிய. அன்றுமுதல் இன்று அறுதியா வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பர் என்பது இல்லை - படைப்புக்காலந் தொடங்கி இற்றை அளவும் அவர்கள் வாழ்ந்தவர்கள் ஒருபடிப்பட வாழ்ந்தே போந்தார்கள் என்னும் இந்த அர்த்தந்தானும் முதலில் இல்லை.

நிற்க உறில் - நிலை நின்ற பேற்றினைப் பெறவேண்டி இருந்தீர்களேயாகில். ஆழ்ந்து ஆர் கடல் பள்ளி அண்ணல்- ஆழ்ந்து பரந்த கடலைப் படுக்கையாகவுடைய சர்வேசுவரன். திருமேனியின் சௌகுமார்யத்துக்குத் தகுதியாக உறுத்தாத படியான ஆழத்தையுடைத்தாய், திவ்ய அவயவங்களைப் பரப்பிக்கொண்டு கண்வளர்கைக்குத் தகுதியான பரப்பையுடைத்தாயிருக்கின்றமையைத் தெரிவிப்பார் **'ஆழ்ந்து ஆர்'** என்கிறார். திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது கர்மத்திற்குக் கட்டுப்பட்டவனாய் அல்லவே? நம்மால் பற்றப்படுமவன் ஆகைக்காக அன்றோ? ஆனபின்னர், அவன் நினைவோடே சேர ஸ்வரூபத்திற்குத் தகுதியான புருஷார்த்தத்தைப் பற்றுங்கோள் என்பார் **'கடற்பள்ளி அண்ணல்'** என்கிறார். அடியவர் ஆமினோ - அவன் [3] சேஷியாயிற்ற பின்பு நீங்கள் உங்கள் சேஷத்வத்தை இசையப் பாருங்கோள். அன்

1. திருவாய்மொழி. 6. 9 : 8.

அறிவி லேனுக்கு அருளாய் அறிவா ருயிரானாய்!
வெறிகொள் சோதி மூர்த்தி! அடியேன் நெடுமாலே!
கிறிசெய்து என்னைப் புறத்திட்டு இன்னம் கெடுப்பாயோ
பிறிதொன் றறியா அடியேன் ஆவி திகைக்கவே.

என்பது அத் திருப்பாசுரம்.

2. "தண்ணீரிலே தோன்றுகிற குமிழிக்குச் சமம்" என்றது, ஒரே காலத்தில் தோன்றி அழிவதற்கு எடுத்துக் காட்டு.

3. சேஷி - தலைவன். சேஷத்வம் - அடியவனாகிற தன்மை.

ரிக்கே, அடிமை அல்லாதது ஒரு பொருளை இன்று அடிமை ஆக்கிக் கொடுத்ததாக நினைத்திருக்கும் பகவானுடைய அபிப் பிராயத்தாலே சொல்லுகிறார் ஆகவுமாம். (6)

339

ஆமின் சுவைஅவை ஆறோடு அடிசில்உண் டார்ந்தபின்
தூமென் மொழிமட வார் இரக்கப் பின்னும் துற்றுவர்
ஈமின் எமக்கொரு துற்றென்று இடறுவர் ஆதலின்
கோமின் துழாய்முடி ஆதிஅம் சோதி குணங்களே.

**பொ - ரை:**—பொருந்திய இனிய அந்த அறுசுவையோடு கூடின உணவை உண்டு வயிறு நிறைந்தபின், தூய்மை பொருந்திய மெல்லிய சொற்களைப் பேசுகின்ற பெண்கள் இரந்து கூறப் பின்னரும் உண்பார்கள்; அவ்வாறு உண்டவர்கள், அந்நிலை கெட்டு, எமக்கு ஒரு பிடி அன்னம் கொடுமின் என்று தட்டித் திரிவார்கள்; ஆதலின், திருத் துழாய்மாலையைத் தரித்த திருமுடியையுடைய ஆதி அம் சோதியான இறைவனுடைய கல்யாணகுணங்களை அநுபவிக்கப் பாருங்கோள் என் கிறார்.

**வி - கு:**—ஆம் இன் அவை ஆறுசுவையோடு அடிசில் உண்டு எனப் பிரித்துக் கூட்டுக. தூ - பரிசுத்தம். துற்றல் - உண்டல். துற்றுவர்: பெயர். துற்றுவார் இடறுவர் என முடிக்க. இடறுவர்: முற்று. கோமின் - தொகுத்துச் சொல்லுமின். குணங்கள் கோமின் என மாறுக.

**ஈடு:**—ஏழாம்பாட்டு. [1] 'ஐஸ்வர்யத்துக்கு நீர் சொல்லு கிற குற்றம் உண்டே ஆகிலும், அன்னபாநாதிகள் தாரகமு மாய் இனியவையுமாய் இருக்கிற தன்மை உண்டே?' என்ன, 'அவையும் நிலை நில்லா' என்கிறார்.

ஆம் இன்சுவை - ஆன இனிய சுவை; நன்றான நல்ல சுவை. அவை ஆறோடு - 'அறுசுவை' என்று பிரசித்தமான

---

1. "அடிசில் உண்டு ஆர்ந்தபின், ஈமின் எமக்கு ஒரு துற்று என்று இடறுவர்" என்பதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். அன்னம் - சோறு. பானம் - குடிக்குந் தண்ணீர். 'ஆதி' என்றதனால் காய் கறிகள் முதலானவற்றைக் கொள்க. தாரகம் - தரித்திருப்பதற்குக் காரண மாக இருப்பது; ஆதாரமாயிருப்பது.

வற்றோடே கூட. அடிசில் உண்டு - [1]முன்பு இரந்து உண்டு திரிந்தவன், நாழி அரிசி பெற்று ஜீவிக்கப்புக்கவாறே ஒரு வெள்ளாட்டியையும் சம்பாதித்து '**முதலியார்**' என்னவும் பண்ணி '**அடிசில் உண்ணா நின்றார்**' என்னவும் பண்ணும். ஆர்ந்த பின் - கண்டது அடைய இட்டு வயிற்றினை நிரப்பி, உதிரம் குடித்து வாய்விட்ட அட்டைபோலே பெயரவும் திரியவும் மாட்டாதே கிடந்து புரளாநிற்குமே? அவ்வளவிலே இவனிடத்தில் அன்புடையார்களாயிருப்பார் பெண்கள் சிலர் வந்து, 'உடம்பு பதார்போலே இருந்தது; இதுகொண்டு எங்ஙனம் காக்கப்படுமவர்களான எங்களை நோக்கப் பார்க்கிறது?' என்பர்கள்; அதனைக் கேளா, 'நாம் உண்டிலேமோ?' என்று இவன் தானும் பிரமிக்கும். [2]முன்பு இவர்கள் விரும்பிக் கூறினால் மறுக்குமே? ஒரு திரளையைத் திரட்டி 'இது என்பிடி' என்பர்கள்; பின்பு உண்ணாது ஒழியமாட்டானே? அப்பேச்சின் இனிமையிலே துவக்குண்டு பின்னரும் உண்ணாநிற்கும். எமக்கு ஒரு துற்று ஈமின் என்று - இவர்களை இக்கட்டளையிலே வேறே ஒருவன் கைக்கொள்ளுமே; அவனையும் முன்புத்தையவனைப்போலே இரந்து உண்பிப்பார்களே இவர்கள்; அங்கே, தன் வயிறு வாழாமல் சென்று [3]'நீங்கள் எல்லாருமாக எனக்கு ஒருபிடி தரவேணும்' என்னும். பண்டு நல்லது கண்டால் தன் வாயில் இடாதே இவர்களுக்குக் கொடுத்துப்

---

1. "சோறு உண்டு" என்னாது, "அடிசில் உண்டு" என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'முன்பு இரந்து உண்டு திரிந்தவன்' என்று தொடங்கி. 'அடிசில் என்பது, உண்பன தின்பன பருகுவன நக்குவன என்னும் நால்வகைகளுக்கும் பொது என்றும், 'ஊன் துவை கறி சோறுண்டு, வருந்து தொழிலல்லது' என்புழி உண்டென்பது, ஒன்றற்கே யுரிய வினையாதலின் வழுவாம் பிறவெனின்: - உண்டல் என்பது உண்பன தின்பன எனப் பிரித்துக் கூறும் வழிச் சிறப்பு வினையாம்; பசிப்பிணி தீர நுகரப்படும் பொருளெல்லாம் உணவெனப் படுமாகலின் பொது வினையுமாம்; அதனான், அது வழுவன்றென்பது' என்று சேனாவரையர் கூறுவர். (தொல். சொல். 46 - 47)

2. 'மடவாரிரக்க' என்னாது, "தூமென் மொழி மடவார் இரக்க" என்றதற்கு விசேடம் அருளிச்செய்கிறார் 'முன்பு இவர்கள்' என்று தொடங்கி.

3. "ஈமின்" என்ற பன்மைக்கும், "ஒரு துற்று" என்றதற்கும் சேர 'நீங்கள் எல்லாருமாக எனக்கு ஒரு பிடி தரவேணும்' என்று பொருள் அருளிச்செய்கிறார். துற்று - கவளம்.

ருப்பவர்களாயின் அவர்களைக் கிட்டுவோர் இலர் அன்றே? ஆதலின், **இணங்கி** என்கிறார். என்றது, சுலபனாய் எல்லாரோடும் பொருந்தியிருப்பவர்களாய் என்றபடி. [1] உலகு உடன் ஆக்கிலும் - உலகத்தைத் தங்களோடே சேர்த்துக்கொண்டார்களே ஆகிலும். என்றது, [2] "ஸ்ரீராமபிரான் இராச்சியத்தை எல்லாரையும் அநுசரித்துக்கொண்டு ஆண்டார்" என்கிறபடியே, சேர்த்துக்கொண்டு அரசாண்டார்களேயாகிலும் என்றபடி [3] ஆங்கு அவனை இல்லார் - அந்த இராச்சியத்தில் அவன் திருவருள் இல்லையாகில் அந்த இராச்சிய இலக்குமிதான் கிடையாது. மணம்கொண்ட போகத்து மன்னியும் - பகவானுடைய திருவருளால் அந்த இராச்சியத்தை அடைந்தாலும். செவ்வையை யுடைத்தான செல்வம் ஆதலின் '**மணங்கொண்ட போகம்**' என்கிறார். மீள்வர்கள் - அந்த ஐஸ்வரியம் கிட்டினாலும் அதனுடைய இயற்கையாலே மீளுவர்கள்.

மீள்வு இல்லை - [4] "பின்னர் மீண்டு வருகிறான் இல்லை" என்கிற பேற்றைப் பெற அமையும். எத்தால்? என்னில், பணம் கொள் அரவு அணையான் திருநாமம் படிமின் - தன்னுடைய பரிசத்தாலே விரிந்த படங்களையுடைய திருவனந்தாழ்வானை நிருபகமாகவுடையவனுடைய திருநாமங்களிலே மூழ்குங்கோள். திருநாமத்திலே மூழ்கினவர்களைத் திருவனந்தாழ்வானைப் போன்று விடான் என்பார் '**அரவணையான் திருநாமம் படிமின்**' என்கிறார். அன்றிக்கே, [5] "இவ்விதமாக அறிந்தவர் பாதங்களால் ஏறுகிறார்கள்" என்கிறபடியே, துகைத்து ஏறலாம்படியான படுக்கையையுடையவன் என்

---

1. "உலகு உடன் ஆக்கிலும்" என்றது, உலகத்தைத் தங்களுக்கே உரியதாகும்படி செய்துகொண்டார்களே யாகிலும் என்றபடி.

2. அப்படிச் செய்துகொண்ட பேர் உளரோ? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஸ்ரீராமபிரான்' என்று தொடங்கி. இது சங்க்ஷேப ராமாயணம்.

3. "ஆங்கு அவனை இல்லார்" என்பதற்கு, அந்தச் செல்வம் விஷயமாக, செல்வத்தைக் கொடுத்தவனான சர்வேசுவரனை ஆஸ்ரயித்துக் கொண்டு போதல் இல்லாதவர்கள் என்பது பொருள்.

4. சாந்தோக்யம். 8 ; 15.

5.

பார் 'அரவணையான் திருநாமம் படிமின்' என்று அருளிச் செய்கிறார் என்னுதல்.

[1] இனி, பலத்தில் நோக்கம் இல்லாதவனுய்த் தான தர்மங்களைச்செய்து எம்பெருமானையே பலமாகப் பற்றாமல், பலத்தில் நோக்கம் உள்ளவனுய்த் தான தர்மங்களைச் செய்து சுவர்க்கம் முதலான உலகங்களை விரும்பினல் அவை நிலை நில்லா என்று இப் பாசுரத்திற்குப் பொருள் கூறலுமாம். (8)

341.

படிமன்னும் பல்கலன் பற்றேடு அறுத்துஐம் புலன்வென்று
செடிமன்னு காயம் செற் றார்களும் ஆங்கவனை இல்லார்
குடிமன்னு மின்சுவர்க் கம் எய்தி யும்மீள்வர்கள் மீள்வில்லை
கொடிமன்னு புள்ளுடை அண்ணல் கழல்கள் குறுகுமினே.

பொ - ரை :—பூமியையும் பொருந்திய பல ஆபரணங்களையும் அவற்றிலுள்ள வாசனையோடு நீக்கி ஐந்துஇந்திரியங்களையும் வென்று தூறு மண்டும்படி இச்சரீரத்தை ஒறுத்துத் தவம் செய்தவர்களும் அவ் விஷயத்தில் அவனுடைய திருவருள் இல்லாதவர்கள் குடிகள் பொருந்தி இருக்கின்ற இனிமையையுடைய சுவர்க்கலோகத்தை அடையினும் மீண்டு வருவார்கள் ; ஆதலால், நிலைபெற்ற கொடியிலே கருடப்பறவையையுடைய சர்வேசுவரனுடைய திருவடிகளைச் சேருங்கோள் ; சேர்ந்தால், மீண்டு வருதல் இல்லாத தன்மையையுடைய உலகத்தைப் பெறலாம்.

வி - கு :—அறுத்து வென்று செற்றார்களும் அவனை இல்லார் எய்தியும் மீள்வர்கள் என்க. அண்ணல் கழல்கள் குறுகுமின் மீள் வில்லை எனக் கூட்டுக.

ஈடு :—ஒன்பதாம்பாட்டு. [2] மேல் எட்டுப் பாசுரங்களால் இவ்வுலக இன்பம் நிலைஅற்றது என்றார் ; இப் பாசுரத்தில்,

---

1. "மீள்வர்கள்" என்னும்போது உயர ஏறி மீள்வர்கள் என்று தோன்றுகையாலே, இவ்வுலக ஐஸ்வர்யம் நிலையற்றது என்று அருளிச் செய்த யோஜனை அன்றிக்கே, மறுமைச் செல்வங்களான சுவர்க்கம் முதலானவைகள் நித்தியமாயிருக்குமோ ? என்ன, அவையும் நிலையற்றவை என்று வேறும் ஒரு யோஜனை அருளிச்செய்கிறார் 'இனி பலத்தில்' என்று தொடங்கி. ஆக, இப் பாசுரத்திற்கு, இம்மைச் செல்வம் நிலையற்றது ; மறுமைச் செல்வமும் நிலையற்றது என்று இருவகையாகப் பொருள் அருளிச் செய்தவாறு.

2. பாசுரத்தில் "மீள்வர்கள்" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

உடலை வருத்துந்தன்மையையுடைய தவத்தைச்செய்து அந்தத் தவத்தின் பலம் சுவர்க்கமாகக் கொண்டு சுவர்க்கத்தை அடையும்போது பகவானுடைய திருவருள்வேணும்; அவனுடைய திருவருளால் சுவர்க்கத்தை அடைந்தாலும், அதனுடைய இயற்கையாலே நிலை நில்லாது என்கிறார்.

இவன் தவத்தைச் செய்தற்குத் தொடங்கும்போது விடுமவை சொல்லப்படுகின்றன: படி - பூமி. மன்னு பல் கலன் - முறையாக வந்த பலவகைப்பட்ட ஆபரணங்களின் கூட்டம். அன்றிக்கே, படி மன்னு பல்கலன் என்பதற்கு, [1] தன் குலத்திலுள்ளார் பரம்பரையாகப் பூண்டுபோருகிற பலவகைப்பட்ட ஆபரணங்கள் என்னுதல். பற்றோடு அறுத்து - அவற்றை நீக்கிவிட்டு வாழ்தல் அன்றிக்கே அவற்றில் வாசனையும் போகை. ஐம்புலன் வென்று - அவற்றில் ருசிக்குக் காரணமான ஐம்பொறிகளும் விஷயங்களிற் போகாதபடி வென்று. [2] "உன்னால் முன்பு இந்திரியங்கள் வெல்லப்பட்டு மூன்று உலகங்களும் வெல்லப்பட்டன" என்றாள் மண்டோதரி. செடி மன்னு காயம் செற்றார்களும் - தவத்திற்காகப் பலகாலம் ஓரோ ஆசனங்களிலே இருந்தால் சலியாமையாலே உடம்பிலே தூறு மண்டும்படி சரீரத்தை ஒறுத்துத் தவத்தைச் செய்தவர்களும்; [3] "நெறியார் குழற்கற்றை முன்னின்று பின் தாழ்ந்து, அறியா திளங்கிரிஎன் றெண்ணிப் - பிறியாது, பூங்கொடிக்கள் வைகும்" என்னக் கடவதன்றோ? ஆங்கு அவனை இல்லார் - அவன் திருவருள் இல்லையாகில் தானே சித்தியாது. அவன் திருவருளால் பெற்றதாகில், குடி மன்னும் இன் சுவர்க்கம் எய்தியும் - "இதற்கும் ஆள்பற்றுவதே!" என்பர்

1. "எழ்படிகால்" என்கிற கணக்கிலே, படி என்பது வம்சமாய், வம்சத்திலுள்ளார் நித்தியமாகப் பூண்டு போந்த பலவகைப்பட்ட ஆபரணங்கள் என்றவாறு. படி - படி படியாக என்றுக்கி, வம்ச பரம்பரையாக என்றபடி.

2. உபாசகன் ஐம்பொறிகளையும் அடக்கி ஆளவேண்டும்; செல்வத்தை விரும்புகின்றவனுக்கு விஷய அநுபவமன்றோ பலம்? அவனுக்கு இந்திரியங்களை அடக்குதல் வேண்டாவே? என்னும் வினவைத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உன்னால்' என்று தொடங்கி. இங்கு, செல்வத்தை விரும்பிய இராவணன் இந்திரிய நிக்ரஹம் செய்தமை கூறப்பட்டுள்ளவாறு காண்க. இது, ஸ்ரீராமா. யுத். 114 : 18. மண்டோதரி கூறியது.

3. சரீரத்திலே தூறு மண்டும்படி தவம் செய்தலுக்கு மேற்கோள்: "நெறியார்" என்று தொடங்கும் பாசுரம். இது, இரண்டாந்திருவந். 53.

பட்டர். குடிகளினது நெருக்கத்தை யுடைத்தாய், நரகத்தைக் காட்டிலும் வேறுபட்டதான இனிமையை யுடைத்தான சுவர்க்கத்தை அடைந்தாலும். மீள்வர்கள் - மீளுவார்கள்; [1] புண்ணியம் குறைந்தவாறே "த்வம்ச" என்று தள்ளுவார்கள் அன்றோ?

மீள்வு இல்லை - அங்ஙனம் ஒரு மீட்சி இல்லை. என்றது, அப்படி அவனுடைய புண்ணியத்திற்குக் குறைவு இல்லையே என்றபடி. [2] "புணை கொடுக்கிலும் போக ஒட்டாரே" என்பர் பட்டர்பிரான். கொடி மன்னு புள் - கொடியாய் மன்னுநின்றுள்ள பறவை. என்றது, தன்னை அடைந்த அடியாரையும் தனக்கு வேறுபடுத்தும் விசேஷணமாகக் கொள்ளுமவன் என்பதனைத் தெரிவித்தபடி. அல்லாதாரைக் காட்டிலும் அவனை வேறுபடுத்தும் விசேஷணமாகக் கொள்ளவேண்டுவான் என்? என்னில், அவனுடைய மூக்கு வலியும் அவன் பக்கல் [3] பக்ஷபாதமும் அதற்கு அடி. புள்ளுடை அண்ணல் - "**திருமகள் கேள்வன்**" என்னுமாறு போலே ஈசுவரனுக்கு நிரூபகமேயன்றோ அவன். அண்ணல் - சேஷி. கழல்கள் குறுகுமின் - உங்கள் சம்சாரம் கழல அவன் கழல்களைக் குறுகுங்கோள். "திருநாரணன் தாள் காலம்பெறச் சிந்தித்துய்ம்மினோ" என்றார் முதற் பாசுரத்தில். இங்கே "புள்ளுடை அண்ணல் கழல்கள் குறுகுமினோ" என்கிறார் காணும், [4] அவளோ பாதி இவனும் அங்குத்தைக்கு நிரூபக தர்மம் என்று. (9)

---

1. தேவர்கள் தன்மையைச் சீவகசிந்தாமணி முத்தி இலம்பகத்தில் 202 முதல் 213 முடிய உள்ள செய்யுட்களில் காண்க.

2. பெரியாழ்வார் திருமொழி. 4. 5: 2.

3. பக்ஷபாதம் என்றது, சிலேடை.

4. அவளோபாதி - அவளைப்போன்று. இவ்வழக்கு பழைய உரைகளிற் காணலாகும்.

"களிறு பல பூட்டி என்றது, அவனேறும் யானைகளை அவனை அவமதித்துச் சாட்டிற்குக் கடாவோ பாதி பூட்டி என்றவாறு" என்பது பதிற்றுப் பத்துப் பழைய உரை. செய். 44.

'இவனும்' என்றது, பெரிய திருவடியை.

"அவன், மடிமேல் வலந்தது பாம்பு"

என்ற பரிபாடற் பகுதியையும், 'இன்னும் அது கடவுட் கொடி என்பது தோன்ற 'அவன்' என உயர்திணையாற் கூறினர்' என்ற அதன் உரையையும் ஈண்டுக் காணல் தகும்.

அங்குத்தைக்கு - அவ்விடத்திற்கு.

342.

குறுக மிகஉணர் வத்தொடு நோக்கிஎல் லாம்விட்ட
இறுகல் இறப்பெனும் ஞானிக்கும் அப்பயன் இல்லையேல்
சிறுக நினைவதோர் பாசமுண் டாம்பின்னும் வீடில்லை
மறுகலில் ஈசனைப் பற்றி விடாவிடில் வீடுஅஃதே.

பொ - ரை :—(மனமானது) தன்னைச் சார (தன்வசப்பட்ட அம் மனத்தினை) ஞானசொருபமாக உள்ள ஆத்மாவோடு சேர்த்து நன்றாகப் பார்த்து எல்லாப்பற்றுக்களையும் அடியோடே விட்ட, குறுகிய ஆத்ம அநுபவத்தையே மோக்ஷமாக நினைத்திருக்கும் ஞானிகளுக்கும் பகவானை உபாயமாகப் பற்றுதல் இல்லையாகில் சிறிய பேறுகளை நினைப்பதற்குக் காரணமான ஒருபற்று உண்டாகும்; அதற்குமேல், அம்மோக்ஷமும் இல்லை; ஆனபின், ஒருவித குற்றமும் இல்லாத இறைவனை அடைந்து அகலாதொழிவானேயானல் அதுவே பரமபுருஷார்த்தமான மோக்ஷமாகும். ஆதலால், மேற் பாசுரத்தில் கூறிய "அண்ணல் கழல்கள் குறுகுமினே" என்ற அதுவே மோக்ஷமாகும் என்கிறபடி.

வி - கு :—குறுக நோக்கி விட்ட ஞானி என்க. உணர்வு - ஞானம்; ஆத்மா. இறுகல் - இறுகப் பிடித்தல். இறப்பு - மோக்ஷம். பாசம் - பற்று. மறுகல் - குற்றம். பற்றி விடாவிடில் பின்னும் வீடு இல்லை எனக் கூட்டுக. இங்கே, 'வீடு' என்றது, கைவல்யத்தை. அஃதே வீடு என மாறுக.

ஈடு :—பத்தாம்பாட்டு. [1] "பூமியில் ஐஸ்வர்யம், சுவர்க்க அநுபவம் இவை நிலைநில்லா என்றார் மேல்; இவைபோல் அன்றிக்கே, ஆத்மஅநுபவம் நிலை நின்ற புருஷார்த்தமே அன்றோ? என்னில், மேலே கூறியவற்றை நோக்கும்போது இதற்கு ஒரு நன்மை உண்டே ஆகிலும், பகவானுடைய ஆனந்தத்தைப் பார்க்கும்போது இது மிகச் சிறியதாய் இருக்கையாலே இதுவும் தண்ணிது; ஆனபின்பு, அவனைப் பற்றப் பாருங்கோள் என்கிறார்.

குறுக உணர்வத்தொடு மிக நோக்கி - பலகாலம் புறம்பேயுள்ள விஷயங்களில் பண்ணிப் போந்த வாசனை அடைய

---

1. "இறுகல் இறப்பு என்னும் ஞானிக்கும் அப்பயன் இல்லையேல்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'ஒரு நன்மை' என்றது, நித்தியத்துவம் முதலாயினவற்றை. தண்ணிது - மிகச் சிறியது.

ஆத்மாவிலேயாம்படி [1]விசத தமமாக அநுசந்தித்து. என்றது, புறம்பேயுள்ள விஷயங்களிலே தூரப்போய்ப் பற்றுகின்ற மனத்தினை ஆத்மாவின் பக்கலிலே சேர்த்து என்றபடி. இது, [2]கண்ணை இட்டுக் கண்ணைப் பார்த்தாற்போலே இருப்பது ஒன்று ஆதலின் [3]'குறுக' என்கிறார். இதனால், முதல் தன்னிலே ஆத்மாவின் பக்கலிலே சேர்த்திய மனத்தினையுடையவனுக்கே ஆத்ம அநுபவத்தில் அதிகாரம் உள்ளது என்பதனைத் தெரிவித்தபடி. எல்லாம் விட்ட - [4]திருமகள்கேள்வன் பெரியதிருவடி திருத்தோளிலே தோளும் தோள்மாலையுமாய் வந்து நின்றாலும் சாணகச் சாற்றைப்போன்று சுத்தி மாத்திரத்தையே பற்றிக்கொண்டு, இனிமையிலே நெஞ்சு செல்லாதபடி அவனையும் விடுவது. இறுகல் இறப்பு என்னும் ஞானிக்கும் - [5]சங்கோசத்தை மோக்ஷம் என்று சொல்லுகிற ஆத்ம ஞானிக்கும். [6]இவ்வருகு உள்ளனவற்றை நோக்கும்போது 'விஸ்திருதம்' என்று இருந்தானே ஆகிலும் அவ் வருகும் கண்டவர் ஆகையாலே 'இறுகல்' என்றிருக்கிறார் இவர்.

---

1. விசததமமாக - விளக்கமாக; மிக நன்றாக.

2. 'கண்ணையிட்டுக் கண்ணைப் பார்த்தாற்போலே' என்றது, தர்மபூத ஞானத்தாலே ஞான சொரூபனான ஆத்மாவைப் பார்த்தலைக் குறித்தபடி.

3. குறுக - குறுக்கி; சேர்த்து.

4. 'எல்லாம் விட்ட' என்றது, ஆத்மாவிற்கு வேறுபட்ட பொருள்களை யெல்லாம் விடுதலைத் தெரிவித்தபடி. 'திருமகள் கேள்வன்' என்று தொடங்கும் வாக்கியம், எல்லாம் விடுதலின் முடிவு எல்லை. சாணகச் சாறு - பஞ்ச கவ்யம்.

5. சங்கோசமாவது, சர்வேசுவரன் அளவும் போகாமல் அணுவளவான ஆத்ம மாத்திரத்திலே முடிவாக நிற்றல்.

6. சங்கோசம் என்கிறது என்? முத்தி தசையில் அநுபவமாகையாலே விபுவாய் இராதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவ்வருகு' என்று தொடங்கி. இவ்வருகு உள்ளன - செல்வம் முதலாயின. விஸ்திருதம் - விரிவு. 'அவ்வருகு' என்றது, மோக்ஷ உலகத்தை. "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்பக், கண்ட சதிர் கண்டொழிந்தேன் அடைந்தேன் உன் திருவடியே" என்பது இவருடைய திருவாக்கு. (திருவாய்மொழி. 4. 9: 10.)

இறப்பு - மோக்ஷம். [1] அப்பயன் இல்லையேல் - அந்தப் பகவானுடைய உபாசனம் இல்லையாகில் ஆத்மாவைத் தியானம் செய்ய ஒண்ணுது. உபாசனமானது சுகரூபமாயிருக்கையாலே அதனைப் 'பயன்' என்கிறார். அவனுடைய சாதனம் இவருக்குப் பிரயோஜனமாய் இருக்கிறது. சிறுக நினைவது ஓர் பாசம் உண்டாம் - [2] தன்னை முன்புத்தையிற் காட்டில் அதிஅல்பனாக நினைக்கும்படி, தளைகளான அவித்தை முதலானவைகள் நூறு கிளைகளாகக் கிளைக்கும். "தேவோஹம் - நான் தேவன், மனுஷ்யோகம் - நான் மனிதன்" என்கைக்கு அடியான தளை ஆதலின் 'சிறுக நினைவது ஓர் பாசம்' என்கிறார்.

மறுகல் இல் ஈசனைப் பற்றி விடாவிடில் பின்னும் வீடு இல்லை - இந்திரிய நியமன முதலானவைகள் உண்டாய், பின்பு பகவானை வழிபட்டுக் [3] கர்ம க்ஷயத்தைப் பிறப்பித்து ஆத்மாவைக் காணவேண்டுமென்றிருக்கின்ற அன்றும், சர்வேசுவரன் பக்கல் அந்திம ஸ்மிருதி பண்ணி இச் சரீரத்தை விடுவதற்குப் பாரானுகில் அந்த மோக்ஷந்தான் இல்லை. மறுகல் இல் ஈசனை - குற்றங்கட்கு எதிர்த்தட்டான சர்வேசுவரனை. அன்றிக்கே, "[4] மறுகலில் - மறுகுகிற சமயத்தில்; உயிர் நீங்குங் காலத்தில் வருகின்ற கலக்கத்தில் என்னுதல்.

---

1. "அப் பயன்" என்றதில் உள்ள சுட்டு, மேற்பாசுரத்தில் "ஆங்கவனை இல்லார்" என்றதனைச் சுட்டுகிறது. அங்ஙனமாயின், உபாசனை இல்லையாகில் என்றன்றோ கூறல்வேண்டும்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உபாசனமானது' என்று தொடங்கி. ஆனால், அவனுக்குச் சுகரூபத்தின் தன்மை உண்டோ? என்னும் வினாவிற்கு விடையாக 'அவனுடைய சாதனம்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. ஆத்ம அநுசந்தானம் பண்ண ஒண்ணுமை அன்றி, விரோதிகளும் பல உண்டாகும் என்று அருளிச்செய்கிறார் 'தன்னை' என்று தொடங்கி. 'முன்புத்தையிற் காட்டில்' என்றது, சுவர்க்க முதலான செல்வங்களைப் பற்றி நின்ற காலத்தைக் காட்டிலும் என்றபடி.

3. கர்மக்ஷயம் - கர்மங்கள் அழிதல். அந்திம ஸ்மிருதி - உடலைவிட்டு உயிர் நீங்குங்காலத்து இறைவனை நினைக்கும் நினைவு. அந்த மோக்ஷம் - ஆத்ம அநுபவம்.

4. மறுகல் - கலக்கம். முன்னைய பொருளில், மறுகல் - குற்றம்.

ஈசனைப் பற்றி விடாவிடில் - [1] அந்திம ஸ்மிருதி இல்லையாகில் ஆதிபரதனைப்போலே மான் ஆதல் மரை ஆதல் ஆமித்தனை. அஃதே வீடு - "திருநாரணன்தாள் காலம் பெறச் சிந்தித்து உய்ம்மினோ" என்று நான் சொல்லுகிற அதுவே புருஷார்த்தம். (10)

## 343.

அஃதேஉய்யப் புகும்ஆ றென்று கண்ணன் கழல்கள்மேல்
கொய்பூம் பொழில்சூழ் குருகூர்ச் சடகோபன் குற்றேவல்
செய்கோலத் தாயிரம் சீர்த்தொடைப் பாடல் இவைபத்தும்
அஃகாமல் கற்பவர் ஆழ்துயர்போய் உய்யற் பாலரே.

**பொ - ரை:**—உய்வதற்கு உரிய வழி மேலே கூறிய அதுவே என்று கண்ணபிரானுடைய திருவடிகளின்மேலே, பறிக்கப்படுகின்ற பூக்கள் நிறைந்த சோலையாற் சூழப்பட்ட திருக்குருகூரிலே அவதரித்த ஸ்ரீ சடகோபரால் அந்தரங்க கைங்கர்ய ரூபமாகச் செய்யப்பட்ட அழகிய ஆயிரம் திருப்பாசுரங்களுள் இறைவனுடைய கல்யாண குணங்களைத் தொடுத்துப் பாடிய இந்தப் பத்துத் திருப்பாசுரங்களையும் குறைவில்லாதவாறு கற்பவர்கள் ஆழ்ந்துள்ள துன்பங்கள் நீங்கி நற்கதி பெறுவார்கள் என்றவாறு.

**வி - கு:**—உய்யப் புகுமாறு அஃதே என்று கண்ணன் கழல்கள் மேல் சடகோபன் குற்றேவல் பாடல் இவை பத்தும் கற்றவர் துயர் போய் உய்யற் பாலர் என்க.

---

1. சர்வேசுவரனை நினைத்துச் சரீரத்தை விடுதற்குப் பாரானாகில் என்றபடி. அந்திம ஸ்மிருதி இல்லையாயின் வருவது என்? என்ன, அதற்கு விடை 'ஆதி பரதனைப்போலே' என்று தொடங்கும் வாக்கியம்.

"'உயிர் உடம்பின் நீங்குங்காலத்து அதனால் யாதொன்று பாவிக்கப்பட்டது, அஃது அதுவாய்த் தோன்றும்' என்பது எல்லா ஆகமங்கட்கும் துணிபாகலின், வீடெய்துவார்க்கு அக்காலத்துப் பிறப்பிற்கேதுவாய பாவனை கெடுதற்பொருட்டுக் கேவலப் பொருளையே பாவித்தல் வேண்டும்; அதனான், அதனை முன்னே பயிறலாய இதனின் மிக்க உபாயமில்லை என்பது அறிக." என்ற பரிமேலழகருரை ஈண்டு ஒப்பு நோக்கல் தகும். (குறள். 358.)

ஆதி பரதன் உயிர் விடும்போது, தன்னால் வளர்க்கப்பட்ட மானின்மேல் உள்ள பற்று காரணமாக அந்த மானின் நினைவோடு உயிரை விட்டான்; ஆதலால், மானாகப் பிறந்தான் என்பது சரிதம். இவன் எல்லாப் பற்றையும் விட்டுக் காட்டிற்குச் சென்று தவத்தைச் செய்தவன். "சர்வத்தையும் விட்டுக் காட்டிலே யிருந்த ஆதி பரதனுக்கு மானின் பக்கலிலே சங்கம் உண்டாய் ஜ்ஞானபிரம்சம் பிறந்தது" என்பது ஈட்டுவாக்கியம். அவதாரிகை - முதல் ஸ்ரீயஃபதி.

ஈடு :—முடிவில், இத் திருவாய்மொழி பத்துப் பாசுரங்களையும் கற்றவர்கள் ஐஸ்வரியம் கைவல்யம் எனப்படுகின்ற அல்ப புருஷார்த்தங்களைத் தவிர்ந்து பகவானுடைய கைங்கர்யத்தையே புருஷார்த்தமாகப் பெற்றவர் ஆவர் என்கிறார்.[1]

உய்யப் புகுமாறு அஃதே என்று - "திருநாரணன்தாள்" என்று நான் சொன்ன அதுவே உய்வதற்கு [2]உபாயமும் உபேயமும் என்று. கண்ணன் கழல்கள் மேல் - [3]"கண்ணனைத் தாள்பற்றி" என்று தாமும் சொல்லி, [4]"கண்ணன் கழல்கள் நினைமினோ" என்று பிறர்க்கும் உபதேசித்து நின்றாரே? அது தன்னையே அருளிச்செய்கிறார். 'இப்படி [5]அடியுடையார் புறம்பு இல்லை' என்றே அன்றோ இவ்வடிகளைத் தாம் பற்றியது. [6]"துயர் அறு சுடர் அடி தொழுது எழு" என்று தம் திருவுள்ளத்திற்கு அருளிச்செய்தார்: [7]"வண்புகழ் நாரணன் திண்கழல் சேரே" என்று பரோபதேசம் செய்தார் அங்கு. இங்கு, "கண்ணனைத் தாள் பற்றி யான் என்றும் கேடு இலனே" என்றார்; "கண்ணன் கழல்கள் நினைமினோ" என்று பரோபதேசம் செய்தார். இது என்ன [8]அடிப்பாடு தான்! [9]"கண்ணன் அல்லால் இல்லை கண்டீர் சரண்" என்றே அன்றோ பரோபதேசம் நிகமிக்கிறதும்.

---

1. "இவை பத்தும் அல்லாமல் கற்பவர் ஆழ் துயர் போய் உய்யற்பாலர்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. உபாயம் - வழி. உபேயம் - பேறு.

3. திருவாய்மொழி. 3. 10 : 10.

4. திருவாய்மொழி. 4. 1 : 3.

5. 'அடி' என்றது, சிலேடை ; திருவடிகளும், மூலமும்.

6. இப்பாசுரத்திலுள்ள "கழல்கள்மேல்" என்றதனைத் திருவுள்ளம் பற்றி அருளிச் செய்கிறார். "துயரறு" என்று தொடங்கி. இது, திருவாய்மொழி. 1. 1: 1.

7. திருவாய்மொழி. 1. 2: 10.

8. அடிப்பாடு - அடியிலே படுகை ; அன்பு என்றபடி.

9. திருவாய்மொழி. 9. 1: 10. 'பரோபதேசம் நிகமிக்கிறதும்' என்றது, விரோதி சொரூப விஷயமான பரோபதேசத்தை முடிக்கிறதும் என்றபடி. "வீடுமின்முற்றவும்", "சொன்னால் விரோதம்", "ஒரு நாயகம்", "கொண்ட பெண்டிர்" என்கிற நான்கு திருவாய்மொழிகளும் விரோதி சொரூப விஷயமான பரோபதேசமாதல் காண்க. அவற்றுள், "கொண்ட பெண்டிர்" என்ற திருவாய்மொழி, பரோபதேசம் செய்யும் திருவாய்மொழிகளில் ஈற்றுத் திருவாய்மொழி யாதலின் 'பரோபதேசத்தை முடிக்கிறதும்' என்கிறார்.

கொய் பூம் பொழில் சூழ் குருகூர்ச் சடகோபன் குற்றேவல் - எப்பொழுதும் பூவுந்தளிருமாயிருக்கின்ற திருச்சோலை சூழ்ந்த திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார், சர்வேசுவரன் திருவடிகளில் அந்தரங்க கைங்கரியம் செய்தவை இவைதாம். செய் கோலத்து ஆயிரம் - கவிக்குச் சொல்லுகிற அலங்காரத்தால் குறைவற்ற ஆயிரம். செய் - செய்த கவி என்னுதல்; குற்றேவல் செய் என்று மேலேகூட்டி, வாசிகமான அடிமை என்னுதல். சீர்த் தொடைப் பாடல் இவை பத்தும் அஃகாமல் கற்பவர் ஆழ் துயர் போய் உய்யற்பாலர்-அவன் குணங்களைத் தொடுத்துப் பாடின இவற்றில் ஒன்றும் குறையாமல் கற்றவர்கள் பகவானுக்கு வேறுபட்ட புருஷார்த்தங்களான ஐஸ்வர்ய கைவல்யங்களாகிற கேடுகள் நீங்கி உஜ்ஜீவிக்கும் தன்மையராவர். அஃகல் - சுருங்கல். உஜ்ஜீவனமே தன்மையாக உடையர் ஆவர் என்பார் '**உய்யற்பாலர்**' என்கிறார். "காலம் பெறச் சிந்தித்து உய்ம்மினோ" என்று தாம்சொன்னபடியை யுடையவர் ஆவர் என்றபடி. (11)

—: (o) :—

## திருவாய்மொழி நூற்றந்தாதி

**ஒருநா யகமாய் உலகுக்கு வானோர்**
**இருநாட்டில் ஏறிஉய்க்கும் இன்பம்—திரமாகா**
**மன்னுயிர்ப்போ கந்தீது மாலடிமை யேஇனிதாம்**
**பன்னிஇவை மாறனுரைப் பால்.** **(31)**

---

ஆழ்வார் எம்பெருமானர் சீயர் திருவடிகளே அரண்.

---

## இரண்டாந் திருவாய்மொழி — "பாலனாய்"

### முன்னுரை

—(0)—

ஈடு:—[1]இராம விரஹத்தில் திருவயோத்தியில் உள்ளார் கூப்பிட்டாற்போலே, தாமும் தம்முடைய உறுப்புக்களுமாய்ப் பெருவிடாய்ப்பட்டுக் கூப்பிட்டார், "மூடியானே" என்ற திருவாய்மொழியில்; இக்கூப்பீட்டை அல்லாதார் அல்பப்பிர யோஜனங்களுக்காகப் புறம்பே கூப்பிடுகிறபடியைக் கண்டு, 'இது இவ்விஷயத்திலே ஆகப் பெற்றது இல்லையே!' என்று நொந்து, நாம் முந்துறமுன்னம் இவ்விஷயத்திலே கூப்பிடப் பெற்றோம் அன்றோ என்று உகந்தார், "சொன்னால் விரோதம்" என்ற திருவாய்மொழியில்; 'அவ்வளவேயோ? பகவானைத் துதிப்பதற்குத் தகுந்த உறுப்புகளை யுடையோமாகவும் பெற்றோம்' என்றார், "சன்மம் பலபல" என்ற திருவாய்மொழியில்; அல்லாதார் தங்கள் தங்களுடைய உறுப்புக்களைப் பாழே போக்குகைக்கு அடியான ஐஸ்வரிய கைவல்யங்களிலே ஈடுபாடு உள்ளவராய்க் கேட்டினை அடைகிறபடியைக் கண்டு, அவற்றினுடைய சிறுமை நிலையின்மை முதலிய தோஷங்களையும், சர்வேசுவரன் பரமப் பிராப்பியனாய் இருக்கிறபடியையும் உபதேசித்து, 'அவற்றை விட்டு அவனைப் பற்றுங்கோள்' என்றார், "ஒரு நாயகம்" என்ற திருவாய்மொழியில். [2]பிராசங்கிகமாக, 'இவ்வொரு நாயகம் அருளிச்

---

1. இவர்க்கு ஆற்றாமை தலையெடுத்தது "மூடியானே" என்ற திருவாய்மொழியிலே யாதலின், அது முதலாக வருகின்ற நான்கு திருவாய்மொழிகளிலும் சொல்லப்பட்ட விஷயத்தை அநுவதியாநின்றுகொண்டு, இத்திருவாய்மொழிக்குச் சங்கதி அருளிச்செய்கிறார், 'இராம விரகத்திலே' என்றது முதல் 'தமக்குப் பகவானிடத்தில் விடாய் பிறந்தபடி சொல்லுகிறார் இதில்' என்றது முடிய. புறம்பே - மற்றைத் தேவர்களிடத்திலே. பாழே - பகவத் விஷயத்தில் ஆக்காமல் வீணாக. "பணங்கொள் அரவணையான்" என்றதனைத் திருவுள்ளம் பற்றிப் 'பரமப் பிராப்பியனாய்' என்கிறார். பரமப் பிராப்யம் - மேலான பலம்.

2. பிராசங்கிகம் - இடைப்பிறவரல். 'பிள்ளை' என்றது, நம்பிள்ளையை. 'இது' என்றது, "ஒரு நாயகம்" என்ற திருவாய்மொழியிற் கூறிய விஷயத்தை. 'அதுவும்' என்றது, "சூழ் விசும்பணி முகில்" என்ற திருவாய்மொழியிற் கூறும் விஷயத்தை. 'இனி எத்தனை நாள்?' என்றது, இந்தச் சரீரத்தோடு கூடியிருந்து துக்கப்படுவது இனி எத்தனை நாள்? என்றபடி.

செய்தவரே அன்றோ "சூழ்விசும்பணிமுகி"லும் அருளிச்செய்தார்; இதனை ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவுள்ளம் பற்றுங்கோள்' என்று பிள்ளை அருளிச்செய்வர். என்றது, இது கண்கூடாகக் காண்பதுபோன்று இச் சரீரம் நீங்கிய பின்னர் அதுவும் காண அன்றோ நாம் புகுகிறது; இனி எத்தனைநாள்? என்றபடி. ஆக, [1]மூன்று திருவாய்மொழிகளாலும் இப்படிப் பரோபதேசம் செய்த இது சம்சாரிகள் திருந்துகைக்குக் காரணம் ஆகாமல், [2]அத்தாலும் தமக்குப் பகவானிடத்திலே விடாய் பிறந்தபடி சொல்லுகிறார் இதில்.

என்றது, [3]இதர விஷயங்களினுடைய தோஷங்களை அநுசந்தித்தல் முன்னாகப் பகவானுடைய வைலக்ஷண்யத்தைச் சொல்லி 'அவனைப் பற்றுங்கோள், இதர விஷயங்களை விடுங்கோள்' என்றேயன்றோ அருளிச்செய்தது? அது அவர்கள் திருந்துவதற்குக் காரணமாகாமல் தமக்குத் தெளிவு பிறத்தற்குக் காரணமாயிற்று; [4]ஸ்ரீவிபீஷணாழ்வான் இராவணனுக்குச் சொன்ன ஹிதம் அவன் திருந்துவதற்குக் காரணமாகாமல் தான் பெருமாளைப் பற்றுதற்குக் காரணம் ஆனாற்போலேயும், ஸ்ரீ பிரஹ்லாதாழ்வான் இரணியனுக்குச் சொன்ன ஹிதம் அவன் நெஞ்சிலே படாமல் தனக்குப் பகவானிடத்தில் பக்தி மிகுதற்குக் காரணம் ஆனாற்போலேயும், "வீடுமின் முற்றவும்", "சொன்னால் விரோதம்", "ஒரு நாயகம்" என்னும் இம்மூன்று திருவாய்மொழிகளிலும் பிறரைக் குறித்து அருளிச்செய்த ஹிதம் அவர்கள் திருந்துவதற்குக் காரணம் ஆகாமல், மூன்று களையும் பறித்துச் சங்காயமும் வாரின பயிர் நூறு கிளைகளாகப் பணைத்துப் பலிக்குமாறு

---

1. 'மூன்று திருவாய்மொழிகளாலும்' என்றது, "வீடுமின் முற்றவும்", "சொன்னால் விரோதம்", "ஒரு நாயகமாய்" என்ற மூன்று திருவாய்மொழிகளாலும் என்றபடி.

2. 'அத்தாலும்' என்ற உம்மை, "முடியானே" என்ற திருவாய்மொழியிற் பிறந்த விடாயைத் தழுவுகிறது. அத்தால் - பரோபதேசத்தால்.

3. பிறர் பொருட்டுச் சொன்னவை, தமக்கு ஆசை பிறத்தற்குக் காரணமாகக் கூடுமோ? என்னும் வினாவைத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இதர விஷயங்களினுடைய' என்று தொடங்கி.

4. அதனை உதாரண முகத்தால் விவரிக்கிறார் 'ஸ்ரீ விபீஷணாழ்வான்' என்று தொடங்கி. சங்காயம் - ஆனைப்புல்.

போலே தமக்கு அவன் பக்கலிலே காதல் நூறு கிளைகளாகப் பணைக்கைக்குக் காரணம் ஆயிற்று என்றபடி. இவர்களுக்குக் களையாவது, பகவானுக்கு வேறுபட்ட விஷயங்களும், சேவிக்கத் தகாதாரைச் சேவைசெய்து திரிகையும், ஐஶ்வர்யத்தைப் புருஷார்த்தம் என்று இருக்கையும். சங்காயமாவது, பயிர்களின் இடையிடையே முளைத்து அறியாதார்க்குப் பயிர் போலே தோற்றி அதனை வாரிப் போகடாதபோது நெல் பதர்க்கும்படியாய் இருப்பது ஒன்று. அப்படியே கைவல்யமும்.

[1] இந்தக் காதற் பெருக்கும் இப்படிச் செல்லா நிற்கச் செய்தே, முன்பு "முடியானே" என்ற திருவாய்மொழியில் பிறந்த விடாய் [2] வேறு ரசங்களாலே மூடப்பட்டுக் கிடந்தது; அந்த விடாய் தலை எடுத்து, 'தேசத்தாலும் காலத்தாலும் கைகழிந்த அவன்படிகளையும் அந்த அந்தக் காலத்தோடும் தேசத்தோடும் கூட்டி இப்போதே அநுபவிக்கவேணும்' என்னும் விடாயையும் பிறப்பித்தது; அவை அப்போதே கிடையாமையாலே அந்த விடாய்தான் [3] வேறு அவஸ்தையைப் பிறப்பித்தது; அந்த அவஸ்தைதான் சர்வேசுவரனோடு கலந்து பிரிந்தாள் ஒரு பிராட்டி தசையாய், பிராட்டிதான் மயங்கினவளாய்க் கிடக்க, அவள் நிலையைப் பார்த்த திருத்தாயார் 'தேசத்தாலும் காலத்தாலும் கைகழிந்த அவன்படிகளையும் அந்த அந்தத் தேசத்தோடும் காலத்தோடும் கூட்டி இப்போதே பெற்று அநுபவிக்கவேணும் என்கிறாள்' என்கிற பாசுரத்தாலே தம் நிலையைப் பேசுகிறார்.

---

1. மேலே பரோபதேசம் செய்த வழியாலும், "முடியானே" என்ற திருவாய்மொழியின் இழவாலும், இத் திருவாய்மொழியில் இத்தகைய காதல் உண்டாயிற்று என்கைக்காக, இரண்டு எதுவையும் காட்டுகிறார் 'இந்தக் காதற் பெருக்கும்' என்று தொடங்கி. இந்தக் காதற் பெருக்கும் - இப்படிப் பரோபதேசம் அடியாக உண்டான காதற் பெருக்கும்.

2. 'வேறு ரசங்களாலே' என்றது, களையும் சங்காயமுமான ஐஶ்வர்ய கைவல்யங்களை.

3. வேறு அவஸ்தை - தாயகிநிலை

[1]திருவடியைக் கண்ட வீமசேனன், 'இவன் சக்திமான்' என்று தோற்றுகையாலே, [2]"ஓ வீரனே! கடலைத் தாண்டுதற்கு முயற்சி செய்யப்பட்டதும் ஒப்பு இல்லாததும் பெரியதுமான உனது சரீரத்தைக் காண விரும்புகிறேன்" என்கிறபடியே, நீ முன்பு கடல் கடந்த வடிவை நான் இப்போது காணவேணும் என்றானே அன்றோ? அப்படியே, இவளும் பகவானுடைய சக்தியை அறிந்தபடியாலேயும், தன் சாபலத்தின் மிகுதியாலேயும் இறந்த காலத்தில் உள்ளவற்றையும இப்போதே பெறவேணும் என்று ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

---

344.

பாலனாய் ஏழுலகு உண்டு பரிவின்றி
ஆலிலை அன்ன வசஞ்செயும் அண்ணலார்
தாளிணை மேலணி தண்ணம் துழாய்என்றே
மாலுமால் வல்வினை யேன்மட வல்லியே.

**பொ - ரை :**—அதிபால்யமான வடிவையுடையனாய் எல்லா உலகங்களையும் உண்டு வருத்தம் இல்லாமல் ஆலின் இலையிலே உண்ட உணவு அருமைக்குத் தகுதியாகக் கிடக்கும் பெருமையையுடைய இறைவனது இரண்டு திருவடிகளின்மேலே அணிந்த குளிர்ந்த அழகிய திருத்துழாயினைப் பெறவேண்டும் என்றே மயங்காநின்றாள்; தீவினையேனாகிய என்னுடைய, பற்றியதை விடாத வல்லிக்கொடி போன்ற பெண்ணானவள்.

---

1. அரியதொன்றிலே சாபலம் பண்ணுகைக்கு அடி ஏது? என்னும் வினாவைத் திருவுளத்தே கொண்டு ஓர் எடுத்துக்காட்டு மூலமாக அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'திருவடியை' என்று தொடங்கி. சாபலம் - பற்றியதை விடாமை.

2. பாரதம். இந்தச் சுலோகப் பொருளோடு

நீட்டு மவ்வர மவனுக்கு நேர்ந்தனன் அநுமான்
மீட்டும் நல்வர மொன்றுமுன் வேண்டினன் வீமன்
ஈட்டு மாகிதி இலங்கை தீ இட்டநாள் இசைந்த
மோட்டு ருத்தனைக் காட்டுகென் றிறைஞ்சினன் முதல்வன்.

என்ற செய்யுள் ஒப்பு நோக்கலாகும்.

(வில்லிபார. ஆரணியப. புட்பயாத். செய். 49.)

வி - கு :—வல்வினையேன் மடவல்லி ஆல் இலை அன்ன வசம் செயும் அண்ணலார் தாளிணை துழாய் என்றே மாலும் என்று கூட்டுக. பரிவு இன்றி அன்ன வசம் செயும் அண்ணலார் என்க.
இத்திருவாய்மொழி, கலிவிருத்தம்.

ஈடு :—முதற்பாட்டு. [1]ஆல் இலையைப் படுக்கையாக வுடையவனுடைய திருவடிகளிலே சாத்தின திருத்துழாயைச் செவ்வியோடே இப்போதே பெறவேணும் என்று ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

பாலனாய் - கலப்பு அற்ற பிள்ளைத் தனத்தை யுடையனாய்; [2]"படியாதும் இல் குழவிப் படி" என்னக்கடவதன்றோ. [3]பருவம் நிரம்பினபின்பு உலகத்தை எடுத்து வயிற்றிலே வைத்து ஆல்இலையிலே சாய்ந்தானாகில் என் மகள் இப்பாடு படாளே! 'அவன் ஒருதசையிலேகாண் ரக்ஷகனாவது' என்று மீட்கலாமே! என்பாள் 'பாலன்' என்கிறாள். [4]"என்னை மனிதனாகவே எண்ணுகிறேன்" என்கிறபடியே, இந்த நிலை ஒழிய முன் நிலை நெஞ்சிற்படாமல் இருந்தானாதலின் 'ஆய்' என்கிறாள். ஏழ்உலகுஉண்டு - [5]'இதுசரிக்கும், இதுசரியாது' என்று அறி

---

1. "ஆல் இலை அன்ன வசஞ்செயும்" என்றது முதல் "மாலுமால்" என்றது முடியக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. திருவாய்மொழி. 3. 7 : 10. இது, கலப்பற்ற பிள்ளைத் தனத்தை யுடைமைக்கு மேற்கோள்.

3. பாலனாய்க் கொண்டு உலகங்களை யெல்லாம் வயிற்றிலே வைத்து ஆலிலையில் சாய்ந்தவன் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படுகிறாள் என்று சொல்லுகிற திருத் தாயாருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'பருவம் நிரம்பின பின்பு' என்று தொடங்கி. 'அவன் ஒரு தசையிலே காண் ரக்ஷகனாவது?' என்றது, பருவம் நிரம்பினபின் செய்தால், 'உலகத்துக்கு ஓராபத்து வந்தபோது காண் அதனைக் காக்கும்பொருட்டு இச்செயலைச் செய்தது; இப்போது செய்யுமதுவோ அது?' என்று மீட்கலாம்; அங்ஙன் அன்றிக்கே, கார்யா கார்ய யோக்யதை யில்லாத பருவத்திலே செய்ததாகையாலே, இப்போது செய்யத் தட்டு என்? என்பது மகளுக்குக் கருத்து என்கிறாள் என்றபடி.

4. ஸ்ரீராமா. யுத். 120 : 11.

5. பாலனும் ஏழுலகு உண்ணக் கூடுமோ? என்னும் வினாவைத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இது சரிக்கும்' என்று தொடங்கி.

யாமல், ஏதேனுமாக முன்பு தோன்றியதை வாயிலே எடுத்து இடும்படியாயிற்றுப் பருவம். [1]காப்பாற்றுகின்ற சர்வேசுவரனுடைய தொழில் ஆகையாலே இது பாதுகாவலாக முடிந்தது இத்தனை. [2]அவன் பொறுக்குஞ் செயலைச் செய்தானாகில், இவளும் பொறுக்கும்படியானவற்றை ஆசைப்படாளோ? என்பது தாயாருடைய உட்கோள். ஆபத்துஉண்டானல் [2]வரைந்து நோக்குமது இல்லை ஆதலின் 'உலகு' என்கிறுள். பரிவுஇன்றி-ஒரு வருத்தம் இன்றிக்கே; என்றது, உலகங்களை எடுத்து வயிற்றிலே வைக்கிற இடத்தில் அதனால் ஒரு வருத்தம் இன்மையைத் தெரிவித்தபடி. ஆல்இலை - அப்பொழுது தோன்றியது ஒரு ஆல்இலையிலே. என்றது, [3]அவ் வடம் பண்ணிக் கொடுத்த சுத்தபத்திரத்திலே என்றபடி. அன்ன வசம்செயும்-தன்வசமாக அன்றிக்கே [4]"அஹம் அன்னம் - நான் போக்யமாக இருப்பவன்" என்கிற அன்னத்திற்கு வசமாக. என்றது, உண்ட உணவு சரியாதபடி [5] அதற்குத் தகுதியாகச் செய்தமையைத் தெரிவித்தபடி. அண்ணலார் - எல்லாப்பொருள்களையும் காக்கின்றவருமாய் எல்லாப்பொருள்களுக்கும் ஸ்வாமியும் ஆனவர். எல்லாப்பொருள்களையும் காக்கின்றவரான உமக்கு உம்மை ஆசைப்பட்ட பலமற்றவளான என் விருப்பத்தைச் செய்யத் தட்டுஎன்? என்கிறுள் என்பாள் **'அண்ணலார்'**

---

1. இப் பருவத்தில் செய்யுந் தொழில் ரக்ஷணமாகக் கூடுமோ? என்னும் வினவிற்கு விடை அருளிச்செய்கிறார் 'காப்பாற்றுகின்ற' என்று தொடங்கி.

2. வரைந்து - தாரதம்யம் பார்த்து.

3. 'அவ்வடம் பண்ணிக் கொடுத்த' என்றது, வேறு படுக்கை படுப்பார் இல்லை என்றபடி. அவ்வடம் - அந்த ஆலமரம். சுத்த பத்திரம் - வெறும் இலை.

4. தைத்திரீய உபநிட. பிருகு. 'அஹமந்நம்' என்கிற அன்னத்துக்கு என்றபடி. உணவு - ஆத்மாக்கள்.

5. 'அதற்குத் தகுதியாக' என்றது, வலக்கைக் கீழாக என்றபடி.

தாமக் கடையுகத் துள்ளே விழுங்கித் தரித்தபழஞ்
சேமப் புவனம் செரிக்குமென் றே சிவன் மாமுடிக்கு
நாமப் புனல்தந்த பொற்று ளரங்கர் நலஞ்சிறந்த
வாமத் திருக்கர மேலாக வே கண் வளர்வதுவே.

என்பது திருவரங்கத்து மாலை.

என்கிருள். [1]அவன் இளமைப் பருவத்தில் பாதுகாப்பதில் குறிக்கோளாயிருப்பது போலேஆயிற்று இவள் மயங்கி இருக்கும் காலத்திலும் முறையில் கலக்கம் அற்று இருந்தபடி.

அண்ணலார் தாள்இணை-அடிமையாக உள்ளவன் பற்றுவது ஸ்வாமியினுடைய திருவடிகளையன்றோ. தாள் இணை மேல் அணி தண் அம் துழாய் - இப்படி இவள் ஆசைப்படுகைக்கு [2]அடியிலே பச்சையிட்டாள்காணும். பிராஹ்மணன் பிச்சு ஏறினும் ஓத்துச்சொல்லுமாறுபோன்று, இவளும் அடியில் கற்றுப் பழகியதனையே சொல்லாநின்ருள்; [3]தாட்பட்டதண் துழாய்த் தாமத்திலே அன்றோ வாசனை பண்ணிற்று. துழாய் என்றே - எப்போதும் அத்தையே சொல்லாநின்ருள். 'கெடுவாய், இது சேராததுகாண், இறந்தகாலத்தில் உள்ளது ஒன்றுகாண்' என்ருல், அது செவியிற்படுகிறது இல்லை என்பாள் 'என்றே' எனப் பிரிநிலை ஏகாரம் கொடுத்து ஓதுகிருள். ஓர் ஏதுவினாலே சாதித்துக்கொள்ள முடியாமல் இருக்கையைத் தெரிவித்தபடி. மாலும் - மயங்கும். என்றது, இது, ஒருசொல் அளவேயாய் அகவாயில் இன்றிக்கே இருக்கை அன்றிக்கே, உள் அழியாநின்ருள் என்றபடி. [4]மாணிக்கத்தின் ஒளியிலே அக்நி புத்தி பிறந்தால் அது பின்னைச் சுடவும் வேணுமோ? வல்வினையேன்- [5]மயக்க முற்றவளாய்க் கிடக்கிற இவளுக்கு ஒரு துக்கத்தின் நினைவு இல்லை ஆதலின், உணர்ந்திருந்து பார்த்துக் கூறுகிற தன்னை '**வல்வினையேன்**' என்கிருள். மட

---

1. கலங்கியிருக்கும் தசையிலே "அண்ணலார்" என்னக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'அவன் இளமைப் பருவத்தில்' என்று தொடங்கி.

2. அடியிலே பச்சையிட்டாள், சிலேடை: அடியிலே - முதலிலே; திருவடிகளிலே. பச்சை - உபகாரம்; திருத்துழாய்.

3. அடியிலே கற்றது எங்கே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் "தாட்பட்ட" என்று தொடங்கி. இது, திருவாய். 2. 1: 2.

4. கிடைக்காததொன்றை ஆசைப்பட்டுக் கிடையாவிட்டால் மோஹிப்பதற்கு, அசம்பாவித திருஷ்டாந்தம் அருளிச்செய்கிருர் 'மாணிக்கத்தின் ஒளியிலே' என்று தொடங்கி. கிடைக்காததிலே கிடைக்கும் என்று புத்தி பிறந்தால் மோஹம் வரவேணுமோ? என்பது கருத்து.

5. தாயார் தன்னை "வல்வினையேன்" என்று கூறுகின்ற மனோபாவத்தை அருளிச்செய்கிருர் 'மயக்க முற்றவளாய்' என்று தொடங்கி.

வல்லி - ஒரு கொள்கொம்போடே சேர்க்கவேண்டும் பருவமா தலின் 'வல்லி' என்கிறாள். [1] "தமப்பனாரான ஜனகமஹாராஜர் நாயகனை அடைவதற்குத் தக்க என்னுடைய வயதினைப் பார்த்து வியசனமாகிற கடலில் மூழ்கினார்" என்கிறபடியே, இருக்கையைத் தெரிவித்தவாறு. மடம்-பற்றிற்று விடாமை.(1)

### 345.

வல்லிசேர் நுண்ணிடை ஆய்ச்சியர் தம்மொடும்
கொல்லைமை செய்து குரவை பிணைந்தவர்
நல்லடி மேல்அணி நாறு துழாய்என்றே
சொல்லுமால் சூழ்வினை யாட்டியேன் பாவையே.

**பொ - ரை :**—செய்த தீவினையையுடையேனாகிய என்னுடைய பாவைபோன்ற பெண்ணானவள், கொடிபோன்ற நுண்ணிய இடையையுடைய ஆயர் பெண்களோடும் வரம்பு அழிந்த செயல்களைச் செய்து குரவைக் கூத்தைக் கோத்து ஆடிய கண்ணபிரானுடைய சிறந்த திருவடிகளின்மேலே அணிந்த வாசனை வீசுகின்ற திருத்துழாய் என்றே சொல்லாநின்றாள்.

**வி - கு :**—பாவை சொல்லும் என மாறுக. பிறவிப் பிணிக்கு மருந்தாகலின் 'நல்லடி' என்கிறாள். "வாலறிவன், நற்றாள்" என்றார் திருவள்ளுவனாரும்.

**ஈடு :**—இரண்டாம்பாட்டு. [2] 'சர்வ ரக்ஷகனான சர்வேசுவரன் பிரளய ஆபத்திலே தன் விபூதியைக் காப்பாற்றினானாகில், அதுவும் பேற்றுக்கு உடலாமோ?' என்ன, 'அது உடல் அன்றாகில் தவிருகிறேன், என் பருவத்தினையுடைய பெண்களுக்கு உதவின இடத்திலே எனக்கு உதவத் தட்டு என்?' என்னாநின்றாள் என்கிறாள்.

---

1. ஸ்ரீராமா. அயோத். 119 : 36.

2. "ஆய்ச்சியர் தம்மொடு கொல்லைமை செய்து" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். பேற்றுக்கு - அநுபவத்துக்கு. உடல் - காரணம். மேற்பாசுரத்தில் "மடவல்லி" என்று தன்னைச் சொல்லி, இப்பாசுரத்தில் "வல்லிசேர் ஆய்ச்சியர்" என்று கூறுவதனால் 'என் பருவத்தினையுடைய பெண்கள்' என்கிறார்.

வல்லி சேர் நுண் இடை - [1] "வள்ளிமருங்குல்" என்றாற் போலே, வள்ளிக்கொடிபோலே இருக்கிற இடையையுடைய வர்கள் என்னுதல்; நுண்ணிய இடையையுடைய வல்லி போன்ற வடிவினையுடையவர்கள் என்னுதல். இடைக்கு உப மானம் இல்லாமையாலே 'நுண்ணிடை,' என்கிறது. ஆய்ச் சியர் தம்மொடும் - திருவாய்ப்பாடியில் இவள் பருவத்தை யுடைய பெண்கள் பலரோடும். [2] கொல்லைமை செய்து - வரம்பு அழிந்த செயல்களைச் செய்து. அன்றிக்கே, தன் அழகு முதலி யவைகளாலே அவர்கள் மர்யாதையை அழித்து என்னலு மாம். [3] குரவை பிணைந்தவர் - அவர்களோடு தன்னைத் தொடுத்தபடி. இதனால், என் பருவத்தினையுடைய பெண்கள் பலர்க்கும் உதவினவர் அவர்கள் எல்லார் விடாயையுமுடைய எனக்கு உதவத் தட்டு என்? என்னுநின்றாள் என்றபடி.

நல் அடி - [4] பெண்களும் தானுமாய் மாறிமாறித் துகைத்த திருத்துழாய் பெறவேணும் என்று ஆசைப்படுகிறாள். பிரஹ்ம சாரி எம்பெருமான் திருவடிகளில் திருத்துழாய் ஆசைப்படு மவள் அன்றே இவள்? நாறு துழாய் - [5] அவர்களும் அவனு மாகத் துகைத்தது என்று அறியுங்காணும் இவள் வாசனை

---

1. பெரிய திருமொழி. 3. 7 : 1.

2. கொல்லை - வரம்பு அழிந்த செயல்களைச் செய்பவன்; அல்லது, செய்பவள். கொல்லைமை - வரம்பு அழிந்த செயல்களைச் செய்கின்றவனது தன்மை.

3. குரவை என்பது, எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைகோத்தாடுங் கூத்து; இது வரிக்கூத்தின் ஒருறுப்பு; விநோதக் கூத்து ஆறுனுள் ஒன்று.

"குரவை என்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் விறலும், எய்த வுரைக்கு மியல்பிற் றென்ப" எனவும், "குரவை என்பது எழுவர் மங்கையர், செந்நிலை மண்டலக் கடகக் கைகோத்து, அந்நிலைக் கொட்பநின் றாட லாகும்" எனவும் சொன்னாராகலின் என்பது அடியார்க்கு நல்லார் உரை.

4. "குரவை பிணைந்தவர் நல்லடி நாறுதுழாய்" என்றதனால் 'பெண் களும் தானுமாய்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். இதற்கு பாவம், 'பிரஹ்மசாரி' என்று தொடங்கும் வாக்கியம்.

5. அவர்களும் அவனும் துகைத்தது என்று அறியும்படி என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவர்களும் அவனுமாக' என்று தொடங்கி.

யாலே ; [1] கலம்பகன் நாறுமே அன்றோ? என்றே சொல்லு மால் - [2] நினைத்தது வாய்விடமாட்டாத பெண்மை எல்லாம் எங்கே போயிற்று? சூழ்வினையாட்டியேன்-தப்பாதபடி அகப் படுத்திக் கொள்ளும்படியான பாபத்தைப் பண்ணினேன். [3] "பிராட்டி துக்கத்தால் அழுதுகொண்டு என்னைப் பார்த்து வார்த்தை ஒன்றும் சொல்லவில்லை" என்பது போன்று, இருக்குமவள் வார்த்தை சொல்லுகிறது என் பாபமே அன்றோ என்பாள் தன்னைச் 'சூழ்வினையாட்டியேன்' என்கிறாள். பாவையே - [4] எல்லா நிலைகளிலும் தன் அகவாயில் ஓடுகிறது பிறர் அறியாதபடி இருக்கக்கடவ நிருபாதிக பெண்மையை யுடைய இவள், தன்பேற்றுக்குத் தான் வார்த்தை சொல்லும் படி ஆவதே! (2)

### 346.

பாவியல் வேதநன் மாலை பலகொண்டு
தேவர்கள் மாமுனிவர் இறைஞ்ச நின்ற
சேவடி மேலணி செம்பொன் துழாய்என்றே
கூவுமால் கோள்வினை யாட்டியேன் கோதையே.

**பொ - ரை:—**வலிய தீயவினைகளைச் செய்த என்னுடைய பெண்ணானவள், பாக்களோடு கூடின வேதங்களில் சிறந்த மாலைகளைக் கொண்டு தேவர்களும் பெருமை பொருந்திய முனிவர்களும் துதிக்கும்படி உலகத்தை அளந்து நின்ற சிவந்த திருவடிகளின்மேலே அணிந்த சிவந்த பொன்போன்று விரும்பத்தக்க திருத்துழாய் என்றே கூப்பிடா நின்றாள்.

---

1. அறியும் பிரகாரம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கலம்பகன்' என்று தொடங்கி. கலம்பகன் - கலப்பு வாசனை.

2. "சொல்லும்" என்றதற்கு பாவம், 'நினைத்தது வாய்விட மாட்டாத' என்று தொடங்கும் வாக்கியம்.

3. ஸ்ரீராமா. அயோத். 58 : 35. இது, பெருமாளையும் இளைய பெருமாளையும் பிராட்டியையும் கங்கையின் கரையிலே விட்டு மீண்டு அயோத்தியா நகரத்திற்கு வந்த சுமந்திரன் கூறுவது.

4. "பாவையே" என்ற ஏகாரத்திற்குப் பொருள் 'எல்லா நிலைகளிலும்' என்று தொடங்கும் வாக்கியம். நிருபாதிகம் - காரணமில்லாத ; இயல்பிலே அமைந்த என்றபடி.

வி - கு :—தேவர்கள் முனிவர்கள் நன்மாலை பல கொண்டு இறைஞ்ச நின்ற திருவடி என்க. கோதை சூவும் என மாறுக.

ஈடு :—மூன்றாம்பாட்டு. [1]ஓர் ஊருக்காக உதவினதே அன்றிக்கே, ஒரு நாட்டுக்காக உதவினவன்பக்கல் உள்ளது பெறத் தட்டு என்? என்னாநின்றாள் என்கிறாள்.

பா இயல் வேதம் - பாவாலே இயற்றப்பட்ட வேதம். பா-செய்யுள். [2]அநுஷ்டுப் என்றும், பிருஹதீ என்றும், திருஷ்டுப் என்றும் இவை முதலாகச் சொல்லப்படுகின்ற சந்தஸ்ஸுக்களையுடைத்தான வேதம் ஆதலின் '**பாவியல் வேதம்**' என்கிறார். நல் மாலை பல கொண்டு - அதிலே நன்றான மாலைகளைக்கொண்டு; என்றது, ஸ்ரீ புருஷசூக்தம் முதலியவைகளை. [3]"யாதொரு அடையத்தக்க பரம்பொருளின் சொரூபத்தை எல்லா வேதங்களும் சொல்லுகின்றனவோ?" என்றும், [4]"எல்லா வேதங்களாலும் அறியப்படுகின்றவன் யானே" என்றும் சொல்லப்படுகின்றவாறே, அல்லாத இடங்களிலும் சொல்லப்படுகின்றவன் அவனேயாகிலும், ஸ்வரூப ரூப குணங்களுக்கு நேரே வாசகங்களாக இருக்கையாலே அவற்றை

---

1. சென்ற பாசுரங்களும் மேல் வரும் பாசுரங்களும் அவதாரத்தைக் கூறுகின்றன வாதலின், இதுவும் அவதாரத்தைக் கூறுகிறதாகத் திருவுள்ளம் பற்றி அதற்குத் தக அவதாரிகை அருளிச்செய்கிறார். 'ஓர் ஊர்' என்றது, திருவாய்ப்பாடியை. 'ஒரு நாடு' என்றது, பூமி முதலாயினவற்றை. உதவினவன் - வாமனன்.

2. அளவியற் சந்தம் என்றும், அளவழிச் சந்தம் என்றும் சந்தம் இருவகைப்படும். நாலெழுத்து முதலாக இருபத்தாறெழுத்தின் காறும் உயர்ந்த இருபத்து மூன்றடியானும் வந்து தம்முள் ஒத்தும், குருவும் லகுவும் ஒத்தும் வந்தன அளவியற் சந்தம் எனப்படும். எழுத்தொவ்வாதும் எழுத்தலகு ஒவ்வாதும் வருவன அளவழிச் சந்தம் எனப்படும். எட்டெழுத்தடிஅளவியற் சந்தம் 'அநுஷ்டுப்' என்றும், பதினொரெழுத்தடி அளவியற்சந்தம் 'திருஷ்டுப்' என்றும் ஒன்பதெழுத்தடி அளவியற்சந்தம் 'பிருஹதீ' என்றும் பெயர் பெறும். சந்தம் பா என்பன, ஒரு பொருட் கிளவிகள்.

3. எல்லா வேதங்களாலும் சொல்லப்படுகின்றவன் சர்வேசுவரனாயிருக்க, புருஷ சூக்தம் முதலானவைகளை மட்டும் "நன்மாலைகள்" என்பது என்? என்னும் வினாவைத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிறார் "யாதொரு" என்று தொடங்கி. இது, கடவல்லி உபநிடதம். 1. 2: 15.

4. ஸ்ரீ கீதை. 15: 15.

'**நன்மாலைகள்**' என்கிறார். [1] அன்றிக்கே, ஆராதனத்திலும் விபூதி விஷயமாகவும் பரந்திருக்கும் வேதத்தையும் ஸ்ரீபுருஷ சூக்தம் முதலானவைகளையும் கொண்டு என்னலுமாம். தேவர்கள் மாமுனிவர் இறைஞ்ச நின்ற - தேவர்களும் சனகன் முதலிய முனிவர்களும் [2] "சுவர்க்கத்திலுள்ள தேவ கூட்டத்தாலும் பூமியிலுள்ள மனிதர்களாலும் ஆகாயத்தில் திரிகின்ற வைமாநிகர்களாலும் துதிக்கப்பட்டவனும் உலகத்தை அளந்த அந்தத் திரிவிக்கிரமன் எப்பொழுதும் எனக்கு மங்களம் உண்டாகுமாறு துணையாக வேண்டும்" என்கிறபடியே, துதித்துப் பற்றும்படி திருஉலகு அளந்து நின்ற. சேவடி - [3] "மாமுதல் அடிப்போது ஒன்று கவிழ்த்து அலர்த்தி" என்கிறபடியே, தலையிலே பூப்போலே வந்திருக்கிறபோது மேலே பார்த்தவாறே அநுபவிக்கத் தகுந்ததாயிருந்த சிவப்பையுடைத்தாயிருக்கை. [4] அடியில் ராகம் அன்றோ இப்படி ஆக்கிற்று இவளை. அன்றிக்கே, செவ்விய அடி என்றாய், அடிக்குச் செவ்வையாவது, [5] "பொதுநின்ற, பொன்னங் கழல்" என்கிறபடியே, அடியார் அடியர் அல்லாதார் என்ற வேற்றுமை அற எல்லார் தலைகளிலும் வைத்த செவ்வை. [6] "தளிர் புரையும் திருவடி என் தலை மேலவே" என்று ஈடுபடும்படி அன்றோ அடியில் ஆர்ஜவம் இருப்பது.

சேவடிமேல் அணிசெம்பொன் துழாய் என்றே கூவுமால் - அத்திருவடிகளிற் சாத்தின விரும்பத்தக்கதான திருத்துழாய் என்று சொல்லிக் கூப்பிடாநின்றாள். தோளிற் சாத்தின மாலை கொடுக்கிலும் கொள்ளாள் என்பாள், '**சேவடித்துழாய்**

---

1. 'அன்றிக்கே', என்று தொடங்கி வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார். இப்பொருளில் வேதங்களும் நன்மாலைகளும் என்று உம்மைத் தொகை. முன்னைய பொருளில் வேற்றுமைத் தொகை; வேதத்திலேயுள்ள நன்மாலைகள் என்பது பொருள்.

2. ஸ்ரீ விஷ்ணு தர்மம்.

3. திருவாசிரியம். 5.

4. 'அடியில் ராகம் அன்றோ' என்பது சிலேடை; திருவடிகளின் செந்நிறம்; திருவடிகளில் ஆசை. அடியிலே ஆசை என்னவுமாம்.

5. மூன்றாந் திருவந். 88.

6. திருநெடுந்தாண்டகம். 1. "என் தலை மேலவே" என்கையாலே, ஆர்ஜவம் தோற்றுகிறது என்றபடி. ஆர்ஜவம் - நேர்மை.

என்றே கூவுமால்' என்கிறாள். ஆல் - இது ஒரு ஆச்சரியம் இருந்தபடி என்னே! அன்றிக்கே, அசையுமாம். கோள் வினையாட்டியேன் - முடித்தல்லாது விடாத பாவத்தைச் செய்த என்னுடைய. அன்றிக்கே, கோள் என்று மிடுக்காய், அநுபவித்தே தீர்க்கவேண்டும்படியான பாவம் என்னுதல். [1]கோதையே - தன்மாலையையும் மயிர்முடியையும் கண்டார் படும்மதனைத் தான் படுவதே! இம் மாலையையுடைய இவள் வேறு ஒரு மாலையை ஆசைப்படுவதே! மார்வத்து மாலையான இவள் வேறு ஒரு மாலையை ஆசைப்படுவதே! மார்வத்து மாலைக்கு மால் அவன், அம்மாலுக்கு மால் இவள். (3)

## 347.

கோதில வண்புகழ் கொண்டு சமயிகள்
பேதங்கள் சொல்லிப் பிதற்றும் பிரான்பரன்
பாதங்கள் மேலணி பைம்பொன் துழாய்என்றே
ஓதுமால் ஊழ்வினை யேன்தடந் தோளியே.

**பொ - ரை :**—ஊழ்வினையேனுடைய என்னுடைய பெண்ணானவள், சமயிகள் குற்றம் இல்லாத வளவிய கல்யாணகுணங்களைக் கொண்டு ஒவ்வொரு குணத்திற்குரிய உயர்வின் பேதங்களைச் சொல்லிப் பிதற்றும்படியான பிரானாகிய பரனுடைய திருவடிகளின்மேலே அணிந்த பசுமையான அழகிய திருத்துழாய் என்றே சொல்லாநின்றாள்.

**வி - கு :**—சமயிகள் வண்புகழ் கொண்டு பேதங்களைச் சொல்லிப் பிதற்றும் பரன் என்க. பிதற்றும் - பிதற்றப்படுகின்ற. பிரான் - உபகாரகன். தடந்தோளி ஓதும் என மாறுக. ஊழாவது, இருவினைப் பயன் செய்தவனையே சென்று அடைதற்கு ஏதுவாய நியதி. தோளி -

---

1. கோதை என்பது, பூமாலை, பெண்களின் தலைமயிர், பெண் முதலிய பல பொருள்களைக் குறிப்பதொரு பெயர்ச்சொல். முதல் இரண்டு பொருள்களையும் அருளிச்செய்கிறார் 'தன்மாலையையும்' என்று தொடங்கி. மூன்றாவது பொருளை அருளிச்செய்கிறார் 'இம்மாலையை யுடைய இவள்' என்று தொடங்கி. கோதை என்பது பிராட்டி தன்னைச் சொல்லுகிறதாகத் திருவுள்ளம்பற்றிப் பொருள் அருளிச்செய்கிறார் 'மார்வத்து மாலையான' என்று தொடங்கி. மார்வத்து மாலை - பிராட்டி. "உன் திருமார்வத்து மாலை நங்கை" என்பது தமிழ் மறை. (திருவாய். 10. 10 : 2.)

"கோதை" என்றதனை நோக்கி 'அம்மாலுக்கு மால் இவள்' என்கிறார். அவனுடைய வியாமோகத்துக்கு விஷயமாயிருப்பவள் என்றபடி. மால் - வியாமோகம்; எல்லார்க்கும் அறப் பெரியவன்.

தோளையுடையவள். சமயிகள் என்றதன் பொருளை வியாக்கியானத்திற் காண்க.

ஈடு:—நாலாம்பாட்டு. [1] பெருக்காறு வற்றினாற் போலே ஒருகால் எல்லாரையும் வாழ்வித்துப் போன அவதாரங்களி லுள்ளதனை நான் இப்போது எங்கே தேடுவேன்? என்ன, அது தவிருகிறேன்; என்றும் ஒக்க ஒரே தன்மையனாயிருக் கின்ற பரமபத நிலையன் திருவடிகளில் திருத்துழாய் பெறத் தட்டு என்? என்னுநின்றாள் என்கிறாள்.

கோது இல - குற்றம் அற்ற; குற்றங்கட்கு எதிர்த்தட் டான என்றபடி. குணத்திற்குக் கோது இல்லாமையாவது, ஒரு குணத்தை அநுசந்தித்தால் மற்றைய குணங்களிற் போகாத படி காற்கட்டுகை. [2] அப்படி இராதாகில் அல்லாத விஷயங் களிற்காட்டில் வேற்றுமை இல்லையே அன்றோ? வண்புகழ் - கல்யாண குணங்கள். கொண்டு - இக் குணங்களை அநுசந்தித் துக் கொண்டு. சமயிகள் - [3] ஒரோ குணத்தில் கால்தாழ்ந்து மற்றைய குணங்களில் போகமாட்டாதவர்கள்; என்றது, சில குணம் துவக்கவற்று; அதிலும் வீரகுணம் துவக்கவற்று; அதிலும் ரூபகுணமான அழகு முதலானவைகள் துவக்க வல் லன என்று இவற்றிலே நிஷ்டரானவர்கள் என்றபடி. இனி, சொன்ன இவர்களை ஒழிய, [4] சத்வித்யா நிஷ்டர், தகரவித்யா

---

1. "பரன் பாதங்கள்மேல் அணி" என்றது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'பெருக்காறு வற்றினாற் போலே' என்ற இவ்விடத்தில் "பூகத ஜலம்போலே அந்தர்யாமித்வம், ஆவரணஜலம் போலே பரத்வம், பாற்கடல் போலே வியூகம், பெருக்காறு போலே விபவங்கள், அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்" என்னும் பிள்ளைலோகாசார்யர் ஸ்ரீ சூக்திகளை ஒப்பு நோக்குக. (ஸ்ரீ வசன பூஷணம். உபாயப் பிரகரணம். சூ. 39.)

2. இப்படி இருக்கவேணுமோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'அப்படி இராதாகில்' என்று தொடங்கி.

3. ஈண்டுச் "சமயிகள்" என்றது, குணநிஷ்டரான நித்திய முக்தர்களை.

4. 'சர்வஜ்ஞத்வம் முதலான குணங்களோடு கூடின சொரூபம் உபாசிக் கத் தக்கது' என்று கூறுமவர்கள் சத்வித்யா நிஷ்டர். 'குணமும் உபாசிக்கத் தக்கது, சொரூபமும் உபாசிக்கத் தக்கது' என்று கூறுமவர்கள் தகர வித்யா நிஷ்டர். 'கண்களில் வசிக்கின்ற சர்வேசுவரன் உபாசிக்கத் தக்கவன்' என்று கூறுமவர்கள் உபகோசல வித்யா நிஷ்டர். 'உலகமே உருவாயுள்ள சர்வேசு வரன் உபாசிக்கத் தக்கவன்' என்று கூறுமவர்கள் சாண்டில்ய வித்யா நிஷ்டர்.

நிஷ்டர், உபகோசல சாண்டில்யாதி வித்யாநிஷ்டரைச் சொல்லவுமாம். [1]பேதங்கள் சொல்லி - தாங்கள் அநுபவிக்கிற குணங்களுக்கு ஏற்றங்களைச் சொல்லி; என்றது, சீலகுணத்தை அநுபவித்து ‘இதுவும் ஒரு குணமே! இது போலேயோ வீர குணம்!’ என்றாற்போலே சொல்லுதல் என்றபடி. பிதற்றும் - அக்குணங்களிலே ஈடுபட்டு ஜ்வர சந்நிபதிதரைப்போலே அடைவுகெடக் கூப்பிடாநிற்பர்கள். பிரான் பரன்-[2]அவர்களுக்கு இப்படி உபகாரகனான ஸ்ரீவைகுண்டநாதன்; என்றது, “இமையோர் தமக்கும், செவ்வே நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெய் ஊண் என்னும் ஈனச்சொல்” என்கிறபடியே, இக் குணங்களை அவர்களுக்கு நிலமாக்கி அநுபவிப்பிக்கையாலே ‘**பிரான்**’ என்கிறாள் என்றபடி.

பரன் பாதங்கள்மேல் அணி பைம்பொன் துழாய் என்றே ஓதும் - “சூட்டு நன்மாலைகள் தூயன ஏந்தி” என்கிறபடியே, மிக்க சீர்த் தொண்டரான நித்தியசூரிகள் அவன் திருவடிகளிலே சாத்தினதாய், அதனாலேயே மிகவும் விரும்பத்தக்கதான திருத்துழாய் என்று எப்போதும் சொல்லாநின்றாள். ஊழ்வினையேன் - [3]வந்தது அடைய முறையாம்படியான பாவத்தைப் பண்ணின யான். ஊழ் - முறை. தடந்தோளியே - ‘இப்படிக் கைவிஞ்சின அழகையுடையவள் குணங்களுக்கு ஆகரமான அவன் திருவடிகளிலே திருத்துழாயை ஆசைப் படாநின்றாள். இத் தோள் அழகுக்கு இலக்கு ஆனாரோ இவளோ இப்படி அடைவுகெடப் பிதற்றுவார்! என்பாள் ‘**தடந்தோளி**’ என்கிறாள்.

(4)

---

1. பேதம் - ஏற்றம்; அதிசயம்.

ஜ்வரசந்நிபதிதர் - ஜன்னி சுரத்தில் விழுந்தவர்கள். ‘பிதற்றுதல்’ என்றது, தான் அநுபவிக்கும் குணத்திற்கு ஏற்றம் சொல்லப் புகுந்து, பிறர் அநுபவிக்கும் குணத்திற்கு ஏற்றத்தைச் சொல்லிவிடுதல்.

2. பிரான் - உபகாரகன். அந்த உபகாரத்தைக் காட்டுகிறார் ‘அவர்களுக்கு’ என்று தொடங்கி. “இமையோர் தமக்கும்” என்ற பாசுரத்தாலே தரித்திருந்து அநுபவிக்க ஒண்ணாமை சொல்லுகையாலே, அதனைத் தரித்திருந்து அநுபவிக்கும்படி செய்து அநுபவிப்பிக்கையாலே உபகாரகன் என்றபடி. “இமையோர் தமக்கும்” என்ற பாசுரம், திரு விருத்தம். 98.

3. வந்தது அடைய - வந்த துக்க முழுதும்.

4. “தடம்” என்பது, அழகால் வந்த பரப்பைச் சொல்லுகிறது. “கோதில வண் புகழ்” ஆகையாலே, குணங்களுக்கு ஆகரமான என்கிறார். ஆகரம் - இருப்பிடம்.

348.

தோளிசேர் பின்னை பொருட்டெரு தேழ்தழீஇக்
கோளியார் கோவல னார்குடக் கூத்தனார்
தாளிணை மேலணி தண்ணந் துழாய்என்றே
நாளுநாள் நைகின்ற தால் என்தன் மாதரே.

**பொ - ரை :**—என்னுடைய பெண்ணானவள், ஒத்த தோள்களை யுடையவளான நப்பின்னைப் பிராட்டியின் காரணமாக ஏழ் எருதுகளை யும் தழுவிக் கொண்டவரும், ஆயர் வம்சத்தில் பிறந்தவரும், குடக் கூத்தை ஆடியவருமான கண்ணபிரானது இரண்டு திருவடிகளின் மேலே அணிந்த குளிர்ந்த அழகிய திருத்துழாய் என்றே நாளுக்கு நாள் வருந்தாநின்றாள் என்கிறாள்.

**வி - கு :**—தோளி - தோள்களையுடையவள். தழீஇ - தழுவி; சொல்லிசை அளபெடை. கோளியார் - கொண்டவர். மாதர் நைகின்றது என மாறுக.

**ஈடு :**—ஐந்தாம்பாட்டு. [1]'எல்லா ஆத்மாக்களுக்கும் பரனாய்ப் பரமபதத்திலுள்ளவனாய்க் கிட்டுதற்குமுடியாதவனாயிருக்கிறவன் திருவடிகளில் சாத்தின திருத்துழாயை என்னால் தேடப்போமோ?' என்ன, 'ஆனால், இங்கே என்னைப் போன்றாள் ஒருத்திக்காகத் தன்னைப் பேணாதே எருது ஏழ் அடர்த்த கிருஷ்ணன் திருவடிகளில் சாத்தின திருத்துழாய் பெறத் தட்டு என்? என்னாநின்றாள்' என்கிறாள்.

தோளி சேர் பின்னை - [2]"ஒத்த சீலம் வயது ஒழுக்கமிவற்றையுடையவளும், ஒத்த குலம் இராஜ லக்ஷணமிவற்றை யுடையவளுமான பிராட்டிக்குப் பெருமாள் தக்கவர்; பெருமாளுக்குப் பிராட்டியும் தக்கவள்" என்கிறபடியே, குடிப்

---

1. "கோவலனார் குடக் கூத்தனார்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். மேற்பாசுரத்தில் பரமபதநாதனைச் சொன்ன பின்னர் இப்பாசுரத்தில் கிருஷ்ணாவதாரத்தை அருளிச்செய்வதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'எல்லா ஆத்மாக்களுக்கும் பரனாய்' என்று தொடங்கி.

2. "சேர் பின்னை" என்றது, "தோளிசேர் பின்னை" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'ஒத்த' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா சுந். 16 : 5.

பிறப்பு முதலியவைகளால் பெருமாளுக்கு ஒத்தவளாய்க் "கறுத்த கண்களையுடையவள்" என்று அவரிலும் இவளுக்கு ஏற்றமானாற்போலே, அல்லாத அழகெல்லாம் கிருஷ்ணனோடு ஒத்திருக்கும்; தோள் அழகு அவனைக் காட்டிலும் இவளுக்கு விஞ்சி இருக்கும் ஆதலின் '**தோளி**' என்கிறது. அவளுடைய அவயவசோபையிலே தோற்று அத் தோளோடே அணைக்கைக்காக. எருது ஏழ் தழீஇக் கோளியார் - எருதுகள் ஏழனையும் தழுவிக் கொள்ளுமவர். அடுத்த கணத்திலே அவளைத் தழுவப் பார்க்கிறான் ஆகையாலே, அவளைத் தழுவினாற்போலே இருக்கிறதாயிற்று எருதுகளோடு பொருததும்; ஆகையாலே அன்றோ '**எருது ஏழ் தழீஇ**' என்கிறது. அவளைப் பெறுகைக்குக் காரணம் ஆகையாலே, [1]அவற்றின் கொம்போடே பொருததும் இக்கொம்போடே சேர்ந்தாற்போலே போக ரூபமாய் இருக்கிறபடி. கோவலனார் குடக்கூத்தனார் - அவளைப் பெறுகைக்குத் தகுதியான [2]குடிப்பிறப்பையும் செருக்கையுமுடையவர். வில்முறித்தாலும் இக்ஷ்வாகு வம்சத்தார்க்கு அல்லது பெண் கொடாத ஜனகனைப்போலே, எருது ஏழ் அடர்த்தாலும் ஆய்க்குலத்தில் குறை உண்டாகில் பெண்கொடார்கள் அன்றே ஆயர்கள்? ஆதலின், அதனை அடுத்துக் '**கோவலனார்**' என்கிறது.

தாள் இணை மேல் அணி தண் அம் துழாய் என்றே - அவளுக்கு உதவின கிருஷ்ணன் திருவடிகளில் சாத்தின திருத்துழாயை ஆயிற்று இவள் ஆசைப்பட்டது. நாளும் நாள் நைகிறது - ஒருநாள் நைகைக்கும் [3]ஆஶ்ரயம் இல்லாத மென்மையையுடையவள், நாள்தோறும் நாள்தோறும் நையாநின்றாள். [4]ஆஶ்ரயத்தையும் கொடுத்து நையப்பண்ணும்

---

1. அவற்றின் கொம்பு - இடபத்தின் கொம்பு. இக்கொம்பு - நப்பின்னைப் பிராட்டி.

2. 'கோவலனார்' என்றதனால் சாதி; 'குடக் கூத்தனார்' என்றதனால் செருக்கு.

3. ஆஶ்ரயம் - பற்றுக்கோடு; சரீரம்.

4. ஒருநாள் நைகைக்கும் ஆஶ்ரயம் போராதாகில் நாள்தோறும் நையக் கூடுமோ? என்னும் வினாவைத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'ஆஶ்ரயத்தையும் கொடுத்து' என்று தொடங்கி. "நாளும் உயிர்ப் பெய்து கூத்தாட்டுக் காணும்" என்பதூஉம் அதுபற்றி வந்தது.

விஷயமே அன்றோ? என்தன் மாதர் - [1]என் பெண்பிள்ளை. அன்றிக்கே, தன்னைப்போலே பிறந்து விலங்கு முறித்துக் கொண்டுபோய்ப் பூதனை சகடாசுரன் இரட்டை மருதமரங்கள் முதலானவைகளோடே பொருது, [2]"தழும்பிருந்ததாள் சகடம் சாடி" என்கிறபடியே, தழும்பு ஏறி இருப்பாள் ஒருத்தியோ என் பெண்பிள்ளை என்பாள் '**என் மாதர்**' என்கிறாள் என்னுதல்; என்றது, [3]தொடுங்கால் ஒசியும் இடை இளமான் அன்றோ? என்கிறாள் என்றபடி. (5)

### 349.

மாதர்மா மண்மடந் தைபொருட்டு ஏனமாய்
ஆதிஅம் காலத்து அகலிடம் கீண்டவர்
பாதங்கள் மேலணி பைம்பொன் துழாய்என்றே
ஓதுமால் எய்தினள் என்தன் மடந்தையே.

**பொ - ரை :**—என்னுடைய பெண்ணானவள், காதலையுடைய பூமிதேவியின் பொருட்டுப் பண்டைக் காலத்தில் வாரகஅவதாரத்தைச் செய்து அகன்ற பூ உலகத்தை ஓட்டு விடுவித்து எடுத்து வந்தவருடைய திருவடிகளின்மேலே அணிந்த பசிய அழகிய திருத்துழாய் என்றே சொல்லும்படியான மயக்கத்தை அடைந்தாள்.

**வி - கு :**—ஆதி அம் காலத்து மாதர் மண்மடந்தை பொருட்டு ஏனமாய் அகலிடம் கீண்டவர் என்க. என்தன் மடந்தை மால் எய்தினள் என மாறுக.

**ஈடு :**—ஆறும்பாட்டு. [4]மனிதத்தன்மை அழியாமல் நப்பின்னைப் பிராட்டிக்கு உதவினாற்போல் அன்றிக்கே, ஸ்ரீ பூமிப்

---

1. "மாதர்" என்பதற்கு, இருபொருள். ஒன்று, பெண்பிள்ளை. மற்றொன்று, மிருதுத் தன்மை. இவ்விரு பொருளையும் முறையே அருளிச்செய்கின்றார்.

2. முதல் திருவந்தாதி. 23.

3. திருவிருத்தம். 37.

4. கிருஷ்ணாவதாரத்துக்குப் பின் வராஹஅவதாரத்தை அருளிச்செய்வதற்குப் பிரயோஜனம் அருளிச்செய்கிறார் 'மனிதத் தன்மை' என்று தொடங்கி. "ஏனமாய்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். அழிய மாறி - மனிதத் தன்மையும் மாறி; என்றது, விலங்காய் அவதரித்து என்றபடி.

பிராட்டிக்காகத் தன்னை அழிய மாறியும் உதவினவனுடைய திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

மாதர் - அழகு. [1] நிருபாதிகமான பெண்மையை யுடையவள் என்னுதல்; [2] மாதர் என்று காதலாய், சிநேகத்தை யுடையவள் என்னுதல். மா மண் மடந்தை பொருட்டு - ஏற்றத்தையுடையவளான ஸ்ரீபூமிப்பிராட்டியின்பொருட்டு. ஏனமாய் - [3] "பாசி தூர்த்துக் கிடந்த பார்மகள்" என்கிறபடியே, காதலி உடம்பு பேணாமல் கிடக்க, காதலன் உடம்பு பேணி இருக்கை காதலுக்குத் தக்கது அன்றே? ஆதலால், 'மாசுடம்பில் நீர் வாரா மானம் இலாப் பன்றியாம் தேசு" என்கிறபடியே, நீருக்கும் சேற்றுக்கும் இளையாத வடிவை யுடையவனாய். ஆதி - வராக கல்பத்தின் ஆதியிலே. அம் காலத்து - அழகிய காலத்தில். [4] ரக்ஷகனானவன் தன் விபூதியின் ரக்ஷணத்திற்காகக் கொண்ட கோலத்தை அநுபவிக்கிற காலம் ஆதலின், '**அம்காலம்**' என்கிறது.

அகல் இடம் கீண்டவர் பாதங்கள்மேல் அணி பைம்பொன் துழாய் என்றே ஓதும் மால் எய்தினள் - பெரிய இந்த உலகத்தை அண்டபித்தியினின்றும் ஒட்டு விடுவித்து எடுத்துக் கொண்டு ஏறினவனுடைய திருவடிகளிலே [5] "அந்த வராக நயினாருடைய மயிர்க்கால்களிலுள்ள மஹருஷிகள் துதி

---

1. 'நிருபாதிகம்' என்றது, அல்லாதாரைப் போன்று கர்மங் காரணமாக வந்தது அல்லாதது என்றபடி.

2. "மாதர் காதல்" என்பது தொல்காப்பியம். (தொல். சொல். உரி.)

3. நாய்ச்சியார் திருமொழி. 11. 8. இது, "ஏனம்" என்றதன் தாத்பரியம். "ஏனமாய்" என்றதற்கு பாவம் "மாசுடம்பில்" என்று தொடங்குவது.

4. "செய்குறி ஈட்டம் கழிப்பிய வழிமுறை
கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய
ஊழி ஒருவினை உணர்த்தலின் முதுமைக்கு
ஊழி யாவரும் உணரா
ஊழி முதல்வநிற் பேணுதும் தொழுது"

என்பது பரிபாடல். 2. 15 : 19.

5. விஷ்ணுபுரா. 1. 4 : 29.

செய்கிறார்கள்" என்கிறபடியே, சனகன் முதலானோர் இட்ட திருத்துழாயை ஆயிற்று இவள் ஆசைப்படுகிறது. இதனையே எப்போதும் சொல்லும்படி பிச்சு ஏறினாள் என்பாள் '**மால் எய்தினள்**'. என்கிறாள். என் தன் மடந்நையே - 'அவன் அன்றோ பிச்சு ஏறுவான்' என்று இருப்பவளாதலின் '**என் மடந்தை**' என்கிறாள். [1] இப் பருவத்தைக் கண்டார் படுமதனை இப் பருவமுடைய இவள் படுவதே! என்கிறாள். (6)

350.

மடந்தையை வண்கம லத்திரு மாதினைத்
தடங்கொள்தார் மார்பினில் வைத்தவர் தாளின்மேல்
வடங்கொள்பூந் தண்ணம் துழாய்மலர்க் கேஇவள்
மடங்குமால் வாணுதலீர்! என்மடக் கொம்பே.

**பொ - ரை :**—ஒளிபொருந்திய நெற்றியையுடைய பெண்களே! என்னுடைய பெண்ணானவள், மடந்தைப் பருவத்தையுடையவளாகிய, வளப்பம்பொருந்திய தாமரைப்பூவில் வீற்றிருக்கின்ற பெரியபிராட்டியாரைப் பரந்த மாலையை அணிந்த திருமார்பிலே வைத்த எம்பெருமானுடைய திருவடிகளின்மேலே அணிந்த தொடுக்கப்பட்ட பூக்களையுடைய குளிர்ந்த அழகிய திருத்துழாய்மலர்க்கே இவள் சுருண்டு விழுகின்றாள்.

**வி - கு :**—என் மடக்கொம்பு இவள் துழாய் மலர்க்கே மடங்கும் எனக் கூட்டுக. கொம்பு : ஆகுபெயர். தார் கொள் தடம் மார்பு என மாறுக.

**ஈடு :**—ஏழாம்பாட்டு. [2] அமிர்தத்திற்காகத் திருப்பாற் கடலைக் கடைகிற காலத்திலே பெரியபிராட்டியாரைத் திருமார் பிலே வைத்தருளினவனுடைய திருவடிகளிற் சாத்தின திருத் துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

---

1. ஈண்டு "மடந்தை" என்றது, பருவப் பெயர். பதினான்கு முதல் பத்தொன்பது வரை வயதுள்ள பருவத்துப் பெண்.

2. நான்கு அடிகளையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். அவதாரம் சொல்லி வருகிற பிரகரணமாகையாலே இதுவும் ஓரவதாரமாக வேணும் என்று திருவுள்ளம்பற்றி அதற்குத் தக, 'அமிர்தத்திற்காக' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

மடந்தையை - [1] எப்போதும் ஒக்க போகத்திற்குத் தகுதி யான பருவத்தையுடையவளை. வண் கமலத் திருமாதினை - அழகிய தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய திருவாகிற பெண்பிள்ளையை. சாக்ஷாத் இலக்குமியை என்றபடி. தடம் கொள் தார் மார்பினில் வைத்தவர்-பெரிய பிராட்டியாருக்குத் திவ்ய அந்தப்புரமாகப் போரும்படி இடமுடைத்தாய், ஐஸ்வர்ய [2] சூசகமான மாலையையுடைத்தான மார்பிலே வைத்தவர்.

மார்பினில் வைத்தவர் தாளின்மேல் வடம் கொள்பூந்தண் அம் துழாய் மலர்க்கே இவள் மடங்குமால் - [3] "மஹாலக்ஷ்மி யானவள் பார்த்துக் கொண்டிருக்கின்ற எல்லாத் தேவர்களுக் கும் நடுவில் பகவானுடைய திருமார்பை அடைந்தாள்" என் கிறபடியே, அமிருதத்திற்காகக் கடைகிற காலத்தில் '[4] அம்மா நமக்கு இம் மார்பு பெறவேணும் என்று தன்பாடு ஏற வர, அவளையும் மார்விலே வைத்துக்கொண்டவனுடைய திருவடி களின்மேலே, செறியத் தொடையுண்டு காட்சிக்கு இனிய தாய்க் குளிர்ந்து செவ்வியை யுடைத்தான திருத்துழாய்ப் பூவை ஆசைப்பட்டுக் கிடையாமையாலே சுருண்டு விழுந்து கிடவாநின்றாள். வாள்நுதலீர் - ஒளிபொருந்திய நெற்றியை யுடையவர்களே! [5] உங்களைப் போன்று இவளைக் காண்

---

1. உலகத்திலே பிறந்தபோது இளமைப் பருவமாகவிருந்து பின்பே யன்றோ போகத்திற்குத் தக்க பருவம் உண்டாவது; அங்ஙனன்றிக்கே, பிராட்டியார் இருத்தலின் 'எப்போதும் ஒக்க' என்று தொடங்கி அருளிச் செய்கிறார். எக்காலமும் மடந்தையா யிருப்பவள் என்றபடி.

2. சூசகம் - அறிகுறி.

3. விஷ்ணுபுரா. 1. 9: 105.

வெருவு மாலமும் பிறையும் வெவ் விடையவற் கீந்து
தருவும் வேறுள தகைமையும் சதமகற் கருளி
மருவு தொல்பெரு வளங்களும் வேறுற வழங்கித்
திருவு மாரமும் அணிந்தனன் சீதர மூர்த்தி.

என்பது கம்ப ராமாயணம். (பால காண். வேள். 26.)

4. 'அம்மா' என்றது, சிலேடை; ஸ்வாமி என்றும், அந்தத் திருமகள் என்றும் பொருளாம்.

5. "வாள் நுதலீர்" என்று விளிப்பதற்கு பாவம் 'உங்களைப் போன்று' என்று தொடங்கும் வாக்கியம்.

பது எப்போது ? என்பாள் 'வாள் நுதலீர்' என்று விளிக்கிருள். என் மடக் கொம்பே - [1]என்னைப் பிரியாமல் எல்லா அளவிலும் விகாரம் இல்லாதவளாயிருக்குமவள் படும்பாடே இது ! (7)

351.

கொம்புபோல் சீதை பொருட்டு இலங் கைநகர்
அம்பெரி உய்த்தவர் தாளிணை மேல்அணி
வம்பவிழ் தண்ணம் துழாய்மலர்க் கேஇவள்
நம்புமால் நான்இதற்கு என்செய்கேன் நங்கைமீர் !

**பொ. ரை :**—பெண்களே ! என் மகளாகிய இவள், பூங்கொம்பு போன்ற சீதாபிராட்டியின் காரணமாக இலங்கைநகரிலே நெருப்பைச் சொரிகின்ற அம்பைச் செலுத்திய ஸ்ரீராமபிரானுடைய இரண்டு திருவடிகளின்மேலே அணிந்த வாசனையோடு மலர்கின்ற குளிர்ந்த அழகிய திருத்துழாய் மலரையே விரும்பாநின்ருள்; இதற்கு நான் என்ன செய்வேன்?

**வி - கு :**—நங்கைமீர்! இவள் அம்பு எரி உய்த்தவர் தாள் இணை மேல் அணி துழாய் மலர்க்கே நம்பும் என் செய்கேன்? எனக் கூட்டுக. அம்பு எரி - ஆக்நேய அஸ்திரமுமாம். நம்புதல் - விரும்புதல்; "நம்பும் மேவும் நசையா கும்மே" என்பது தொல்காப்பியம். (தொல்-சொல்.)

**ஈடு :**—எட்டாம்பாட்டு. [2]ஸ்ரீஜனகராஜன் திருமகளுடைய விரோதியைப் போக்கின சக்கரவர்த்தி திருமகன் திருவடிகளில் சாத்தின திருத்துழாயை ஆசைப்படாநின்ருள் என்கிருள்.

கொம்பு போல் - வஞ்சிக்கொம்பு போலே என்னுதல்; [3]"அநந்யா - வேறுபட்டவள் ஆகேன்" என்கிறபடியே, ஒரு

---

1. கொம்பு மரத்தைப் பிரியாம லிருப்பதாதலின் அதனைத் திருவுள்ளம் பற்றி "என் கொம்பு" என்பதற்கு 'என்னைப் பிரியாமல்' என்று அருளிச் செய்கிருர். "மடம்" என்பதற்கு பாவம் 'எல்லா வளவிலும்' என்று தொடங்குவது. மடமை - பற்றியது விடாமை.

2. "சீதை பொருட்டு இலங்கை நகர் அம்பெரி உய்த்தவர்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

3. ஸ்ரீராமா சுந். 21 : 15. "சூரியனுடைய ஒளியைப் போன்று ஸ்ரீ ராகவனை விட்டுப் பிரியாமல் இருப்பவள் நான்" என்பது அப் பகுதியின் பொருள். கொம்பு என்பது மரத்தினது ஓர் உறுப்பு ஆகையாலே, 'ஒரு பொருளில் ஏகதேசம்' என்கிருர்.

பொருளில் ஏகதேசம் என்னுதல். சீதைபொருட்டு - சீதைக்காக. இலங்கைநகர் - சூரியசந்திரர்கள் சஞ்சரிப்பதற்குப் பயப்படும் ஊர். அம்பு எரி உய்த்தவர்-அம்பாகிய நெருப்பைப் புகச்செய்தவர். [1]சக்கரவர்த்தி திருமகன் இதனைக் கைதொட்டு சிக்ஷித்துக் குணவானுக்கிப் பின்பேயன்றோ போகவிட்டது; ஆகையாலே, கேவலாக்நி புகுதற்குக் கூசும் ஊரிலே தன் வாய்வலியாலே புக்கதாயிற்று. இப்படி, தான், [2]முதுகிட்டாரையும்கூட, குணவான்களாக்கும்படி ஏக்கற்றவருடைய திருவடிகளில் சாத்தப்பட்ட. வம்பு அவிழ் தண் அம் துழாய் மலர்க்கே-வாசனையையுடைத்தான மலர் என்னுதல்; எப்பொழுதும் [3]புதியதாகவே இருக்கும் மலர்என்னுதல். [4]அவன் சக்கரவர்த்தி திருமகனுயிருக்கச் செய்தேயும் பிரகிருதி சம்பந்தமில்லாத திவ்விய திருமேனியை யுடையவனுய் இருப்பதுபோன்று, அவன் ஏதேனும் ஒன்றாலே வளையம் வைத்தாலும் இவர்களுக்குத் தோற்றுவது திருத்துழாயாயே ஆதலின், 'இலங்கை நகர் அம்பு எரி உய்த்தவர் தாள்இணைமேல் அணி துழாய் மலர்' என்கிருள்.

---

1. சூரிய சந்திரர்கள் புகுதற்கு அஞ்சும் ஊரிலே அம்பாகிய நெருப்பை புகச்செய்தது எப்படி? என்னும் வினைவைத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிருர். 'சக்கரவர்த்தி திருமகன்' என்று தொடங்கி. 'சக்கரவர்த்தி திருமகன்' என்று தொடங்கும் வாக்கியத்திற்கு, பெருமாள் அம்பைத் தொட்டுக் கணுக்களை நிமிர்த்து நாணியிலே ஏறிட்டுப் பின்பே அன்றோ பிரயோகித்தது என்பது நேர் பொருள். போரிலே தோற்றோடுகின்றவனைப் பயப்படாதபடி கையாலே தொட்டு, அணிவகுக்கும் பிரகாரங்களைக் கற்பித்து, குணவானுக்கிப் பின்பே யன்றோ போகவிட்டது என்பது தொனிப் பொருள். இங்கே, அருச்சுனன், பயந்து ஓடின உத்தர குமாரனைத் திருத்தினமையை நினைவு கூர்க. சிக்ஷித்து - கற்பித்து.

2. 'முதுகிட்டாரையும்' என்று தொடங்கும் வாக்கியம் சிலேடை. முதுகிட்டார் - புற முதுகு காட்டி ஓடுகிறவர்; முதுகிலே இடப்பட்ட அம்பறுத்துணி. குணவானுக்குதல் - நாணிலே ஏறிடுதல்; பவ்யனுக்குதல். ஏக்கற்றவர் - அம்பை எய்வதற்குக் கற்றவர்; ஏவுதலைச் செய்கின்றவர்.

3. வம்பு - புதுமை.

4. சக்கரவர்த்தி திருமகனுக்குத் திருத்துழாய் உண்டோ? என்னும் வினைவைத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'அவன் என்று தொடங்கி.

நம்புமால் - அதனை எப்போதும் விரும்பாநின்ருள். நான் இதற்கு என்செய்கேன் - [1]ஸ்ரீக்ருஷ்ணனைப்போலே ஊர்ப் பொது அன்றிக்கே, ஏகதார விரதனானவன் திருவடிகளில் திருத்துழாயை நான் எங்கே தேடும்படி? நங்கைமீர் - நீங்கள் எல்லாவற்ருலும் நிறைந்தவர்களாயிருக்க, இவள் இப்படிப் படுகிறபடி கண்டீர்களே அன்ரே? இதற்கு ஒரு பரிகாரம் சொல்லவல்லீர்களோ? என்கிருள். (8)

352.

நங்கைமீர்! நீரும்ஓர் பெண்பெற்று நல்கினீர்
எங்ஙனே சொல்லுகேன் யான்பெற்ற ஏழையைச்
சங்குஎனும் சக்கரம் என்னும் துழாய்எனும்
இங்ஙனே சொல்லும் இராப்பகல் என்செய்கேன்?

பொ - ரை:—பெண்மணிகாள்! நீங்களும் ஒவ்வொரு பெண்ணைப் பெற்று விரும்பி வளர்க்கின்றீர்கள்; யான் பெற்ற பெண்ணினைக் குறித்து எந்தவகையில் பேசுவேன்? சங்கு என்கிருள்; சக்கரம் என்கிருள்; துழாய் என்கிருள்; இரவும் பகலும் இங்ஙனமே சொல்லுகின்ருள்; இதற்கு என் செய்வேன்?

வி - கு:—இராப்பகல் இங்ஙனே சொல்லும் என் செய்கேன்? என மாறுக. என்னும், சொல்லும் என்பன: செய்யும் என் முற்றுக்கள்.

---

1. 'திருத்துழாயை விரும்புகிருள்' என்றது, புணர்ச்சியை விரும்புகிருள் என்பது பொருளாதலின், அதனைத் திருவுள்ளம்பற்றி, 'ஏகதார விரதன் புணர்ச்சிக்கு இசையப் போகின்ருனே' என்பது தாயாருடைய உட்கோள் என்பதனைத் தெரிவிக்கின்ருர் 'ஸ்ரீ க்ருஷ்ணனைப் போலே' என்று தொடங்கி.

வந்தெனைக்கரம் பற்றிய வைகல்வாய்
இந்த விப்பிற விக்கிரு மாதரைச்
சிந்தை யாலும் தொடேன்என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்.

என்ற கம்பராமாயணச் செய்யுள் ஈண்டு நினைவு கூர்க. (சூடாமணிப். 34.)

ஈடு :—ஒன்பதாம்பாட்டு. [1] 'அவனுடைய ஆயுதம் முதலானவைகளைக் காணவேணும்' என்று சொல்லப்புக்கு முடியச் சொல்லமாட்டாதே நோவுபடாநின்றாள் என்கிறாள்.

நங்கைமீர் - [2] உங்கள் நிறைவு, இவள் படுகிற பாடு நான் சொல்லக் கேட்டு அறியவேண்டி இருக்கிறது அன்றோ உங்களுக்கு. நீரும் ஓர் பெண் பெற்று நல்கினீர் - நீங்களும் ஒரு பெண்பிள்ளையைப் பெற்று வளர்க்கின்றீர்கள் அன்றோ? நல்குகை - வளர்க்கை. [3] இவள் பட்டது பட்டார் உளரோ? எங்கள் பெண்பிள்ளைகளைக் காட்டிலும் உன் பெண் பிள்ளைக்கு வாசி என்? என்னில், எங்ஙனே சொல்லுகேன் - இவள் படி பேச்சுக்கு நிலம் ஆகில் அன்றோ நான் சொல்லுவது? என்றது, [4] "மனத்தாலுங்கூட நினைக்க முடியாமல் வேத வாக்குக்கள் அந்த ஆனந்த குணத்தினின்றும் திரும்புகின்றன" என்கிற பகவானுடைய குணங்களை நிலமாகப் பேசிலும், குணவகாடர் படி பேச்சுக்கு நிலம் அன்றே? என்றபடி. [5] "பகவானுடைய குணங்களில் ஈடுபட்டவனாய் எல்லாராலும் எப்பொழுதும் பார்க்கத் தகுந்தவனாய் இருப்பான்" என்கிற படியே, கண்டிருக்கும் அத்தனை போக்கிப் பேச முடியாது. [6] "என் ஒருவனிடத்திலேயே பக்தியுடைய ஞானி சிரேஷ்டனாகிறான்; அத்தகைய ஞானிக்கு நான் மிகவும் பிரியமுள்ளவன்; அவனும் எனக்குப் பிரியமுள்ளவன்" என்பதே அன்றோ

---

1. "சங்கு எனும் சக்கரம் என்னும்" என்பன போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "நங்கைமீர் !" என்ற விளிக்கு பாவம், 'உங்கள் நிறைவு' என்று தொடங்கும் வாக்கியம். 'நிறைவு' என்றது, ஞானத்தின் நிறைவினை.

3. "பெண்பெற்று நல்கினீர்" என்றதற்கு பாவம், 'இவள் பட்டது' என்று தொடங்கும் வாக்கியம்.

4. தைத்திரீய உப. ஆந. 9 : 1. 'மனத்தாலும்' என்று தொடங்கும் வாக்கியம், ஸ்வாபதேசம். குணவகாடர் - குணங்களிலே அவகாஹித்தவர்; ஆழ்வார்கள்.

5. 'பேச்சுக்கு' நிலமன்று என்றதனால் போதரும் பொருளை அருளிச் செய்கிறார் 'பகவானுடைய' என்று தொடங்கி. இது, ஸ்ரீ விஷ்ணு தத்வம்.

6. குணவகாடர் படி பேச முடியாமைக்குப் பகவானுடைய வார்த்தையையும் காட்டுகிறார் 'என் ஒருவன்'என்று தொடங்கி. இது, ஸ்ரீ கீதை. 7 : 17.

அவன் வார்த்தையும். தேசத்தாலும் காலத்தாலும் கைகழிந்த பொருள்களை அந்த அந்தத் தேசத்தோடும் காலத்தோடும் கூடினதாகப் பெறவேணும் என்கிற இவள்படி என்னாலே பேசலாய் இருந்ததோ? ஆயினும், எங்களைக் காட்டிலும் நீ அண்மையில் இருப்பவள் அன்றோ? தெரிந்தமட்டு அதனைச் சொல்லிக்காணாய் என்ன, [1] கைமேலே சொல்லுகிறாள்:

சங்கு என்னும் - [2]மலையை எடுத்தாற்போலே பெரு வருத்தத்தோடே சங்கு என்னும்; அது பொறுத்தவாறே, சக்கரம் என்னும் - [3]மீளவும் மாட்டுகின்றிலள், சொல்லவும் மாட்டுகின்றிலள். இரண்டற்கும் நடுவே கிடக்கிற மாலையை நினைத்து, துழாய் என்னும் - [4] "சங்கு சக்கரங்கள்" என்றும், [5] "கூராராழி வெண்சங்கு" என்றும் சொல்லமாட்டுகின்றிலள். [6]ஆபத்து மிக்கவாறே ஒருத்தி "சங்கசக்ர கதா பாணே - சங்கையும் சக்கரத்தையும் கதையையும் கைகளில் தரித்திருப்பவனே!" என்றாள் அன்றோ? இங்ஙனே சொல்லும் - சொல்லத் தொடங்குவது, சொல்லித் தலைக்கட்டமாட்டாது ஒழிவதாய்ப் படாநின்றாள். இப்படிச் சொல்லுவது எத்தனை

---

1. 'கைமேலே' என்றது, சிலேடை; திருக்கைகளிலுள்ள திவ்ய ஆயுதங்கள் என்றும், கையிலுடையதாக என்றும் பொருள்.

2. "என்னும் என்னும்" என்பதற்கு பாவம், 'மலையை எடுத்தாற் போலே' என்பது.

3. ஏழை ஆகையாலே, மீளவும் மாட்டுகின்றிலள்; வலி இல்லாமையாலே சொல்லவும் மாட்டுகின்றிலள் என்பதாம். இரண்டற்கும் நடுவே - சங்கு சக்கரங்களுக்கு நடுவே.

4. திருவாய்மொழி. 7. 2: 1.

5. திருவாய்மொழி. 6. 9: 1.

6. சங்கு சக்கரங்கள் என்று சேர்த்துச் சொல்லிய பேர் உண்டோ? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் 'சங்க சக்ர' என்று தொடங்கி. இது, துச்சாதனனால் துகில் உரியப் படுகின்ற காலத்தில் திரௌபதி கூறியது.

"சங்கசக்ர கதாபாணே துவாரகா நிலய அச்சுத
கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் சரணாகதாம்"

என்பது அந்தச் சுலோகம். இதனை இங்குப் பிரமாணமாக எடுத்தது, ஆபத்து மிக்கவர்கள் எல்லாம் விரோதிகளை அழிக்கக் கூடியவைகளான இந்தச் சங்க சக்கரங்களைச் சொல்லுதலே இயல்பு என்று காட்டுவதற்காக.

போது? என்னில், இராப் பகல் - எல்லாக்காலமும். என்செய்கேன் - இவளைத் தொடங்கினதைச் சொல்லித் தலைக்கட்டப் பண்ணவோ? [1]பெண்மையைப் பார்த்து மீளும்படி பண்ணவோ? என்செய்கோ? (9)

353.

என்செய்கேன்? என்னுடைப் பேதைஎன் கோமளம்
என்சொலும் என்வச முமலள் நங்கைமீர்!
மின்செய்பூண் மார்பினன் கண்ணன் கழல்துழாய்
பொன்செய்பூண் மென்முலைக்கு என்று மெலியுமே.

**பொ - ரை:**—நங்கைமீர்! என்னுடைய பேதை, என்னுடைய கோமளம் என் சொல்லினும் வருகின்றிலள்; என் வசமும் வருகின்றிலள்; என் செய்வேன்? பிரகாசத்தைச் செய்கின்ற ஆபரணங்கள் பொருந்திய மார்பையுடையவனான கண்ணபிரானுடைய திருவடிகளில் அணிந்த திருத்துழாய், பொன்னால் செய்த ஆபரணங்களையுடைய மெல்லிய முலைகளுக்கு அலங்காரமாகவேணும் என்று மெலியா நின்றாள்.

**வி - கு:**—கோமளம் கண்ணன் கழல் துழாய் மென்முலைக்கு என்று மெலியும்; என் சொல்லும் என் வசமும் அல்லள்; என் செய்கேன்? எனக் கூட்டுக.

**ஈடு:**—பத்தாம்பாட்டு. [2]உன்மகள் நீ இட்ட வழக்கு அன்றோ? அவளுக்கு ஹிதத்தைச்சொல்லி மீட்கத் தட்டு என்

---

1. ‘பெண்மையைப் பார்த்து’ என்றது, “இலங்கையை அழித்து என்னை அழைத்துக் கொண்டு செல்லுதல் அந்த இராமபிரானுக்குத் தக்கது” என்றிருக்கவேண்டும்படியான பெண்மையைக் குறித்தபடி. “என் செய்கேன்” என்றது, சொரூபத்தைப் பார்த்து இவள் வாய் மூடும்படி பண்ணவோ? அசாதாரண சின்னங்களைச் சொல்லித் தலைக்கட்டும்படி பலத்தை உண்டாக்கவோ? அவைதம்மை இப்போது அண்மையிலே இருக்கத் தக்கவைகளாகச் செய்யவோ? ஒன்றும் செய்ய முடியாதே! என் செய்வேன்? என்கிறாள் என்றபடி.

“நீரும் ஓர் பெண் பெற்று நல்கினீர்” என்றதனால், இவ்வாழ்வாருடைய பிரேம தசைக்கு மற்றைய ஆழ்வார்களுடைய பிரேமதசை ஒவ்வாது என்பது பெறப்படும்.

2. “என் சொல்லும் என் வசமும் அல்லள்” என்கையாலே கிடைத்த சங்கையை அநுவதித்து, “என்று மெலியும்” என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

உனக்கு? என்றவர்களைக் குறித்து நான் சொல்லிற்றுக் கேளாதே அவனையே ஆசைப்பட்டு மிகவும் மயங்காநின்றாள் என்கிறாள்.

என்செய்கேன் - இவள் நிலை இருந்தபடியால் இவளைக் கிடையாததாயிருந்தது; நான் எங்ஙனே ஜீவிக்கக்கடவேன்? என்னுடைப் பேதை - நான் சொல்லும் நல்வார்த்தைகளைக் கேட்கும் பருவம் அல்லள். என் கோமளம் - 'நான் சொன்ன நல்வார்த்தையைக் கேட்டிலள்' என்று கைவிட ஒண்ணாத படி வியசனத்தைப் பொறுக்க முடியாத மென்மையையுடையவள். என் சொல்லும் அல்லள் என்வசமும் அல்லள் - நான் சொன்ன நல்வார்த்தைகளைக் கேட்பதுஞ் செய்யாள்; நான் ஹிதம் சொல்லலாம்படி இருப்பதும் செய்யாள். நங்கைமீர் - [1]இதில் நீங்கள் அறியாதன இல்லை அன்றே?

மின்செய் பூண் மார்பினன் கண்ணன் கழல் துழாய்-மின்னுகின்ற ஸ்ரீகௌஸ்துபத்தை மார்விலேயுடைய ஸ்ரீகிருஷ்ணன் திருவடிகளில் திருத்துழாய். பொன்செய் பூண் மென் முலைக்கு - பொன்னாலே செய்த ஆபரணங்களையுடைத்தாய் விரக தாபத்தைப் பொறுக்கும் ஆற்றல் இல்லாத முலைக்கு. அன்றிக்கே, பொன்செய்திருக்கை - பசலை பூத்திருக்கை என்னுதல்; [2]"மென்முலை பொன்பயந்திருந்த" என்னக்கடவது அன்றோ. அந்தப் பசலையினையே ஆபரணமாகவுடைய முலை என்றபடி. [3]"நிந்திக்கப்படாதவள்" என்னுமாறுபோலே. அவன் புருஷத் தன்மைக்கு லக்ஷணமான கௌஸ்துபம் போலே ஆயிற்று, பெண்தன்மைக்கும் பசலை; ஆதலின், '**மின் செய்பூண்மார்பினன் - பொன்செய்பூண்முலை**' என்று விசேஷித்துக் கூறுகின்றாள். [4]காதலனைப் பிரிந்ததால் உளதாய

1. "நங்கைமீர்" என்றது, ஞான நிறைவு சொல்லுகிறது.

2. பெரிய திருமொழி. 2. 7 : 6. இது, பொன் என்ற சொல் பசலை என்னும் பொருளில் வருவதற்கு மேற்கோள்.

3. பசலையே ஆபரணமாக இருத்தற்கு மேற்கோள், "நிந்திக்கப் படாதவள்" என்பது. இது, ஸ்ரீராமா. சுந். 29 : 1. என்றது, பெருமாளைப் பிரிந்து அழகு அழிந்திருக்கிற நிலையிலே பிராட்டியை 'நிந்திக்கப்படாதவள்' என்று ஸ்ரீ வால்மீகிபகவான் கூறுவதால், பசலை நிறமும் ஆபரணமாக இருக்கும் என்பது கருத்து. பசலையாவது, பிரிவாற்றாமையான் வருவதோர் நிறவேறுபாடு. இந்நிறம் பீர்க்கம்பூவின் நிறத்தைப் போன்றது என்பர்.

4. இதனைத் திருக்குறளில் 'பசப்புறுபருவரல்' என்ற அதிகாரத்தால் அறிதல் தகும்.

விரகத்தில் இப்படிப் பொன் பயக்கையே அன்றோ பெண்தன்மைக்கு லக்ஷணம். [1]தனம்படைத்தாரில் இவளைப்போன்று தனம்படைத்தார் உளரோ? [2]தன்காதலனைப் பிரியமாட்டாமையாலே பொன்இட்டுக்கொள்ளுகிறது என்பாள் 'மென்முலை' என்கிறாள். மெலியும் - 'மென்முலைக்குவேணும்' என்று சொல்லப்புக்கு மெலிவோடே தலைக்கட்டும். (10)

354.

மெலியும்நோய் தீர்க்கும்நம் கண்ணன் கழல்கள்மேல்
மலிபுகழ் வண்குரு கூர்ச்சட கோபன்சொல்
ஒலிபுகழ் ஆயிரத்து இப்பத்தும் வல்லவர்
மலிபுகழ் வானவர்க்கு ஆவர்நற் கோவையே.

**பொ - ரை:**—பிரிவால் மெலிகின்ற விரக நோயினைத் தீர்க்கின்ற நம் கண்ணபிரானுடைய திருவடிகளின்மேல் மிக்க புகழையுடைய வளவிய திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீசடகோபரால் அருளிச் செய்யப்பட்ட ஒலி புகழ் ஆயிரம் திருப்பாசுரங்களில் இந்தப் பத்துத் திருப்பாசுரங்களையும் வல்லவர்கள் மிக்க புகழையுடைய நித்தியசூரிகளோடு ஒரு கோவையாக ஆவர்.

**வி - கு:**—ஒலி புகழ் - பேசப்படும் புகழ். வல்லவர் நற்கோவை ஆவர் என்க. கோவை ஆதல் - சேர்ந்தவர் ஆதல்.

**ஈடு:**—முடிவில், [3]இத்திருவாய்மொழியைக் கற்கவல்லவர் நித்தியசூரிகளோடு ஒத்தவர்ஆவர் என்கிறார்.

---

1. ரசோக்தி.

2. "பொன்செய் பூண்முலை" என்றபோதே இளைப்பு சித்தமாயிருக்க, மீண்டும் "மென்முலை" என்கிறது என்? என்னும் வினாவைத் திருவுள்ளம் பற்றி அதற்கு விடையாகத் 'தன் காதலனை' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். 'பொன் இட்டுக்கொள்ளுகிறது' என்றது, தன் கணவன் பார்க்க வேணும் என்று பொன்னைப் பூட்டிக் கொள்ளுகிறது என்றபடி.

3. "வானவர்க்கு நற்கோவை ஆவர்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'நித்திய சூரிகளோடு ஒத்தவராவர்' என்னுமிவ்விடத்து

> வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
> தெய்வத்துள் வைக்கப் படும்.

என்ற திருக்குறள் நினைவிற்கு வருகிறது.

மெலியும் நோய் தீர்க்கும் - [1]'மெலியும்' என்று தாயார் கைவாங்கினள்; [2]"பெற்றார் பெற்றொழிந்தார்" என்கிற பாசுரப்படியே, பின்னையும் உடையவன் கைவிடானே? ஆதலின், '**மெலியும் நோய்தீர்க்கும்**' என்கிறது. நம் கண்ணன் - இப்படிப்பட்ட ஆபத்துக்களிலே வந்து முகங்காட்டுவான் என்னும் பிரமாண பிரசித்தியைப்பற்ற '**நம்கண்ணன்**' என்கிறது. [3]"கண்ணபிரான் அந்தக் கோபஸ்திரீகளுக்குமத்தியில் தோன்றினன்" என்பது ஸ்ரீபாகவதம். கண்ணன் கழல்கள் மேல்- இப்படிச் சரீரம் மெலிவதற்கு அடியான விரக வியசனத்தைப் போக்கும் அடியார்கட்குச் சுலபனான ஸ்ரீகிருஷ்ணன் திருவடிகள் விஷயமாக. மலி புகழ்-'தேச காலங்களால் கைகழிந்த அவன்படிகளையும் இப்போதே பெறவேணும்' என்று விடாய்க்கும்படி பகவத்விஷயத்திலே விடாய்க்கையால் வந்த புகழேஅன்றோ? ஆதலின், '**மலிபுகழ்**' என்கிறது. வண் குருகூர்ச் சடகோபன் சொல்-இப்படிப்பட்ட புகழையுடைய ஆழ்வார் அருளிச்செய்த. ஒலிபுகழ்ஆயிரத்து இப்பத்தும் வல்லவர் - இப்படி இவரை விடாய்ப்பித்தவன் அவ்விடாய் போனஇடம் தெரியாதபடி நீக்கவல்லன் என்கிற கல்யாணகுணங்களை விளக்கமாகச் சொல்லுகிற இந்தப்பத்தையும் கற்க வல்லவர்கள்.

---

1. "மெலியும்" என்ற பின்னர், தாயார் வார்த்தை இல்லாமையாலே, கைவாங்கினமை சித்தம்.

2. பெரிய திருமொழி. 8. 9: 7.

பெற்றார் பெற்றொழிந்தார் பின்னும் நின் றடியேனுக்கு
உற்றா னாய் வளர்த்து என் னுயிராகி நின்றானை
முற்றா மாமதிகோள் விடுத்தானை எம்மானை
எத்தால் யான்மறக்கேன் இதுசொல்என் ஏழைநெஞ்சே.

என்பது அத் திருப்பாசுரம்.

உடையவன் - சுவாமி.

3. "புன்முறுவலோடு கூடின தாமரை போன்ற திருமுகமண்டலத்தை யுடையவனும் பீதாம்பரத்தைத் தரித்தவனும் அணிந்த புஷ்ப மாலையை யுடையவனும் மன்மதனுக்கும் மன்மதனுமிருக்கிற கண்ணன் அந்தக் கோபஸ்திரீகளுக்கு மத்தியில் வந்து தோன்றினன்" என்பது ஸ்ரீபாகவதம். 10.

மலிபுகழ் வானவர்க்கு நற்கோவை ஆவர் - வானவரோடு நல்ல சேர்த்தி ஆவர். ‘மலிபுகழ்வானவர்’ என்றதனால், [1]இவ் வாழ்வாரோடு ஒப்பர்களாயிற்று அவர்களும். [2]பகவானுடைய பிரிவால் விடாய்க்கைக்கு இடமில்லாத சம்சாரத்திலிருந்து இவர் விடாய்க்கவல்லவர் ஆனாற்போலேயாயிற்று, பகவானோடு நித்யஅநுபவம் பண்ணாநிற்கச்செய்தே விடாய்க்க வல்லராம் படியும். (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

பாலரைப்போல் சீழ்கிப் பரனளவில் வேட்கையால்
காலத்தால் தேசத்தால் கைகழிந்த—சால
அரிதான போகத்தில் ஆசையுற்று நைந்தான்
குருகூரில் வந்துதித்த கோ. (32)

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. “மலிபுகழ் வண்குருகூர்ச் சடகோபன்” என்றும், “மலிபுகழ் வானவர்” என்றும் அருளிச்செய்ததற்கு பாவம், ‘இவ்வாழ்வாரோடு’ என்று தொடங்கும் வாக்கியம்.

2. எந்தத் தன்மையாலே ஒப்பாவார்கள் என்ன? அதற்கு விடை அருளிச்செய்கிறார் ‘பகவானுடைய’ என்று தொடங்கி. என்றது, பகவானுடைய பிரிவால் விடாய்க்கைக்குச் சம்பாவனையில்லாத சம்சாரத்திலே இருந்து இவர் விடாய்க்குமாறுபோலே ஆயிற்று, நித்ய அனுபவம் பண்ணாநிற் செய்தே அவர்கள் விடாய்க்க வல்லபடி; ஆகையாலே, அசம்பாவிதமான விடாய் இருவர்க்கும் ஒத்திருக்கையாலே ஒப்பர்கள் என்கிறது என்றபடி. ‘நித்திய சூரிகளுக்கு விடாய்’ என்றது, மேலே மேலே அநுவிக்கவேணும் என்னும் ஆசை.

## மூன்றுந் திருவாய்மொழி - "கோவைவாயாள்"

### முன்னுரை

ஈடு:—[1] எல்லாத்தேசத்திலும் எல்லாக்காலத்திலும் உண்டான அவன் படிகள் எல்லாம் இப்போதே பெற்று அநுபவிக்கவேணும் என்று விடாய்ப்பார் ஒருவரைப் பெறுகையாலே, இவர் சத்தையே இறைவனுகிய தனக்கு எல்லாமாம்படி இருக்கிற தன் பிரணயித்வ குணத்தைக் காட்டிக் கொடுக்கக் கண்டு, இவரும் எல்லாம் பெற்றாராய் அநுபவிக்கிறார். சர்வேசுவரனுடைய "பாலனாய் ஏழுலகு" இத் திருவாய்மொழி.

[2] இது தனக்கு மூன்றுபடியாக நிர்வஹிப்பர்கள் நம் முதலிகள்; எம்பார், "அம்புலி அம்மானைப் பிடித்துத் தரவே

---

1. மேல் திருவாய்மொழிக்கும் இதற்கும் இயைபு அருளிச்செய்கிறார் 'எல்லாத் தேசத்திலும்' என்று தொடங்கி. சத்தை - இருப்பு.

பிரணயித்வகுணம் - வியாமோஹம்; காதல். 'சர்வேசுவரனுடைய "பாலனாய் ஏழுலகு" இத்திருவாய்மொழி' என்றது, மேல் திருவாய்மொழியாகிய "பாலனாய் ஏழுலகில்" ஆழ்வாருடைய பிரணயித்வகுணம் சொன்னாற்போலே, இத் திருவாய்மொழியில் ஆழ்வார் பக்கல் சர்வேசுவரனுக்கு உண்டான பிரணயித்வகுணம் சொல்லுகிறது என்றபடி. "'நெடுமாற்கடிமை' ஆழ்வாருடைய 'நெடுமாற்கடிமையும்', எம்பெருமானுடைய 'நெடுமாற் கடிமையும்' என இருவகைப்படும்; அவற்றுள், எம்பெருமானுடைய 'நெடுமாற் கடிமை' இத்திருவாய்மொழி" என்றார் முன்னும். இரண்டாம்பத்து ஏழாந் திருவாய்மொழி முன்னுரை.

2. மேலே போந்த எம்பார் நிர்வாஹத்தை விரித்து அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி அதனோடு வேறு நிர்வாஹங்கள் இரண்டனையும் சேர்த்து அருளிச்செய்கிறார் 'இது தனக்கு' என்றது முதல் 'எல்லாம்பெற்றாராய் அநுபவிக்கிறார்; என்று அருளிச்செய்வர்' என்றது முடிய. உலகத்தில் ஒருவர் ஒருவரிடத்தில் ஒன்றை விரும்பினால், விரும்பப்பட்டவர்கள் விரும்பினவர்களுக்கு விரும்பிய பொருளுக்குப் போலியான வேறு ஒரு பொருளைக் கொடுத்து விரும்பிய பொருளை மறக்கச் செய்வதுமுண்டு; அன்றி, அதனையே கொடுக்கிறோம் என்று சொல்லி அவர்கள் விருப்பத்தை அடக்குவதுமுண்டு; அன்றி, அதனையே கையில் கொடுத்து அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றுவது முண்டு; ஆக, இம்மூன்று வகையினையும் முறையே காட்டுகிறார் 'எம்பார்' என்று தொடங்கி. 'வேறு ஒரு குணத்தை' என்றது, காதல் குணத்தை.

ணும்" என்று அழுத குழந்தைக்குத் தேங்காயைக் கொடுத்து அழுகையை ஆற்றுவாரைப்போலே, வேறு ஒரு குணத்தைப் பிரகாசப்படுத்தி அநுபவிப்பிக்க அநுபவிக்கிறார்' என்று அருளிச் செய்வர். திருமலைநம்பி, 'ஒருவன் ஒன்றை விரும்பினால், அவனும் அது செய்வானாய்த் தலைதுலுக்கினால், பின்பு பின்னில் இழவு தோன்றாதே அன்றோ இருப்பது? ஆகையாலே, அவனும் 'அப்படிச் செய்கிறோம்' என்ன, மேல் உண்டான இழவு மறந்து எல்லாம் பெற்றாராய் அநுபவிக்கிறார்' என்று அருளிச் செய்வர். [1] ஸ்ரீகௌசல்யையார், 'பெருமாள் வனத்திற்கு எழுந்தருளுகிறபோது 'ஒரேபுதல்வனையுடைய நான் உம்மைப் பிரிந்திருக்கமாட்டேன்; கூட வருவேன் இத்தனை' என்ன, 'ஆச்சி, நீர் சொல்லுகிற இது தர்மத்திற்கு விரோதம் கண்டீர்' என்று முகத்தைப் பார்த்து ஒரு வார்த்தை அருளிச் செய்ய, இழவை மறந்து மங்களாசாசனம் பண்ணி மீண்

---

1. தலையை அசைத்தால் பெற்றது போன்று ஆகுமோ? என்னும் வினாவைத் திருவுள்ளம்பற்றி, பெற்றது போன்று ஆகும் என்பதற்கு இரண்டு திருஷ்டாந்தங்கள் காட்டுகிறார் 'ஸ்ரீகௌசல்யையார்' என்று தொடங்கி. இது, பேச்சின் இனிமை விசுவாசத்திற்கு ஏது என்பதற்குத் திருஷ்டாந்தம்.

'ஒரே புதல்வனையுடைய நான்' என்று தொடங்கு மிவ்விடத்தில்

"ஆகி னைய அரசன்தன் ஆணையால்
ஏகல் என்பது யானு முரைக்கிலென்
சாக லாவுயிர் தாங்கவல் லேனையும்
போகில் நின்னொடுங் கொண்டனை போகென்றாள்."

என்ற செய்யுளையும், 'ஆச்சி! நீர் சொல்லுகிற இது' என்று தொடங்கு மிடத்தில்

"என்னை நீங்கி இடர்க்கடல் வைகுறும்
மன்னர் மன்னனை வற்புறுத் தாதுடன்
துன்னு கானம் தொடரத் துணிவதோ
அன்னை யே அறம் பார்க்கிலை யாமென்றான்."

"வரிவில் எம்பி மண்ணர சாயவற்கு
உரிமை மாநிலம் உற்றபின் கொற்றவன்
திருவின் நீங்கித் தவம் செயு நாளுடன்
அருமை நோன்புகள் ஆற்றுதி யா மன்றே!"

என்ற செய்யுட்களையும் ஒப்பு நோக்கல் தகும்.

டாரே அன்றோ? [1] ஸ்ரீகிருஷ்ணன் "மாசுச:— சோகத்தைக் கொள்ளாதே" என்று ஒரு வார்த்தை அருளிச் செய்ய, அருச்சுனன் [2] "சந்தேகங்கள் எல்லாம் நீங்கினவனாய் நிலைத்து நிற்கிறேன்; உனது வார்த்தையின்படி செய்கிறேன்" என்று தரித்தானே அன்றோ? பட்டர் 'முக்காலத்தில் உள்ளவற்றையும் இப்போதே பெறவேணும் என்று விடாய்த்த இவர்க்கு அப்படியே அநுபவிக்கலாம்படி, [3] கால சக்கரத்தன் ஆகையாலே, கால வேறுபாட்டிற்குரிய காரணங்களைக் கழித்து, நிகழ்காலத்திற்போலே அநுபவத்திற்குத் தகுதியாகும்படி காலத்தை ஒருபோகி ஆக்கிக் கொடுக்க அநுபவிக்கிறார்' என்று அருளிச்செய்வர்.

---

355.

கோவை வாயாள் பொருட்டுஏற்றின்
எருத்தம் இறுத்தாய்! மதிள்இலங்கைக்
கோவை வீயச் சிலைகுனித்தாய்!
குலநல் யானை மருப்பொசித்தாய்!
பூவை வீயா நீர்தூவிப்
போதால் வணங்கே னேலும்நின்
பூவை வீயாம் மேனிக்குப்
பூசுஞ் சாந்துஎன் நெஞ்சமே.

---

1. 'ஸ்ரீ கிருஷ்ணன்' என்று தொடங்கும் வாக்கியம், பிரமாணம் விசுவாச ஏதுவானமைக்குத் திருஷ்டாந்தம். இது, ஸ்ரீ கீதை. 18: 66.

2. ஸ்ரீ கீதை. 18: 73.

3. 'கால சக்கரத்தன்' என்றது, 'சக்கரம்போன்று சுழன்று வருகின்ற காலத்துக்கு நிர்வாஹகன் என்றபடி. 'ஒரு போகி ஆக்கி' என்றது, நடுவில் தடையில்லாத வெளியாக்கி என்றபடி. அல்லது, ஒரே காலத்தில் பலமாக்கி என்னலுமாம். பட்டர் நிர்வாகத்துக்கு நிதானம், "கால சக்கரத்தானுக்கே" என்ற நாலாவது திருப்பாசுரம்.

மேல் திருவாய்மொழியில் விரும்பியபடியே இத் திருவாய்மொழியில் அநுபவிக்கிறார் என்று அருளிச்செய்யக் காரணம் வருமாறு: "தோளிசேர் பின்னை" என்றதற்கு, "கோவை வாயாள்" என்ற பாசுரம். "கொம்புபோல்" என்ற பாசுரத்திற்கு, "மதிள் இலங்கைக் கோவை வீய" என்ற பாசுரப் பகுதி "பாலனாய்" என்ற பாசுரத்திற்கு, "கால சக்கரத்தொடு" என்ற பாசுரம். "பாவியல் வேத நன்" என்ற பாசுரத்திற்கு, "குரைகழல்கள் நீட்டி" என்ற பாசுரம். மற்றைப் பாசுரங்களையும் இங்ஙனமே கண்டுகொள்க.

பொ-ரை :— கொவ்வைக்கனிபோன்ற சிவந்த வாயையுடைய நப்பின்னைப் பிராட்டி காரணமாக இடபங்களின் கழுத்தை முறித்தாய்! மதிலாற் சூழப்பட்ட இலங்கை நகர்க்கு அரசனான இராவணன் அழியும்படி வில்லை வளைத்தாய்! சிறந்த நல்ல குவலயாபீடம் என்னும் யானையினது தந்தங்களை முறித்தாய்! பூக்களை விட்டு அகலாத தண்ணீரைத் தூவி அவ்வக் காலத்தில் வணங்குதல் செய்திலேன் ஆயினும், பூவைப் பூவினது நிறத்தையுடைய நினது திருமேனிக்குப் பூசுகின்ற சாந்து என் நெஞ்சமே ஆகும்.

வி-கு :—நீர்தூவி வணங்கேனேலும் மேனிக்குப் பூசும் சாந்து என் நெஞ்சம் என்க. நீர் வீயா பூவை என மாறுக. வீதல் - நீங்குதல்; வீயா - நீங்காத. பூவை என்பதில் 'ஐ' இரண்டாம் வேற்றுமை யுருபு. ஆக, நீரைவிட்டு அகலாத பூ; நீர்ப் பூ என்றபடி. அன்றிக்கே, வீயா பூவை - உலாத மலர்களை என்னலுமாம். நான்காம் அடியில் 'பூவை' என்பதே சொல்; காயாம்பூ என்பது பொருள். வீ - மலர். ஆகும் மேனி என்க.

ஈடு :—முதற்பாட்டில், [1] நப்பின்னைப் பிராட்டி, ஸ்ரீஜனகராஜன்திருமகள் தொடக்கமானார் உனக்குக் காதலிமார்களாக இருக்க, நீ அவர்கள்பக்கலிலே இருக்கும் இருப்பை என்பக்கலிலே இருக்கும்படி என் சத்தையே உனக்கு எல்லாமாய்விட்டது என்கிறார் ஆதல்; அன்றிக்கே, அடியார்களுடைய பகைவர்களை அழிக்கிற இடங்களில் அந்த அந்தச் சமயங்களில் வந்து முகங்காட்டி அடிமை செய்யப் பெற்றிலேன் நான், இங்ஙனே இருக்கவும், என் மனத்தினையே இனியபொருளாகக் கொள்வதே! என்கிறார் ஆதல்.

---

1. இப் பாசுரத்திற்கு இரண்டுவகையாக அவதாரிகை அருளிச்செய்கிறார். முதல் இரண்டடிகளையும் நான்காமடியையும் நோக்கியது, முதல் அவதாரிகை. பின் இரண்டு அடிகளையும் நோக்கியது, இரண்டாவது அவதாரிகை. அன்றிக்கே, சர்வேசுவரனுக்குத் தம்பக்கல் உண்டான பிரணயித்வ குணத்தைச் சொல்லுகிற இவ்விடத்திலே பிராட்டிமார்க்கு உதவி செய்தமையையும், "போதால் வணங்கேனேலும்" என்று தன் தன்மையையும் சொல்லுவான் என்? என்னும் வினாவைத் திருவுள்ளம்பற்றி இரண்டு அவதாரிகைகளையும் அருளிச்செய்கிறார் என்னலுமாம்.

கோவைவாயாள் பொருட்டு ஏற்றின் எருத்தம் இறுத்தாய்-[1] தன்னைப் பேணாதே அவனுக்கு இவ்வெருதுகளின்மேலே விழவேண்டும்படியாய் இருந்தது அவயவசோபை என்பார் '**கோவைவாயாள்**' என்கிறார். அன்றிக்கே, இடபங்களை முன்னிட்டு 'இவற்றை அடர்த்தாருக்கு இவளைக் கொடுக்கக் கடவோம்' என்று இவளை அலங்கரித்து முன்னே கொண்டுவந்து நிறுத்தினர்கள்; 'இவளை அணையலாமாகில் இவற்றை முறித்தால் ஆகாதோ?' என்று தன்னைப் பேணாதே அவற்றின் மேல் விழுந்தான் என்பார் '**கோவைவாயாள்**' என்கிறார் என்னுதல். அன்றிக்கே, 'நம்பிமூத்தபிரான் முற்படவந்து கிட்டின இடத்து இவன் தலையிலே வெற்றி கிடந்தால் செய்வது என்?' என்று வெறுப்பாலே கீழ்நோக்கிய முகத்தாளாய் இருந்தாள்; ஸ்ரீ கிருஷ்ணன் வந்து தோன்றினவாறே பிரீதியின் மிகுதியாலே புன்முறுவல் பூத்தாள்; அப்போது அதரத்தில் பழுப்பு இருந்தபடியைத் தெரிவிப்பார் '**கோவைவாயாள்**' என்கிறார் என்னுதல். அந்தப் புன்முறுவலுக்குத் தோற்றுத் தன்னை [2]அவளுக்கு ஆக்கினான் என்றபடி. ஏற்றின் பிடரியை முறித்தான் ஆதலின், '**எருத்தம் இறுத்தாய்**' என்கிறார். எருத்தம் - கழுத்து. [3]அவற்றுக்கு அபிமானத்திற்குக் காரணம் கழுத்தே அன்றோ? அதனை முறித்தபடி. 'வீரராய் இருப்பார் எதிரி கையில் ஆயுதத்தை வெறுங்கையோடு சென்று வாங்குமாறுபோலே இருப்பது ஒன்றே அன்றோ, இவன் செய்

---

1. "கோவை வாயாள்" என்று விசேடித்ததற்கு மூன்று வகையான கருத்து அருளிச்செய்கிறார். ஒன்று, இயற்கை அழகு; இரண்டாவது, அலங்காரத்தினால் உண்டான அழகு; மூன்றாவது, புன்முறுவலால் உண்டான அழகு. இம்மூன்றனையும் முறையே அருளிச்செய்கிறார் 'தன்னைப்பேணாதே' என்று தொடங்கி.

2. 'அவளுக்கு ஆக்கினான்' என்றது, அவளுக்கு அடிமை ஆக்கினான் என்றபடி.

3. "எருத்தம் இறுத்தாய்" என்னாது, "ஏற்றின் எருத்தம் இறுத்தாய்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'அவற்றுக்கு' என்று தொடங்கி.

4. வெறுங்கையோடே முறித்தது என்? என்னும் வினாவிற்கு விடை அருளிச் செய்கிறார் 'வீரராயிருப்பார்' என்று தொடங்கி. 'தலையான ஆயுதம்' என்றது, சிலேடை; தலையிலேயுள்ளதான ஆயுதம்; ஒப்புயர்வற்ற ஆயுதம். ஆயுதம் - கொம்பு.

தது? அவைதாம் தலையான ஆயுதத்தோடே அன்றோ நிற்கின்றன. [1]மாயா மிருகமான மாரீசன் பின்னே பெருமாள் எழுந்தருளுகிறபோது இளையபெருமாள் தெளிந்து நின்று 'இது மாயா மிருகங் கண்டீர்; இராக்கதர்களுடைய மாயை' என்றாற்போலே, நானும் அவ்வளவிலே நின்று 'இவை அசுராவேசம் உண்டு' என்ன அன்றோ அடுப்பது; அது செய்யப் பெற்றிலேன் என்கிறார்.

மதிள் இலங்கைக் கோவை வீய சிலை குனித்தாய். [1]"மதிளையுடைத்தான இலங்கைக்கு நிர்வாஹகன் அல்லனோ?' என்று அபிமானித்திருக்கிற இராவணன் முடிய வில்லை வளைத்தாய்; 'இம்மதிளும் ஊரும் உண்டே நமக்கு' என்று சக்கரவர்த்தி திருமகனை எதிரிட்டவனாதலின் '**மதிள் இலங்கைக்கோ**' என்கிறார். [2] சர்வ ரக்ஷகனான பெருமாளை விட்டு, 'மதிளை' ரக்ஷகம் என்று இருந்தானாயிற்று, இது அன்றோ தான் தனக்குச் செய்துகொள்ளும் காவல்? ஆக, 'மதிள் இலங்கைக்கோ' என்றதனால், [3]"இராவணனால் ஆளப்படுகின்ற இலங்கை" என்கிறபடியே, மண்பாடுதானே ஒருவர்க்கும் புகுவதற்கு அரிது; அதற்குமேலே உள்நின்று நோக்குகின்றவனுடைய வலிமையைக் கூறியபடி. இராக்கதர்கள் மாயப்போர் அல்லது அறியார்கள்; அதைப்போன்று, இவர் செவ்வைப்பூசல் அல்லது

---

1. இரண்டாவது அவதாரிகைக்குத் தகுதியாக, எருது எழடர்த்தவிடத்தில் உபசாரம் செய்கையாவது எது? என்ன, அதனை ஒரு திருஷ்டாந்தத்தின்மூலம் அருளிச்செய்கிறார் 'மாயாமிருகமான' என்று தொடங்கி. இதன் விரிவைக் கம்பராமாயணம் ஆரணியகாண்டம் மாரீசன் வதைப்படலம். 227-முதல் 248 முடிய உள்ள செய்யுட்களில் காணலாகும்.

2. வியாக்யாதாவின் ஈடுபாடு, 'சர்வரக்ஷகனான பெருமாளை' என்று தொடங்கும் வாக்கியம். சேதனன் தனக்கு நன்மை பார்க்கிறாப்போலே செய்யும் பாதுகாவல் இப்படி இருக்கும் கண்டீர் என்கிறார் 'இதுவன்றோ' என்று தொடங்கி.

3. ஸ்ரீராமா. சுந். 1:39. இங்கு

"கறங்கு கால் புகா கதிரவன் ஒளிபுகா மறலி
மறம் புகா இனி வானவர் புகாரென்கை வம்பே
திறம்பு காலத்துள் யாவையுஞ் சிதையினுஞ் சிதையா
அறம்புகா திந்த வணிமதிட் கிடக்கை நின்றகத்தின்"

என்ற செய்யுளை ஒருபுடை ஒப்பு நோக்கலாகும். (கம்ப.)

அறியார்; ஆகலின், 'சிலைகுனித்தாய்' என்கிறார். "[1]நீர் தரும யுத்தத்தில் ஆற்றலுள்ளவராய் இருத்தல்போன்று, இராக்கதர்கள் மாயப்போர் செய்வதில் ஆற்றலுள்ளவர்கள் கண்டீர்" என்று ஸ்ரீவிபீஷணாழ்வானைப்போன்று அறிவிக்கப் பெற்றிலேன். குலம் நல் யானை மருப்பு ஒசித்தாய் - [2]ஆகரத்திலே பிறந்து எல்லா லக்ஷணங்களையுமுடைய குவலயாபீடத்தினுடைய கொம்பை வருத்தம் என்பது சிறிதும் இன்றி முறித்தவனே! அவ்வளவிலே ஸ்ரீமதுரையில் உள்ள பெண்களைப் போல நின்று [3]"தரையிலுள்ள இராமனுக்கும் தேரிலுள்ள இராக்கதனுக்கும் போர் ஏற்றது அன்று" என்று சொல்லப் பெற்றிலேன்.

பூவை வீயா நீர் தூவி - மலர்களைத் திருவடிகளிலே பணி மாறி நீரைத் தூவி என்னுதல்; அன்றிக்கே, மலரை ஒழியாத நீர்-மலரோடே கூடின நீர்; அதனைத் தூவி என்னுதல். போதால் வணங்கேனேலும் - அந்த அந்தக் காலத்திலே பூவை வீயா நீர் தூவி வணங்கிற்றிலேன் ஆகிலும். என்றது, எருதுஏழ் அடர்த்தல் தொடக்கமான காலங்களிலே பிறந்த சிரமம் மாற குளிர்ந்த உபசாரம் பண்ணிற்றிலேன் ஆகிலும் என்றபடி. பூவை வீயாம் நின் மேனிக்கு-பூவால் அல்லது செல்லாத நின் திருமேனிக்கு. அன்றிக்கே, பூவைப் பூவோடு ஒத்த திருமேனி என்னுதல். என்றது, மலர்ந்த புஷ்பத்தைப்போன்ற மிருதுத் தன்மையையுடைய திருமேனிக்கு என்றபடி. வீ என்று பூவுக்குப் பேர். மேனிக்குப் பூசும் சாந்து என் நெஞ்சமே - திருமேனிக்குப் பூசுஞ் சாந்து என் நெஞ்சமாய் விடுவதே! நம்பிமூத்த பிரானும் தானுமாக ஸ்ரீமதுரையிற்போய்ப் புக்கவாறே கூனியைக்கண்டு, [4]'அண்ணர்க்கும் நமக்கும் பூசலாம்படி சாந்து

---

1. இந் நிலையிலே இவர் குளிர்ந்த உபசாரம் செய்யும்படியைத் திருஷ்டாந்த மூலமாக அருளிச்செய்கிறார் 'நீர் தருமயுத்தம்' என்று தொடங்கி.

2. ஆகரம் - பிறக்குமிடம்.

3. ஸ்ரீராமா. யுத்தகாண்டம்.

4. விஷ்ணுபுரா. 5: இச் சுலோகத்திற்கு வியாக்யாதா எழுதியிருக்கும் விரிவுரை மிகமிகப் பாராட்டற்குரியது.

சுகந்தமேதத் ராஜார்ஹம் ருசிரம் ருசிராநநே
ஆவயோ: காத்ர சத்ருசம் தீயதா மநுலேபநம்.

செயற்கை வாசனையையுடைய இந்தச் சந்தனமானது அரசர்க்கு உரியது, எங்கள் இருவருடைய சரீரங்கட்கும் தகுந்ததான சந்தனத்தைக் கொடுப்பாய் என்பன அந்தச் சுலோகமும் அதன் பொழிப்புரையுமாகும்.

இடவல்லையோ?' என்ன, [1]வழக்கனுயிருக்கிற சாந்தைக் கொடுத்தாள்; இது உனக்காய் இருந்தது என்ன, அதற்குமேல் தரமாய் இருப்பது ஒன்றனைக் காட்டினாள்; இது கம்சனுக்கு ஆம் என்ன, அதற்குமேல்தரமாய் இருப்பது ஒன்றனைக்காட்டினாள்; நிறமே இதில் கொள்ளக்கூடியது என்ன, இப்படி அருளிச்செய்தவாறே, 'வெண்ணெய் நாற்றத்திலே பழகினார் இளம் பருவமுடையார் இருவர் சாந்தின் வாசி அறிந்தபடி என்?' என்று, அதனால் வந்த உவகை தோன்ற புன்முறுவல் செய்தாள்; நல்ல சாந்து இடுகைக்காக இது ஒரு முகம் இருந்தபடி என்தான்! என்கிறான். ஆக, நற்சரக்குப் பரிமாறுவார், அது கொண்டு பயன்கொள்ளுவார் உடம்பின் வாசி அறியவேணுங்காண்; நம் அண்ணர் உடம்புக்கும் நம் உடம்புக்கும் ஈடான சந்தனம் தா என்று, இப்படித் தரம் இட்டுப் பூசப்படுகின்ற திருமேனி என்பதனைத் தெரிவிக்கும்பொருட்டு[2] 'மேனி' என வேண்டாது கூறுகிறார். (1)

## 356.

[3] பூசுஞ் சாந்துஎன் நெஞ்சமே புனையுங் கண்ணி எனதுடைய
வாச கஞ்செய் மாலையே வான்பட் டாடையும் அஃதே
தேச மான அணிகலனும் என்கை கூப்புச் செய்கையே
ஈசன் ஞாலம் உண்டுமிழ்ந்த எந்தை ஏக மூர்த்திக்கே.

**பொ - ரை :**—ஈசனும் உலகத்தை எல்லாம் உண்டு உமிழ்ந்த என் தந்தையுமான ஏகமூர்த்திக்கு, பூசுகின்ற சந்தனம் எனது நெஞ்சமே ஆகும்; சாத்துகின்ற மாலையும் என்னுடைய சொற்களாலே

---

1. வழக்கன் - செலவுக்குத் தகுந்தது.

2. சாந்து பூசினான் என்றதனானே 'மேனி' என்பது தானே போதருமாதலின், 'மேனி' என மிகைபடக் கூறவேண்டா; அங்ஙனம் மிகைபடக் கூறியதன் பயனைத் தெரிவித்தபடி. தொல்காப்பியம் எழுத்ததிகாரம் 450-ஆம் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையை ஈண்டு நோக்குக.

3. யாப்புச் செய்ய அலங்கலும் ஆடையும்
எனது நெஞ்சுசெஞ் சாந்தம் இருகரம்
கூப்புச் செய்கை அணியென்று கூறினன்
குருகை யாளிமற் றூர்வல்லர் கூறவே.

என்ற தத்துவராய சுவாமிகள் அருமைத் திருவாக்கு இங்குச் சிந்தித்தல் தகும். (மோகவதைப் பரணி. 24.)

தொடுக்கப்பட்ட மாலையே ஆகும்; உயர்ந்த பொன்னாடையும் அந்த வாசகம்செய்மாலையே ஆகும்; ஒளிபொருந்திய அணியப்படுகின்ற ஆபரணங்களும் என் கைகளால் கூப்பித் தொழுகின்ற வணக்கமே ஆகும்.

வி - கு :—வாசகம் - சொற்கள். வாசகம் செய் மாலை - திருவாய் மொழி முதலான பிரபந்தங்கள். ஏகமூர்த்தி - தன்னை ஒத்த இரண்டாவது ஒருபொருள் இல்லாத படியான விக்கிரஹத்தையுடையவன். ஏகமூர்த்திக்கு சாந்து நெஞ்சமே, கண்ணி வாசகம் செய் மாலையே, பட்டாடையும் அஃதே, கலனும் கைகூப்புச் செய்கையே ஆம் என்க.

ஈடு :—இரண்டாம்பாட்டு. [1] என்னுடைய உறுப்புக்களின் காரியங்களான நினைவு முதலானவைகளே பரிபூர்ணனவனுக்கு போக உபகரணங்கள் எல்லாம் ஆயின என்கிறார்.

பூசும் சாந்து என் நெஞ்சமே - சர்வேசுவரனுடைய திருமேனியின் வைலக்ஷண்யத்தையும், அவனுக்குத் தம் பக்கல் உண்டான விருப்பத்தையும் நினைத்துப் பின்னடி மீளவும் சொல்லுகிறார், "பூசுஞ் சாந்து என் நெஞ்சமே" என்று. புனையும் கண்ணி - [2] வழக்கனான மாலை. அன்றிக்கே, சாத்தப்படும் மாலை. எனதுடைய வாசகம் செய் மாலை - [3] இவர் அவனுக்கு என்று சொல்லவேண்டா; இவர் உடைமையாகில் அவனுக்கேயாய் இருக்கும்; ஆதலின், 'எனதுடைய' என்கிறார். [4] இவர் நெஞ்சினைக் காட்டிலும் வாக்குப் பரிமளம்

---

1. "வாசகஞ்செய் மாலை, என்கைகூப்புச்செய்கை" என்று உறுப்புக்களினுடைய காரியங்களைச் சொன்னதற்குச் சேர "நெஞ்சம்" என்றதனை நினைவு பரமாக்கி அவதாரிகை அருளிச்செய்கிறார் 'என்னுடைய' என்று தொடங்கி.

2. வழக்கனான - செலவுக்கு யோக்கியமான.

3. "எனதுடைய" என்று மமகாரம் படச் சொல்லலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவர் அவனுக்கு' என்று தொடங்கி. "யானே நீ என்னுடைமையும் நீயே" என்றிருக்குமவராகையாலே இவர் உடைமையாகில் அவனுக்கேயா யிருக்குமாதலின், மமகாரம் இன்று என்றபடி.

4. "வாசகம்" என்பதற்கு, மலர்கள் என்று பொருள்கொண்டு, அவற்றால் செய்யப்பட்ட மாலை என்று திருவுள்ளம்பற்றி அதற்கு பாவம் அருளிச்செய்கிறார், 'இவர்' என்று தொடங்கி,

விஞ்சி இருக்கும்போலே காணும். [1] சாந்து மணம் கொடுப்பது பூவை அணிந்தபின்பே அன்றோ?

வான் பட்டாடையும் அஃதே - அந்தச் சொற்கள்தாமே புருஷோத்தமனுந் தன்மைக்கு அறிகுறியான ப்ரிவட்டமும். [2] இவருடைய பா, நல்ல நூல் ஆதலின், வான் பட்டாடை ஆயிற்றுக் காணும்; 'நல்ல நூலாக வேணும்' என்று அடியிலே நோற்று நூற்றவர் அன்றோ? தேசமான அணி கலனும் - தனக்கு ஒளியை உண்டாக்குகிற ஆபரணமும். என் கைகூப்புச் செய்கையே - [3] சேரபாண்டியன் தம்பிரானைப் போன்று, அவனுக்கு ஒளியை உண்டாக்காநின்றது இவருடைய அஞ்சலி. [4] இவற்றாலே நிறம்பெற்றானாயிருக்கிறவன்தான் ஒரு குறைவாளனாய் இருக்கின்றானோ? எனின், ஈசன் - சர்வேசுவரன் என்கிறார். ஆயின், 'ரக்ஷகன்' என்னும் பெயரேயாய் உடைமை நோவுபட விட்டிருப்பவன் ஒருவனோ? எனின், ஞாலம் உண்டு உமிழ்ந்த - உலகத்திற்கு எல்லா வகையாலும் ரக்ஷகன் என்கிறார். எந்தை - அந்த ரக்ஷணத்தாலே என்னை அடிமை கொண்டவன். ஏகமூர்த்திக்கு - [5] ஈடும் எடுப்பும் இல்லாததான திருமேனியையுடையவனுக்கு. ஏகமூர்த்திக்குப்

---

1. விஞ்சியிருத்தற்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'சாந்து' என்று தொடங்கி. இதனால், வாக்கின் வாசனையே நெஞ்சிற்கும் வாசனை கொடுப்பது என்றாயிற்று.

2. வாசகம் பட்டாடை யாயினவாறு யாங்ஙனம்? என, அதற்கு விடையைச் சிலேடையாக அருளிச் செய்கிறார் 'இவருடைய பா' என்று தொடங்கி. பா - செய்யுள்; நூலின் சேர்க்கை. நூல் - சாஸ்திரம்; இழை. 'அடியிலே நோற்று நூற்றவர்' என்றது,

> "கண்ட வாற்றால் தனதே உலகென நின்றான் தன்னை
> வண்தமிழ் நூற்க நோற்றேன் அடியார்க் கின்ப மாரியே."

என்றதனைத் திருவுள்ளம்பற்றி. (திருவாய். 4. 5 : 10.) நூற்றல் - நூல் நூற்றல்; பிரபந்தத்தைச் செய்தல்.

3. சேரபாண்டியன் தம்பிரான் - நம்பெருமாளுடைய திருப்பதக்கம்.

4. 'இவற்றாலே' என்று தொடங்கி மேலுக்கு அவதாரிகை அருளிச் செய்கிறார்.

5. சாந்து பூசுவது திருமேனியிலே யாகையாலே "மூர்த்தி" என்ற சொல்லுக்குத் 'திருமேனி' என்று பொருள் அருளிச்செய்கிறார்.

பூசும் சாந்து என் நெஞ்சமே - [1] "சர்வகந்த:" என்கிற திரு மேனியை யுடையவனுக்குப் பூசுஞ் சாந்து என் நெஞ்சம் ஆவதே! இது சேருமே! என்கிறார். (2)

## 357.

ஏக மூர்த்தி இருமூர்த்தி மூன்று மூர்த்தி பலமூர்த்தி
ஆகி ஐந்து பூதமாய் இரண்டு சுடராய் அருவாகி
நாகம் ஏறி நடுக்கடலுள் துயின்ற நாரா யணனே! உன்
ஆக முற்றும் அகத்தடக்கி ஆவி அல்லல் மாய்த்ததே.

**பொ - ரை:**—ஒரு மூர்த்தியாகி இருமூர்த்தியாகி மும்மூர்த்தியாகிப் பல மூர்த்தியாகி ஐம்பூதங்களாகி இருசுடர்களான சூரிய சந்திரர்களாகி இவற்றுக்கு உள்ளுயிராகித் திருப்பாற்கடலின் நடுவில் ஆதிசேஷனாகிய படுக்கையின்மேலே ஏறி யோகநித்திரை செய்கின்ற நாராயணனே! உன் திருமேனிக்கு வேண்டும் சாந்து பூமாலை முதலிய போக உபகாணங்கள் எல்லாம் என்னுள்ளேயாம்படி செய்து உன் திருவுள்ளமானது துன்பத்தை நீக்கியது என்கிறார். என்றது, 'ஒரு படிகரை மாம் சேர்க்கவல்லனே' என்று இருந்த உன்னுடைய திருவுள்ளத்தில் துன்பம் கெட்டு, கிருதார்த்தன் ஆனாயே!' என்றபடி.

**வி - கு:**—ஆவி - ஈண்டு, மனம். ஆவி அடக்கி அல்லலை மாய்த்தது என்க.

**ஈடு:**—மூன்றாம்பாட்டு. [2] 'இத்தலையை உனக்கு ஆக்கி அத்தாலே கிருதக் கிருத்தியன் ஆனாயே! என்கிறார்.

ஏகமூர்த்தி - [3] "சோமபானம் செய்தற்குரிய சுவேதகேதுவே! காணப்படுகிற இந்த உலகமானது படைப்பதற்கு முன்னே 'சத்' என்று சொல்லக்கூடியதாயும் நாம ரூபங்கள் இன்மையால் ஒன்றாகவும் அடையக்கூடிய வேறு பொருள் இல்லாததாயும் இருந்தது" என்கிறபடியே, படைப்பதற்கு முன்னே 'இது' என்ற சொல்லுக்குரிய பொருளாய்க் கிடந்த உலக முழுவதும் அழிந்து 'சத்' என்று சொல்லக்கூடிய நிலை

---

1. "நெஞ்சமே" ஏகாரத்திற்கு பாவம், "சர்வகந்த:" என்று தொடங்கும் வாக்கியம். 'சேருமே' என்றது, சேராது என்றபடி.

2. "ஆவி அல்லல் மாய்த்ததே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். கிருதக்கிருத்யன் - செய்யவேண்டிய காரியங்களை யெல்லாம் செய்து முடித்தவன்.

3. சாபால உபநி. 6 - 2 ; 1.

யாய் நீறுபூத்த நெருப்புப்போலே இவை அடையத் தன் பக்க லிலே கிடக்கத் தான் ஒருவனுமேயாய் நிற்கும் நிலையைச் சொல்லுகிறது. ஆக, சிருஷ்டிக்குமுன்னே இருக்கும் இருப் பைச் சொல்லுகிறது என்றபடி. இருமூர்த்தி - பிரகிருதி மஹான்கள் இரண்டையும் நோக்கிக்கொண்டு அவற்றைத் திருமேனியாகக் கொண்டிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது; என்றது, [1] காரிய காரணங்கள் இரண்டையும் தனக்குத் திரு மேனியாகவுடையனாயிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது என் றபடி. [2] இரண்டுக்கும் உண்டான அண்மையைப் பற்றச் சொல்லுகிறது. அவ்யக்தத்தினுடைய வியக்த தசை யன்றோ மஹானாகிறது. மூன்று மூர்த்தி - மூன்றுவிதமான அகங்காரங் களைச் சரீரமாகக் கொண்டிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது. சாத்விகமாயும் இராஜசமாயும் தாமசமாயும் மூன்று வகைப் பட்டேயன்றோ அகங்காரந்தான் இருப்பது. பல மூர்த்தியாகி ஐந்து பூதமாய் - [3] மேலேகூறிய முறையன்று இங்குச் சொல்லு

---

1. 'காரிய காரணங்கள் இரண்டையும்' என்றது, மஹானாகிய காரியத் தையும், மூலப்பகுதியாகிய காரணத்தையும் குறித்தபடி.

2. அகங்காரம் முதலான தத்துவங்களும் மூலப்பகுதியின் காரியமா யிருக்க, 'மஹத்' என்னும் தத்துவத்தைமாத்திரம் சொல்லுவான் என்? என் னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் 'இரண்டுக்கும் உண்டான' என்று தொடங்கி. 'அண்மை' எப்படி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவ்யக்தம்' என்று தொடங்கி. 'அவ்யக்தத்தினுடைய வியக்த தசை' என் றது, அவ்யக்தமாவது, பிரகிருதியினுடைய நிலை வேறுபாடுகளுள் ஒன்று; பிரகிருதியானது, அவிபக்த தமஸ் என்றும், விபக்த தமஸ் என்றும், அக்ஷரம் என்றும், அவ்யக்தம் என்றும் நான்குவகையாக இருக்கும்; அவற்றுள் ஒன் றான அவ்யக்தத்தினுடைய காரியநிலை மகானாக இருத்தலால் என்றபடி. அவி பக்ததமஸ் என்பது, பூமியில் விதைக்கப்பட்ட விதைபோன்றது. விபக்ததமஸ் என்பது, பூமியிலிருந்து எழும் விதைபோன்றது. அக்ஷரம் என்பது, நீருடன் கலந்து நனைந்து பிரிந்த உறுப்புக்களையுடைய விதைபோன்றது. அவ்யக்தம் என்பது, ஊறிப் பருத்து மேலெழுந்து வெடித்த விதைபோன்றது. மகத் என் பது, வித்திலின்றும் எழுந்த முளை போன்றது.

3. 'மேலே கூறிய முறையன்று இங்குச் சொல்லுகிறது' என்றது, "ஏகமூர்த்தி இருமூர்த்தி மூன்றுமூர்த்தி" என்ற இடங்களில் காரண காரியங் கள் என்ற முறைபற்றி அருளிச்செய்தார்; இனி, அருளிச்செய்வது அம் முறையில் அன்று என்றபடி. அதனை விளக்குகிறார் 'சாத்விக அகங்காரம்' என்று தொடங்கி. பதினேர் இந்திரியங்கள் ஆவன: ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, மனம் ஒன்று. இங்குக் கூறிய தத்துவங் களின் முறையையும் விரிவையும் பரம காருணிகரான ஸ்ரீமத். பிள்ளை லோகா சார்யர் அருளிச்செய்த தத்துவத்திரயத்தில் அசித் பிரகரணத்தாலும், பாக வதத்தில் கபிலமுனி தத்துவமுரைத்த அத்தியாயத்தாலும் தெளிவாக உணர லாகும். "சுவை ஒளி ஊறோசை" என்ற திருக்குறளின் விசேடவுரையிலும் இதனைச் சுருக்கமாகக் காணலாகும்.

கிறது; சாத்விக அகங்காரத்தின் காரியம், பதினோிந்திரியங்கள்; தாமச அகங்காரத்தின் காரியம், மண் முதலான ஐம்பெரும்பூதங்கள்; இரண்டற்கும் உபகாரமாய் நிற்கும், இராஜச அகங்காரம்; ஆக, பதினோிந்திரியங்களையும், குணங்களோடு கூடிய ஐம்பெரும்பூதங்களையும் சொல்லி அவற்றைத் திருமேனியாகவுடையனாயிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது.

இரண்டு சுடராய் - [1] "பிரமாவானவர் சூரிய சந்திரர்களை முன்புபோலே படைத்தார்" என்கிறபடியே, படைத்த சூரிய சந்திரர்களைச் சொல்லுகிறது. இவற்றைக் கூறியது, காரியமான பொருள்களெல்லாவற்றிற்கும் உபலக்ஷணம். அருவாகி - [2] "அவற்றைப் படைத்து அவற்றுக்குள் அநுப்பிரவேசித்தார்; அவற்றுக்குள் அநுப்பிரவேசித்துச் சேதனமாயும் அசேதனமாயும் ஆனார்" என்றபடியே, இவற்றை உண்டாக்கி, இவைகள் பொருளாகைக்காகவும் பெயர் பெறுகைக்காகவும் தான் அவ்வவ்வுயிருக்குள் அந்தராத்மாவாக அநுப்பிரவேசித்து நிற்கும் நிலையைச் சொல்லுகிறது. நன்று; மேலே, அசித்தை அருளிச்செய்தாராதலின், இங்கு 'அரு' என்பதற்கு ஆத்மா என்று பொருள் கூறுதல் ஏற்புடைத்தாமன்றோ? என்னில், [3] "இந்த ஆத்மாக்களையெல்லாம் சரீரமாகவுடைய நான் அந்தர்யாமியாகப் பிரவேசித்து நாம ரூபங்களை உண்டு பண்ணுகிறேன்" என்கிறபடியே, இந்த ஆத்மாக்களையெல்லாம் சரீரமாகவுடைய சர்வேசுவரனுக்கு அநுப்பிரவேசமாகையாலே அப்பொருளும் சொல்லிற்றாயிற்று. நாகம் ஏறி

---

1. தைத்திரீய உபநிட. 1.

"ஐந்து பூதமாய்" என்றது முடிய, சமஷ்டி சிருஷ்டியை அருளிச்செய்தது, "இரண்டு சுடராய்" என்றது முதல் வியஷ்டி சிருஷ்டியை அருளிச்செய்தபடி. சமஷ்டி - கூட்டம். வியஷ்டி - வேறு வேறு.

2. தைத்திரீய ஆனந். 6.

3. சாந்தோக்ய உபநிட. 6 : 3.

அரு என்பதற்கு ஆத்மா என்று பொருள் கூறில், அநுப்பிரவேசம் சித்தியாமையாலும், அநுப்பிரவேசத்தைச் சொல்லுகிறவிடத்தில் ஜீவனுக்கு அந்தர்யாமியாக இருக்கிற இறைவனுக்கு அநுப்பிரவேசமாகையாலே ஆத்மா சித்திக்கையாலும் அநுப்பிரவேசத்தையே சொல்லுகிறது என்றபடி.

நடுக்கடலுள் துயின்ற நாராயணனே - [1] தன்னால் படைக்கப் பட்ட பிரமன் முதலானோர்கட்குப் பற்றப்படுமவனுகைக்காகத் திருப்பாற்கடலின் நடுவில் திருவனந்தாழ்வான்மேலே சாய்ந் தருளினவனே! அன்றிக்கே, பயிரைச் செய்து செய்த்தலை யிலே குடிகிடக்குமாறுபோன்று, படைக்கப்பட்ட பொருள் களைப் பாதுகாத்தற்காகக் கண்வளர்ந்தருளுகின்றவனே! என்னவுமாம். இப்படி எல்லாக் காலமும் ஒரு படிப்பட திருவ ருள் புரிதலையே இயல்பாகவுடையனுகைக்கு அடியான சம்பந் தத்தையுடையவன் என்பார் '**நாராயணனே!**' என்கிறார்.

உன் ஆகம் முற்றும்-உன் திருமேனிக்கு வேண்டும் சாந்து பூமாலை பரிவட்டம் ஆபரணங்கள் இவையெல்லாம். அகத்து அடக்கி - என்னுள்ளே உண்டாம்படி செய்து. [2] இதுவே யன்றோ படைப்புக்குப் பிரயோஜனம். இப்படிச் செய்த காரணத்தால் துக்கமில்லாதவரானார் யார்? என்னில், அவன் என்கிறார் மேல்: ஆவி அல்லல் மாய்த்தது-உன் திருவுள்ளத் தில் உண்டான துன்பம் ஒருபடி அழியப்பெற்றதே! என்றது, [3] இத்தலையை ஒருபடி கரைமரஞ் சேர்த்து நீ கிருதக்கிருத்யன் ஆனாயே! என்றபடி. அன்றிக்கே, [4]என் உள்ளமானது துக்கம் இல்லாததாயிற்று என்னலுமாம்.

---

1. படைப்புக்குப் பின்னர், திருப்பாற்கடலில் சயனித்திருத்தலை அருளிச்செய்வதற்கு இரண்டு வகையான கருத்து அருளிச்செய்கிறார் 'தன்னால் படைக்கப்பட்ட' என்று தொடங்கி. கம்பராமாயணம் திருவவதாரப் படலம் 6-முதல் 24-முடிய உள்ள செய்யுட்களில் முதல் கருத்தின் பொருளைக் காண லாகும்.

2. காதல் குணத்தைச் சொல்லுகின்ற இவ்விடத்தில், சிருஷ்டியைச் சொல்லுவான் என்? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் 'இதுவே யன்றோ' என்று தொடங்கி. என்றது, இப்படி விநியோகங்கொள்ளுகையே சிருஷ்டிக்குப் பிரயோஜனம் என்று தோன்றுகைக்காக அருளிச்செய்கிறார் என்றபடி.

3. 'இத்தலையை' என்றது, ஆழ்வாரை. கரைமரம் சேர்த்தல் - கடலிலுள்ள மரத்தைக் கரையிலே சேர்த்தல்; மரம் - கப்பல். என்றது, பேற்றைப் பெறும்படி செய்தான் என்றபடி.

4. 'இன்னுர் ஆவி' என்றது, பொதுவாக "ஆவி" என்றதனால், 'என் உள்ளமானது துக்கமில்லாததாயிற்று என்னலுமாம்' என்கிறார்.

[1]இனி, இப் பாசுரத்திற்கு, ஏகமூர்த்தி என்பது, பரத்துவத்தைச் சொல்லுகிறது என்றும், இருமூர்த்தி என்பது, வியூகத்தைச் சொல்லுகிறது; அதாவது, வாசுதேவ சங்கர்ஷணர்களைச் சொல்லுகிறது என்றும், மூன்றுமூர்த்தி என்பது, வியூகத்தில் மூன்றும் மூர்த்தியான பிரத்யும்நரைச் சொல்லுகிறது என்றும், பலமூர்த்தி என்பது, அவதாரங்களைச் சொல்லுகிறது என்றும், [2]ஐந்து பூதமாய் இரண்டு சுடராய் அருவாகி நாகம் ஏறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே! என்பது, இன்னார் சிருஷ்டிக்குக் கடவர், இன்னார் பாதுகாத்தலுக்குக் கடவர் என்கிறபடியாலே சொல்லுகிறது என்றும் நிர்வஹிப்பாரும் உளர். (3)

## 358.

மாய்த்தல் எண்ணி வாய்முலை தந்த மாயப் பேயுயிர்
மாய்த்த ஆய மாயனே! வாமனனே! மாதவா!
பூத்தண் மாலை கொண்டுன்னைப் போதால் வணங்கேனேலும்நின்
பூத்தண் மாலை நெடுமுடிக்குப் புனையும் கண்ணி எனதுயிரே.

---

1. இத் திருப்பாசுரத்திற்குப் பிறர் கூறும் பொருளையும் அருளிச்செய்கிறார் 'இனி' என்று தொடங்கி.

2. "ஐந்து பூதமாய் இரண்டு சுடராய் அருவாகி" என்றதனால் இன்னார் சிருஷ்டிக்குக் கடவர் என்றும், நாகமேறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே" என்றதனால் இன்னார் பாதுகாத்தலுக்குக் கடவர் என்றும் பிரித்துக் கூட்டிக் கொள்க. "ஐந்துபூதமாய் இரண்டு சுடராய் அருவாகி" என்றது, சிருஷ்டியைக் கூறுவதனால், மேலே கூறிய பிரத்யும்னரது தொழிலாகிய சிருஷ்டியைக் கூறுகின்றது என்பதுபொருள். "நாகமேறி நடுக்கடலுள்துயின்ற நாராயணனே" என்பது, அநிருத்தரையும் அவருடைய காரியமான பாதுகாத்தலையும் கூறுகின்றது என்பது பொருள். ஆயின், சங்கர்ஷணருடைய தொழிலாகிய சம்காரத்தைக் கூறவில்லையே? எனின், அழித்தலானது; படைத்தற்றொழிலில் லயப்பட்டிருப்பது ஒன்றாகையாலே, அது, பொருளாற்றலால் தானே சித்திக்கும் என்க.

'உளர்' என்பதனாலே, இவ்வாறு பொருள் கூறுதல் தமக்குத் திருவுள்ளம், அன்று என்பது போதரும்,

**பொ - ரை :**—அழிப்பதற்கு நினைத்து உனது திருவாயிலே முலையை வைத்துப் பாலைக் கொடுத்த வஞ்சனை பொருந்திய பேய் மகளாகிய பூதனையினது உயிரை நீக்கிய ஆச்சரியமான செயல்களை யுடைய ஆயனே ! வாமனனே ! திருமகள் கணவனே ! குளிர்ந்த மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையைக் கொண்டு உன்னை அவ்வக் காலத்தில் வணங்கிலேனே யாகிலும், உனது குளிர்ந்த அழகிய மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட நீண்ட திருமுடிக்கு அணிகின்ற மாலை என்னுடைய உயிரேயாம்.

**வி - கு :**—எண்ணித் தந்த பேய் என்க. ஆய மாயனே என்பதனை மாய ஆயனே எனப் பிரித்துக் கூட்டுக. ஆயன் - கிருஷ்ணன்.

**ஈடு :**—நாலாம்பாட்டு. [1] பூதனை முதலானோரை அழிக்கின்ற காலத்தில் சிரமம் தீரக் குளிர்ந்த உபசாரங்களைச் செய்யப் பெற்றிலேனேயாகிலும், குளிர்ந்த உபசாரத்தால் அல்லது செல்லாத உன்னுடைய மிருதுத்தன்மையையுடைய திருமேனிக்குச் சாத்தும் மாலை என் சத்தையேயாய்விடுவதே ! என்கிறார்.

மாய்த்தல் எண்ணி - [2] இன்னாரை மாய்த்தல்எண்ணி என்னுமையாலே உலகத்தையே அழிப்பதற்காக அன்றோ அவள் கோலி வந்தது என்பதனைத் தெரிவிக்கிறார். [3] சரீரியை நலிந்தால் சரீரம் தன்னடையே அழிந்துவிடும் அன்றோ ? உயிரிலே நலிந்தால் உறுப்புக்கள்தோறும் தனித்து நலியவேண்டாவே யன்றோ ? [4] உலகங்கட்கெல்லாம் ஓர் உயிரே அன்றோ அவன்.

---

1. "போதால் வணங்கேனேலும், புனையும் கண்ணி எனது உயிரே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச் செய்கிறார். 'முதலானோரை' என்றதனால் மகாபலியைக் கொள்க. "எனதுயிரே" என்றதனை நோக்கி 'என் சத்தையேயாய்விடுவதே' என்கிறார்.

2. "ஸ்ரீகிருஷ்ணனை" என்னாமல், பொதுவாக "மாய்த்தல் எண்ணி" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'இன்னாரை' என்று தொடங்கி.

3. கிருஷ்ணனை நலிந்தால், அது உலகத்தையே அழிப்பதாக முடியுமோ ? என்ன, அதற்கு இரண்டுவகையாக விடை அருளிச்செய்கிறார் 'சரீரியை' என்று தொடங்கி இரண்டு வாக்கியங்களாலே. சரீரி - உயிர்.

4. ஸ்ரீகிருஷ்ணன் உலகத்திற்கெல்லாம் உயிரோ ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உலகங்கட்கெல்லாம்' என்று தொடங்கி. திருவாய். 8. 1 : 5.

[1]"நம்மைக் கொல்ல வருகின்றான் சந்தேகம் இல்லை" என்றாரே அன்றோ மஹாராஜர். ஆக, அவள் கோலிவந்தபடி அவசியம் சிலர் பரியவேண்டியதாக இருந்ததாதலின் **'மாய்த்தல் எண்ணி'** என்கிறார் என்றபடி. வாய் முலை தந்த - [2]அவன் திருப்பவளத்திலே நஞ்சினைக்கொடுத்தது தம்முடைய திருப்பவளத்திலே நஞ்சினைக் கொடுத்தாற்போலே இருக்கையாலே **'தந்த'** என்கிறார். அன்றிக்கே, தருகையும் கொடுக்கையும் ஒரு பொருட்சொற்களாய், கொடுத்த என்னும் பொருள்பெற்றுக் கிடக்கிறது என்னுதல். மாயப் பேய்-[3]பிறவியால் வந்த அறிவு கேட்டுக்குமேலே, வஞ்சனையையுடையளாயும் வந்தாள்; என்றது, பேயாய் வருகை அன்றிக்கே, தாயாயும் வந்தாள் என்றபடி. [4]"தாயாய் வந்த பேய்" என்றார் திருமங்கை மன்னன். உயிர் மாய்த்த - [5]அவள் கோலிவந்ததனை அவள் தன்னோடே போக்கினபடி. மாய ஆயனே-ஆச்சரியமான ஆற்றலையுடைய

---

1. ஸ்ரீகிருஷ்ணனைக் கொல்ல வந்தது, தம்மைக் கொல்ல வந்ததாகத் திருவுள்ளம்பற்றி "மாய்த்தல் எண்ணி" என்கிறார் என்னலுமாம் என்று பொருள் கூறத் திருவுள்ளம்பற்றி அப்பொருளுக்குப் பிரமாணம் காட்டுகிறார் "நம்மைக் கொல்லவருகின்றான்" என்று தொடங்கி. இது, விபீஷணனைக் குறித்துச் சுக்கிரீவன் கூறியது. ஸ்ரீராமா. யுத். 17 : 5.

2. "தந்த" என்பதற்கு இரண்டுவகையாகக் கருத்து அருளிச்செய்கிறார் 'அவன் திருப்பவளத்திலே' என்று தொடங்கி. திருப்பவளம் - வாய்.

"செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்
நிலைபெறத் தோன்று மந் நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தும் உரிய என்ப."

"அவற்றுள்,
தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயீ ரிடத்த."

என்பது இலக்கணம். (தொல். சொல். 28-30.)

3. "பேய்" என்னாது, "மாயப் பேய்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'பிறவியால் வந்த' என்று தொடங்கி.

4. பெரிய திருமொழி. 1. 5 : 6.

5. "மாய்த்தல்எண்ணி" என்றதனைத் திருவுள்ளம்பற்றிப் பொருள் அருளிச்செய்கிறார் 'அவள் கோலிவந்ததனை' என்று தொடங்கி,

ஆயனே! [1] இவனும் பிள்ளையாயே முலையுண்டான், அவளும் தாயாய் முலைகொடுத்தாள்; பொருளின் சுவபாவத்தாலே முடிந்தாள் இத்தனை.

வாமனனே - [2] "வெங்கொங்கை உண்டானை மீட்டு ஆய்ச்சி ஊட்டுவான், தன்கொங்கை வாய்வாய்த்தாள் சார்ந்து" என்றும், [3] "பேய்ச்சி பால் உண்ட பெருமானைப் பேர்ந்தெடுத்து, ஆய்ச்சி முலைகொடுத்தாள் அஞ்சாதே" என்றும் சொல்லப்படுகின்றபடியே அந்த அவதாரத்தில் பூதனை முலைகொடுத்தால் அதனை மாற்றுவதற்கு உரிய மருந்தாக முலைகொடுக்கைக்கு ஒரு தாயாகிலும் உண்டே அன்றோ அங்கு; அதுவும் இன்றிக்கே, [4] இவனைப் பெற்றிட்டு வைத்துத் தாயும் தமப்பனும் தவத்திலே கருத்துஊன்றினவர்களாய் இருந்துவிட, அசுரத்தன்மை வாய்ந்தவர்கள் இருந்தஇடத்தே தானே போய்க் கிட்டும்படியாய் அன்றோ இருந்தது; என்றது, தான் இருந்த இடத்தே அவர்கள்வந்து கிட்டினாற்போலே அன்றே எதிரிகள் இருந்தஇடத்தே தான்சென்று கிட்டுமது? அது, மிகவும் வயிறு எரித்தலுக்குக் காரணமாய் இருக்குமேயன்றோ? என்றபடி. [5] அதனையே யன்றோ "சீராற் பிறந்து சிறப்பால் வளராது,

---

1. ஆயனாயிருக்கவும் ஆச்சரியமான ஆற்றல் எது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவனும் பிள்ளையாயே' என்று தொடங்கி.

2. "வாமனனே!" என்றது, அதிலும் இது பரியவேண்டுகையாலே என்று கூறத் திருவுள்ளம்பற்றிப் பரியவேண்டுகைக்குக் காரணமும் காட்டுகிறார் "வெங்கொங்கை" என்று தொடங்கி. இது, மூன்றாந் திருவந். 74.

3. மூன்றாந்திருவந். 29.

4. இவனை - வாமனனை. 'தாயும்தமப்பனும்' என்றது, காசிப முனிவரையும் அதிதியையும்.

கால நுனித்துணர் காசிபன் என்னும்
வாலறி வற்கதி திக்கொரு மகவாய்
நீல நிறத்து நெடுந்தகை வந்தோர்
ஆலமர் வித்தின் அருங்குற ளானான்.

என்றார் கம்பநாட்டாழ்வார்.

5. அப்படி வயிறு எரிந்தார் உண்டோ? என்ன, 'அதனையேயன்றோ?' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'அதனையேயன்றோ?' என்றது, அதனை நினைத்தேயன்றோ என்றபடி. "சீராற்பிறந்து" என்று தொடங்கும் பாசுரம், பெரியதிருவந். 16.

பேர்வாமன் ஆகாக்கால் பேராளா! என்று வயிறு பிடித்தார்கள். மாதவா - [1]"தீநாள் திருவுடையார்க்கு இல்" என்கிறபடியே, இந்த அபாயங்களில் அவன் தப்பியது அவள் நெஞ்சோடேயிருந்து நோக்குகையாலேயன்றோ? ஓர் அபாயமும் இல்லையேயாகிலும் பெரிய பிராட்டியாரும் அவனுமான சேர்த்திக்கு மங்களாசாசனம் செய்கின்றவர்கள் தேட்டமாய் இருக்குமேயன்றோ? அன்புடையவர்கள் "வடிவாய் நின் வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்னாநின்றார்கள் அன்றோ? பூத் தண் மாலைகொண்டு உன்னைப் போதால் வணங்கேனேலும் - பூதனை முதலாயினோர் வந்து கிட்டின அவ்வக் காலத்திலே குளிர்த்தியையுடைத்தான பூமாலையைக்கொண்டு குளிர்ந்த உபசாரத்தைச் செய்யப் பெற்றிலேனேயாகிலும். பூத்தண் மாலை நெடுமுடிக்குப் புனையும் கண்ணி எனது உயிரே - குளிர்ந்த மாலையால்அல்லது செல்லாதபடியாய் ஆதி ராஜ்ய சூசகமான உன்னுடைய திருமுடிக்கு விரும்பிச் சாத்தும் மாலை, என்உயிர் - என்சத்தையாய்விட்டது. (4)

## 359.

**கண்ணி எனதுயிர் காதல் கனகச் சோதி முடிமுதலா**
**எண்ணில் பல்கலன்களும் ஏலும் ஆடையு மஃதே**
**நண்ணி மூவுல:கும் நவிற்றுங் கீர்த்தியு மஃதே**
**கண்ணன் எம்பிரான் எம்மான் கால சக்கரத்தா னுக்கே.**

**பொ - ரை :**—காலத்தை நடத்துகின்ற சக்கரத்தையுடையவனான எம்மானும் எம்பிரானுமான கண்ணபிரானுக்கு, என்னுடைய உயிரா

---

1. 'தீநாள் திருவுடையார்க்கில்' என்றது, சிலேடை; செல்வத்தையுடையவர்க்கு என்றும், பெரியபிராட்டியாரையுடையார்க்கு என்றும் பொருள்.

இதுமன்னும் தீதென் றிசைந்ததூஉம் ஆவார்க்கு
அதுமன்னும் நல்லவே யாகும் - மதுமன்னும்
வீநாறு கானல் விரிதிரைத் தண்சேர்ப்ப!
தீநாள் திருவுடையார்க் கில்.

என்பது பழமொழி நானூறு. 235.

'நெஞ்சோடே இருந்து' என்பதும் சிலேடை.

2. "மாதவா! பூத்தண்மாலை கொண்டு உன்னைப் போதால் வணங்கேனேலும்" என்று மேலே கூட்டி வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'ஓர் அபாயமும் இல்லையேயாகிலும் என்று தொடங்கி.

னது அவன் அணிந்து கொள்ளுகின்ற மாலையாயிராநின்றது; அவன் தரித்திருக்கின்ற பொன்மயமான ஒளிபொருந்திய திருமுடி முதலான எண் இல்லாத பலவகையான ஆபரணங்களும் என்னுடைய அன்பே யாயிராநின்றது; பொருந்திய பீதாம்பரமும் அந்த அன்பேயாகும்; மூவுலகத்தாரும் பொருந்திச் சொல்லுகின்ற கீர்த்தியும் அந்த அன்பே யாகும்.

வி-கு:—எனது உயிர் கண்ணி; காதல் கனகச்சோதி முடி முதலா எண் இல் பல் கலன்களும் அஃதே; ஏலும் ஆடையும் அஃதே; கீர்த்தியும் அஃதே என்க. கண்ணி - மாலே. கண்ணி என்பதற்குத் தலையில் அணியும் மாலை என்பர் புறநானூற்று உரையாசிரியர். கலன் - ஆபரணம்.

ஈடு:—ஐந்தாம்பாட்டு. [1]தம்முடைய அன்பு முதலானவைகள் ஓர் ஒன்றே ஆபரணங்கள் முதலான எல்லாப் பரிச்சதங்களுமாயிற்று அவனுக்கு என்கிறார்.

எனது உயிர் கண்ணி - [2]நான் 'என்னது' என்றிருக்கிறதை அன்றோ அவன் தனக்கு மாலையாகக் கொண்டது என்பார் '**எனது உயிர் கண்ணி**' என்கிறார். அன்றிக்கே, [3]"மார்வத்து மாலை" என்கிறவளைத் தனக்கு மாலையாகக் கொள்ளுகை தக்கது; அஃது ஒழிய என் உயிரை அன்றோ தனக்கு மாலையாகக் கொண்டான் என்பார் '**கண்ணி எனதுயிர்**' என்கிறார் என்னலுமாம். கனகம் சோதி முடி முதலா எண் இல் பல் கலன்களும் காதல் - விரும்பத் தக்கதாய் ஆதிராஜ்ய சூசகமான திருமுடி முதலான எண் இறந்து பலவகைப்பட்ட திரு ஆபரணங்களும் என்னுடைய அன்பேயாம். இவருடைய காதல் அவனுக்கு ஆபரணமாவது என்? என்னில், இவருடைய அன்பிற்குத் தான் விஷயமாகப் பெற்ற இதனையே, தனக்குப் பல ஆபரணங்கள் சாத்தினால் பிறக்கும் புகர் உண்டாக அவன் நினைத்திருக்கையாலே, அதனை நோக்கிச் சொல்லுகிறார். ஏலும் ஆடையும் அஃதே - திருவரைக்குத்

1. 'அன்புமுதலானவைகள்' என்றதனாலே, உயிரையுங்கொள்க. 'ஆபரணங்கள் முதலான' என்றதனால், பீதாம்பரத்தையுங் கொள்க. பரிச்சதம் - உபகரணம்; அங்கமாயிருப்பது.

2. 'நான் என்னது என்றிருக்கிறதை' என்றது, மயர்வற மதிநலம் அருளுவதற்கு முன்பிருந்த நிலையைக் குறித்தபடி.

3. திருவாய்மொழி. 10. 10 : 2.

தகுதியான திருப்பீதாம்பரமும் அந்த அன்பேயாம். [1] ஒரு நாள் ஸ்ரீ வைஷ்ணவ வண்ணத்தான், திருப்பரிவட்டங்களை அழகியதாக வாட்டிக் கொண்டு வந்து எம்பெருமானர்க்குக் காட்ட, மிக உவந்தாராய் அவனைப் பெருமாள் திருவடிகளிலே கைப்பிடித்துக்கொண்டு புக்கு 'நாயன்தே! இவன் திருவரைக்குத் தகுதியாம்படி வாட்டினபடி திருக்கண் சாத்தி யருள வேணும்' என்று இவற்றைக் காட்டியருள, கண்டு உவந்தருளி உடையவரை அருள்பாடு இட்டருளி, 'இவனுக்காக ரஜகன், நம் திறத்தில் செய்த குற்றம் பொறுத்தோம்' என்று திருவுள்ளமாயருளினர். அன்றிக்கே, ஏலும் ஆடையும் அஃதே என்பதற்கு, [2] "சிறந்த பொன்னுடை" என்கிறபடியே, புருடோத்தம லக்ஷணமான திருப் பீதாம்பரமும் அந்த அன்பேயாம் என்னலுமாம். இவர் பலகாலம் கூடிப் பண்ணுகிற திருவாபரணமும் திருப் பரிவட்டமும் அன்றோ? [3] "அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து" என்கிறபடியே, இவருடைய அன்பு அடியே தொடங்கியுள்ளது அன்றோ? 'இது கூடுமோ?' என்று சந்தேகிக்க வேண்டா; இவை [4] "பொய்யில் பாடல்" ஆகையாலே, கூடும். மூவுலகும் நண்ணி நவிற்றும் கீர்த்தியும் அஃதே-விசேடஜ்ஞர் அன்றிக்கே, மூன்று உலகத்துள்ளாரும் வந்து கிட்டிக் கடல் கிளர்ந்தாற்போலே துதிக்கிற கீர்த்தியும் அந்த அன்பேயாம். [5] 'இவர் காதலித்த பின்னர் வேறு பொருள்களிலே நோக்குள்ளவர்களும் அப்பொருள்களில் நோக்கில்லாதவர்களாகி ஏத்தாநின்றார்கள்' என்றாயிற்று

---

1. 'திருவரைக்குத் தகுதியான' என்பதற்கு ஓர் ஐதிஹ்யம் காட்டுகிறார் 'ஒருநாள்' என்று தொடங்கி. 'ரஜகன்' - வண்ணான். 'நம் திறத்தில் செய்த' என்றது, கிருஷ்ணாவதாரத்தில் வண்ணான் செய்த தவற்றினை.

2. பிருஹதாரண்ய உபநிடதம். 4 : 3.

3. திருவாய்மொழி. 2. 3 : 3.

4. திருவாய்மொழி. 4. 3 : 11.

5. பிரயோஜனத்தை விரும்புகிறவர்கள் துதிக்கிற கீர்த்தியை அநந்யப் பிரயோஜனரான தம்முடைய காதல் என்னலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவர் காதலித்த பின்னர்' என்று தொடங்கி. இங்கே,

"ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடைய, பேரும் தார்களுமே பிதற்ற" (திருவாய். 6. 7 : 2.) என்ற திருப்பாசுரம் அநுசந்திக்கத் தகும்.

அவன் நினைத்திருக்கிறது. ஆக, [1] ஓர்இனப்பொருள்கள் பலவாதலே அன்றி, வேற்றினப் பொருள்களும் பலவாகத் தொடங்கின என்பதனைத் தெரிவித்தவாறு. இக்காதலுக்குக் கைதொட்டுக் கிருஷி பண்ணினபடி சொல்லுகிறது மேல்: [2] விருத்தவான்களைக் காட்டிக்காணும் விருத்திபரர் ஆக்கிற்று இவரை. கால சக்கரத்தான் எம்மான் எம்பிரான் கண்ணனுக்கு - கையும் திருவாழியுமான அழகைக் காட்டி எனக்கு வேறு ஒன்றிலே நெஞ்சு செல்லாதபடி செய்தலாகிய மஹோபகாரத்தைச் செய்து [3] "கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதல்" என்னும்படி செய்த என் ஸ்வாமியான கிருஷ்ணனுக்கு. பகலை இரவாக்கவல்ல சக்கரமாதலின் '**காலசக்கரம்**' என்கிறார். காலசக்கரம் - காலத்தை நடத்துகிற சக்கரம் என்றபடி. அன்றிக்கே, "[4] **கலிகாலத்தில் பாஷண்டிகளால் கெடுக்கப்பட்ட மக்கள்** விஷ்ணுவாகிய சர்வேசுவரனைப் பூஜிக்கின்றார்கள் இல்லை" என்கிற காலத்திலும், இருள் தரு மா ஞாலத்திலும் இருளை ஓட்டி [5] அருளார் திருச்சக்கரமாய்த் திருக்கரத்திலே விளங்கிக்கொண்டிருப்பவனாதலின், **காலத்திற்குக் கட்டுப்பட்டிருக்குந் தன்மையைப் போக்கும் சக்கரம்** என்னுதல். சர்வேசுவரன் திருக்கரத்தைத் தான் பிரியாமலிருத்தல்போலே, திருவடிகளைத் தாம் பிரியாதபடியான ருசியை உண்டாக்கக்கூடிய திருவாழி என்பதனைத் தெரிவித்தபடி. அவனுடைய திருக்கையிலே நின்ற அழகாலே மக்கள் சென்று காலிலே விழும்படி செய்யுமவன் என்பதாம். (5)

---

1. இவருடைய காதலானது, ஒரே இனமான திருவாபரணங்கள் பல வகை யாகையேயன்றித் திருப்பரிவட்டம் சேர்த்தி தொடக்கமான பல இனப் பொருள்கள் ஆகவும் தொடங்கிற்று என்றபடி.

2. "சக்கரத்தான்" என்றதனைக் கடாக்ஷித்து 'விருத்தவான்களை' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். விருத்தம், சிலேடை: வளையம், நடைவடி.

3. திருவிருத்தம். 97.

4. விஷ்ணு புரா. 6. 1: 41.

5. திருவிருத்தம். 33.

"அருளார் திருச்சக் கரத்தால் அகல்விசும் பும்நிலனும்
இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர்"

என்பது அப்பாசுரப் பகுதி.

360.

[1]கால சக்க ரத்தொடு வெண்சங் கம்கை ஏந்தினாய் !
ஞால முற்றும் உண்டுமிழ்ந்த நாரா யணனே! என்றென்று
ஓல மிட்டு நான்அழைத்தால் ஒன்றும் வாரா யாகிலும்
கோல மாம்என் சென்னிக்குஉன் கமல மன்ன குரைகழலே.

பொ - ரை :—பகைவர்களுக்கு முடிவு காலத்தைச் செய்கின்ற சக்கரத்தையும் வெண்மையையுடைய சங்கினையும் திருக்கைகளிலே ஏந்தினவனே! பூமி முழுதினையும் உண்டு உமிழ்ந்த நாராயணனே! என்பதாகக் கூப்பிட்டு நான் அழைத்தால் சிறிதும் வாராமல் இருந்தாயேயாகிலும் உனது தாமரைமலர்போன்ற ஒலிக்கின்ற திருவடிகள் எனது தலைக்கு அலங்காரமாம்.

வி - கு :—உன் கமலம் அன்ன குரைகழல் என் சென்னிக்குக் கோலமாம் என்க. கோலம் - அழகு. ஒன்றும் - சிறிதும். எண்ணுப் பொருளுமாம்.

---

1. இத் திருப்பாசுரக் கருத்தோடு

"தம்முடைய தண்ணளியும் தாமும்தம் மான்தேரும்
எம்மை நினையாது விட்டாரோ விட்டகல்க ;
அம்மென் இணர அடம்புகாள் ! அன்னங்காள் !
நம்மை மறந்தாரை நாம் மறக்க மாட்டேமால்."

என்ற சிலப்பதிகாரச் செய்யுளின் ஈற்றடியும், (சிலப். கானல்வரி.)

"அவர்நெஞ் சவர்க்காதல் கண்டும் எவன்நெஞ்சே
நீ எமக் காகா தது."

என்ற திருக்குறளும், (நெஞ்சமே! நம் தலைவர் நம்மை நினைத்து வந்து அருள்செய்யவில்லை ; நீ மட்டும் ஏன் அவரையே நினைக்கின்றாய்? என்பது திருக்குறளின் கருத்தாகும்.)

"பெய்த குன்றத்துப் பூநாறு தண்கலுழ்
மீமிசைத் தாஅய வீஇ சுமந்து வந்து
இழிதரும் புனலும் ; வாரார் தோழி,
மறந்தோர் மன்ற மறவாம் நாமே
காலை மாரி மாலை மாமழை
இன்னிசை உருமின முரலும்
முன்வரல் ஏமஞ் செய்தகன் றோரே."

என்ற குறுந்தொகைச் செய்யுளும் ஒத்து விளங்குதல் காண்க.

ஈடு :—ஆறாம்பாட்டு. [1] இப்படிக் காதலை யுடையையாயிருந் துள்ள நீ என்னைக் கிட்டாதே ஒழிந்தாயேயாகிலும் உன் சத் தையே எனக்குத் தாரகம் முதலானவைகள் என்கிறார். உனக்கு நான் உதவப்பெற்றிலேனாகிலும் என்சத்தை உனக் குத் தாரகம் முதலானவைகள் ஆனாற்போலே, நீ வாராயாகி லும் உன் சத்தை எனக்குத் தாரகம் முதலானவைகள் என்கி றார். அவனுடைய காதலைச் சொல்லாநிற்க, நடுவே தம்முடைய காதலைச் சொல்லுவான் என்? என்னில், இரண்டு சேதநர் கூடிப் பரிமாறாநின்றால் பிறக்கும் ரசங்களும் இருவருக்கும் உண்டாயிருக்குமேயன்றோ? அவற்றுள், மேல்எல்லாம் அவனு டைய காதலைச் சொல்லிக்கொண்டு போந்தார்; இப்போது அவனுடைய காதலின்மிகுதி தம்மையும் காதலன் ஆக்கிற்று என்கைக்காகத் தம்முடைய காதலைச் சொல்லுகிறார்.

கால சக்கரத்தொடு வெண்சங்கம் கை ஏந்தினாய் - [2] இவர் கூப்பிட்ட பாசுரந்தான் இதுவாயிற்று. பகைவர்களுக்கு யம னான திருவாழியோடேகூட, நீலநிறம் பொருந்திய திருமேனிக் குப் பரபாகமான வெண்மையை யுடைத்தான ஸ்ரீ பாஞ்சஜன் யத்தை, வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படியிருக் கிற அழகிய திருக்கையிலே பூ ஏந்தினாற்போலே ஏந்தின வனே! ஸ்ரீபாஞ்சஜன்யத்துக்கு வெளுப்பு நிரூபகம் ஆனாற் போலே, திருவாழிக்குப் பகைவர்களை அழித்தலும் நிரூபகமா யிருக்குமாதலின் '**காலசக்கரம்**' என்கிறார். ஞாலம் முற்றும் உண்டு உமிழ்ந்த - பிரளய ஆபத்திலே வரையாமல் திருவயிற் றிலே வைத்துக் காத்து, அப்பிரளயம் கழிந்தவாறே வெளிநாடு காணப் புறப்படவிட்டு இப்படி [3] வரையாமல் காப்பாற்றுகின்ற. என்றது, இவற்றை ஆபரணமாகக்கொண்டு அலங்கரித்து, உலகம் நோவுபடத் தான் அலங்காரம் அழியாதே இருக்கை

---

1. மேற் பாசுரங்களிற் சொன்ன காதலை அநுவதித்துக்கொண்டு "வாராயாகிலும்கோலமாம் என் சென்னிக்கு" என்றதனாற் போந்த பொருளை அருளிச்செய்கிறார் 'இப்படி' என்று தொடங்கி. கூறிய பொருளைத் திருஷ் டாந்தத்தோடு அருளிச்செய்கிறார் 'உனக்கு' என்று தொடங்கி.

2. 'இவர் கூப்பிட்ட பாசுரந்தான் இதுவாயிற்று' என்றது, இப் பாசுரத்தில் "நான் அழைத்தால்" என்னுமளவுக்கும் பாவம்.

பரபாகம் - பல நிறங்கள் கலத்தலால் உண்டாகும் சோபை.

3. "முற்றும்" என்றதன் பொருள், 'வரையாமல்' என்பது, வரையாமல் - வரம்பிடாமல்.

அன்றிக்கே, ஆபத்திற்குத் துணைவனாயிருக்கும் என்பதனைத் தெரிவித்தபடி.

நாராயணனே - [1]இப்படி வரையாமல் பாதுகாக்கவும் 'இவன் நம்மைப் பாதுகாத்தான்' என்று கைம்மாறு தேடி நெஞ்சாறல் படவும் வேண்டாதபடி சம்பந்தம் இருக்கிறபடி. [2]'தாய் நம்மை வயிற்றிலே பாதுகாத்தாள்; நாம் இவளுக்கு என் செய்வோம்?' என்று நெஞ்சாறல் படுவார் இலரே அன்றோ? அதற்கு அடி சம்பந்தமே அன்றோ? அப்படியே அன்றோ அவனும்? [3]"தாயிருக்கும்வண்ணமே உம்மைத் தன் வயிற்று இருத்தி உய்யக்கொண்டவன்" என்பதேயன்றோ ஆறங்கம் கூற அவதரித்த ஆலிநாடர் திருவாக்கு.

என்று என்று - கையும் ஆழ்வார்களுமான அழகையும், காலத்திற்குத் தகுதியாக ஆபத்தில் துணையாயினமையையும், [4]இவை இல்லாவிடினும் விடஒண்ணாத சம்பந்தத்தையும் சொல்லி. '**என்றுஎன்று**' என்னும் அடுக்கு, தனித்தனியே ஆழங்காற் பட்டமையைத் தெரிவிக்கிறது. ஓலம் இட்டு நான் அழைத்தால்-[5]வலி இழந்தவனான நான் கூப்பிட்டு அழைத்தக்கால். '**ஓலமிட்டு**' என்றதனால் பரமபதத்திலே இருந்தாலும் நிலை குலைந்து வரவேண்டும்படி பெருமிடறுசெய்து கூப்பிடுகின்றமை போதரும். ஒன்றும் வாராயாகிலும்-[6]"உபப்பிலாவியம் என்ற நகரத்திலிருந்து வந்தவரான ஸ்ரீகிருஷ்ணன் குசஸ்தலம்

---

1. "நாராயணனே" என்று சம்பந்தத்தை இட்டு அழைப்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'இப்படி வரையாமல்' என்று தொடங்கி.

2. சம்பந்தம் இருந்தால் நெஞ்சாறல் பட வேண்டாவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தாய் நம்மை' என்று தொடங்கி.

3. ஆயின், தாய்போன்று பாதுகாப்பவனோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "தாயிருக்கும்" என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி. 11. 6 : 6.

4. "நாராயணனே" என்ற சொல்லை நோக்கி 'இவை இல்லாவிடினும் விடவொண்ணாத சம்பந்தம்' என்கிறார். 'இவை' என்ற சுட்டு, மேலே கூறிய இரண்டனையும் சுட்டுகிறது.

5. "பாலனாய் ஏழுலகு" என்ற திருவாய்மொழியிலே பிரிவுத் துன்பம் சொல்லுகையாலே இங்கே 'வலி இழந்தவனான நான்' என்கிறார்.

6. "ஒன்றும்" என்று விசேடித்ததற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'உபப்பிலாவியம்' என்று தொடங்கி. இது, பாரதம். உத்யோகபர்வம். "ஒன்றும் வாராயாகிலும்" என்றது, நீ வருகைக்கு அறிகுறியாயிருப்ப

என்கிற இடத்தில் தங்கியிருக்கிறார்; அவர் காலையில் இங்கு வரு வார்" என்கிறபடியே, அங்குநின்றும் புறப்பட்டான், இங்கே வந்துவிட்டான் என்று வருகைக்குக் காரணம் இல்லையேயாகி லும். அன்றிக்கே, "கிருஷ்ணனுடைய திருப்பெயரை நினை வூட்டுகின்ற திருச்சின்னத்தின் ஓசையானது குளிர்ந்திருக் கும்" என்னக்கடவதன்றோ? என் சென்னிக்குக் கோலமாம்- [1]"ஸ்ரீராமபிரானுடைய திருவடிகள் என்தலையினால் தாங்கு கின்றவரையில் எனக்குச் சாந்தி உண்டாகமாட்டாது" என்று இருக்கின்ற என் தலைக்குக் கோலமாம். உன் கமலம்அன்ன- 'செவ்விப்பூச் சூடவேணும்' என்று ஆசைப்படுவாரைப் போலே. குரைகழல் - குரைஎன்று பரப்பாய், அதனாலே இனி மையின் மிகுதியைச் சொல்லிற்றுதல்; அன்றிக்கே, ஆபர ணங்களின் ஒலியைச் சொல்லிற்றுதல். 'வாராயாகிலும்கோல மாம்' என்பான் என்? என்னில், வாராது ஒழியக்கூடாது; கூடாதது கூடிலும் என்நினைவு இது என்கிறார். [2]என்னை அடியிலே இப்படி ஆக்கினாயே என்று கருத்து. அடிவிடில், "நின்னலால் இலேன்காண்" என்பரே! (6)

361.

குரைகழல்கள் நீட்டிமண் கொண்ட கோல வாமனா!
குரைகழல்கை கூப்புவார்கள் கூட நின்ற மாயனே!
விரைகொள் பூவும் நீரும்கொண்டு ஏத்த மாட்டே னேலும்உன்
உரைகொள் சோதித் திருவுருவம் என்ன தாவி மேலதே.

பொ - ரை:—ஒலிக்கின்ற திருவடிகளை நீட்டி உலகத்தை அளந்து கொண்ட அழகிய வாமனனே! ஒலிக்கின்ற திருவடிகளில்

---

தொரு அடையாளம் ஒன்றும் உண்டாம்படி வாராயாகிலும் என்றபடி. மற்றும், ஓர் அடையாளத்திற்கு மேற்கோள் காட்டுகிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. என்றது, திருச்சின்னத்தின் ஒலியானது அவன் வரவுக்கு அடையாளமாக இருக்குமே? அது இல்லையே யாகிலும் என்றபடி.

1. ஸ்ரீராமா. அயோத். 98: 8.

2. உமக்கு இப்படி ருசியைப் பிறப்பித்தார் யார்? என்ன, 'என்னை அடியிலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'அடி யிலே' என்றது, சிவேடை: திருவடிகளிலே என்றும், ஆதிகாலத்திலே என்றும் பொருளாம். ஆகையாலே, சத்தாபிரயுக்தம் என்கிறார் 'அடிவிடில்' என்று தொடங்கி. "நின்னலால் இலேன் காண்" என்றது, திருவாய் மொழி. 2. 3; 7.

கைகூப்பி வணங்குகின்றவர்கள் அடையும்படி நின்ற மாயவனே! வாசனை பொருந்திய பூக்களையும் தண்ணீரையும் கொண்டு துதிக்க மாட்டேனே யாகிலும் வேதங்களால் புகழப்படுகின்ற உன்னுடைய சோதிமயமான திருமேனியானது என்னுடைய உயிரின் மேலதேயாம்.

வி - கு :—நீட்டி கொண்ட வாமனா! என்க. ஏத்தமாட்டேனேலும் உன் திருவுருவம் என்னது ஆவி மேலது என்க. விரை - வாசனை. விரை என்னும் அடையை நீருக்கும் கூட்டுக. இப்பாசுரத்தில் முதலடியாலே, சேஷித்வ பிரதானமான பிரணவார்த்தமும், 'குரைகழல்கள் கைகூப்புவார்கள்' என்றதனால், நமஸ் ஸப்தார்த்தமும், 'கூடநின்ற மாயனே' என்றதனால், நாராயண சப்தார்த்தமும் சொல்லுகிறது என்பர் பெரியோர்.

ஈடு :—ஏழாம்பாட்டு. [1] மேலே கூறிய அன்பும் அதற்குத் தகுதியான தொழில்களும் இன்றிக்கே இருக்கிலும் என் சத்தையே உனக்கு ஜீவனத்திற்கு ஏது ஆவதே! என்கிறார்.

குரை கழல்கள் நீட்டி - [2] "மண் முழுதும் அகப்படுத்து நின்ற" என்கிறபடியே, பூமிப்பரப்பு அடையத் திருவடிக்குள்ளேயாம்படி திருவடியை நிமிர்த்து. குரை - பரப்பு என்னுதல்; ஓசை என்னுதல். மண் கொண்ட கோல வாமனா - [3] மண் கொண்ட பின்பும் வாமன வேஷம் இவர் திருவுள்ளத்திலே ஊற்றிருந்தபடி. இந்திரனுக்கு இராச்சியம் கொடுக்கை அன்றிக்கே, தம்மை அநுபவிப்பிக்கைக்காக அவ்வடிவு கொண்டான் என்று இருக்கிறார். இதனால், [4] பிராப்தியைச் சொல்

---

1. மேற்பாசுரத்தில் "ஓலமிட்டு நான் அழைத்தால்" என்றதனைக் கடாக்ஷித்து 'மேலே கூறிய அன்பும்' என்கிறார். இப்பாசுரத்தின் மூன்றாம் அடியைத் திருவுள்ளம்பற்றி 'அதற்குத் தகுதியான தொழில்களும்' என்கிறார்.

2. திருநெடுந்தாண்டகம். 5.

3. திரிவிக்கிரமனன்றோ பூமி அளந்தது? "வாமனன்" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மண்கொண்ட பின்பும்' என்று தொடங்கி.

4. திருவடிகளை நீட்டி உலகத்தையெல்லாம் திருவடிகளின் கீழே இட்டுக் கொள்ளுகையாலே 'பிராப்தியைச் சொல்லிற்று' என்கிறார். பிராப்தி - சம்பந்தம்.

விற்று. அஞ்சலி மாத்திரத்தாலே சாதிக்கப்படு பொருள் என்கிறார் மேல்: குரைகழல் கை கூப்புவார்கள் கூடநின்ற மாயனே - உன் திருவடிகளிலே கைகூப்பி வணங்கினவர்கள் உன்னைக் கூட நின்ற மாயனே என்னுதல். அன்றிக்கே, கைகூப்புவார்கள் குரை கழல்கள் கூட நின்ற மாயனே என்று கொண்டு கூட்டி, உன்னைக் கைகூப்புவார்கள் குரைகழல்கள் கூட நின்ற மாயனே என்னுதல். திருவடிதான் அஞ்சலிக்கு விஷயமுமாய் அஞ்சலியினாலே சாதிக்கப்படுகின்ற பொருளுமா யன்றோ இருப்பது. [1] இந்திரனுக்கு இராச்சியம் கூறுபட்டாற்போலே இவர்க்கும் அத்திருவடிகளில் அழகு கூறுபட்டதாதலின் 'குரைகழல்கள்' என்கிறார். அவனுக்குச் சாதனமானது இவர்க்குச் [2] சாத்தியம் ஆயிற்று என்றபடி. மாயனே - [3] ஓர் அஞ்சலி மாத்திரத்தாலே உன்னை அடையலாம்படி இருப்பதே! இது என்ன ஆச்சரியந்தான் என்கிறார். விரைகொள் பூவும் நீரும் கொண்டு ஏத்த மாட்டேனாலும் - வாசனையையுடைத்தான பூவையும் நீரையுங் கொண்டு [4] "எல்லாமாய் இருக்கிற பூமியைப் பனிபோன்று குளிர்ந்திருக்கின்ற தண்ணீரால் நனைக்கட்டும்; பின்னர், மற்றவர்கள் எங்கும் பொரிகளாலும் புஷ்பங்களாலும் வாரி இரைக்கக்கடவர்கள்" என்கிறபடியே, வகுத்த அடிமை செய்யமாட்டிற்றிலனேயாகிலும். என்றது, ஓர் அஞ்சலி மாத்திரத்தாலே உன்னை அடையலாம்படி நீ இருந்தால், சேதனனாகில் மலர் முதலான சாதனங்களைக் கொண்டு அடிமைசெய்கையன்றோ பிராப்தம்; அப்படிச் செய்யப் பெற்றிலனேயாகிலும் என்றபடி.

உரை கொள் சோதித் திருஉருவம்- [5] "சக்கரவர்த்தித் திரு

---

1. "குரை" என்று விசேடித்ததற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'இந்திரனுக்கு" என்று தொடங்கி. 'குரை' என்றது அழகாய், அழகால் வந்த பரப்பைச் சொல்லுகையாலே 'அழகு கூறுபட்டது' என்கிறார்.

2. பூமியை அளந்துகொண்டு அவனுக்குச் சாதித்துக் கொடுக்கையாலே 'அவனுக்குச் சாதனமான திருவடிகள்' என்கிறார். சாத்தியம் - பேறு; அல்லது, பலம்.

3. "மாயனே" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'அஞ்சலி மாத்திரத்தாலே' என்று தொடங்கி.

4. ஸ்ரீராமா. யுத். 130: 6.

5. ஸ்ரீராமா. யுத். 131: 97.

மகன் இராச்சியத்தை ஆளுகின்ற காலத்தில் மக்களுக்கு இராமன் இராமன் இராமன் என்று எல்லாவார்த்தைகளும் உண்டாயின; உலகமுழுவதும் இராமன் சொரூபமாகவே ஆயிற்று" என்பது போன்று 'அது அது' என்று வாய்புலற்றும்படியிருக்கிற சோதிமயமான திருமேனி என்னுதல். அன்றிக்கே, பேச்சுக்கு அப்பாற்பட்ட திருமேனி என்னுதல். அன்றிக்கே, மாற்றும் உரையும் அற்ற திருமேனி என்னுதல்; [1] "சுட்டு உரைத்த நன்பொன் உன் திருமேனி ஒளி ஒவ்வாது" என்பது தமிழ்மறை அன்றோ? என்னது ஆவி மேலது - இப்படி விலக்ஷணமான உன் திருமேனி என் சத்தையின்மேலது. நித்திய சூரிகளுக்குப் போக்கியமான திருமேனிக்குத் தாரகம் முதலானவைகள் என் ஆத்மசத்தை ஆவதே! [2] 'கலியர் சோற்றின் மேல் மனம்' என்னுமாறுபோலே. [3] இவர்தாம் "அஹமந்நம் அஹமந்நம் அஹமந்நம் - நான் பரமாத்மாவிற்கு இனியன் நான் பரமாத்மாவிற்கு இனியன், நான் பரமாத்மாவிற்கு இனியன்" என்று இருக்குமவர் அன்றோ? (7)

362.

என்ன தாவி மேலையாய்! ஏர்கொள் ஏழ்உ லகமும்
துன்னி முற்று மாகிநின்ற சோதி ஞான மூர்த்தியாய்!
உன்ன தென்ன தாவியும் என்ன துன்ன தாவியும்
இன்ன வண்ண மேநின்றாய் என்று ரைக்க வல்லனே?

---

"உரைகொள்" என்பதற்கு மூன்று வகையாகப் பொருள் அருளிச்செய்கிறார். முதற் பொருளில், உரையை யுடைத்தாயிருக்கை. இரண்டாவது பொருளில், உரையை வென்றிருக்கை. மூன்றாவது பொருளிலும் உரையை வென்றிருக்கை என்பதே பொருள்.

1. திருவாய்மொழி. 3. 1: 2.

2. "ஆவிமேலது" என்பது, 'தாரகம் முதலானவைகள் என் ஆத்மசத்தை ஆவதே!' என்ற பொருளைக் காட்டுமோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கலியர்' என்று தொடங்கி. கலியர் - பசித்தவர்.

3. இவர்தாம் அவனுக்குத் தாரகம் ஆவரோ? என்ன, 'இவர்தாம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். "அஹமந்நம்" இது, தைத்திரீய உப. பிரு. 10.

பொ - ரை :—என் உயிர்மேல் காதல் கொண்டுள்ளவனே! அழகு பொருந்தியிருக்கின்ற ஏழ் உலகங்களிலும் பரந்து நிறைந்து எல்லாப் பொருள்களுமாகி நின்ற சோதிமயமான ஞானத்தையே வடிவாகவுடையவனே ! என்னுடைய உயிரும் உன்னுடையது ; உன்னுடைய உயிரும் என்னுடையது ; இன்ன தன்மையிலே நின்றாய் என்று உரைக்க வல்லலேனோ ? வல்லவன் அல்லன் என்றவாறு.

வி - கு :—மேலையாய் : விளிப்பெயர். எச்சமாகக் கோடலும் அமையும். அப்பொழுது, மேலைஆகித் துன்னி முற்றுமாகி நின்ற மூர்த்தி என இயையும். வல்லனே என்றதில், ஏகாரம் : எதிர்மறைப் பொருளது.

ஈடு :—எட்டாம்பாட்டு. [1] ஒருவரை ஒழிய ஒருவர்க்குச் செல்லாதபடி பிறந்த கலவி, பேச்சுக்கு நிலம் அன்று என்கிறார்.

என்னது ஆவி மேலையாய் - என் சத்தையைப் பெற்று அதனால் வந்த பிரீதி [2] பிரஹர்ஷத்தையுடையாய் என்னுதல். அன்றிக்கே, என்னைப் பெறவேணும் என்னும் ஆசையையுடையாய் என்னுதல். மேலையாய் : எச்சம். அன்றிக்கே, என்ன தாவி மேலையாய்! என்பதனை விளிப்பெயர் என்னுதல். ஏர்கொள் ஏழ் உலகமும் துன்னி முற்றுமாகி நின்ற சோதி ஞான மூர்த்தியாய் - இவரைப்பெற்ற பிரீதியாலே வியாப்தியும் புதுக்கணித்தது என்கிறார் என்னுதல். அன்றிக்கே, ஒருவனைப் பிடிக்க நினைத்து அவன்பக்கல் உண்டான ஆசையாலே ஊரை வளைவாரைப்போலே, தம்மை அகப்படுத்துகைக்காகப் பரந்து நிறைந்து இருப்பவனானன் என்கிறாராதல். இவரோடே வந்து கலந்த பின்பு உலகத்திற்குப் பிறந்த புதுக்கணிப்பைத் தெரிவிப்பார் 'ஏர்கொள் உலகம்' என்கிறார். "உண்டி உடல் காட்டும்" என்னுமாறுபோலே, [3] ஆத்மா நிறைந்தவாறே சரீரமும் புதுக்கணிக்குமே அன்றோ ? உலகத்தையே உருவமாகவுடையவன் அன்றோ அவன். ஜாதி, பொருள்கள்தோறும் நிறைந்து இருத்தல்போன்று, இறைவனும் குறைவறப் பரந்து

---

1. பின் இரண்டு அடிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. பிரீதி பிரஹர்ஷம் - உவகையின் மிகுதி. புதுக்கணிப்பு - புதிதாக உண்டான ஒளி.

3. ஆத்மா - இங்குச் சர்வேசுவரன். சரீரம் - உலகம்.

நிற்கின்றானாதலின் 'துன்னிமுற்றுமாகிநின்ற' என்கிறார். சோதியின் உருவமான ஞானத்தையே வடிவாகவுடையவனாதலின் 'சோதிஞான மூர்த்தியாய்' என்கிறார்.

என்னது ஆவியும் உன்னது உன்னது ஆவியும் என்னது - என்னுடைய ஆவி உன்னது; உன்னுடைய ஆவி என்னது. என் ஸ்வரூபம் நீ இட்ட வழக்கு; உன் ஸ்வரூபம் நான் இட்ட வழக்கு. இவ்விடத்தை ஆளவந்தார் அருளிச்செய்கையில் இருந்த முதலிகளிற் சிலர், [1]'இவ்வாத்மாவின் ஸ்வரூபம் அவன் இட்ட வழக்கு என்பது கூடும்; அவன் ஸ்வரூபம் இவன் இட்ட வழக்காவது என்?' என்று கேட்க, 'இவன் தன்னை அவனுக்கு ஆக்குவன்' என்ற அன்று கர்மம் தடைசெய்யவுங் கூடும்; சர்வேசுவரன் தன்னை இவன் இட்ட வழக்கு ஆக்கும் அன்று தடை செய்பவர் இலர்; ஆனபின்பு, அதுவே நிலைநிற்பது. மேலும், 'இவன் ஸ்வரூபம் அவன் இட்ட வழக்கு ஆகக் கூடுமோ? என்று இதிலே காணும் சந்தேகிக்கவேண்டுவது' என்று அருளிச்செய்தார். இன்ன வண்ணமே நின்றாய் - இந்த வகையிலே நின்றாய். என்று உரைக்க வல்லனே - இப்படிப்பட்ட உன்னுடைய காதல் குணத்தை என்னால் பாசுரம் இட்டுச் சொல்லலாயிருந்ததோ? என்கிறார். (8)

363.

உரைக்க வல்ல னல்லேன்உன்
உலப்பில் கீர்த்தி வெள்ளத்தின்
கரைக்கண் என்று செல்வன் நான்?
காதல் மையல் ஏறினேன்
புரைப்பி லாத பரம்பரனே!
பொய்யி லாத பரஞ்சுடரே!
இரைத்து நல்ல மேன்மக்கள்
ஏத்த யானும் ஏத்தினேன்.

---

1. முதலிகள் வினா, பொருள்தன்மையைப் பற்றியது; ஸ்ரீ ஆளவந்தார் விடை, காதல் தன்மையைப் பற்றியது. இவன் - சேதனன். அவன் - சர்வேசுவரன்.

**பொ - ரை :**—உரைப்பதற்கு ஆற்றலுடையேன் அல்லேன் ; உன்னுடைய எல்லையில்லாத கீர்த்தியாகிய வெள்ளத்தின் கரையிடத்தில் நான் என்று சொல்வேன்? காதலால் மயக்கத்தை அடைந்தேன் ; குற்றம் இல்லாத பரம்பரனே! பொய்யில்லாத பரஞ்சுடரே! நல்ல மேன்மக்கள் ஆரவாரம் செய்துகொண்டு ஏத்த அதனைக் கண்டு யானும் ஏத்தினேன் என்கிறார்.

**வி - கு :**—பரம்பரன் - உயர்ந்த பரன் ; மூவர்க்குள் முதல்வன். பரம் - உயர்வு. நல்ல மேன்மக்கள் - நித்திய சூரிகள். இரைத்து ஏத்த என்க.

**ஈடு :**—ஒன்பதாம்பாட்டு. [1]'அநுபவிக்கப்படும் பொருள் பேசத் தட்டு என்?' என்ன, 'உன் பிரணயித்வ பிரஹர்ஷம் என்னுடைய பேச்சுக்கு நிலம் அன்று' என்கிறார்.

உரைக்க வல்லன் அல்லேன் - உன் காதல் குணத்தை அநுபவித்துக் குமிழிநீர் உண்டுபோமித்தனை போக்கிப் பேசித் தலைக்கட்டமாட்டுகிறிலேன். எல்லாம் பேச ஒண்ணாதாகில் பேசக் கூடிய அம்சத்தைப் பேசினாலோ? என்னில், உன் உலப்பில் கீர்த்தி வெள்ளத்தின் கரைக்கண் நான் என்று செல்வன்-உன்னுடைய முடிவில்லாத காதல் குணத்தால் வந்த கீர்த்திக்கடலினுடைய கரையிலேதான் என்னாலே செல்லப் போமோ? இப்படிக் கரை அருகும் செல்ல அரிய விஷயத்தில் நீர் பேசுவதாக முயற்சி செய்வான் என்? என்னில், காதல் மையல் ஏறினேன் - என்னுடைய ஆசையாலே மிக்க கலக்கத்தை யுடையன் ஆனேன். பிச்சு ஏறினாரை 'நீர் இப்படிச் செய்வான் என்?' என்னக் கடவதோ? இவ்விஷயத்தில் பிரமிப்பான் என்? பிரமிப்பார்க்கு ஒரு பற்றுக்கோடு வேண்டாவோ? என்ன, நித்திய சூரிகள் பித்து ஏறி ஏத்தக் கண்டேன் ; அத்தாலே செய்தேன் என்கிறார் மேல்:

நித்தியசூரிகளோடு இவரோடு அவன் தன்னோடு வேற்றுமை இன்றி அன்றோ [2]இவ்விஷயம் இருப்பது. முற்றறிவினைப் எல்லாவற்றையும் முடிக்கவல்ல ஆற்றலையுடையனை

---

1. "கரைக்கண் என்று செல்வன் நான்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'பிரணயித்வபிரஹர்ஷம்' என்றது, "பொய்யிலாத பரஞ்சுடரே!" என்றதனைத் திருவுள்ளம்பற்றி. பிரணயித்வம் - காதல்.

2. 'இவ்விஷயம்' என்றது, சர்வேசுவரனை.

தான் அறியப் புக்காலும் [1] தனக்கும் தன் தன்மை அறிவு அரியனுய் அன்றோ இருப்பது; [2] தன்னை அறியப் புக்க வேதங்கள் பட்டது படுமத்தனை தானும். புரைப்பு இலாத பரம்பரனே பொய்யிலாத பரஞ்சுடரே - எல்லாப் பொருள்கட்கும் உயர்ந்தவனுயிருக்கிற இருப்பில் குற்றம் இல்லாததுபோலே, என்னுடைய கலவியால் வடிவிற் பிறந்த ஒளியிலும் குற்றம் இன்றிக்கே இருக்கின்றவனே! அன்றிக்கே, [3] நிரவதிகமான பிரணயித்வகுணம் உண்மையில் கண்ணழிவு இல்லாதது போலே, என்னுடைய கலவியிலும் பொய்யின்றிக்கே அத்தால் வந்த ஒளி வடிவிலே தோன்ற இருக்கிறவனே! என்னுதல். நல்ல மேன்மக்கள் இரைத்து ஏத்த யானும் ஏத்தினேன் - நித்தியசூரிகள் பரமபக்தியையுடையவர்களாய்க் கடல் கிளர்ந்தாற்போலே இரைத்துக்கொண்டு ஏத்தக் காண்கையாலே யானும் ஏத்தினேன் அல்லது யான் ஆற்றலுடையனுய் ஏத்தினேனே? என்கிருர். (9)

364.

யானும் ஏத்தி ஏழுலகும் முற்றும் ஏத்திப் பின்னையும்
தானும் ஏத்திலும் தன்னை ஏத்த ஏத்த எங்கெய்தும்
தேனும் பாலும் கன்னலும் அமுது மாகித் தித்திப்ப
யானும் எம்பி ரானையே ஏத்தினேன் யான் உய் வானே.

பொ - ரை:—யானும் துதித்து ஏழ்உலகங்கள் முழுவதும் துதித்துப் பின்பு அவ்விறைவன் தானும் துதித்தாலும் தன்னை ஏத்த ஏத்த அந்தப் புகழ் எங்கு முடிவு எய்தும்? ஆயின், நீர் துதிப்பதற்குக் காரணம் என்? எனின், யான் உய்வு பெறுவதற்காக எனக்கு உபகாரத்தைச் செய்த சர்வேசுவரனைத் தேனும் பாலும் வெல்லமும் அமுதமுமாகித் தித்திக்கும்படி யான் ஏத்தினேன் என்கிருர்.

---

1. "தனக்கும் தன்தன்மை யறிவரி யானைத்
தடங்கடற் பள்ளியம் மானை"

என்பது தமிழ்மறை. 8. 4: 6.

2. 'தன்னை அறியப்புக்க வேதங்கள் பட்டது படுமத்தனை' என்றது, "யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸாஸஹ" என்ற உபநிடத வாக்கியத்தைத் திருவுள்ளம்பற்றி.

3. நிரவதிகமான - தனக்குமேல் ஒன்றில்லாததான. என்றது, காதல் குணத்தின் மிகுதியைக் கூறியபடி. கண்ணழிவு - குறைவு.

வி - கு :—யான் உய்வான் எம்பிரானைத் தித்திப்ப யானும் ஏத்தினேன் என முடிக்க. உய்வான் : வினையெச்சம்.

ஈடு :—பத்தாம்பாட்டு. [1] நானும், எல்லா உலகங்களும், சர்வேசுவரனும் ஒருமிடற்றினராய் ஏத்தினாலும் ஏத்தி முடிவு பெறாத விஷயத்தை என் செல்லாமையாலே ஏத்தினேன் என்கிறார்.

[2] யானும் ஏத்தி - மயர்வற மதிநலம் அருளப்பெற்ற நானும் ஏத்துவது. ஏழ் உலகும் முற்றும் ஏத்தி - [3] விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடு வேற்றுமை இன்றிச் 'சிறியார் பெரியார்' என்னாதே எல்லாரும் ஏத்துவது. பின்னையும் தானும் ஏத்திலும் - இயல்பாகவே முற்றறிவினனாய், தொடங்கின காரியத்தைச் செய்து முடிப்பதற்குத் தகுதியான சர்வசக்தியுமான தானும் ஏத்துவது. தன்னை ஏத்த ஏத்த எங்கு எய்தும்-இப்படி எல்லாரும் ஒருமிடறாய் ஏத்தினாலும், பின்னையும் ஏத்தின இடம் அளவுபட்டு ஏத்தாத இடம் விஞ்சியாயிற்று இருப்பது விஷயம். என்றது, [4] அந்யபரரோடு அநந்யபரரோடு அளவுடையாரோடு அளவிலிகளோடு வேற்றுமை இல்லை ; விஷயத்தை எல்லை காண ஒண்ணாமைக்கு என்றபடி. ஆனால், நீர் ஏத்த இழிவான் என்? என்னில், தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஆகித் தித்திப்ப எம்பிரானை யானும் ஏத்தினேன் - "சர்வரஸ:" என்கிற சர்வேசுவரனுடைய இனிமையாலும், 'நாம் இவ்

---

1. "எங்கு எய்தும்? யான் உய்வான்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். "யான் உய்வானே" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'என் செல்லாமையாலே' என்கிறார்.

2. யானும், எழுலகும், தானும் என்றவற்றிலுள்ள உம்மைகள் உயர்வுப் பொருளன.

3. விசேஷஜ்ஞர் - தத்துவ ஞானத்தையுடையவர். அவிசேஷஜ்ஞர் - அஃதில்லாதவர்கள். 'சிறியார் பெரியார்' என்றது, மனிதர்களையும் தேவர்களையும். இவ்விருவகையாரிலும் உள்ள விசேஷஜ்ஞர் அவிசேஷஜ்ஞர் என்க.

4. "எழுலகும்" என்றதனை நோக்கி 'அந்யபரரோடு' என்றும், "யானும்" என்றதனை நோக்கி 'அநந்யபரரோடு' என்றும், "தானும்" என்றதனை நோக்கி 'அளவுடையாரோடு' என்றும், "முற்றும்" என்றதனை நோக்கி 'அளவிலிகளோடு' என்றும் அருளிச்செய்கிறார். அந்யபரர் - வேறு ஒன்றிலே நோக்குள்ளவர். அநந்யபரர் - சர்வேசுவரனைத் தவிர வேறு ஒன்றிலும் நோக்கில்லாதவர். அளவுடையார் - ஞானமுடையவர்கள்,

விஷயத்தில் இழிந்து ஏத்துவோம்' என்னும்படி தன் காதல் குணத்தை உபகரித்த உபகாரகனுகையாலும் ஏத்தினேன். இனிது என்றும், உபகாரகன் என்றும், ஆற்றல் இல்லா தவரான நீர் இதில் இழியக் கடவீரோ? என்ன, யான் உய்வானே - [1]ஏத்தாவிடில் பிழையாதார் ஏத்துவரத்தனை அன்றோ? (10)

365.

உய்வு பாயம்மற் றின்மைதேறிக்
கண்ணன் ஒண்க ழல்கள்மேல்
செய்ய தாமரைப் பழனத்
தென்னன் குருகூர்ச் சடகோபன்
பொய்யில் பாடல் ஆயிரத்துள்
இவையும் பத்தும் வல்லார்கள்
வையம் மன்னி வீற்றிருந்து
விண்ணும் ஆள்வர் மண்ணூடே.

பொ - ரை:—செந்தாமரைமலர்கள் நிறைந்துள்ள வயல்களாற் சூழப்பட்ட தெற்குத் திசையிலேயுள்ள சிறந்த திருக்குருகூரிலே அவதரித்த ஸ்ரீ சடகோபர், நன்னெறி சேர்தற்கு உரிய வழி வேறு இல்லாமை தெளிந்து கண்ணபிரானுடைய சிறந்த திருவடிகளின்மேலே சாத்திய பொய் இல்லாத பாசுரங்கள் ஆயிரத்துள் இவை பத்துப் பாசுரங்களையும் கற்று வல்லவர்கள் பூலோகத்தில் பலகாலம் தங்கியிருந்து இல்வுலகத்தில் இருந்துகொண்டே பாமபதத்தையும் அரசாட்சி செய்வார்கள்.

வி - கு:—குருகூர்ச் சடகோபன் உபாயம் மற்று இன்மை தேறிக் கண்ணன் கழல்கள்மேல் கூறிய இவை பத்தும் வல்லார்கள் வீற்றிருந்து மண்ணூடே விண்ணும் ஆள்வர் எனக் 'கூறிய' என்னும் வினையை வருவித்து முடிக்க. தேறிக் கூறிய பத்து என்க. தென்னன் என்பதனைத் தென் நல் எனப் பிரித்துக் குருகூர்க்கு அடையாக்குக. அன்றி, தென்னன் சடகோபன் எனச் சடகோபர்க்கு அடையாக்கலுமாம். மன்னி - நிலைபெற்று.

---

1. 'ஏத்தாவிடில்' என்றது, இனிமையாலும் உபகாரகனுகையாலும் அவனை ஏத்தாவிடில் என்றபடி.

ஈடு:—முடிவில், [1] ஈசுவரனுடைய உபய விபூதியும் இத் திருவாய்மொழியைக் கற்றவர்கள் இட்ட வழக்கு என்கிறார்.

உய்வு உபாயம் மற்று இன்மை தேறி - இவர் சர்வேசுவரனுடைய காதல் குணத்தைப் பேசத் தொடங்கியது, பேசித் தலைக்கட்ட வல்லவராய் அன்று; இஃது ஒழிய தரிக்கைக்கு உபாயம் இல்லை என்று தெளிந்து. கண்ணன் ஒண் கழல்கள் மேல்-தான் பரம காதலன் என்பதனை அவதரித்துப் பிரகாசிப்பித்த கண்ணபிரானுடைய திருவடிகளிலே. செய்ய தாமரைப் பழனம் தென்நல் குருகூர்ச் சடகோபன் - சிவந்த தாமரையையுடைய பழனங்களையுடைத்தாய்த் தெற்குத் திக்கிற்குச் சிறந்ததாயுள்ள திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச் செய்த. அவனுடைய காதல்குண அநுசந்தானத்தாலே இவர் தரித்தவாறே [2] "எல்லா மரங்களும் காலம் அல்லாத காலத்திலும் பழங்களையுடையனவாக ஆகக்கடவன" என்கிறபடியே, ஆயினவாதலின் '**செய்ய தாமரைப் பழனம்**' என்கிறது. பொய்இல் பாடல் ஆயிரத்துள் இவையும் பத்தும் - [3] "இந்தக் காவியத்தில் உம்முடைய வாக்கு ஒன்றேனும் பொய்யாக மாட்டாது" என்கிறபடியே, '**பொய்யில்**' என்பதனைத் திருவாய்மொழி எல்லாவற்றுக்கும் அடைமொழியாகக் கொள்க. '**பொய்யில்லாத ஆயிரம்**' என்றபோதே [4] அவ்வோபாதி இப்பத்துப் பாசுரங்கட்கும் வருமே அன்றோ? அன்றிக்கே, அவாப்த சமஸ்த காமனான சர்வேசுவரன் ஒரு நித்திய சம்சாரியோடே இப்படி விரும்பி வந்து கலந்து இவருடைய சத்து முதலானவற்றையே தனக்குப் போக உபகரணமாக இருந்தான் என்கிற காதல் குணத்தில் பொய் இன்றிக்கே இருக்கிற பத்து என்னுதல். வையம் மன்னி வீற்றிருந்து - பூமியிலே எம்பெருமானாரைப்போலே ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயோடே பலகாலம் இருந்து. மண்ணூடே விண்ணும் ஆள்வர் - [5] இங்கே இருக்கச்

---

1. "விண்ணும் ஆள்வர் மண்ணூடே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. ஸ்ரீராமா. யுத். 127 : 17.

3. ஸ்ரீராமா. பால. 2 : 37.

4. பக்கம். 35. குறிப்புப் பார்க்கவும்.

அவாப்த சமஸ்தகாமன் - விரும்புகிறபோது எல்லாப் பொருள்களையுமுடையவனாகவிருப்பவன்.

5. "விண்ணும் ஆள்வர் மண்ணூடே," என்பதற்கு, உதாரணம் வேண்டுமாகில், நம்பிள்ளை முதலிய நம் முதலிகளுடைய திவ்ய சரிதைகளில் காண்க.

செய்தே பரமபதம் தங்கள் சிறு முறிப்படி செல்லும்படி ஆள்வர்கள். என்றது, அங்கே போனால் [1] "ஆண்மின்கள் வானகம் ஆழியான் தமர்" என்கை அன்றிக்கே, இங்கே இருக்கச் செய்தே தாங்கள் இட்ட வழக்காகப் பெறுவர் என்றபடி.

'வையம் மன்னி வீற்றிருந்து' என்கிற இடத்தில் [2] "நம்மைப் போலே வாய்புகுசோருகப் பறிகொடாதே, பலகாலம் பூமியிலே ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயோடே [3] 'நாட்டாரோடு இயல்வொழிந்து' என்கிறபடியே, தங்கள் வேறுபாடு தோன்ற இருக்கப்பெறுவர்கள்" என்று சீயர் உருத்தோறும் அருளிச்செய்வர். பால்யத்திலே பட்டரைப் பறிகொடுத்தவர் அன்ருே அவர். (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

கோவான ஈசன் குறைஎல்லாம் தீரவே
ஓவாத காலத்து உவாதிதனை—மேவிக்
கழித்தடையக் காட்டிக் கலந்த குணமாறன்
வழுத்துதலால் வாழ்ந்ததிந்த மண். (33)

---

ஆழ்வார் எம்பெருமானர் சீயர் திருவடிகளே அரண்.

---

1. திருவாய்மொழி. 10. 9 : 6.
2. "வையம் மன்னி வீற்றிருந்து" என்பதற்கு ஓர் ஐதிஹ்யம் காட்டுகிருர் 'நம்மைப்போலே' என்று தொடங்கி. இந்த ஐதிஹ்யத்தால் நஞ்சீயருடைய ஆசார்யபிரதிபத்தி விளங்கும்.

"தன்னு ரியனுக்குத் தானடிமை செய்வது தான்
இந்நாடு தன்னில் இருக்கும் நாள்—அந்நேர்
அறிந்துமதில் ஆசையின்றி ஆசா ரியனைப்
பிரிந்திருப்பார் ஆர் மனமே! பேசு.

என்பது உபதேசரத்தினமாலை. 64.

3. திருவாய்மொழி. 10. 6 : 2.

## நான்காந் திருவாய்மொழி—“மண்ணையிருந்து”

### முன்னுரை

—(o)—

[1]மேல் திருவாய்மொழியில் அவனுடைய காதல் குணத்தை அநுசந்தித்தார்; இத் திருவாய்மொழியில் பிச்சு ஏறினர். [2]இவர்க்கு மேல் திருவாய்மொழியில் பிறந்த நிரவதிக பிரீதியானது இருவருடைய சொரூபமும் அழியும் என்னும்படியாயிருந்தது; அந்த ரசத்தை அரையாறுபடுத்திப் பொறுக்கும்படி செய்கைக்காக அந்தக் கலவியைச் சிறிது நெகிழ நின்ருன் ஈசுவரன். [3]ஆனாலும், பிரிந்தது அவனை ஆகையாலே, அது தன் காரியம் செய்தன்றி நில்லாதே அன்ரே? ஆகையாலே, [4]ஆற்ருமை மீதூர்ந்து, செல்வத்திலே பேராசையுள்ள ஒருவன் கிழிச் சீரையைக் கெடுத்தால் அதனேடு போலியான முடிகளை எல்லாம் அவிழ்த்து அவிழ்த்துப் பார்க்குமாறு போன்று, அவனேடு ஒத்த பொருள்களையும் அவனேடு சம்பந்தப்பட்ட பொருள்களோடு ஒத்த பொருள்களையும் அகப்பட அவனுகக் கொண்டும், சம்பந்தப்பட்ட பொருள்களாகக் கொண்டும் மயங்கிக் கிட்டிப் பார்த்து அவன் அன்றிக்கே

---

1. ‘மேல் திருவாய்மொழியில்’ என்று தொடங்கும் வாக்கியம், இத் திருவாய்மொழியின் கருத்து.

2. மேல் திருவாய்மொழியில் எல்லையில்லாத பிரீதியோடு செல்ல, இத் திருவாய்மொழியில் பிச்சு ஏறியதற்கு அடி ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் ‘இவர்க்கு’ என்று தொடங்கி. நிரவதிகம் - தனக்குமேல் ஒன்றில்லாதது; எல்லையில்லாத என்பது கருத்து. அரையாறு படுத்தல் - குறையச்செய்தல்.

3. பொறுக்கும்படி செய்கைக்காக நெகிழநின்ருன் ஈசுவரன் என்னுமிடம் இவர் அறிந்திருந்தும் துக்கப்படுவான் என்? என்னும் வினவிற்கு விடை அருளிச்செய்கிருர் ‘ஆனாலும்’ என்று தொடங்கி. ‘ஆனாலும்’ என்றது, பொறுக்கும்படி செய்கைக்காக வந்த பிரிவேயாகிலும் என்றபடி.

4. ‘ஆற்ருமை மீதூர்ந்து’ என்னுமிதனை, பின்னே வருகின்ற ‘நோவுபட்டுச் செல்லுகிறது’ என்றதனேடு கூட்டி முடிக்க. கிழிச்சீரை - பணப்பை. ‘அவனேடு ஒத்த பொருள்கள்’ என்றது, “கரும்பெருமேகங்கள்” “உருவுடைவண்ணங்கள்”, “விரும்பிப் பகவரைக் காணில்”, என்பன போன்று வரும் பாசுரங்களைத் திருவுள்ளம்பற்றி. ‘அவனேடு சம்பந்தப்பட்ட பொருள்

ஒழிந்தால் மீளவும் மாட்டாதே நோவுபட்டுச் செல்லுகிறது. [1]"வைப்பாம் மருந்தாம்" என்னும்படியே, இவர்க்குச் சேம நிதி அன்றோ அவன். [2]"பிராட்டியைத் தேடுவதில் நோக்க முடைய பெருமாள் ஓரிடத்தில் சுற்றும் முகத்தைத் திருப்பி மேலே பார்க்கிறார்; ஓரிடத்தில் தன் வலிமையால் நாலு பக்கங் களிலும் சுழலுகிறார்; ஓரிடத்தில் பித்தனைப்போலத் தோற்று கிறார்" என்கிறபடியே, பிராட்டியைப் பிரிந்த பின்னர் ஆற் றாமையாலே மேல்நோக்கிப் பார்த்து விலங்க சஞ்சரிப்பது, அதுதானும் மாட்டாது ஒழிவது, "ஒரு மரத்தில் நின்றும் வேறு மரத்திலே சென்று கிட்டுவது, மைதிலியைக் கண்டீர் களோ? என்று கேட்பது, ஆணாறு பெண்ணாறுகள் ஒன்று இன்றிக்கே தேடுவதாய்" அவர் பட்டாற்போலே இவளும் அப்படியே படுகிறாள் இப்போது. இப்படி நோவுபடுகிற இவள் நிலையை நினைத்த திருத்தாயார், இவள் படுகிற பாடுகளையும் இவள் சொல்லுகிற வார்த்தைகளையும் சொல்லி, இது கண்டு தான் பொறுக்கமாட்டாமல் நோவுபடுகிற படியையும் சொல் லிக் [3]கைவாங்குமளவாக, அவன் வந்து முகங்காட்டித் தேற்று விக்கத் தரித்ததாய்த் தலைக்கட்டுகிறது இத்திருவாய்மொழி.

---

களோடு ஒத்த பொருள்கள்' என்றது, "கோமளவான்கன்று", "ஆய்ச்சியர் வெண்ணெய்கள்", "வாய்த்த குழலோசை" என்பன போன்று வருகின்ற பாசுரங்களைத் திருவுள்ளம்பற்றி. அவனோடு சம்பந்தப்பட்ட பொருள்களோடு ஒத்த பொருள்களைத் தேடுகிறதற்குக் கருத்து, இவர் பகவானையும் பாகவதர் களையும் உத்தேஶ்யராக நினைத்திருக்கு மவராகையாலே, பகவானைப் பிரியு மிடத்துப் பாகவதர்களோடு கூடியாகிலும் தரிக்கலாம் என்று தேடுகிறார் என்பது.

1. அவன்தான் இவர்க்குச் செல்வமாவானோ? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் "வைப்பாம்" என்று தொடங்கி. இது, திருவாய் மொழி. 1. 7 : 2.

2. இப்படி நோவுபட்டார் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'பிராட்டியை' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. ஆரண்ய. 60 : 35.

3. 'கைவாங்குமளவாக' என்றது, "என்செய்கேன்வல்வினையேனே" என்ற பாசுரப் பகுதியைத் திருவுள்ளம்பற்றி. 'அவன் வந்து முகங்காட்டித் தேற்றுவிக்க' என்றது, "வல்வினை தீர்க்குங் கண்ணனை" என்ற பாசுரத் தைத் திருவுள்ளம்பற்றி.

366.

மண்ணை இருந்து துழாவி
வாமனன் மண்ணிது என்னும்
விண்ணைத் தொழுதவன் மேவும்
வைகுந்தம் என்றுகை காட்டும்
கண்ணை உண்ணீர் மல்கநின்று
கடல்வண்ணன் என்னும் அன்னே! என்
பெண்ணைப் பெருமயல் செய்தார்க்கு
என்செய்கேன் பெய்வளை யீரே!

பொ - ரை:—அணிந்த வளையல்களையுடைய பெண்காள்! இருந்து பூமியைத் துழாவி இது வாமனனுடைய பூமியாகும் என்பாள்; ஆகாயத்தை நோக்கித் தொழுது அவன் எழுந்தருளியிருக்கின்ற பரம பதம் என்று கைகாட்டுவாள்; கண்களில் நீர் பெருகும்படி நின்று கடல் போன்ற நிறத்தையுடையவன் என்பாள்; ஐயோ! என்னுடைய பெண்ணைப் பெரிய மயக்கத்தை அடையச் செய்தவர்க்கு எதனைச் செய்வேன்?

வி - கு:—என்னும் காட்டும் என்னும் என்பன: செய்யும் என் முற்றுக்கள். கண்ணை என்பதில், ஐகாரம் அசைநிலை. உருபு மயக்கமாகக் கோடலும் அமையும். அன்னே என்பது, அந்தோ என்னும் பொருளைக் காட்டுவதோர் இடைச்சொல். "அன்னேயோ அன்னேயோ வா கொடியேற் கடுத்தாள் அரக்கர் வேந்தன், பின்னேயோ" (கம். உயுத். இராவணன் வதைப். 238.) என்றவிடத்தும் 'அன்னே' என்பது இப் பொருளதாதல் காணலாகும்.

இத்திருவாய்மொழி அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

ஈடு:—முதற்பாட்டு. [1] வினவ வந்தவர்களுக்குத் தன்மகள் செய்தியைக் கூறுகின்ற தாயானவள், 'இப்படி இவளை எம்பெருமான் பிச்சு ஏற்றினான்; நான் இதற்கு என்செய்வேன்?' என்கிறாள்.

மண்ணை இருந்து துழாவி - [2] "மண்முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை" என்கிறபடியே, அவன் திருவடிகளுக்கு உட்

---

1. பாசுரம் முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.

2. திருநெடுந்தாண்டகம். 5.

பட்ட பூமிப்பரப்பு அடைய இருந்து துழாவாநிற்கும். அவன் சம்பந்தங் கொண்டே இதனை விரும்புகிறது; [1]அது ஓரிடத்திலிருப்பது அன்றே? என்றது, எங்கும் இருப்பது என்றபடி. 'முன்பு தோற்றுகின்ற சோலை என் என்புது?' என்று பெருமாள் கேட்டருள, [2]"பண்டு 'சித்தாஸ்ரமம்' என்று ஸ்ரீவாமனன் எழுந்தருளியிருந்த தேசமாயிற்று; அவன் எழுந்தருளின பின்பு அவன் பக்கல் பக்தியாலே விடமாட்டாமே அம் மண்ணை மோந்துகொண்டு கிடப்பேன்" என்றான் அன்றோ விசுவாமித்திரன். [3]"விஷ்ணுபகவான் மனித உருவத்தோடு சக்கரவர்த்தித் திருமகனாய் இராமன் என்ற பெயரோடு இப் பூமியில் சஞ்சரித்தார்" என்றான் திருவடி. ஆகையாலே, அவன் பக்கல் ருசியுடையார் விடமாட்டார்கள் அன்றோ? இருந்து - [4]இவ் விருப்புக்கு முன் கணத்தில்

---

1. அது - சம்பந்தம்.

2. இப்படி அவன் சம்பந்தம்கொண்டு விரும்பினார் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பண்டு' என்று தொடங்கி. இது, ஸ்ரீ ராமா. பால. 29 : 22. விஸ்வாமித்திரமுனிவர் ஸ்ரீ ராமனைப் பார்த்துக் கூறியது.

தங்கள் நா யகரிற் றெய்வம் தவம்பிறி திலவென் றெண்ணும்
மங்கைமார் சிந்தை போல தூயது மற்றுங் கேளாய்
எங்கள் நான் மறைக்கும் தேவ ரறிவிற்கும் பிறர்க்கும் எட்டாச்
செங்கண்மா லிருந்து மேனாள் செய்தவம் செய்த தன்றே.

என்ற கம்பராமாயணச்செய்யுள் இங்கு ஒருபுடை ஒப்புநோக்கலாகும்.

(பாலகா. வேள்வி. 16.)

3. பாரதம். ஆரணியபருவம். இது, வீமசேனனைப் பார்த்து அநுமான் கூறியது. 'இராமன் என்ற பெயரோடு இப்பூமியில் சஞ்சரித்தார்' என்றதனானே பெருமாள் ஸஞ்சரித்த விடத்தை விடமாட்டாமையால் இங்கேயே தங்கியிருக்கிறேன் என்பது திருவடியின் உட்கோள். இச் சுலோகப் பொருளோடு

அந்த வார்சிலை இராமனுக் கடிமையா யென்றும்
சிந்தை யாலவன் திருப்பதம் சிந்தைசெய் பவனும்
முந்தை யாகிய வாயுவுக் குற்பவித் தவனும்
இந்த வாழ்வுடை அநுமனே என்றனன் னிகலோன்.

என்ற செய்யுள் ஒருபுடை ஒப்பு நோக்கலாகும். (வில்லிபா. ஆரணிய. புட்பயாத். 36.)

4. "இருந்து" என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'இவ்விருப்புக்கு' என்று தொடங்கி,

நிற்றல் நடத்தல் கிடத்தல் முதலியவற்றில் ஒரு நியதி இன்றிக்கே நோவுபட்டமை தோன்றுகிறது. துழாவி - இதனுல், பித்தத்தால் பீடிக்கப்பட்டவன் சந்தனக் குழம்பில் நின்றும் கைவாங்க மாட்டாததைப் போன்று இம் மண்ணை [1] விடமாட்டாமையும் தோன்றுகிறது. விட்டுக் கைவாங்கினுல் விரஹ அக்நியினுலே வேம். [2] தாங்கள் தெளிந்திருந்தார்களாய் 'இவள் மயங்கினுரைப் போன்று செய்கின்றது என் என்புது?' என்பர்களே, அவர்களை 'நீங்கள் மயங்கினீர்களோ?' என்னுமாயிற்று இவள் என்கிருள் மேல்: வாமனன் மண் இது என்னும் - வாமனன் மண் அன்றே இது? என்னுநின்ருள். [3] 'திருவடியிலே பிறந்தததனுலுண்டான வாசனையையுடைய பூமி அன்றே?' என்னுநின்ருள் என்றபடி. [4] "பூமியானது வாசனையையுடையது" என்றேயன்றே நாட்டில் பிரசித்தி; "சர்வகந்தஃ" என்கிற பெருமானுடைய சம்பந்தமேயாயிற்று

---

1. 'விடமாட்டாமையும்' என்ற உம்மை, 'சம்பந்தங்கொண்டு விரும்புதலை'த் தழுவுகிறது. பித்தத்தால் பீடிக்கப்பட்டவர் சந்தனக்குழம்பிலே கைவைக்குமாறுபோன்று விரஹாக்னி நலியாமைக்கு அவனது சம்பந்தம் உள்ளதொன்றிலே கையை வைக்கிருள் என்றவாறு. இதனுல், சம்பந்தம் கொண்டு விரும்பும் அளவன்றிக்கே, தனக்குத் தாரகமாக இருத்தலினுலும் விரும்புகின்ருள் என்றபடி.

2. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிருர் 'தாய்கள்' என்று தொடங்கி. என்றது, வாமனன் சம்பந்தங்கொண்டு துழாவுகிற என்னை 'மயங்கினவள்' என்று சொல்லுகிற நீங்களேயன்றே மயங்கினவர்கள் என்கிருள் என்றபடி.

3. திண்சுட ராழி யரங்கேசர் திக்குத் திருச்செவியில்
மண்கழ லில்சத்ய லோகம் சிரத்தில் மருத்துயிரில்
தண்கதி ருள்ளத்தில் வானுந்தி யில்செங் தரணி கண்ணில்
ஒண்கன லிந்திரன் வாழ்முகப் போதி லுதித்தனரே.

என்ருர் திவ்யகவியும்.

4. பூமிக்கு வாசனை இயற்கையாக இருக்கவும், திருவடிகளினுடைய சம்பந்தத்தால் வந்த வாசனை என்று இவளுக்கு நினைவு என்கிருர் 'பூமியானது' என்று தொடங்கும் இரண்டு வாக்கியத்தாலே

விண்ணுளி தழுவுங் காற்று மேவுறும் ஒலியு மூறும்
கண்ணுமால் ஒலியு மூறும் நலந்திகழ் உருவும் செந்தீத்
தண்ணறல் ஒலியு மூறு முருவமுஞ் சுவையும் சாரும்
மண்ணிடை நான்கி ேைடு மணத்தையும் புணர்ந்து மன்னும்.

என்பது பாகவதம். (சுகமுனி தத்துவமுரைத்த அத்தியாயம்)

இவள் அறிவது. [1] அவன் இரந்து தனக்கு ஆக்கிக்கொண்ட தன்றோ என்னாநின்றாள்; [2] அவனதானால் இந்திரனுக்குக் கொடுத்ததுபோன்று கொடுக்கவேண்டாங்காணும் இவளுக்கு, அவனதானபோதே இவளதாயே இருக்கும். [3] 'அவனதன்று காண்' என்று இவளை மீட்க ஒண்ணாதே? பிரத்யக்ஷத்திலும் உங்களுக்குச் சந்தேகம் தொடராநின்றதோ? என்கிறாள் என்பாள் '**இது என்னும்**' என்கிறாள். ஆயின், நேரே காண்கின்றாளாயின் அநுபவிக்கத் தடை என்? எனின், இறந்த காலத்திலுள்ளதும் நிகழ்காலத்திலுள்ளதைப் போன்று தோன்றுகின்ற தித்தனை போக்கி, மண் அளந்தவனை இப்போது காண ஒண்ணாதே?

விண்ணைத் தொழுது அவன் மேவும் வைகுந்தம் என்று கைகாட்டும் - [4] இறந்தகாலத்திலுள்ளதும் நிகழ்காலத்திலுள்ளதைப்போன்று தோன்றுமாறு போன்று, வேறு உலகத்தின் செயலும் இங்கே தோன்றாநின்றது. நமக்கு அவ்விடத்திலும் இவ்விடம் அணித்தாயிருக்குமாறு போன்று, அவர்களுக்கு [5] "அக்கரை, இக்கரை" என்னும்படி இவ்விடத்திலும்

---

1. திரிவிக்கிரமனது அன்றோ மண்? "வாமனன் மண்" என்கிறது என்னை? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவன் இரந்து' என்று தொடங்கி.

2. அவன் தனக்கு ஆக்கிக்கொண்டால் இவளுக்குப் பயன் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவனதானால்' என்று தொடங்கும் இரண்டு வாக்கியத்தால்.

3. 'அவனதன்றுகாண்' என்று தொடங்கி மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார்.

4. "விண்" என்பதற்குப் பரமபதம் என்றும், ஆகாசம் என்றும் இரண்டு பொருள் அருளிச்செய்கின்றார். பரமபதம் என்று பொருளானபோது பரமபதத்தைக் கண்ணால் காணக் கூடுமோ? "கைகாட்டும்" என்கிறது என்? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் 'இறந்தகாலத்திலுள்ளதும்' என்று தொடங்கி.

5. "அக்கரை யென்னு மனத்தக் கடலு ளழுந்திஉன் பேரருளால்
இக்கரை யேறி இளைத்திருந் தேனை அஞ்சேல்என்று
[கைகவியாய்"

என்பது பெரியாழ்வார் திருமொழி.

அக்கரை - சம்சாரம். இக்கரை - பரமபதம். அப்படிக் கண்ட பேர் உளரோ? என்ன, 'ஆர்ஷ்டிஷேணன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். ஆர்ஷ்டிஷேணன் என்பவர் ஒரு முனிவர். 'சிலர்' என்றது, தருமபுத்திரனை. தருமபுத்திரனுக்கு அம்முனிவர் தமது ஆஸ்ரமத்திலிருந்து பரமபதம் காட்டினார் என்று சரிதம் கூறும்.

அவ்விடம் அணித்தாய்த் தோன்றும். ஆர்ஷ்டிஷேணன் ஆஸ்ரமத்திலே நின்று பரமபதம் கண்டார்களே அன்றோ சிலர். என்னோடே கலந்து அகன்ற இடம்போலே பிரிவோடே கூடி இராமல் அவன் நித்தியவாசம் செய்யும் தேசம் என்பாள் '**அவன்மேவும் வைகுந்தம்**' என்னும் என்கிறாள். '**மேவும் வைகுந்தம்**' என்பதில் அவதாரத்திற்கு வேறுபாடும் தனக்கு இழக்கவேண்டாமையும் தோன்றும். அவன் ஒரே தன்மையனாய் இருக்கின்ற இருப்பை நினைத்து, அவ்விருப்பிலும் தாம் அநுபவிக்கப் பெறாமையாலே நடுவே தளர்ந்து,சொல்லப்புக்க வார்த்தையைத் தலைக்கட்டமாட்டாதே ஹஸ்தமுத்திரையாலே தலைக்கட்டாநின்றாள் என்பாள் '**கைகாட்டும்**' என்கிறாள். 'பரமபதத்திலே நித்தியசூரிகள் எப்பொழுதும் அநுபவித்துக் கொண்டிருக்க, அவர்களைப் போன்ற சம்பந்தம் நமக்கும் உண்டாயிருக்க நாம் இழப்போமே!' என்று தளர்ந்து தொடங்கின வார்த்தையை தலைக்கட்டமாட்டுகின்றிலள் என்றபடி. அன்றிக்கே, பெயர் ஒற்றுமையாலும் ஊர்த்துவ ஆகாரத்தாலும் இந்த ஆகாசத்தைப் பரமபதம் என்று தொழாநிற்கும் என்னலுமாம்.

**கண்ணை உள் நீர் மல்க நின்று** - அவதாரம்போல்அன்றிக்கே என்றும் ஒக்க அநுபவிக்கலாம்படி இருக்கிற பரமபதத்தில் இருப்பிலும் நான் இழப்பதே! என்று கண்ணீர் மல்காநின்றாள். **கடல்வண்ணன் என்னும்** - ஒரு கருங்கடல் வடிவுகொண்டு செவ்வே இருந்தாற்போலே அங்கு இருக்கும் இருப்பைச் சொல்லாநின்றாள்; அவ் வடிவினைக் காட்டிக் காணும் இவளை அவன் பிச்சு ஏற்றினான்; இவளும் தன்னைப் பிச்சு ஏற்றினபடியே [1] சொல்லா நின்றாள் என்றபடி. **அன்னே** - 'அம்மே' என்று, துக்கத்தின் மிகுதியைக் காட்டுவதொரு இடைச்சொல். மன்னே என்னலுமாம். **என் பெண்ணை** - [2]"யுவதியாயும் குமாரியாயும் இருப்பவள்" என்கிறபடியே, கலவியிலும் உட்புக மாட்டாத பருவமாயிற்று இவளது. பெரு

---

1. 'ஏற்றின படி என்றது, சிலேடை; ஏற்றிய திருமேனி என்றும், ஏற்றியவிதம் என்றும் பொருள்.

2. மேல் திருப்பாசுரத்தில் "சிறுமான்" என்றதனைத் திருவுள்ளம் பற்றி பாவம் அருளிச்செய்கிறார்.

மயல் செய்தார்க்கு - [1]தம்மைக் கலந்து பிரிந்தார் படும் வியசனத்தளவும் அன்று காணும் இவளைப் படுத்தியது என்பாள் 'பெருமயல்' என்கிறாள். அவனை ஒத்த பொருள்களைக் கண்டு கலங்கினாள் இவளே அன்றோ? என் செய்கேன் - [2]இவள் ஆற்றாமை தீர அவனை வரச் செய்யவோ? 'அவன் வருமளவும் கிரமத்திலே அடையலாம் என்று பார்த்து ஆறி இருக்க வேணுங்காண் என்று இவளைத் தரிப்பிக்கவோ? யாது செய்வேன்? பெய் வளையீரே - இடப்பட்ட வளையையுடையீர்! [3]பெரு வெள்ளத்திலே புறவடி நனையாமலே இருப்பாரைப் போன்று, இவ்வளவிலும் கையும் வளையுமாய் இருப்பதே நீங்கள்! என்பாள் 'பெய்வளையீரே!' என்கிறாள். அன்றிக்கே, நீங்கள் வளை தொங்குகைக்குச் செய்த உபாயத்தைச் சொல்லவல்லீர்களோ? நானும் கைமேல் அநுஷ்டித்துப் பார்க்க என்பாள் அங்ஙனம் விளிக்கின்றாள் என்னலுமாம். (1)

## 367.

பெய்வளைக் கைகளைக் கூப்பிப்
பிரான்கிடக் கும்கடல் என்னும்
செய்யதோர் ஞாயிற்றைக் காட்டிச்
சிரீதரன் மூர்த்தி ஈதென்னும்
நையும் கண்ணீர் மல்க நின்று
நாரணன் என்னுமன்னேஎன்
தெய்வ உருவிற் சிறுமான்
செய்கின்ற தொன்றறி யேனே.

---

1. 'தம்மைக் கலந்து பிரிந்தார்' என்றது, சூடிக்கொடுத்தசுடர்க்கொடியையும் சீதாபிராட்டியையும் சுட்டுகிறது. அவர்கள் இருவரும் இப்படிக் கலங்கவில்லையே என்று கருத்து. இவளுக்கு வேறுபாடு ஏது? என்ன அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவனை ஒத்த' என்று தொடங்கி.

2. அவன் ஸ்வதந்திரனாகையாலும், இவள் "காதல் கடலின் மிகப் பெரிதால்" என்கிறபடியே, காதலையுடையவளாகையாலும் இரண்டும் தன்னால் இயலா என்பது கருத்து.

3. "பெய்வளையீரே!" என்று விளிக்கின்றவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார். 'பெருவெள்ளத்திலே' என்று தொடங்கி. தொங்குகை - தங்குதல். 'கைமேலே' என்றது, ப்ரத்யக்ஷோக்தி.

பொ - ரை :—வளையல்களை அணிந்த கைகளைக் குவித்துப் பெருமான் கிடக்கின்ற கடல் என்பாள் ; ஒப்பற்ற சிவந்த சூரியனைக் காட்டித் திருமகள்கேள்வனுடைய உருவம் இது என்பாள் ; கண்களில் நீர் பெருகும்படி நின்று வருந்துவாள்; நாராயணனே! என்பாள்; அந்தோ ! தெய்வத்தன்மை பொருந்திய உருவத்தையுடைய சிறிய மான்போன்ற என்னுடைய பெண்ணானவள் செய்கின்ற காரியங்களைச் சிறிதும் அறிகின்றிலேன் என்கிறாள்.

வி - கு :—கையும் : முற்று. எச்சமுமாம். ' அன்னே ' என்பதற்கு முன்னர் உரைத்தாங்கு உரைக்க. மான் : உவமையாகுபெயர். ஒன்று - சிறிது என்னும் பொருளையுடையது. எண்ணுப்பெயருமாம்.

ஈடு :—இரண்டாம்பாட்டு. [1]'தெய்வ உருவினையுடைய இவள் செய்கின்றது ஒன்றும் தெரிகின்றதில்லை' என்கின்றாள்.

பெய்வளைக் கைகளைக்கூப்பி - [2] அவனைத் தொழுவித்துக் கொள்ளும் கருவியையுடையவள் தான் தொழாநின்றாள். அவனைத் தொழுவித்துக் கொள்ளுதற்குப் போலே காணும் கையில் வளை இட்டது. கையில் பிரஹ்மாஸ்திரம் இருக்கப் படும் பாடே இது. வீரக்கழலோடே பட்டுக் கிடப்பாரைப் போலே அன்றோ இவள் கிடக்கின்ற கிடை என்கிறாள் என்றவாறு. ஆயின், பிரிந்திருக்கும் நிலையில் கைகளில் வளையல்கள் உளவோ? எனின், ' கடல்வண்ணன் ' என்றவாறே கழன்ற வளையல்கள் ஒழியச் சரிந்த வளையல்கள் பூரித்தன காணும். இங்ஙனம் நோவுபடாநிற்கச்செய்தே கடலோசை வந்து செவியில் படுமே! பிரான் கிடக்கும் கடல் என்னும் - 'திருப்பாற்கடலிலே சாய்ந்தால் நம் வருத்தத்திற்குக் கடுக உதவ ஒண்ணாது' என்று, அணித்தாக [3] இந்தக் கடலிலே சாய்ந்தருளின மஹோபகாரகன் என்பாள். இப்படி இரவெல்லாம் கடல் ஓசையோடே அலந்து, விடிந்தவாறே சூரியன் வந்து

---

1. "தெய்வ வுருவின் சிறுமான்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "பெய்வளை" என்று வைத்துக் "கைகளைக் கூப்பி" என்கிறவளுடைய மனக் கருத்தை அருளிச்செய்கிறார் 'அவனை' என்று தொடங்கி. 'பிரஹ்மாஸ்திரம்' என்றது, ஈண்டு, வளையல்களை.

3. 'இந்தக் கடல்' என்றது, "நீலக்கடலுள் நெடுங்காலம் கண் வளர்ந்தான்" என்றதனைத் திருவுள்ளம்பற்றியாதல்; இதுவும் கடலன்றோ, இங்கேயும் கிடவானோ? என்றிருக்கிறாள் என்று திருவுள்ளம்பற்றியாதல்.

தோன்றுவானே! செய்யது ஓர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன் மூர்த்தி ஈது என்னும் - உதயகாலத்தில் சூரியனைக் கண்டு ஸ்ரீதரனுடைய வடிவு இது என்பாள். ஆயின், செய்ய ஞாயிற்றைப் பார்த்துத் திருமாலாக மயங்கல் கூடுமோ? அவன் 'கடல்வண்ணன்' அன்றோ? எனின், முழுவதும் ஒத்திருத்தல் வேண்டாதே சிறிது ஒத்திருத்தலே அமையாநின்றதாயிற்று இவள் மயங்குதற்கு. அச்சிறிது ஒப்புமைதான் யாதோ? எனின், ஒளியையும் ஒளியையுடைய பொருளையும் கண்டவாறே, அவளும் அவனுமாக இருக்கும் இருப்பை நினையாநின்றாள். [1]"சூரியனை விட்டுப் பிரியாத ஒளியைப்போன்று ஸ்ரீராமபிரானை விட்டு நான் பிரிந்திரேன்" என்பது பிராட்டியின் வார்த்தை. நையும் - [2]தாய் தந்தையர்கள் சேர இருக்க, அவர்கள் அண்மையிலே பசி எடுத்து வருந்தும் குழந்தைகளைப்போலே வருந்தாநின்றாள். 'புருஷகாரத்தைச் செய்கின்ற பிராட்டி அருகே இருக்கப் பெறாத யான் இனி யார் புருஷகாரமாகப் பெற இருக்கிறேன்?' என்று வருந்தாநின்றாள் என்றபடி.

கண்ணீர் மல்க நின்று - [3]தளர்த்தியின் மிகுதியாலே கண்ணீர் வெள்ளம் இடாநின்றது. நாரணன் என்னும் - [4]'அம்மே!' என்பாரைப்போலே; [5]"ஸ்ரீமந்நாராயணன்" என்று கூடச்

---

1. ஸ்ரீராமா. சுந். 21 : 15.

2. மேலே 'அவனும் அவளுமாக இருக்கும் இருப்பை' என்று அருளிச்செய்ததைத் திருவுள்ளம்பற்றித் 'தாய் தந்தையர்கள்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

3. "நையும்" என்றதனையும் கூட்டி பாவம் அருளிச்செய்கிறார், 'தளர்த்தியின் மிகுதியாலே' என்று தொடங்கி.

4. 'அம்மே என்பாரைப் போலே' என்றது, சம்பந்தத்தைத் தெரிவித்தபடி. நாராயண சப்தத்தினுடைய பொருளைத் தெரிவித்தவாறு. நாராயணன் என்ற பெயரால் பெறப்படுகின்ற நவவித சம்பந்தத்தையும் இங்குக் குறிக்கொள்க.

5. "சிரீதரன்" என்றதனை யடுத்து நாராயணன் என்ற பதத்தை வையாது, "நையும் கண்ணீர் மல்க நின்று" என்றதனைக் கூறி, அதன் பின்னர் "நாராயணன்" என்ற பதத்தை வைத்ததற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'ஸ்ரீமந்நாராயணன்' என்று தொடங்கி. என்றது, பெரியோர்கள் ஒரு வைதிக காரியத்தைச் செய்யும்போது முதலில் கையைக் கழுவிக்கொண்டு பின்னையன்றோ அக் காரியத்தைச் செய்வார்கள்? அப்படியே, இவள் முந்துறக் கண்ணீர்விட்டு, பின்னர் அப்பெயரைச் சொல்லாநின்றாள் என்றபடி.

சொல்லமாட்டாதே தளர்ந்து, கண்ணீராலே கைகழுவி, பின்னர் நாரணன் என்னுநின்றாள். அன்னே - [1] "மைத்ரேய!" என்னுமாறுபோலே, தனக்கு ஓர் ஊற்றங்கோல் தேடுகின்றாள். என் தெய்வ உருவின் - ஒப்புமையுள்ள பொருள்களையும் அவன் சம்பந்தமுள்ள பொருள்களோடு ஒத்த பொருள்களையும் நினைக்க நினைக்க, நித்தியாநுபவம் பண்ணுகின்ற நித்திய சூரிகள் வடிவில் பிறக்கும் [2] ஒளி பிறவாநின்றதாயிற்று இவளுக்கு; ஆதலின், 'தெய்வ உருவின்' என்கிறாள். ஆயின், அவர்களில் இவளுக்கு வாசி உண்டு: சிறுமான் - [3] "புராணா:- பழையர்" என்றும், [4] "விண்ணாட்டவர் மூதுவர்" என்றும் சொல்லுகின்றபடியே, பழையராய் இருப்பார்களே அன்றோ அவர்கள்? செய்கின்றது ஒன்று அறியேனே- இவள் தொடங்குகிறது எது? தலைக்கட்டுகிறது எது? என்று [5] ஒன்றும் தெரிகின்றது இல்லை. (2)

## 368.

அறியும் செந்தீயைத் தழுவி
அச்சுதன் என்னுமெய் வேவாள்
எறியும் தண்காற்றைத் தழுவி
என்னுடைக் கோவிந்தன் என்னும்
வெறிகொள் துழாய்மலர் நாறும்
வினையுடை யாட்டியேன் பெற்ற
செறிவளை முன்கைச் சிறுமான்
செய்கின்ற தென்கண்ணுக் கொன்றே.

---

1. மைத்ரேயர் - ஒரு முனிவர்.

2. தெய்வ சப்தம் "திவு - க்ரீடா" இத்யாதி தாதுவிற் சொல்லுகிற காந்தியைச் சொல்லுகிறது. தெய்வவுரு - காந்தியையுடைய வடிவு.

3. யஜுர். அச்சித்ரம்.

4. திருவிருத்தம். 2. இவள் சிறுமி ஆசையாலே கலங்குகிறாள் என்றபடி.

5. சந்தோஷமும் துக்கமும் உடையவளாயிருத்தலின், ஒன்றும் தெரிகின்றதில்லை என்கிறாள். "தெய்வவுரு" என்று காந்தியைச் சொல்லுகையாலே சந்தோஷம். "பெய்வளை" என்று பலகாலும் கழலுகின்ற வளை என்கையாலே துக்கம்.

பொ - ரை :—சுடும் தன்மையது என்று எல்லாராலும் அறியப் படுகின்ற சிவந்த நெருப்பைத் தழுவி அச்சுதனே! என்று சொல்லு வாள்; உடம்பு வேகின்றிலள்; வீசுகின்ற குளிர்ந்த காற்றைத் தழுவி என்னுடைய கோவிந்தனே! என்பாள்; வாசனையையுடைய திருத் துழாய் மலரின் நறுமணம் வீசாநின்றாள்; மஹாபாவியாகிய யான் பெற்ற செறிந்த வளையல்கள் பொருந்திய முன்கையினையுடைய சிறிய மான்போன்ற என் பெண்ணானவள் செய்கின்ற செயல் என் கண் களுக்கு ஒன்றோ? அன்று; பல என்கிறாள்.

வி - கு :—பெற்ற சிறுமான் எனக. செய்கின்றது : வினையாலணை யும் பெயர். 'ஒன்றே' என்பதில் ஏகாரம் : எதிர்மறை.

ஈடு :—மூன்றாம்பாட்டு. [1] இவளுடைய அதியான செயல் களைச் சொல்லப்புக்கு, அவற்றிற்கு எண் இல்லை என்கிறாள்.

அறியும் - 'ஒன்றால் அவிக்க ஒண்ணாது, எரிக்குந்தன்மை யது' என்று எல்லாராலும் அறியப்படுகின்ற. அன்றிக்கே, இவள்தானும் இப்படி மயங்குவதற்கு முன்பு எரிக்குந்தன்மை யது என்று அறிந்து நீக்கிப் போந்தது என்னுதல். செம் தீயைத் தழுவி - எரிக்கின்ற நெருப்பைத் தழுவாநின்றாள்; 'மந்திரம் மருந்து முதலியவைகளால் தடைசெய்யப்பட்ட ஆற் றலையுடையது' என்றுதான் தழுவுகிறாளோ? [2] "ஒளிகளின் நிலையான திரள்" என்கிறபடியே, ஒளியுடைமையையே பார்த்துத் தழுவாநின்றாள். அன்றிக்கே, [3] "பொரு நீர்க் கடல் தீப்பட்டு எங்கும், திகழும் எரியொடு செல்வது ஒப்ப" என்னு மாறுபோன்று, இப்போது தனக்காக ஒரு மாணிக்கப்படி சாத்தி அணைக்கைக்காக வந்தான் என்று பார்த்துத் தழுவு கின்றாள் என்னுதல். அச்சுதன் என்னும் - [4] உடைமையை

1. "இவள் செய்கின்றது என் கண்ணுக்கு ஒன்றே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'அதி' என்பது, மிகுதியைக் காட்டுவதோர் இடைச்சொல்.

2. செந்தீக்கு அச்சுதனோடே ஒப்புமை இருந்ததானே தழுவவேண் டும்? எவ்வகையாலே ஒப்புமை? என்ன, அதற்கு இரண்டுவகையாக விடை அருளிச்செய்கிறார் "ஒளிகளின் நிலையான திரள்" என்று தொடங்கி. இது, விஷ்ணுபுரா. 1. 9 : 63.

3. திருவாய்மொழி. 8. 9 : 3. மாணிக்கப்படி - இரத்தினங்கி. இரத்தி னத்தாலாய சட்டை.

4. அச்சுதன் என்பதற்கு, அடியார்களை நழுவவிடாதவன் என்பதும் பொருளாதலின், அதனைத் திருவுள்ளம்பற்றி 'உடைமையை' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

மங்கக் கொடாமைக்காக வந்தானே! என்பாள். மெய்வேவாள் - இவள்தான் மயக்கத்தாலே கட்டிக் கொள்ளுகிறாள்; அந்நெருப்பு தன் காரியம் செய்யாது ஒழிவான் என்? என்னில், [1] "அந்த விராட்புருஷனுடைய முகத்திலிருந்து இந்திரனும் அக்நிதேவனும் உண்டானார்கள்" என்கிறபடியே, அச்சுதன் முகத்தாலே வந்தது ஆகையாலே எரித்திலது. அன்றிக்கே, "செந்தீயைத் தழுவி **அச்சுதன் என்னும்** மெய்வேவாள்" என்கிறாள் ஆகையாலே, [2] இவளுடைய அக்நிஸ்தம்பந மந்திரம் இருக்கிறபடி என்னுதல். அன்றிக்கே, "[3] அந்தப் பகவானை நினைப்பதனால் உண்டான சந்தோஷத்தோடு கூடினவனாய்" என்கிறபடியே, அவனுடைய நினைவாலே நனைந்திருக்கையாலே சுட மாட்டுகிறது இல்லை என்னுதல். [4] "தந்தையே! இந்த நெருப்பு, காற்றாலே தூண்டப்பட்டதாக இருப்பினும் இங்கு என்னைக் கொளுத்த இல்லை; நான் நான்கு பக்கங்களிலும் எல்லாத் திக்குக்களிலும் தாமரைப்பூக்களாகிற விரிப்பினால் பரப்பப்பட்டனவாயும் குளிர்ந்திருப்பனவாயும் பார்க்கிறேன்" என்றான் அன்றோ பிரஹ்லாதாழ்வான். அன்

---

1. நெருப்புச் சுடாமைக்கு நான்குவகையான காரணங்களை அருளிச்செய்கிறார், 'அந்த விராட்புருடனுடைய' என்றது முதல் 'ஆதலின் எரித்திலது' என்றது முடிய. "அந்த விராட்புருடன்" என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகத்தோடு

> திண்சுட ராழி அரங்கேசர் திக்குத் திருச்செவியில்
> மண்கழ லிற்சத்ய லோகஞ் சிரத்தின் மருத்துயிரில்
> தண்கதி ருள்ளத்தில் வானுந் தியில்செந் தரணிகண்ணில்
> **ஒண்கன லிந்திரன் வாழ் முகப் போதி லுதித்தனரே.**

என்ற திருவரங்கத்துமாலைச் செய்யுளை ஒப்புநோக்குக.

'அச்சுதன் முகத்தாலே' என்றது, சிலேடை; அச்சுதன் காரணத்தால் என்றும், அச்சுதனுடைய முகத்திலே என்றும் பொருள்.

2. இதனால், சப்தமாத்திரமே போதுமாயிற்று வேகாமைக்கு என்றபடி.

3. விஷ்ணுபுரா. 1. 17 : 39. இங்கு,

> துப்பி னாற்செய்த கைகொடு கால்பெற்ற துளிமஞ்சு
> ஒப்பி னான்தனை நினைதொறும் நெடுங்கண்க ளுகுத்த
> அப்பி னால்நனைந் தருந்துய ருயிர்ப்புடை யாக்கை
> வெப்பி னாற்புலர்ந் தொருநிலை யுறாத மென்துகிலாள்.

என்ற கம்பராமாயணச்செய்யுள் நினைவிற்கு வருகின்றது. (காட்சிப். 8.)

4. விஷ்ணுபுரா. 1. 17 : 47. இது, அவன் நினைவாலே சுடாதிருப்பதற்குப் பிரமாணம்.

றிக்கே, [1] "ஶீதோபவ — தண்ணிது ஆகக்கடவாய்" என்று ரும் இல்லை அன்றே? "தண்ணிதாகக் கடவாய்" என்றவள் தானே இங்ஙனம் செய்கிறாள்; ஆதலின், எரித்திலது என்னுதல். ஆக, [2] பிரிவு காலத்தில் வாயு புத்திரனைத் தழுவுகை நாயகனுக்கும் நாயகிக்கும் பணி என்றபடி. [3] "ஹநுமானுடைய திருவடிக்கு என்னால் கொடுக்கப்பட்ட இந்த ஆலிங்கனமானது" என்றதனால் நாயகன் தழுவினமை உணரலாகும். [4] "வாயுவினின்றும் நெருப்பு உண்டாயிற்று" என்றதனால், நெருப்பு காற்றின் புத்திரனுதல் உணர்தல் தகும்.

எறியும் தண் காற்றைத் தழுவி - வீசுகிற குளிர்ந்த காற்றைத் தழுவி. [5]விரஹ நோயினரைச் சுடுந்தன்மையதான

---

1. ஸ்ரீராமா. சுந். 53: 28. இதனால், தன் சக்தியாலே வேவாதிருந்தாள் என்பதனைத் தெரிவித்தபடி.

தாயே யனைய கருணையான் துணையே ஏதுந் தகைவில்லா
நாயே யனைய வல்லரக்கர் நலியக் கண்டால் நல்காயோ
நீயே உலகுக் கொரு சான்று நிற்கே தெரியுங் கற்பதனில்
தூயேன் என்னில் தொழுகின்றேன் எரியே அவனைச் சுடல் என்றாள்.

என்றார் கம்பநாட்டாழ்வார்.

2. "செந்தீயைத்தழுவி" என்றதற்குச் சிலேடையாக அருளிச்செய்கிறார் 'பிரிவுகாலத்தில்' என்று தொடங்கி. வாயுபுத்திரன் - நெருப்பும் அநுமானும்.

3. வாயுபுத்திரனை நாயகன் தழுவியதற்குப் பிரமாணம் "ஹநுமானுடைய" என்று தொடங்குவது. இது, ஸ்ரீராமா. யுத். 1: 13.

ஆய காலையின் அமரர் ஆர்த்தெழத்
தாயின் அன்பனைத் தழுவி னன்தனி
நாய கன்பெருந் துயர நாமறத்
தூய காதல்நீர் துளங்கு கண்ணினன்.

என்றார் கம்பநாட்டடிகள். (உயுத். களியாட். 109.)

4. வாயுவின் புத்திரன் நெருப்பு என்றதற்குப் பிரமாணம் அருளிச்செய்கிறார் 'வாயுவினின்றும்' என்று தொடங்கி. இது, தைத்திரீய உபநிடதம்.

தலைமைசால் சிறப்பு வாய்ந்த தாமத அகங்கா ரத்தின்
ஒலிஎழும் ஒலியிற் றோன்று மோங்குவான் வானிற் றோன்றும்
மலியுமுறு ஊற்றிற் றோன்றும் வளிஎறி வளியிற் றோன்றும்
நிலவொளி ஒளியி னின்று நிமிர்சுடர்க் கனலி தோன்றும்.

என்பது பாகவதம். (சுகமுனி தத்துவமுரைத்த அத்.)

5. "மல்லிகை கமழ்தென்றல் ஈரு மாலோ"
"வாடைதண் வாடை வெவ் வாடையாலோ"

என்பன திருவாய்மொழி. 9. 9.

காற்றும் சுட்டிலது; இதுவன்றோ ஆச்சரியம்! என்பாள் 'எறியும் தண் காற்றை' என்கிறாள். [1] "பிராணனிடத்தில் காற்றுத் தோன்றியது" என்கிறபடியே, இக்காற்றும் அவனுடைய பிராண பூதமாயிருப்பது ஒன்றே அன்றோ? ஆகையாலே, அதுவும் சுட்டதில்லை. என்னுடைக் கோவிந்தன் என்னும் - [2] "நீங்கி ஒரு கணநேரமும் உயிர் பிழைத்திருக்கமாட்டேன்" என்கிறபடியே, பிரிவில் பொறுக்கவல்லனோ? அவன் உண்மை பிறர் பொருட்டாக அன்றோ இருப்பது என்று சொல்லாநிற்கும். அன்றிக்கே, கன்று மேய்த்த வடிவோடே என் துன்பம் தீர அணைக்க வந்தான் என்று சொல்லாநின்றாள் என்னுதல். [3] உலகத்தார் படியும் அன்று; விரஹநோயினர்கள் படியும் அன்று; உலகத்தார்படியாகில் நெருப்புச் சுடவேணும்; விரஹநோயினர்கள் படியாகில் காற்றுச் சுடவேணும்; இரண்டும் கண்டிலோம் என்கிறாள்.

வெறி கொள் துழாய் மலர் நாறும்- [4] "கோவைவாயாள்" என்ற திருவாய்மொழியிற் கூறிய கலவியால் வந்த பரிமளம் [5] பத்துஎட்டுக் குளிக்கும் நிற்குமே அன்றோ? அத்தாலேயாதல்;

1. புருஷசூக்தம். 122-ஆம் பக்கம், கீழ்க்குறிப்புப் பார்க்கவும்; "திண்சுடராழி". 'பிராண பூதமாய்' என்றது சிலேடை; பிராணனாய் என்றும், பிராணனிடத்தில் தோன்றியது என்றும் பொருள்.

2. ஸ்ரீராமா. சுந். 66 : 10. "கோவிந்தன்" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'அவனுண்மை' என்று தொடங்கி. கோவிந்தன் - ஸ்ரீராமபிரான். "கோவிந்தன்" என்பதற்கு வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. இங்கு, கோவிந்தன் - கிருஷ்ணன். இத்தால், பசுக்களை ரக்ஷிக்கையாலே பரோபகாரத்தன்மை சொல்லுகிறது. காற்றுக்கும் பரோபகாரத்தன்மை உண்டே? அவ்வளவில் ஒப்புமை கொள்க.

3. மேல் இரண்டு அடிகளிலும் அருளிச்செய்த பொருளை முடித்துக் காட்டுகிறார் 'உலகத்தார்படியுமன்று' என்று தொடங்கி.

4. பிரிவு காலத்திலே சரீரம் திருத்துழாய் நாறும்படி என்? என்னும் வினாவிற்கு மூன்று வகையாக விடை அருளிச்செய்கிறார் 'கோவைவாயாள்' என்று தொடங்கி.

5. பத்தெட்டுக் குளிக்கும்' என்றது, பத்தெட்டு ஸ்நானத்துக்கு என்றபடி. இவ்விடத்தில்,

ஒருபகல் பூசின் ஓராண் டொழிவின்றி விடாது நாளும்
பெரியவர் கேண்மை போலும் பெறற்கரும் வாச எண்ணெய்
அரிவையர் பூசி யாடி யகிற்புகை யாவி யூட்டித்
திருவிழை துகிலும் பூணுந் திறம்படத் தாங்கி னாரே. (சிந்- 2737.)

[1]வந்தேறி கழிந்தால் ஆத்ம ஸ்வரூபம் பகவானுக்கு உரிமைப் பட்டதாயன்றோ? இருப்பது, அத்தாலேயாதல். அன்றிக்கே, காற்றோடே கலந்து வந்து புகுந்து அணைந்தான் என்று காரியத்தைக் கொண்டு கற்பித்துக் கூறுகின்றாளாகவுமாம். [2]"அன்றி மற்றோர் உபாயம் என் இவள் அம் தண் துழாய் கமழ்தல்" என்னக்கடவதன்றோ? வினையுடை யாட்டியேன் பெற்ற-இவள் இத்தனை அவகாஹித்தது நான்செய்த பாபமே அன்றோ? பிரிவிலும் வடிவு திருத்துழாய் நாறும்படி அவகாஹித்து, பின்பு போலி கண்டு மயங்கும்படி மயக்கமேயாய் விடுகைக்கு அடி, பாவத்தைச் செய்த என்வயிற்றிற் பிறப்பே அன்றோ என்கிறாள் என்றபடி. [3]பல பிறவிகளிலே ஈட்டப் பட்ட புண்ணிய பலத்தைப் பாப பலமாகச் சொல்லுகிறாளாயிற்று இப்போதை இழவைப் பற்ற. [4]பகவத் விஷயத்தில் அவகாஹித்தவர்கள் பெற்றவர்களுக்கு ஆகார்களே அன்றோ? "அன்னையும் அத்தனும் என்று அடியோமுக்கு இரங்கிற்றிலள்" என்னக் கடவதன்றோ? செறிவளை முன்கைச் சிறுமான்-

---

"ஒருநாட் பூசினும் ஓரியாண்டு விடாஅத்
திருமா ணுறுப்பிற்குச் சீர்நிறை அமைத்துக்
கரும வித்தகர் கைபுனைந் தியற்றிய
வாச எண்ணெய்" (பெருங். 2.5: 98-101.)

என்பன ஒப்புநோக்குக.

1. இரண்டாவது கருத்து ஸ்வாபதேசம். 'வந்தேறி' என்றது, அவித்யை முதலானவைகளை; ஆத்மசொரூபத்தை நிஷ்கரித்தால், அது பகவானுக்கு அர்ஹம் என்று அறியக் கூடியதாயிருக்கும்; அந்தப் பகவத் சம்பந்த ஞானத்தை "நாறும்" என்கிறாள் என்பது கருத்து.

2. காரியத்தைக்கொண்டு கற்பித்துக் கூறுதலுக்குப் பிரமாணம் "அன்றி மற்றோர்" என்று தொடங்குவது. இது, திருவாய். 8. 9: 10.

அவகாஹித்தல் - உட்புகுதல்.

3. பிரிவிலும் மயங்கும்படி அவகாஹித்தது புண்ணியத்தின் பலமன்றோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பலபிறவிகளிலே' என்று தொடங்கி.

4. "வினையுடையாட்டியேன்" என்னும்படி தாயாரை நோவுபடுத்த வேணுமோ? பகவத் விஷயத்தில் அவகாஹித்தலைத் தவிர்ந்தாலாகாதோ? என்ன, அதற்கு விடையும், விடைக்குப் பிரமாணமும் அருளிச்செய்கிறார் 'பகவத் விஷயத்தில்' என்று தொடங்கி, "அன்னையும்" என்று தொடங்கும் மேற்கோள், பெரிய திரு. 3.7: 7.

முன்கையிலே செறிந்த வளையையுடையவள்; [1] இதுவன்றோ இருக்கத் தகும்படி! முன்பு இருக்கும்படியாதல், பின்பும் அப்படியே இருக்கத் தகுமவள் என்னுதல். அன்றிக்கே, இவள் வளைத்தழும்பு அவன் உடம்பில் காண்கை அன்றிக்கே, இவள் உடம்பிலே அவன் உடம்பில் திருத்துழாய் காணுமத்தனை யாவதே! என்பாள் 'செறிவளை முன்கை' என்கிறாள் என்னுதல். இதற்கெல்லாம் ஆஸ்ரயம் எங்குத்து? என்பாள் 'சிறுமான்' என்கிறாள். நனி இளையள் என்றபடி. செய்கின்றது என் கண்ணுக்கு ஒன்றே - ஒன்றன்று, பல என்கிறாள்.

[2] அன்றிக்கே, 'ஒன்றே' என்பதற்கு, நெருப்பைக் கட்டிக்கொள்வது, காற்றைத் தழுவுவது, திருத்துழாய் நாறுவது ஆகாநின்றாள். நெருப்புச் சுடாமையாலே உலக ஒழுக்கினள் என்று நிச்சயிக்க ஒண்கிறதில்லை; போலியான காற்றைத் தழுவுகையாலே 'சேர்ந்தவள்' என்ன ஒண்ணாது; திருத்துழாய் நாறுகையாலே 'விரஹிணி' என்ன ஒண்ணாது; ஆகையாலே, ஒன்றில் வைக்கப்பட்டிருக்கிறதோ இவள்படி? என்கிறாள் என்னுதல். (3)

369.

ஒன்றிய திங்களைக் காட்டி
    ஒளிமணி வண்ணனே! என்னும்
நின்றகுன் றத்தினை நோக்கி
    நெடுமாலே! வாஎன்று கூவும்
நன்றுபெய் யும்மழை காணில்
    நாரணன் வந்தான்என் றாலும்
என்றின மையல்கள் செய்தார்
    என்னுடைக் கோமளத் தையே.

---

1. 'இதுவன்றோ இருக்கத் தகும்படி' என்றது, இவள் கையும் வளையுமாயன்றோ இருக்க அடுப்பது? அஃது இன்றிக்கே இருப்பதே! என்றபடி. இப்போது இவளுக்கு வளை உண்டோ? என்னும் வினவிற்கு விடை அருளிச்செய்கிறார் 'முன்பு இருக்கும்படி யாதல்' என்று தொடங்கி.

2. "ஒன்றே" என்பதற்கு, வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'நெருப்பை' என்று தொடங்கி. "ஒன்றே" என்றது, ஒருவகையிலே அடைவிக்கப்பட்டதோ? அன்றே என்றபடி.

பொ - ரை :—பதினாறு கலைகளும் நிறைந்த சந்திரனைக் காட்டி ஒளிபொருந்திய ஸ்படிக மணி போன்ற நிறத்தையுடையவனே! என் பாள்; நிற்கின்ற மலையைப் பார்த்து நெடுமாலே! வா என்று கூவுவாள்; மிக அதிகமாகப் பெய்கின்ற மேகத்தைக் கண்டால் நாராயணன் வந் தான் என்று மகிழாநிற்பாள்; என்னுடைய கோமளத்தை இத்தகைய மயக்கங்களைச் செய்தார் என்று காண் என்கிறாள்.

வி - கு :—ஒளிமணி - ஸ்படிக மணி. "நன்று பெரிது" என்பது தொல்காப்பியம். என்னுடைக் கோமளத்தை இன மையல்கள் செய் தார் என்று? என மாறுக. என்று: எச்சமுமாம். "இன" என்பது, இன்ன என்பதன் விகாரம். இன்ன - இத்தன்மையான.

ஈடு :—நான்காம்பாட்டு. [1] துன்பத்தைப்பொறுக்கும் ஆற் றல் இல்லாத இவளை இப்படி நோவுபடுத்துவதே! என்கிறாள்.

ஒன்றிய திங்களைக் காட்டி-எல்லாக் கலைகளும் நிரம்பின சந்திரனை அருகுநின்றவர்களுக்குக் காட்டி. ஒளி மணி வண் ணனே என்னும் - [2] ஒளி மணி வண்ணனே! என்று அழைக் கின்றாள். புகரையுடைத்தான இரத்தினம்போலே குளிர்ந்த வடிவோடே அணைக்க வந்ததே என்பாள் என்றபடி. அன் றிக்கே, இவன் மிக்க ஒளியையுடைய சர்வேசுவரன் என்று அவர்களுக்குச் சொல்லாநிற்பாள் என்னுதல். கேட்ட அவர் கள், 'இம்மழுங்கல் சந்திரன் அவன் ஆகையாவது என்?' என் பர்களே; ஐயம் இன்று; இவன் அவனே என்பாள் "ஒளி மணி வண்ணனே" எனத் தேற்றேகாரம் கொடுத்துக் கூறு கிறாள். நின்ற குன்றத்தினை நோக்கி - இவ்வளவிலே ஏதேனும் ஒரு மலை வாராக் கண்ணுக்குத் தோன்றுமே? அதனைப் பார்த்து நெடுமாலே வா என்று கூவும் - [3] வடிவில் பெருமை

1. "என்னுடைக் கோமளத்தை இன மையல்கள் செய்தார்" என்ற தனைத் திருவுள்ளம்பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. குளிர்ச்சியான குணத்தின் ஒப்புமையாலே "ஒளிமணிவண்ணனே" என்கிறாள். அழைத்ததற்குப் பயன் அருளிச்செய்கிறார் 'புகரையுடைத்தான' என்று தொடங்கி. 'புகரை யுடைத்தான' என்பதற்கு முன் 'அழைத்து என்னும் ஒரு சொல்லைக் கூட்டிக் கொள்க.

3. "தண்டுளி பலபொழிந்து எழிலி இசைக்கும்
விண்டு வனைய விண்டோய் பிறங்கல்" (புறம். 391.)

ஓங்கு மால்வரை வரையா டுழக்கலின் உடைந்துகு பெருந்தேன்
தாங்கு சந்தனம் தளரத் தழுவி வீழ்வன தகைசால்
ஆங்கண் மாலுல களப்பா னாழி சங்கமொ டேந்தித்
தேங்கொள் மார்பிடைத் திளைக்குஞ் செம்பொன் ஆரமொத் துளவே
(சிந். 1559.)

யைக் கண்டவாறே, 'உலக முழுதையும் தன் திருவடிகளின் கீழே இட்டுக்கொள்ளும்படி பெரிய வடிவையுடைய திருவுலகு அளந்தருளின சர்வேசுவரன்' என்று நினைத்து, 'இங்ஙனே வாராயோ? என்று அழைப்பாள்.' இது, பிள்ளான் நிர்வாஹம். அங்ஙன் அன்றிக்கே, [1]சீயர், "மலை பேரமாட்டாதே பல கால் மழை பெய்கையாலே அழுக்கு அற்றுப் பசுகு பசுகு என்று இருக்குமே? அதனைக் கண்டு, 'அவன் குற்றமுடையவன் ஆகையாலே நாணங்கொண்டு, வந்து கிட்டமாட்டாமையாலே பச்சைப் படாத்தை இட்டு முட்டாக்கிட்டு நிற்கிறான்' என்று, 'யானைக் கூட்டத்துக்குக் கதவு இடில் அன்றோ உமக்கு நாண வேண்டுவது? இங்ஙனே போரீர்' என்னாநின்றாள்" என்று பணிப்பர்.

நன்று பெய்யும் மழைகாணில் நாரணன் வந்தான் என்று ஆலும் - [2]கெட்டு மழை அன்றிக்கே பெய்யவேண்டிய காலத்தில் பெய்யும் மழையைக் கண்டவாறே, நிர்ஹேதுகமாகச் சத்தை நோக்குமவன் வந்தான் என்று, மயில்கள் கார்காலத்திலே மகிழ்ச்சியினாலே ஆரவாரித்து ஆடுவதைப்போலே ஆடுகிறாள். என்று - என்று இப்படிகளைச் சொல்ல. இன மையல்கள் செய்தார் - இப்படிப் பிச்சுக்களைப் பண்ணினார். அன்றிக்கே, இப்படிப் பிச்சு ஏற்றிற்று என்று? என்னலுமாம். இவள் எனக்கு அடங்கியிருப்பவளாதல் தவிர்ந்த பின்பு இவற்றிற்கெல்லாம் காலம் உண்டோ? என்கிறாள். [3]"என் சொல்லும் என்வசமும் அல்லள்" என்றது எப்போது? இவளை இப்படிப் பிச்சு ஏற்றிற்று எப்போது என்கிறாள் என்றபடி. என்னுடைக் கோமளத்தையே - அதுதான் செய்யும்போது ஆஸ்ரயம் வேண்டாவோ? கலவியும் கூடப் பொறுக்கமிருதுத் தன்மையையுடையவளைப் பிரிவு பொறுக்கும்படி செய்வதே! என்பாள் என்னுடைக் **கோமளத்தை**' என்கிறாள். (4)

---

1. சீயர் - நஞ்சீயர். யானைக்கூட்டம் - யானையின் கலவி. கதவுஇடல் - தடைஇடுதல்.

2. "நன்று" என்றதன் பொருள், 'கெட்டு மழை அன்றிக்கே' என்பது "நாரணன்" என்ற பதத்தைத் திருவுள்ளம்பற்றி 'நிர்ஹேதுகமாகச் சத்தை நோக்குமவன்' என்கிறார்.

3. என்? காலம் இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "என்சொல்லும்" என்று தொடங்கி,

370.

கோமள வான்கன்றைப் புல்கிக்
கோவிந்தன் மேய்த்தன என்னும்
போமிள நாகத்தின் பின்போய்
அவன்கிடக் கைஈது என்னும்
ஆமள வொன்றும் அறியேன்
அருவினை யாட்டியேன் பெற்ற
கோமள வல்லியை மாயோன்
மால்செய்து செய்கின்ற கூத்தே.

**பொ - ரை:**—இளமையையுடைய பெரிய கன்றுகளைத் தழுவிக் கிருஷ்ணன் மேய்த்த கன்றுகள் இவையாகும் என்பாள்; செல்லுகின்ற இளமையையுடைய பாம்பின் பின்னே சென்று 'இது அவன் படுக்கை' என்னாநின்றாள்; மேல் விளையக் கூடியது ஒன்றனையும் அறிகின்றிலேன்; போக்கற்கு அரிய தீயவினைகளையுடைய யான் பெற்ற இளைய வல்லிக்கொடி போன்ற பெண்ணை மாயோன் மயக்கத்தைச் செய்து செய்கின்ற கூத்து என்னேதான்! என்கிறாள்.

**வி - கு:**—கோமளம்-இளமை; அழகுமாம். மேய்த்தன: வினையாலணையும் பெயர். கிடக்கை - படுக்கை. கூத்து: தொழில் உணர்த்தும் பெயர்; பகாப்பதம்.

**ஈடு:**—ஐந்தாம்பாட்டு. [1] இவளுக்கு இந்தத் துன்பம் எவ்வளவாய் முடியக் கூடியது? என்று அறிகின்றிலேன் என்கிறாள்.

கோமளம் வான் கன்றைப் புல்கி-[2] பருவத்தால் இளையதாய் வடிவால் பெருத்திருக்கிற கன்றுகளைத் தழுவி என்னுதல்; மாணிக்கம்போலே அற விலக்ஷணமாய்ப் பெருத்திருக்கிற கன்றுகளைத் தழுவி என்னுதல். கோமளம் என்று மாணிக்கத்துக்கும் இளமைக்கும் பேர். ஆக, இப்படிக் [3]காட்சிக்கு இனிய

---

1. "ஆமளவு ஒன்றும் அறியேன்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. கோமளம் என்பது, இளமை; வான் என்பது, பெருமை; ஆகையாலே, இரண்டற்கும் மாறில்லாமல் பொருள் அருளிச்செய்கிறார் 'பருவத்தால்' என்று தொடங்கி. 'கன்று' என்பது, தொகுதிஒருமை யாதலின் கன்றுகளை என்று பொருள் அருளிச்செய்கிறார்.

3. "கோமளம்" என்ற சொல்லிற்குரிய இரண்டு பொருள்களையும் திருவுள்ளத்தே கொண்டு அவற்றை அடைவே அருளிச்செய்கிறார் 'காட்சிக்கு' என்று தொடங்கி,

வாய் மிருதுத்தன்மையையுடையனவுமான கன்றுகளைத் தழுவி என்றபடி. [1]கிருஷ்ணன் பருவம்போலே ஆயிற்று இவற்றின் பருவம் இருக்கும்படி. கிட்டினார்க்கு ஒப்புமையை அடைதலே அன்றோ பலம்? கோவிந்தன் மேய்த்தன என்னும் - [2]"கன்றுகளின் நடுவில் உள்ளவனும் இளமைப் பருவமுடையவனுமான கிருஷ்ணன்" என்றும், [3]"கன்றுமேய்த்து இனிது கந்த காளாய்" என்றும் வருகின்றவாறே, இவற்றினுடைய ரக்ஷணத்திற்கு முடிசூடினவன் உகந்து காப்பாற்றினவை என்பாள். [4]"உரியவன் உணர்ந்து நோக்கினவை என்று தோற்றுகிறதாயிற்று இவற்றின் வடிவில் பௌஷ்கல்யம். [5]கன்றின் கழுத்தினைக் கட்டிக் கொண்டவாறே அது துள்ளிப் போகா நிற்குமே! அதனைக் கண்டு அவன் பரிகாரமாயே இருந்தது என்பாள்.

போம் இள நாகத்தின் பின் போய் - அவ்வளவிலே ஒரு பாம்பு போகாநிற்குமே? அதன்பின்னே போகாநிற்கும். [6]இவ

---

1. இளமைப் பருவமுடைய கன்றுகளைத் தழுவுவதற்கு அடி ஏது? என்ன, 'கிருஷ்ணன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இவற்றுக்குக் கிருஷ்ணன் பருவம் வருகைக்கு அடி ஏது? என்ன, 'கிட்டினார்க்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

"தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத்
தம்மையே ஒக்க அருள் செய்வ ராதலின்"

என்பது பெரிய திருமொழி.

2. விஷ்ணுபுரா. 5. 17. 19.

3. திருநெடுந்தாண்டகம். 16.

இவை இரண்டும், கன்றுகள் கிருஷ்ணனோடு ஒத்த பருவமாயிருந்தன என்பதற்கும், கன்றுகளைக் கிருஷ்ணன் மேய்த்ததற்கும் பிரமாணங்கள்.

4. கோவிந்தன் மேய்த்தனவாகையாலே இவை வான்கன்றுகளாயின என்று கூறத் திருவுள்ளம்பற்றி அதனை அருளிச்செய்கிறார் 'உரியவன்' என்று தொடங்கி. பௌஷ்கல்யம் - நிறைந்த தன்மை.

5. "கோவிந்தன் மேய்த்தன" என்பதற்கு வெறுப்பிலே நோக்காக வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'கன்றின் கழுத்தை' என்று தொடங்கி. 'துள்ளிப்போகாநிற்குமே!' என்றது, "கோமளவான்" என்றதன் கருத்துப் பொருள். அவன் ஓடுமாறுபோலே இவையும் ஓடாநின்றன என்பது கருத்து.

6. பாம்பின் பின்னே போகுங் காரணத்தை ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'இவளுடைய' என்று தொடங்கி. போகம் என்பது, பாம்பின் உடலுக்கும் அநுபவத்திற்கும் பெயர். பிராவண்யம் - ஈடுபாடு.

ளுடைய போகப் பிராவண்யம் இருக்கும்படி. [1]முக்தர்கள் எப்பொழுதும் பகவானை அநுபவிக்கும் அநுபவத்தாலே இருபத்தைந்து வயதினர்களாகவே இருப்பார்கள் அன்றோ? அவர்களுடைய இளமை இது என்றிருக்கிறான் என்பாள் 'இள நாகம்' என்கிறாள். 'கன்றைப் புல்கி' என்றும், 'நாகத்தின் பின்போய்' என்றும் கூறுகின்றாள்; இத்தனை உணர்த்தி உண்டோ? என்னில், கன்று ஓரிடத்தே நிற்கையாலே கழுத்தினைக் கட்டிக்கொண்டாள்; அம்புக்கு எட்டாதபடி பாம்பு ஓடாநிற்குமாதலின் அதன்பின்னே போகாநின்றாள். [2]'அது புக்க இடத்தே அவன் வரவு தப்பாது' என்று காண்கைக்காக அதன்பின்னே போகாநிற்கிறாள் என்றபடி. [3]அவன் தானும் பரமபோகியாய் இருப்பான் ஒருவன் அலனோ? அவன் கிடக்கை ஈது என்னும் - அது ஒரு தூற்றிலே போய்ப் புகுமே? அதனை நோக்கிக்கொண்டு கிடப்பாள்; அவன் வந்தால் காண்கைக்கு. ஆம் அளவு ஒன்றும் அறியேன் - உலகமே அழியப் புகுகிறதோ? அறிகின்றிலேன். என்றது, இவளை இழக்கவே உலகத்திற்குக் காரணமானவன் கிடைக்கமாட்டான்; காரணமானவன் இல்லாமையாலே காரியமான இவ்வுலகம் தன்னடையே இல்லையாமே அன்றோ? என்றபடி. அன்றிக்கே, 'பாம்பு' என்று மீளமாட்டுகின்றிலள்; இது என்னை விளையக் கடவது என்கிறாள் என்னுதல். [4]பாம்போடு ஒரு கூரையிலே பயின்றாற்போலே அன்றோ திருத்தாயார்க்கு இருக்கிறது.

---

1. "நாகம்" என்றதற்கு ஆதிசேஷன் என்று பொருள் கூறத் திருவுள்ளம்பற்றி அதற்குத் தக "இள" என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'முக்தர்கள்' என்று தொடங்கி.

2. அதன்பின்னே போகிறது எதற்காக? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அது புக்கவிடத்தே என்று தொடங்கி.

3. அப்படி அவன் வரவு தப்பாதோ? என்ன, அதற்கு ரசோக்தியாக விடை அருளிச்செய்கிறார் 'அவன் தானும்' என்று தொடங்கி. பரமபோகி என்பதற்கு, பரமனான போகியை யுடையவன் என்றும், பரமனான போகி என்றும் பொருள் காண்க. போகி - பாம்பு; இன்பத்தை யுடையவன்.

4. பாம்பைத் தழுவாதிருக்கவும், 'இது என்னை விளையக் கடவதோ!' என்பான் என்? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் 'பாம்போடு' என்று தொடங்கி.

"பாம்போடு ஒரு கூரையிலே பயின்றாற்போல்
தாங்கா துள்ளம் தள்ளுமென் தாமரைக் கண்ணா!"

என்பது அப்பாசுரப் பகுதி. இது, பெரியதிருமொழி, பதினோராம்பத்து, "மாற்றமுள" என்கிற திருமொழியில் மூன்றும் பாசுரம்.

அருவினையாட்டியேன் பெற்ற - [1] இவளுக்கு இங்ஙனம் ஒருபுத்தி பிறந்து படுகிறது நான் செய்த பாபமே அன்றோ? என்பாள் '**அருவினையாட்டியேன்**' என்கிறாள். [2] "பிறந்திட்டாள்" என்கிறபடியே, அக்கரையளாய் இவள் தனக்குப் பெறாப் பேறாய் இருக்கிறபடியைத் தெரிவிப்பாள் '**பெற்ற**' என்கிறாள். [3] அன்றிக்கே, "நெடுங்காலமும் கண்ணன் நீள் மலர்ப்பாதம் பரவிப்பெற்ற" என்கிறபடியே, செய்து முடிக்க ஒண்ணாத புண்ணியங்களைப் பண்ணிப் பெற்ற மிருதுத்தன்மையையுடைய இவளை என்னுதல். கோமளவல்லியை - கேவலம் வல்லி அன்று; [4] கோமளவல்லி ஆயிற்று. அன்றிக்கே, ஒரு கொள்கொம்போடே சேர்க்கவேண்டும் பருவம்; அதாவது, பிள்ளைப்பருவம் என்னுதல். மாயோன் - தன்னைக் கண்டால் தங்காமை அறியாதபடி பண்ணவல்ல காதல் குணத்தையுடையவன். மால்செய்து - பிச்சு ஏற்றி. செய்கின்ற கூத்து - அடிக்கிற ஆட்டம். 'ஆம் அளவு ஒன்றும் அறியேன்' என மேல் உள்ளதனோடு கூட்டுக. (5)

## 371.

கூத்தர் குடம்எடுத் தாடில் கோவிந்த னாம்எனா ஓடும்
வாய்த்த குழலோசை கேட்கில் மாயவன் என்றுமை யாக்கும்
ஆய்ச்சியர் வெண்ணெய்கள் காணில் அவனுண்ட வெண்ணெயீ
[தென்னும்
பேய்ச்சி முலைசுவைத் தார்க்கென் பெண்கொடி ஏறிய பித்தே!

---

1. தன்னை "அருவினையாட்டியேன்" என்கைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'இவளுக்கு' என்று தொடங்கி.

2. "பின்னைகொல்? நிலமா மகள் கொல்?
திருமா மகள்கொல்? பிறந்திட்டாள்
என்ன மாயங் கொலோ? இவள் நெடுமால்
என்றே நின்று கூவுமால்"

என்பது திருவாய்மொழி. 6. 5: 10.

அக்கரையள் - பரமபதத்திலிருப்பவள்.

3. "அருவினையாட்டியேன்" என்பதற்குப் புண்ணியத்தை யுடையவள் என்பதாக வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. "நெடுங்காலம்" திருவிருத்தம். 37.

4. கோமளவல்லி - மிருதுத் தன்மையையுடைய வல்லி.

**பொ - ரை :**—கூத்தாடுமவர்கள் குடங்களை எடுத்து ஏறவிட்டுக் கூத்தாடினார்களாகில் கோவிந்தன் ஆம் என்று ஓடும்; பொருந்திய வேய்ங்குழலின் இசையைக் கேட்டால் கிருஷ்ணன்தான் என்று மோகிப்பாள்; ஆய்ப் பெண்கள் கையிலே வெண்ணெயைப் பார்த்தால் இது அந்தக் கிருஷ்ணன் உண்ட வெண்ணெய் ஆகும் என்பாள்; பூதனையினுடைய முலையைச் சுவைத்து அவளை உயிர் உண்ட கண்ண பிரான் விஷயத்தில் என்னுடைய கொடிபோன்ற பெண்ணானவள் கொண்ட பிச்சு இருந்தவாறு என்னே!

**ஈடு :**—ஆறும்பாட்டு. [1] தன்மகளுடைய பிச்சுக்கு நிதானத்தையும் அது அடியாக வந்த பிச்சையும் சொல்லுகிறாள்.

கூத்தர் குடம் எடுத்து ஆடில் கோவிந்தன் ஆம் எனா ஓடும் - இவள் தன்மை அறிந்திருக்கையாலே 'இவளைக் கிடையாது' என்று கூத்து விலக்கியிருந்தாற்போலே காணும் கிடப்பது; ஆதலின், '**ஆடில்**' என்கிறாள். [2] ஆயர்கள் செருக்குக்குப் போக்கு விட்டு ஆடுவது ஒரு கூத்தாயிற்று - குடக் கூத்தாகிறது. விளைவது அறியாதே வழிப்போக்கர் புகுந்து ஆடாநிற்பர்களே, அதனைக் கண்டு, இக் குடக்கூத்து ஆடும்போது நிறைந்த பசுக்களையுடைய கிருஷ்ணனாகவேணும் என்று காண ஓடும். இரந்து திரிகின்ற இவர்கள் அவன் ஆகையாவது என்? என்பர்கள் அன்றோ? அதனைக் கேட்டும், அவன் கிருஷ்ணனே என்று காண ஓடுகின்றாள் என்பாள் '**ஆம் எனாஓடும்**' என்கிறாள். வாய்த்த குழல்ஓசை கேட்கில் மாயவன் என்று மையாக்கும் - 'பொருளின் தன்மை அறிந்தவர்கள், பொருளின் தன்மை அறியாதவர்கள்' என்று வாசி இன்றிக்கே எல்லாரையும் ஒக்க ஈடுபடுத்தும் குழலின் நல்லிசை வந்து செவிப்படில் கிருஷ்ணன் என்று [3] மோஹிப்பாள்; "நுடங்குகேள்வி இசை" என்னப்படுகின்றவன் அன்றோ அவன்? அன்றிக்கே,

1. "பேய்ச்சி முலை சுவைத்தார்க்கு" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "வாணன் பேரூர் மறுகிடை நடந்து
நீணில மளந்தோன் ஆடிய குடமும்"

'காமன் மகன் அநிருத்தனைத் தன் மகள் உஷை காரணமாகச் சிறைவைத்த பின், அவனுடைய சோ என்னும் நகர வீதியில் நிலங்கடந்த நீனிறவண்ணன் குடங் கொண்டாடிய குடக் கூத்தும்' (சிலப். கடலாடு காதை. 54-55.)

3. இனிமையின் ஒப்புமையாலே மாயவன் என்று மயங்குகிறாள் என்றபடி. அவன், குழலோசை போன்று இனியனாயிருப்பன் என்பதற்கு மேற்கோள் "நுடங்கு கேள்வி" என்பது. இது, திருவாய்மொழி. 3. 4 ; 6.

[1] 'பகல் எல்லாம் பசுக்களின் பின்னே போனேன், மாதா பிதாக்களுக்குப் பரதந்திரனுனேன், பிரிந்தேன், ஆற்றேன், "ஒரு பகல் ஆயிரம் ஊழி"' என்பனபோலே சொல்லி சமாதானம் பண்ணிக்கொண்டு வந்து தோற்றுமவன் என்று, அவன் குழலிலே வைத்துச் சொல்லும் தாழ்ந்த சொற்களை நினைத்து மோஹிக்கும் என்னுதல்.

ஆய்ச்சியர் வெண்ணெய்கள் காணில் அவன் உண்ட வெண்ணெய் ஈது என்னும்-முடைநாற்றம் மிக்க வெண்ணெய்கள் காணில், [2]களவு காணப் புக்கு வாயது கையது ஆக அகப்பட்டபோது சேஷித்த வெண்ணெயோடே ஒத்த வெண்ணெய் ஈது என்பாள். 'பிராமணப் பெண்கள் தீண்டிய வெண்ணெய் இது' என்ருல் கொள்ளாள் என்பாள் 'ஆய்ச்சியர் வெண்ணெய்' என்கிருள். இவள் இப்படிக் கலங்குகைக்கு நிதானம் என்? என்னில், அவன் முன்னரே ஓர் உபகாரத்தைப் பண்ணிவைத்தான்; அதிலே தோற்ற அன்று தொடங்கி இவள் பிச்சு ஏறத் தொடங்கினுள் என்கிருள் மேல்: பேய்ச்சி முலைசுவைத்தார்க்கு-தாயுங்கூட உதவாத சமயத்திலே பூதனை வந்து முலைகொடுக்க, அவ்வளவிலே உணர்த்தி உண்டாய் அவளை முடித்துத் தன்னை நோக்கித் தந்தானே! அவ்வுபகாரத்திலே தோற்று அன்று தொடங்கி இவள் பிச்சு ஏறினுள். என்றது, என் சொல்லியவாறு? எனின், [3]பூத்தருபுணர்ச்சி, புனல்தருபுணர்ச்சி, களிறுதருபுணர்ச்சி என்ற இவை புணர்ச்சிக்குக் காரணங்களாம். எட்டாத கொம்பிலே நின்றதொருபூவை ஆசைப்பட்டால் இவன் தன்னைப்பேணுதே இவள் ஆசையை முடித்துக் கொடுக்கை; 'இவன் தன்னைப் பேணுதே நம் நினைவை முடித்தானே' என்று அதற்காகத் தன்னைக்கொடுக்கை, பூத்தருபுணர்ச்சியாம். ஆற்றிலே அழுந்

1. "மாயவன் என்று மையாக்கும்" என்பதற்கு வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிருர் 'பகல் எல்லாம்' என்று தொடங்கி. இப்பொருளில், அவனுடைய பேச்சுக்குப் போலியாயிருத்தலைக் கொண்டு மயங்குகிருள் என்பது கருத்து. முன்னைய பொருளில், அவனுக்குப் போலியா யிருத்தலைக் கொண்டு மயங்குகிருள் என்பது கருத்து.

2. வேறுபட்ட காலமாகையாலே, அவன் உண்டு விட்டது என்ன ஒண்ணுது; அவன் உண்டு சேஷித்தது என்னவும் ஒண்ணுது; ஆதலின், அதற்கு விரோதமின்றிப் பொருள் அருளிச்செய்கிருர் 'களவு காணப் புக்கு' என்று தொடங்கி.

3. இக்கு. இறையனுர் களவியல் சூத். M. உரை காண்க.

துகிற இவளைத் தான் புக்கு ஏறவிட்டதற்காகத் தன்னைக் கொடுக்கை, புனல்தருபுணர்ச்சியாம். தன் நினைவின்றியே யானையின்கையிலே அகப்பட்டவளை மீட்டுக் கொடுத்ததற்காகத் தன்னைக் கொடுக்கை, களிறுதருபுணர்ச்சியாம். [1]இங்கே இவற்றுள் ஒன்றும் அன்று; அவன் தன்னை நோக்கினதற்கு இவள் தன்னை எழுதிக்கொடுக்கிறாள்; என்பெண்கொடி-இவர்களில் வேறுபாடு. நிருபாதிக பெண் தன்மையையுடையவள். ஏறிய பித்து - இவள் கொண்ட பிச்சு. (6)

372.

ஏறிய பித்தினோ டெல்லா
உலகும் கண்ணன் படைப்பென்னும்
நீறு செவ்வே இடக்காணில்
நெடுமால் அடியார் என்றோடும்
நாறு துழாய்மலர் காணில்
நாரணன் கண்ணி ஈதென்னும்
தேறியும் தேறாதும் மாயோன்
திறத்த னளேஇத் திருவே.

பொ - ரை:—மிகுந்த மயக்கத்தை அடைந்திருக்கும் நிலையிலும் இந்த எல்லா உலகங்களும் கண்ணபிரானுடைய படைப்பு என்னாநிற்கும்; திருநீற்றினை நேரே (ஊர்த்தவபுண்டரம்) இட்டிருத்தலைக் கண்டால் சர்வேசுவரனுடைய அடியார்கள் என்று ஓடுவாள்; வாசனை வீசுகின்ற திருத்துழாயினைக் கண்டால் நாராயணனுடைய மாலை இதுவாகும் என்பாள்; ஆதலால், இந்தப் பெண்ணானவள் தெளிந்த நிலையிலும் தெளியாதநிலையிலும் ஆச்சரியமான குணங்களையுடைய சர்வேசுவரனுடைய திறத்தினளே ஆவாள்.

வி-கு:—செவ்வே இடுதலாவது, மேல் நோக்கியிருக்கும்படி ஊர்த்தவபுண்டரமாக இடுதல். இத்திரு தேறியும் தேறாதும் மாயோன் திறத்தினள் என்க.

---

1. 'இங்கே இவற்றுள் ஒன்று மன்று' என்றது, தங்களைப் பாதுகாத்தல் முதலிய உபகாரத்தை நோக்கி அவர்களுக்குத் தோற்று அந்தப் பெண்கள் தங்களை எழுதிக்கொடுத்தார்கள்; இவள் உத்தம நாயகியாகையாலே, தலைவன் தன்னைத் தானே பாதுகாத்துக் கொண்டதற்குத் தான் தோற்றுத் தன்னை அவனுக்கு உரிமையாக்குகிறாள் என்றபடி.

ஈடு:— ஏழாம்பாட்டு. [1] தேறினபோதோடு தேறாதபோதோடு வாசி அற எப்போதும் அவன்திறமல்லது அறியாளே! என்கிறாள்.

ஏறிய பித்தினோடு எல்லா உலகும் கண்ணன் படைப்பு என்னும் - இவள் பிச்சேறி இருக்கிற நிலையிலே, இந்த உலகமெல்லாம் கிருஷ்ணனாலே படைக்கப்பட்டன என்பாள். [2] பிராஹ்மணர் பிச்சு ஏறினாலும் ஓத்துச் சொல்லுமாறு போலே இவ்விஷயத்தில் வாசனை இருக்கிறபடி. [3] இவள் பிச்சு ஏறிச் சொல்லும் வார்த்தை கேட்கைக்கு, மைத்திரேயர் முதலிய மஹாருஷிகளைப்போலே தொடர்ந்து திரியவேண்டிக் காணும் திருத்தாயார்க்கு இருக்கிறது. [4] "எல்லாவுலகங்களும் மஹாவிஷ்ணுவின் சமீபத்தில் நின்றும் உண்டாயின; அந்த விஷ்ணுவினிடத்தில்தானே எல்லாவுலகங்களும் லயமாகின்றன" என்னாநின்றாள். [5] "உலகங்களினுடைய பிறப்பும் கிருஷ்ணனே, பிரளயமும் கிருஷ்ணனே என்னுமிவை பிரசித்தம்" என்கிற இதில் ஒருக்காலும் கலக்கமில்லை என்றபடி. நீறு செவ்வே இடக் காணில் நெடுமால் அடியார் என்று ஓடும்-

---

1. நான்காமடியைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. மயங்கிய காலத்தில் தத்துவப் பொருளைக் கூறுதல் கூடுமோ? என்னும் வினாவிற்கு விடையாகப் 'பிராஹ்மணர்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

3. 'இவள் பிச்சேறிச் சொல்லும்' என்று தொடங்கும் வாக்கியத்திற்குக் கருத்து, ஸ்ரீபராசரபகவான், வசிஷ்ட புலஸ்தியர்களுடைய வரப்பிரசாதத்தாலே பரதேவதா பாரமார்த்திய ஞானத்தையடைந்து தெளிந்திருந்து கூறிய வார்த்தையைக் கேட்க, மைத்திரேயர் முதலிய முனிவர்கட்கு அவர் மாட்டுத் தவளவேண்டியிருந்தாற் போன்றிருக்கிறது, தாய்க்கும் இவள் பிச்சேறிச் சொல்லும் வேதாந்த ரஹஸ்யமான வார்த்தையைக் கேட்கைக்கு என்றபடி. ஆக, அம் முனிபுங்கவர் தெளிந்திருந்து கூறும் வார்த்தையாயிற்று, இவள் பிச்சேறிச்சொல்லும் வார்த்தை என்றபடி.

4. ஸ்ரீ பராசரமுனிவர் கூறிய வார்த்தை யாது? என்ன, "எல்லாவுலகங்களும்" என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, விஷ்ணுபுரா. 1. 1: 32. 'என்னாநின்றாள்' என்றது, அவர் கூறிய அவ்வார்த்தையை இவள் கூறுகின்றாள் என்றபடி.

5. "விஷ்ணுவின் சமீபத்தினின்றும் உண்டாயின" என்பது போன்று கூறாது, இங்கு, "கண்ணன் படைப்பு" என்றல் என்? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார். 'உலகங்களினுடைய' என்று தொடங்கி. இது, பாரதம் இராஜசூயயாகத்தில் வீடுமன் கூறியது.

நீற்றினைச் செவ்வே இட்டிருத்தலைக் கண்டால் மேல் நோக்கியிருக்கும் அத்துணை மாத்திரத்தையே கொண்டு [1]"மகாவராஹத்தை எடுத்த மஹாவிஷ்ணுவினால் தூக்கப்பட்டவளாக ஆகிறாய்" என்கிறபடியே, என்றும் ஒக்க பகவானுடைய சம்பந்தம் மாறாத தேசத்தில் மண்ணைக்கொண்டு தரித்துப் போருமவர்களாகக் கொண்டு மயங்கி, இவர்கள் சர்வேசுவரன் அடியார் என்று ஓடாநிற்கும். [2]பிராயஸ்சித்த பிரகரணங்களிலே பிரஹ்மஹத்தி முதலான பாவங்களைப் பண்ணினார்க்குப் பிராயஸ்சித்தமாக விதித்த திரவியத்தைத் தாமசபுருஷர்கள் தரித்துப் போந்தார்கள்; அந்தத் திரவியத்தைப் பாராதே செவ்வை மாத்திரத்தைக் கொண்டு மயங்குகின்றாள் இவள்; அது பொடிபட்டுக் கிடக்கிறது என்று அறிகின்றிலள்; சிறிது ஒப்புமை அமையுமாயிற்று இவள் மயங்குகைக்கு. இவளுடைய மயக்கபுத்தி இருக்கிறபடி. நன்று; அவர்கள் செவ்வே இடுவர்களோ? என்னில், அதுவும் அன்றிக்கே, மசகப்பிராயராய் இருப்பவர்கள் தரிப்பர்களேயன்றோ

நாறு துழாய் மலர் காணில் நாரணன் கண்ணி ஈது என்னும் - வாசனையையுடைய திருத்துழாயைக் காணில், உபய விபூதிகளையுமுடையனான சர்வேசுவரன் ஐஸ்வரியத்துக்கு

---

1. நெடுமாலடியார் தரிக்கிற திரவியம் இன்னதென்று காட்டாநின்றுகொண்டு, அவர்களாக மயங்கும் என்றருளிச்செய்கிறார், 'மஹாவராஹத்தை' என்று தொடங்கி. இது, தைத்ரீய உபநிடதம்.

2. சாதாதப ஸ்மிருதியில் பிராயஸ்சித்த பிரகரணத்தில் கூறப்பட்டுள்ளதைத் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் 'பிராயஸ்சித்த' என்று தொடங்கி. 'பிரஹ்மஹத்தி முதலான' என்றது, திருடுதல், குருவின் மனைவியைப் புணர்தல், கட்குடித்தல் முதலிய பாவங்களை. மஹாபாவங்களைச் செய்தவர்கள் கழுவாய் நிமித்தம் செய்ய வேண்டியவை என்றதனால், ஏனையோர் அவற்றைச் செய்யலாகாது என்பது கருத்து. அதனைத் திருவுள்ளம்பற்றியே 'தாமச புருஷர்கள்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். 'பொடிபட்டுக் கிடக்கிறது' என்றது, சிலேடை: தூளியாய்க்கிடக்கிறது என்றும், நீக்கப்பட்டுக் கிடக்கிறது என்றும் பொருள். 'அதுவுமன்றிக்கே' என்றது, முறைப்படி குறுக்காக இடுதலு மன்றிக்கே என்றபடி. 'மசகப்பிராயராயிருப்பவர்கள்' என்றது, அறிவில்லாதவர்களைக் குறித்தபடி. நீற்றைத் திரியக்புண்டரமாகவும், மிருத்தை ஊர்த்துவ புண்டரமாகவும் தரிக்கவேணும் என்று அறியாதவர்கள் என்றபடி. மசகம் - கொசு.

இட்ட தனிமாலை ஈது என்னும். [1] அதுவல்லாததனை அதுவாக நினைத்து மயங்குகின்றவள் அதனையே கண்டால் விடாளே அன்றோ? "சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய்" என்கிறபடியே, அவன் தலைமேல் கொண்டு அடியார்க்குக் கொடுக்குமதன்றோ அதுதான். [2] என்றது, ஸ்ரீசடகோபனுக்குச் சாத்துகை என்றபடி. தேறியும் தேறாதும் - "துழாய் மலர் காணில்" என்றதனை நோக்கித் '**தேறியும்**' என்கிறாள்; "நீறு செவ்வே இடக் காணில்" என்றதனை நோக்கித் '**தேறாதும்**' என்கிறாள். அன்றிக்கே, [3] "கோவைவாயாள்" என்ற திருவாய்மொழியை நோக்கித் '**தேறியும்**' என்கிறாள்; இத்திருவாய்மொழியை நோக்கித் 'தேறாதும்' என்கிறாள் என்னுதல். மாயோன் திறத்தனளே இத் திருவே - மாயோன் [4] இடையாட்டத்திலாள் இத்திரு. பிறந்த ஞானம் கலக்கத்துக்குக் காரணமாம்படி செய்யவல்ல ஆச்சரியத்தையுடையவன் என்பாள் '**மாயோன்**' என்கிறாள். அநபாயிநியான அவளோடு ஒக்க விகல்பிக்கலாம்படி காணும் இவள்படிகள் தாம் இருப்பன என்பாள் 'இத்திரு' என்கிறாள். அவளுக்கு அவன் உத்தேஶ்யன்; இருவரும் உத்தேஶ்யரான சேர்த்தி உண்டு இவளுக்கு. (7)

---

1. 'அதுவல்லாததனை அதுவாக நினைத்து' என்றது, பகவானுடைய சம்பந்தமுடையது அல்லாததனைப் பகவானுடைய சம்பந்தமுடையதாகக் கொண்டு என்றபடி. திருத்துழாயினைச் சர்வேசுவரன் தலைமேல் கோடற்கு மேற்கோள் "சுடர்முடிமேலும்" என்பது. அடியார்க்குக் கொடுக்குமதற்குப் பிரமாணம் "தாளிணைமேலும்" என்பது. இது, திருவாய்மொழி. 1-9:7.

2. அடியார்களில் வைத்துக்கொண்டு ஆழ்வார் பிரதாநராகையாலே "நமக்கன்றி நல்கான்" என்றதனைக் கடாக்ஷித்து 'என்றது' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். சர்வேசுவரனுக்கு ஆழ்வார் திருவடிகளேயன்றோ?

3. "கோவைவாயாள்" என்ற திருவாய்மொழி, ஞானத்தின் காரியம்; இத்திருவாய்மொழி, மயக்கத்தின் காரியம்.

4. 'இடையாட்டத்திலாள்' என்றது, அவன் விஷயத்திலே ஈடுபட்டிருக்குமவள் என்றபடி.

373.

[1] திருவுடை மன்னரைக் காணில்
திருமாலைக் கண்டேனே என்னும்
உருவுடை வண்ணங்கள் காணில்
உலகளந் தானென்று துள்ளும்
கருவுடைத் தேவில்கள் எல்லாம்
கடல்வண்ணன் கோயிலே என்னும்
வெருவிலும் வீழ்விலும் ஓவாக்
கண்ணன் கழல்கள் விரும்புமே.

பொ - ரை:—செல்வத்தையுடைய அரசர்களைக் கண்டால் திருமகள்கேள்வனைக் கண்டேன் என்பாள்; அழகுபொருந்திய வடிவங்களைக் கண்டால் உலகத்தையெல்லாம் அளந்த திரிவிக்கிரமன் என்று துள்ளுவாள்; படிமங்களையுடைய கோயில்கள் எல்லாம் கடல்போன்ற நிறத்தையுடைய திருமால் கோயில்களே என்பாள்; தெளிவுடையளாய்ப் பந்துக்களுக்கு அஞ்சின காலத்திலும் மயங்கின காலத்திலும் இடைவிடாமல் கண்ணபிரானுடைய திருவடிகளையே விரும்பாநின்றாள் என்றவாறு.

வி - கு:—திரு - அரசச்செல்வம். வண்ணம்: வடிவிற்கு ஆகு பெயர். கரு - படிமை. தேஇல் - கோயில்; தே - தெய்வம். வெருவுதல் - உறவினர்க்கு அஞ்சுதல். வீழ்தல் - மயக்கம்.

ஈடு:—எட்டாம்பாட்டு. [2] 'மிக்க துர்த்தசையினளாயிருந்தாலும் இவள் அவனுக்கே உரியவளாயிருக்கின்றாள்' என்கிறாள்.

திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும் - குறைவற்ற ஐஸ்வர்யங்களையுடைய இராஜாக்களைக் காணில், திருமகள் கேள்வனை [3] ஒருபடி காணப்பெற்றேனே

1. "உலகபாலருருவாய் நின்று உலகங் காத்தலின் 'இறை' என்றார்; 'திருவுடைமன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்' என்று பெரியாரும் பணித்தார்" என்பது பரிமேலழகருரை. (திருக்குறள் 39-ஆம் அதிகாரம். இறைமாட்சி. முன்னுரை.)

2. நான்காமடியைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

3. 'ஒருபடி காணப்பெற்றேனே' என்றது, 'கண்டேன்' என்னாது, "கண்டேனே" என்ற ஏகாரத்தின் பொருளை விளக்கியபடி.

என்பாள். [1]நாதமுனிகள், இராஜா சாமந்தன் தலையிலே அடியை இட்டு யானைக் கழுத்திலே புக்கபடியைக் கண்டு, ‘சர்வேசுவரன் பிரமன் முதலியோர் தலையிலே அடியிட்டுப் பெரிய திருவடியை மேற்கொள்ளும்படி இதுவாகாதே!’ என்னா மோகித்தார் என்பது பிரசித்தமே அன்றோ? இராஜா தன் சேனையோடே கங்கைகொண்ட சோழபுரத்து ஏறப் போகச்செய்தே, பெரிய முதலியார் மன்னனார் திருவடிகளிலே சேவித்திருக்கச் செய்தே, பெண்பிள்ளை வந்து ‘நம் அகத்திலே ஒரு குரங்கும் இரண்டு வில்லிகளும் ஒரு பெண்ணுமாக வந்து புகுந்தார்கள்’ என்றவாறே, ‘பெருமாளும் இளையபெருமாளும் பிராட்டியும் ஐந்திரவியாகரண பண்டிதனும்’ என்று புத்தி பண்ணிப் பின் தொடர்ந்துபோய், முன்னே போகின்றவர்கள் ‘போகின்றார்கள், போகின்றார்கள்’ என்னக் கேட்டுக் கீழை வாசலிலே சென்றவாறே,‘இப்படிப் போகின்றவர்களைக் கண்டீர்களோ?’ என்று வாசலிலவர்களைக் கேட்க, அவர்கள் ‘கண்டிலோம்’ என்ன, அதுவே ஹேதுவாகத் திருநாட்டிற்கு எழுந்தருளினார் அன்றோ?

உருவுடை வண்ணங்கள் காணில் உலகு அளந்தான் என்று துள்ளும்-நீலம் குவளை காயா உருப்பெற எழுதின சித்திரம் இவற்றைக் காணில், நிறமாத்திரத்தையும் ஊனக் கண்ணுக்குத் தோன்றுகிற எளிமைத் தன்மையையுங் கொண்டு, குறைகுண நிரூபணம் பண்ணாதே எல்லார் தலைகளிலும் திருவடிகளை வைத்தவன் என்று, பசுவின் அருகே கட்டி வைத்த கன்று துள்ளுமாறுபோலே பரபரப்போடு கூடிய வியாபாரத்தைப் பண்ணாநிற்கும். கருவுடைத் தே இல்கள் எல்

---

1. “திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே” என்று மோஹித்ததற்கு ஐதிஹ்யம் காட்டுகிறார் ‘நாதமுனிகள்‘ என்று தொடங்கி. ‘இராஜா சாமர்தன் தலையிலே அடியையிட்டு யானைக்கழுத்திலே புக்கபடியைக் கண்டு’ என்னு மிவ்விடத்தில்,

இரும்பிடி நூறு சூழ விறுவரை நின்ற தேபோல்
கரும்பொடு காய்நெல் துற்றிக் கருப்புரக் கந்தில் நின்ற
சுரும்புகும் மதத்த சூளா மணி எனும் சூழி யானைப்
பெருந்தகைப் பிணையல் மன்னர் முடிமிதித் தேறி னானே.

என்ற சிந்தாமணிச் செய்யுள் நினைவிற்கு வருகின்றது. பெரிய முதலியார் - ஸ்ரீமந் நாதமுனிகள். ஐந்திர வியாகரண பண்டிதன் - அநுமான்,

லாம் கடல்வண்ணன் கோயிலே என்னும் - [1] கல்புதைத்துக் கிடக்கும் இடங்களைக் காணில், அவையெல்லாம் பெரிய பெருமாள் பள்ளிகொண்டருளுகிற கோயிலே என்பாள். [2] இவற்றிற்கு உள்ளீடு சர்வேசுவரன் ஆகையாலே, இவற்றைக் 'கரு' என்கிறது. "திசைமுகன் கருவுள் இருந்து படைத்திட்ட கருமங்களும்" என்பது மறைமொழி. வெருவிலும் வீழ்விலும் ஓவாக் கண்ணன் கழல்கள் விரும்பும் - தெளிவுடையளாய்ப் பந்துக்களைக் கண்டு அஞ்சியிருக்கும் போதோடு அறிவு அழிந்து மோகித்த சமயத்தோடு வாசி அற, இடைவிடாதே கிருஷ்ணன் திருவடிகளையே விரும்பாநிற்பாள். [3] இது, என்றும் ஒரே தன்மையாயிருக்கும். மாறுடி வருவது மோஹமும் உணர்த்தியும்; நிலையாயிருப்பது இதுவே. இதனால், பகவானிடத்தில் ஈடுபட்டிருக்குந் தன்மை இவர்க்குச் சத்தாபிரயுக்தம் என்றபடி. (8)

374.

விரும்பிப் பகவரைக் காணில்
  வியலிடம் உண்டானே என்னும்
கரும்பெரு மேகங்கள் காணில்
  கண்ணன்என்று ஏறப் பறக்கும்
பெரும்புல வாநிரை காணில்
  பிரானுளன் என்றுபின் செல்லும்
அரும்பெறல் பெண்ணினை மாயோன்
  அலற்றி அயர்ப்பிக்கின் றானே.

பொ - ரை :—பகவானுக்கு அடிமைப்பட்ட துறவிகளைக் கண்டால் விரும்பி, அகன்ற உலகத்தை எல்லாம் புசித்த திருமால் என்பாள்;

---

1. மற்றைத் தெய்வங்களின் உருவங்களைக் கண்டால் துச்சமாக நினைத்திருப்பவராகையாலே 'கல் புதைத்துக் கிடக்கும்' என்கிறார். "அந்தக் கல்லிற்கும் இந்தக் கல்லிற்கும் வேறுபாடு கண்டிலேன்" என்றார் ஒருபெரியார். இந்தக் கல் - அம்மிக்கல்.

2. மற்றைத் தேவர்களை "கரு" என்னலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவற்றிற்கு உள்ளீடு' என்று தொடங்கி. தாம் கூறியதற்கு மேற்கோள் காட்டுகிறார் "திசைமுகன்" என்று. இது, திருவாய். 5. 10 : 8.

3. "ஓவாக் கண்ணன் கழல்கள் விரும்பும்" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'இது என்றும்' என்று தொடங்கி.

கரிய பெரிய மேகங்களைக் கண்டால் கண்ணபிரான் என்று கூறிக் கொண்டு மேலே எழுந்து பறப்பதற்குப் பாராநின்றாள்; பெரியனவாயும் காட்சிக்கு இனியனவாயும் இருக்கிற பசுக்கூட்டங்களைக் கண்டால் கண்ணபிரான் அவற்றினிடையே இருக்கிறான் என்று அவற்றின் பின்னே செல்லுவாள்; பெறுதற்கரிய என் பெண்ணினை மாயவன் வாய் விட்டு அலற்றும்படிசெய்து மயங்கச் செய்கிறான் என்கிறாள்.

வி - கு :—பகவர் - பகவானுக்கு அடிமைப்பட்டவர்கள் ; சந்யாசிகள். காணில் விரும்பி என்னும் என மாறுக. விரும்புதல் - பெண்ணின் தொழில்.

ஈடு :—ஒன்பதாம்பாட்டு. [1]பெறுதற்கு அரிய இவள், தன்னையே வாய்வெருவி மோஹிக்கும்படி பண்ணாநின்றான் என்கிறாள்.

பகவரைக் காணில் விரும்பி வியல் இடம் உண்டானே என்னும் - [2]ஞானம் முதலான குணங்களால் நிறைந்தவர்களாய் இதர விஷயங்களில் விரக்தராய் இருக்கும் சந்யாசிகளைக் காணில் ஆதரித்து, பிரளய ஆபத்திலே உலகத்தை அடைய வயிற்றிலே வைத்துநோக்கி, பாதுகாக்கப்படவேண்டிய பொருள்களைப் பாதுகாத்தலைச் செய்கையாலே வந்த [3]நைரபேக்ஷ்யம் தோற்றஇருக்கின்ற சர்வேசுவரன் என்னும்.

---

1. "அரும்பெறல் பெண்ணினை" என்று தொடங்கி மேலுள்ளவற்றையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'பகவர்' என்ற சொல்லுக்குப் பொருள், ஞானம் சக்தி முதலான குணங்கள் நிறைந்து வைராக்கியத்தையு முடையவர்கள் என்பது பொருளாதலின், அதனைத் திருவுள்ளம்பற்றி 'ஞானம் முதலான' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். இவர்கட்கு முக்கோல் உண்டாகையாலே "முக்கோற்பகவர்" என்றும் இவர்கள் அழைக்கப்படுவார்கள்.

"நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய"

என்பது தொல்காப்பியம்.

"எறித்தரு கதிர்தாங்கி ஏந்திய குடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயல்மாலைக் கொளைநடை அந்தணீர்!"

என்பது கலித்தொகை. (பாலைக்கலி.)

3. நைரபேக்ஷ்யம் - விருப்பமின்மை; என்றது, மனநிறைவினைக் குறித்தபடி.

வியல் இடம் - ஆச்சரியப்படக் கூடிய பூமி. [1]"நின்ற குன்றத்தினை நோக்கி நெடுமாலே!" என்று மயங்கினாற்போலே காணும் அடியார்களைச் சர்வேசுவரனாகக் கொண்டு மயங்குகின்றதாகிய இதுவும். கரும் பெரும் மேகங்கள் காணில் கண்ணன் என்று ஏறப் பறக்கும் - கறுத்துப் பெருத்துச் சிரமத்தைப் போக்கக் கூடியதான மேகத்தைக் கண்டவாறே, அவ்வடிவையுடைய கிருஷ்ணன் என்று பறப்பாரைப் போலே இருக்கப் பரபரப் போடு நிற்பாள். [2]மேகத்தைக் கண்டவளவில் சிறகு எழும் போலே காணும். [3]மேகத்தைக் கண்டவாறே ஒரு பக்ஷபாதம் உண்டாகக் கூடியதன்றோ? [4]இராஜேந்திர சோழன் என்ற ஊரிலே திருவாய்க்குலத்தாழ்வார் என்று ஒருவர் உண்டு; அவர் கார்காலத்தில் 'பயிர் பார்க்க' என்று புறப்பட்டு மேகத்தைக் கண்டவாறே மோஹித்து விழுந்தார்; இவர் விழுந்ததைக் கண்டு நின்ற குடிமகன் ஓடி வந்து அவரை எடுத்துக் கொண்டு வந்து வீட்டிலே விட்டு, 'இவர் தன்மை அறிந்திருந்

---

1. அடிமையாயுள்ள பகவரை இறைவனாகக் கூறலாமோ? என்னும் வினாவினைத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிறார் "நின்ற குன்றத்தினை" என்று தொடங்கி. என்றது, அசித்துக்கும் ஈசுவரனுக்கும் பேதமுண்டாயிருக்கச் செய்தேயும் ஐக்கியம் கூறியது மயக்கத்தின் காரியமானாற்போன்று, இதுவும் மயக்கத்தின் காரியம் என்றபடி.

2. பறக்கும்போது சிறகு வேண்டாவோ? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் 'மேகத்தை' என்று தொடங்கி.

3. "பறக்கும்" என்றதற்கு ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'மேகத்தைக் கண்டவாறே' என்று தொடங்கி. பக்ஷபாதம்: சிலேடை.

4. மேகத்தைக் கண்டதும் கிருஷ்ணனாக மயங்கியதற்கு ஓர் ஐதிஹ்யம் அருளிச்செய்கிறார் 'இராஜேந்திரசோழன்' என்று தொடங்கி.

குவலயஞ் சூழ்கடல் காயா மரகதங் கொண்டல்நெய்தல்
குவலயங் கண்டன்பர் நைவரென் றூல் கொற்ற வாணற்குவா
குவலய நேமி தொட் டாயரங் கா கொடும் பல்பிறப்பா
குவலயங் கற்றுனைக் காணில்என் னுங்கொல் குறிப்பவர்க்கே.

என்ற திவ்வியகவியின் திருப்பாசுரம், இங்கு அநுசந்திக்கத்தகும்.

வெய்யோ னொளி தன்மேனியின் விரிசோதியின் மறையப்
பொய்யோஎனு மிடையாளொடு மிளையானொடும் போனான்
மய்யோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ
அய்யோஇவன் வடிவென்பதோர் அழியா வழகுடையான்.

என்ற கம்பநாட்டாழ்வார் திருவாக்கும் ஒருபுடை ஒப்பு நோக்கலாகும்.

தும் இந்நாளிலே இவரை வயல் பார்க்கப் புறப்படவிடுவாருண்டோ?' என்றான்.

பெரும் புலம் ஆநிரை காணில் பிரான் உளன் என்று பின் செல்லும் - [1]அளவு மிகுந்து பெருத்துக் காட்சிக்கு இனியதாயிருக்கிற பசுநிரைகளைக் காணில், என் நிலை அறிந்து வந்து உதவுகைக்காகக் கடைக்கூழையிலே வாராநின்றான் என்று, அவற்றிற்குப்பின்பு ஏறப்போகாநிற்கும். அன்றிக்கே, அவற்றின் திரளுக்குள்ளே அவனையும் காணலாம்என்று அவற்றின் பின்னே போகாநிற்கும் என்னுதல். அரும் பெறல் பெண்ணினை - [2]"ஸ்ரீராமா! தசரத சக்கரவர்த்தி செய்த மஹத்தான தவத்தாலும் மஹத்தான யாகம் முதலிய செயல்களாலும் அவருக்குப் புத்திரன் ஆனாய்" என்கிறபடியே, தம்மைப் பெற்றவர்கள் பட்ட வருத்தம் அல்லகண்டீர் நான் இவளைப் பெறுதற்குப் பட்டது; [3]அடியிலே பலகாலம் தவம் செய்தேயன்றோ இவளைப் பெற்றது இவள். மாயோன் - [4]"குரவர்களாகிய தாய் தந்தையர்கள் நம்மை என்செய்வார்கள்" என்கிறபடியே, பெற்றவர்களைக் கைவிடும்படி செய்யவல்லவன். அலற்றி அயர்ப்பிக்கின்றான் - எப்போதும் தன்னையே வாய் வெருவும்படிசெய்து, அத்துணையில் நில்லாது மோஹிக்கும்படி பண்ணுகின்றான். (9)

---

1. "பின்செல்லும்" என்பதற்கு, இரண்டுவகையாகக் கருத்து அருளிச்செய்கிறார். ஒன்று, கிருஷ்ணன் பசுக்கூட்டங்கட்குப் பின்னே வருகின்றான் என்று நினைத்து, முன்னிடத்தில் இருக்கும் இவள் கிருஷ்ணனிருக்கும் பின்னிடத்திற்குச் செல்கின்றாள் என்பது. மற்றொன்று, கிருஷ்ணன் பசுக்களின் மத்தியில் இருக்கின்றான் என்று நினைத்துப் பசுக்களின் பின்னையே தொடர்ந்து செல்கின்றாள் என்பது.

2. ஸ்ரீராமா. ஆரண். 66 : 3.

3. அவர்களைக் காட்டிலும் இவள் பட்ட கஷ்டம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் ‘அடியிலே’ என்று தொடங்கி. ‘அடியிலே’ என்றது, சிலேடை: ஆதிகாலத்திலே என்றும், திருவடிகளிலே என்றும் பொருள்.

"நெடுங்காலமும் கண்ணன் நீண்மலர்ப் பாதம் பரவிப் பெற்ற, தொடுங்காலொசியு மிடை இளமான்" என்பது, திருவிருத்தம்.37.

4. விஷ்ணுபுரா. 5. 6 : 27. இது, கோபிகைகள் வார்த்தை.

375.

அயர்க்கும் சுற்றும் பற்றிநோக்கும்
அகலவே நீள்நோக்குக் கொள்ளும்
வியர்க்கும் மழைக்கண் துளும்ப
வெவ்வுயிர் கொள்ளும்மெய் சோரும்
பெயர்த்தும் கண்ணா! என்று பேசும்
பெருமானே! வா என்று கூவும்
மயற்பெருங் காதல்என் பேதைக்கு
என்செய்கேன் வல்வினை யேனே.

பொ - ரை :—மயங்குவாள்; பின்னர் நாற்புறத்திலும் பலகாலும் பாராநிற்பாள்; விரிந்து செல்லும்படி நீண்டதூரம் பார்ப்பாள்; பின்னர் வியர்த்து நீராகநிற்பாள்; குளிர்ந்த கண்களில் நீர்துளும்பும்படி பெருமூச்சு எறிவாள்; தளர்வாள்; மீண்டும் கண்ணபிரானே! என்று பேசுவாள்; பெருமானே! வா என்று கூவுவாள்; பெரிய காதலால் மயக்கங்கொண்ட என் பெண்ணிற்கு வல்வினையேன் என் செய்வேன்? என்கிறாள்.

வி - கு :—அயர்க்கும் நோக்கும் கொள்ளும் வியர்க்கும் கொள்ளும் சோரும் பேசும் கூவும் என்பன: செய்யும் என் முற்றுக்கள். பேதை : பருவப்பெயர்.

ஈடு :—பத்தாம்பாட்டு. [1]நிறம் முதலியவற்றால் எம்பெருமானை ஒத்திருக்கும்பொருள்களை அநுசந்திப்பதற்கு சக்தி இல்லாத வியசனத்தின் மிகுதியாலே இவளுக்குப் பிறந்த வேறுபாடுகளைச் சொல்லி, நான் என் செய்வேன்? என்கிறாள்.

அயர்க்கும் - நின்றுகொண்டிருக்கும்போதே சித்தத்தின் வியாபாரம் அற்று மோஹிப்பாள். சுற்றும் பற்றி நோக்கும் - [2]பின்னையும் அறிவு குடிபுகுந்து, தன் ஆபத்தே செப்பேடாக அவன் வரவை அறுதியிட்டு வந்து அருகே நின்றானாக ஆதரத்தோடு சுற்றும் பாராநிற்பாள். அகலவே நீள்நோக்குக் கொள்ளும் - அங்குக் காணாமையாலே, 'எப்படியும் இவ்வளவில் புறப்படாதொழியான்' என்று அவன் புறப்படுதல் தொடங்

1. பாசுரம் முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. அயர்த்தவள் சுற்றும் பார்த்தற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'பின்னையும்' என்று தொடங்கி,

இக் காண்கைக்காகப் பரக்கக் கொண்டு பரமபதத்தளவும் செல்லப் பாராநிற்பாள். வியர்க்கும் - அங்குக் காணாமையாலே, 'என்னளவு இதுவாயிருக்க வாராது ஒழிவதே!' என்று நொந்து, இளைப்பாலே வேராநிற்பாள். மழைக் கண் துளும்ப வெவ்வுயிர் கொள்ளும் - மழைபோலே அருவி சொரிகின்ற கண்ணநீரானது கோபத் தீயாலே சுவறி அடி அற்றுக் கண்ணளவிலே துளும்பும்படி அவ் வெம்மை தோன்ற நெடுமூச்சு எறிவாள். என்றது, வியர்வையாய்ப் புறப்பட்டுப் புறப்படாதது கண்ணீராய்ப் புறப்படும்; கண்ணீராய்ப் புறப்படாதது நெடுமூச்சாய்ப் புறப்படும் என்றபடி.

மெய் சோரும் - அகவாயில் உள்ளது நேராகப் போனவாறே தன்வசம் இல்லாத சரீரத்தையுடையவளாம். [1]இவள் படியே இப்படி துவளுவது! ஏன்? முடிந்தாலோ? எனின், அற முடிய ஒட்டாதே ஆசையாகிய தளை! பெயர்த்தும் கண்ணா என்று பேசும் - மீண்டும் கிருஷ்ணனே! என்று விளிப்பாள். பெருமானே வா என்று கூவும் - [2]அவ்வாறு விளித்து, அந்தத் திருப்பெயராலே பிறந்த அநுசந்தானத்தின் மிகுதியாலே வந்த உருவெளிப்பாட்டாலே வந்தானாகக் கொண்டு வா என்று அழைப்பாள். அன்றிக்கே, பின்னையும் 'உடையவன் உடைமையை இழக்க விடுமோ? நாம் படுவது காண மறைய நின்றானத்தனை' என்று வா என்று அழைப்பாள் என்னுதல். மயல் பெரும் காதல் என் பேதைக்கு - மயக்கத்தைச் செய்யக் கூடியதான பெரிய காதலையுடைய என்னுடைய இளம்பெண்ணுக்கு. என்செய்கேன் - இவள் மயங்காதபடி செய்யவோ? அவனை வரச் செய்யவோ? நான் இதனைப் பொறுத்திருக்கவோ? வல்வினையேனே - இவளை இப்படிக் காணும்படி மஹா

---

1. தாயாரின் ஈடுபாடு, 'இவள்படியே' என்று தொடங்கும் வாக்கியம். 'இவள்படி' என்றது, சிலேடை: சரீரமும், விதமும்.

2. "பெருமானே வா என்று கூவும்" என்றதற்கு இரண்டு விதமாகக் கருத்து அருளிச்செய்கிறார் 'அவ்வாறு விளித்து' என்று தொடங்கி. 'உருவெளிப்பாடு' என்றது, ஞானத்தின் தெளிவை. முதல் கருத்து, பாவனையின் மிகுதியாலே முன்னே தோன்றுகையாலே வா என்று அழைக்கிறாள் என்றபடி. இரண்டாவது கருத்து, இந் நிலையில் உடையவன் நம்மைவிட்டுப் போகான், அருகில் மறைய நிற்கின்றான் என்று நினைத்து வா என்று அழைக்கிறாள் என்றபடி.

பாவத்தைப் பண்ணினேன். [1] ஆழ்வான் திருக்கண்கள் நோவு பட்டபின்பு எம்பெருமானர் திருவுள்ளம் நோவு பட்டாற் போலே காணும்; திருத்தாயார் திருவுள்ளமும் படுகிறது. (10)

376.

வல்வினை தீர்க்கும் கண்ணனை
வண்குரு கூர்ச்சட கோபன்
சொல்வினை யாற்சொன்ன பாடல்
ஆயிரத் துள்இவை பத்தும்
நல்வினை என்றுகற் பார்கள்
நலனிடை வைகுந்தம் நண்ணித்
தொல்வினை தீரஎல் லாரும்
தொழுதெழ வீற்றிருப் பாரே.

பொ - ரை:—வளப்பம் பொருந்திய திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீசடகோபர், கொடிய வினைகளை எல்லாம் தீர்க்கின்ற கண்ணபிரான் விஷயமாகச் சொல்லியல்லாது நிற்க ஒண்ணாத பக்தி பாரவஶ்யத்தாலே சொன்ன திருப்பாசுரங்கள் ஆயிரத்துள் இந்தப் பத்துத் திருப்பாசுரங்களையும் புண்ணியம் என்று கற்பவர்கள் நன்மையையுடைய பரம பதத்தை அடைந்து பழமையான வினைகள் எல்லாம் நீங்க எல்லாரும் தொழுது எழும்படி வேறுபட்ட சிறப்போடு எழுந்தருளியிருப்பார்கள்.

---

1. "என்செய்கேன்" என்றதற்கு ஓர் ஐதிஹ்யம் காட்டுகிறார் 'ஆழ்வான்' என்று தொடங்கி. ஆழ்வான் - கூரத்தாழ்வான். கூரத்தாழ்வாரை 'ஆழ்வான்' என்றும், நம்மாழ்வாரை 'ஆழ்வார்' என்றும் வழங்குதல் மரபு. 'ஆழ்வான் திருக்கண்கள் நோவுபட்ட பின்' என்றது, கிருமிகண்டசோழனாலே திருக்கண்கள் போயினமையைக் குறித்தபடி. இதன் விரிவை, அப்பெரியார் திவ்ய சரிதையில் காண்க.

அவத்தப்புன் சமயச்சொற் பொய்யை மெய்யென்று
அணிமிடறு புழுத்தான்தன் னவையின் மேவிச்
சிவத்துக்கு மேற்பதக்குண் டென்று தீட்டும்
திருக்கூர வேதியர்கோன் செவ்வி பாடப்
பவத்துக்கம் பிணிநீங்க நரகந் தூரப்
பரமபதங் குடிமலியப் பள்ளி கொள்ளும்
நவத்துப்புச் செங்கனிவாய்க் கரிய மேனி
நம்பெருமாள் அரங்கேசர் ஆடி ரூசல்.

என்றார் திவ்ய கவியும்.

வி - ரு :—சடகோபன் கண்ணனைச் சொல்வினையாற் சொன்ன பாடல் இவை பத்தும் வல்லினை என்று கற்பவர்கள் தொல்வினை தீர வைகுந்தம் நண்ணி எல்லாரும் தொழுது எழ வீற்றிருப்பர் என்க. வண்மை சடகோபருக்கு அடை. குருகூருக்கு ஆக்கனுமாம்.

ஈடு :—முடிவில், [1] இத்திருவாய்மொழி கற்றார், சம்சார துக்கம் போய், பகவானை விட்டுச் சிறிதும் பிரிதல் இல்லாத திருநாட்டிலே எல்லாரும் தலைமேல் தாங்கும்படி மேன்மையோடே இருக்கப்பெறுவர் என்கிறார்.

வல்வினை தீர்க்கும் கண்ணனை - அடியார்களுடைய பிரிவிற்குக் காரணமான மஹாபாவத்தைப் போக்கும் தன்மையனான கிருஷ்ணனை. இதனால், [2] பெற்றவர்கள் கைவிட்டால் பிடித்தவர்கள் கைவிடார்கள் என்பதனைத் தெரிவித்தபடி. வண் குருகூர்ச் சடகோபன் - பரம உதாரரான ஆழ்வார். [3] இன்று நாமுங் கூட இருந்து பகவானுடைய குணங்களை அநுசந்தானம் பண்ணும்படி பண்ணின ஔதார்யம் அன்றோ? ஆதலால், 'வண்சடகோபன்' என்கிறது. சொல் வினையால் சொன்ன பாடல் - [4] சொல்லி அல்லது நிற்க ஒண்ணாத பக்தி பாரவஶ்யத்தாலே சொன்ன பாடல். அன்றிக்கே, பகவானுடைய குணங்களின் பலாத்காரத்தாலே சொன்ன பாடல் என்னுதல். அன்றிக்கே, சொல் தொழிலால் - அதாவது, வாசிக

1. பின்னிரண்டு அடிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. மேற் பாசுரத்தில் "என்செய்கேன்" என்று கைவாங்கின பின், "வல்வினை தீர்க்கும் கண்ணனை" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'பெற்றவர்கள்' என்று தொடங்கி.

"பெற்றார் பெற்றொழிந்தார் பின்னும்நின் றடியேனுக்
குற்றா னாய் வளர்த்து என் னுயிராகி நின்றானை"

என்ற பெரியதிருமொழிப் பாசுரம் அநுசந்திக்கத்தகும்.

3. உதாரகுணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இன்று' என்று தொடங்கி.

4. 'வினை' என்பதற்கு மூன்று பொருள்; அதாவது பக்தி, பகவானுடைய குணங்கள், தொழில் என்பன. முதற்பொருளில், பக்தியை வினை என்கிறது, கர்மத்தினாலே சாதிக்கக்கூடியது பக்தியாகையாலே. இரண்டாவது பொருளில், பகவானுடைய செயல்களாலே குணங்கள் பிரகாசிக்க வேண்டுகையாலே, குணங்களை வினை என்கிறது. மூன்றாவது பொருள் வெளிப்படை.

மான அடிமையால் சொன்ன பாடல் என்னுதல். ஆயிரத்துள் இவைபத்தும் - ஆயிரம் திருவாய்மொழியிலும், இவர் எம்பெருமானுக்கு நிறம் முதலியவற்றால் ஒத்திருப்பவையான பொருள்களைக் கண்டு அவனாக நினைத்துப் பிச்சு ஏறின இத்திருவாய்மொழி.

நல்வினை என்று கற்பார்கள் - இப்படிப் பிச்சு ஏறின இது எல்லாருக்கும் கூடுவது ஒன்று அன்றே அன்றோ? ஆனபின்னர், இது [1]பாவனம் என்றாகிலும் கற்கவல்லவர்கள். அன்றிக்கே, இது விலக்ஷணகிருத்யம் என்று கற்குமவர்கள் என்னுதல். [2]நலனிடை வைகுந்தம் நண்ணி - பிரிவென்பது சிறிதும் இல்லாத பரமபதத்தைக் கிட்டி. தொல்வினை தீர - அநாதியாய் வருகின்ற [3]அவித்யை முதலானவைகள் தீர்ந்து. எல்லாரும் தொழுது எழ - சம்சாரம் சிறிதும் இல்லாதவரான நித்திய சூரிகளும் தொழுது ஆதரிக்க. என்றது, பணியா அமரரும் கூட, [4]"பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்" என்கிறபடியே, அவர்கள் வழிபாடுசெய்து ஆதரிக்கும்படி ஆவர்கள் என்றபடி. [5]"தொழுது எழு என்மனனே" என்று, அநாதிகாலம் பரம்பொருளைப்பற்றிய அறிவு இல்லாத ஒருவன் அவனும் [6]"இல்லாதவன்போலே ஆகிறான்" என்னும்படி போந்தவர் அவனைத் தொழுது உஜ்ஜீவித்தாற்போலே காணும், இவர் பாடின திருவாய்மொழியைக் கற்றவர்களைத் தொழுது நித்திய சூரிகள் உஜ்ஜீவிக்கும்படி. வீற்றிருப்பாரே - அவன் சேஷித்வத்திற்கு முடிசூடி இருக்குமாறுபோலே, இவர்களும் சேஷத்வ சாம்ராஜ்யத்துக்கு முடிசூடி இருக்கப்பெறுவர்கள்.

---

1. பாவனம் - உபாயம். போக்யதாபுத்தி இல்லையேயாகிலும் பாவனம் என்றாகிலும் கற்கவல்லவர்கள் என்றபடி. விலக்ஷணகிருத்யம் - போக்யம். அதாவது, இனியபொருள்.

2. நலனிடை - நன்மையிடத்திலேயான. நன்மை ஏது? என்ன, 'பிரிவென்பது சிறிதும் இல்லாத நன்மை' என்கிறார் 'பிரிவு' என்று தொடங்கி.

3. அவித்யை - ஞானத்திற்கு விரோதமாக இருப்பது.

4. திருவாய்மொழி. 10. 9 : 10.

5. "தொழுதெழ" என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார் "தொழுது எழு" என்று தொடங்கி.

6. தைத்திரீய. ஆந. 6.

[1] "அந்த முக்தன் சுதந்திர னாகிறான்" என்னக்கடவதன்றோ? என்றது, கர்மம் அற்றவன் ஆகின்றான் என்றபடி. வீற்று - வேறுபாடு. (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

மண்ணுலகில் முன்கலந்து மால்பிரிகை யால்மாறன்
பெண்ணிலைமை யாய்க்காதல் பித்தேறி—எண்ணிடில்முன்
போலிமுத லான பொருளைஅவ னுநினைந்து
மேல்விழுந்தான் மையல்தனின் வீறு.

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. வேதார்த்தியம்.

## ஐந்தாந் திருவாய்மொழி - "விற்றிருந்து"

## முன்னுரை

[1] மேல் திருவாய்மொழியிலே அப்படி விடாய்த்தவர் "இனி என்ன குறை எழுமையுமே" என்னப் பெறுவதே! [2] மேல் "பொய்நின்ற ஞானம்" தொடங்கிக் "கோவைவாயாள்" என்ற திருவாய்மொழி முடிய "மண்ணையிருந்துதுழாவி" என்னுந் திருவாய்மொழியிலுண்டான விடாய்க்குக் கிருஷிசெய்தபடி. அப்படி விடாய்க்கும்படி செய்த கிருஷியின் பலம் சொல்லுகிறது இத்திருவாய்மொழியில். [3] பேற்றுக்கு இதற்கு அவ்வருகு சொல்லலாவது இனி ஒன்று இல்லை. [4] "சூழ்விசும்பணிமுகில்" என்ற திருவாய்மொழிக்குப் பின் இத்திருவாய்மொழியாகப் பெற்றதில்லையே! என்று அருளிச்செய்வர் நஞ்சீயர்.

---

1. மேல் திருவாய்மொழியிலே உண்டான அளவிற்கு மீறிய அப்ரீதியையும், இத்திருவாய்மொழியிலே உண்டாகும் அளவிற்கு மீறிய பிரீதியையும் அநுசந்தித்த வியாக்யாதாவின் ஈடுபாடு, 'மேல் திருவாய்மொழியிலே' என்று தொடங்குவது. மேலே உண்டான வருத்தம், ஒன்றும் தோன்றாதே எப்போதும் பிரீதனானேன் என்று சொல்லும்படி ஆவதே! என்று ஆச்சரியப்படுகிறார் என்று கருத்து.

2. "இனி என்ன குறை" என்று ஈடுபடுகிறது என்? "பொய்ந்நின்ற ஞானம்" தொடங்கி இத்துணையும் கலவியும் பிரிவுமாயன்றோ சென்றது? அவற்றைக் காட்டிலும் இவ்விரண்டு திருவாய்மொழிகளுக்கும் அதிசயம் என்? என்ன, அருளிச்செய்கிறார் 'மேல் "பொய்ந்நின்றஞானம்"' என்று தொடங்கி. "பொய்ந்நின்றஞானம்" என்னுமிது, திருவிருத்தம். முதல் பாசுரம்.

3. அர்ச்சிராதிமார்க்கம் முதலாகப் பலம் பெற வேண்டியிருக்க, இதனையே பலமாகச் சொல்லுகிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பேற்றுக்கு' என்று தொடங்கி. என்றது, அங்குப் போய்ச் செய்யும் அடிமைகளை இங்கே இருந்தே செய்யும்படி தன் சொரூபம் முதலானவைகளைத் தெளிவாகக் காட்டிக் கொடுத்தானுகையாலே, அவ்வருகு சொல்லலாவது இல்லை என்றபடி.

4. பேற்றுக்கு, இதற்கு அவ்வருகு சொல்லலாவது இல்லை என்றதற்குச் சம்வாதம் காட்டுகிறார் "சூழ்விசும்பணிமுகில்" என்று தொடங்கி. என்றது, இத்திருவாய்மொழியிலுண்டான அநுபவ கைங்கர்யங்கள் அர்ச்சிராதிகதிக்குப் பின்பு பெறத் தக்கனவாகையாலே, அவ்வர்ச்சிராதிகதியைப்பற்றிப் பேசுகின்ற "சூழ்விசும்பணிமுகில்" என்ற திருவாய்மொழிக்குப் பின்னர் இத் திருவாய்மொழி அமையப் பெற்றதில்லையே! என்றபடி. "சூழ் விசும்பணி முகில்" இது, திருவாய். 10. 9; 1.

[1] பெருமாளும் இளைய பெருமாளுமான இருப்பிலே பிராட்டிக்குப் பிரிவு உண்டாக, மஹாராஜரையும் சேனைகளையும் கூட்டிக்கொண்டு சென்று பகைவர்கள் கூட்டத்தைக் கிழங்கெடுத்து அவளோடே கூடினாற்போலே, போலி கண்டு இவர் மயங்கின இழவெல்லாம் போகும்படி, [2] நித்தியவிபூதியையும் லீலா விபூதியையு முடையனாயிருக்கின்ற தன் படிகள் ஒன்றும் குறையாதபடி கொண்டு வந்து காட்டிக் கொடுத்து, 'கண்டீரே நாம் இருக்கின்றபடி? இந்த ஐசுவர்யங்களெல்லாம் ஒன்றாய்த் தலைக்கட்டுவது, நீர் உம்முடைய வாயாலே [3] ஒருசொல்லுச் சொன்னால் காணும்' என்று [4] இவர் திருக்கையிலே தாளத்தைக் கொடுக்க, அவ் விருப்புக்கு மங்களாசாசனம் பண்ணி, இவ்வுலகம் பரமபதம் என்னும் இரண்டு உலகங்களிலும் என்னோடு ஒப்பார் இலர் என்று மிக்க பிரீதியையுடையவ ராகிறார்.

[5] "நின்ற குன்றத்தினை நோக்கி நெடுமால்" ஆக மயங்கின மயக்கத்திற்கு வானமாமலையான தன்னைக் காட்டிக் கொடுத்

1. மேல் திருவாய்மொழியோடே இயைபு அருளிச்செய்கிறார் 'பெருமாளும்' என்று தொடங்கி. மேலே, ஆழ்வார் விடாய் கொண்டமைக்குப் பெருமாளைத் திருஷ்டாந்த மாக்கினாற்போலே, விடாய் தீர்ந்தமைக்கும் பெருமாளைத் திருஷ்டாந்த மாக்குகிறார் இங்கு. என்றது, இச்சேர்த்தியைச் சேர்த்து வைக்கின்றவர்கள் கூட இருக்கச்செய்தே பிரிகையும், போலி கண்டு மயங்குகையும், தக்க பரிகாரத்தைக்கொண்டு பரிஹரிக்கையும், இரண்டு இடங்களிலும் உண்டு ஆகையாலே, திருஷ்டாந்த தார்ஷ்டாந்திக பாவத்தைத் தெரிவித்தபடி. அங்கு, அச்சேர்த்திக்குக் கடகர் இளையபெருமாள், இங்கு, நித்யசூரிகள்; அங்கு மிருகத்தின்போலி, இங்கு அவன் போலி; அங்குப் பரிகாரம் மஹாராஜர் முதலானோர், இங்கு யாதோர் ஆகாரத்தைக் கண்டு மயங்கினார், அந்த ஆகாரத்தோடுகூடிய வேஷத்தைக் காட்டுகை; அங்குப் பிராட்டியோடு கூடிச் சந்தோஷித்தாற்போலே இவர் திருக்கையிலே தாளத்தைக் கொடுக்க இவரும் சந்தோஷித்து மங்களாசாசனம் பண்ணுகிறார் என்க.

2. "வீற்றிருந்தேழுலகும்" என்ற பாசுரத்தைக் கடாக்ஷித்து 'நித்திய விபூதியையும்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

3. "சொன்மாலைகள் ஏற்ற" என்ற பாசுரப் பகுதியைத் திருவுள்ளம் பற்றி 'ஒரு சொல்லுச் சொன்னால் காணும்' என்கிறார்.

4. "போற்றி" என்றும், "இசைமாலைகள் ஏத்தி" என்றும் வருகின்றவற்றைத் திருவுள்ளம்பற்றி 'இவர் திருக்கையிலே தாளத்தைக் கொடுக்க' என்கிறார். "போற்றி என்றே" என்றதனை நோக்கி 'மங்களாசாசனம் பண்ணி' என்கிறார்.

5. மேலே 'போலி கண்டு இவர் மயங்கின இழவெல்லாம் போம்படி' என்றதனை விரித்து விளக்குகிறார் "நின்ற குன்றத்தினை" என்று தொடங்கி,

தான்; "நீறு செவ்வே இடக் காணில் நெடுமால் அடியார் என்று" மயங்கி ஓடினதற்கு, "தூவி யம் புள்ளுடையான் அடலாழி அம்மான்" என்கிற நித்திய புருஷர்களைக் காட்டிக் கொடுத்தான்; "செய்யதோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன் மூர்த்தி ஈது" என்றதற்கு, "மையகண்ணாள் மலர்மேலுறைவாள் உறை மார்பினன்" என்று தானும் பெரியபிராட்டியாருமாக இருக்கிற இருப்பைக் காட்டிக்கொடுத்தான்; "திருவுடை மன்னரைக் காணில் திருமால்" என்றதற்கு, உபய விபூதிகளையுடையனான தன் ஐஸ்வர்யத்தைக் காட்டிக்கொடுத்தான்; "விரும்பிப் பகவரைக் காணில் வியலிட முண்டான்" என்று சிறிய ஆனந்த முடையாரைக் கண்டு மயங்கினவர்க்கு, "வீவில் இன்பம் மிக எல்லே நிகழ்ந்த நம் அச்சுதன்" என்று ஆனந்தமயனாயிருக்கிற இருப்பைக் காட்டிக் கொடுத்தான்; பிறர் வாயால் "என் செய்கேன்" என்றத்தைத் தவிர்த்து, தம் திருவாயாலே "என்ன குறை எழுமையுமே" என்னப் பண்ணினான்.

---

### 377.

வீற்றிருந்து ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீவில்சீர்
ஆற்றல் மிக்குஆளும் அம்மானை வெம்மா பிளந்தான்தனைப்
போற்றி என்றே கைகள் ஆரத்தொழுது சொல்மாலைகள்
ஏற்ற நோற்றேற்கு இனிஎன்ன குறைஎழு மையுமே?

பொ - ரை:—வேறுபாடு தோன்ற இருந்து ஏழுலகங்களிலும் ஒரே கோல் செல்லும்படியாகப் பொறுமை மிகுந்து ஆளுகின்ற அழிதலில்லாத கல்யாண குணங்களையுடைய அம்மானும், கொடிய கேசி என்னும் அசுரனது வாயைப் பிளந்தவனுமான சர்வேசுவரனைப் போற்றி போற்றி என்று சொல்லிக்கொண்டே கைகள் வயிறு நிறையும்படி தொழுது சொற்களாலாகிய மாலைகளை அவன் தலைமேல் தாங்கும்படி பாடவல்ல புண்ணியத்தையுடைய எனக்கு இனி ஏழேழ்படிகாலான பிறவிகள் வரக் கூடியனவாக இருந்தாலும் என்ன குறை இருக்கின்றது? ஒரு குறையும் இன்று என்றவாறு.

வி - கு:—ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருந்து ஆற்றல் மிக்கு ஆளும் வீவில் சீர் அம்மான் என்க. வீ என்பதற்கு அழிதல் என்பது பொருள் "போற்றி, பரிகாரம்" என்பர் நச்சினார்க்கினியர்,

"போற்றி - பாதுகாத்தருள்க; இகாவீற்றுவியங்கோள்" என்பர் அடியார்க்கு நல்லார். இனி எழுமையும் என்ன குறை? என மாறுக. எழுமையும் - எப்பொழுதும் என்னலுமாம்.

இத்திருவாய்மொழி கலித்துறை என்னும் பாவகையில் அடங்கும்.

ஈடு:—முதற்பாட்டு. [1] சர்வேசுவரனை வைத்து அடியார்களைக் காப்பாற்றுவதற்காக மனித ஸஜாதியனாய் வந்து அவதரித்த ஸ்ரீ கிருஷ்ணனைக் கவி பாடப் பெற்ற எனக்கு ஒரு நாளும் ஒரு குறையும் இல்லை என்கிறார்.

வீற்றிருந்து - வீற்று என்று வேறுபாடாய், [2] தன் வேறுபாடு அடங்கலும் தோற்ற இருந்து. ஈண்டு, [3] 'வேறுபாடு' என்றது, தன்னினின்று வேறுபட்ட எல்லாப்பொருள்களும் தனக்குச் சேஷமாகத் தான் சேஷியாகையாலே வந்த வேறுபாட்டினை. இங்ஙனன்றாகில், பரஸ்பரம் வேறுபாடு எல்லார்க்கும் உண்டேயன்றோ? ஆதலால், இங்கு 'வேறுபாடு' என்றது, உயர்த்தியால் வந்த வேறுபாட்டினையே என்க. [4] எல்லா ஆத்மாக்களுக்கும் ஞானமே வடிவமாக இருப்பதாலே அவனோடு ஒப்புமை யுண்டாயிருக்கச் செய்தேயும், எங்கும் பரந்திருத்தல் எல்லாப் பொருள்கட்கும் சேஷியாயிருத்தல் எல்லாப் பொருள்களையும் ஏவுகின்றவனாயிருத்தல் ஆகிற இவை அந்தச் சர்வேசுவரன் ஒருவனிடத்திலேயே கிடக்குமவையலவோ?

---

1. பாசுர முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். "வெம்மாபிளந்தான்தன்னை" என்றதனை நோக்கி 'ஸ்ரீ கிருஷ்ணனை' என்கிறார்.

2. ஈண்டு 'வேறுபாடு' என்றது, உயர்வினாலே வந்த வேறுபாடு என்று கூறத் திருவுள்ளம்பற்றி, அவ்வுயர்வுதான் எங்கும் பரந்திருத்தல், எல்லாப் பொருள்கட்கும் சேஷியாயிருத்தல், எல்லாரையும் ஏவுகின்றவனாயிருத்தல் ஆக மூன்றுவகையாக இருத்தலின், அம்மூன்று வகையான வேறுபாடுகளும் தோன்ற 'வேறுபாடு அடங்கலும்' என்கிறார்.

3. வேறுபாடு எவ்வகையாலே என்ன, அதனை அருளிச்செய்கிறார் 'ஈண்டு, வேறுபாடு என்றது' என்று தொடங்கி.

4. எல்லா ஆத்மாக்களும் ஈசுவரனோடு ஞானத்தாலே ஒரே தன்மையனவாக ஒத்து இருக்க, வேறுபாடு சொல்லும்படி யாங்ஙனம்? என்கிற சங்கையையும் நீக்காநின்றுகொண்டு, மேலே 'வேறுபாடு அடங்கலும்' என்றதில் சொல்லவேண்டுமென்று விரும்பிய தன்மை விசேஷங்களையும் காட்டுகிறார் 'எல்லா ஆத்மாக்களுக்கும்' என்று தொடங்கி.

[1] தன்னை ஒழிந்தார் அடையத் தனக்குக் கிஞ்சித்கரிக்கக் கடவனாய், தான் எங்கும் பரந்திருப்பவனாய், ஆகாசம் பரந்திருத்தலைப்போலன்றிக்கே, ஜாதி பொருள்கள்தோறும் நிறைந்திருக்குமாறுபோலே இருக்கக்கடவனாய், [2] இப்படிப் பரந்திருத்தல்தான் ஏவுவதற்காகவன்றோ? [3] இவ்வருகுள்ளாரை யடையக் கலங்கும்படி செய்யக்கூடியவைகளான அஞ்ஞானம் முதலானவைகள் முழுதும் தன் ஆசனத்திலே கீழே அமுக்குண்ணும்படி அவற்றை அதிஷ்டித்துக் கொண்டிருக்கும்படியைத் தெரிவிப்பார் 'இருந்து' என்கிறார். அன்றிக்கே, [4]தன்னினின்றும் வேறுபட்ட எல்லாப் பொருள்களையுமுடையவனாகையால் வந்த ஆனந்தம் தோற்ற இருக்கிற இருப்பைச் சொல்லுகிறது என்னுதல். ஏழ்உலகும் தனிக்கோல் செல்ல - [5] சுற்றுப்பயணம் வந்து உலகத்தையெல்லாம் நிர்வாகம் செய்கையன்றிக்கே, இருந்த இருப்பிலே உலகமடையச் செங்கோல் செல்லும்படியாக வாயிற்று இருப்பது. 'ஏழ்உலகு' என்று உபய விபூதியையும் சொல்லிற்றாதல்; லீலாவிபூதி மாத்திரத்தைச் சொல்லிற்று

---

1. மேலே கூறிய மூன்றனையும் மாறாடி அருளிச்செய்கிறார் 'தன்னை ஒழிந்தார்' என்று தொடங்கி. 'தன்னையொழிந்தாரடையத் தனக்குக் கிஞ்சித்கரிக்கக் கடவனாய்' என்றது, சேஷியாயிருத்தலை விளக்கியபடி. கிஞ்சித்கரிக்க - தொண்டுசெய்ய. 'தான் எங்கும் பரந்திருப்பவனாய்' என்றது, எங்கும் பரந்திருத்தலைக் கூறியபடி. 'பரந்திருத்தலை' விளக்குகிறார் 'ஆகாசம்' என்றது முதல் 'இருக்கக்கடவனாய்' என்றது முடிய. 'எல்லாப் பொருள்களையும் ஏவுகின்றவனாயிருத்தல்' என்றதனை விளக்குகிறார் 'இப்படிப் பரந்திருத்தல் தான்' என்று தொடங்கி.

2. ஆக, 'இப்படிப் பரந்திருத்தல்தான் ஏவுவதற்காகவன்றோ?' என்றது முடிய, "வீற்று" என்ற பதத்தின் பொருளை விளக்கிக் கூறியபடி.

3. "இருந்து" என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'இவ்வருகுள்ளாரை' என்று தொடங்கி. இதனால், 'தர்மாதிபீடம்' சொல்லப்படுகிறது. 'அஜ்ஞானம் முதலானவைகள்' என்றது, ஞான தர்ம வைராக்ய ஐஶ்வர்யங்களையும், அஜ்ஞான அதர்ம அவைராக்ய அநைஶ்வர்யங்களையும் குறித்தபடி.

4. "வீற்றிருந்து" என்றதனை இரண்டு சொற்களாகக் கொள்ளாது, ஒரே சொல்லாகக் கொண்டு பொருள் அருளிச்செய்கிறார் 'தன்னினின்றும்' என்று தொடங்கி.

5. மேலேயுள்ள "இருந்து" என்ற பதத்தை இங்கும் கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'சுற்றுப்பயணம் வந்து' என்று தொடங்கி.

தல். உபயவிபூதியையும் சொல்லும்போது [1]மூன்றுவகையான சேதநர்களையும் நான்குவகையான பிரகிருதியையும் சொல்லுகிறது. நான்குவகையான பிரகிருதிகளாவன : காரிய காரண உருவமான இருவகைப்பட்ட பிரிவுகள் அங்கு ; இங்கும், அப்படியுண்டான இருவகைப்பட்ட பிரிவுகள். லீலா விபூதிமாத்திரத்தைச் சொன்னபோது, கீழேயுள்ள உலகங்களையும் பூமியையும் கூட்டி ஒன்றாக்கி, பரமபதத்திற்கு இப்பாலுள்ள உலகங்களை ஆறாக்கி, ஆக, ஏழையும் சொல்லுகிறது என்று கொள்க. வீவில் சீர் - அழிவில்லாத கல்யாண குணங்களைச் சொல்லுதல்; நித்தியமான பரமபதத்தைச் சொல்லுதல். ஆக, 'ஏழுலகு' என்பதற்கு உபயவிபூதிகளையும் என்று பொருள் கொண்டால், இங்கு 'வீவில்சீர்' என்பதற்குக் கல்யாண குணங்கள் என்ற பொருளும், அங்கே, லீலாவிபூதியை மாத்திரம் கொண்டால், இங்கு நித்தியவிபூதி என்ற பொருளும் கோடல் வேண்டும் என்க.

இப்படி உபயவிபூதிகளையுமுடையவனை செருக்கால் தன் பக்கல் சிலர்க்குக் கிட்ட வொண்ணாதபடி இருப்பானோ? என்னில், அங்ஙனம் இரான் என்கிறார் மேல்: ஆற்றல் மிக்கு ஆளும் அம்மான் - [2]"ஸ்ரீராமபிரான் இராச்சியத்தை விநயத்தோடு கூடினவராய் நடத்துகையாலே இராச்சியத்தை உபாசித்தார்" என்பது போன்று கருவமற்றவனாய் ஆளுகின்ற அம்மான் என்கிறார். என்றது, [3]வழியல்லாவழியே வந்த ஐசுவரியமுடையவன் பிறர்க்குத் திரிய ஒண்ணாதபடி நடப்பானே யன்றோ? உடையவனுடைய ஐசுவரியமாகையாலே பிராப்தமாயிருக்கின்றமையைத் தெரிவித்தபடி. அன்றிக்கே, 'ஆற்

1. மூன்றுவிதமான சேதனர்: பத்தர், முக்தர், நித்தியர் என்பவர்கள். 'காரிய காரண உருவமான இருவகைப்பட்ட பிரிவுகள் அங்கு' என்றது, விமான கோபுரம் முதலானவைகள் காரியம், திவ்ய அசித்து காரணம் என்றபடி. 'இங்கும், அப்படி யுண்டான இருவகைப்பட்ட பிரிவுகள்' என்றது, இவ்வுலகத்திலும், பிரகிருதியையும் அதன் காரியமான மகத் முதலான காரியங்களையும் குறித்தபடி. இரண்டாம்பத்து. பக். 35. காண்க.

மேல் உலகம் ஆறாவன : புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம், ஜனர்லோகம், தபோலோகம், சத்தியலோகம் என்பனவாம்.

2. ஸ்ரீராமா. பா. 1: 97.

3. ஆற்றல்மிக்கு ஆளுதற்குக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வழியல்லா வழியே' என்று தொடங்கி. இது, "அம்மான்" என்றதன் பொருளை விரித்தபடி.

றல்' என்றது, வலியாய், 'இவ்வுலகமனைத்தையும் நிர்வஹிக்கைக்கு அடியான தாரண சாமர்த்தியத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுவாருமுளர். இனி, 'அம்மான்' என்பதற்கு, எல்லாரையும் நியமிக்கின்ற தன்மையால் வந்த ஐசுவரியத்தையுடையவன்என்று பொருள் கூறலுமாம். வெம் மா பிளந்தான் தன்னை - [1]'ஆற்றல் மிக்கு ஆளும்படி சொல்லுகிறது' என்று பட்டர் அருளிச்செய்யும்படி. என்றது, என் சொல்லியவாறோ? எனின், இவ்வுலகங்களனைத்தையு முடையவனானால், இருந்த விடத்தே இருந்து, "தஹபச - கொளுத்து அடு" என்று நிர்வஹிக்கையன்றிக்கே, இவர்களோடே ஒரே சாதியையுடையனாய் வந்து அவதரித்து, இவர்கள்செய்யும் பரிபவங்களை அடையப் பொறுத்து, களைபிடுங்கிக் காக்கும்படியைச் சொல்லுகிறது என்றபடி. [1] சமந்தகமணி முதலியவைகளிலே பரிபவம் பிரசித்தம்; "நான் 'பந்துக்களுக்கு ரக்ஷகன்' என்பது ஒரு பெயர்மாத்திரமேயாய், இவர்களுக்கு அடிமை வேலைகளையே செய்துகொண்டு திரிகின்றேன்" என்றும், "நல்ல பொருள்களை அநுபவிக்கும் அநுபவங்களில் பாதியைப் பகுத்திட்டு ஜீவித்துப் போந்தேன், இவர்கள் கூறுகின்ற கொடிய வார்த்தைகளையெல்லாம் பொறுத்துப் போந்தேன்" என்றும், அவன்தானும் அருளிச்செய்தான். இனி, 'வெம் மா பிளந்தான் தன்னை' என்பதற்கு, 'ஆற்றல் மிக்கு ஆளும் அம்மான் யார்? என்றால், இன்னான் என்கிறது' என்று அம்மங்கி அம்மாள் நிர்வஹிப்பர். கேசி பட்டுப்போகச்செய்தேயும் தம்வயிறு எரித்தலாலே '**வெம்மா**' என்கிறார் இவர். [2]"நன்றாகத் திறந்த வாயையுடையவனும் மஹாபயங்கரமானவனுமான அந்தக் கேசி என்னும் அசுரன் இடியினாலே தள்ளப்பட்ட மரம் போலே கண்ணபிரானுடைய திருக்கையாலே இரண்டுகூறு ஆக்கப்பட்டவனாய்க் கீழேவிழுந்தான்" என்பது விஷ்ணுபுராணம். கேசி வாயை அங்காந்துகொண்டு வந்தபோது, சிறு குழந்தைகள் துவாரம் கண்ட இடங்களிலே கையை நீட்டுமாறு போலே, இவன் பேதைமையாலே அதன்வாயிலே கையை

---

1. அவர்கள் பரிபவங்களைச் செய்வதற்கும், இவன் அவற்றைப் பொறுத்துக்கொண்டு களைபிடுங்கிக் காத்தற்கும் பிரமாணம் காட்டுகிறார் 'சமந்தகமணி' என்று தொடங்கி. "நான் பந்துக்களுக்கு" என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகம், பாரதம். இங்குத் திருவாய்மொழி மூன்றும் பத்து ஈட்டின் தமிழாக்கம் 17-ஆம் பக்கம் காண்க.

2. விஷ்ணு புரா. 5. 16 : 7.

நீட்டினன்; முன்பு இல்லாததொன்றைக் கண்ட காட்சியாலே கை பூரித்துக் கொடுத்தது; கையைத் திரும்ப வாங்கினன்; அவன் இருபிளவாய் விழுந்தான் என்பது.

போற்றி - [1]சொரூபத்திற்குத் தக்கனவாயன்றோ பரிவுகள் இருப்பன. [2]கேசி பட்டுப்போகச் செய்தேயும் சமகாலத்திற்போலே வயிறு எரிந்து படுகிறாராயிற்று இவர். என்றே - [3]"நம: என்று வாயால் எப்பொழுதும் சொல்லிக் கொண்டிருக்கும் தன்மை வாய்ந்தவர்களாய் இருப்பார்கள்" என்பது போன்று, ஒருகால் "பல்லாண்டு" என்றால், பின்னையும் "பல்லாண்டு பல்லாண்டு" என்னுமத்தனை. கைகள் ஆரத்தொழுது- "வைகுந்தம் என்று கைகாட்டும்" என்று வெறும் ஆகாசத்தைப்பற்றித் தொழுத கைகளின் விடாய் தீர்ந்து வயிறு நிறையும்படி தொழுது. சொல் மாலைகள்-வாடாத மாலைகள். என்றது, அநசூயை கொடுத்த மாலைபோலே செவ்வி அழியாத மாலைகள் என்றபடி. ஏற்ற - [4]"பூஜையைத் தானாகவே தலையாலே ஏற்றுக்கொள்ளுகிறார்" என்கிறபடியே, திருக்குழலிலே ஏற்றும்படியாக. நோற்றேற்கு - இவர் இப்போது நோற்றாராகச் சொல்லுகிறது, "மண்ணையிருந்து துழாவி" என்னும் திருவாய்மொழியில் சொல்லப்பட்ட விடாயை; [5]முன்கணத்திலே நிகழ்வது ஒன்றேயன்றோ ஒன்றுக்கு ஏதுவாவது. அன்றிக்கே,

---

1. "நூறுபிராயம் புகுவீர்" என்று சொல்லாமல், "போற்றி" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சொரூபத்திற்கு' என்று தொடங்கி. என்றது, சேஷத்வத்திற்கு அநுகுணமாகப் பரிந்து "போற்றி" என்று மங்களாசாசனம் செய்கிறார் என்றபடி.

2. மேலே 'கேசிபட்டுப்போகச்செய்தேயும்' என்ற வாக்கியத்தின் விவரணம், 'கேசி பட்டுப் போகச் செய்தேயும்' என்று தொடங்குவது.

3. நாராயணீயம்.

4. ஸ்ரீ சாத்வதம். 'திருக்குழலிலே ஏற்றும்படியாக' என்றது, சிரசா சுத் தரிக்க என்றபடி.

5. "மண்ணையிருந்து துழாவி" என்ற திருவாய்மொழியிலுண்டான விடாயைச் சாதனமாகச் சொல்லலாமோ? என்ன, அந்த வருத்தத்தைக் கண்டு அநுபவிப்பிக்கையாலே முன் கணத்தில் இருந்தமை மாத்திரமே கொண்டு அருளிச்செய்கிறதொழிய, உபாயம் அன்று என்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் 'முன் கணத்திலே' என்று தொடங்கி. ஈசுவரன் அபிப்பிராயத்தாலே ஏது என்றபடி.

[1] பகவானுடைய கிருபையை என்னவுமாம். இனி என்ன குறை - [2] பரமபதத்திற்குச் சென்றாலும் கிஞ்சித்காரத்தாலேயாகில் சொரூபம், அதனை இங்கே பெற்ற எனக்கு ஒரு குறை உண்டோ? [3] இங்கே இருந்தே அங்குத்தை அநுபவத்தை அநுபவிக்கப்பெற்ற எனக்கு 'அங்கே போகப்பெற்றிலேன்' என்கிற குறையுண்டோ? [4] அங்கே போனாலும் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே யன்றோ? இது எத்தனை குளிக்கு நிற்கும்? என்னில், எழுமையுமே - [5] முடிய நிற்குமவற்றை

1. 'பகவானுடைய கிருபையை என்னவுமாம்' என்றது, "நன்று சூட்டும் விதி எய்தினம்" என்கிறபடியே, பகவானுடைய கிருபையை என்றபடி.

2. "இனி என்ன குறை" என்னலாமோ? பரமபதப் பிராப்தி முதலானவை வேண்டாவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பரமபதத்திற்குச் சென்றாலும்' என்று தொடங்கி. கிஞ்சித்காரம் - கைங்கர்யம்.

3. "இனி என்ன குறை" என்றதனைச் "சொன்மாலைகள் ஏற்ற நோற்றேற்கு" என்றதனோடே கூட்டி பாவம் அருளிச்செய்தார் மேல்; "இனி என்ன குறை" என்றதனைப் "போற்றி" என்ற பதத்தோடு கூட்டி வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார் 'இங்கே யிருந்தே' என்று தொடங்கி.

4. அங்குத்தை அநுபவம் எது? என்ன, 'அங்கே போனாலும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

பல்லாண் டென்று பவித்தி ரனைப் பரமேட்டியைச் சார்ங்கமென்னும்
வில்லாண் டான் தன்னை வில்லிபுத்தூர் விட்டு சித்தன் விரும்பிய சொல்
நல்லாண் டென்று நவின்றுரைப்பார் நமோ நாராய ணாய என்று
பல்லாண் டும் பர மாத்மனைச் சூழ்ந்திருந் தேத்துவர் பல்லாண்டே.

என்பது திருப்பல்லாண்டு. பா. 12.

பூவள ரும்திரு மாது புணர்ந்தநம் புண்ணியனார்
தாவள மான தனித்திவம் சேர்ந்து தமருடனே
நாவள ரும்பெரு நான்மறை ஓதிய கீதமெலாம்
பாவள ரும் தமிழ்ப் பல்லாண் டிசையுடன் பாடுவமே.

என்பது வேதாந்த தேசிகன் ஸ்ரீசூக்தி.

5. "எழுமையும்" என்பதற்கு, எல்லாக்காலமும் என்று பொருள் கூறத் திருவுள்ளம்பற்றி, அதற்கு, அச்சொல் அப்பொருளைக் காட்டுமோ? என்ற சங்கையைத் திருவுளத்தே கொண்டு விடை அருளிச்செய்கிறார் 'முடிய நிற்குமவற்றை' என்று தொடங்கி.

ஒருநாள் எழுநாள்போற் செல்லும்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு. (குறள். 1269.)

என்றவிடத்து, 'எழு நாள்' என்பது, பல நாட்கள் என்ற பொருளில் வந்துள்ளமை காண்க.

எவ்வேழாகச் சொல்லக்கடவதன்றோ? [1] "கீழே பத்துப் பிறவியையும் மேலே பத்துப்பிறவியையும் தன்னையும் பரிசுத் தப்படுத்துகிறது" என்றும், "மூவேழ் தலைமுறையைக் கரை ஏற்றுகிறது" என்றும் சொல்லப்பட்டிருக்கின்றதன்றே? (1)

378.

மைய கண்ணாள் மலர்மே லுறைவாள் உறைமார்பினன்
செய்ய கோலத் தடங்கண்ணன் விண்ணோர்பெருமான்தனை
மொய்ய சொல்லால் இசைமாலைகள் ஏத்தி உள்ளப்பெற்றேன்
வெய்ய நோய்கள் முழுதும் வியன்ஞா லத்து வீயவே.

பொ - ரை:—மைஅணிந்த கண்களையுடையவளும் தாமரைமலரில் வசிப்பவளுமான பெரிய பிராட்டியார் நித்தியவாசம் செய்கின்ற மார்பையுடையவனும், செந்நிறம் பொருந்திய அழகிய விசாலமான திருக்கண்களையுடையவனும், நித்தியசூரிகளுக்குத் தலைவனுமான சர்வேசுவரனைச் செறிந்த சொற்களாலே தொடுக்கப்பட்ட இசை பொருந்திய மாலைகளாலே, அகன்ற இவ்வுலகத்திலே கொடிய நோய்கள் முழுதும் அழியும்படியாகத் துதித்து அநுபவிக்கப் பெற்றேன் என்கிறார்.

வி - கு:—மைய கண் - கரிய கண் என்னலுமாம். விண்ணோர் பெருமான்தன்னை வியன் ஞாலத்து வெய்ய நோய்கள் முழுதும் வீய இசை மாலைகள் ஏத்தி உள்ளப்பெற்றேன் எனக் கூட்டுக.

ஈடு:—இரண்டாம்பாட்டு. [2] இம்மஹத்தான ஐசுவரியத்துக்கு அடியான திருமகள்கேள்வனும்படியை அருளிச்செய்கிறார்.

---

1. பனிநிழல்போலே ஒருவரை மாத்திரம் நோக்கிக்கொண்ட அளவேயோ? என்ற சங்கையிலே வேறும் ஒரு பொருள் அருளிச்செய்கிறார் 'கீழே பத்துப் பிறவியையும்' என்று தொடங்கி. என்றது, ஏழேழ் தலைமுறைக்கும் குறை இல்லை என்றபடி. இது, போதாயன தர்மம். "மூவேழ் தலைமுறையை" என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகம், பாரதம். தருமபுத்திரனைப் பார்த்து வீடுமன் கூறியது.

2. இப்பாசுரத்தில் "மையகண்ணாள் மலர்மேலுறைவாள் உறை மார்பினன்" (ஸ்ரீய:பதித்வம்) என்று கூறுவதற்கு நான்கு வகையில் கருத்து அருளிச்செய்கிறார். 'இம் மஹத்தான ஐஸ்வர்யத்துக்கு அடியான திருமகள் கேள்வனும்படியை அருளிச்செய்கிறார்' என்பது முதல் கருத்து. 'இம் மஹத்தான ஐசுவரியம் என்றது, முதற் பாசுரத்தின் முன்னிரண்டு அடிகளையும் திருவுள்ளம்பற்றி. 'சர்வேசுவரன் திருவருளாலே' என்றது முதல் 'இப்பிரபந்தங்கள் பிறந்தன' என்றது முடிய, இரண்டாவது கருத்து. இந்த இரண்டாவது கருத்தால், ஸ்ரீராமாயணத்தைக் காட்டிலும் திருவாய்மொழிக்கு ஏற்றத்தையும் ஏற்றத்திற்குரிய காரணத்தையும் அருளிச்செய்கிறார். இங்கு,

சர்வேசுவரன் திருவருளாலே அவன் கருத்து அறிந்து நடத்தும் பிரமனுடைய திருவருள் காரணமாக, நாரதர் முதலிய முனிவர்கள் மூலமாகவாயிற்று ஸ்ரீமத் ராமாயணம் தோன்றியது; இப்படிப்பட்ட ஸ்ரீராமாயணத்திற் காட்டில் தாம் அருளிச்செய்த பிரபந்தத்திற்கு ஏற்றம் அருளிச்செய்கிறார். "திருமாலால் அருளப்பட்ட சடகோபன்" என்கிறபடியே, அவர்களிருவருடையவும் திருவருள் அடியாகவாயிற்று இப்பிரபந்தங்கள் பிறந்தன. "சீதாயாஸ்சரிதம் மஹத்-சீதையினுடைய பெருமை பொருந்திய சரிதம்" என்னுமது இரண்டுக்கும் ஒக்கும்; "திருமாலவன்கவி யாது கற்றேன்" என்றாரேயன்றோ இவரும்? அவன் பாடித் தனியே கேட்பித்தான்; அவளோடே கூடக் கேட்பித்து அச்சேர்த்தியிலே மங்களாசாசனம் செய்தார் இவர்; மையகண்ணாள் மலர்மேலுறைவாள் உறை மார்பினனை யாயிற்றுக் கவிபாடிற்று.

[1] மைய கண்ணாள் - "கறுத்த கண்களையுடையவள்" என்னக் கடவதன்றோ. அன்றிக்கே,பெரியபிராட்டியார் திருக்கண்களாலே ஒருகால் பார்த்தால் ஒருபாட்டம் மழை விழுந்தாற் போலே சர்வேசுவரன் திருமேனி குளிரும்படியாயிற்று இருப்பது; ஆதலால், 'மைய கண்ணாள்' என்கிறார் என்னுதல். "மழைக்கண் மடந்தை" என்னப்படுமவளன்றோ அவள்.

---

"நாரணன் விளையாட் டெல்லாம் நாரத முனிவன் கூற
ஆரணக் கவிதை செய்தா னறிந்தவான் மீகி என்பான்"

என்ற கம்பராமாயணத் தனியன் நினைவு கூர்க.

"சீதாயாஸ்சரிதம்" என்றது முதல் 'என்றாரேயன்றோ இவரும்' என்றது முடிய, மூன்றாவது கருத்து. கவிக்கு விஷயம் பிராட்டியும் அவனும் என்கிற இது, ஸ்ரீராமாயணத்திற்கும் இப்பிரபந்தத்திற்கும் ஒக்கும் என்பது மூன்றாவதன் கருத்து. 'அவன் பாடித் தனியே' என்றதுமுதல் 'ஆயிற்றுக்கவிபாடிற்று' என்றது முடிய, நான்காவது கருத்து. 'அவன்' என்றது, ஸ்ரீவால்மீகிபகவானை. ஆக, ஸ்ரீராமாயணத்துக்கும் பிரபந்தத்துக்கும் இரண்டு ஆகாரத்தாலே வேறுபாடும், ஓர் ஆகாரத்தாலே ஒப்புமையும் கூறியபடி.

1. மைய கண்ணாள் - கறுத்த கண்களையுடையவள். இதற்குப் பிரமாணம்: "கறுத்த கண்களையுடையவள்" என்பது. இது, ஸ்ரீராமா. சுந். 16 : 5. இப்பொருளால் அவயவ சோபையைக் கூறியபடி. அன்றிக்கே, 'மை' என்று கருமையாய், அதனாலே கிடைத்த பொருள் குளிர்ச்சியாகக்கொண்டு, அதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'பெரியபிராட்டியார்' என்று தொடங்கி. திருக்கண்களின் குளிர்ச்சி மழைபெய்தாற்போலே இருப்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மழைக்கண் மடந்தை' என்று. இது, திருவிருத்தம். 52.

[1] இவள் திருவருள் இல்லாமையேயன்றோ அல்லாதார் விரூபாக்ஷர் ஆகிறது. "இந்த உலகமானது எந்தப் பிராட்டியின் புருவங்களினுடைய வியாபார விசேஷத்தால் நியமிக்கும் பொருளாயும், நியமிக்கப்படுகின்ற பொருளாயும், ஆகுகையாகிற தாரதம்மியத்தாலே மேடு பள்ளமுள்ளதாக ஆகின்றதோ அந்த ஸ்ரீரங்கநாயகியின் பொருட்டு நமஸ்காரம்" என்கிறபடியே, அவள் உண்மையாலும் இன்மையாலுமேயன்றோ ஒருவன் அழகிய மணவாளப்பிள்ளையாயிருக்கிறதும், ஒருவன் பிச்சையேற்பானுமாயிருக்கிறதும். மலர்மேல் உறைவாள் - செவ்வித் தாமரைமலரின் வாசனை வடிவெடுத்தாற்போன்று பிறந்தவள். [2] அவயவசோபை அது, சௌகுமார்யம் இது. உறை மார்பினன் - பூவிலும் கூசி அடியிடுமவள் பொருந்தி வசிக்கும் மார்வுபடைத்தவன். ஸ்ரீஜனகராஜன் திருமகள் பெருமாளைக் கைப்பிடித்தபின்பு ஸ்ரீமிதிலையை நினையாததுபோன்று, இவளும் இவன் மார்வில் இனிமை அறிந்தபின்பு தாமரையை நினையாதவள் என்பார் 'உறைமார்பினன்' என்கிறார். [3] "ஜனங்களின் சமீபத்திலிருக்கிற தன் சரீரத்தை முக்தன் நினைப்பதில்லை" என்கிறபடியே, முக்தர்கள் சம்சாரயாத்திரையை நினையாதது போன்று இவளும் தாமரைமலரை நினையாதபடி.

செய்ய கோலத் தடம் கண்ணன்-சிவந்து காட்சிக்கு இனியதாய்ப் பரப்பையுடைத்தான திருக்கண்களையுடையவன். [4] ஒரு பிரதேசத்திலே மேகம் மழை பெய்யாநின்றால் அவ்விடம் குளிர்ந்திருக்குமாறுபோலே, "மைப்படிமேனி" என்கிறபடியே, சர்வேசுவரனுடைய கரியமேனியை ஒருபடியே பார்த்

1. "செய்யகோலத்தடங்கண்ணன்" என்றதனைக் கடாக்ஷித்து பாவம் அருளிச்செய்கிறார் 'இவள் திருவருள்' என்று தொடங்கி. விரூபாக்ஷர் - சிவன். இவள் திருவருள் உண்டானால் தாமரைக்கண்ணனாகையும், அது இல்லாவிடில் விரூபாக்ஷனாகையுமாகிற இதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'இந்த உலகமானது' என்று தொடங்கி. இது, ஸ்ரீரங்கராஜஸ்தவம்.

2. "மையகண்ணாள்" என்றதனையும் கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'அவயவசோபை' என்று தொடங்கி.

3. தாமரைமலரை நினையாமைக்கு மற்றும் ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'ஜனங்களின்' என்று தொடங்கி. இது, சாந்தோக்கிய உப. 8. 12:3.

4. "மையகண்ணாள்" என்றதனைக் கடாக்ஷித்து, இவள் மைய கண்ணாளாகைக்கும், அவன் செய்ய கோலத் தடங்கண்ணனாகைக்கும் ஏதுவை அருளிச்செய்கிறார் 'ஒரு பிரதேசத்திலே' என்று தொடங்கி. அவன் திருமேனி கறுத்திருக்கும் என்பதற்குப் பிரமாணம், "மைப்படிமேனி" என்பது. இது, திருவிருத்தம். 94.

துக் கொண்டிருப்பாளே யன்றோ இவள், இவள் திருக்கண்களிலே அவன் திருமேனியின் நிறம் ஊறி இவள் மையகண்ணளாயிருக்கும்; [1] "செய்யாள் திருமார்வினில் சேர் திருமால்" என்கிறபடியே, மார்பிலிருக்கின்ற அவனை ஒருபடியே பார்த்துக் கொண்டிருக்கையாலே அவள் திருமேனியில் சிவப்பு ஊறி இவன் தாமரைக்கண்ணனாயிருக்கும்; [2] இருவர் படியும் இருவர் கண்களிலே காணலாம்; அவன்படி இவள் கண்களிலே காணலாம்; இவள்படி அவன் கண்களிலே காணலாம். இவர்களுடைய கண்கலவி இருக்கும்படியிறே இது. [3] இவர் கவி விண்ணப்பம் செய்யக் கேட்டு அத்தாலே வந்த பிரீதிக்குப் போக்கு விட்டு அவன் பிராட்டியைப் பார்க்க, அவள் 'வேறு ஒன்றிலே நோக்கில்லாமல் அத்தைக் கேட்கலாகாதோ?' என்று பிரேரிக்க இப்படிகாணும் கேட்டது. விண்ணோர்பெருமான் தன்னை-[4] இக்கண்ணின் குமிழ்க் கீழே விளையும் நாட்டினைச் சொல்லுகிறது. அன்றிக்கே, இக்கண்ணழகும் இச்சேர்த்தியழகும் காட்டில் எறித்த நிலாவாகாமல் "தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவுந் தலைமகனை" என்கிறபடியே, அநுபவிக்கின்ற போக்தாக்களையுடையவனை என்னுதல். [5] ஆக, பெரிய பிராட்டியாரும் அவனுங் கூடவிருக்க, நித்தியசூரிகள் ஓலக்கங்கொடுக்க ஆயிற்றுக் கவி கேட்பித்தது என்றவாறு.

மொய்ய சொல்லால் இசை மாலைகள் ஏத்தி உள்ளப்பெற்றேன் - சர்வேசுவரனுடைய வைலக்ஷண்யத்தை நினைத்துக்

---

1. பிராட்டியின் திருமேனி சிவந்திருப்பதற்குப் பிரமாணம், "செய்யாள் திருமார்வினில்" என்பது. இது, திருவாய்மொழி. 9. 4 1.

2. 'இருவர்படியும்' என்றது, சிலேடையாய் மேலே கூறியதற்கு விவரணமாக அமைந்தது. 'இருவர்படி' என்றதனை விரிக்கிறார் 'அவன்படி' என்று தொடங்கி. படி - திருமேனியும், தன்மையும்.

3. இருவருடைய கண்களின் அழகையும் வர்ணிப்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'இவர் கவி' என்று தொடங்கி.

4. 'இக்கண்ணின் குமிழ்க்கீழே' என்றது, ஸ்வாமியான தன்மையாலுண்டான ரக்ஷகத்வம் சொன்னபடி. ஆக, இதனால், தாரகத்வமும் போஷகத்வமும் சொன்னபடி. குமிழி - மதகுமோழை. இரண்டாவது பொருளிலே, "பெருமான்" என்றது, அளவிறந்த இனிமையைச் சொல்லுகிறது. "தாமரைக்கண்ணனை" என்பது, திருவாய்மொழி. 2. 6 : 3.

5. மேலேகூறிய எல்லாவற்றையுங் கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'ஆக' என்று தொடங்கி.

'கவிபாட' என்று ஒருப்பட்டு, [1] வேதவாக்குக்கள் மனத்தால் நினைக்கவும் முடியாமல் எந்த ஆனந்த குணத்தினின்றும் மீளுகின்றனவோ" என்கிறபடியே, மீளாமல் விஷயத்துக்கு நேரான பாசுரமிட்டுக் கவி பாடப் பெற்றேன். 'மொய்' என்பது, செறிவைச் சொல்லுதல்; அல்லது, பெருமையைச் சொல்லுதல். என்றது, [2] செறிவில்லாத பந்தமாயிருக்கையன்றிக்கே, கட்டுடைத்தாயிருக்கையாதல், விஷயத்தை விளாக்குலை கொள்ளவற்றாயிருக்கையாதல் என்றபடி. வாசனைமிக்குள்ள மாலை போலே, கேட்டார் கட்டுண்ணும்படி இசைமிகுந்து இருப்பனவாதலின் 'இசைமாலைகள்' என்கிறது. நினைத்துஅன்று போலேகாணும் ஏத்திற்று ; ஆதலால், 'ஏத்தி உள்ளப் பெற்றேன்' என்கிறது. இதனால், [3] "மனம் முன்னே வாக்கு பின்னே" என்கிற நியதி இல்லையாயிற்று இவர்பக்கல் என்கிறது. [4] "என்முன்சொல்லும்" என்கிறபடியே, அவன் நினைவு மாறுமையாலே இது சேர விழுமேயன்றோ? [5] நாமுதல்வந்து புகுந்து நல்லின் கவி தூமுதல் பத்தர்க்குத் தான் தன்னைச் சொன்னதாகையாலே சேர விழும் என்றபடி. அன்றிக்கே, "முடியானே" என்ற திருவாய்மொழியில் உறுப்புக்கள் விடாய்த்தாற்போலே, இங்கும் தனித்தனியே ஆயிற்று அநுபவிக்கிறது என்னலுமாம். [6] தாமும் உறுப்புக்களைப்போன்று

---

1. தைத்திரிய ஆன. 9 : 1. 'விஷயத்துக்கு நேரான பாசுரம்' என்றது, "மொய்" என்ற பதத்திற்கு எழுதியுள்ள இருவகைப்பொருள்களுள் இரண்டாவது பொருளாகிய 'பெருமை' என்பதனைப் பற்ற.

2. "செறிவெனப் படுவது நெகிழிசை யின்மை" என்பது தண்டியலங்காரம்.

3. "மனம் முன்னே" என்பது, யஜுஸ்ஸம்ஹிதை. பிரீதி வழிந்த சொல் ஆகையாலே, நியதி இல்லையாயிற்று என்றபடி.

4. ஆயின், கவி சேர விழுந்தபடி எங்ஙனே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "என்முன் சொல்லும்" என்று தொடங்கி. இது, திருவாய்மொழி. 7. 9 : 2.

5. ஆம்முதல்வன் இவன்என்று தன்தேற்றி என்
நாமுதல் வந்து புகுந்து நல்லின்கவி
தூமுதல் பத்தர்க்குத் தான்தன்னைச் சொன்ன என்
வாய்முதல் அப்பனை என்று மறப்பேனோ?

என்பது திருவாய்மொழி.

6. கரணங்கள் தனித்தனியே அநுபவிக்கின்றனவாகில், "முடியானே" என்ற திருவாய்மொழியிற்போன்று, அவற்றைக் கர்த்தாக்களாகச் சொல்லாது "ஏத்தி உள்ளப் பெற்றேன்" என்றல் கூடுமோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தாமும்' என்று தொடங்கி. கரணங்களைப் போன்று தாமும் அர்வயித்ததற்குப் பிரமாணம், "நாட்டினாய்" என்ற திருப்பாசுரம்.

ஈடுபட்டார். என்றது, [1] "நாட்டினாய் என்னை உனக்கு முன் தொண்டாக, மாட்டினேன் அத்தனையே கொண்டு என் வல்வினையைப், பாட்டினால் உன்னை என்நெஞ்சத் திருந்தமை,காட்டினாய் கண்ணபுரத்துறை யம்மானே!" என்கிறபடியே, இவர் வாக்கு கவிபாட, இவர்தாம் நம்மைப்போன்று அநுசந்தித் தாரித்தனை என்றபடி.

வெய்ய நோய்கள் முழுதும் வியன் ஞாலத்து வீய-"அவசியம் அநுபவித்தே தீரவேண்டும்" என்கிறபடியே, அநுபவித்தால் அல்லது நசிக்கக் கடவன அல்லாத கர்மங்கள் முழுதும் நசிக்க. [2] இவ்வுலகத்திலே இருக்கச்செய்தே, இவைமுழுதும் அழிந்தன என்று சொல்லலாம்படியாயிற்று பகவானுடைய அநுபவத்தாலே பிறந்த தெளிவு; ஆதலால், '**வியன் ஞாலத்து வீய**' என்கிறது. அன்றிக்கே, [3] பனிநிழல்போலே தம்மை ஒருவரையும் நோக்கிக்கொள்ளுகையன்றிக்கே, ஊரும் நாடும் உலகமும் தம்மைபோலேயாம்படி தாம் இருந்த உலகத்தில் உண்டான கர்மங்களும் முழுதும் அழிந்தன என்னுதல். அங்ஙனமன்றிக்கே, "**வியன்ஞாலம்**' என்று வேறு ஒரு தேசம் போலே இருக்கச் சொல்லுகையாலே, தாம் "வீற்றிருந்தேழுலகு" என்னும் இத் திருவாய்மொழியை அருளிச்செய்கிறது பரமபதத்திலே இருந்துபோலே காணும்' என்று அருளிச்

---

1. "நாட்டினாய்" இது, பெரிய திருமொழி. 8. 10: 9. இதற்கு வியாக்யாதா அருளிச்செய்த பொருள் வருமாறு: நாட்டினாய் என்னை உனக்கு முன் தொண்டாக - அடிமையில் இனிமை யறியாத என்னை, 'இவன் நம்முடையான்' என்று அங்கே நாட்டு என்று நிறுத்திவைத்தாய்; உன்னுடைய அங்கீகாரத்தைக்கொண்டு முன்புள்ள கர்மங்களை வாசனையோடே போக்கினேன். பாட்டினால் உன்னை என் நெஞ்சத் திருந்தமை காட்டினாய் - பாடின வழியாலே, சர்வஜ்ஞனாய் சர்வசக்தியாயிருக்கிற நீ என் மனத்திலே இருந்தமையைப் பிரகாசிப்பித்தாய். கண்ணபுரத்துறை யம்மானே - பாடுவித்த ஊர் திருக்கண்ணபுரம். பாடுவித்த முக்கோட்டை இருக்கிறபடி.

2. இவ்வுலகத்தில் இருக்கச்செய்தே வினைகள் வீயக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவ்வுலகத்திலே' என்று தொடங்கி.

3. இரண்டாவது பொருளில், "வியன் ஞாலத்து வீய" என்பதற்கு வியன்ஞாலத்திலே யுள்ளவர்களுடைய பாவங்கள் அழியும்படியாக என்று பொருள் கொள்க. ஞாலம் என்றது, ஆகுபெயர்.

செய்வர். [1]பாவனையின் மிகுதியாலே திருவுள்ளம் பரமபதத்திலேயாய் அங்குற்றாராய்த் தோன்றுகிறபடி. வியன் ஞாலம் - ஆச்சரியப்படத் தக்க உலகம் என்னுதல்; பரப்பையுடைத்தான உலகம் என்னுதல். (2)

### 379.

வீவில் இன்பம்மிக எல்லை நிகழ்ந்த நம் அச்சுதன்
வீவில்சீரன் மலர்க்கண்ணன் விண்ணோர் பெருமான்தனை
வீவில் காலம் இசைமாலைகள் ஏத்திமேவப்பெற்றேன்
வீவில் இன்பம்மிக எல்லை நிகழ்ந்தனன் மேவியே.

பொ - ரை :—நித்தியமான இன்பத்தினது மிக்க எல்லையிலே தங்கியிருக்கின்ற நம் அச்சுதனும், அழிவில்லாத கல்யாண குணங்களையுடையவனும், தாமரைமலர்போன்ற திருக்கண்களையுடையவனும், நித்தியசூரிகளுக்குத் தலைவனுமான சர்வேசுவரனை ஒழிவில்லாத காலமெல்லாம் இசை பொருந்திய பாமாலைகளால் துதித்துக் கிட்டப்பெற்றேன்; அவ்வாறு அவனைக் கிட்டியதனால் முடிவில்லாத மிக்க இன்பத்தினது எல்லையையுடையனானேன் என்கிறார்.

வி - கு :—'மிக' என்பது, மிக்க என்ற சொல்லின் விகாரம். மேவி வீவில் மிக்க இன்ப எல்லை(யிலே) நிகழ்ந்தனன் என மாறுக.

ஈடு :—மூன்றாம்பாட்டு. [2]எல்லா நற்குணங்களையுமுடையனாய் உபயவிபூதிகளையுமுடையனான சர்வேசுவரனைக் கிட்டிக் கவி பாடுகையாலே, அவனுடைய ஆனந்தத்தையும் விளாக்குலை கொள்ளும்படியான ஆனந்தத்தையுடையனானேன் என்கிறார்.

---

1. இங்கே இருக்கச் செய்தே, அங்குற்றாராகச் சொல்லக் கூடுமோ? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் 'பாவனையின் மிகுதியாலே' என்று தொடங்கி. "வியன்ஞாலம்" என்று வேறு ஒரு தேசம்போலே அருளிச்செய்கையாலே, பாவனையின் மிகுதியாலே தாம் பரமபதத்திலே இருக்கின்றாராய் இந்த உலகத்தில் தம்முடைய சம்பந்தமுடையவர்களுடைய பாவங்கள் அழியும்படி பாடினேன் என்கிறார் என்பது கருத்து.

2. 'எல்லா நற்குணங்களையுமுடையனாய் உபய விபூதிகளையுமுடையனான சர்வேசுவரன்' என்றது, "வீவில் சீரன்", "விண்ணோர் பெருமான்" என்ற தொடர்களைத் திருவுள்ளம்பற்றி. ஈசுவரனுடைய ஆனந்தத்தைச்சொல்லி "மிக எல்லை நிகழ்ந்தனன்" என்று தம்முடைய ஆனந்தத்தைச் சொல்லுகையாலே, 'அவனுடைய ஆனந்தத்தையும் விளாக்குலைகொள்ளும்படியான' என்கிறார்.

வீவு இல் இன்பம்-நாசம் இன்றிக்கே இருப்பதான ஆனந்தம். அதுதான் எவ்வளவு போதும்? என்னில், மிக எல்லை நிகழ்ந்த - ‘இனி, இதற்கு அவ்வருகு இல்லை’ என்னும்படியான [1] எல்லையிலே இருக்கிற, நம் - [2] ஆனந்த வல்லியில் பிரசித்தி. அச்சுதன் - [3] இதனை ஒரு பிரமாணம் கொண்டு விரித்துக்கூற வேண்டுமோ? இவ் வானந்தத்திற்கு ஒருகாலும் அழிவு இல்லை என்னுமிடம் [4] திருப்பெயரே சொல்லுகிறதேயன்றோ? வீவு இல் சீரன் - இந்த ஆனந்தத்திற்கு அடியான [5] பரமபதத்தையுடையவன். அன்றிக்கே, நித்தியமான குணங்களையுடையவன் என்றுமாம். [6] குணங்களும் விபூதியும் ஆனந்தத்திற்குக் காரணமாயன்றோ இருப்பன. மலர்க் கண்ணன் - [7] ஆனந்தத்தை இயல்பாகவேயுடையவன் என்னுமிடத்தைத் திருக்கண்கள் தாமே கோள் சொல்லிக்கொடுப்பனவாம். விண்ணோர் பெருமான் தன்னை - [8] இக் கண்ணழகுக்குத் தோற்று ‘ஜிதம் - தோற்

---

1. ‘எல்லையிலே இருக்கிற’ என்றது, அழிவு இன்றிக்கே இருக்கிற ஆனந்தத்தினது முடிந்த எல்லையிலே இருக்கிற அச்சுதன் என்றபடி. ஆக, முதலடியால், உலகத்தாரது ஆனந்தங்கள் அல்பமாயும் அளவிற்குட்பட்டதாயும் இருப்பனவேயாமன்றோ? அவை முதலான தோஷங்கள் இல்லை; இறைவனுடைய ஆனந்தத்திற்கு என்பதனைத் தெரிவித்தபடி.

2. ‘ஆனந்தவல்லியிற் பிரசித்தி’ என்றது, “யதோ வாசோ நிவர்த்தந்தே” என்ற வாக்கியத்தைத் திருவுள்ளம்பற்றி.

3. ‘இதனை’ என்றது, நித்தியமான நிரதிசயமான ஆனந்தத்தையுடையனா யிருக்கிற இதனை என்றபடி.

4. ‘திருப்பெயரே சொல்லுகிறதேயன்றோ’ என்றது, அச்சுதன் என்ற திருப்பெயரின் பொருளினைத் திருவுள்ளம்பற்றி. அச்சுதன் - அழியாதவன். “சுதந்திரமின்றித் தோன்றியழியும் உயிரும் பிறவுமாகிய சகத்திற்கு அவ்வாறு தோன்றியழியான் தலைவனாகவேண்டும் என்பார் அச்சுதன் என்றார்.” (நன். சூ. 258. சங்.)

5. சீரன் - உலகத்(பரமபதத்)தையுடையவன்; ‘சீர்’ என்றது, ‘ஸ்ரீ’ என்றபடியாய் உலகத்தைச் சொல்லுகிறது. இரண்டாவது பொருளில் சீரன் - குணங்களையுடையவன்; சீர் - குணம்.

6. ஆனந்தத்தைக் கூறிய பின், குணங்களையும் விபூதியையும் அருளிச்செய்கைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் ‘குணங்களும் விபூதியும்’ என்று தொடங்கி.

7. முதலடியினையும் கூட்டிக் கருத்து அருளிச்செய்கிறார் ‘ஆனந்தத்தை இயல்பாகவே யுடையவன்’ என்று தொடங்கி.

8. “மலர்க்கண்ணன்” என்றதன்பின் “விண்ணோர்பெருமான்” என்றதனை வைத்ததற்கு வாசனை ‘இக் கண்ணழகுக்குத் தோற்று’ என்று தொடங்குவது.

ரும்' என்பாரை ஒரு நாடாகவுடையவனை. [1] "தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை" என்னக்கடவ தன்றோ?

வீவு இல் காலம்-சிற்றின்பங்களை அநுபவிக்கப் புக்கால், அவை அல்பம், நிலைநில்லாமை முதலிய குற்றங்களாலே கெடுக்கப்பட்டவை ஆகையாலே அநுபவிக்குங் காலமும் அல் பமாயிருக்கும்; இங்கு, அநுபவிக்கப்படும் பொருள் அளவிற்கு அப்பாற்பட்டதாகையாலே காலமும் முடிவில்லாத காலமாகப் பெற்றது என்பார் 'வீவில்காலம்' என்கிறார். [2] "ஒழிவில் கால மெல்லாம்" என்ன வேண்டியிருக்கும் என்றபடி. இசை மாலை கள் - [3] 'கருமுகைமாலை' என்னுமாறு போன்று இசையாலே செய்த மாலை. வாசிகமான அடிமையன்றோ செய்கின்றது. ஏத்தி மேவப் பெற்றேன், - ஏத்திக்கொண்டு [4] கிட்டப் பெற் றேன். இதனால் பலித்தது என்? என்னில், வீவு இல் இன்பம் மிக எல்லை நிகழ்ந்தனன் - நித்தியமாய் நிரதிசயமான ஆனந் தத்தையுடையேனானேன். சர்வேசுவரனுடைய ஆனந்தத் தையும் உம்முடைய ஆனந்தத்தையும் ஒன்றாகச் சொன்னீர்; பின்னை உமக்கு வேற்றுமை என்? என்னில், வேற்றுமை எனக்குச் சிறிது உண்டு என்கிறார் மேல்: மேவி - அவனுக்கு இயல்பிலே அமைந்தது; எனக்கு அவனை அடைந்த காரணத் தால் வந்தது; அவனுடைய ஆனந்தத்திற்கு அடி இல்லை; என்னுடைய ஆனந்தத்திற்கு அடி உண்டு. என்றது, [5] "இந் தப் பரமாத்மா தானே ஆனந்தத்தைக் கொடுக்கின்றான்" என்கிற ஏற்றம் உண்டு எனக்கு; அவனுக்குத் தான்தோன்றி என்றபடி. (3)

---

1. திருவாய்மொழி. 2. 6 : 2.

2. திருவாய்மொழி. 3. 3 : 1.

3. 'கருமுகைமாலை' என்றது, வேறு மலர்கள் கலவாமல், கருமுகை மலர்களாலேயே கட்டப்பட்ட மாலை என்றபடி.

4. கிட்டப்பெற்றேன்; கிட்டுதல் - மானச அநுபவத்தின் தெளிவு.

5. இதனால், ஸ்வார்ஜிதம்போலே அவனுடைய ஆனந்தம், பிதிரார் ஜிதம்போலே தம்முடைய ஆனந்தம் என்கிறாராயிற்று.

380.

மேவி நின்று தொழுவார் வினைபோக மேவும்பிரான்
தூவியம் புள்ளுடை யான்அட லாழி அம்மான்தனை
நாவிய லால்இசை மாலைகள் ஏத்தி நண்ணப்பெற்றேன்
ஆவிஎன் ஆவியை யானறி யேன்செய்த வாற்றையே.

பொ - ரை :—வேறுபயன் ஒன்றையும் கருதாது பொருந்திநின்று தொழுகின்ற அடியார்களுடைய பாவங்கள் போகும்படி அவர்களோடு சேர்கின்ற உபகாரகனும், சிறகையுடைய அழகுபொருந்திய கருடப் பறவையை வாகனமாகவுடையவனும், பகைவர்களைக் கொல்லுகின்ற சக்கரத்தைத் தரித்த தலைவனுமான சர்வேசுவரனை, நாவின் தொழிலாலே இசைமாலைகளைக்கொண்டு, ஏத்திக் கிட்டப்பெற்றேன்; பரமாத்மாவான சர்வேசுவரன் என் ஆத்மாவைச் செய்த தன்மையினை யான் அறிய மாட்டுகின்றிலேன் என்கிறார்.

வி - கு :—தொழுவார் : பெயர். ஆவி, என் ஆவியைச் செய்த ஆற்றை யான் அறியேன் என்க.

ஈடு:—நாலாம்பாட்டு. [1] அநந்யப் பிரயோஜனரையும், முதலிலேயே வேறு பயன்களில் இழியாத நித்தியசூரிகளையுமுடையனாய் வைத்து, நித்தியசூரிகளுக்கு அவ்வருகான தான் நித்திய சம்சாரியான தம்பக்கல் செய்த மஹோபகாரத்தைத் தம்மால் அளவிட்டறிய முடிகிறதில்லை என்கிறார்.

மேவி நின்று தொழுவார் - கிட்டக் கொண்டு [2] "நான் உனக்குத் தருகிறேன், நீ எனக்கு ஒன்றுகொடு" என்று வேறு பிரயோஜனங்களுக்கு மடியேற்றுக்கொண்டு போகை யன்றிக்கே, [3] "வழுவாவகை நினைந்து வைகல் தொழுவார்" என்கி

---

1. பாசுரம் முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். அநந்யப்பிரயோஜனர் - வேறு பிரயோஜனங்களை விரும்பாதவர்கள். "அம்மான்" என்றதனைக் கடாக்ஷித்து 'அவ்வருகான தான்' என்கிறார். "யான் அறியேன் செய்த ஆற்றை" என்றதனைக் கடாக்ஷித்து 'நித்திய சம்சாரியான' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. 'நான் உனக்குத் தருகிறேன்' என்றது, நீ கொடுக்கும் பலத்துக்குத் தகுதியாகச் சாதநாநுஷ்டானத்தைச் செய்கிறேன் என்றபடி.

3. "எழுவார் விடைகொள்வார் ஈன்துழா யானை
வழுவா வகைநினைந்து வைகல் - தொழுவார்"

என்பது முதல் திருவந். 26.

றபடியே, அவன் தன்னையே பிரயோஜனமாகக்கொண்டு தொழுமவர்கள். என்றது [1]"இன்று வந்து இத்தனையும் அமுது செய்திடப் பெறில்" என்கிறபடியே, தொழுமவர்கள் என்றபடி. வினைபோக - [2]அவர்களுக்குப் பின்னை வினைஉண்டோ? என்னில், வேறுபிரயோஜனங்களிலே நெஞ்சுசெல்லுகைக்கு அடியான பாவங்கள் போகும்படியாக. மேவும் பிரான்-இவன் வேறு பிரயோஜனங்களைக் கருதாதவனாய்க் கிட்டினவாறே சர்வேசுவரனும் வேறு பிரயோஜனத்தைக் கருதாதவனாய்க் கிட்டுவானேயன்றோ? நடுவில் வினைகளுக்கு ஒதுங்க இடமில்லாமையாலே அழிந்துபோகும்; [3]"மடியடக்கி நிற்பதனில் வல்வினையார் தாம் மீண்டு, அடிஎடுப்ப தன்றோ அழகு" என்றாரேயன்றோ? பிரான் - உபகாரமே இயல்பு என்னும்படி இருக்குமவன். [4]ஆக, முதலடியில், முன்பு சிலநாட்கள் வேறு பிரயோஜனங்களைக் கருதினவர்களாயிருந்து பின்பு தன்னையே பிரயோஜனமாக விரும்பினர் திறத்தில் உபகரிக்கும்படி சொல்லிற்று. முதலிலேயே வேறு பிரயோஜனங்களில் நெஞ்சு செல்லாதபடி யிருக்கின்ற திருவனந்தாழ்வான் பெரியதிருவடி முதலானவர்களை யுடையனாயிருக்கும்படி சொல்லுகிறது மேல்:

---

1. "இன்றுவந் தித்தனையும் அமுது செய்திடப் பெறில்நான்
ஒன்று நூறுயிரமாக் கொடுத்துப் பின்னும் ஆளும் செய்வன்"
என்பது நாய்ச்சியார் திருமொழி. 9 : 7.

2. அவர்களுக்கு - மேவி நின்று தொழுமவர்களுக்கு. பாப விமோசனமாகையாலேயன்றோ, அநந்யப் பிரயோஜனராய்க்கொண்டு தொழுகிறார்கள்; அவர்களுக்குப் பின்னை வினையுண்டோ? என்னில், என்றபடி. அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வேறுபிரயோஜனங்களிலே' என்று தொடங்கி. இதனால், ஆஸ்ரயண விரோதி கழிந்ததேயாகிலும், பாபஹேதுவான சரீரம் இருக்கையாலே வேறு பிரயோஜனங்களிலே மனம் செல்லுகைக்கு அடியான பாபம் உண்டாகைக்குக் காரணம் உண்டேயன்றோ அத்தகைய பாவங்கள் போம்படி என்பது கருத்து.

3. அவன் கிட்டினால் பாவங்கள் அழிந்துபோம் என்பதற்குப் பிரமாணம், "மடியடக்கி" என்று தொடங்குவது.

இங்கில்லை பண்டுபோல் வீற்றிருத்தல் என்னுடைய
செங்கண்மால் சீர்க்கும் சிறிதுள்ளம்—அங்கே
மடியடக்கி நிற்பதனில் வல்வினையார் தாம் மீண்டு
அடியெடுப்ப தன்றோ அழகு.

என்பது பெரியதிருவந். 30.

4. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'ஆக, முதலடியில்' என்று தொடங்கி.

தூவி அம் புள்ளுடையான் - 'தூவி' என்ற அடைமொழியால், நினைத்தவிடத்திலே கொண்டு ஓடுகைக்கு அடியான சாதனத்தை யுடையவன் என்பதனையும், 'அம் புள்' என்றதனால், [1] "தேவரீர் திருவடிகளாலே நெருக்கி அழுத்தின தழும்பினாலே சோபிக்கிறவன்" என்கிறபடியே, சோபிக்கிற அழகையுடையவனாகையாலே வந்த ஏற்றத்தையுடையவன் என்பதனையும் தெரிவித்தபடி. தூவி - சிறகு. அம் - அழகு. அடல் ஆழி - [2] பரமபதத்திலுங்கூட அவனுக்கு என்வருமோ என்று அச்சங்கொண்டிருப்பவனாகையாலே எப்போதும் ஒக்க யுத்த சந்நத்தனாயிருப்பவன் என்பார் 'அடல் ஆழி' என்கிறார். அடல் - மிடுக்கு. அம்மான்தன்னை - பெரியதிருவடி திருத்தோளிலே பெயராதிருத்தல், திருவாழியைச் சலியாதே பிடித்தல் செய்யவல்லவனே எல்லார்க்கும் தலைவன் என்பார் '**தூவியம் புள்ளுடையான் அடலாழிஅம்மான்**' என்று ஒரு சேர அருளிச்செய்கிறார். நா இயலால் இசை மாலைகள் ஏத்தி- நெஞ்சு ஒழியவும், வாக்கின் தொழில் மாத்திரமே இசைமாலைகள் ஆயிற்றன ; என்றது, நாப்புரட்டினதெல்லாம் இயலும் இசையுமாய்க் கிடக்கையைத் தெரிவித்தபடி. ஏத்தி நண்ணப் பெற்றேன் - இவர் நண்ணி அன்று ஏத்தியது ; ஏத்தியாயிற்று நண்ணியது. ஆவி என் ஆவியை செய்த ஆற்றை யான் அறியேன் - [3] "உலகங்கட் கெல்லாம் ஒருயி ரேயோ" என்றும், "ஆத்மந ஆகாஶஸ் ஸம்பூதঃ—பரமாத்மாவினின்றும் ஆகாசம் உண்டாயிற்று" என்றும், "சர்வாத்மா" [4] என்றும் சொல்லுகிறபடியே, நிருபாதிகனான சர்வாத்மாவை 'ஆவி' என்கிறார். மிக மிகத் தாழ்ந்தவரான தம்மை என்பார் '**என்னாவியை**' என்கிறார். என்றது, அவன் விபு, தாம் அணு என்பதனைத்

---

1. தோத்திர ரத்நம். 41.

2. ஆங்கார வார மதுகேட்டு அழலுமிழும்
பூங்கார ரவணையான் பொன்மேனி—யாம் காண
வல்லமே யல்லமே மாமலரான் வார்சடையான்
வல்லரே யல்லரே? வாழ்த்து. (நான்முகன் திரு. 10.)

3. "ஆவி" என்பது, பொதுவான சொல்லாகையாலே, அதற்கு, நிருபாதிகனான சர்வாத்மா என்ற பொருளை அருளிச்செய்து, மேற்கோள்களும் காட்டுகிறார் "உலகங்கட்கெல்லாம்" என்று தொடங்கி. இது, திருவாய். 8.1:5. "ஆத்மநঃ" என்பது, தைத்திரீய ஆனந். 1. நிருபாதிகனான சர்வாத்மா - ஒரு காரணம் பற்றாமலே எல்லாப் பொருள்களுக்கும் ஆத்மாவாகி இருப்பவன்.

தெரிவித்தபடி. [1] "இந்தப் பரமாத்மாதானே சந்தோஷத்தைக் கொடுக்கின்ருன்" என்றும், [2] "வீவில் இன்பம் மிக எல்லே நிகழ்ந்தனன்" என்றும் சொல்லுகிறபடியே, அவனேடு ஒத்த ஆனந்தத்தை யுடையவராம்படி தம்மைச் செய்தமையைத் தெரிவிப்பார் 'செய்த ஆற்றை' என்கிருர். அன்றிக்கே, உலகமே உருவமாயிருக்கின்ற ஒருவன் தன்சரீரத்திலே ஒன்றைப் பெருப்பேறு பெற்ருனுகத் தலையாலே சுமப்பதே! என்கிருர் [3] என்னுதல். அநுபவித்துக் குமிழிநீர் உண்டு போமித்தனை போக்கி, அது பேச்சுக்கு நிலம்அன்று என்பார் 'யான் அறியேன்' என்கிருர். அன்றிக்கே, செய்த நன்றியை அறிதலும் அவனது என்கிருர் என்னலுமாம். (4)

381.

ஆற்ற நல்ல வகைகாட்டும் அம்மானை அமரர்தம்
ஏற்றை எல்லாப் பொருளும் விரித்தானை எம்மான்தனை
மாற்ற மாலை புனைந்தேத்தி நாளும் மகிழ்வெய்தினேன்
காற்றின் முன்னம் கடுகி வினை நோய்கள் கரியவே.

பொ - ரை:—பொறுக்கப் பொறுக்க அநுபவிப்பதற்கு நல்ல வகையைக் காட்டுகின்ற அம்மானை, நித்தியசூரிகளுக்குத் தலைவனை, எல்லாப் பொருள்களையும் பகவத்கீதை மூலமாக விரித்தவனை, எனக்குத் தலைவனை, வினைகளும் நோய்களும் காற்றிற்கு முன்னே விரைந்து சென்று கரிந்து போகும்படியாக, சொற்களாலே மாலை புனைந்து ஏத்தி எப்பொழுதும் மகிழ்ச்சியுடையவனுனேன் என்கிருர்.

வி - கு:—வினைகளும் நோய்களும் காற்றின் முன்னம் கடுகிக் கரிய, எம்மானை மாற்றம் மாலை புனைந்து ஏத்தி, நாளும் மகிழ்வு எய்தினேன் எனக் கூட்டுக. கடுகிக் கரிய, புனைந்து ஏத்தி மகிழ்வெய்தினேன் என்க.

---

1. ஆனந்தவல்லி. 7.
2. திருவாய். 4. 5: 3.
3. ஆக, "செய்தவாற்றை" என்பதற்கு, இரண்டு கருத்து அருளிச்செய்தபடி. ஒன்று, தம்மை ஒக்க அருள்செய்தல். இரண்டாவது, தலையாலே சுமப்பதே! என்பது.
4. "யான் அறியேன்" என்பதற்கு, இரண்டு கருத்து அருளிச்செய்கிருர். ஒன்று, அந்தத் தன்மையினை யான் சொல்ல அறியேன் என்பது. இரண்டாவது, அறிந்தாலும், "செய்த ஆற்றை" என்று செய்த உபகாரத்தை நினைக்கச் செய்ய நீ அறியவேணும தொழிய நான் அறியேன் என்பது.

ஈடு:—ஐந்தாம்பாட்டு. [1]தான் எல்லார்க்கும் தலைவனாயிருந்து வைத்து அருச்சுனனுக்கு எல்லாப்பொருள்களையும் பொறுக்கப் பொறுக்க அருளிச்செய்தாற்போலே, எனக்குத் தன்படிகளைக் காட்ட, கண்டு அநுபவித்து நான் என்னுடைய தடைகள் எல்லாம் போம்படி திருவாய்மொழி பாடி எல்லையற்ற ஆனந்தத்தையுடையவனானேன் என்கிறார்.

ஆற்ற - அமைய; பொறுக்கப் பொறுக்க. என்றது, [2]குளப்படியிலே கடலை மடுத்தாற்போலேயன்றிக்கே, பொறுக்கப் பொறுக்கவாயிற்றுத் தன் கல்யாண குணங்களை அநுபவிப்பித்தது என்றபடி. [3]"இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை" என்றதன் பின் "வீற்றிருந்தேழுலகு" என்ற திருவாய்மொழியின் அநுபவத்தை அநுபவிப்பித்தானாகில் 'நான் உளேனாகேன்' அன்றோ என்கிறார் என்றவாறு. நல்ல வகை காட்டும் - தன்னுடைய குணங்களையும் செயல்களையும் அநுபவிப்பிக்கின்ற, அம்மானை-[4]உடையவன் உடைமையின் நிலையறிந்தன்றோ நடத்துவான்? அமரர்தம் ஏற்றை - அல்ப விஷயங்களையும் உண்டறுக்க மாட்டாதே போந்த என்னையன்றோ நித்தியசூரிகள் எப்பொழுதும் அநுபவம் பண்ணுகிற தன்னை அநுபவிப்பித்தான். அன்றிக்கே, [5]தனக்கு ஒருகுறையுண்டாய் அன்று; அநுபவிக்கின்றவர்கள் பக்கல் குறையுண்டாய் அன்று; தான் சர்வேசுவரனாயிருந்து வைத்தும், தன்படிகளை அநுபவிக்கும் நித்தியசூரிகளையுடையனாயிருந்து வைத்தும் என்னை அநுபவிப்பித்தான் என்கிறார் என்னுதல். தம்மை அநுபவிப்பித்த பிரகாரத்தைச் சொல்லுகிறார் மேல்:

எல்லாப் பொருளும் விரித்தானை - முதல் வார்த்தையிலே தர்மம் இன்னதென்றும், அதர்மம் இன்னதென்றும் அறி

---

1. "அமரர்தம்மஏற்றை, ஆற்ற, காற்றின் முன்னம் கடுகி வினை நோய்கள், மாற்ற மாலைபுனைந்து" என்பனவற்றைத் திருவுள்ளம்பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. குளம்புஅடி - குளப்படி. மிகச் சிறிய பள்ளத்திலே என்பது கருத்து.

3. திருவிருத்தம். 1.

4. "ஆற்றநல்லவகைகாட்டும்" என்றதனோடே கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'உடையவன்' என்று தொடங்கி.

5. அம்மானை, அமரர்தம்மஏற்றை, ஆற்ற நல்லவகை காட்டும் என்று சேர்த்து வேறும் ஒரு கருத்தை அருளிச்செய்கிறார் 'தனக்கு' என்று தொடங்கி.

கின்றிலேன், [1]"நான் உனக்குச் சிஷ்யன், உன்னைச் சரண மடைந்தேன், என்னைத் தெளியச்செய்வாய்" என்ற அருச்சுன னுக்குப் [2]பிரகிருதி புருஷ விவேகத்தைப் பிறப்பித்து, கரும யோகத்தை விதித்து, 'அது தன்னை, நான் செய்கிறேன் என்ற எண்ணத்தைப் போகட்டுப் பலத்தில் விருப்பமில்லாமல் செய் வாய்' என்று, பின்னர் ஆத்ம ஞானத்தைப் பிறப்பித்து, பின்பு பகவத் ஞானத்தைப் பிறப்பித்து, எப்பொழுதும் நீங் காத நினைவின்உருவமான உபாசனக் கிரமத்தை அறிவித்து, இவ்வளவும் கொண்டு போந்து இதன் அருமையை அவன் நெஞ்சிலே படுத்தி, 'இவை என்னால் செய்யத் தக்கவை யல்ல' என்றுகூறிச் சோகித்த பின்பு 'ஆகில்,என்னைப்பற்றிப் பாரம் அற்றவனா யிரு' என்று தலைக்கட்டினாற்போலே யாயிற்று, கிரமத்தாலே தன்னுடைய குணங்களையும் செயல்களையும் இவரை அநுபவிப்பித்தபடி. எம்மான்தன்னை - [3]அருச்சுன னுக்குப் பலித்ததோ? இல்லையோ? அறியேன்; அந்த உப தேச பலம் நான் பெற்றேன் என்கிறார். அவனும் இப்பொரு ளைக் கேட்ட பின்னர் [4]"அடியார்களை நழுவ விடாதவரே! தேவரீர் திருவருளால் என்னால் தத்துவஞானம் அடையப்பட் டது, விபரீத ஞானம் நீங்கியது; எல்லாச் சந்தேகங்களும் நீங்கி நிலைபெற்றவனா யிருக்கிறேன்; போர்செய்ய வேண்டும் என்கிற தேவரீருடைய வார்த்தையை இப்போதே நிறைவேற்றி விடுகி றேன்" என்று கூறியவன், மீண்டும் [5]"சந்தேகத்தையுடைய

---

1. ஸ்ரீ கீதை. 2 : 7.

2. 'பிரகிருதி' என்றது முதல் 'தலைக்கட்டினாற்போலேயாயிற்று' என்றது முடிய, பகவத்கீதையின் கருத்தை அருளிச்செய்தபடி. 'என்னைப் பற்றிப் பாரம் அற்றவனா யிரு' என்றது, "எல்லாத் தர்மங்களையும் விட்டு என் ஒருவனையே சரணமாக அடைவாய்; உன்னை எல்லாப் பாவங்களினின்றும் நான் விடுவிக்கிறேன்; நீ துக்கிக்கவேண்டாம்" என்று கூறிய சரமசுலோகத் தைத் திருவுள்ளம்பற்றி.

3. "எல்லாப்பொருளும் விரித்தானை, எம்மான்தன்னை" என்று கூட்டி வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'அருச்சுனனுக்கு' என்று தொடங்கி.

4. ஸ்ரீ கீதை. 18 : 73.

5. "சந்தேகத்தையுடையவனாக இருக்கிறேன்" என்பது, ஸ்ரீ கீதையில் இல்லையேயாயினும் கீதை உபதேசம் பெற்ற பின்னர், அந்த அர்த்தவிஷய மாக மீண்டும் கேள்வி கேட்ட அருச்சுனனை நோக்கிக் கிருஷ்ணன் "நிச்சயம் நீ சந்தேகத்தை உடையவனாக இருக்கிறாய்" என்று அநுகீதையில் கூறினானாதை யின், அதனை அநுவாதம் பண்ணி அருளிச்செய்கிறார் "சந்தேகத்தை யுடைய வனாக இருக்கிறேன்" என்றானே யன்றோ' என்று.

வனாக இருக்கிறேன்" என்றானேயன்றோ? [1] உபதேசிக்கிற வனும் எல்லார்க்கும் பொதுவானவன், உபதேசிக்கிற பொருளும் எல்லார்க்கும் பொதுவானது ஆகையாலே, அதனையறிந்த இவர்க்குப் பலித்தது என்னத் தட்டில்லை யன்றோ? "மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டு சித்தர் கேட்டிருப்பர்" என்னக்கடவதன்றோ? [2] இவர் மனோரதத்திலே நின்று போலே காணும் அருளிச்செய்தது.

மாற்றம் மாலை புனைந்து - சொன்மாலையைத் தொடுத்து ஏத்தி. என்றது, அவன் செய்த உபகாரத்திலே தோற்று ஏத்தினார், அது திருவாய்மொழியாய்த் தலைக்கட்டிற்று என்றபடி. மாற்றம் - சொல். நாளும் மகிழ்வு எய்தினேன் - அழிவில்லாத ஆனந்தத்தையுடையவனானேன். எய்துகை - கிட்டுகை. இப்படிப் பெரிய பேற்றினைப் பெற்றீராகில் விரோதிகள் கதி என்னவாயிற்று? எனின், காற்றின் முன்னம் கடுகி வினை நோய்கள் கரியவே.- வினைகளும் வினைகளின் பயனான பிறவியும், காற்றினைக்காட்டிலும் விரைந்து எரிந்து சாம்பலாயின. [3] புதுப்புடவை அழுக்குக் கழற்றுமாறுபோலே, கிரமத்தாலே போக்கவேண்டுவது தானே போக்கிக் கொள்ளப் பார்க்குமன்றே யன்றோ? அவன் போக்குமன்று

1. அருச்சுனனுக்கு உபதேசித்திருக்க, 'இவர் நான் பெற்றேன் என்கிறது' எப்படி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உபதேசிக்கிறவனும்' என்று தொடங்கி. இப்படி உபதேசம் பலித்தவிடம் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "விட்டுசித்தர்" என்று தொடங்கி.

"செம்மை யுடைய திருவரங்கர் தாம்பணித்த
மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்"

என்பது நாய்ச்சியார் திருமொழி. 11 : 10.

2. உபதேசித்தது திருத்தேர்த்தட்டிலேயாயிருக்க, "விட்டுசித்தர் கேட்டிருப்பர்" என்னுதல் கூடுமோ? என்ன, சிலேடையாக அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவர் மனோரதத்திலே' என்று தொடங்கி. இவர் - பெரியாழ்வார். இவர்க்குப் பலிக்கையாலே 'இவர் மனோரதத்திலே நின்றுபோலே காணும்' என்கிறார். அருச்சுனனுக்குப் பலியாமையாலே அவன் ரதத்திலே அன்று போலே என்பது.

3. இவை ஒரேகாலத்தில் சாம்பலாகக் கூடுமோ? என்ன, 'புதப்புடவை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

அவனுக்கு அருமை இல்லையே? [1]"வினைப்படலம் விள்ள விழித்து" என்கிறபடியே, ஒருகால் பார்த்துவிட அமையுமே? [2]"பாபரூபமான கர்மத்தினுடைய கூட்டங்கள், மேருமலை மந்தர மலை இவைகளைப்போன்று உயர்ந்திருந்தாலும் வைத்தியனைக் கிட்டிக் கெட்டவியாதி அழிந்து போவது போலே, கிருஷ்ணனை அடைந்து பாவங்கள் அழிகின்றன" என்கிறபடியே, வியாதியின் மூலத்தை அறிந்த வைத்தியனைக் கிட்டின வியாதி போலேயன்றோ சர்வேசுவரனைக் கிட்டினால் இவை நசிக்கும்படி. "வானோ? மறிகடலோ? மாருதமோ? தீயகமோ?, கானோ? ஒருங்கிற்றும் கண்டிலமால் - ஆனீன்ற, கன்றுயரத் தாமெறிந்து காயுதிர்த்தார் தாள்பணிந்தோம், வன்துயரை யாவா மருங்கு" என்ற திருப்பாசுரம் இங்கு அநுசந்திக்கத் தகும். (5)

### 382.

[3]கரிய மேனிமிசை வெளிய நீறு சிறிதேஇடும்
பெரிய கோலத் தடங்கண்ணன் விண்ணோர் பெருமான்தனை
உரிய சொல்லால் இசைமாலைக ளேத்தி உள்ளப்பெற்றேற்கு
அரிய துண்டோ எனக்கு இன்றுதொட்டு மினிஎன்றுமே.

பொ-ரை:—கரிய திருமேனியின்மேலே வெண்மையான சூர்ணத்தைச் சிறிதளவே இடுகின்ற, பெரிய அழகிய விசாலமான திருக்கண்களையுடையவனும், நித்தியசூரிகளுக்குத் தலைவனுமான சர்வேசுவரனைத் தகுதியான சொற்களாலே சமைந்த இசையோடு கூடிய மாலைக

---

1. பெரிய திருவந். 76.

2. அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் "பாபரூபமான" என்று தொடங்கி. இது, விஷ்ணுதர்மம். அத். 78. அதற்கே, மற்றும் ஒரு பிரமாணங் காட்டுகிறார் "வானோமறிகடலோ" என்று. இது, பெரிய திருவந். 54.

3. முனைவன் தொழுது முடிதுளக்கி முகந்து செம்பொன் கொளவீசி
நினைய வாகா நெடுவாழ்க்கை வென்றிக் கோல விளக்காகப்
புனையப் பட்ட அஞ்சனத்தைப் புகழ எழுதிப் புனைபூணான்
கனைவண் டார்க்கு மலங்கலும் கலனும் ஏற்பத் தாங்கினான்.

என்பர் திருத்தக்கதேவர். சிந். 2357.

"அமிழ்தியல் யோகத்து அஞ்சனம் வருத்து"
என்பது பெருங்கதை. 1. 34: 15.

ளால் துதித்து நினைக்கின்றவனான எனக்கு இன்று தொடங்கி இனி எப்பொழுதும் கிடைத்தற்கு அருமையான பொருள் ஒன்று உண்டோ? என்கிறார்.

வி - கு :—'இடும்' என்பதனைக் கண்ணுக்கு அடைமொழியாக்குவர் வியாக்யாதா. அதனைப் பெருமானுக்கு அடைமொழியாக்குவர் திருக் குருகைப்பிரான்பிள்ளான். இடும் பெருமான் என்றும், பெரிய கோலத் தடங்கண்ணனாகிய பெருமான் என்றும் தனித்தனியே கூட்டிக் கோடல் வேண்டும். வெளிய நீறு - பச்சைக் கற்பூரச் சூர்ணம். "நீறு" என்பது, பலபொருள் ஒருசொல்; "சிலைவேடன் அவ்வளவில், நீறாய் விழுந்தான் நிலத்து" (நளவெண்) என்ற விடத்துச் சாம்பலையும், "மாந்தரும் மாவும் செல்ல மயங்கிமே லெழுந்த நீறு" (சிந்.) என்ற விடத்துப் புழுதியையும், "மந்திரமாவது நீறு" என்ற விடத்து விபூதியையும் காட்டுதல் காண்க. அரசர்கள் அஞ்சனம் அணிந்து கோடல் மரபு. உள்ளப்பெற்றேற்கு எனக்கு இன்று தொட்டும் இனி என்றும் அரியதுண்டோ? எனக் கூட்டுக.

ஈடு:—ஆறாம்பாட்டு. [1]சர்வேசுவரன் திருவடிகளில் அடிமை செய்யவும் பெற்றுத் தடைகளும் போகப்பெற்றேன் என்றார் மேல் பாசுரத்தில். 'ஆனால், இனி உமக்குச் செய்யவேண்டுவது என்?' என்றான் ஈசுவரன்; இதற்கு முன்பு பெறாததாய் இனிப் பெற வேண்டுவது ஒன்றுண்டோ? என்கிறார் இப் பாசுரத்தில்.

கரிய மேனி மிசை - [2]திருக்கண்களில் கருவிழியினுடைய கறுத்த நிறத்தால் வந்த அழகுக்குமேலே. மேனி - நிறம். "கரிய வாகிப் புடை பரந்து" என்னக்கடவதன்றோ. வெளிய நீறு - அஞ்சன சூர்ணம். சிறிதே இடும் - அதனை அளவே

---

1. "மாற்றம் மாலை புனைந்தேத்தி", "வினைநோய்கள் கரிய" என்பனவற்றைக் கடாக்ஷித்து 'அடிமை செய்யவும் பெற்றுத் தடைகளும் போகப் பெற்றேன்' என்கிறார். இப்பாசுரத்தில் "அரியதுண்டோ" என்றதனைக் கடாக்ஷித்து 'ஆனால்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. மேலே உள்ள "பெரியகோலத் தடங்கண்" என்றதனைத் திருவுள்ளம் பற்றித் 'திருக் கண்களில்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். கரியமேனி மிசை - கறுத்த நிறத்தால் வந்த அழகுக்கு மேலே. திருக்கண்கள் கருமை நிறமாக இருப்பதற்குப் பிரமாணம், "கரியவாகி" என்பது. இது, அமலனாதி பிரான். செய். 8.

"கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரி யோடி நீண்ட அப்
பெரியவாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே,"

என்பது அப்பாசுரப் பகுதி.

கொண்டு அலங்கரிக்கும். [1]"ஆரார் அயில் வேற்கண் அஞ்ச னத்தின் நீறணிந்து" என்னக்கடவதன்றே. அழகுக்கு இட வேண்டுவது இல்லையே? இனி, மங்களத்தின் பொருட்டு இடுவ தாகையாலே 'சிறிதே இடும்' என்கிறது. பெரிய கோலம் - ஒப்பனை வேண்டாதபடி அழகு அளவிறந்து இருக்கிறபடி. தடங் கண்ணன் - அநுபவிக்கின்றவர்களுடைய அளவில் நில் லாது அநுபவிக்கப்படுகின்ற பொருள் மிக்கிருக்கிறபடி. அன் றிக்கே, [2]'கரிய மேனி மிசை வெளிய நீறு சிறிதே இடும் பெரிய கோலத் தடங் கண்ணன்' என்பதற்கு, திருமேனியில் கறுத்தநிறத்தாலே வந்த அழகுக்குமேலே அதற்குப் பரபாக மான திருக்கண்களிலே அஞ்சனத்தை இடுகின்ற என்னலு மாம். அன்றிக்கே, 'கரி என்று யானையாய், அத்தால் நினைக் கிறது குவலயாபீடமாய், குவலயாபீடமானது, அம் மேனி மிசை - அழகிய திருமேனியிலே, வெளிய - சீற, நீறு சிறிதே இடும் - பொடியாக்கும்' என்றார் ஒரு தமிழ்ப்புலவர். விண் ணோர்பெருமான் - இக் கண்ணழகை அநுபவிக்கின்றவர்கள் நித்தியசூரிகள் என்பார் அதனையடுத்து '**விண்ணோர் பெரு மான்**' என்கிறார். பரமபதத்திலுள்ளார் அடைய அநுபவியா நின்றாலும், அநுபவித்த பாகம் குறைந்து அநுபவிக்க வேண் டிய பாகம் விஞ்சியிருக்கும் என்பார் '**பெருமான்**' என்கிறார்.

[3]உரிய சொல்லால் - அவயவ சோபை அது, அநுபவிக் கின்றவர்கள் அவர்கள், இப்படியிருந்தால், 'நாம் பாடுகிற கவிக்கு இது விஷயம் அன்று' என்று மீளுதல் அன்றே தக்கது? இப்படி யிருக்கச் செய்தேயும், இவ் விஷயத்திற்கு நேரே வாசகமான சொற்களாலே. இசைமாலைகள் - [4]"கேட் பதற்கு மதுரமான வார்த்தைகள்" என்கிறபடியே, திருச்

---

1. சிறிய திருமடல்.

2. "கரியமேனி மிசை" என்பதற்கு, மூன்றுவகையாகப் பொருள் அருளிச்செய்கிறார். முதற் பொருளில், "கரியமேனி மிசை" என்பது, திருக் கண்களுக்கு அடை. இரண்டாவது பொருளில், திருமேனியைக் காட்டுகிறது. மூன்றாவது பொருளில், பதங்களையே வேறு வகையாகப் பிரித்துப் பொருள் கோடல் வேண்டும். கரி, அம், மேனி மிசை என்று பிரித்தல் வேண்டும். பரபாகம் - பலநிறங்கள் கலத்தலால் உண்டாகும் சோபை.

3. துதிசெய்வதற்குத் தமக்குத் தகுதியில்லை என்றவர் "உரிய சொல் லால்" என்றல் கூடுமோ? என்ன, தம்மைப் பார்த்தால் கூடாது; அவனடி யாக வந்ததாகையாலே விரோதம் இல்லை என்று அருளிச்செய்வர் பெரியோர்.

4. ஸ்ரீராமா. சுந். 31; 1.

செவிசாத்தலாம்படி இருக்கை. ஏத்தி உள்ளப்பெற்றேற்கு - ஏத்தி அநுபவிக்கப்பெற்ற எனக்கு. அரியது உண்டோ - [1] "அடையாததது அடையவேண்டியதாயிருப்பது யாதொன்றுமில்லை" என்கிறபடியே, இதற்கு முன்பு அடையாததாய் இனி எனக்கு அடையப்படுவது ஒன்று உண்டோ? எனக்கு - "ஈசுவரன் நான்" என்றிருக்கிற சம்சாரத்திலே சேஷத்வம் ரசிக்கப்பெற்று, சொரூபத்திற்குத் தகுதியாக வாசிகமான அடிமை செய்யப்பெற்று, "வினை நோய்கள் கரிய" என்கிற படியே, விரோதிகள் கழியப்பெற்றிருக்கிற எனக்கு. இன்று தொட்டும் இனி என்றுமே - அடிமையில் இழிந்த இன்று தொடங்கி இனி மேலுள்ள காலமெல்லாம் அரியது இல்லை. [2] "பின்னர் அவன் பயமில்லாதவனாக ஆகிறான்" என்பது உபநிடதம். [3] பின்பு "தீர்ப்பாரை யாமினி" என்ற திருவாய்மொழியாவது அறியாமலே யன்றோ இவர் இவ்வார்த்தை சொல்லுகிறது. (6)

383.

என்று மொன்றாகி ஒத்தாரும் மிக்கார்களும் தன்தனக்கு
இன்றி நின்றானை எல்லா வுலகு முடையான்தனை
குன்ற மொன்றால் மழைகாத்த பிரானைச் சொன்மாலைகள்
நன்று சூட்டும் விதிஎய்தினம் என்ன குறைநமக்கே.

பொ - ரை :—எக்காலத்திலும் தன்னுடைய எல்லாப் படிகளுக்கும் ஒத்தவர்கள் இல்லை என்கையே யன்றித் தன்னுடைய சௌலப்ய குணத்துக்கு ஒத்தவர்களும் மிக்கவர்களும் இல்லாமலே நின்றவனும், எல்லாவுலகங்களையுமுடையவனும், மழையினால் துன்புறுதபடி பசுக்களையும் ஆயர்களையும் கோவர்த்தனம் என்னும் ஒரு மலையினால் காத்த உபகாரகனுமான சர்வேசுவரனுக்குச் சொன்மாலைகளைப் பெரிதாகச் சூட்டுவதற்குத் தக்கவாறு அவனுடைய கிருபையைப் பெற்றோம்; ஆதலால், நமக்கு இனி என்ன குறை? ஒரு குறையும் இல்லை என்றபடி.

---

1. ஸ்ரீ கீதை. 3 : 22.
2. தைத்திரிய உப. 7.
3. மேலே "தீர்ப்பாரை யாம்" என்ற திருவாய்மொழியா யிருக்க, "இனி என்றுமே" என்பது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பின்பு' என்று தொடங்கி.

வி - கு :—தன்தனக்கு - தன்னுடைய சௌலப்ய குணத்துக்கு. "நன்று பெரிதாகும்" என்பது தொல்காப்பியம். விதி - பகவானுடைய திருவருள். நமக்கு என்ன குறை என மாறுக.

ஈடு :—ஏழாம்பாட்டு. [1]"அரியதுண்டோ எனக்கு" என்கிற இந்த நிறைவு உமக்கு எத்தாலே வந்தது? என்ன, பகவானுடைய கிருபையாலே வந்தது என்கிறார்.

என்றும் - எல்லாக்காலமும். ஒன்றாகி ஒத்தாரும் மிக்கார்களும் தன் தனக்கு இன்றி நின்றானை - [2]"அந்தப் பரமாத்மாவுக்குச் சமானமான பொருளும் மேலான பொருளும் காணப்படுகிறதில்லை" என்கிறபடியே, [3]எல்லாங் கூடின சமுதாயத்துக்கு ஒப்பு இல்லாமையே யன்றிக்கே, ஒரோ வகைக்கும் ஓர் ஒப்பு இன்றிக்கே இருப்பவனை. [4]'அவனுக்குச் சரீரமாக இருப்பதனாலே, ஒத்தாராயும் மிக்காராயுமிருப்பாரை இன்றிக்கே இருப்பவனை என்றபடி. [5]'தன் தனக்கு இன்றி நின்றானை' என்பதற்கு, எம்பெருமானார் தெற்கே எழுந்தருளின நாளிலே, ஆளவந்தார் மகனார் சொட்டை நம்பி அருளிச்செய்த வார்த்தை: 'தன் தனக்கு என்றது, தானான தனக்கு என்றபடி. ஒருபடிக்கு ஒப்பு இன்றிக்கே இருக்கிறது, பரத்துவத்தில் அன்று; [6]"என்னை நான் மனிதனாகவே நினைக்கிறேன்" என்கிறபடியே, அவதரித்து மனிச்சு ஏறிட்டுக்கொண்டு நிற்கிற நிலையிலே' என்றாராம். எல்லா உலகும்

---

1. "சொன்மாலைகள் நன்று சூட்டும் விதி எய்தினம்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. சுவேதாஶ்வதரம்.

3. "ஒன்றாகி" என்று விசேடித்ததற்குக் கருத்து, 'எல்லாங் கூடின சமுதாயத்துக்கு' என்பது. 'ஒரோ வகைக்கும்' என்றது, சொரூப ரூப குணம் முதலானவைகளிலே ஒரோவகைக்கும் என்றபடி.

4. "ஒன்றாகி" என்கிறவிடத்திலே தோன்றுகிற ஐக்யபக்ஷத்தை நிவர்த்திப்பிக்கிறார் 'அவனுக்குச் சரீரமாக' என்று தொடங்கி.

5. "தனக்கு" என்னாது, "தன்தனக்கு" என்றதற்குக் கருத்து யாது? என்ன, 'எம்பெருமானார்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். ஸ்ரீ வைஷ்ணவர்கள் சிலர் கேட்க, சொட்டைநம்பி அருளிச்செய்த வார்த்தை என்றபடி. தன் தனக்கு - அவதரித்து அடியார்கட்குப் பரதந்திரனாயிருக்கிற தனக்கு. தன் தனக்கு - தானான தனக்கு; தானான தன்மையாவது, தனக்கே புரிய ஆகாரம்; அதாவது, ஆஶ்ரித பாரதந்திரியம் என்றபடி.

6. ஸ்ரீராமா, யுத். 120 : 11. மனிச்சு - மனிதத் தன்மை.

உடையான் தன்னை - [1]"உலகங்களினுடைய தோற்றமும், பிரளயமும் கிருஷ்ணனிடத்திலே, இது பிரசித்தம்; சராசரங்களாகிற இந்தப் பிராணிவர்க்கமெல்லாம் கிருஷ்ணன் நிமித்தமாகவே இருக்கின்றன; இது பிரசித்தம்" என்கிறபடியே, எல்லா உலகங்கட்கும் ஈசுவரனான கிருஷ்ணனை. இப்படி எல்லாவற்றையுமுடைய செருக்காலே உடைமை நோவுபட விட்டுப் பார்த்துக்கொண்டிருப்பானோ? என்னில், அங்ஙனம் இரான் என்கிறார் மேல்:

குன்றம் ஒன்றால் மழைகாத்த பிரானை - இந்திரன் பசிக்கோவத்தாலே பசுக்களும் ஆயர்களும் தொலையும்படி மழை பெய்தபோது, தோன்றியதொருமலையை எடுத்து அந்த ஆபத்தினின்றும் காத்த உபகாரகனை. [2]"தீமழை" யன்றோ? சொன்மாலைகள் நன்று சூட்டும் விதி எய்தினம் - சொன்மாலைகள் நன்று சூட்டும்படியான பாக்கியத்தை அடையப்பெற்றோம். [3]பரத்துவத்தில் குணசத்பாவ மாத்திரமே உள்ளது, அவதரித்தவிடத்தே யன்றோ அவை பிரகாசிப்பன. இப்படி விஷயம் நிறைவுற்றிருந்தால் 'பேச ஒண்ணாது' என்று மீளுகை அன்றிக்கே, இந் நிலையிலே விளாக்குலைகொண்டு பேசும்படியானேன் என்பார் 'நன்று சூட்டும்' என்கிறார். [4]இவர் இப்போது 'விதி' என்கிறது, பகவானுடைய கிருபையை. தமக்குப் பலிக்கையாலும், அவனுக்குத் தவிர ஒண்ணாதாகையாலும், 'விதி' என்கிறார். "விதிசூழ்ந்ததால்" என்

---

1. மஹாபாரதம் வீடும பருவம்.

2. ஆபத்தின் கனத்தை விளக்குகிறார் "'தீ மழை' யன்றோ?" என்று. இது, திருவாய். 7. 4 : 10.

3. "நன்று" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'பரத்துவத்தில்' என்று தொடங்கி. "மழைகாத்தபிரான்" என்று ஆபத்திற்குத் துணையாதல் முதலிய குணங்களைச் சொல்லுகையாலே 'அவதரித்த விடத்தே யன்றோ அவை பிரகாசிப்பன' என்கிறார்.

4. வேறு ஓர் உபாயத்தை யறியாத இவர்க்கு ஒரு புண்ணிய விசேடமுண்டோ? "விதி எய்தினம்" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவர் இப்போது' என்று தொடங்கி. பகவானுடைய கிருபையை "விதி" என்றதற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'தமக்கு' என்று தொடங்கி. அதற்குப் பிரயோகம் காட்டுகிறார் "விதி சூழ்ந்ததால்" என்று. இது, திருவாய். 2. 7 : 6.

ரூரேயன்றோ முன்னரும். என்ன குறை நமக்கே - [1] "சேற்றத் திற்கு" இலக்கு ஆகாதே அவன் கிருபைக்கு விஷயமான நமக்கு ஒருகுறையுண்டோ? நமக்கு ஒருகுறை உண்டாகை யாவது, பகவானுடைய கிருபையை அளவிற்கு உட்படுத்து கையே யன்றோ. [2] "ஸ:-ரக்ஷணமே சொரூபமா யிருக்குமவர், தம் - பிராதிகூல்யத்திலே முதிர நின்ற அவனை, நிபதிதம்பூமௌ - தெய்வத்தன்மையாலே பூமியிலே கால் வையாதவன் போக்கற்றுத் தரையிலே வந்து விழுந்தான்; அன்றிக்கே, குழந்தை தீம்புசெய்தால் தந்தை தண்டிக்கத் தொடர்ந்தால் தாயின் காலிலே விழுமாறுபோலே காணும், இவன் பூமி யிலே விழுந்தது. சரண்ய:-ஏதேனும் தசையிலும் சரணமாகப் பற்றுதற்குத் தகுந்தவர். சரணாகதம் - கண்வட்டத்தில் வேறு கதியில்லாமை தோன்ற விழுந்துள்ளவனை. வதார்ஹமபி - பெருமாள் சித்தாந்தத்தாலும் கொல்லுதற்கு உரியவனே; ஆனாலும், காகுத்ஸ்த்த: - குடிப்பிறப்பால் வந்த நீர்மையாலே ரக்ஷித்தார். [3] குடிப்பிறப்பு தண்டிக்கத் தகுந்தவரைத் தண் டித்தற்குக் காரணமா யிராதோ? என்னில், கிருபயா - நாம் தொடங்கின கார்யம் பிரபலமான கர்மத்தாலே முடிக்க ஒண் ணாததைப் போன்று, அவரும் கிருபைக்குப் பரதந்திரப்பட் டவராகையாலே நினைத்த காரியத்தை முடிக்கமாட்டார். அவன் கிருபை விளையும் பூமியைப் பற்றியவனானான், அதற்கு மேலே கிருபையும் விளைந்தது, இனி, அவர் எவ்வழியாலே தண்டிப்பார்? ஆகையாலே, எனக்குக் குறை உண்டாகையா வது, பகவானுடைய கிருபை அளவிற்குட்பட்ட விஷயமாகை யன்றோ? என்கிறார். (7)

---

1. குறை இல்லாமையை எதிர்மறைமுகத்தால் விளக்குகிறார் 'சேற்றத் திற்கு' என்று தொடங்கி.

2. கருணையை இறைவனால் கடக்க முடியாது என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் "ஸ:" என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. சுந். சர்க். 38. திருவடியை நோக்கிய பிராட்டியின் வார்த்தை.

3. குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்.
கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

என்பன திருக்குறள்.

384.

நமக்கும் பூவின்மிசை நங்கைக்கு மின்பனே ஞாலத்தார்
தமக்கும் வானத் தவர்க்கும் பெருமானைத் தண்தாமரை
சுமக்கும் பாதப் பெருமானைச் சொல்மாலைகள் சொல்லுமாறு
அமைக்க வல்லேற்குஇனி யாவர்நிகர் அகல் வா னத்தே.

பொ - ரை :—தன் திருவடிகளை இன்று வந்து பற்றிய நமக்கும் தாமரைமலரில் வீற்றிருக்கும் பெரியபிராட்டியார்க்கும் இனியனானவனும், பூலோகத்திலுள்ளவர்கட்கும் நித்தியசூரிகட்கும் தலைவனும், குளிர்ந்த தாமரைமலராலே சுமக்கப்படுகின்ற திருவடிகளையுடைய பெருமானுமான சர்வேசுவரனைச் சொல்மாலைகள் சொல்லும்படியாகத் தரிக்க வல்ல எனக்குப் பரமபதத்திலேயுள்ள நித்தியசூரிகளுக்குள் இனி ஒப்பாவார் யாவர்? என்கிறார்.

வி - கு :—நமக்கும் என்ற உம்மை: இழிவுசிறப்பு. "தண் தாமரை சுமக்கும் பாதப் பெருமான்" என்ற இவ்விடத்து "மலர்மிசை ஏகினான்" என்ற திருக்குறள் நினைவு கூர்க. "அமைக்க வல்லேன்" என்றது, தரித்திருந்து பாடும்படியைத் தெரிவித்தபடி. "யாவர்" என்ற வினா, இன்மைப் பொருளைக் குறித்து நின்றது. வானம் - இடவாகு பெயர்.

ஈடு :—எட்டாம்பாட்டு. [1] எம்பெருமானுக்குத் தம் பக்கல் உண்டான அன்பின் மிகுதியை நினைத்து அவனுடைய உபய விபூதி யோகத்துக்கும் மிருதுத் தன்மைக்கும் தகுதியாகக் கவி சொல்ல வல்ல எனக்குப் பரமபதத்திலும் ஒப்பு இல்லை என்கிறார்.

நமக்கும் - இன்று தன் திருவடிகளைப் பற்றிய நமக்கும். அன்றிக்கே, நித்திய சம்சாரிகளுக்கும் இவ்வருகாயிருக்கிற நமக்கும்; [2] "நீசனேன் நிறைவொன்றுமிலேன்" என்றாரே யன்றோ தம்மை. பூவின்மிசை நங்கைக்கும் - நித்திய சூரிகளுக்கும் அவ்வருகாய், ரூப குணத்தாலும் ஆத்ம குணத்தாலும் நிறைந்திருக்கிற பெரிய பிராட்டியார்க்கும். மலரில் மணத்தை வகுத்தாற்போலே யிருந்துள்ள மிருதுத் தன்மையையும்

---

1. பிராட்டிக்கு முன்னே தம்மை அருளிச்செய்வதற்குக் கருத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு, "ஞாலத்தார்" என்றதுமுதல் மேல் உள்ளனவற்றை யெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. திருவாய், 3. 3; 4.

இனிமையையு முடையவளாதலின் 'பூவின்மிசை நங்கை' என்கிறது. [1]இத்தலை நிறைவு இன்றியிலே இருக்கிறப் போலேயாயிற்று அத்தலை குறைவற்றிருக்கிறபடி என்பார் 'நங்கை' என்கிறார். இன்பனே - [2]இன்பனுமிடத்தில், முற்பாடு இங்கேயாய்ப் பின்பாயிற்று அவளிடத்தில் அன்பு செலுத்தியிருப்பது. [3]இலங்கையிலேயுள்ள சுவேல மலையிலே பெருமாள் எழுந்தருளி நிற்கச்செய்தே இராவணன் கோபுர சிகரத்தே வந்து தோன்றினவாறே, 'இராஜத் துரோகியான பையல் திருமுன்பே நிற்கையாவது என்?' என்று மஹாராஜர் அவன் மேலே எழப் பாய்ந்து வென்று வந்தபோது பெருமாள் அவரைப் பார்த்து [4]"இராஜாக்கள் இப்படிப் பட்ட சாகஸ காரியங்களைத் தாங்களே செய்யமாட்டார்கள்" என்றார்; என்றது, சிலர்மேல் விழ வேண்டினால், சேனைத் தலைவர்கள் நிற்க அரசரோ மேல் விழுவார் என்கிறார் என்றபடி. [5]"ஸ்ரீராமபிரான் உலகங்கட்கெல்லாம் நாதனாக விருந்தும் சுக்கிரீவனை நாதனாக இச்சிக்கிறார்" என்னாநின்றதே யன்றோ? கிடைப்பது கிடையாதொழிவது இச்சியாநின்றார். [6]"அத்தகைய இந்த ஸ்ரீராமபிரான் சுக்கிரீவனைச் சரணமாக

---

1. "நமக்கும்" என்றதற்கு அருளிச்செய்த பொருள்களில் இரண்டாவது பொருளை இங்கே நினைவுகூர்தல் தகும். 'இத்தலை' என்றது, ஆழ்வாரை. நங்கை - எல்லா நற்குணங்களும் நிறைந்தவள்.

2. "நமக்கும்" எனத் தம்மை முற்படச் சொன்னதற்கு பாவத்தை அருளிச்செய்கிறார் 'இன்பனுமிடத்தில்' என்று தொடங்கி.

3. மேலே அருளிச்செய்த பாவத்திற்குப் பிரமாணம் காட்டுவதற்குத் திருவுள்ளம்பற்றி அப் பிரமாணத்திற்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'இலங்கையிலே' என்று தொடங்கி.

4. ஸ்ரீராமபிரான், சுக்கிரீவனைத் தமக்கு அரசனாக நினைத்திருந்தார் என்றதற்குப் பிரமாணங் காட்டுகிறார் "இராஜாக்கள்" என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. யுத். 41: 2. இதனால், பரிகரங்களில் ஒருவனான நான் நிற்க, என்னை ஏவிக் காரியமாகாவிடிலன்றோ நீர் மேல்விழ வேண்டுவது என்கிறார் என்றபடி.

5. மேலே கூறியதற்கே மற்றும் ஓர் பிரமாணம் காட்டுகிறார் "ஸ்ரீராமபிரான்" என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. கிஷ். 4: 18. "இச்சதி" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'கிடைப்பது கிடையாதொழிவது இச்சியாநின்றார்' என்று.

6. அதற்கே மற்றும் ஓர் பிரமாணங் காட்டுகிறார் "அத்தகைய இந்த ஸ்ரீராமபிரான்" என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. கிஷ். 4: 20.

அடைந்தார்" என்னுநின்றதேயன்றே? [1]"நீர் மஹாராஜ ரான தரம் குலைய அவன் ஒரு வார்த்தை சொல்லுமாகில், நீர் தேடிப் போகிற சரக்குத்தான் நமக்கு என்னசெய்ய?" என்றாரேயன்றே. [2]'ஸ்ரீ விபீஷணாழ்வானைப் புகுரவொட்டேன்' என்றார் மஹாராஜர்; 'இவன் புகுராவிடில் நாம் உளோமாகோம்' என்கிறார் பெருமாள்; இப்படி இருவரும் மாறுபடுதற்குக் கருத்து என்?' என்று நஞ்சீயர் கேட்க, 'இருவரும் சரணமாகப் பற்றினவர்களை விடோம் என்று மாறுபடுகிறார்கள் காணும்' என்று பட்டர் அருளிச்செய்த வார்த்தை. என்றது, "சுக்கிரீவம் சரணம் கத:" என்றதனை நடத்தப் பார்த்தார் மஹாராஜர்; "ராகவம் சரணம் கத:" என்றத்தை நடத்தப் பார்த்தார் பெருமாள் என்றபடி. அங்ஙனமாயின், மஹாராஜர்க்குத் தம்மை அடிமையாக நினைத்திருக்கும் நிலை குலையாதோ? எனின், ஆகையாலே யன்றே? [3]"ஆநயைநம் ஹரிசிரேஷ்ட - வானரங்களுக்குத் தலைவனே! இவனை அழைத்துக் கொண்டுவா" என்று அவரை இடுவித்து அழைத்துக் கொள்ள வேண்டிற்று.

---

1. 'இன்பனுமிடத்தில், முற்பாடு இங்கேயாய்ப் பின்பாயிற்று அவனிடத்தில் அன்பு செலுத்தியிருப்பது' என்பதற்குப் பிரமாணங் காட்டுகிறார் "நீர் மஹாராஜரான தரம் குலைய" என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. யுத். 41 : 4. 'நீர் தேடிப் போகிற சரக்கு' என்றது, சீதாபிராட்டியை. இச் சுலோகப்பொருளோடு

> இந்நிலை விரைவின் எய்தா தித்துணை தாழ்த்தி யாயின்
> நன்னுதற் சீதை யாலென் ஞாலத்தாற் பயனென் நம்பி
> உன்னையான் தொடர்வன் என்னைத் தொடருமிவ் வுலக மெல்லாம்
> பின்னை எ னிதனை நோக்கி விளையாடிப் பிழைப்ப செய்தாய்.

என்ற கம்பராமாயணச் செய்யுள் ஒப்பு நோக்குக.

2. மேலதற்கே ஓர் ஐதிஹ்யம் காட்டுகிறார் 'ஸ்ரீ விபீஷணாழ்வானை" என்று தொடங்கி.

3. > ஆதலால் அபய மென்ற பொழுதத்தே யபய தானம்
> ஈதலே கடப்பா டென்ப தியம்பினீர் என்பால் வைத்த
> காதலால் இனிவே றெண்ணக் கடவதென் கதிரோன் மைந்த!
> கோதிலா தவனை நீயே என்வயிற் கொணர்தி என்றான்.

என்றார் கம்பநாடரும்.

[1] இப்படி அவன் இருக்கைக்கு அடி என்? என்னில், அதனை அருளிச்செய்கிறார் மேல்: ஞாலத்தார் தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானை - இப்படி நெடுவாசிபட்ட விஷயங்களிலே சிநேகம் ஒத்திருக்கைக்கு அடி, சம்பந்தம் இரண்டு இடத்திலுமுள்ளாரோடும் ஒத்திருப்பினும், [2] இவர் படுக்கைப் பற்றிலுள்ளவராகையாலே. அன்றிக்கே, அவன் சேஷியான நிலையும் இத்தலை பரதந்திரமான நிலையும் ஒத்திருக்கையாலே என்னுதல். அன்றிக்கே, தாய்தந்தையர்கள் குழந்தைகளில் குறைவாளர் பக்கலிலேயன்றோ இரங்குவது; அதனாலே, சம்சாரிகள் முற்பட வேண்டுகிறது என்னுதல். [3] அந்தப் பரமபதமும் உண்டாயிருக்கவே யன்றோ "அந்தப்பரமாத்மா சேதநவர்க்கமெல்லாம் பிரகிருதியில் லயப்பட்டுக் கிடந்த அக்காலத்தில் தான் தனியாக விருந்து சந்தோஷத்தை யடையவில்லை" என்கிறது. தண் தாமரை சுமக்கும் பாதப்பெருமானை-குளிர்ந்த தாமரைத்தவிசினாலே தரிக்கப்பட்ட திருவடிகளையுடைய பெருமானை. குளிர்த்தியாலும் பரிமளத்தாலும் செவ்வியாலும் தாமரை திருவடிகளுக்குத் தோற்றுச் சுமக்கிறாப்போலே யாயிற்று இருக்கிறது; ஆதலின், '**தாமரை சுமக்கும் பாதம்**' என்கிறது. "தாமரை நின்கண் பாதம் கை ஒவ்வா" என்றதன்றோ முன்பும். பெருமான்-எல்லார்க்கும் தலைவன். சொல்மாலைகள் சொல்லுமாறு அமைக்கவல்லேற்கு - அவனுடைய உபய விபூதியோகத்தால் வந்த ஐசுவர்யத்துக்கும் மிருதுத்தன்மைக்கும் தகுதியாம்படியான கவி பாடவல்ல எனக்கு.

---

1. 'இப்படி அவன் இருக்கைக்கு அடி என்? என்னில்,' என்றது, முற்பட இவர் பக்கலிலே அன்புடையனா யிருத்தற்குக் காரணம் என்? என்னுதல். அன்றிக்கே, சம்சாரிகளுக்கும் இவ்வருகான நம்மிடத்திலும் ரூப குணங்களாலும் ஆத்ம குணங்களாலும் நிறைந்திருக்கிற பிராட்டியிடத்திலும் அன்பு ஒத்திருக்கைக்குக் காரணம் என்? என்னுதல். "நமக்கும் பூவின்மிசை நங்கைக்கு மின்பன்" என்றதனைக் கடாக்ஷித்து 'இப்படி' என்கிறார்.

2. 'படுக்கைப்பற்று' என்றது, "ஞாலம்" என்று பூமியாய், அதனாலே, ஸ்ரீ பூமிப்பிராட்டியைச் சொல்லிற்றாய், இது அவளுடைய விபூதியாகையாலே, இதனைப் படுக்கைப்பற்று என்கிறார் என்றபடி. படுக்கைப் பற்று - சீதனம்.

3. குறைவாளர் பக்கலிலே முற்பட இரங்குவதற்கு நியாமகம் காட்டுகிறார் 'அந்தப் பரமபதமும்' என்று தொடங்கி. 'அந்தப் பரமாத்மா' என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகம், மஹோபநிடதம்.

இதற்கு, [1] "சர்வேசுவரன் 'ஆழ்வீர்! நம்மை ஒரு கவிசொல்லும்' என்றால், அப்போதே கவிசொல்லிச் சமையும்படியாக வல்ல எனக்கு" என்கிறார் என்று முன்புள்ள முதலிகள் நிர்வஹிக்கும்படி. அங்ஙனன்றிக்கே, பட்டர், "என்னாகியே, தப்புதலின்றித் தனைக் கவி தான்சொல்லி" என்கிறபடியே, சர்வேசுவரன் கவி பாடினானாகையாலே கவி பாடத் தட்டு இல்லை; அவன் அங்கீகரித்துத் திருக்கண்களாலே குளிர நோக்கி, 'நீர் ஒரு கவி சொல்லும்' என்றால், பிரீதியாலே உடைகுலைப்படாமல் தரித்து நின்று சொல்ல வல்லேனான எனக்கு என்று அருளிச்செய்வர்.

இனி யாவர் நிகர் அகல் வானத்தே - பரமபதத்திலே தரித்து நின்று, [2] "அஹமந்நம் அஹமந்நம் அஹமந்நம் - நான் பரமாத்மாவுக்கு இனியன், நான் பரமாத்மாவுக்கு இனியன், நான் பரமாத்மாவுக்கு இனியன்" என்னுமவர்கள் எனக்கு என் கொண்டார்? திரிபாத் விபூதியாய்ப் பரப்பையுடைத்தாமத்தனையோ வேண்டுவது? தெளிவிசும்பு ஆகையாலே அந் நிலந்தானே சொல்லுவிக்கும், இருள்தருமா ஞாலமாகையாலே இந்நிலம் அதனைத் தவிர்ப்பிக்கும்; [3] "சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியர்" என்னக் கடவதன்றோ? (8)

385.

வானத்தும் வானத்துள் ளும்பரும் மண்ணுளும் மண்ணின்கீழ்த்
தானத்தும் எண்திசை யும்தவி ராது நின்றான்தனைக்
கூனற் சங்கத் தடக்கை யவனைக் குடமாடியை
வானக் கோனைக் கவிசொல்ல வல்லேற்கினி மாறுண்டோ?

---

1. முன்புள்ள முதலிகள் நிர்வாஹத்துக்குக் கருத்து, ஆசு கவியாகக் கவிசொல்லிச் சமைக்க வல்லேனான எனக்கு என்பது. பட்டர் நிர்வாஹத்துக்குக் கருத்து, தரித்து நின்று சொல்ல வல்லேனான எனக்கு என்பது. "என்னாகியே" என்ற பாசுரம், திருவாய். 7. 9 : 4. 'உடைகுலைப்படாதே' என்றது பரவசப்படாமல் என்றபடி.

2. தைத்திரீய உபநி. பிரு. 10. என்னுமவர்கள் - நித்தியசூரிகள். 'என்கொண்டார்' என்றது, எப்படி ஒப்பாவார் என்றபடி. திரிபாத்விபூதி பரமபதம்.

3. திருவிருத்தம். 79.

பொ - ரை:—சுவர்க்கலோகத்திலும் அதற்குள்ளே மேலாயிருக்கின்ற பிரமலோகம் முதலான உலகங்களிலும் பூலோகத்திலும் பூமியின் கீழேயிருக்கின்ற பாதாளலோகத்திலும் எட்டுத் திக்குக்களிலும் நீங்காது பரந்து நிற்கின்றவனும், வளைந்த சிறந்த பாஞ்சஜன்யம் என்னும் சங்கைப் பெரிய கையிலே யுடையவனும், குடக்கூத்தாடியவனும், நித்தியசூரிகளுக்குத் தலைவனுமான சர்வேசுவரனைக் கவி சொல்லவல்ல எனக்கு இனி ஒப்பாவார் உளரோ? என்கிறார்.

வி - கு:—கூன்னல் - கூனல். வான் அம் கோன் - வானக்கோன்; அம்: சாரியை.

ஈடு:—ஒன்பதாம் பாட்டு. [1] அவனுடைய எங்கும் பரந்திருத்தல் அவதாரங்கள் முதலான எல்லா நிலைகளிலும் புக்குக் கவி சொல்ல வல்ல எனக்கு எதிர் உண்டோ? என்கிறார். [2] நித்தியசூரிகள் தாங்கள் அனுபவிக்கின்ற விஷயத்தில் இனிமையின் மிகுதியாலே வேறு ஒன்று அறியார்கள்; முக்தர்கள் [3] "இந்தச் சரீரத்தை நினையாமலே எங்கும் சஞ்சரிக்கிறார்கள்" என்கிறபடியே, சம்சார யாத்திரையை நினையாமல் நிற்பர்களாகையாலே, அவர்களும் நித்தியசூரிகளோடு ஒப்பர்கள்; இங்குள்ள பராசரர் வியாசர் முதலிய முனிபுங்கவர்கள் ஒரோ துறையிலே மண்டியிருப்பர்கள்; எங்ஙனே? என்னில், ஸ்ரீ வால்மீகிபகவான் ஸ்ரீ ராமாவதாரமல்லது அறியாதே இருக்கும். ஸ்ரீபராசரபகவானும் ஸ்ரீவேதவியாசபகவானும் கிருஷ்ணாவதாரமல்லது அறியார்கள்; ஸ்ரீ சௌனகபகவான் அர்ச்சாவதாரத்திலே ஈடுபட்டவனாயிருக்கும்; அங்ஙனன்றிக்கே, சர்வேசுவரனை எல்லா நிலைகளிலும் புக்குக் கவி பாடப் பெற்ற என்னோடு ஒப்பார் உளரோ? என்கிறார்.

வானத்தும் - சுவர்க்கத்திலும். வானத்து உள் உம்பரும் - அதற்குள்ளாய்ப் பெரியதாயிருக்கிற மஹர்லோகம் முதலிய

---

1. பாசுரம் முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'முதலான' என்றதனால், பரத்வம் வியூகம் அர்ச்சை இவற்றையும் கொள்க. தவிராது நின்றான்" என்றதனை நோக்கி 'எங்கும் பரந்திருத்தல்' என்றும், "குடமாடி" என்றதனை நோக்கி 'அவதாரங்கள்' என்றும் அருளிச்செய்கிறார். "வானக்கோனை" என்றதனால் பரத்துவத்தைக் கொள்க. இம் மூன்றையும் அருளிச்செய்தது மற்றை இரண்டுக்கும் உபலக்ஷணம்.

2. மற்றும், கவிபாடுகின்றவர்கள் இலரோ? "எதிருண்டோ?" என்பது என்? என்னும் வினாவிற்கு விடையாக 'நித்தியசூரிகள்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

3. சாந்தோக்யம். 8. 12 : 3.

வைகளிலும். அன்றிக்கே, வானத்தும் வானத்துள் உம்பரும் என்பதற்கு; சுவர்க்கம் முதலான உபரிதனலோகங்களிலும் அவற்றுக்குள்ளே மேலே யிருக்கிற பிரமலோகம் முதலானவைகளிலும் இருக்கிற பிரமன் முதலான தேவர்கள் என்று பொருள் கூறலுமாம். மண்ணுள்ளும் - பூமியிலும், மண்ணின் கீழ்த் தானத்தும்-கீழே உண்டான பாதாளம் முதலியவைகளிலும், எண்திசையும் - எட்டுத் திக்குக்களிலும், தவிராது நின்றான் தன்னை-அவ்வவ் தேசங்களிலும் அவ்வவ்தேசங்களிலே இருக்கிற தேவர்கள் முதலான எல்லாப்பொருள்களிலும், [1] கடல் கோத்தாற் போலே எங்கும் ஒக்கப் பரந்து நிறைந்து இருக்கிறவனை. இதனால், அணு அளவான பொருள்களிலும் விபுவா யிருக்கிற பொருளிலும் வாசி சொல்லுகிறது; எங்ஙனே? என்னில், அணுவான ஆத்மா சரீரமெங்கும் பரந்திருக்க மாட்டாது; விபுவான ஆகாயத்திற்கு ஏவுகின்ற தன்மையோடு கூடிப் பரந்திருக்கும் தன்மை இல்லை.

இப்படி எங்கும் பரந்து நிற்கிறவன், பரந்திருக்கப்படுகின்ற பொருள்களோடு ஒக்க வந்து அவதரிக்கும்படி சொல்லுகிறது மேல்: கூன்நல் சங்கம் தடக்கையவனை - இப்படி அவதரிப்பதுதான் [2] இதரசஜாதீயனாயோ? என்னில், "ஆதியஞ் சோதியுருவை அங்கு வைத்து இங்குப் பிறந்த" என்கிறபடியே, தன்னுடைய பிரகிருதி சம்பந்த மில்லாத திருமேனியை இதர சஜாதீயமாக்கிக் கொண்டாயிற்று வந்து அவதரிப்பது என்கிறது. என்றது, "தேவர்களுக்கும் தேவர்களான நித்தியசூரிகளுக்குத் தலைவனே! சங்கு சக்கரம் கதை இவற்றைத் தரித்தவனாய் வந்து அவதரித்தாய்" என்று சொல்லும்படியாயிற்று இருந்

---

1. "தவிராது" என்றதற்குப் பொருள்: 'கடல் கோத்தாற் போலே எங்கும் ஒக்கப் பரந்து' என்பது. தவிராதுநின்றான்" என்றதனால், பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'அணுவானபொருள்களிலும்' என்று தொடங்கி. அணுவானபொருள் - ஆத்மா. விபுவானபொருள் - ஆகாயம்.

2. 'இதர சஜாதீயனாயோ? என்னில்' என்றது, இந்தப் பிரகிருதி சம்பந்தப்பட்ட சரீரத்தையுடையனாயோ? என்றபடி. "ஆதியஞ்சோதி" என்கிற பிரமாணப்படியே, இதர சஜாதீயனாயிருந்தாலும், திருமேனி பிரகிருதி சம்பந்தப்பட்டதா யிராமல் "திவ்யம்" என்கிறபடியே அப்பிராகிருதமா யிருக்கும் என்கிறார். "ஆதியஞ்சோதி" என்பது, திருவாய். 3. 5: 5. அப்பிராகிருதமான திருமேனியை இதர சஜாதீயமாக்கினதற்குப் பிரமாணம்: 'தேவர்களுக்கும் தேவர்களான' என்று தொடங்குவது. இது, பாகவதம். 5: 3.

தது என்றபடி. [1] "அஞ்சலி செய்தவராய் வணக்கத்துடனிருக்கின்ற" என்கிற இளையபெருமாளைப் போலே, பகவானுடைய அநுபவத்தால் வந்த மகிழ்ச்சியாலே சரீரத்தை வளைத்துக் கொண்டிருப்பவனாதலின் 'கூனல் சங்கம்' என்கிறது. என்றது, [2] வாயது கையதுவாக அநுபவிக்கின்றவன் அன்றோ என்றபடி. லீலாவிபூதியும் நித்தியவிபூதியுமாகிய இரண்டு உலகங்களும் வந்து ஒதுங்கினாலும் பின்னையும் கையே விஞ்சியிருக்குமாதலின் 'தடக்கை' என்கிறது. குடமாடியை - எங்கும் ஒரே தன்மையாகப் பரந்து நின்றாற்போலே, ஓர் ஊராகக் காணும்படி குடக்கூத்து ஆடினபடி. குடக்கூத்தினைக் கூறியது எல்லாச் செயல்களுக்கும் உபலக்ஷணம். வானம் கோனை - [3] ஓர் ஊர் அளவன்றிக்கே ஒரு நாட்டுக்காகக் காட்சி கொடுத்துக் கொண்டிருக்கிறபடி. கவி சொல்ல வல்லேற்கு - இப்படி இருக்கிறவனை எங்கும் புக்குக் கவி சொல்ல வல்ல எனக்கு. இனி மாறு உண்டே - "அகல்வானம்" என்று விசேடித்துச் சொல்லவேணுமோ? [4] நித்தியவிபூதி லீலாவிபூதிகளாகிற இரண்டு உலகங்களிலும் எதிர் இல்லை என்கிறார். (9)

## 386.

உண்டும் உமிழ்ந்தும் கடந்தும் இடந்தும் கிடந்தும் நின்றும்
கொண்ட கோலத் தொடுவீற் றிருந்தும் மணங்கூடியும்
கண்ட வாற்றால் தனதே உலகென நின்றான்தன்னை
வண்தமிழ் நூற்க நோற்றேன் அடியார்க்கு இன்பமாரியே.

---

1. ஸ்ரீராமா. அயோத். 4 : 42.

2. பாஞ்சஜன்யத்துக்கு பகவத் அநுபவம் உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வாயது கையதுவாக' என்று தொடங்கி. இது,

> உண்பது சொல்லில் உலகளந்தான் வாயமுதம்
> கண்படை கொள்ளல் கடல்வண்ணன் கைத்தலத்தே
> பெண்படையார் உன்மேல் பெரும்பூசல் சாற்றுகின்றார்
> பண்பல செய்கின்றாய் பாஞ்ச சன்னியமே!

என்ற நாச்சியார் திருமொழிப் பாசுரத்தை அடியாகக்கொண்டு எழுந்தது. 'வாயது கையது' என்பது, சிலேடை.

3. ஓர் ஊர் - திருவாய்ப்பாடி. ஒரு நாடு - பரமபதம்.

4. "மாறுண்டே?" என்று பொதுவாக அருளிச்செய்வதனால், 'நித்திய விபூதி லீலாவிபூதிகளாகிற இரண்டு உலகங்களிலும் என்கிறார்.

பொ - ரை :—பிரளய காலத்தில் உலகத்தையெல்லாம் புசித்தும், பிரளயம் நீங்கியவுடனே வெளிநாடு காண உமிழ்ந்தும், திரிவிக்கிரமனாய் அளந்தும், வராக அவதாரமாய் இடந்து எடுத்தும், கடற்கரையிலே கிடந்தும், இலங்கையில் போர் முடிந்த பின்பு தேவர்களுக்குக் காட்சியளித்துநின்றும், மீண்டு வந்து மகுடாபிஷேகம் செய்த திருக்கோலத்தோடு வீற்றிருந்தும், இராச்சிய பரிபாலனஞ்செய்தும் போந்த காரியங்களைக் கண்கூடாகப் பார்த்த தன்மையால் இந்தஉலகமெல்லாம் தனக்கே உரிமைப்பட்டவை என்று சொல்லும்படி நின்ற சர்வேசுவரனைப் பற்றி வளப்பமான தமிழ்ப் பிரபந்தத்தைச் செய்வதற்குப் புண்ணியத்தைச் செய்தேன்; இப் பிரபந்தமானது அடியார்கட்கு இன்பத்தை யுண்டாக்கும் மேகமாகும் என்கிறார்.

வி-கு :—மணங்கூடியும் செய்து போந்த காரியங்களைக் கண்டவாற்றால் என விரித்துக் கொள்க.

ஈடு :—பத்தாம்பாட்டு. [1] அவன் செயல்கள் அடங்க என் சொல்லுக்குள்ளேயாம்படி கவி பாட வல்லேனாய், வகுத்த சர்வேசுவரனிடத்திலே வாசிகமான அடிமை செய்யப்பெற்ற அளவன்றிக்கே, ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஆனந்தத்தையுண்டாக்கக் கூடியவனாகவும் பெற்றேன் என்கிறார்.

உண்டும் - பிரளய ஆபத்திலே திருவயிற்றிலே வைத்து நோக்கியும். உமிழ்ந்தும் - திருவயிற்றிலே யிருந்து நெருக்குப் படாதபடி வெளிநாடு காணப் புறப்படவிட்டும். கடந்தும் மஹாபலி போல்வார் பருந்து இறாஞ்சினாற் போலே பறித்துக் கொண்டால் எல்லை நடந்து மீட்டும். இடந்தும் - பிரளயம் கொண்டபூமியை மஹாவராஹமாய் அண்டபித்தியிலே செல்ல முழுகி எடுத்துக்கொண்டு ஏறியும். கிடந்தும் - என்றது. [2] "பகைவர்களை அழிக்கின்ற ஸ்ரீராமபிரான் பாம்பின் உடல்போலே இருக்கிற திருக்கையைத் தலையணையாகக் கொண்டு, கிழக்குமுகமாகக் கையைக் கூப்பிக்கொண்டு கடலை

1. பாசுரமுழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். "தனதேயுலகு" என்றதனை நோக்கி 'வகுத்த சர்வேசுவரனிடத்திலே' என்கிறார். "அடியார்க்கு இன்பமாரியே" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. ஸ்ரீராமா. யுத். 21 : 6. இந்தச் சுலோகத்திலுள்ள "அரிசூதன:" என்ற பதத்தைத் திருவுள்ளம்பற்றிக் 'கிடந்த கிடையிலே இலங்கை குடிவாங்கும்படியாக' என்று அருளிச்செய்கிறார். "பிரதி" என்ற பதத்தைத் திருவுள்ளம்பற்றி 'ஒரு கடல்' என்று அருளிச்செய்கிறார்.

நோக்கிச் சயனித்தார்" என்கிறபடியே, கிடந்த கிடையிலே இலங்கை குடிவாங்கும்படியாக, ஒரு கடல் ஒரு கடலோடே சேரிக் கிடந்தாற்போலே கடற்கரையிலே கிடந்தபடியைத் தெரிவித்தவாறு. நின்றும் - [1] "கம்பீரமான வில்லைப் பிடித்துக் கொண்டு நிற்கின்ற ஸ்ரீ ராமபிரானைத் தாரையானவள் கண்டாள்" என்கிறபடியே, நின்ற நிலை. கொண்ட கோலத்தொடு வீற்றிருந்தும் - [2] "பர்ணசாலையில் எழுந்தருளியிருப்பவரும் ஜடை மரவுரி இவற்றைத் தரித்தவருமான ஸ்ரீ ராமபிரானை ஸ்ரீ பரதாழ்வான் பார்த்தார்" என்கிறபடியே, இருந்த இருப்பாதல்; [3] க்ஷத்திரியர்களுக்குரிய ஒப்பனையோடே பதினோராயிரம் ஆண்டு இருந்த இருப்பாதல். மணம் கூடியும் - பதினோராயிரம் ஆண்டு தன் [4] படுக்கைப் பற்றான பூமியைக் காப்பாற்றுகையாலே ஸ்ரீ பூமிப் பிராட்டி அணைக்க, அவ்வளோடே கலந்தும்.

கண்ட ஆற்றால் உலகு தனதே என நின்றான் தன்னை - பிரமாணங்கொண்டு அறிய வேண்டாமல், தொன்றுதொட்டு வருகின்ற அநுபவங் கொண்டு 'இவனுக்கே உரிமை' என்று அறியலாயிருக்கை; என்றது, [5] ஒருவன் ஒரு நிலத்தைத் திருத்துவது கமுகு வைப்பது எரு விடுவதாய்க் கிருஷி பண்ணநின்றால் 'இது இவனது' என்று அறியலாமேயன்றோ? [6] "பெய்த காவு கண்டீர் பெருந்தேவுடை மூவுலகே" என்னக்கடவதன்றோ? வண் தமிழ் நூற்க நோற்றேன் - திருவாய்மொழி பாடுகைக்குப் பாக்கியம் செய்தேன். தன்னை அநுசந்தித்த மாத்திரத்தில் எல்லாப் பலன்களையும் கொடுக்கக் கூடியதான உதார குணத்ததாய் இருத்தலின் '**வண்தமிழ்**' என்கிறது.

---

1. ஸ்ரீராமா. கிஷ். 19: 25.

2. ஸ்ரீராமா. அயோத். 99: 25.

3. 'க்ஷத்திரியர்களுக்குரிய ஒப்பனை' என்றது, முடி முதலானவற்றை. ஒப்பனை - அலங்காரம்.

4. படுக்கைப்பற்று - சீதனம்.

5. உலகு அவனுக்கு உரியது என்பதற்கு லௌகிக திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'ஒருவன்' என்று தொடங்கி. ஒற்றி நிலத்தில் கமுகு வைக்க மாட்டார்கள்; ஆகையாலே, அதனையே திருஷ்டாந்தமாக எடுக்கிறார்.

6. ஆனால், இது அவனுடைய உத்யானவனமோ? என்ன, 'ஆம்' என்று அதற்கு மேற்கோள் காட்டுகிறார் "பெய்த காவு" என்று தொடங்கி. இது, திருவாய். 6. 3: 5.

அன்றிக்கே, [1] "இது முன்னே நடந்ததாயிருந்தாலும் இப்பொழுது நேரிற் கண்டதுபோல் இருக்கின்றது" என்பது போன்று, பழையதாகச் செய்தவை இவர் பேச்சாலே இன்று செய்த செயல்போலே விளக்கமா யிருத்தலின் '**வண்தமிழ்**' என்கிறது என்னுதல். [2] "கண்டவாற்றால்" என்று நேரில் பார்ப்பதாக இருக்கிறதே யன்றோ? அடியார்க்கு இன்ப மாரியே - சர்வேசுவரனைக் கவிபாடப் பெற்ற இதுவேயோ? இது, ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஆனந்தத்தையுண்டாக்கக் கூடியதாகவுமாயிற்று. இன்பத்தையுண்டாக்கும் மேக மாதலின் '**இன்பமாரி**' என்கிறது. [3] இது எனக்கு இருக்கிறபடி கண்டால், இது உகக்குமவர்களுக்கு எங்ஙனே இருக்கிறதோ? என்கை. [4] "தொண்டர்க்கு அமுது உண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றாரேயன்றோ? (10)

## 387.

**மாரி மாறாத தண்ணம்மலை வேங்கடத் தண்ணலை**
**வாரி மாறாத பைம்பூம் பொழில்சூழ் குருகூர்நகர்க்**
**காரி மாறன் சடகோபன் சொல்லாயிரத்து இப்பத்தால்**
**வேரி மாறாத பூமே லிருப்பாள் வினைதீர்க்குமே.**

**பொ - ரை :**—மழை மாறாமலிருந்துகொண்டிருக்கின்ற குளிர்ந்த அழகிய திருமலையில் எழுந்தருளியிருக்கின்ற திருவேங்கடமுடையானை,

---

1. ஸ்ரீராமா. பால. 4 : 7. இது, குசலவர்கள் கானம் செய்யும்போது கேட்டிருந்த முனிவர்களெல்லாரும் மனங் களித்துக் கூறியது.

2. இவர் பேச்சாலே இன்று செய்த செயல்போலே விளக்கமாயிருத்தற்குக் காரணங் காட்டுகிறார் "கண்டவாற்றால்" என்று. அதாவது, 'அறிந்தவாற்றால்' என்னாமல், "கண்டவாற்றால்" என்றதனால், இதுவும் பிரத்யக்ஷமாக இருக்கிறது என்பது கருத்து. ஆக, "கண்டவாற்றால்" என்பதனைக் "கண்டவாற்றால் வண்தமிழ்" என்று "வண்தமிழ்க்கும்" அடையாகக் கூட்டிக் கோடல் வேண்டும் என்பது.

3. அவர்களுக்கு இன்ப மாரியாக இருத்தலை இவர் அறிந்தவாறு யாங்ஙனம்? என்னும் வினாவிற்கு விடை அருளிச்செய்கிறார் 'இது எனக்கு' என்று தொடங்கி.

4. அவர்கள் விரும்புவதற்கு மேற்கோள் காட்டுகிறார் 'தொண்டர்க்கு' என்று தொடங்கி. இது, திருவாய். 9. 4 ; 9.

வருவாய் மாறாமலிருக்கின்ற பசுமையான பூக்கள் நிறைந்த சோலைகளாற் சூழப்பட்ட திருக்குருகூரிலே எழுந்தருளியிருக்கின்ற காரிமாறனான சடகோபரால் அருளிச்செய்யப்பட்ட ஆயிரத்துள் இப் பத்துத் திருப்பாசுரங்களையும் சொல்லுகிறவர்கட்கு, வாசனை மாறாத தாமரைப்பூவில் எழுந்தருளியிருக்கின்ற பெரிய பிராட்டியார் வினையைத் தீர்ப்பார் என்கிறார்.

வி - கு :—வாரி - வருவாய் ; வாவுக்குக் கருவியாக இருப்பது. இ : கருவிப்பொருள் விகுதி. காரி - ஆழ்வாருடைய தந்தையார் பெயர். மாறன் சடகோபன் - இவருடைய திருப்பெயர். வேரி - வாசனை. தீர்க்கும் : செய்யுமென்முற்று.

ஈடு :—முடிவில், [1] இத்திருவாய்மொழி கற்றாரைப் பெரிய பிராட்டியார் தம் பொறுப்பாகக் கொண்டு எல்லாத் துக்கங்களையும் போக்குவார் என்கிறார்.

மாரி மாறாத தண் அம் மலை வேங்கடத்து அண்ணலை - [2] எப்பொழுதும் மழை பெய்கையாலே சிரமத்தைப் போக்கக் கூடியதாய்க் காட்சிக்கு இனியதான திருமலையையுடைய சர்வேசுவரனையாயிற்றுக் கவிபாடிற்று ; [3] "நமக்கும் பூவின் மிசை நங்கைக்கு மின்பனே" என்கிறபடியே, நித்ய அநபாயினியான பெரியபிராட்டியாருக்கு முன்பே நித்திய சம்சாரிகளுக்கும் முகங்கொடுக்கும் சீலமுடையவனது தன்மையைச் சொல்லிற்றாகையாலே, சீலத்துக்கு எல்லையான திருவேங்கடமுடையானையாயிற்றுக் கவிபாடிற்று. [4] "விண்முதல் நாயகன் நீள்முடி வெண்முத்த வாசிகைத்தாய், மண்முதல் சேர்வுற்று அருவி

---

1. "பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே" என்றதிலே நோக்காக அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. மாரி மாறாமையாலே தண் அம் மலையாயிருக்கிறது என்று கொண்டு பொருள் அருளிச்செய்கிறார் 'எப்பொழுதும்' என்று தொடங்கி.

3. இத் திருவாய்மொழியில் பரமபதநாதனையன்றோ கவிபாடிற்று ; திருவேங்கடமுடையானைக் கவிபாடிற்று என்பது என்? என்னும் வினாவிற்கு விடையாக 'நமக்கும்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். இது, இத் திருவாய்மொழியில் எட்டாம் பாசுரம். அநபாயினி - பிரியாமல் இருப்பவள்.

4. திருவிருத்தம். 50. அறற்றலை என்பது, சிலேடை : தண்ணீரைத் தலையிலே யுடையது என்றும், தர்மத்தைத் தலையிலே யுடையது என்றும் பொருள்.

செய்யாநிற்கு மாமலை" ஆகையாலே, அறற்றலையாய்க் காட்சிக்கு இனியதா யிருத்தலின், '**மாரி மாறாத தண் அம் மலை**' என்கிறது. வாரி மாறாத பைம் பூம் பொழில் சூழ் குருகூர்நகர்- அழகியதாய்க் காட்சிக்கு இனியதாயிருந்துள்ள பொழிலாலே சூழப்பட்ட திரு நகரி. திருநகரிக்கு [1] ஸஹ்யம் திருமலையாகை யாலே, திருமலை மாரி மாறாதாப்போலே திருநகரியும் வாரி மாறாதே யிருக்குமாதலின், '**வாரி மாறாத நகர்**' என்கிறது.

காரிமாறன் சடகோபன் சொல் ஆயிரத்து இப்பத்தால்- [2] சொன்ன பொருளில் அதிசங்கை பண்ணுமைக்கு ஆப்தி அதிசயம் சொல்லுகிறது. வேரி மாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்கும் - இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பலம் கொடுப்பாள் பெரிய பிராட்டியார் என்கிறது. [3] திருமலை மாரி மாறாது ஆகை யாலே, திருநகரி வாரி மாறாது; ஆறுக் கயமாகையாலே பிராட்டி யுடைய ஆசனமாகிய தாமரை வேரி மாறாது.

இது கற்றார்க்கு இவள் பலம் கொடுக்க வேண்டுவான் என்? என்னில், தனக்கு முன்பே தான் காட்டிக் கொடுத்த சம்சாரியை விரும்பும் சீல குணத்தையாயிற்று இதில் சொல் லிற்று; இந்தச் சீலகுணம் ஒருவர்க்கும் நிலமன்று; தான் அறிதல், மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர் அறிதல் செய் யும் இத்தனையாயிற்று; 'இந்தப் பிரபாவத்தை அறிந்து இவர் வெளியிட்டார்' என்னும் கருணையின் மிகுதியாலே, சர்வேசு வரன் பலங் கொடுக்கிற நிலையிலே அவனை விலக்கி 'நானே இதற்குப் பலங் கொடுக்கவேணும்' என்று தனக்கே பொறுப் பாக ஏறிட்டுக்கொண்டு [4] பலம் கொடுக்கும். இத் திருவாய் மொழி கற்றாருடைய பகவதநுபவத்திற்கு விரோதியான எல்

---

1. ஸஹ்யம் - பிரவாஹத்துக்கு மூலமான மலை.

2. திருக்காரியாரையிட்டு நிரூபித்ததற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'சொன்ன பொருளில்' என்று தொடங்கி. ஆப்தி - உண்மை யுரைத்தல். அதிசயம் - மிகுதி.

3. ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'திருமலை' என்று தொடங்கி. ஆறுக் கயம் - தண்ணீர் வற்றாத குளம்.

4. "வினைதீர்க்கும்" என்பதற்குப் 'பலம் கொடுக்கும்' என்று பொருள் அருளிச்செய்யக் காரணம், தடைகள் நீங்கினால் விரைவில் பலம் சித்திக்கு மாதலின், அதனைத் திருவுள்ளம்பற்றி என்க.

லாத்தடைகளையும் ஈண்டு 'வினை' என்கிறது. தீர்க்கும் - போக்குவாள். [1] இத் திருவாய்மொழி கற்றார்க்கு அந்தப்புரத்திலே படியும் நடையும் என்கை. (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

வீற்றிருக்கு மால்விண்ணில் மிக்க மயல்தன்னை
ஆற்றுதற்காத் தன்பெருமை யானதெல்லாம்-தோற்றவந்து
நன்றாகலக் கப்போற்றி நன்குகந்து வீறுரைத்தான்
சென்றதுயர் மாறன் தீர்ந்து.

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. மகானுபாவத்தை அருளிச்செய்கிறார் 'இத்திருவாய்மொழி' என்று தொடங்கி. படியும் நடையும் - அநுபவமும் கைங்கரியமும். படி - ஜீவனம். நடை - தொழில்.

## ஆறாந் திருவாய்மொழி—"தீர்ப்பாரை"

### முன்னுரை

———

ஈடு:—[1] மேல் திருவாய்மொழி "வீற்றிருந் தேழுல" கா யிருக்க, அதனை யடுத்த இத் திருவாய்மொழி "தீர்ப்பாரை யாமினி" யா யிருப்பதே! எம்பார் மேல் திருவாய்மொழியை யும் இத் திருவாய்மொழியையும் அநுசந்தித்து, 'மோருள் ளதனையும் சோறேயோ? மேல் திருவாய்மொழியில் அப்படி நிரவதிகமான பிரீதியோடே சென்றது; இத் திருவாய்மொழி யில் இப்படி மோஹத்தோடே தலைக்கட்டிற்று; இதற்கு இருந்து அடைவு சொல்லுவேனே? இதற்கு அசங்கதிரேவ சங்கதி:' என்று அருளிச்செய்வாராம்.

[2] ஸ்ரீ பரதாழ்வான், 'பெருமாளுடைய மகுடாபிஷேகத் திற்கு நம்மை யழைத்து வந்தது' ஆகையால், 'அவரைத்

---

1. 'மேல் திருவாய்மொழி' என்று தொடங்குவது, வியாக்யாதாவின் ஈடுபாடு. அதாவது, மேல் திருவாய்மொழி எல்லையில்லாத பிரீதியாய், இத்திரு வாய்மொழி எல்லையில்லாத துக்கமா யிருக்கிறதே! என்றபடி. இதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'எம்பார்' என்று தொடங்கி. 'மோருள்ளதனையும் சோறேயோ' என்றது, ஒருவன் நாழி அரிசியைக் கொடுவந்து ஓர் அம்மையார் கையிலே 'எனக்கு இதனைச் சமைத்து இடவேணும்' என்று கொடுக்க, அப் படியே அவளும் சமைத்து இலையைப் படுத்திட, இவனும் அருகே ஒரு பாத்தி ரத்திலே மோரைக் கொண்டுவந்து வைத்திருந்து மோரை வார்த்துக்கொண்டு, 'அம்மையாரே! மோர் விஞ்சிற்று, சோறு இடும்' என்று ஒருகால் இருகால் இங்ஙனே சொல்லுகையாலே, அம்மையார் அலுத்து 'நீ கொண்டு வந்த மோர் தொலையாததாயிருந்தது, மோருள்ளதனையும் சோறு இடுவேனோ?' என்று ளாம். இதற்குக் கருத்து ஏது? என்ன, மேலெல்லாம் கலவிக்கும் பிரிவுக்கும் ஒரு படி சங்கதி சொல்லிக்கொண்டு போந்தோம்; இதிலே வந்தவாறே மேடும் பள் ளமு மாயிருந்தது; இது என்னாலே சொல்லலாயிருந்ததோ? இதற்கு அசங்க திரேவ சங்கதி: என்று அருளிச்செய்வாராம் என்றபடி. அடைவு - சம்பந்தம். அசங்கதிரேவசங்கதி: - சங்கதியில்லாமையே சங்கதியாகச் சொல்லுவது.

2. இந்தப் பிரீதி அப்ரீதிகள்தாம் திருவிருத்தம் தொடங்கி "முனியே நான்முகனே" என்ற திருவாய்மொழி வரையிலும் தொடர்ந்து செல்லுகிறது என்று திருவுள்ளம்பற்றி, நான்கு பிரபந்தங்களிலும் இவர்க்குண்டான நிலை வேறுபாடுகள், ஸ்ரீபரதாழ்வானுடைய நிலைகளோடு போலியாயிருக்கின்றன என்கிறார் 'ஸ்ரீபரதாழ்வான்' என்று தொடங்கி. இங்கே, முதற்பத்து அவதா ரிகை, 'திருமகள்கேள்வன் மூன்று' காண்க.

திருமுடி சூட்டி அடிமை செய்யக்கடவோம்' என்று பாரித்துக் கொண்டு வர, கைகேயி "ராஜ்ந்" என்று 'உனக்கு முடி வாங்கி வைத்தேன்' என்றபோது அவன் துடித்தாற்போலே, இவரும், பிரகிருதி தோஷத்தை அநுசந்தித்து அஞ்சித் துடித்தாராயிற்று, [1]"பொய்ந்நின்ற ஞானத்"திலே; 'நான் அவர் அடியேனன்றோ? அவர் என் சொல்லை மறுப்பரோ? இப்போதே மீட்டுக் கொண்டு வந்து திருமுடி சூட்டுகிறேன்' என்று திருச்சித்திரகூடத்திலே கிட்டுமளவும் பிறந்த தரிப்புப் போலேயாயிற்று, திருவாசிரியத்தில் பிறந்த தரிப்பு; பின்பு, பதினான்காண்டு கூடி ஆசை வளர்ந்தாற் போலேயாயிற்று, திருவந்தாதியில் ஆசை பெருகினபடி; [2]"என்னெஞ்சினார் தாமே அணுக்கராய்ச் சார்ந்தொழிந்தார்", [3]"முயற்றி சுமந்தெழுந்து" என்று கூறலாம்படியன்றோ ஆசை பெருகின படி. மீண்டு எழுந்தருளித் திருமுடி சூட்டிக் கொண்ட பின்னர் அவன் மனோரதம் தலைக்கட்டினாற்போலேயாயிற்று, திருவாய்மொழியில் இவரை அநுபவிப்பித்தபடி. [4]மேல் "வீற்றிருந்தேழுலகு" என்ற திருவாய்மொழியில் பிறந்த நிரவதிகமான பிரீதியானது மானச அநுபவ மாத்திரமாய்ப் புறக்கரணங்களால் அநுபவிக்க முடியாமையாலே, எத்தனையேனும் உயர ஏறியது தகர விழுகைக்குக் காரணமாமாறு போலே மோஹத்துக்கு உறுப்பாய்த் தலைக் கட்டிற்று.

இப்படியிருக்கிற தம் நிலையை, சர்வேசுவரனோடே கலந்து பிரிந்து நோவுபடுகிறாள் ஒரு பிராட்டி, தன் ஆற்றாமையாலே மோஹித்துக் கிடக்க, இவள் நிலையை அநுசந்தித்த உறவினர்களும் மோஹித்து, 'இது வேறு தெய்வங்களாலே வந்ததோ?' என்று வேறு தெய்வங்களின் சம்பந்த முடையாரைக் கொண்டு புகுந்து பரிஹாரம் செய்யப் புக, இவள் தன்மையறிந்த தோழியானவள், 'நீங்கள் செய்வனவாக நினைப்பவை இவள் நோவிற்குப் பரிஹாரம் அல்ல; அழிவிற்கே

1. திருவிருத்தம். 1.
2. பெரிய திருவந். 7.
3. பெரிய திருவந். 1.
4. 'மேல், வீற்றிருந்தேழுலகு' என்றது முதல் 'அவள் பாசுரத்தாலே தம் நிலையைப் பேசுகிறார்' என்றது முடிய, மேல் திருவாய்மொழிக்கும் இத்திருவாய்மொழிக்கும் இயைபு அருளிச்செய்கிறார். தகரவிழுதல் - சிதறுண்டு விழுதல்; மிகமிகக் கீழேவிழுதல் என்றபடி.

காரணமாமித்தனை; ஆனபின்பு, [1]பகவானுடைய நாம சங்கீர்த்தனத்தாலும் பாகவத பாத தூளியாலும் பரிஹரிக்கப் பாருங்கோள்' என்கிற அவள் பாசுரத்தாலே தம் நிலையைப் பேசுகிறார்.

[2]இவர் தாம், "உம்மைப் பிரிந்தால் சீதை இல்லாதவளாவாள்; அப்படியே, நானும் இல்லாதவனாவேன்" என்றும், "அடியவனான என்னைத் தேவரீருக்குப் பின்னேயே சஞ்சரிக்கும்படி செய்தருளவேணும்" என்றும் சொல்லுகிறபடியே, பிரிவிலே தரியாமைக்கு இளையபெருமாளோடு ஒப்பர்; அவன் போகட்டவிடத்தே கிடக்கைக்கும் குண அநுசந்தானத்தாலே ஜீவித்திருக்கைக்கும் ஸ்ரீ பரதாழ்வானோடு ஒப்பர்; எத்தனையேனும் ஆற்றாமை கரை புரண்டாலும் 'அத்தலையாலே பேறு' என்று இருக்கைக்குப் பிராட்டியோடு ஒப்பர். [3]"உயர்வற உயர்நலம்" என்ற திருவாய்மொழியிலும் பரத்துவமே யன்றோ பேசிற்று; "பத்துடையடியவர்" என்ற திருவாய்மொழியில் அவதார சௌலப்யத்தை அநுசந்தித்து மோஹித்தாரே யாயினும், "அஞ்சிறைய மடநாராய்" என்ற திருவாய்மொழியில் தூதுவிட வல்லராம்படி உணர்த்தியுடையவரானார்; "வீற்றிருந்தேழுலகு" என்ற திருவாய்மொழியில் பரத்துவத்தை அநுசந்தித்த பின்னர் இத் திருவாய்மொழியில் தாமும் மோஹித்துத் தம் நிலையை அநுசந்தித்த உறவினர்களும் மோஹித்து வேறு தெய்வங்களின் சம்பந்தமுடையார் புகுந்து கலக்கினாலும் உணர்த்தி

---

1. இத் திருவாய்மொழில் வருகின்ற "பேர்சொல்லகிற்கில்", "களிறட்டபிரான் திருநாமத்தால்" என்ற பாசுரப் பகுதிகளைத் திருவுள்ளம்பற்றிப் 'பகவானுடைய நாமசங்கீர்த்தனத்தாலும்' என்கிறார். "மாயன் தமரடிநீறு" என்றதனைத் திருவுள்ளம்பற்றிப் 'பாகவத பாததூளியாலும்' என்கிறார்.

2. பிராட்டியின்நிலை இவர்க்கு வரக் கூடுமோ? என்ன, பிராட்டியின் நிலை மாத்திர மன்றிக்கே, எல்லாரோடும் ஒப்பர் என்கிறார் 'இவர்தாம்' என்று தொடங்கி. "உம்மைப் பிரிந்தால்" என்ற பொருளையுடைய சுலோகம், ஸ்ரீராமா. அயோத். 53 : 31. "அடியவனான என்னை" என்ற பொருளையுடைய சுலோகம், ஸ்ரீராமா. அயோத். 31 : 22.

3. "உயர்வற உயர்நலம்" என்ற திருவாய்மொழியைக் காட்டிலும், "வீற்றிருந்தேழுலகு" என்ற திருவாய்மொழியில் விரிந்த அநுபவம் உண்டு ஆகையாலே, "அஞ்சிறைய மடநாராய்" என்ற திருவாய்மொழியைக் காட்டிலும் இத் திருவாய்மொழியில் துக்கம் அதிகரித்தது என்கிறார் "உயர்வற" என்று தொடங்கி,

யறும்படியாயினர். [1]பகவானைப் பெறுகின்ற காலத்தில் உணர்த்தியும் பெறாத காலத்தில் மோஹமுமாய்ச் செல்லும் இது, இவ் வாழ்வார் ஒருவர்க்குமே உள்ளதொன்றாயிற்று. [2]மற்றும், ஞாநாதிகராய் பகவத் விஷயத்தில் கைவைத்தார் களாயிருக்குமவர்களிலும் ஸ்ரீ வசிஷ்டபகவான் புத்திரவியோ கத்தில் வந்தவாறே கடலிலே புகுவது, மலையிலே ஏறி விழுவ தானான்; ஸ்ரீ வேதவியாச பகவானும் சாயா சுகனைக் கொண்டு ஜீவித்தான்; ஆதலால், பகவத் விஷயத்தில் லாபாலாபமே பேறு இழவாயிருக்கும் இது, இவ் வாழ்வார் ஒருவர்க்குமே உள்ளதாகும்.

[3]இப்படி இவள் மோஹித்துக் கிடக்க, இவளைக் கண்ட உறவு முறையார் எல்லாரும் பிரமாத்திரத்தாலே கட்டுப்பட்ட வர்களைப் போன்று மோஹித்துச் செய்யத்தகும் காரியங்கள் இவை செய்யத்தகாத காரியங்கள் இவை என நிரூபணம் செய்வதற்கு ஆற்றல் இல்லாதவராய்க் கலங்கிக் கிடக்க, அங்குப்போலே உணர்ந்திருந்து நோக்குகைக்கு ஸ்ரீ ஜாம்ப வான் மஹாராஜர் திருவடி போல்வாரும் இல்லையாயிற்று. [4]"அந்த நிலையோடு கூடிய ஸ்ரீ பரதாழ்வான் பக்கத்திலிருந்த ஸ்ரீ சத்ருக்நாழ்வான்" என்கிறபடியே, ஸ்ரீ சத்ருக்நாழ் வான் அருகிலிருந்தார் என்னும் இதுவும் இல்லையாயிற்று.

---

1. ஸ்வாபதேசத்திலே வியாக்யாதாவின் ஈடுபாடு: 'பகவானைப் பெறு கின்ற காலத்தில்' என்று தொடங்கும் வாக்கியம்.

2. 'ஒருவர்க்குமே' என்கிறது என்? அல்லாதார்க்கும் இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மற்றும்' என்று தொடங்கி. புத்திரவியோகம் - புத்திரன் இறத்தல்; வியோகம் - இறப்பு; பிரிவு. 'சாயாசுகனைக் கொண்டு' என்றது, வியாசபகவானுடைய மோகத்தைக் கண்டு அதனைத் தீர்ப்பதற்காகச் சிவன் பிரதிமை ரூபமாகச் சிருஷ்டித்துக் கொடுத் ததைக் குறித்தபடி.

3. மேலே சுருக்கச் சொல்லியதனை விரித்து அருளிச்செய்கிறார் 'இப் படி' என்று தொடங்கி. 'பிரமாத்திரத்தாலே கட்டுப்பட்டவர்களைப்போன்று' என்றது, இராம இராவண யுத்தத்திலே இந்திரசித்தினால் விடப்பட்ட பிரமாத் திரத்தால் வானரசேனைகளும் இளையபெருமாளும் கட்டுப்பட்டிருந்ததனைக் குறித்தபடி. இதனை, உயுத்தகாண்டம் பிரமாத்திரப்படலத்தால் உணரலாகும். 'மஹாராஜர்' என்றது, சுக்கிரீவனை. திருவடி - அநுமான்.

4. மேலதற்கே மற்றும் ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'அந்த நிலை யோடு கூடிய' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. அயோத். 87; 4.

[1] "பெருமாள் காடேற எழுந்தருளினர், சக்கரவர்த்தி துஞ்சினன், இனி, நீயே யன்றோ இராச்சியத்துக்குக் கடவாய், உன்னைக் கொண்டன்றோ நாங்கள் ஜீவிக்க இருக்கிறது" என்கின்றார்கள் அல்லர்; "உன் முகத்தில் உறுவுதல் காணக் காண உன்னை இழக்கமாட்டார்; அவர் வரவு அணித்து என்றன்றோ நாங்கள் ஜீவிக்கிறது"என்றார்களே யன்றோ? அப்படியே, இவளைக் கொண்டே ஜீவிக்க இருக்கிறார்கள் ஆகையாலே, எல்லாரும் ஒக்க இவள் நிலையைக் கண்டு கலங்கிக் கிடந்தார்கள்; இங்ஙனங் கிடக்க, இவ்வளவிலே நாட்டிலே [2] வேரறிவார் விறகறிவார் மந்திரமறிவார் மருந்தறிவார் அடங்கலும் வந்து புகுர, அவ்வளவிலே வேறு தெய்வங்களின் சம்பந்தமுடையார் 'ஸ்ரீவைஷ்ணவர்களுடைய வீட்டினைத் தூஷிக்க நமக்கு நல்ல அளவு' என்று வந்து புகுர, இவளுடைய உறவு முறையிலுள்ளார் கலங்கிக் கிடக்கையாலே, 'இவளுடைய நோய் இன்னது' என்றும், 'பரிஹாரம் இன்னது' என்றும் அறியாதே, அவர்களிலே ஒருத்தி ஒரு கட்டுவிச்சியை 'இவள் நோய் எது? நோய்க்கு நிதானம் எது?' என்று கேட்டு, அவள் சொற்படியே, [3] "பூஜைக்குரிய பொருள்கள், நிந்திக்கப்படுகின்ற கள் முதலானவைகள்; தெய்வம், மிகத் தாழ்ந்த தெய்வம்; சாஸ்திரம், வேதங்கட்குப் புறம்பான ஆகமங்கள்; ஆசாரியர்கள், பூசாரிகள்" என்கிறபடியே, நிந்திக்கப்படுகின்ற பொருளை இவளைப் பாதுகாப்பதற்குப் பரிகாரமாகக் கொண்டு, புன் சிறு தெய்வம் ஆவேசித்ததாகக் கொண்டு, புறம்பான ஆகமங்களைச் சாஸ்திரங்களாகக் கொண்டு, வேறு தெய்வ சம்பந்த முடையாரை ஆசாரியராகக் கொண்டு, இவள் பக்கலுண்டான அன்பின் மிகுதியாலே, 'இவள் ஜீவிக்குமாகில் ஏதேனும் ஒரு வழியாலே யாகிலும் நீக்கிப் பாதுகாத்தல் அமையும்' என்று வழியல்லா வழியிலே

---

1. தலைவி மோஹித்தால், உறவினர்களும் மோஹிப்பதற்குக் காரணம் என்? எனின், இவளைக்கொண்டே ஜீவிக்க இருக்கிறார்கள் ஆகையாலே, அவர்களும் மோஹித்தார்கள் என்று கூறத் திருவுள்ளம்பற்றி அதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'பெருமாள்' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. அயோத். 87 : 8. அவர் வரவு-பெருமாள் வருகை. கலங்கிக் கிடக்க - பரிஹாரம் இன்னதென்று அறியாமலே கலங்கிக் கிடக்க.

2. வேர் - பச்சைமூலிகை. விறகு - உலர்ந்த மூலிகை.

3.

இழிந்தார்கள்; [1]அப்படிக் கலங்கப் பண்ணுமே யன்றோ பரிவு; [2]"முதியவர்களும் இளையவர்களுமான பெண்கள் காலையிலும் மாலையிலும் கூடிக்கொண்டு, கீர்த்தியையுடைய ஸ்ரீராமபிரானுடைய நன்மைக்காக எல்லாத் தேவர்களையும் வணங்குகிறார்கள்" என்கிறபடியே, செய்தார்களே யன்றோ திருவயோத்தியிலுள்ளார்.

இதனைக் கண்ட உயிர்த்தோழியானவள், "இவர்கள் செய்கிற இவை இவள் அகவாயில் கிடக்கிற சத்தையையும் இழக்கப்பண்ணுமித்தனை; இனி, நாம் இத்தை அறிந்தோமாகச் சொல்லில் 'உன் காவற் சோர்வாலே வந்த தன்றோ?' என்று சொல்லுவார்கள்; நாம் கைவாங்கி யிருந்தோமாகில் இவளை இழக்க வரும்; இனி, இதற்குப் போக்கடி என்?" என்று விசாரித்து, "இவர்கள் தாமும் 'இதுதான் ஏதோ?' என்று ஆராயாநின்றார்களேயன்றோ? அதைப் போன்று நாமும் நிரூபணத்திலே இழிந்து இவள் தன்மையைக் கொண்டு சொன்னோமாகச் சொல்லுவோம்" என்று பார்த்து, "நீங்கள் இவளுக்கு ஓடுகிற நோவும் அறிந்திலீர்கோள்; நிதானமும் அறிந்திலீர்கோள்; பரிஹாரமும் அறிந்திலீர்கோள்; நீங்கள் பரிஹாரமாகச் செய்கிறவை, கருமுகை மாலையைச் செவ்வி பெறுத்த என்று நெருப்பிலே இடுவாரைப்போலே இவளை இழக்கைக்குக் காரணமாமித்தனை; ஆனபின்னர், இவற்றை விட்டு, இக் குடியிலே பழையதாகச் செய்துபோரும் பரிஹாரத்தைச் செய்யப் பாருங்கோள்; [3]"உலகேழு முண்டான், சொன் மொழி மாலை யந் தண்ணந்துழாய் கொண்டு சூட்டுமினே" என்றும், "தண் ணந் துழாய்த், தாராயினும் தழையாயினும் தண்

---

1. இப்படிக் கலங்குகைக்குக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அப்படி' என்று தொடங்கி.

2. அப்படிப் பரிவாலே கலங்கின பேர் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "முதியவர்களும்" என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. அயோத். 2 : 52. இங்கு

> ஏழைய ரனைவரும் இவர்தட முலைதோய்
> கேழ்கிளர் மதலையர் கிளைகளு மினையார்
> வாழிய எனவவர் மனனுறு கடவுள்
> தாழ்குவர் கவுசலை தயரத னெனவே.

என்ற கம்ப ராமாயணச் செய்யுள் ஒப்பு நோக்குக.

3. பழையதாகச் செய்து போரும் பரிஹாரம் எது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "உலகேழும்" என்று தொடங்கி. இது, திருவிருத்தம். 20. "தண்ணந்துழாய்" என்ற பாசுரம், திருவிருத்தம். 53.

கொம்பதாயினும் கீழ், வேராயினும் நின்ற மண்ணாயினும் கொண்டு வீசுமினே" என்றுமே யன்றோ முன்பும் விதித்தது; [1]அங்கு "நின்ற மண்ணாயினும்" என்றாள்; இங்கு, "மாயன் தமரடி நீறு" என்றாள்; இதுவேயன்றோ அடிப்படச் செய்து போந்த பரிஹாரம். [2]ஆயிட்டு, இவள் நோய் இது, நோய்க்கு நிதானமும் இது; இதற்குப் பரிஹாரமும், பகவானுடைய நாம சங்கீர்த்தனமும் பாகவதர்களுடைய பாத தூளியைச் சேர்ப்பிக்கையும்" என்று சொல்லி அவர்கள் செய்கிறவற்றை நீக்குவிக்கிறாளாய்ச் செல்லுகிறது.

[3]இது தன்னில் ஓடுகிறது என்? என்னில், அறிவற்றிருக்கும் நிலையிலும் வேறு தேவதைகளுடைய சம்பந்தமும் அத்தேவதைகளுக்கு அடிமைப்பட்ட அடியார்களுடைய சம்பந்தமும் சத்தயா பாதகமுமாய், பகவானுடைய திருநாம சங்கீர்த்தனமும் பாகவதர்களுடைய சேர்க்கையும் சத்தயா தாரகமுமாம்படி ஆழ்வார்க்கு வைஷ்ணவத்தின் தன்மை முறுகினபடி சொல்லுகிறது. [4]'இராவணன் மாயா சிரசைக் காட்டின போது பிராட்டியும் மற்றைப் பெண்களைப்போன்று சோகித்துக் கண்ணநீர் விழவிட்டாளா யிருந்தது; [5]இதற்கு அடி என்? இது கேட்டபோதே முடியவன்றோ தக்கது' என்று சீயரைக் கேட்க, 'அவதாரத்தில் மெய்ப்பாட்டாலே 'மெய்' என்றே சோகித்தாள்; ஞானமின்றியிலே ஜீவிக்கைக்கு ஏது அவருடைய சத்தை யாகையாலே உளளாயிருந்தாள்; இவ் வர்த்தம் மெய்யாகில் சத்தையும் இல்லையாம்' என்று அருளிச் செய்தார்.

---

1. 'அங்கு' என்றது, திருவிருத்தத்தைக் குறித்தபடி; 'இங்கு' என்றது, "தீர்ப்பாரை" என்னும் இத் திருவாய்மொழியைக் குறித்தபடி.

2. ஆயிட்டு - ஆனபின்னர். "தேர்ப்பாகனார்க்கு" என்கையாலே, நோயும் அதற்கு நிதானமும் கொள்க.

3. 'இதுதன்னில்' என்று தொடங்கி, இத்திருவாய்மொழிக்குச் சுவாபதேசப்பொருள் அருளிச்செய்கிறார். சத்தயா - பொருள்களினுடைய தன்மையால்.

4. 'அஞ்ஞானதசையிலும் சத்தயா தாரகம்' என்பதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'இராவணன்' என்று தொடங்கி.

5. 'இதற்கு அடி என்?' என்றது, கண்ணநீர் விழவிட்டிருந்த மாத்திரத்திற்குக் காரணம் என்? என்றபடி. சீயர் - நஞ்சீயர். 'ஞானம் இன்றியிலே'

388.

திர்ப்பாரை யாம்இனி எங்ஙனம் நாடுதும்? அன்னைமீர்!
ஓர்ப்பால்இவ் வொண்ணுதல் உற்றநல் நோயிது தேறினோம்
போர்ப்பாகு தான்செய்துஅன் றைவரை வெல்வித்த மாயப்போர்த்
தேர்ப்பாக னார்க்கிவள் சிந்தை துழாஅய்த் திசைக்கின்றதே.

பொ-ரை:—அன்னைமீர்! இந்நோயினைத் தீர்ப்பதற்குரியவர்களை இனிமேல் யாம் எங்ஙனே தேடுவோம்? ஓர்ப்பாலே, இந்தப் பிரகாசம் பொருந்திய நெற்றியையுடைய பெண்ணானவள் அடைந்த நல்ல நோயினது தன்மை இது என்று தெளிந்தோம்; போருக்குரிய காரியங்களையெல்லாம் தானே செய்து அக் காலத்தில் பஞ்சபாண்டவர்களை வெல்லும்படி செய்த மாயப்போர்த் தேர்ப்பாகனார் விஷயத்தில் இவள் மனமானது கலங்கி மயங்குகின்றது என்க.

வி-கு:—அன்னைமீர்! யாம் இனி தீர்ப்பாரை எங்ஙனம் நாடுதும்? ஓர்ப்பால் தேறினோம், இவ்வொண்ணுதல் உற்ற இது நல் நோய்; தேர்ப்பாகனாருக்கு இவள் சிந்தை துழாஅய்த் திசைக்கின்றது எனக் கூட்டுக. ஓர்ப்பு-ஆராய்ந்து உணர்தல். பாகு-பகுதி. மாயம்-வஞ்சனை. தேர்ப்பாகன்-பார்த்தசாரதி; கிருஷ்ணன். துழாஅய்: வினையெச்சம். இப் பத்துப் பாசுரங்களும் 'வெறிவிலக்கு' என்னும் துறையின் பாற்படும்.

இத் திருவாய்மொழி கலிநிலைத்துறை.

ஈடு:—முதற்பாட்டு. [1] தோழியானவள், இவள் நோய்க்கு நிதானத்தைச் சொல்லி, 'நீங்கள் செய்கிறவை பரிகாரம் அல்ல' என்று விலக்குகிறாள்.

---

என்றது, 'பெருமாள் சத்தையோடே இருக்கிறார்' என்கிற ஞானமின்றியே என்றபடி. 'இவ்வர்த்தம்' என்றது, அவர் முடிவினை. இங்கு,

காத லாளுடல் உள்ளுயிர் கைவிடின்
ஏதம் என்னுயிர் எய்தி யிறக்குமற்
றாத லாலழி வொன்றில ளல்லளூஉம்
மாதர் விஞ்சையும் வல்லளு மல்லளோ.

என்ற சிந்தாமணிச்செய்யுளின் முதல் மூன்றடிகளையும், 'யாம் இருதலைப்புள்ளின் ஓருயிரே மாதலின், காதலாள் உயிர் நீங்கின் என்னுயிரும் ஏதம் எய்தி நீங்கும்; இது நீங்காமையின், அவளும் இறந்துபட்டிலள்; இதுவும் அறிதற்கு ஓர் உபாயம்' என்ற அதனுரையும் ஒப்பு நோக்குக. (சிந். செய். 1631.)

1. பாசுரத்தின் ஈற்றடியையும் முதலடியையும் திருவுள்ளம்பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

தீர்ப்பாரை யாம் இனி எங்ஙனம் நாடுதும் - இதற்கு, மூன்று படியாக அருளிச்செய்வர்; 'தீர்ப்பாரை எங்ஙனம் நாடுதும்' என்கையாலே, 'நீங்கள் செய்கிறவை பரிஹாரமல்ல' என்று அவற்றை விலக்குவதிலே தாத்பரியம்; என்னை? எனின், இவர்கள், நோயினை நீக்குவதற்கு வேண்டிய உபாயங்களைச் செய்துகொண்டிருக்கும்போது 'தீர்ப்பாரை எங்கே தேடுவோம்?' என்று கூறினால், இவை பரிஹாரம் அல்ல என்பது தானே போதருமே யன்றோ? அங்ஙனன்றிக்கே, இவள் [1] ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போலே ஆக்கிக்கொண்டே யன்றோ இருப்பது; ஆதலால், இவளோடு ஒக்க மோஹிப்பவர்கள் கிடைப்பார்க ளத்தனை போக்கித் தீர்ப்பாரை எங்கே தேடுவோம்? என்னுதல்; அன்றிக்கே, தோழியாகிய தானும் இப்போது தீர்ப்பாரை ஆராயாநிற்கிறாள் என்று தோற்றி இருந்தது என்னுதல். யாம் - 'அன்னைமீர்!' என்று விளித்தவள் அவர்களையும் உளப்படுத்தி [2] 'யாம்' என்கிறாள்; இதனால், தாய்மார்க்கும் தோழிமார்க்கும் வாசியற் றிருத்தலைத் தெரிவித்தபடி. [3] அன்றிக்கே, தாய்மார் மங்களாசாசனம் செய்து மீளாநிற்க, [4]"ஸ்ரீ ராமபிரானுடைய நண்பர்கள் யாவரும் மனங் கலங்கிச் சோகம் என்னும் சுமையால் அழுத்தப்பட்டவர்களாய்ப் படுக்கையிலிருந்து அப்பொழுது எழுந்திருக்கவில்லை" என்று சொல்லப்படுகின்றவாறே அதுவும் மாட்டாதே கிடந்தார்களே யன்றோ தோழன்மார்; ஆகை

---

1. இவள் மோஹித்தால் எல்லாரும் மோஹிக்கவேண்டுமோ? என்ன, "ஊரும் நாடும்" என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, திருவாய். 6. 7 : 2.

2. 'நாம்' என்ற பன்மைப்பெயரே, முன்னிலையாரை உளப்படுத்தும்; ஆதலால், 'நாம்' என்ற பாடம் இருப்பின் பொருள் சிறக்கும்.

3. ஆயினும், தாய்மார்களைக் காட்டிலும் தோழிமார்கட்கு வேறுபாடு உண்டு என்பதனைப் பிரமாணத்தோடு காட்டுகிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. "யர்மங்களம் ஸுபர்ணஸ்ய" என்ற சுலோகத்தை நோக்கித் 'தாய்மார் மங்களாசாசனம் பண்ணி மீளாநிற்க' என்கிறார். தாய்மார் - கௌசலையையார் முதலானோர்.

4. ஸ்ரீராமா. அயோத். 41 : "யாம்" என்பது, முதற்பொருளில், உளப்பாட்டுத் தன்மைப் பன்மை. இரண்டாவது பொருளில், தனித்தன்மைப்பன்மை; உயர்வுப்பொருளது.

யாலே, தாய்மார்க்கும் தோழிமார்க்கும் வாசியறுக்கும் விஷயம் என்று தோழிமார்க்கு ஏற்றம் சொல்லுகிறது என்னுதல். [1]'நோய் இன்னது' என்று அறிந்தபின்பு என்பாள் 'இனி' என்கிருள்; அன்றிக்கே, [2]"கடல்வண்ணர் இது செய்தார் காப்பார்ஆர்" என்கிறபடியே, மருந்தே அபத்யமானல் பரிஹாரமுண்டோ? [3]"நச்சு மா மருந்த"மேயன்றோ அபத்யமாகிறது; [4]"ஆனந்தமாக விருப்பவர், மருந்தாக விருப்பவர், மருத்துவராக இருப்பவர்" என்கிறவனுயிற்று விரோதியாகிறன் என்பாள் 'இனி' என்கிருள் என்னுதல்.

[5] ஆக, தோழியானவள் இனிப் பரிஹாரமுண்டோ? எங்கே தேடக்கடவோம்? என்றவாறே, 'இவள் கையது நம் காரியம், இவள் அறிந்தாளாக அடுக்கும்' என்று உறவினர்கள் அனைவரும் இவள்மேலே ஒருமுகம் செய்து பார்த்தார்கள்; 'இனி, நாம் முன்னே அறிந்தோமாகச் சொல்லில் நம் காவற் சோர்வாலே வந்தது ஆம்; ஆதலால், நாம் இப்போது நிரூபித்தோம் ஆவோம்' என்று பார்த்து, ஓர்ப்பால் - இப்போது ஓர்ந்து பார்த்தவிடத்து என்கிருள். என்றது, நீங்களும் ஆராயாமின் றீர்களே யன்றோ; உங்களைப்போன்று நானும் ஆராய்ந்து பார்த்தவிடத்தில் இங்ஙனே தோற்றிற்று என்கிருள் என்றபடி. இவள்தான் ஒரு கூரத்தாழ்வானோடு ஒக்குங் காணும்; மனத்தினை [6]பிரத்யக் விஷயம் ஆக்கினல், மூவகைத் தத்துவங்களையும் அலகு அலகாகக் காணவல்ல ளாயிற்று. இ ஒள் நுதல் உற்ற நல்நோய் இது தேறினோம் - இவ் விலக்ஷணமான நுதலையுடையவள். [7]இம் முகத்தை யுடையவளுக்கு வேறு

1. "நோய் இன்னது" என்று அறிந்த பின்பு என்றது, "தேர்ப்பாகனூர்க் கிவள் சிந்தை துழாஅய்த் திசைக்கின்றதே" என்றதனைத் திருவுள்ளம் பற்றி.

2. திருநெடுந்தாண்டகம். 11.

3. 'அவன்மருந்து' என்னுமதற்குப் பிரமாணத்தை அருளிச்செய்கிறார். "நச்சுமாமருந்தம்" என்று தொடங்கி. இது, திருவாய். 3. 4 : 5.

4. 'மருந்து' என்பதற்கு, ஸஹஸ்ரநாமத்தினின்றும் மற்றும் ஒரு பிரமாணம் காட்டுகிறார் "ஆனந்தமாக இருப்பவர்" என்று தொடங்கி.

5. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'ஆக' என்று தொடங்கி.

6. பிரத்யக்விஷயம் - ஜீவாத்மா.

7. 'இ' என்னும் சுட்டினை முகத்திற்கு அடைமொழியாக்கி அருளிச்செய்கிறார் 'இம்முகத்தையுடையவளுக்கு' என்று தொடங்கி.

முகத்தாலே வருவதொரு நோய் உண்டோ? [1] "கண்ணன், கோளிழை வாண்முகமாய்க் கொடியேன் உயிர் கொள்கின்றதே" என்கிறபடியே, அம் முகத்தால் வரவேண்டாவோ? [2] இவள்நோய் என்றால் அவன் அடியாக வரவேண்டாவோ? ஸ்ரீபரதாழ்வான் நோய் என்றால், சாதுர்த்திகமாயிருக்குமோ? ஸ்ரீ ராமவிரஹத்தாலே வந்தது என்று பிரசித்தமன்றோ? [3] இவளை இப்படிப் படுத்துவது ஒருவிஷயமாக வேண்டாவோ? [4] அம்பு பட்ட வாட்டத்தோடே முடிந்தாரையும், நீரிலே புக்கு முடிந்தாரையும் முகத்திலே தெரியாதோ? அப்படியே, குணங்களால் மிக்க சர்வேசுவரனை ஆசைப்பட்டுப் பெருமையாலுண்டான மோஹம் ஆகையாலே [5] முகத்தில் செவ்விக்கு ஆலத்தி வழிக்க வேண்டும்படியாயிற்று இருக்கிறது. பரிஹாரம் இல்லாதபடி மறுபாடுருவக் கொண்ட நோயாதலின், '**உற்ற நோய்**' என்கிறாள். இந் நோய்தான் பரிஹரிக்க வேண்டா; [6] கைக்கூலி கொடுத்துக் கொள்ளவேண்டும் நோய் என்பாள் '**நல்நோய்**' என்கிறாள். [7] இந் நோய் கொள்ளுகைக்கே யன்றோ முமுக்ஷுக்கள் முயற்சி செய்வது; [8] அப்படியிருக்க, இந் நோய் கொள்ளுகை யன்றிக்கே, பரிஹாரம்

---

1. பின்னை எம் முகத்தாலே வரவேணும்? என்ன, "கண்ணன்" என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, திருவாய். 7. 7 : 8.

2. இகரச்சுட்டினை ஒண்மைக்கு அடையாக்கி அருளிச்செய்கிறார் 'இவள்நோய்' என்று தொடங்கி. சாதுர்த்திகம் - ஒரு நோய். முதல்பத்து குறிப்புக் காண்க. பக். 157.

3. "தேர்ப்பாகனார்க்கு" என்றதைக் கடாக்ஷித்து பாவம் அருளிச் செய்கிறார் 'இவளை' என்று தொடங்கி.

4. "ஒண்ணுதல்" என்பதற்கு, இயல்பாக அமைந்த அழகையுடையவள் என்று மேலே பொருள் அருளிச்செய்து, பகவத் அநுபவத்தால் வந்த அழகையுடையவள் என்று வேறும் ஒருபொருள் அருளிச்செய்கிறார் 'அம்பு பட்ட' என்று தொடங்கி.

5. அவன், அகத்தில் இருப்பதனாலே மோஹ தசையிலும் ஒளி போகவில்லை என்பது கருத்து.

6. 'கைக்கூலி கொடுத்து' என்றது, ஸ்வாபதேசத்திலே சாதநாநுஷ்டானத்தைச் செய்து என்றபடி.

7. 'இந்நோய்' என்றது, ஈண்டு, பக்தியினை.

8. தோழியினுடைய மனோபாவம், 'அப்படியிருக்க' என்று தொடங்கும் வாக்கியம்.

சொல்ல இருப்பதே நான்! ஞானம் பிறந்தபின்பு சரீரம் முடியும் வரையிலும் செல்ல [1]தேகயாத்திரைக்கு உறுப்பாய், பின்பு தானே நித்தியப் பிராப்யமான நோயன்றோ இது. [2]இதர சாதனமாக நோக்குமிடத்துச் சாதனமாய், சாதன புத்தி கழிந்தவன்று தானே பேறு யிருக்குமே யன்றோ? [3]"சிலாக்யமான ஆபத்தை அடைந்தவனாய்" என்கிறபடியே, அடிக்கழஞ்சு பெற்ற ஆபத்தாயிற்று; இடர்ப்பட்டவிடத்திலே சர்வேசுவரன் அரைகுலையத் தலைகுலைய வந்து விழும்படியான ஆபத்தாயிற்று இது. [4]"என்னிடத்திலேயே வைக்கப்பட்ட பக்தியினாலே,உண்மையாக அறிவதற்கும் பார்ப்பதற்கும் என்னுடைய சொரூபத்தை யடைவதற்கும் தகுந்தவனாக இருக்கிறேன்" என்கிறபடியே, இது உண்டானால் பின்னை அவன் கைப்பட்டானேயன்றோ? [5]இருடிகள் கோஷ்டியில் கலக்கம் அரிதாயிருக்குமாறுபோலே, இவர்கள் கோஷ்டியில் தெளிவு அரிதாயாயிற்று இருப்பது; ஆதலின், 'தேறினோம்' என்கி

---

1. 'தேகயாத்திரைக்குறுப்பாய்' என்றது, அநுபவத்திற்கு, அதாவது, தரித்திருப்பதற்கு உறுப்பாய் என்றபடி. 'நித்தியப் பிராப்பியமான நோய்' என்றது, அழியாத பலமாக இருக்கின்ற நோய் என்றபடி.

2. தேக யாத்திரைக்கு உறுப்பு என்கிறது என்? சாதனத்வம இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இதர சாதனங்களை' என்று தொடங்கி. 'இதர சாதனம்' என்றது, பிரபத்திக்கு வேறான சாதனமாக எண்ணும்பொழுது என்றபடி.

3. "நல்நோய்" என்பதற்குச் சிலாக்யமான நோய்; அதாவது பக்தி என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'சிலாக்கியமான ஆபத்து' என்று தொடங்கி.

4. பக்தி சிலாக்கியம் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார், "என்னிடத்தில்" என்று தொடங்கி. இது, ஸ்ரீ கீதை. 11: 54.

5. "உற்ற நன்னோய் இது" என்ன அமைந்திருக்க, "தேறினோம்" என்கிறது என்? என்ன, 'இதனால், 'இந்தத் தேற்றந்தானும் அரிது' என்பது போதருகின்றது என்கிறார் 'இருடிகள்' என்று தொடங்கி. இவர்கள் - ஆழ்வார்கள். பகவத் பாகவத விஷயங்களில் பக்தியின் மிகுதியாலே, எல்லாத் தேவர்களையும் வணங்குதலாகிற வழியல்லா வழியேயாகிலும் நடக்கப் பார்க்குமவர்களாகையாலே, 'இதர விஷயங்கள் ஆகா' என்னும் தெளிவு அரிது என்றபடி.

றாள். [1] இதர விஷயங்களிலே ஈடுபாடு ஆகாது' என்கிற தெளிவே யன்றோ இருடிகளுக்கு உள்ளது ; பகவானிடத்தில் ஈடுபட்ட காரணத்தால் வந்த கலக்கமேயன்றோ இது.

'ஆகில், அது சொல்லிக் காணாய்' என்ன, சொல்லுகிறாள் மேல்: போர்ப் பாகு தான்செய்து - போர்க்கு வேண்டும் நிர்வாஹமெல்லாம் தானேசெய்து ; என்றது, இரண்டு தலைக்கும் உறவாய்ப் பொருந்தவிடச் சென்று, போர்க்களத்தில் வந்தவாறே, [2] "மூன்று உலகங்கட்கும் நாதனும் ஜனார்த்தனனுமான அந்தக் கண்ணபிரான் தருமபுத்திரனுக்கு மந்திரியாயும் இரக்ஷகனாயும் இருக்கிறான்" என்கிறபடியே, அவர்கள் பறித்துக் கொண்ட பரிகரமெல்லாம் தானேயாய் நின்றானாயிற்று என்றபடி. பாகு - நிர்வாஹகர் செய்யும் தொழில். [3] அன்றிக்கே, ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருந்த தான் செய்து என்னுதல்; என்றது, தனது ஆசன பலத்தாலே எல்லாவற்றையும் நடத்தக் கடவ தான் செய்து கை தொடனாய் என்றபடி. 'தான்' என்று மேன்மை சொல்லிற்று. [4] இவள் மோஹிக்கிறது அவனுடைய எளிமைக் குணத்துக்கே யன்றோ ; என்றது, எளியவனுடைய எளிமைக் குணத்துக்கு அகப்படுமவ ளன்று இவள், அம் மேன்மையுடையவன் தாழ நின்றதிலே அகப்படுமவளே யன்றோ இவள் என்றபடி. அன்று தான் செய்து ஐவரை வெல்வித்த-அவர்கள் நூற்றுவராய்த் துர்வர்க்கமடைய அங்கே திரண்டு, இவர்கள் தாம் ஐவராய் வெறுவியராய் நின்ற அன்று, தான்

---

1. தெளிவு அரிதாகில், கலக்கம் தியாஜ்யம் அன்றோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இதர விஷயங்களிலே' என்று தொடங்கி. என்றது, விஷயதோஷ தர்சனமே பிரதானம் இருடிகளுக்கு; பகவத் விஷய வைலக்ஷண்ய ஞானமே பிரதானம் ஆழ்வார்களுக்கு என்றபடி.

2. பாரதம்.

3. 'ஆளிட்டுச் செய்யாதே தானே செய்து' என்று ஓர் அர்த்தம் அருளிச்செய்து, "தான்" என்பதற்குச் 'சர்வாதிகனான தான்' என்று வேறும் ஓர் அர்த்தம் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. 'கைதொடனாய்' என்றது, கையாலே தொட்டுச் செய்கிற சகாயபூதனாய் என்றபடி.

4. இவள் மோஹிக்கிறது அவனுடைய எளிமைக் குணத்துக்கா யிருக்க, மேன்மையைச் சொல்லுகிறது எற்றிற்கு? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவள் மோஹிக்கிறது' என்று தொடங்கி. அவனுடைய - பரனானவனுடைய.

[1] கையும் அணியும் வகுத்து, படைபொருத்தி, சாரதியாய் நின்று, குதிரைகள் இளைத்தவிடத்து வாருணாஸ்திரங்கள் விடலாமிடங்கள் காட்டி விடுவித்து, அங்கே குதிரைகளை விட்டு நீரூட்டிப் பூட்டி வென்றான் என்னுமிடம். அருச்சுனன் மேலே யாக வேண்டும் வியாபாரங்களை முழுதும் தானே செய்தானே யன்றோ? துரியோதனன் முதலியோர்களையும் இவளையும் தோற்பித்தவதிலும் அரிதுகாணும் பாண்டவர்களை வெல்வித்தது; ஆதலின், 'ஐவரை வெல்வித்த' என்கிறது. என்றது, என்சொல்லியவாறோ? எனின், துரியோதனன் முதலியோர் களைத் துர்மானத்தாலே தோற்பிக்கை அரிது; [2] இவளை, பெண்மைக்குரிய அபிமானத்தாலே தோற்பிக்கை அரிது; அப்படியே, [3] "ஏ கிருஷ்ண! வெற்றியையாவது இராச்சியத் தையாவது நான் விரும்பவில்லை; இராச்சியத்தினாலே என்ன பயன்? போகங்களினால் என்ன பயன்? உயிர் வாழ்ந்திருப் பதனால் என்ன பயன்?" என்ற பாண்டவர்களை வெல்வித்த லும் அரிது என்றபடி. மாயம்போர் - ஆச்சரியமான போர்; அன்றிக்கே, வஞ்சனையுடைய போர் என்னுதல். [4] பகலை இர வாக்குவது, 'ஆயுதம் எடேன்' என்று ஆயுதம் எடுப்பது ஆனவை இத்தலையிலும் உண்டு; மஹாரதர் பலர் கூடி ஒருவனான அபிமன்யுவைக் கொன்றது தொடக்கமானவை அத்தலையிலும் உண்டு; இவற்றைச் சொன்னபடி.

தேர்ப்பாகனார்க்கு - அருச்சுனனைப் பகைவர்கள் சீறினால் அழியச்செய்வது தன்னையாம்படி, [5] உடம்புக்கு ஈடு இடாதே வெறுங்கையோடே தேர்த்தட்டிலே முன்னேநின்று சாரதி வேஷத்தோடே செய்த தொழிலைச் சொல்லுகிறது. என்றது,

---

1. கையும் அணியும் வகுத்து - வியூக விபாகம் செய்து.

2. 'இவளைப் பெண்மைக்குரிய அபிமானத்தாலே தோற்பிக்கை அரிது' என்றது, "சிந்தை தழாஅய்த் திசைக்கின்றதே" என்றதனால் இவள் தோல்வியும் சித்தமேயன்றோ?

3. ஸ்ரீ கீதை. 1: 32.

4. இவற்றை, வில்லிபாரதம் மூன்றாம்போர், பதின்மூன்றாம்போர், பதினான்காம்போர்ச் சருக்கங்களால் உணரலாகும். இத்தலை - பாண்டவர்கள் பக்கலில்.

5. உடம்புக்கு ஈடு இடாதே - உடம்புக்குச் சட்டை இடாதே. ஈடு - சட்டை.

[1] "நீண்ட கைகளையுடைய தருமபுத்திரரே! நான் உமக்கு அடியவனாக இருக்கிறேன்; ஏவிக் காரியங் கொள்ளலாகாதோ?" என்றமையைத் தெரிவித்தபடி. இவள்-[2] அப்பாகிலே பிடிபட்ட இவள். [3] "தாழ்ந்த குணங்கள் இல்லாத அந்தப் பரம்பொருள் உம்முடைய சரீரத்தில் பரந்து இருக்கிறார்" என்கிறபடியே, சாரதியாயிருக்கும் வேஷம் இவள் வடிவிலே நிழல் எழுந்து தோற்றுகிற தில்லையோ? சிந்தை துழாஅய்த் திசைக்கின்றது - இவள் நெஞ்சு கலங்கி மோஹிப்பது தேர்ப் பாகனுக்கு; 'கடல் கலங்கிற்று' என்றால், 'மந்தரத்தாலே' என்றிருக்க வேண்டாவோ? சாரதியாயிருந்து செய்த தொழில்களைத் தவிர, பரமபதத்தில் முதன்மைக்கு மோஹிப்பாளோ? மயர்வற மதிநலம் அருளப்பெற்ற இவள். மயர்வற மதிநலம் அருளப்பெற்றார் கலங்கும்போது அவனுடைய [4]அடியார்கட்குப் பரதந்திரப்பட்டிருக்கும் குணத்திலே ஆகவேண்டாவோ? [5]ஒருவனுக்குச் சோகத்தை நீக்கினவன் காணுங்கோள் இவளுக்குச் சோகத்தை விளைத்தான். ஆணுக்குச் சோகத்தைப் போக்கினான்; அபலைக்குச் சோகத்தை விளைத்தான். (1)

## 389.

திசைக்கின்ற தேஇவள் நோய்இது மிக்க பெருந்தெய்வம்
இசைப்பின்றி நீரணங் காடும் இளந்தெய்வ மன்றிது
திசைப்பின்றி யேசங்கு சக்கர மென்றிவள் கேட்கநீர்
இசைக்கிற்றி ராகில் நன்றே இல்பெறு மிதுகாண்மினே.

---

1. "தேர்ப்பாகன்" என்றதனாலே கிடைத்த பொருள், பாரதந்திரியம் என்று கொண்டு அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'நீண்ட கைகளையுடைய' என்று தொடங்கி. இது, பாரதம்.

2. அப் பாகிலே - அந்தச் சாரதி வேடத்திலே; பாகு - பாகன்: தேர்ப் பாகன்.

3. இது பாரதம். அநுமானைப் பார்த்து வீமன் கூறியது.

4. 'அடியார்கட்குப் பரதந்திரப்பட்டிருக்குங் குணத்திலேயாகவேண்டாவோ?' என்றது, "எத்திறம் உரலினோ டிணைந்திருந் தேங்கிய எளிவே" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

5. மேலே, 'கடல்வண்ண ரிதுசெய்தார் காப்பாரார்' என்றவிடத்தில் அருளிச்செய்த பொருளை இங்கே காட்டுகிறார் 'ஒருவனுக்கு' என்று தொடங்கி. ஒருவனுக்கு - அருச்சுனனுக்கு. 'சோகத்தை நீக்கியது' என்றது, பகவத் கீதையை உபதேசித்து அருச்சுனனுடைய சோகத்தை நீக்கியதைத் தெரிவித்தபடி. அபலை - பலமற்றவள்.

பொ - ரை :—அறிவுகெட்டு மயங்குவதே! இவளுடைய நோயாகிய இது, மிக்க பெரிய தெய்வம் காரணமாக வந்தது; ஆதலால், நீங்கள் பொருத்தமில்லாமல் அணங்கு ஆடுகின்ற புன்சிறு தெய்வங்கள் காரணமாக வந்ததன்று; மயக்கமில்லாமல் சங்கம் சக்கரம் என்று இவள் கேட்கும்படியாக நீங்கள் சொல்வீர்களாகில் நலமேயாம்; இவளும் இச் சரீரத்தையே இடமாகப் பெறுவாள்; இதனை நீங்களே காணுங்கோள் என்கிறாள்.

வி-கு:—திசைத்தல்-திகைத்தல்; அறிவு மயங்குதல். இசைப்பு - பொருத்தம். அணங்காடுதல் - தெய்வம் ஏறியாடுதல். இல் - சரீரம்; உயிருக்கு வீடாக இருப்பது.

ஈடு:—இரண்டாம்பாட்டு. [1] அற்ப தேவதைகட்குச் செய்யும் சாந்திகளால் இந்நோய் போக்குகை அரிது; பகவானைப் பற்றிப் பேசில் இவளைப் பெறலாம் என்கிறாள்.

[2] திசைக்கின்றதே இவள் நோய் - [3] இவள் அவன் குண நிமித்தமாக அறிவு கெடாநின்றாள்; நீங்கள் இவள் நோய் நிமித்தமாக அறிவு கெடாநின்றீர்கள். [4] இவள் நோய்க்கு நிதானம் 'அவன் அடியாக வந்தது' என்று நீங்கள் அறியமாட்டு

---

1. "நீர் அணங்காடும் இளந்தெய்வம் அன்றிது" என்றதனால் பலித்த பொருளை அருளிச்செய்யாநின்றுகொண்டு, "சங்கு சக்கரம் என்றிவள் கேட்க நீர் இசைக்கிற்றிராகில் நன்றே இல் பெறும்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. திசைத்தல் - திகைத்தல்; அறிவு மயங்குதல்.
"திசைத்தது மில்லை எனக்கு வந்து தியோர்
இசைத்தது மில்லை முனிந்த இவ்வரங்கள்
குசைப்பரி யோய் தரி னின்றுகொள்வன்"

என்பது கம்பராமாயணம்.

3. மேல் பாசுரத்தில் "திசைக்கின்றதே" என்று வைத்து, இங்கும் "திசைக்கின்றதே இவள் நோய்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'இவள் அவன்' என்று தொடங்கி. "தேர்ப்பாகனார்க்கு" என்றதனை நோக்கி 'அவன் குணநிமித்தமாக' என்கிறாள். குணம் - சௌலப்ய குணம்.

4. "பெருந்தெய்வம்" என்றதனைக் கடாக்ஷித்து பாவம் அருளிச்செய்கிறார் 'இவள் நோய்க்கு' என்று தொடங்கி.

கின்றிலீர்கள் என்றபடி. [1] தாய்மார் ஆகையாலே சிறப்பித்து வார்த்தை சொல்ல வேணுமே யன்றோ? ஆதலால், 'திசைக்கின்றதே' என்கிறாள். இவள்நோய் நிமித்தமாக அறிவு கெடுவதே [2] நாம்! 'நாங்கள் அறிந்திலோமாகில், இதற்கு நிதானம் அறிந்தவளாயிருக்கிற நீதான் பின்னைச் சொல்லிக் காணாய்' என்ன, சொல்லுகிறாள் மேல்: இது மிக்க பெருந்தெய்வம் - [3]"கம்பீரமான ஸ்வபாவத்தை யுடையவன், மேலான தெய்வம்" என்றும், [4]"வானோர் தலைமகனும் சீராயின தெய்வ நன்னோய்" என்றும் சொல்லுகிறபடியே, சர்வேசுவரனடியாக வந்த சிறப்பு வாய்ந்த நோய் இது; இவள் நோய்க்கும், இவள் நோய்க்கு நிதானபூதனானவனுக்கும் உண்டான அபேதத்தை நினைத்து, 'இது மிக்க பெருந்தெய்வம்' என்று [5] நோய் தன்னையே அவனாகச் சொல்லுகிறாள். இசைப்பு இன்றியே-

---

1. "திசைக்கின்றீர்கள்" என்னாது, "திசைக்கின்றதே" என்கிறது என்? என்ன, அதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'தாய்மாராகையாலே' என்று தொடங்கி. ஆக, "திசைக்கின்றதே" என்பது, பூஜ்ய வார்த்தை என்றபடி. இவ்வாறு பேசுதல், வைணவப் பெருமக்களிடையே இன்றும் பெருவழக்காக உள்ளதை நாம் அறிதல் தகும். 'ஸ்வாமி அருளிச்செய்கிறதே' என்பது போன்றவைகளைக் காண்க.

2. 'நாம்' என்பதற்கு, ஈண்டு, நீங்கள் என்பது பொருள்.

"செங்கயல்போல் கருநெடுங்கண் தேமருதா மரையுறையும்
நங்கையிவ ரெனநெருநல் நடந்தவரோ நாமென்ன"
(கம். சூர்ப். 119.)

"நாமரை யாமத்தென் னேவந்து வைகி நயந்ததுவே"
(திருக்கோ. 164.)

"தாவா விருப்பொடு கன்றியாத் துழிச்செல்லும்
ஆபோற் படர்தக நாம்" (கலித். மரு. 16.)

என்ற இடங்களில் 'நாம்' என்பது, முன்னிலைப் பொருளில் வந்திருத்தல் காண்க. அன்றி, 'நாம்' என்பதனை உளப்பாட்டுத் தன்மைப் பன்மையாகக் கோடலுமாம்.

3.

4. திருவிருத்தம். 53.

5. 'நோய் தன்னையே அவனாகச் சொல்லுகிறாள்' என்றது, காரிய காரண உபசாரம்; பெருந்தெய்வம், காரணம்; நோய், காரியம். இங்குக் காரியத்தைக் காரணமாக உபசரித்திருத்தல் காண்க.

நீங்கள் செய்யும் பரிஹாரத்துக்கும் [1]உங்களுக்கும் ஒரு சேர்த்தியில்லை. இந்நோய்க்கும் இவளுக்கும் ஒரு சேர்த்தியில்லை. முதல்தன்னிலே பகவத்விஷயத்திலே கை வைத்தார் கொள்ளுகைக்குத் தகுதியான நோய் அன்று இது தான். [2]ஒரு வழியாகிலும் ஒரு சேர்த்தி இன்றிக்கே. என்றது, இது உங்களுக்குச் சேர்ந்தது அன்று; உங்கள் மகளாய் நோவு கொண்ட இவளுக்குச் சேர்ந்தது அன்று; நோய்க்கு நிதான பூதனான சர்வேசுவரனுக்குச் சேர்ந்தது அன்று; மற்றைத் தேவர்கள் [3]இந்நிலத்தில் வந்து புகுர மாட்டாமையாலே நீங்கள் நினைக்கின்ற தேவர்களுக்குச் சேர்ந்ததுஅன்று என்றபடி. இங்கே,நம்பிள்ளை அருளிச்செய்யும் வார்த்தை: [4]பிள்ளையுறங்காவில்லிதாசருடைய குடிமகன் ஒருவனுக்கு, ஐயனார் ஏறி வலித்து நலிந்தவாறே, 'உனக்கு வேண்டுவது என்?' என்று கேட்க, எனக்குப் பாலும் பழமுமாக உண்ண வேணும்; சாந்தும் புழுகும் பூசவேணும்; நல்லபுடைவை உடுக்க வேணும்; நல்ல ஆபரணம் பூணவேணும்; தண்டு ஏறவேணும்; அணுக்கன் இடவேணும்' என்ன, அவர்களும் 'அப்படியே செய்கிறோம்' என்று பிள்ளையின் திருமாளிகையிலே வந்து, சாந்து, புழுகு, ஆபரணம் முதலானவைகளை வாங்கிக்கொண்டு போய் அவற்றை அலங்கரித்துச் சாந்தியும் செய்துவிட்டு வந்த அவ்இரவு, பண்டையிலும் இருமடங்கு அதிகமாக அவனை வலிக்க, 'இது என்?' என்று கேட்க, 'பிள்ளை சாத்திக் கொள்ளுகின்றவற்றை யெல்லாம் கொண்டு வந்தீர்கோள்;

---

1. 'உங்களுக்கும்' என்றது, பகவத் விஷயத்தில் ஈடுபாடுடைய உங்களுக்கும் என்றபடி. 'இந்நோய்க்கும்' என்றது, நீங்கள் நினைத்த நோய்க்கும் என்றபடி. இந்நோய்க்கும் இவளுக்கும் ஒரு சேர்த்தி இல்லாமையைக் காட்டுகிறார் 'முதல் தன்னிலே' என்று தொடங்கி.

2. இன்னார்க்கு "இசைப்பின்றியே" என்னாது, பொதுவாக "இசைப்பின்றியே" என்று கூறியதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'ஒரு வழியாகிலும்' என்று தொடங்கி.

3. "இளந்தெய்வம்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'இந்நிலத்தில்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

4. பாகவதர்களுடைய திருமாளிகைகளிலே புன் சிறு தெய்வங்கள் வந்து புகுரமாட்டா என்பதற்கு ஐதிஹ்யம் காட்டுகிறார் 'பிள்ளையுறங்காவில்லிதாசர்' என்று தொடங்கி. பிள்ளையுறங்காவில்லிதாசர் என்பவர், இராமாநுசருடைய மாணாக்கர். குடிமகன் - படியாள். தண்டு - பல்லக்கு. அணுக்கன் - குடை.

அவர்க்குச் சாத்துகிற அணுக்கனை இட்டீர்கோள்; நான் அதன்கீழ்ப் போவேனே? என்னை வெயிலிலே கொண்டு போனீர்கோள்; என் உடம்பிலே நெருப்பை வழியட்டினாற் போலே அவர் சாத்துகிறவற்றைப் பூசினீர்கோள்; அரிகண்டம் இட்டாற்போலே அவர் சாத்துகிற ஆபரணத்தைப் பூட்டினீர்கோள்; நீங்கள் செய்த செயலுக்கு இவனைக் கொண்டல்லது போகேன்' என்று வலித்ததாம். ஆகையால், அவற்றுக்குச் சேராது. நீர் - பகவானிடத்தில் பக்தியினால் பரவசப்படக் கூடிய நீங்கள். அணங்கு ஆடும் [1]இளந்தெய்வம் அன்று இது - தெய்வம் ஏறினவராய்க்கொண்டு ஆடுகிற மறுமுட்டுப்பொருத அற்பதேவர்கள் காரணமாக வந்த நோய் அன்று இது. திசைப்பு இன்றியே - இவள் நோய்க்கு நிதானத்தில் அறிவு கெட்டாற்போலே பரிஹாரத்திலும் அறிவு கெடாமல். [2]நிதானத்தில் கலக்கம் பிறந்தாலும் பரிஹாரத்தில் கலக்கம் பிறவாதொழியவே நோய் நீங்குமேயன்றோ? நாங்கள் நிதானத்தில் அறிவு கெட்ட பாகம் என்? பரிஹாரத்தில் அறிவு கெடாத வழி என்? என்னில், சொல்லுகிறான் மேல்: சங்கு சக்கரம் என்று - [3] "சங்கு எனும் சக்கரம் என்னும்" என்றேயன்றோ இவள் நோய் இருப்பது; ஆதலால், நீங்களும் சங்கு சக்கரம் என்று பரிஹரிக்கப் பாருங்கோள். [4]நோய் வந்த வழியை அறிந்து பரிஹரிக்கவேண்டாவோ? [5] "சங்கு எனும்

---

1. "இளந்தெய்வம்" என்றது, காரிய காரண உபசாரம். "பெருந்தெய்வம்" என்பது போன்று கொள்க. மறுமுட்டுப்பொருத - பின்னை ஒரு காரியத்துக்கும் ஆகாத.

2. பரிஹாரத்தில் கலக்கம் இல்லாமை கொண்டு காரிய சித்தியாகுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நிதானத்தில்' என்று தொடங்கி. நிதானம் - சங்கு சக்கரம். பரிஹாரம் - அவற்றைச் சொல்லுதல்.

3. நிதானம், சங்கு சக்கரங்கள் என்று அறியும்படி எப்படி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "சங்கு எனும்" என்று தொடங்கி. இது, திருவாய். 4. 2: 9.

4. நோய் அதுவானால் பரிஹாரமும் அதுவாகவேணுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நோய் வந்த வழியை' என்று தொடங்கி.

5. எங்களுக்கு நோய் வந்த வழியை அறியும் பிரகாரம் எது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "சங்கு எனும்" என்று தொடங்கி. இது, திருவாய். 4. 2: 9.

நோய்நாடி நோய்முதல் நாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

என்பது திருக்குறள்,

சக்கரம் என்னும்" என்று நீங்கள் சொல்லவன்றோ யானும் அறிந்தது; இப்போது பரிஹாரத்தில் வந்தவாறே அறிவு கெடுகிறது என்? [1] அது செய்யுமிடத்தில் குளப்படியிலே கடலை மடுத்தாற்போலே யாகாமல், "சங்கு எனும் சக்கரம் என்னும்" என்று இவள் சொன்னாற்போலே சொல்லப் பாருங்கோள். இவள் கேட்க நீர் இசைக்கிற்றிராகில் - செவியிலே படும்படி நீங்கள் தரித்து நின்று ஒரு வார்த்தைமட்டும் சொல்லவல்லீர்களேயாகில். மோஹித்துக் கிடக்கிற இவள் கேட்க வல்லளாமன்று காணும், தெளிந்திருக்கிற இவர்கள் சொல்ல வல்லராவது; ஆகையாலே யன்றோ 'திசைப்பின்றியே' என்கிறாள். இவளுக்கு இங்ஙனம் சொல்லுமதொழிய மற்றொன்றுதான் செவிப்படாதாதலின் 'கேட்க' என்கிறாள். [2] ஆய்ச்சி மகனுடைய அந்திம காலத்தில் பட்டர் 'அறிய' என்று எழுந்தருளியிருந்தாராய், தம்மை அறியாமலே கலங்கிக் கிடக்கிறபடியைக் கண்டு, பெருமாளிடத்தில் இவருடைய பக்தி இருந்தமையைத் தாம் அறிந்திருக்கையாலே, மெள்ளச் செவியில் ஊதினாற் போலே, 'அழகிய மணவாளப் பெருமாளே சரணம்' என்றாராம்; பின்னர், அதிலே உணர்த்தியுண்டாய் நெடும்போதெல்லாம், 'அழகிய மணவாளப் பெருமாளே சரணம்' என்று கூறிக்கொண்டே திருநாட்டுக்கு எழுந்தருளினாராம். [3] "பெற்ற மக்கள் பெண்டிர் என்றிவர் பின்னுதவாதறிந்தேன், பிறிந்தேன்" என்றார் திருமங்கை மன்னனும். அந்திம காலத்திலேயிருந்து 'பொன் வைத்தவிடம் சொல்லிக் காணாய்' என்னுமித்தனை போக்கி, திருநாமத்தை அருகே இருந்து சொல்லுவார்கள் கிடையாரே யன்றோ? [4] "சோர்வினால் பொருள்

---

1. "சங்கு எனும் சக்கரம் என்னும்" என்று தனித் தனியே சொல்வதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'அது செய்யுமிடத்தில்' என்று தொடங்கி.

2. "சங்கு சக்கரம்" என்னுமதொழிய மற்றொன்று செவியிலே படாமைக்குக் காரணம், அதில் ஈடுபாடு என்று கொண்டு, அதற்கு ஓர் ஐதிஹ்யம் அருளிச்செய்கிறார் 'ஆய்ச்சி மகனுடைய' என்று தொடங்கி.

3. "இசைக்கிற்றிராகில்" என்றதனால், அக்காலத்தில் திருநாமம் சொல்லுதல் அரிது என்று கொண்டு, அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் "பெற்றமக்கள்" என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி. 6. 2: 4.

4. "சோர்வி னால்பொருள் வைத்தது உண்டாகில்
சொல்லு சொல்லென்று சுற்று மிருந்து
ஆர்வி னவிலும் வாய்திற வாதே
அந்த காலம் அடைவதன் முன்னம்"

என்பது பெரியாழ்வார் திருமொழி.

வைத்தது உண்டாகில் சொல்லு சொல் என்று சுற்றுமிருக்கும்" இத்தனையன்றோ?

நன்றே - இது சால அழகியது! சால நன்றாம். நன்மைக்கு எல்லை ஏது? என்ன, இல் பெறும் - ஆத்மாவுக்கு இருப்பிடமாயிருக்கின்ற சரீரத்தைப் பெறும் என்னுதல். அன்றிக்கே, இல்லக்கிழத்தியாகப் பெறுவாள் என்றாராம் தமிழ்ப் புலவர் ஒருவர். இல் - மனைவி. அன்றிக்கே, 'ஏயில்பெறும்' என்று கொண்டு, [1]பண்ணைவென்ற இன்சொல் மங்கையாகையாலே, இவள் வார்த்தை சொல்லுவாள் என்னுதல்; ஏயில் - இசை. [2]"இனியள் இனிய வார்த்தையைப் பேசுகின்றவள்" என்னக் கடவதன்றோ? ஆக, சரீரத்தைப் பெறும் என்னுதல்; இல்லக்கிழத்தியாம் என்னுதல்; வார்த்தை சொல்லவல்லளாம் என்னுதல். இது காண்மினே - [3]வேறு தேவர்களுடைய சம்பந்தமுடையவர்களும் புகுந்து தொடும்படி இராமின் நீர்களே யன்றோ? அதைப் போன்று, நான் சொன்ன பரிஹாரத்தையும் செய்து பார்க்கமாட்டீர்களோ? ஒன்றேயோ பரிஹாரம்? இது நதீமாத்ருகம்போலே பலத்தோடே கூடியிருக்கும். அன்றிக்கே, நான் கை கண்டன்றோ இது சொல்லுகிறது; நீங்களும் இதனைச் செய்து பார்க்கமாட்டீர்களோ? என்னுதல். அன்றிக்கே, [4]"வெள்ளைச் சுரிசங்கொடு ஆழி ஏந்தித் தாமரைக் கண்ணன் என் நெஞ்சினூடே, புள்ளைக் கடாகின்ற ஆற்றைக் காணீர்" என்னுமாறுபோலே, இவளுடைய நெஞ்சிலே பிரகாசிக்கிறபடியை, 'நான்சொன்ன மருந்து இவளுக்குச் செய்யுங்கோள், தவிருங்கோள்; செய்தபடி செய்ய, இப்போது இதனைப் பாருங்கோள்' என்று காட்டுகிறாளாகவுமாம். அப்போது 'நன்றே இல் பெறும்' என்று பாட்டு முடிவுறும்; 'இது காண்மின்' என்பது தனி வாக்கியம். (2)

---

1. "பண்ணை வென்ற இன்சொல் மங்கை கொங்கை தங்கு பங்கயக்
கண்ண நின்ன வண்ண மல்ல தில்லை எண்ணும் வண்ணமே"

என்பது, திருச்சந்த விருத்தம். 105.

2. ஸ்ரீராமா. சுந் 66: 15.

3. "இது காண்மின்" என்பதற்கு மூன்று வகையாகக் கருத்து அருளிச்செய்கிறார். 'நதீமாத்ருகம்' என்றது, ஆற்றுப் பாய்ச்சலுள்ள விளைநிலத்தை. 'நான் கைகண்டன்றோ' என்றது, சிலேடை: நான் பிரத்யக்ஷமாகக் கண்டு என்றும், கையிலே சங்கு சக்கரங்களைக் கண்டு என்றும் பொருள்.

4. திருவாய்மொழி. 7. 3: 1,

## 390.

இதுகாண்மின் அன்னைமீர்! இக்கட்டு விச்சிசொற் கொண்டுநீர்
எதுவானும் செய்துஅங்கோர் கள்ளும் இறைச்சியும் தூவேன்மின்
மதுவார் துழாய்முடி மாயப் பிரான்கழல் வாழ்த்தினல்
அதுவே இவளுற்ற நோய்க்கும் அருமருந் தாகுமே.

பொ - ரை :—தாய்மார்களே! இதனைக் காணுங்கோள்; இந்தக் கட்டுவிச்சியினுடைய வார்த்தையைக்கொண்டு நீங்கள் ஏதாகிலும் செய்து அவ்விடத்திலே ஒரு கள்ளையும் மாமிசத்தையும் இறைக்காதீர்கள்; தேன் ஒழுகுகின்ற திருத்துழாயைத் தரித்த திருமுடியையுடைய மாயப்பிரானுடைய திருவடிகளைத் துதித்தால் துதிக்குமதுவே இவள் அடைந்திருக்கும் நோய்க்கும் சிறந்த மருந்தாகும் என்றபடி.

வி-கு :—அன்னைமீர்! இக் கட்டுவிச்சி சொல்லைக்கொண்டு செய்து தூவேன்மின் என்க. தூவுதல் - வணங்குவதற்காக வைத்தல். மாயன்- ஆச்சர்யமான குணங்களையும் செயல்களையுமுடையவன். பிரான் - உபகாரகன்.

ஈடு :—மூன்றும் பாட்டு. [1]பொருந்தாத காரியங்களைச் செய்யாமல் அவன் திருவடிகளை ஏத்துங்கோள்; அதுவே இந் நோய்க்கும் மருந்து என்கிறள்.

அன்னைமீர் இது காண்மின் - [2] வயிற்றில் பிறந்தவர்கள் என்னுமது ஒன்றனையேகொண்டு சொல்லுகிற ஹிதம் கேளாதொழியவேணுமோ? ஏவுகின்றவர்கள் என்னும் இத்தனையோ வேண்டுவது? வயிற்றிலே பிறந்தவர்களாகிலும் சொன்ன வார்த்தை நல்லதாகவிருக்குமாகில் கைக்கொள்ள வேண்டாவோ? [3]திருமாலைப் பாடக் கேட்டு வளர்த்ததனல்

---

1. "கள்ளும் இறைச்சியும் தூவேன்மின்; வாழ்த்தினல், அதுவே இவள் உற்ற நோய்க்கும் அருமருந்தாகும்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறர்.

2. "இது காண்மின்" என இப் பாசுரத்திலும் கூறுதற்கு பாவம் அருளிச்செய்கிறர் 'வயிற்றில் பிறந்தவர்கள்' என்று தொடங்கி. "அன்னைமீர்!" என்றதற்கு பாவம், 'ஏவுகின்றவர்கள்' என்று தொடங்கும் வாக்கியம்.

3. 'வயிற்றில் பிறந்தவர்களுடைய வார்த்தையைக் கேட்டபேர் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறர் 'திருமாலை' என்று தொடங்கி. இது திருநெடுந். 14.

"விளக்கொளியை மரகதத்தைத் திருத்தண் காவில்
வெஃகாவில் திருமாலைப் பாடக் கேட்டு
வளர்த்ததனல் பயன்பெற்றேன் வருக என்று
மடக்கிளியைக் கைகூப்பி வணங்கி ளுளே"

என்பது அப் பாசுரப் பகுதி.

பயன் பெற்றேன் வருக என்று மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினவளும் உங்களிலே ஒருத்தியன்றோ? [1]அது கிடக்க; "புத்திரர்களே! என்றல்லவா சொன்னார்" என்றாரும் இல்லையோ? யாரேனும் சொல்லிலும் வார்த்தை நன்றாகில் கைக்கொள்ளவேண்டாவோ? இக் கட்டுவிச்சி சொற்கொண்டு-பரிஹாரம் சொல்லுகிற இவள் தன்மை கண்டீர்களேயன்றோ? இவள் வார்த்தையைக் கேட்டீர்களேயன்றோ? இதனையோ ஆதரிப்பது! நான் சொல்லுகிற வார்த்தையையே இவள் சொன்னாலும் கேட்கக் கடவதோ? [2]"காணிலும் உருப்பொலார்" என்கிறபடியேயன்றோ இருப்பது என்பாள் 'இக் கட்டுவிச்சி' என்கிறாள். இவள் சொன்ன வார்த்தையை யான் கூறினாலும் என்னையுங்கூடத் துறக்கும்படியன்றோ வார்த்தையின் பொல்லாங்கு இருப்பது என்பாள் 'இச்சொல்' என்கிறாள். "செவிக்கு இனாத கீர்த்திய"ராய் இருக்கின்றமையைத் தெரிவித்தபடி. நீர் - [3]"பேய் முலை நஞ்சு, ஊணாக உண்டான் உருவொடு பேரல்லால், காணா கண் கேளா செவி" என்று இருக்கக்கூடிய நீங்கள். [4]நாஸ்திகரான பௌத்தர் ஜைனர் முதலான மதத்தினர்களும் 'பரஹிம்சை ஆகாது' என்பார்களே யன்றோ? அவ்வழியாலே கைக்கொள்ளுமவர்களோ நாம்? "எந்த உயிரையும் கொல்லுதல் கூடாது" என்ற

1. 'அது கிடக்க' என்றது, உங்கள் வார்த்தையே யன்றிக்கே, முனிவர்கள் கோஷ்டியிலும் இப்படியே யன்றோ? என்றபடி. என்றது, அவ்வளவேயன்றி, ஞானோபதேசம் செய்தாரும் இலரோ? என்கிறாள் என்றவாறு. பிரமன், பிதிரர் முதலானோர்களைப் பார்த்து 'மூடராய்ப் போங்கோள்' என்று சபிக்க, அவர்கள் சுக்கிரன் பக்கலிலே அத்யயனம் பண்ண, அவர்களைப் பார்த்து 'பிள்ளைகாள்! வாரிகோள்' என்றானே யன்றோ சுக்கிரன் என்றபடி.

2. காணிலும் உருப்பொலார் செவிக்கி னாத கீர்த்தியார்
பேணிலும் வரந்தர மிடுக்கி லாத தேவரை
ஆணமென் றடைந்து வாழும் ஆதர்காள்! எம் மாதிபால்
பேணிநும் பிறப்பெனும் பிணக்கு அறுக்க கிற்றிரே.

என்பது திருச்சந்தவிருத்தம். 69.

3. முதல் திருவந். 11.

4. இக் கட்டுவிச்சியின் சொல்லானது ஹிதவசனமாயிருந்தால் அதனைக் கேட்கலாகாதோ? என்ன, 'நாஸ்திகரான' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார். அவ்வழியாலே - அவர்கள் உபதேசிக்கும் வழியாலே.

விதியைக் கைக்கொள்ளுதல் போன்று [1]"வைதஹிம்சையும்" கைக்கொள்ள வேண்டாவோ? [2]"ஆத்மதத்துவத்தை யறிந்த பிரஹ்ம ஞானிகள்" என்னப்படுமவர்களன்றோ உங்களுக்கு உபதேசிக்கத் தக்கவர்கள்.

எதுவானும் செய்து - ஏதேனும் பொருத்தமில்லாத காரியத்தைச் செய்து. உங்கள் ஆசாரத்தொடு சேர்ந்திருக்கப் பெறில் [3] அதுவும் ஆகுமேயன்றோ? [4]"செய்யாதன செய்யோம்" என்றும், "மேலையார் செய்வனகள் வேண்டுவன" என்றும் அன்றோ உங்கள் நிஷ்டை. அங்கு ஓர் இறைச்சியும் கள்ளும் தூவேன்மின் - தாழ்ந்த பொருள்களைக் கொண்டு வைஷ்ணவ திருமாளிகையைத் தூஷியாதே கொள்ளுங்கோள். 'அங்கு' என்று முகத்தை மாற வைத்துச் சொல்லுகிறாள். ஆகில், தவிருகிறோம்; பரிஹாரத்தைச் சொல்லிக் காணாய்; என்ன, சொல்லுகிறாள் மேல்: மதுவார் துழாய் முடி மாயப் பிரான் கழல் வாழ்த்தினால் - [5]"விரைமட்டலர் தண்துழாய் என்னும்" என்று நீங்கள் சொல்லவன்றோ நான் கேட்டது? திருக்குழலின் சம்பந்தத்தாலே தேன் பெருக்கு எடுத்து ஓடுகின்ற திருத்துழாயைத் திருமுடியிலேயுடையனாய், அழகு சீலம் முதலியவைகளால் ஆச்சரியத்தையுடையனாய், அந்த அழகு முதலானவற்றை அடியார்களுக்காக ஆக்கிவைக்கும் உபகாரகன் திருவடிகளை வாழ்த்தினால். [6]"உன் சேவடி

1. 'வைதஹிம்சை' என்றது, விதிக்கப்பட்ட ஹிம்சை என்றபடி. அதாவது, யாகத்தில் பசுஹிம்சை விதிக்கப்பட்டிருக்கிறது; அதனைக் கைக்கொள்ள வேண்டாவோ? என்றபடி. ஜைனர்கள் முதலானோருடைய உபதேசத்தைக் கேட்டால் அதனை விடவேண்டி வருமேயன்றோ? என்க.

2. ஆயின், நமக்கு உபதேசிக்கத் தக்கவர்கள் யார்தாம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆத்தும தத்துவத்தை' என்று தொடங்கி. இது, ஸ்ரீ கீதை. 4. 33.

3. 'அதுவும் ஆகுமேயன்றோ?' என்றது, அவள் கூறியது கேட்கவும் ஆகுமேயன்றோ? என்றபடி.

4. பொருத்தமானவைகளாகச் செய்யக் கூடியவை யாவை? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "செய்யாதன" என்று தொடங்கி. இது, திருப்பாவை. இந்தப் பிரமாணத்தால், நம் முதலிகளுடைய அநநுஷ்டானமும் அநுஷ்டானமும் தியாஜ்ய உபாதேயங்களாம் என்றபடியாயிற்று.

5. திருவாய்மொழி. 2. 4: 6.

6. "எத்தினால்" என்னாதே, "வாழ்த்தினால்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'உன் சேவடி' என்று தொடங்கி. இது, திருப்பல்லாண்டு. 1.

செவ்வி திருக்காப்பு" என்றே யன்றோ வாழ்த்துவது? ஆதலால், இவர்கள் திருநாமம் சொல்லுவதுதான் மங்களாசாஸன முகத்தாலேயாயிற்று என்க. [1]"கெண்டை ஒண்கணும் துயிலும்" என்றார் திருமங்கை மன்னனும். அதுவே - அடையத் தக்கதுமாய் இனியதுமான அதுதானே. இவள் உற்ற நோய்க்கும் அருமருந்தாகும் - இவள் மறுபாடு உருவக் கொண்ட நோய்க்கும் பெறுதற்கரிய மருந்தாம். என்றது, மேல் காற்றிலே காட்டப் பரிஹாரமாம் என்றபடி. (3)

## 391.

மருந்தாகு மென்றங்கோர் மாய வலவைசொற்கொண்டுநீர்
கருஞ்சோறும் மற்றைச் செஞ்சோறும் களன்இழைத் தென்பயன்
ஒருங்காக வேஉல கேழும் விழுங்கி உமிழ்ந்திட்ட
பெருந்தேவன் பேர்சொல்ல கிற்கில் இவளைப் பெறுதிரே.

**பொ - ரை:**—இவள் நோய்க்குப் பரிஹாரமாகும் என்று நினைத்து, வஞ்சனை பொருந்திய ஒரு வலவையினது சொல்லைக்கொண்டு நீங்கள் கருஞ்சோற்றையும் செஞ்சோற்றையும் அங்கே அத் தேவர்களுடைய முன்னிலையில் படைப்பதால் பயன் யாது? ஒருசேர ஏழ்

1. தன் ஆற்றாமை தீருகை மாத்திரமே பிரயோஜனமாகை யன்றிக்கே, அத்தலைக்கு மங்களாசாசனம் செய்கையும் அவசிய அபேக்ஷிதம் என்கைக்கு மற்றும் ஓர் உதாரணம் காட்டுகிறார் "கெண்டை ஒண்கணும்" என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி. 11. 1: 9. இதற்கு வியாக்யாதா அருளிச்செய்த பொருளைக் கீழே தருகிறேன்: "கெண்டை ஒண்கணும் துயிலும் - உறக்கத்தால் அல்லது செல்லாதபடியாய் முக்தமாய் சுகுமாரமான கண்ணும் உறங்கும். என் நிறம் பண்டு பண்டுபோல் ஒக்கும் - அதாவது, கலப்பதற்கு முன்புபோலேயாம். கலக்கையாகிறது, ஆற்றாமைக்கு அடி இடுகிறதிறே. ஒரு விஷயத்தில் வாசி அறியாதார் நிரபேக்ஷரிறே. கண்ணுறங்குவதும் நிறம் பழையபடியே யாவதும் என் செய்தால்? என்னில், மிக்க சீர் இத்யாதி - அநந்யப் பிரயோஜனரான ஸ்ரீ வைஷ்ணவர்கள் இட்ட திருத்துழாயில் பரிமளத்தை வண்டு கொண்டு வந்து ஊதுமாகில். இப்படிச் சீயர் அருளிச்செய்தவாறே "துளவின் வாசமே" என்ன அமையாதோ? "மிக்க சீர்த் தொண்டர்" என்கிற விசேஷணத்திற்குக் கருத்து என்? என்று நான் கேட்டேன்; இவள்தான் நோவு படுகிறது 'அத்தலைக்குப் பரிவரில்லை' என்றாயிற்று; 'அங்கே அநந்யப் பிரயோஜனர் பரிமாறா நின்றார்கள்' என்றவாறே உறங்காத கண்ணும் உறங்கும்; பழைய நிறமும் வருங்காண்" என்று அருளிச்செய்தார். என்பது.

உலகங்களையும் பிரளயகாலத்தில் உண்டு, பின் பிரளயம் நீங்கினவுடனே வெளிநாடு காண உமிழ்ந்த அறப் பெரிய சர்வேசுவரனது திருபெயரைச் சொல்லுவீர்களேயானால் இவளைப் பெறுவீர்கள் என்றவாறு.

வி - கு :—மருந்து - பரிஹாரம். வலவை-பலவாறு பேசுகின்றவள். களன் - படைக்குமிடம். சொற் கொண்டு இழைத்து பயன் என்? என்க. பெருந்தேவன் - முதலாவார் மூவரே அம் மூவருள்ளும் முதலாவான் மூரி நீர் வண்ணன் என்பதனைக் குறித்தபடி.

ஈடு :—நாலாம்பாட்டு. [1] வஞ்சனையுடையவளாய்த் தோன்றியதைச் சொல்லுகிற இவளுடைய பலவாறான வார்த்தைகளை விட்டு, ஆபத்திற்குத் துணைவனான சர்வேசுவரனுடைய திருநாமத்தைச் சொல்ல வல்லீர்கோளாகில் இவளைப் பெறலாம் என்கிறாள்.

[2] மருந்தாகும் என்று - பத்தியத்திற்கு மாறானவற்றைச் செய்கின்றவர்கள் மருந்தாகும் என்று - 'பத்தியம்' என்று சொல்லிக்கொள்ளவும் வேணுமோ? மருந்தாம் என்றபடி. அங்கு ஓர் மாய வலவை சொற்கொண்டு - வஞ்சனையுடையளாய் நெஞ்சில் தோற்றியவைகளையே சொல்லக்கூடியவளான இவள் வார்த்தையைக் கேட்டு. 'அங்கு ஓர்' என்று விருப்பமில்லாமையைத் தெரிவிக்கிறாள். [3] நீர் - சத்துவ குணத்தையுடையவர்களாய், பகவத் விஷயமல்லது சொல்லாதவர்களாய், ருஜுக்களாயிருக்குமவர்கள் வார்த்தையைக் கேட்கக் கூடிய நீங்கள் படும் எளிவரவே! [4] அன்றிக்கே, "போனகம் செய்த

---

1. "மாய வலவை" என்று தொடங்கி மேல் உள்ளவற்றை யெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "மருந்து" என்னாதே, "மருந்தாகும்" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'பத்தியத்திற்கு' என்று தொடங்கி. மருந்தாகாததனை "மருந்தாகும்" என்று சொல்லி என்றபடி.

3. "நீர் மாய வலவை சொற்கொண்டு" என்று கூட்டி, "மாயவலவை" என்றதற்குப் பிரதிகோடியாக "நீர்" என்றதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'சத்துவகுணத்தை புடையவர்களாய்' என்று தொடங்கி. ருஜுக்கள் - நேர்மையாளர்.

4. இனி, "நீர்" என்பதனை, மேலே வருகின்ற "கருஞ்சோறும்" என்றதனோடு கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'போனகம் செய்த சேடம்' என்று தொடங்கி. "போனகம் செய்த சேடம்" என்பது, திருமாலை. 41-ஆம் பாசுரம். ஆக, "நீர்" என்றதற்கு, ஞானிகள் பக்கல் கேட்கக் கூடிய நீங்கள் என்றும், "தருவரேல் புனிதமன்றே" என்ற பிரசாத வைபவம் அறிந்த நீங்கள் என்றும் இருவகையான கருத்து அருளிச் செய்தபடி.

சேடம் தருவரேல் புனிதமன்றே" என்ற சத்துவகுணமுடையார் அமுதுசெய்த பிரசாதத்தின் பெருமையை அறிந்த நீங்கள். என்றது, சத்துவகுணமுடைய அன்னமல்லது தொடக்கூடியவ ரல்லாத நீங்கள் என்றபடி. கருஞ்சோறும் மற்றைச் செஞ்சோறும் - தாமச அன்னமும் அதனோடு தோள் தீண்டியான இராஜச அன்னமும். களன் இழைத்து என் பயன் - இராஜச தாமச தேவதைகளுக்கு, அவ்வத் தெய்வங்கள் வந்து தங்கியிருக்கும் இடங்களிலே, இராஜசமாயும் தாமசமாயுமுள்ள சோற்றினைக் கொண்டு இடச் சொல்லுகிற முறையிலே இட்டால் என்ன பிரயோஜனம் உண்டு? பிரயோஜனம் இல்லாமை மாத்திரமே யன்று; அழிவோடே முடியும். களன் - களம் என்றபடி. இழைக்கை - இடுகை. என்றது, புன்சிறு தெய்வங்கள் வந்து தங்கியிருக்கும் நாற்சந்தி தொடக்கமானவற்றிலே அவற்றுக்குச் சொல்லுகிற நியமங்களோடே படைத்தலைக் குறித்தபடி. [1]பிரளயகாலத்தில் எல்லாப் பொருள்களையும் ரக்ஷித்தவனை சர்வேசுவரனை ஒழியப் பிரளயாபத்தில் ரக்ஷிக்கலாமாகிலாயிற்று, இவளைப் புன்சிறு தெய்வங்களைக் கொண்டு ரக்ஷிக்கலாவது என்பாள் 'விழுங்கி உமிழ்ந்திட்ட பெருந்தேவன்' என்கிறாள். [2]'இதில் ஒரு பிரயோஜனம் இல்லையாகில், மற்று, பிரயோஜன முண்டாக நீ நினைத்ததைச் சொல்லாய்' என்ன, 'செய்வீர்கோளேயாகில் உங்களுக்கு ஒருபேரேயன்றோ நான் சொல்லுகிறது' என்கிறாள் மேல்:

ஒருங்காகவே உலகு ஏழும் விழுங்கி உமிழ்ந்திட்ட பெருந்தேவன் - 'அடியார் அடிய ரல்லாதார்' என்று பாராமல் எல்லாரையும் ஒக்க ஒரே காலத்தில் திருவயிற்றிலே வைத்து நோக்கி, பிரளயம் கழிந்தவாறே வெளிநாடு காணப் புறப்படவிட்ட பரதேவதை. ஒருவர் களன் இழையாதிருக்கச் செய்தே வந்து, வரையாதே ரக்ஷிக்குமவன் என்பாள் 'ஒருங்காகவே' என்கிறாள். ஒருவர் விரும்பாதிருக்க, ஆபத்தே காரணமாக வந்து உதவுமவன் என்பாள் 'உலகு' என்கிறாள். ஆக, அத்

1. "விழுங்கி உமிழ்ந்திட்ட" என்றதனை, மேலே கூறியதற்குத் திருஷ்டாந்த பரமாக்கி பாவம் அருளிச்செய்கிறார் 'பிரளயகாலத்தில்' என்று தொடங்கி.

2. "பெருந்தேவன் பேர்" என்பதில் "பேர்" என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'இதில் ஒரு பிரயோஜனம்' என்று தொடங்கி.

நகைய எம்பெருமானைப் பற்றுங்கோள் என்கிறாள். [1] சர்வ ரக்ஷகனாகையாலே சர்வாதிகனான சர்வேசுவரன்; தளர்ந்தார் தாவளமானவன். [2] முன்பு முகந்தோற்றாதே நின்றானேயாகிலும் ஆபத்து வந்தவாறே முகங்காட்டி ரக்ஷிக்குமவனாயிற்று. அவன் இப்படியிருப்பான் ஒருவனாகையாலே எளிதில் ஆராதிக்கப்படுமவன்; நீங்கள் பற்றுகின்ற தேவதைகளைப் போன்று கெட்ட சுபாவத்தை யுடையவனலன்; 'அட்டது ஒழியச் சுட்டது கொண்டுவா' என்கிறபடியே, கஷ்டப்பட்டு ஆராதிக்கப்படுமவன் அல்லன். [3] தான் ரக்ஷிக்குமிடத்தில் இத்தலையில் ஆநுகூல்யத்துக்கு அறிகுறியான விலக்காமையே வேண்டுவது. இதனால், அந்தப் பிரளயம் தீர்த்தவனே காணும் இந்தப் பிரளயத்துக்கும் கடவன்; நம்மோடு ஒக்கப் பிரளயத்திலே அழுந்தும் புன் சிறு தெய்வங்களையோ பற்றுவது? வரையாதே எல்லாப் பொருள்கட்கும் ரக்ஷகனாயுள்ளவனை யன்றோ பற்றத் தகுவது என்கிறாள் என்றபடி. பேர் சொல்லகிற்கில் - திருப்பெயரைச் சொல்ல வல்லீர்கோளேயானால். இப்படி [4] 'நேர்த்தி அற்று இருக்குமாகில் பலமும் அளவு பட்டிருக்குமோ? என்னில், இவளைப் பெறுதிர் - அத்தேவதைகள் மாட்டு நேரவேண்டுவன வெல்லாம் நேர்ந்தாலும், என்பயன்? என்று பிரயோஜனம் இல்லையாகச் சொல்லிற்று; இங்கு நேர்த்தி திருநாம மாத்திரம் சொல்லுகையாய், பேற்றில் வந்தால் இவளைப் பெறுதலாகிற பெரிய பலத்தைப் பெறலாம். பேர் சொல்ல வல்லீர்கோளாகில் இவளைப் பெறலாம்; [5] இல்லையாகில் இழக்குமித்தனை என்றபடி. (4)

---

1. "உலகேழும் விழுங்குகையாலே பெருந்தேவன்" என்று கொண்டு பொருள் அருளிச்செய்கிறார் 'சர்வ ரக்ஷகனாகையாலே' என்று தொடங்கி. தளர்ந்தார் தாவளம் - ஆர்த்தரக்ஷகன்; தாவளம் - பற்றுக்கோடு.

2. பெருந்தேவனாயிருந்து வைத்து, உலகேழும் விழுங்கினான் என்று மாற்றிக் கூட்டி வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'முன்பு முகம் தோற்றாதே' என்று தொடங்கி. 'அட்டது ஒழியச் சுட்டது கொண்டுவா' என்றது, சிவன்.

3. ஆனால், பேர் சொல்லுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தான் ரக்ஷிக்குமிடத்தில்' என்று தொடங்கி.

4. நேர்த்தி - முயற்சி.

5. "பேர் சொல்லகிற்கில்" என்கையாலே, சொல்லமாட்டாதபோது விநாசம் என்கிறார் 'இல்லையாகில்' என்று தொடங்கி.

392.

இவளைப் பெறும்பரிசு இவ்வணங்கு ஆடுதல் அன்றந்தோ
குவளைத் தடங்கணும் கோவைச் செவ் வாயும் பயந்தனள்
கவளக் கடாக்களிறு அட்ட பிரான் திரு நாமத்தால்
தவளப் பொடிக்கொண்டு நீர்இட் டிடுமின் தணியுமே.

பொ - ரை :—ஐயோ! இவளைப் பெறுதற்குரிய வழி இந்த அணங்காடுதல் அன்று; குவளைபோன்ற விசாலமான கண்களும் கொவ்வைக்கனி போன்ற சிவந்த வாயும் பசலை நிறத்தையடைந்தாள். கவளத்தை உண்ணுகின்ற மதம்பொருந்திய குவலயாபீடம் என்னும் யானையைக் கொன்ற கண்ணபிரானுடைய திருப்பெயரைச் சொல்லிக் கொண்டு அடியார்களுடைய சுத்தமான பாததூளியை இவளுக்கு நீங்கள் இடுங்கோள்; இட்டவளவில் இந்நோய் தணியும்.

வி - கு :—பயந்தனள் - பசந்தனள். கவளம் - யானை உண்ணும் உணவு. அட்ட - கொன்ற. தவளம் - வெண்மை; இங்குத் தூய்மையைக் காட்டிற்று. பொடி - தூசி.

ஈடு :—ஐந்தாம்பாட்டு. [1] நீங்கள் செய்கிற பரிஹாரம் நோயை மிகுதி ஆக்காநின்றது; அதனைவிட்டு, நோய்க்குத் தகுதியான பரிஹாரத்தைச் செய்யுங்கோள் என்கிறாள்.

[2] இவளைப் பெறும் பரிசு இவ் வணங்கு ஆடுதல் அன்று - இவ் விலக்ஷணமாயிருக்கிற இவளைப் பெறுகைக்கு உபாயம் இத் தெய்வ ஆவேசங்கொண்டு ஆடுமதன்று; இந்த நற்சரக்கைப் பெறப் பார்ப்பவர்கள் இந்தத் தாழ்ந்த அநுஷ்டானத்தாலேயோ பெறப் பார்ப்பது? என்றபடி. இவள் இப்படிச் சொன்னவிடத்திலும் அவர்கள் மீளாதொழிகையாலே, அந்தோ - ஐயோ! [3] இவளை இழந்தோமே யன்றோ! என்கின்றாள். இத் தெய்வ ஆவேசங்கொண்டு ஆடத் தொடங்கிய வளவில் இவளை இழந்தோமாதல் எப்படி? என்ன, பார்க்கமாட்டீர்களோ? குவளைத் தடம் கண்ணும் கோவைச் செவ்வாயும்

1. "அணங்காடுதல், பயந்தனள், தவளப்பொடி இட்டிடுமின்" என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "இவளை" என்ற சுட்டு, உயர்வுப் பொருளது; "இவ்வணங்கு" என்ற சுட்டு, தாழ்வுப் பொருளது.

3. 'ஐயோ,' என்றதற்கு பாவம், 'இவளை இழந்தோமேயன்றோ!' என்பது.

பயந்தனள் - [1]"குவளையங்கண்ணி" என்கிறபடியே, குவளைப் பூப்போலேயாய் அநுபவிக்கின்றவர்கள் அளவல்லாத பரப்பையுடைத்தான கண்ணும், [2]"கோவைவாயாள்" என்கிறபடியே, கோவைப்பழம் போன்ற சிவந்த உதடும் பசலை நிறத்தையடைந்தனள். [3]"தொண்டையஞ்செங்கனிவாய் நுகர்ந்தானை" என்றும், [4]"மணநோக்கமுண்டான்" என்றும் சொல்லுகிறவாறே இவை யலவோ அவனுக்கு ஊண்; ஆதலால், அவனுடைய வாய்புகுசோறு அன்றோ பறியுண்கிறது என்கிறாள். [5]பகவானைப் பிரிந்ததனாலுண்டான விரஹத்துக்கும் அகஞ்சுரிப்படாதவை, வேறு தெய்வங்களின் சம்பந்தத்தாலும் அத் தெய்வங்களின் அடியார்களுடைய சம்பந்தத்தாலுமாக பசலை நிறத்தை அடைந்தாள்.

ஆனால், பரிஹாரம் சொல்லாய் என்ன, [6]"நெடுங்காலமும் கண்ணன் நீண் மலர்ப் பாதம் பரவிப் பெற்ற - இளமான்" என்று நீங்களே யன்றோ சொன்னீர்கோள்; அப்படியே, கண்ணபிரானுடைய திருவடிகளை அடைந்து அவனாலே நீக்கிக் கொள்ளப் பாருங்கோள் என்கிறாள். கவளக் கடாம் களிறு அட்டவன் திருநாமத்தால் தவளம் பொடிக் கொண்டு நீர் இட்டிடுமின் - மதஜலம் ஒழுகாநின்றுள்ள குவலயாபீடத்தை முடித்த உபகாரகனது திருநாமத்தாலே போக்குவதற்குப் பாருங்கோள். இதனால், பிரபலமான தடைகளையும் வருத்தமின்றிப் போக்க வல்லவன் என்பதனைக் குறிப்பித்தவாறு. கவளத்தை உண்பித்துப் போதையைத் தரும் பொருள்களைக் குடிப்பித்துப் பிச்சு ஏற்றுவித்த களிறு என்பாள் 'கவளக்

1. பெரிய திருமொழி. 2. 7 : 1.

2. திருவாய்மொழி. 4. 3 : 1.

3. இவளுடைய கண்ணையும் வாயையும் வர்ணிக்கிறவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'தொண்டையஞ் செங்கனி' என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி. 3. 7 : 2.

4. பெரிய திருமொழி. 8. 10 : 1.

5. "தடங்கண்ணும் செவ்வாயும்" என்ற உம்மையைச் சிறப்பும்மையாக்கி பாவம் அருளிச்செய்கிறார் 'பகவானைப் பிரிந்ததனால்' என்று தொடங்கி. 'பகவானைப் பிரிந்ததனாலுண்டான விரஹத்துக்கும் அகஞ்சுரிப்படாதவை' என்றது, "மாழை நோக்கு ஒன்றும் வாட்டேன்மின்"(2. 4 : 10.) என்ற பாசுரத்தைத் திருவுள்ளம்பற்றி. அகஞ்சுரிப்படுதல் - குறைதல்.

6. திருவிருத்தம். 37.

கடாக்களிறு' என்கிறாள். 'பரிசுத்தமான பொடி என்பாள் 'தவளம்பொடி' என்கிறாள். பாபம் செய்வதற்குத் துணைபுரிந் தவர்கள், பிராயஶ்சித்தத்துக்கும் கூட்டுப் பட வேண்டாவோ என்பாள் 'நீர்' என்கிறாள். இட்டிடுமின் என்றது, இவள் மேலே இடுங்கோள் என்றவாறு. வேறு தெய்வங்களின் சம் பந்தமுண்டானதற்குப் பகவானுடைய நாமத்தைச் சொல்லிப் பரிஹரிக்கப் பாருங்கோள்; வேறு தெய்வங்களின் அடியார் களுடைய சம்பந்தத்துக்கு ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய பாத தூளியைக் கொண்டு பரிஹரிக்கப் பாருங்கோள் என்கிறாள். ஆக, இங்கே புகுந்த அநீதிகள் இரண்டு உள; அவ்விரண்டு னுக்கும் இவ் விரண்டனையும் கொண்டு பரிஹரிக்கப் பாருங் கோள் என்கிறாள் என்றபடி. இப்படிச் செய்தால் பரிஹார மாகுமோ? என்ன, தணியுமே - இவள் கண்ணும் விழித்து நிறமும் வரும்படி காட்டித் தரக்கடவேன். (5)

393.

தணியும் [1]பொழுதின்றி நீர் அணங் காடுதிர் அன்னைமீர்!
பிணியும் ஒழிகின்ற தில்லை பெருகு மிதுவல்லால்
மணியின் அணிநிற மாயன் தமரடி நீறுகொண்டு
அணிய முயலின் மற்றில்லை கண்டீர்இவ் வணங்குக்கே.

பொ - ரை :—தாய்மார்களே; நீங்கள் தவிர்வது ஒரு காலம் இல் லாமலே அணங்கு ஆடுகின்றீர்கள்; வியாதியும் மேலும் மேலும் மிகு கின்றது என்னும் இதுவேயல்லாமல் நீங்கிற்றில்லை; நீலமணிபோன்ற அழகிய நிறத்தையுடைய மாயனுடைய அடியார்களுடைய பாத தூளியைக்கொண்டு அணிவதற்கு முயற்சிசெய்தால் அதுவே இவள் உற்ற நோய்க்கு அருமருந்தாகும்; அது ஒழிய இந்தப் பெண்ணிற்கு வேறு ஒரு பரிஹாரம் இல்லை கண்டீர்.

வி - கு :—அன்னைமீர்! நீர் தணியும் பொழுதின்றி அணங்கு ஆடுதிர்; பிணியும் பெருகும் இது அல்லால் ஒழிகின்றது இல்லை என்க. நீறு - புழுதி; தூளி. மற்று : பிறிது என்னும் பொருளில் வந்தது. கண்டீர் : முன்னிலையசை. தேற்றமுமாம்.

ஈடு :—ஆறும்பாட்டு. [2] இந்தப்பெரிய முயற்சியெல்லாம் வேண்டா; "தவளப்பொடி" என்று சொன்னது இன்ன

1. பொழுதில்லை என்றும் பாடம்.

2. "மாயன் தமரடி நீறுகொண்டு" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

தென்று விசேடித்து அதனைச் செய்ய முயன்ற அளவிலே இவள் நோய் தீரும் என்கிறாள்.

அன்னைமீர் நீர் தணியும் பொழுதின்றி அணங்கு ஆடுதிர் - விலக்குவார் உளராகையாலே, 'இன்னபோது தவிரச் சொல்லுவர்கள்' என்று அறியாமையாலே, உச்சிவீடு விடாதே அவர்கள் ஆடத் தொடங்கினார்கள். பிணியும் ஒழிகின்றது இல்லை -[1] காரணம் தொடர்ந்து நிற்கையாலே காரியமான நோயும் தொடர்ந்தே நிற்கின்றது. பெருகும் இது அல்லால்-[2]கிண்ணகப் பெருக்குப் போலே மேன்மேலும் கிளர்ந்து வாராநின்றது. மணியின் அணி நிற மாயன் தமர் அடி நீறு கொண்டு அணிய முயலின்-நீலமணிபோலே அழகிய நிறத்தை யுடையனாய், குணங்களாலும் செயல்களாலும் ஆச்சரியத்தை யுடைய சர்வேசுவரனுடைய அடியார்களுடைய பாத தூளியைக் கொண்டுவந்து அணிய முயன்றால். [3]விசிஷ்டகுலத்தில் பிறந்த அபவாத மாகையாலே பிராயஸ்சித்தத்தைக் கனக்க விதித்தோ மத்தனை; பாததூளியினுடைய பிரபாவத்தைப் பார்த்தால் இவையெல்லாம் வேண்டா; முயலுதல் மாத்திரம் அமையும் என்பாள் 'அணிய முயலின்' என்கிறாள். [4]"தொண்டரடிப் பொடி, ஆட நாம் பெறில் கங்கைநீர் குடைந்

---

1. 'காரணம் தொடர்ந்து நிற்கையாலே' என்றது, அணங்காடுதலாகிற காரணம் தொடர்ந்து வருவதனாலே என்றபடி.

2. கிண்ணகம் - ஆற்றுவெள்ளம்.

3. மேலே "நீர் இட்டிடுமின்" என்று கூறினவள், இங்கு "அணிய முயலின்" என்பது, மாறாகாதோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'விசிஷ்டகுலம்' என்று தொடங்கி. விசிஷ்டகுலம் - ஒழுக்கத்தாலுயர்ந்த மேலான குலம்.

> பெருவரை நாட பெரியார்கண் தீமை
> கருநரைமேல் சூடேபோல் தோன்றும்!- கருநரையைக்
> கொன்றன்ன இன்னா செயினும் சிறியார்மேல்
> ஒன்றானும் தோன்றாக் கெடும்.
> குடிப்பிறந் தார்கண் விளங்கும் குற்றம்
> மதிக்கண் மறுப்போல் உயர்ந்து.

என்னும் செய்யுட்களை ஈண்டு ஒருபுடை ஒப்பு நோக்கலாகும்.

4. அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் "தொண்டரடிப்பொடி" என்று தொடங்கி. இது, பெருமாள் திருமொழி. 2: 2.

தாடும் வேட்கை என்னுவதே!'' என்றாரேயன்றோ? [1] ஆநு கூல்யத்தில் நினைதல் மாத்திரமே அமையும்; பிராதிகூல் யத்தில் வர்ஜனமே வேணும்.

[2] வண்டரும் சொண்டரும் என்கிறவர்களுக்கு அரையன் சொன்ன வார்த்தைக்குப் பிள்ளையுறங்காவில்லிதாசர் பரிஹாரம் செய்தபடியை இங்கே நினைப்பது. என்றது, என் சொல்லியவாறோ? எனின், அகளங்க நாட்டாழ்வான் இவர் களுக்கு அமணன் பாழியிலே சிங்கத்தைக் காட்டித் 'திரு முற்றம்; திருவடி தொழுங்கோள்' என்ன, அவர்களும் மெய் என்று திருவடி தொழுது, 'அது அமணன் பாழி' என்று அறிந்தவாறே மோஹித்து விழ, பிள்ளையுறங்காவில்லிதாசர் தம் ஸ்ரீ பாத தூளியை அவர்களுக்கு இட, உணர்ந்து எழுந் திருந்த உண்மை வரலாற்றினை உணர்த்தியபடி. [3] திருக் கொட்டாரத்தின் அருகே கைந்நிரை கட்டிக் கொண்டிருக்கிற நாளிலே, சீயர் இத் திருவாய்மொழி அருளிச்செய்கிறாராய் இப் பாசுரத்தளவிலே வந்தவாறே, "'தேர்ப்பாகனார்க்கு' என்று நோய்க்கு நிதானம் சொன்னாளாகில், அத் தேர்ப்பாகனை யிட்டு நீக்கிக் கொள்ளாமல் 'மாயன் தமர் அடி நீறு கொண்டு அணிய முயலின்' என்று இதனைப் பரிஹாரமாகச் சொல்லுவான் என்? நோய்க்கு நிதானம் ஒன்றும் பரிஹாரம் ஒன்றுமே யாயோ இருப்பது?" என்று நான் கேட்டேன்; "மோர்க் குழம்பு இழியாதே மோஹித்துக் கிடந்த சமயத்தில் சுக்கு இட்டு ஊதிப் பின்பு மோர்க்குழம்பு கொடுத்துப் பரிஹரிப்

---

1. தேவதாந்தர சம்பந்தத்தை அடியோடு விடவேண்டும் என்றும், இதற்கு முயற்சியளவே போதும் என்றும் அருளிச்செய்ததனால் பலித்த விஷயத்தை அருளிச்செய்கிறார் 'ஆநுகூல்யத்தில்' என்று தொடங்கி. வர்ஜனம் - அடியோடு நீக்குதல்.

2. தேவதாந்தர பரிசத்தால் வந்த அசுத்திக்குப் பாகவதர்களுடைய பாததூளி பரிஹாரம் என்றதற்கு ஐதிஹ்யம் காட்டுகிறார் 'வண்டரும் சொண்டரும்' என்று தொடங்கி. அரையன்-அரசன். அமணன்பாழி-சமணர் கோயில்.

3. வேறு தேவர்களின் பரிசத்தால் வந்த அசுத்திக்குப் பரிஹாரமா மளவன்றிக்கே, முதற் பாசுரத்தில் சொன்ன பகவானைப் பிரிந்ததனாலுண்டான நோய்க்கும் இதுவே பரிஹாரம் என்னுமதனை ஐதிஹ்ய முகத்தால் தர்சிப்பிக் கிறார் 'திருக் கொட்டாரத்தின்' என்று தொடங்கி. கைந்நிரை - நிரைச்சல். சீயர் - நஞ்சீயர். 'நான் கேட்டேன்' என்றது, நம்பிள்ளையை.

பாரைப் போலே, 'தேர்ப்பாகனர்க்கு' என்ற போதே அவரைக் கொடுவந்து காட்டப் பெருமையாலே, முற்பட இவ்வழியாலே தேற்றிப் பின்னை அவரைக் கொடுவந்து காட்டுவதாகக் காணும்'' என்று அருளிச்செய்தார். அழகு சீலம் முதலியவைகளாலேயாயிற்று இவள் மோஹித்தது; நீங்களும் அழகு சீலம் முதலியவைகளிலே தோற்றிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய பாத தூளியைக் கொண்டு பரிஹரிக்கப் பாருங்கோள் என்பாள் 'மணியின் அணி நிற மாயன் தமர் அடி நீறு கொண்டு' என்கிறாள். [1]பொடிபடத் தீரும் என்றபடி. மற்று இல்லை கண்டீர் இவ் வணங்குக்கே - இஃது அல்லது பரிஹாரம் இல்லாதபடியான வைலக்ஷண்யத்தையுடைய இவளுக்கு இதனையே பரிஹாரமாகப் பாருங்கோள். (6)

## 394.

அணங்குக் கருமருந் தென் றங்கோர் ஆடும் கள் ளும்பராய்த்
[2]துணங்கை எறிந்துநும் தோள்குலைக் கப்படும் அன்னைமீர்!
உணங்கல் கெடக்கழுதை உதடாட் டம்கண்டு என்பயன்?
வணங்கீர்கள் மாயப் பிரான்தமர் வேதம்வல் லாரையே.

பொ-ரை:—இப்பெண்ணினுடைய நோய்க்கு அரிய மருந்தாகும் என்று நினைத்து, அங்கே ஒரு ஆட்டினையும் கள்ளினையும் வைத்துத் துதித்துத் துணங்கை என்னும் கூத்தினை ஆடி உங்களுடைய தோள்களை வருத்துகின்ற தாய்மார்களே! காய்கின்ற நெல் கெட அதனைத் தின்னுகின்ற கழுதையினுடைய உதடு ஆடுகின்ற ஆட்டத்தைக் கண்டுகொண்டிருப்பதனால் பயன் யாது? மாயப்பிரானுடைய அடியார்களாகிய ஸ்ரீவைஷ்ணவர்களை வணங்குங்கோள் என்றவாறு.

வி - கு:—பராய்- துதித்து. துணங்கை என்பது, கூத்துவகைகளுள் ஒன்று; "துணங்கை - சிங்கி; என்னை? பழுப்புடை இருகை முடக்கி யடிக்க, தொடக்கிய நடையது துணங்கை யாகும்" என்பது அடியார்க்கு நல்லாருரை. (சிலப்) உணங்கல் - காயவைத்துள்ள நெல். வேதம்வல்லார் - வேதங்களிலே வல்ல ஸ்ரீவைஷ்ணவர்கள்.

---

1. 'பொடிபடத் தீரும்' என்றது, சிலேடை: ஸ்ரீ பாததூளி படத் தீரும் என்றும், தூளியாய்ப் போம் என்றும் பொருள்.
2. சுணங்கை எறிந்து என்றும் பாடம்.

ஈடு:—ஏழாம்பாட்டு. [1] மற்றைத் தேவர்களைப் பற்றினால் இவளுடைய அழிவே பலித்துவிடும்; இவள்பிழைக்க வேண்டி யிருந்தீர்கோளாகில், ஸ்ரீவைஷ்ணவர்களைப் பற்றுங்கோள் என்கிறாள்.

அணங்குக்கு அருமருந்து என்று-தெய்வத் தன்மையை யுடைய இவளுக்குத் தகுதியான பெறுதற்கரிய மருந்து என்று. [2] இவள் வைலக்ஷண்யமும் அறிந்திலீர்கோள், செய்யப்படு கின்றதனுடைய தண்மையையும் அறிந்திலீர்கோள் என்பாள் 'அணங்குக்கு' என்கிறாள். அணங்கு - தெய்வப்பெண்; [3] "சூரும் அணங்கும் தெய்வப் பெண்பெயர்" என்னக் கடவ தன்றோ? அங்கு ஓர் ஆடும் கள்ளும் பராய் - தாழ்ந்தபொருள் களைத் துதித்து. பராய் - பராவி; பிரார்த்தித்து. துணங்கை எறிந்து - துணங்கை என்பது ஒரு கூத்து விசேடம். எறிதல் - இடுதல். ஆடல் இட்டு என்றபடி. துணங்கைக் கூத்து என்று கைதட்டி ஆடுவதொரு கூத்து உண்டு; அதனைச் சொல்லிற் றுதல்; அன்றிக்கே, [4] மஞ்சட்பொடியைக் கையிலே பிடித்து ஒருவர்க்கு ஒருவர் எறிந்து ஆடுவது ஒன்று உண்டு, அதனைச் சொல்லிற்றுதல். நும் தோள் குலைக்கப்படும் அன்னைமீர்- [5] பக வானிடத்தில் செய்த அஞ்சலி மாத்திரமும் 'சரண்யன் நீர்மை யாலே மிகை' என்றிருக்கக்கூடிய நீங்கள் படும் எளிவரவே இது! "தொழுது எழுதும் என்னும் இது மிகை" என்றே யன்றோ இவர்கள் இருப்பது.

உணங்கல் கெடக் கழுதை உதடு ஆட்டம் கண்டு என் பயன் - ஜீவனத்திற்குச் சாதனமாக இருக்கின்ற நெல்லா

---

1. "கழுதை உதடு ஆட்டம் கண்டு என் பயன், மாயப்பிரான் தமர் வேதம் வல்லாரை வணங்கீர்கள்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "அணங்கு" என்று கூறுகின்றவளுடைய மனோபாவத்தை அருளிச் செய்கிறார் 'இவள்' என்று தொடங்கி.

3. நிகண்டு.

4. 'மஞ்சட்பொடி' என்ற பொருளில், "சுணங்கை" என்பது பாட மாக இருத்தல் வேண்டும். சுணம் - சுண்ணம்: சூர்ணம்; அதாவது, மஞ்சட் பொடி.

5. "நும்" என்பதற்கு வாசனை, 'பகவானிடத்தில்' என்று தொடங் கும் வாக்கியம். 'அஞ்சலி மாத்திரமும் மிகை' என்றிருப்பதற்குப் பிரமாணம், 'தொழுது எழுதும்" என்பது. இது, திருவாய்மொழி. 9. 3; 9.

னது அழிந்துபோகும் படிக்குத் தகுதியாக, அதனைத் தின்னு கிற கழுதையினுடைய உதட்டின் வியாபாரம் கண்டிருந்தால் என்ன பிரயோஜனம் உண்டு? அப்படியே, இவளைக்கொண்டு ஜீவிக்க இருக்கிற நீங்கள் இவளுக்கு அழிவினை உண்டாக்கக் கூடியதான வேறு தேவதைகளின் சம்பந்தமுடையாருடைய வியாபாரத்தைக் கண்டு கொண்டிருக்கிற இதனால் என்ன பிரயோஜனம் உண்டு? பிரயோஜனம் இல்லாமை மாத்திரமே யன்று; அழிவே சித்திப்பது. அன்றிக்கே, "உணங்கல் கெட-இவளுடைய உணங்குதல் கெட; இவள் இளைப்புத் தீர என்ற படி. கழுதை - பேயை; கழுது - பேய். உதடு ஆட்டம் கண்டு என் பயன் - நீங்கள் ஆடும் கள்ளும் பிரார்த்தித்துக் கொடுக்க, அது அதனை உண்ணும்போது அதனுடைய உதடு ஆடுகிற படியைக் கண்டிருப்பதனால் என்ன பயன் உண்டு?" என்று ஐயன் திருக்குருகைப் பெருமாள் அரையர் நிர்வஹிப்பர். [1]"கழுது பேயும் பரணும்" என்னக்கடவதன்றோ? 'இதில் பிரயோஜனம் இல்லையாகில், பிரயோஜனத்தினை உடை யதா யிருக்குமதனைச் சொல்லாய்' என்ன, வணங்கீர்கள் - அவர்கள் திருவடிகளிலே விழப் பாருங்கோள். 'அவர்கள்' என்றது, யாரை? என்ன, மாயப்பிரான் தமர் வேதம் வல் லாரை - ஆச்சரியமான குணங்களையும் செயல்களையுமுடையவ னுடைய குணங்களிலே ஈடுபட்டிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களை. [2]"எல்லா வேதங்களாலும் அறியப்படுமவன் யானே" என் றும், [3]"எல்லாவேதங்களும் எந்தப் பரம்பொருளிடத்தில் ஒரே முகமாய் ஆகின்றவோ" என்றும், [4]"எல்லாச் சொற் களுக்கும் எவரிடத்தில் தாத்பரியமோ அந்தக் கோவிந்தனை வணங்குகிறோம்" என்றும் சொல்லுகிறபடியே, வேத தாத் பரியம் கைப்பட்டிருக்குமவர்கள் ஆதலின், 'வேதம் வல்லார்' என்கிறது. 'வேதம் வல்லார்' என்று இங்குக் கூறுதற்குக்

---

1. கழுது என்ற சொல், பேய் என்ற பொருளில் வருவதற்கு மேற் கோள்: "கழுது பேயும் பரணும்" என்பது. இது, நிகண்டு. 'பேய் உதடாட்டம் காணுதல்' என்றது, பேயை ஒருவன் பக்கலிலே ஆவேசிப்பித் துப் பக்ஷங்களை இட்டு அதனுடைய உதடுகள் அசைதலைப் பார்த்துக் கொண்டிருத்தலைக் குறித்தபடி.

2. ஸ்ரீ கீதை. 15: 15.

3. கடவல்லி உப. 1. 2: 15.

4. விஷ்ணுபுரா. 1. 14: 23.

கருத்து என்? என்னில், வேறு தெய்வங்களின் சம்பந்த முடையார் புகுந்து சிகித்சை செய்வதற்குப் பரிஹாரமே யன்றோ இவள் சொல்லப் புகுந்தது; அதில், 'அவனை ஒழிந்த தொரு தேவதைக்குத் தனித்து ஓர் உயிர்ப்பில்லை; அவனே உத்தேஸ்யம்' என்றிருக்குமவர் காலிலே விழுங்கோள் என்று கூறுதல். என்றது, 'தேவதைகள் தோறும் தனித் தனியே காரியமுண்டு' என்று இராமல், 'எல்லாச் சொற்களும் ஒரே பொருளைச் சொல்லுவது' என்றிருக்குமவர்களைப் பற்றப் பாருங்கோள் என்கிறாள் என்றபடி. (7)

## 395.

வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான்திருப்
பாதம் பணிந்துஇவள் நோயிது தீர்த்துக்கொள் ளாதுபோய்
ஏதம் பறைந்துஅல்ல செய்து கள்ளூடு கலாய்த்தூஉய்க்
கீத முழவிட்டு நீர்அணங்கு ஆடுதல் கீழ்மையே.

பொ - ரை :—வேதத்திலே வல்லவர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கொண்டு நித்தியசூரிகளுக்குத் தலைவனான சர்வேசுவரனது திருவடிகளை வணங்கி, இவளுடைய நோயாகிய இதனைத் தீர்த்துக் கொள்ளாமல், சிறு தெய்வங்கள் பக்கல் சென்று குற்றமுள்ளவற்றைச் சொல்லிச் செய்யத் தகாத காரியங்களைச் செய்து கள்ளினை வீட்டிற்குள்ளே கலந்து தூவிக் கீதத்தோடுகூடின முழவென்னும் வாத்தியத்தை அடித்து நீங்கள் அணங்கு ஆடுதல் இக் குடிக்கு இழுக்கேயாம் என்றவாறு.

வி - கு :—வேதம் வல்லார்களைக் கொண்டு பாதம் பணிந்து தீர்த்துக் கோடல் தக்கது என்க. அங்ஙனமன்றி, போய்ப் பறைந்து செய்து தூவி ஆடுதல் கீழ்மையாம் என்க. ஏதம் - குற்றம். பறைந்து - சொல்லி. கலாய் - கலந்து.

ஈடு :—எட்டாம்பாட்டு. [1] ஸ்ரீ வைஷ்ணவர்களைப் புருஷகாரமாகக் கொண்டு சர்வேசுவரன் திருவடிகளிலே சரணம் புக்கு இவளுடைய நோயைத் தீர்த்துக் கொள்ளுதலை விட்டு, புன்சிறு தெய்வங்களைப் பற்றுதல் உங்களுக்குக் கீழ்மையை விளைக்கும் என்கிறாள்.

வேதம் வல்லார்களைக் கொண்டு-'சர்வேசுவரனே பிராப்பியமும் பிராபகமும்' என்கிற வேத தாத்பரியம் கைப்பட்

1. திருப்பாசுர முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச் செய்கிறார்.

டவர்களைப் புருஷகாரமாகக் கொண்டு. என்றது, [1] "வேறாக, ஏத்தி யிருப்பாரை வெல்லுமே மற்றவரைச், சார்த்தி யிருப்பார் தவம்" என்கிறபடியே, அவர்கள் காலிலே விழப் பெறில் விரைவில் நோய் தீர்தல் கூடும். அது கூடாதே யன்றோ? சஜாதியராக நினைத்திருக்கையாலே ருசி விசுவாசங்கள் அவர்கள் பக்கல் கனக்கப் பிறவாதே யன்றோ? ஆனபின்னர், அவர்களைப் புருஷகாரமாகக் கொண்டு அவனைப் பற்றுதற்குப் பாருங்கோள் என்கிறாள் என்றபடி. [2] இங்கிருக்கும் நாட்களுக்குப் புருஷகாரமாக முமுக்ஷுக்கள் உளர்; அங்குத்தானே நித்தியசூரிகள் உளரே யன்றோ? [3] "அந்த அமாநவன் முக்தர்களைப் பரம்பொருளிடம் சேர்ப்பிக்கின்றான்" என்கிறபடியே, அவர்கள் கொடுபுக்கு இருத்தவே யன்றோ அவ் வோலக்கத்தில் இருப்பது. விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து - அயர்வறும் அமரர்கள் அதிபதி திருவடிகளிலே பணிந்து. இவள் நோய் இது தீர்த்துக் கொள்ளாது-நோய் கொண்டவள் இவள், நோய்தான் இது; இதற்குத் தகுதியான பரிஹாரத்தைச் செய்யாமல்.

போய் - நம்முடைய நிலைக்கு மிக்க தூரமாய் உரியது அல்லாதது ஒன்றிலே கைகழியப் போய். ஏதம் பறைந்து-

---

1. மேல் திருப்பாசுரத்திலே "வேதம் வல்லார்களை வணங்கீர்கள்" என்று வைத்து, இங்கு, 'அவர்களைப் புருஷகாரமாகக் கொண்டு' என்கிறது என்? என்னும் வினாவைத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிறார் "வேறாக" என்று தொடங்கி. இது, நான்முகன் திருவந். 18. இந்த நிஷ்டை உண்டானால் விரைவிலே பயன் பெறலாம்; இது கூடாதே புருஷகாரமாகவாகிலும் பற்றுங்கோள் என்பது திருவுள்ளம்.

2. வேதம் வல்லார்களைக் கொண்டு சர்வேசுவரன் திருப்பாதம் என்னாதே, "விண்ணோர் பெருமான் திருப்பாதம்" என்று அருளிச்செய்வதனால் நித்தியசூரிகளும் புருஷகாரமாக இருப்பவர்கள் என்பது தோன்றுகிறது; அதனை விளக்குகிறார் 'இங்கிருக்கும்' என்று தொடங்கி. இவர்கள் இருவரும் புருஷகாரமாக இருப்பது, முமுக்ஷுத்வ அவஸ்தையிலும், முக்த அவஸ்தையிலும் ஆம்.

3. அவர்கள் புருஷகாரமாக இருப்பர்களோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "அந்த அமாநவனும்" என்று தொடங்கி. இது, சாந்தோக்ய உப. 4: 15. அமாநவனைச் சொன்னது, நித்திய சூரிகளுக்கும் உபலக்ஷணம். இங்கு, "முடியுடை வானவர் முறை முறை எதிர்கொள்ள" என்ற தமிழ் மறை அநுசந்திக்கத் தகும். இது, திருவாய். 10. 9. 8.

[1]உங்களுக்குக் குற்றமானவற்றை நீங்கள் சொல்லி. அல்ல செய்து - செய்யக் கூடியது அல்லாததைச் செய்து. கள் ஊடு கலாய்த் தூஉய் - அசுத்தமான பொருள்களைக் கொண்டு வீடு முழுதும் கலந்து தெளித்து. [2]அசுத்தமான பொருள்களைத் தீண்டுதலைப் போன்றது ஒன்றேயன்றோ வேறு தெய்வங்களினுடைய சம்பந்தமும். [3]'விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து இவள் நோய் இது தீர்த்துக் கொள்ளாது' என்கையாலே, அவனைக் கொண்டு பெறுதற்குப் பாராமல், அவனுக்குப் புறம்புமாய் யான் எனது என்னும் செருக்குக்களை உட்கொண்டதான கிரியா கலாபங்களாலே பெறுதற்குப் பார்க்கையும் அதனைப் போன்றது ஒன்றேயாயிற்று. [4].அற மேலாயிருக்கும் மருந்தேயன்றோ இவள் சொல்லிற்று; அதனையன்றோ இவர்கள் விரும்புதலின்றி நிற்கிறது. கீதம் முழவு இட்டு - நிஷித்தமான கீதத்தோடே கூடின வாத்தியங்களை ஒலிப்பித்து. நீர் அணங்கு ஆடுதல்-பகவானுடைய குணங்களை அநுபவிக்கின்ற அநுபவத்தாலே [5]"உண்டு களித்தேற்கு உம்பர் என்குறை" என்னக்கூடிய நீங்கள் தெய்வம் ஏறினவர்களாய்க் கொண்டு ஆடுவது. கீழ்மையே - சாலத் தண்ணிது. உங்கள் அளவில் போகுமதன்று; உங்கள் வழிக்கும் கொத்தை என்றபடி. ஊடு - உள்ளே. (8)

---

1. 'உங்களுக்குக் குற்றமானவற்றை நீங்கள் சொல்லி' என்றது, சொரூபத்திற்குக் குற்றமுண்டாகுமாறு மற்றைத் தேவர்களைக் குறிக்கின்ற சொற்களைச் சொல்லி என்றபடி.

2. ஆழ்வார் பக்கலிலே அசுத்தமான பொருள்கள் வரக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அசுத்தமான' என்று தொடங்கி.

3. வேறு தெய்வங்களின் சம்பந்தம் தியாஜ்யம் என்று சொல்லுகின்ற இவ்விடத்திலே, வேறு உபாயங்களின் சம்பந்தமும் தியாஜ்யம் என்று கூறத் திருவுள்ளம்பற்றிச் சப்த நிர்வாஹம் காட்டுகிறார் "விண்ணோர் பெருமான்" என்று தொடங்கி. கிரியா கலாபம் - கிரியைகளின் கூட்டம்.

4. "விண்ணோர் பெருமான்" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'அறமேலோய்' என்று தொடங்கி.

5. "உண்டு களித்தேற் கும்பர் என்குறை? மேலைத்
தொண்டுகளித்து அந்தி தொழும் சொல்லுப் பெற்றேன்"

என்பது திருவாய்மொழி. 10. 8; 7.

396.

கீழ்மையி னால்அங்குஓர் கீழ்மகன் இட்ட முழவின்கீழ்
நாழ்மை பலசொல்லி நீர்அணங்கு ஆடும்பொய் காண்கிலேன்
ஏழ்மைப் பிறப்புக்கும் சேமம்இந் நோய்க்கும் ஈதேமருந்து
ஊழ்மையில் கண்ண பிரான்கழல் வாழ்த்துமின் உன்னித்தே.

பொ - ரை :—அங்கு ஒரு தாழ்ந்த மகனாலே அடிக்கப்படுகின்ற முழவின் கீழே இருந்துகொண்டு குற்றமுள்ளன பலவற்றைச் சொல்லிக் கொண்டு நீங்கள் உங்கள் கீழ்மையினாலே அணங்கு ஆடுகின்ற பொய்யை நான் காணமாட்டேன்; எழுவகைப்பட்ட பிறப்புக்களுக்கும் பாதுகாவலாம்; இதுவே இந்நோய்க்கும் மருந்தாகும்; ஆதலால், முறையாகக் கண்ணபிரானுடைய திருவடிகளை நினைத்து வாழ்த்துங்கள் என்றவாறு.

வி - கு :—நீர் கீழ்மையினால் அணங்கு ஆடும் பொய் எனக் கூட்டுக. கண்ணபிரானுடைய கழல் உன்னித்து வாழ்த்துமின் என மாறுக. நாழ்மை - குற்றம்.

ஈடு :—ஒன்பதாம் பாட்டு. [1] நீங்கள் செய்கின்ற பயன் இல்லாத காரியங்களை நான் காணமாட்டேன்; இவள் பிழைக்க வேண்டும் என்று இருந்தீர்கோளாகில், கிருஷ்ணன் திருவடிகளை நினைத்து வாழ்த்துங்கள் என்கிறாள்.

கீழ்மையினால் - உங்கள் தண்மையினாலே; இவர்களுக்குத் தண்மையாவது, இராஜச தாமச குணங்களாலே மறைக்கப் பட்டிருத்தல். ஆகையால் அன்றோ இக் காரியம் செய்கிறார்கள் என்றபடி. அங்கு ஓர் கீழ்மகன் இட்ட முழவின்கீழ் - [2] ‘இன்ன விடத்தான், இன்னான்’ என்று சொல்ல ஒண்ணாத ஒரு சண்டாளன் அடிக்கிற வாத்தியத்தின் கீழே புக்கிருந்து. நாழ்மை பல சொல்லி - அவற்றுக்கு இல்லாத ஏற்றங்களைப் பலவும் சொல்லி; என்றது, [3] “உண்டும் உமிழ்ந்தும் கடந்தும் இடந்தும்” என்று சர்வேசுவரனைச் சொல்லுமாறுபோலே, ‘இவன் இன்னது செய்தான், இன்னது செய்தான்’ என்று

1. “பொய்” என்றதனை நோக்கிப் ‘பயனில்லாத காரியங்களை’ என்கிறான்.

2. ‘ஓர்’ என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் ‘இன்னவிடத்தான், இன்னான்’ என்று தொடங்கி.

3. திருவாய்மொழி. 4. 5 : 10.

சொல்லா நிற்பர்களே யன்றோ? அதனைத் தெரிவித்தபடி. நாழ் என்று, குற்றத்திற்கும் இல்லாததனைச் சொல்லுகைக்கும் 'நான்' என்று அபிமானித்திருக்கைக்கும் பேர். நீர் அணங்கு ஆடும் பொய் காண்கிலேன் - நீங்கள் தெய்வம் ஏறினவர்களாய்க் கொண்டு ஆடுகின்ற இப் பொய் என் கண்களுக்கு ஒரு பொருளாய்த் தோற்றுகிறது இல்லை. [1]"பல வகைப்பட்ட பொருள்கள் இல்லை" என்கிறபடியே "அவனை ஒழிந்ததொரு தெய்வத்திற்கு ஸ்வதந்திர வஸ்துத்வம் உண்டு" என்று இருக்கில் அன்றோ அவர்கள் செய்வது 'மெய்' என்று தோற்றுவது.

'நாங்கள் செய்கிறவை பொய்யாகில், நீ சொல்லுகிறது மெய்யாய் எவ்வளவு பலிக்கும்?' என்ன, ஏழ்மை பிறப்புக்கும் சேமம் - எல்லாப் பிறவிகளிலும் காவலாம்; [2]ஒரு நன்மை யுண்டானால் அதனை ஏழ் ஏழாகச் சொல்லக்கடவதன்றோ? அதனால், '**ஏழ்மை**' என்கிறாள். அன்றிக்கே, தண்ணிதான பிறவி என்னலுமாம். ஏழ்மை - தண்மை. நாங்கள் பிறவிகளிற் காவலா மதுவோ தேடுகிறது? இவள் நோய்க்குப் பரிஹாரமன்றோ? அதனைச் சொல்லாதே மற்றொன்றைச் சொல்லுகிறது என்? என்ன, ஆகில், [3]சம்பு அறுத்து ஆர்க்கைக்குப் போகவேணுமோ? இந் நோய்க்கும் ஈதே மருந்து - [4]அடிபற்றின மருந்து அன்றோ? ஊழ்மையில் - முறையிலே; ஊழ் - முறை. அன்றிக்கே, நீங்கள் செய்கிறவை போலன்றிக்கே, முறையிலே செய்ததாகவுமாம்.

---

1. தோற்றுமைக்குக் காரணம் யாது? என்ன, 'பல வகைப்பட்ட' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, கடவல்லி உப. 2. 4 : 11.

2. "ஏழ்மைப் பிறப்பு" என்றது, எல்லாப் பிறவிகளையும் காட்டுகிறது என்று பொருள் கூறத் திருவுள்ளம்பற்றி அதற்குக் காரணம் காட்டுகிறார் 'ஒரு நன்மை' என்று தொடங்கி.

3. 'சம்பு அறுத்து ஆர்க்கைக்குப் போகவேணுமோ?' என்றது, சம்பை அறுத்தவர்கள் அதனைக் கட்டுவதற்கு வேறொரு சாதனத்தைத் தேடிக்கொண்டு போகவேண்டுமோ? அதனைக் கட்டுதற்கும் அதுவே சாதனமாக இருக்குமே யன்றோ? என்றபடி.

4. 'அடி பற்றின மருந்து' என்றது, "கழல் வாழ்த்துமின்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி. அடி பற்றின மருந்து - திருவடிகளைப்பற்றின மருந்து; சாரமான மருந்து.

கண்ணபிரான் கழல் உன்னித்து வாழ்த்துமின் - உபகாரக னை கிருஷ்ணன் திருவடிகளை வாழ்த்தப் பாருங்கோள். [1]அடிக்கழஞ்சுபெறும் மருந்தேயன்றோ அது. அது செய்யுமிடத்தில் எல்லாரும் ஒக்க நினைத்து வாழ்த்தப் பாருங்கோள் என்பாள் 'வாழ்த்துமின்' எனப் பன்மை வாய்பாட்டாற் கூறுகின்றாள். [2]இப்படிச் செய்யவே, எல்லாப் பிறவிகளிலும் பாதுகாவலாய் இவள் நோய்க்கும் பரிஹாரமாம்; மேலும், செய்யத்தக்கதனைச் செய்தவர்களும் ஆவோம். [3]"பகவான் நம்மை நினைத்த அளவில் மங்களத்தைக் கொடுக்கிறார்" என்பது விஷ்ணுபுராணம். (9)

## 397.

உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாள்அவ னையல்லால்
நும்மிச்சை சொல்லிநும் தோள்குலைக் கப்படும் அன்னைமீர்!
மன்னப் படுமறை வாணனை வண்துவ ராபதி
மன்னனை ஏத்துமின் ஏத்துத லும்தொழு தாடுமே.

பொ - ரை :—சர்வேசுவரனை அல்லாமல் வேறு ஒருதெய்வத்தை நினைத்து வணங்கமாட்டாள் இவள்; இங்ஙனமிருக்க, உங்களுக்கு விருப்பமானவற்றையெல்லாம் சொல்லி, உங்களுடைய தோள்களை வருத்திக் கொள்ளுகின்ற தாய்மார்களே! என்றும் நிலைத்திருக்கின்ற வேதங்களால் சொல்லப்படுகின்றவனும் வளப்பம் பொருந்திய துவாரகைக்கு அரசனுமான சர்வேசுவரனைத் துதிசெய்யுங்கள்; துதிசெய்த அளவிலே அவனைத் தொழுது ஆடுவாள் என்றவாறு.

வி - கு :—உன்னித்துத் தொழாள் என்க. சொல்லிக் குலைக்கப் படும் அன்னைமீர் என்க. மன்னுதல் - நிலைபெறுதல்.

---

1. 'அடிக்கழஞ்சு' என்றது, சித்தமாய், விரைவில் பலத்தைக் கொடுக்கக் கூடியதாய், சொரூபத்திற்குத் தகுதியானது ஆகையாலே, சிலாக்யம் என்றபடி. அடிக்கழஞ்சு - பெருமதிப்பு.

2. 'இப்படிச்செய்யவே' என்றது, உன்னித்து வாழ்த்தவே என்றபடி.

3. உன்னுதல் மாத்திரம் போதியதாமோ? என்ன, 'போதியதாம்' என்பதற்கு மேற்கோள் காட்டுகிறார் 'பகவான்' என்று தொடங்கி. இது, விஷ்ணு புரா. 1. 17: 78. அசுர புத்திரர்களுக்கு ஸ்ரீ பிரஹ்லாதாழ்வான் கூறியது.

ஈடு :—பத்தாம்பாட்டு. [1] இவளுக்குக் கிருஷ்ணன் திருவடிகளில் உண்டான ஐகாந்தியத்தை நினைத்து அவனை ஏத்துங்கோள் ; இவள் பிழைப்பாள் என்கிறாள்.

உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாள் அவனை அல்லால் - தன்னெஞ்சாலே மதித்து வேறு ஒரு தெய்வத்தைத் தொழுது அறியாள் இவள். [2] "தொட்டில் பருவமே தொடங்கிப் பரம ஸ்நேகிதராய் இராநின்றார்" என்கிறபடியே, பிறை தொழும் பருவத்திலும் பிறைதொழுது அறியாள். [3] "மலையோ முழுமுற்றும் போந்தில பெருமான், மலையோ திருவேங்கடம் என்று கற்கின்ற வாசகம், இவள் பரமே" என்று நீங்கள் ஆச்சரியப்படும்படி யன்றோ அவ் விளமைப் பருவத்திலும் இருந்தது ; [4] இனி, இப்போது பர்வதத்தை விட்டுப் பதார்க்கூட்டத்தைப் பற்றுமோ ? [5] ஆகையாலே, இன்னார்க்கு இன்னது பரிஹாரம் என்று ஒன்றில்லையோ ? அது அறிந்து பரிஹரிக்க வேண்டாவோ ? முழங்கால் தகர மூக்கிலே ஈரச்சீரை கட்டு மாறுபோலே யன்றோ நீங்கள் செய்கிற பரிஹாரம் ? 'வேறு தெய்வங்களின் சம்பந்தம் இவளுக்குப்பொறாது' என்று அறிய வேண்டாவோ ? என்கிறாள் என்றபடி. [6] "அநந்யதைவத்வம் -

---

1. முதலடியினையும் மூன்றாமடி நான்காமடிகளையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். ஐகாந்தியம் - தான் பற்றின விஷயத்தை ஒழிய வேறொன்றும் அறியாதிருக்கை.

2. ஸ்ரீராமா. பால. 18 : 27. 'இராநின்றார்' என்றது, இளைய பெருமாளை. 'பிறைதொழும் பருவத்திலும்' என்றது, திருமணம் ஆவதற்கு முன்னேயுள்ள கன்னிப்பருவத்தைக் குறித்தபடி. இப்பருவத்தில் பிறையைத் தொழுவது என்பது நூல்வழக்கு. அகப்பொருள் துறைகளில் 'பிறை தொழுகென்றல்' என்ற ஒரு துறையும் அமைந்துள்ளமை காண்க.

3. திருவிருத்தம். 60. இது, இளமைப் பருவம் தொடங்கிப் பகவத் விஷயமல்லது அறியாமைக்குப் பிரமாணம்.

4. "மலையோ திருவேங்கடம்" என்றதனைக் கடாக்ஷித்து ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'இனி இப்போது' என்று தொடங்கி.

5. "உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாள்" என்கிறவளுடைய மனோபாவத்தைக் காட்டுகிறார் 'ஆகையாலே' என்று தொடங்கி.

6. "மற்றொரு தெய்வம் தொழாள்" என்றதற்குப் பிரமாணம் காட்டுகிறார். "அநந்யதைவத்வம்" என்று தொடங்கி. இது, பிராட்டியின் வார்த்தை. சுந். 28 : 12. இச்சுலோகத்திற்கு ஆக்ஷேப சமாதானத்தோடு மிக விரிவாகப் பொருள் அருளிச்செய்கிறார் வியாக்யாதா. அதனை, 'வேறும் ஒரு பற்றக்கூடிய' என்றது முதல் 'என்றாள் பிராட்டி' என்றது முடியக் காண்க.

'வேறும் ஒருபற்றக்கூடிய தெய்வம் உண்டு, அது காப்பாற்று கிறது' என்று நினைக்க விரகு இல்லை கண்டாய் எனக்கு. [1] ஸஹபத்நியா - என்று, பெரியபெருமாள் திருவடிகளிலே இவர் புகும்போதும் இவர்க்கு எடுத்துக் கைநீட்டப் புகுமத் தனை போக்கி, பெரியபெருமாள் தாம் உத்தேசியமாகப் புக்கறி யேன். இயம்க்ஷமாச - இராவணன் பலவாறாகப் பிதற்றிய வார்த்தைகளையும் இராக்ஷசிகளுடைய [2] தர்ஜந பர்த்சநங்களை யும் பொறுத்திருந்ததும் "அவருடைய ஓர் இன்சொல் கேட்க லாம்" என்று கண்டாய். பூமௌசய்யா - இத்தரைக்கிடை கிடந்ததும் [3] "தேவரீருடைய மடியில் படுத்துக்கொண்டேன்" என்கிறபடியே, 'அவருடைய மடியில் இருப்பு ஒருகால் சித்திக் குமோ?' என்னுமதனாலே கண்டாய். நியமஸ்சதர்மே - 'ரக்ஷ கத்வதர்மம் அவர் தலையிலே' என்னுமதனாலே கண்டாய் நான் இருந்தது; என்றது, [4] பத்துத் தலைகளையுடையவனே! எரிக் கப்படுவதற்குத் தகுந்தவனே! எனக்கு ஆற்றலிருந்தும், என்னுடைய கற்பாகிய தேஜஸ்ஸால் உன்னைச் சாம்பலாகச் செய்யேன்" என்று இராவணனைப் பார்த்துக் கூறியது ஸ்ரீ ராமபிரானை நினைத்து என்றபடி. பதிவிரதாத்வம் - [5] "சரணாகதி யடைந்தவர்களைப் பாதுகாத்தல் எனக்கு விர

---

1. ஆயின், அயோத்யா காண்டத்தில் ஆறாவது சர்க்கத்தில் முதல் சுலோகத்தில் 'குல தெய்வமான நம்பெருமாளை வணங்கினாள்' என்று கூறப் பட்டுள்ளதே? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் "ஸஹபத்நியா" என்றது முதல் 'புக்கறியேன்' என்றது முடிய. எடுத்துக் கைநீட்டுதல் - கைங்கர்யம் செய்தல். இங்கு, தமிழ் மரபையும் ஒருபடி கடந்து செல்லுகிறார் வியாக்யாதா. "தெய்வமஞ்சல்" என்ற சூத்திரம் நினைவு கூர்தல் தகும். (தொல். பொருள். மெய்ப்).

2. தர்ஜனம் - கையால் பயமுறுத்துதல். பர்த்சனம்-வாயால் பயமுறுத்துதல்.

3. ஸ்ரீராமா. சுந். 38: 12. இது, பெருமாளிடம் தெரிவிக்குமாறு திருவடியிடம் பிராட்டி கூறியது.

4. இது, ஸ்ரீராமா. சுந். 22: 20. இது, இராவணனைப் பார்த்துப் பிராட்டி கூறியது. இங்கே,

> அல்லன் மாக்கள் இலங்கைய தாகுமோ
> எல்லை நீத்த உலகங்கள் யாவும் என்
> சொல்லி னாற்சுடு வேனது தூயவன்
> வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன்.

என்ற கம்ப நாடர் திருவாக்கு ஒப்பு நோக்கலாகும்.

5. ஸ்ரீராமா. யுத். 18: 33.

தம்" என்றவருடைய விரதம் ஒழிய, 'எனக்கு' என ஒரு சங்கல்பத்தையுண்டாக்கி இவற்றை யழிக்க நினைத்திலேன் கண்டாய். விபலம் மம இதம்-தப்பாதவையும் தப்பிவிட்டன. எது போலே என்னில், மாநுஷாணும் கிருதக்னேஷு கிருத மிவ - [1]"நான் என்னை மனிதனாகவே நினைக்கிறேன்" என்றவர்க்கும் உண்டேயன்றோ மனிதத் தன்மை; அவரை ஒழிந்தார் திறத்துச் செய்த காரியங்களைப் போன்று விழுந்தது. என்றது, தப்பாதது தப்பிற்று என்றபடி. அதற்கு அடி என்? என்னில், மம இதம் - அவர் பக்கல் குறையில்லை; அதற்கு இலக்கு நான் ஆகையாலே" என்றாள் பிராட்டி.

நும் இச்சை சொல்லி-உங்களுக்கு இஷ்டமானவற்றைச் சொல்லி; என்றது, பொருளின் உண்மையைப் பார்த்தாலும் இவளைப் பார்த்தாலும் வேறு தெய்வங்களின் சம்பந்தம் பொருததா யிருந்ததேயன்றோ? இனி உள்ளது உங்களுக்குத் தோற்றிய வார்த்தைகளைச் சொல்லுகையாயிற்றே யன்றோ என்றபடி. நும் தோள் குலைக்கப்படும் அன்னைமீர் - [2]துர்விருத்தர் செய்வதை விருத்தவான்கள் செய்வர்களோ? [3]"தோள் அவனை யல்லால் தொழா" என்றே யன்றோ நீங்கள் சொல்லுவது; ஆதலால், [4]நீங்கள் இவற்றுக்கு வேறுபட்டவர்களாமவர்கள் அல்லரே என்றபடி. ஆனால், செய்ய அடுப்பது என்? என்ன, மன்னப் படு மறைவாணனை - நித்தியமான வேதங்களாலே சொல்லப்படுகையாலே வந்த ஏற்றத்தினையுடையவனை; மன்னப்படுதல் - நித்தியமாக விருத்தல். என்றது, மனிதனுடைய புத்தியினாலே உண்டானவை யல்லாமையாலே, வஞ்சனை முதலான தோஷங்கள் இன்றிக்கே, முன்னே முன்னே உச்சரித்துப் போந்த கிரமத்திலே பின்னே பின்னே உச்சரித்து வருகின்ற தன்மையைப் பற்றச் சொன்னபடி. அன்றிக்கே, மன்னுகையாவது, பயிலுதலாய், அத்யயன விதியின்படி வந்து கொண்டிருக்கும் வேதங்களால்

1. ஸ்ரீராமா. யுத். 120:11.

2. 'துர்விருத்தர் செய்வதை விருத்தவான்கள் செய்வர்களோ?' என்றது, பகவத் சம்பந்த மில்லாதார் செய்வதனைப் பகவத் சம்பந்தமுடையவர்கள் செய்வர்களோ? என்பது கருத்து.

3. முதல் திருவந். 63.

4. 'நீங்கள்' என்றது, அவனுக்கே அடிமைப்பட்டிருக்கிற நீங்கள் என்றபடி.

சொல்லப்படுகின்றனவனை என்னுதல். ஆக, [1]ஆகமம் முதலானவைகளில் சொன்னவற்றைக் கொண்டோ பரிஹரிக்கப் பார்ப்பது? வேதங்களால் அறியப்படுகின்றவனைப் பற்றப் பாருங்கோள் என்கிருள் என்றபடி. வண் துவராபதி மன்னனை - கேட்டார்வாய்க் கேட்டுப் போகாமே கண்ணுலே கண்டு அநுபவிக்கலாம்படி வந்து அவதரித்தவனை. [2]நீரிலே புக்கு அழுந்தினரை முகத்திலே நீரைத் தெளித்துப் பரிஹரிக்குமாறு போலே, தேர்ப்பாகனர்க்கு மோஹித்த இவளை, வண் துவராபதி மன்னன் திருநாமத்தைச் சொல்லித் தெளியச்செய்யப் பாருங்கோள் என்பாள் '**வண் துவராபதி மன்னனை ஏத்துமின்**' என்கிருள். ஏத்துமின் - வாய்படைத்த பிரயோஜனம் பெற ஏத்துங்கோள். [3]"சீர்பரவாது, உண்ண வாய் தானுறுமோ ஒன்று" என்றன்றே நீங்கள் சொல்லுவது? ஏத்துதலும் தொழுது ஆடும் - நீங்கள் செய்யத் தகும் காரியத்தைச் செய்து முடித்தவர்கள் ஆகு மளவே யன்று; [4]"பிறகு அவன் பயம் இல்லாதவனுக ஆகிருன்" என்கிறபடியே, ஏத்தின உடனேயே தெளிவையுடையவளாய்த் தொழுது ஆடுவாள். [5]உணர்த்தியுண்டானல் செய்வது அது போலே காணும். என்றது, தரித்து ஆடுதற்குத் தக்க ஆற்றலையுடையவளுமாவாள் என்றபடி. (10)

398.

தொழுதாடித் தூமணி வண்ணனுக்குஆட்செய்து நோய்தீர்ந்த
வழுவாத தொல்புகழ் வண்குரு கூர்ச்சட் கோபன்சொல்
வழுவாத ஆயிரத் துள்இவை பத்து வெறிகளும்
தொழுதாடிப் பாட வல்லார் துக்கசீல மிலர்களே.

---

1. ஆகமம் - சைவாகமம்.

2. "வண்துவராபதி மன்னனை ஏத்துமின்" என்கிறவளுடைய மனேபாவத்தை அருளிச்செய்கிருர் 'நீரிலே புக்கு' என்று தொடங்கி.

3. பெரிய திருவந். 52. இது, 'வாய் படைத்த பிரயோஜனம் அவனை ஏத்துதல்' என்பதற்குப் பிரமாணம்.

4. தைத்திரீய உபநிடதம்.

5. "தொழுது" என்பது, தெளிவையுடையளாதலைக் காட்டுமோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'உணர்த்தி யுண்டானல்' என்று தொடங்கி. 'அது' என்றது, தொழுது ஆடுதலை.

பொ - ரை:— பரிசுத்தமான நீலமணி போன்ற நிறத்தை யுடைய சர்வேசுவானுக்கு, தொழுதும் ஆடியும் அடிமைசெய்து நோய் தீர்ந்த, குற்றமில்லாத இயல்பான புகழையுடைய வளப்பம் பொருந்திய திருக்குருகூரிலே அவதரித்த ஸ்ரீ சடகோபராலே சொல்லப்பட்ட குற்ற மில்லாத ஆயிரம் திருப் பாசுரங்களுள் வெறியாட்டுச் சம்பந்தமான இவை பத்துப் பாசுரங்களையும் தொழுது ஆடிப் பாடுதற்கு வல்லவர்கள் துக்கத்தின் சுவபாவமும் இல்லாதவர்களாவர் என்றவாறு.

வி - கு:—தொழுது ஆடித் தீர்ந்த சடகோபன் என்றும், வழு வாத தொல்புகழையுடைய சடகோபன் என்றும் தனித்தனியே கூட்டுக. பாடவல்லார் துக்கம் இலர் என்க. சீலம் - சுவபாவம்.

ஈடு:—முடிவில், [1]இத்திருவாய்மொழியை மனப்பூர்வகமாகக் கற்கவல்லவர்கள், தாம் பிரிந்து பட்ட வியசனம் படாமல் பலத்திலே சேர்வர் என்கிறார்.

தொழுது ஆடித் தூ மணி வண்ணனுக்கு ஆட்செய்து நோய் தீர்ந்த - இதற்கு, "மோஹித்தவள் சிறிது தெளிந்த வாறே, 'மோர்க்குழம்பு குடித்தாள், தரித்தாள், கண்விழித் தாள், வார்த்தை சொன்னாள்' என்பார்களே யன்றோ? அது போன்று காணும்" என்று அம்மங்கி அம்மாள் பணிப்பர். [2]முன்பு பிறந்த மிகுந்த மயக்கத்தாலே பிறந்த உணர்த்தியைக் குவாலாகச் சொல்லுகிறது. மேல் "சீல மில்லாச் சிறியன்" என்னும் திருவாய்மொழியாகையாலே, உணர்ந்து கூப்பிட வேண்டுமளவே பிறந்தது. [3]இந்தத் தோழி தானும் அறிந் திலள் காணும் பகவானுடைய பிரபாவத்தை. அவர்களை 'ஏத்துங்கோள்' என்றாளே யன்றோ? அதுவேண்டாதே, தான் 'ஏத்துங்கோள்' என்ற இதுதானே அமைந்தது இவள் உண

---

1. பாசுர முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். "தொழுதாடிப் பாடவல்லார்" என்றதனை நோக்கி 'மனப்பூர்வகமாகக் கற்க வல்லவர்கள்' என்கிறார்.

2. 'மயக்கம் நீங்கிய தன்மையைக் குவாலாகச் சொல்லுகிறது' என்பது அம்மங்கியம்மாள் திருவுள்ளம். "தொழுதாடித் தூமணி வண்ணனுக்கு ஆட் செய்து நோய் தீர்ந்த" என்று, பாசுரம் தெளிவின் மிகுதியைக் கூறாநிற்க, 'சிறிது தெளிந்தமையைக் குவாலாகச் சொல்லுகிறது' என்று அம்மங்கி அம்மாள் நிர்வஹிப்பதற்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார். 'மேல் "சீல மில்லா"' என்று தொடங்கி.

3. "ஏத்துமின்" என்றதன்பின்னர், அவர்கள் ஏத்தாதிருக்கவும் இப் பாசுரத்தில் "தொழுதாடி" என்கையாலே, பலித்த அர்த்தத்தை அருளிச் செய்கிறார் 'இந்தத் தோழி தானும் என்று தொடங்கி.

ருகைக்கு. [1]பகவானுடைய பிரபாவம் புறம்புள்ளார்க்கு அறிய ஒண்ணாததைப் போன்று, உட்புகுந்தாராய் அறிந்தாரா யுள்ளவர்கட்கும் 'இவ்வளவு' என்று அறிய ஒண்ணாததாய்க் காணும் இருப்பது. வழுவாத தொல் புகழ் - வழுவாத தொல் புகழாவது, மயங்கிக் கிடக்கிற நிலையிலும் வேறு தெய்வங்களின் சம்பந்தமும் அத் தெய்வங்களின் அடியார்களுடைய சம்பந்தமும் சத்தயா விநாசத்திற்கு ஏதுவாய், அவ்வாறு மயங்கிக் கிடக்கிற நிலையிலும் பகவானுடைய திருப்பெயரும் அவன் அடியார்களுடைய சம்பந்தமும் சத்தயா தாரகமுமாம்படியான ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயிலே நிலைநின்ற புகழ். ஒருவன் வைஷ்ணவனாகையாவது, [2]இது. 'சர்வேசுவரன் ரக்ஷகன்' என்று ஒருவன் பக்கலிலே ஒரு வார்த்தை கேட்டு விட்டு, வேறு தெய்வங்களின் சம்பந்தமும் பாகவதரல்லாதார் சம்பந்தமும் உண்டாகுமேயானால் வைஷ்ணவனாவதற்கு விரகு இல்லை கண்டீர். [3]முன் பகுதியை அநுசந்தித்தால் இத் தலையால் ஒரு துரும்பு

---

1. பகவத் பிரபாவம் உட்புகுந்த தோழிக்கும் அறிய ஒண்ணாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பகவானுடைய பிரபாவம்' என்று தொடங்கி.

சத்தயா - வஸ்துக்களினுடைய தன்மையால்.

2. 'இது' என்றது, மேலே கூறியதனைச் சுட்டுகிறது. 'இது' என்கிற நிர்ப்பந்தம் எது? என்ன, இதனை, வியதிரேகத்தால் சாதிக்கிறார் 'சர்வேசுவரன்' என்று தொடங்கி. ஒருவன் பக்கலிலே - ஆசாரியன் பக்கலிலே. 'ஒரு வார்த்தை' என்றது, த்வயத்தின் அர்த்தத்தையாதல்; சரமஸ்லோகத்தின் அர்த்தத்தையாதல்.

3. பிரபந்நனுக்கு, வேறு தெய்வங்களின் சம்பந்தத்தையும் பாகவதர்கள் அல்லாதாருடைய சம்பந்தத்தையும் நீக்காத அன்று வைஷ்ணவத்வம் இல்லை என்றார். இனி, பிரபந்நனுக்கு, தேவதாந்தர சம்பந்தம் தியாஜ்யமானாற் போன்று, வேறு உபாயங்களின் சம்பந்தத்தையும் நீக்கவேண்டும் என்று கூறத் திருவுள்ளம்பற்றி, இப்படியானல், எல்லாக் கர்மங்களுக்கும் யோக்யதாபாதகமான (வேறு சத்கர்மங்களைச் செய்வதற்குத் தகுதியை யுண்டாக்கக் கூடிய கர்மங்கள்; என்றது, சந்தியாவந்தனம் முதலிய கர்மங்கள்.) நித்திய நைமித்திகங்களும் திவ்ய தேசவாசம் முதலானவைகளும் தியாஜ்யமாகாதோ? என்ற சங்கையைத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'முன் பகுதியை' என்று தொடங்கி. 'முன் பகுதி' என்றது, த்வயம் அல்லது, சரமஸ்லோகத்தினுடைய முதல் அடியினை. 'ஸ்ரீமந் நாராயண னுடைய திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன்' என்பது த்வயத்தின்

நறுக்கவும் பிராப்தி இல்லாதபடியாயிருக்கும்; [1] பின்பகுதியை நினைத்தால், இளையபெருமாளைப்போலே கண்ணுறங்கவும் விரகு இல்லையாயிருக்கும்; [2] "கழிவது ஓர் காத லுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதல்" என்றே யன்றோ இருப்பது. [3] 'ஸ்வரூபம் இது' என்று அறிந்தால் ஸ்வரூபத்திற்குத் தகுதி யான கைங்கரியமும் அதற்கு விரோதியானவற்றைக் காற் கடைக்கொள்ளுமதுவும் இல்லையாகில், ஞானம் பிறந்தது இல் லையாமித்தனையே யன்றோ. [4] இஃது இல்லையாகில், ஆழ்வார்

---

முற்பகுதியின் பொருள். 'எல்லாத் தர்மங்களையும் விட்டு என் ஒருவனையே சரணமாகப் பற்று' என்பது சரமஸ்லோகத்தின் முற்பகுதியின் பொருள். இதனை நோக்கியே 'இத்தலையால் ஒரு துரும்பு நறுக்கவும் பிராப்தி இல்லாதபடியா யிருக்கும்' என்கிறார்.

"கொடியாடு மணிமாட அயோத்தி மூதூர்
குடிதுறந்து திருவரங்கம் கோயில் கொண்ட
நெடியோனே அடியேனுன் முயற்சி யின்றி
நின்னருளே பார்த்திருப்பன் நீச னேனே.

என்ற திவ்விய கவியின் திருவாக்கை இங்கு அநுசந்திக்கத் தகும்.

1. 'பிற்பகுதியை நினைத்தால் இளையபெருமாளைப் போன்று கண் ணுறங்கவும் விரகு இல்லையாய் இருக்கும்' என்றது, 'ஸ்ரீமந் நாராயண னுக்கே எல்லா அடிமைகளையும் செய்யப் பெறுவேனாக வேணும்' என்ற துவயத்தின் பிற்பகுதியின் பொருளை நினைத்தால் எப்பொழுதும் இளைய பெரு மாளைப் போன்று அடிமை செய்துகொண்டே இருக்கவேண்டும் என்றபடி.

2. மேலதற்குப் பிரமாணம் காட்டுகிறார் "கழிவதோர்" என்று தொடங்கி. இது, திருவிருத்தம். 97. ஆக, இதுகாறும் என் சொல்லிய வாறோ? எனின், சாதனமாக நினைத்தால் எல்லாக் கர்மங்களையும் விடவேணும், சாத்யமாக நினைத்தால் எல்லாம் செய்யவேணும் என்ற உண்மையைக் கூறிய வாறு. "கர்மம் கைங்கர்யத்திலே புகும்" என்பது ஸ்ரீ பிள்ளைலோகாசாரியர் ஸ்ரீ ஸூக்தி.

3. 'வேறு தெய்வங்களின் சம்பந்தமும், அத்தெய்வங்களின் அடியார்க ளுடைய சம்பந்தமும் வைஷ்ணவனுக்குக் கூடாது' என்று கூறிய இது, ஆநு கூல்ய சங்கல்பம் முதலிய நற்குணங்களுக்கும் உபலக்ஷணம் என்று கொண்டு, இவையெல்லாம் வேண்டுமோ? ஒரே தடவை செய்யக் கூடியதான பிரபத்தி மாத்திரமே போதியதாகாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஸ்வரூபம் இது' என்று தொடங்கி. 'இது' என்றது, மேலே கூறிய 'அவனாலேயே காக்கப்படுகின்ற தன்மையை'ச் சுட்டுகிறது. 'ஞானம் பிறந்த தில்லையாம்' என்றது, பயனில்லாமையாலே, பிறந்த ஞானம் அஞ்ஞானத் திற்குச் சமம் என்றபடி.

4. வேறு தெய்வங்களினுடைய சம்பந்தமும், பாகவதர்கள் அல்லாதா ருடைய சம்பந்தமும் கொள்ளத் தக்கவை யல்ல என்பதற்குப் பிரமாணம் காட்டு வதற்குத் திருவுள்ளம்பற்றி அதற்கு அவதாரிகை இடுகிறார் 'இஃது இல்லை யாகில்' என்று தொடங்கி. என்றது, 'அநந்யார்ஹசேஷத்வமே ஸ்வரூபம்' என்று அறிந்து விலக்கவேண்டியவற்றை விலக்காதபோது ஞானம் பிறந்த தில்லை, ஆழ்வார்கள் போனவழியில் சேர்ந்தவனும் ஆகான் இத்தனை என்ற படி.

கள் போனவழியிலே சேர்ந்திலனுமித்தனையன்றோ? [1] "திருவடிதன் நாமம், மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்றும், [2] "திருவில்லாத், தேவரைத் தேறேன்மின் தேவு" என்றும், [3] "எண்ணாத மானிடத்தை எண்ணாதபோது எல்லாம் இனியவாறே" என்றும், [4] "பேராளன் பேரோதும் பெரியோரை ஒரு காலும் பிரிகிலேனே" என்றுமன்றோ இவர்கள்படி. [5]பல காலங்களாக இவன் சூழ்த்துக்கொண்ட பாவங்கள் போகையும், நித்திய கைங்கர்யம் பெறுகையுமாகிற இப் பேற்றுக்கு இவ்வளவாகிலும் செய்யாதிருக்க விரகு உண்டோ?

வழுவாத ஆயிரத்துள் இவை பத்து வெறிகளும்-இவ்வாத்மாவுக்கு அறிய வேண்டிய அர்த்தங்களில் ஒன்றும் தப்பாதபடி சொன்ன வெறி விஷயமான இப் பத்தும். "வெறிவிலக்கு" என்று ஒருதுறை யுண்டு; அதாவது, விரஹசுரத்தாலே நோவுபடுகிறவளுக்கு ஆடு அறுப்பது, கள் உகுப்பது, பலியிடுவதாகப் பரிஹரிக்கப் புக, தோழியானவள், 'இது ஒரு விஷயத்தில் பாவபந்தம் அடியாக வந்த நோயாயிற்று, மற்றொன்றால் அன்று' என்று அவர்கள் செய்கின்றவற்றை விலக்குவது. தொழுது ஆடிப் பாட வல்லார் - பெண்பிள்ளையினுடைய மோஹம் தீர்ந்தால் பந்துக்களுக்குள்ள பிரியம் 'இது கற்றார்க்கும் உண்டு' என்று இருக்கிறாராயிற்று இவர். துக்கசீலம் இலர்களே - மோஹித்தவிடத்து வேறு தெய்வங்களினுடைய சம்பந்தம் உண்டாகையும், பாகவத சம்பந்தம் இன்

---

1. ஆழ்வார்கள் போனவழி எது? என்ன, "திருவடி" என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, நான்முகன் திருவந். 68.

2. நான்முகன் திருவந். 53.

3. பெரிய திருமொழி. 11. 6: 7.

4. பெரிய திருமொழி. 7. 4: 4.

5. ஆபிமுக்ய (அநுகூலமாயிருக்கை) மாத்திரம் செய்யலாமே ஒழிய, சொரூபத்திற்குத் தகுதியான கைங்கர்யமும் அதற்கு விரோதமாக உள்ளவற்றை விலக்குதலும் வேண்டினால், பிரபத்தியும் மற்றைச் சாதனங்களைப் போன்று செய்தற்கு அரியதாய் இராதோ? 'எளிதானது' என்றல் யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பல காலங்களாக' என்று தொடங்கி. 'இவ்வளவாகிலும்' என்றது, விரோதிகளாயுள்ளனவற்றை விலக்குதலைக் குறித்தபடி.

றிக்கே ஒழிகையுமாயிற்று, துக்கமாவது. அஃது இல்லாமையே ஸ்வபாவமாகவுடையராவர். சீலம் - ஸ்வபாவம். (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

தீர்ப்பார் இலாதமயல் தீரக் கலந்தமால்
ஓர்ப்பாது மின்றி உடன்பிரிய—நேர்க்க
அறிவழிந்துற் ருரும் அறக்கலங்கப் பேர்கேட்டு
அறிவுபெற்ருன் மாறன் சீ லம்.

---

ஆழ்வார் எம்பெருமானர் சீயர் திருவடிகளே அரண்.

---

## ஏழாந் திருவாய்மொழி - "சிலமில்லா"

### முன்னுரை

---

ஈடு:—[1] "காற்றாலும் வெயிலாலும் அடிபட்டு உலர்ந்த பயிரானது, மழை பெய்தவாறே பச்சை பெற்றுப் பருவம் செய்வது போன்று, மகிழ்ச்சி யடைந்தாள்" என்கிறபடியே, மழை பெய்தால் பயிர் பருவம் செய்வது தன் உணர்த்தியால் அன்றே? அப்படியே, திருநாமப் பிரசங்கத்தால் இவர் உணர்ந்தார். ஆயின், மேல் திருநாமப் பிரசங்கம் உண்டோ? எனின், "வண் துவராபதி மன்னனை ஏத்துமின்" என்று [2] அமிருத சஞ்சீவினியான திருநாமப் பிரசங்கம் உண்டாயிற்றே யன்றோ? அந்தத் திருநாமப் பிரசங்கமே குளிர்ந்த உபசாரமாக உணர்த்தி உண்டாயிற்று. [3] அதனால் பெற்ற பலம், முன்புத்தை மயக்கத்தையும் இழப்பதற்கு உறுப்பானது இத்தனை. [4] மயங்கியிருக்கும் நிலையில் நினைவு இல்லாமையாலே கிலேசம் இல்லை; பிறந்த உணர்த்தி பேற்றுக்குக் காரணம் அல்லாமையாலே கிலேசத்தை விளைக்க, அதனாலே கூப்பிடுகிறார். [5] உறக்கத்தில் பசி பொறுக்கலாம்; உறக்கத்தினின்றும் உணர்ந்

---

1. மேல் திருவாய்மொழி மயக்கமாயிருக்க, இந்தத் திருவாய்மொழியில் உணர்த்தி வருகைக்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் "காற்றாலும்" என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. சுந். 29 : 6. 'மகிழ்ச்சியடைந்தாள்' என்றது, பிராட்டியினை.

2. அமிருத சஞ்சீவினி - உயிர் தரும் ஒரு மூலிகை.

3. பசியன் உண்ணுமாறுபோன்று, உணர்ச்சி பெற்றால் அநுபவிக்குமத்தனையன்றோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அதனால் பெற்ற பலம்' என்று தொடங்கி.

4. ஆயின், உணர்வுபெற்ற நிலையைக் காட்டிலும் மயங்கியிருக்கும் நிலை நல்லதோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மயங்கியிருக்கும்' என்று தொடங்கி.

5. 'மயங்கியிருக்கும் நிலை நன்று' என்பதற்குத் திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'உறக்கத்தில்' என்று தொடங்கி.

தால் உண்டன்றி நிற்க ஒண்ணாதே யன்றோ? [1]உணர்ந்த பின்னர் பொறுக்க ஒண்ணாதபடி தமக்குப் பிறந்த அலாப கிலேசத்தை நினைத்து, அவன் ஆபத்துக்கு உதவும் சுவ பாவனாயிருக்கிற படியையும், ஆபத்துக்கு நிதானம் அறிந்து அதனைப் போக்குவதில் வல்லன் என்பதனையும் நினைத்து, ஆபத்துக்கு உதவுகைக்குத் தகுதியான சம்பந்தத்தை யுடைய வனாவது, பிரிந்தால் பொறுக்கவொண்ணாத படியான வடி வழகை யுடையவனாவது, ஆபத்துக்களிலே விரோதியைப் போக்கி உதவுகைக்குத் தகுதியான சக்தியை யுடையவனாவது, அதற்குத் தகுதியான சாதனங்களை யுடையவனாவது, வரை யாதே எல்லாரையும் ஒக்க ரக்ஷிக்க வல்லவனாவது, இப்படி யிருக்கத் தம் ஆற்றாமைக்கு உதவக் காணாமையாலே, பரம பதத்திலே யிருந்தானாகிலும் அவ்விருப்பு நிலைகுலைந்து வந்து முகங் காட்டும்படி துக்கத்தாலே நிரம்பியது ஒரு கடல் கை யெடுத்துக் கூப்பிட்டாற்போலே, கேட்டார் அனைவரும் நீரா கும்படி கூப்பிடுகிறார். [2]"ஓ கௌசல்யே! ஓ சுமித்திரே! ஓ ராமா! ஓ இலக்ஷ்மணா!" என்றாற்போலேயும், ஸ்ரீகௌசல்யையார்

---

1. 'அதனாலே கூப்பிடுகிறார்' என்றதனை விரித்து அருளிச்செய்கிறார் 'உணர்ந்தபின்னர்' என்று தொடங்கி. இத்திருவாய்மொழியில் வருகின்ற "ஞாலமுண்டாய்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'ஆபத்துக்கு உதவும் சுவபாவன்' என்கிறார். "ஞானமூர்த்தி" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'ஆபத்துக்கு நிதானமறிந்து' என்கிறார். "நாராயணா" என்றதனைத் திருவுள் ளம்பற்றிச் 'சம்பந்தத்தை யுடையவனாவது' என்கிறார். "கோலமேனி" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'வடிவழகை யுடையவனாவது' என்கிறார். "ஆழ்கடலைக் கடைந்த துப்பனே" என்றதனைத் திருவுள்ளம்பற்றித் 'தகுதி யான சக்தியையுடையவனாவது' என்கிறார். "அடலாழியானே" என்றதனைத் திருவுள்ளம்பற்றித் 'தகுதியான சாதனங்களையுடையவனாவது' என்கிறார். "வையங்கொண்ட வாமனாவோ" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'வரையாதே' என்கிறார். "வள்ளலேயோ! வாமனாவோ!" என்பனவற்றைத் திருவுள்ளம் பற்றிக் 'கூப்பிடுகிறார்' என்கிறார். அலாப கிலேசம் - கிடைக்கப் பெறாமையால் உண்டான துக்கம்.

2. பிரிந்து ஆற்றாமையாலே கூப்பிடுவதற்கு இரண்டு திருஷ்டாந்தம் காட்டுகிறார் "ஓ கௌசல்யே!" என்று தொடங்கி. முன்னையது, பெருமாளைப் பிரிந்த பிராட்டி கூப்பிட்டது. இது, ஸ்ரீராமா. சுந். 28: 8. பின்னையது, பெருமாளைப் பிரிந்த ஸ்ரீகௌசல்யையார் கூப்பிட்டது. இது, ஸ்ரீராமா. அயோத்.

பெருமாளைப் பிரிந்த ஆற்றாமையாலே "பிரியேதி புத்ரேதிச ராகவேதிச" என்று கூப்பிட்டாற்போலேயும் இவரும் கூப்பிடுகிறார்.

"ததாபி ஸூதேந" என்ற சுலோகத்திற்கு வியாக்யாதா அருளிச்செய்த பொருள் வருமாறு:—"ஸ்ரீ கௌசல்யையார் பெருமாளைப் பிரிந்த ஆற்றாமையாலே கூப்பிட, ஸ்ரீசுமந்திரன் 'அவரைப் பிரிந்தோம் என்று கூப்பிட வேண்டா காணும், தாமே வந்து புகுவர் காணும்' என்று தேற்றினான். ஸூதேந - சொன்ன வார்த்தை 'ஆப்தம்' என்று கைக்கொள்ளவேண்டும்படி அந்தரங்கனவது, சாரதிகள் சொல்லுவனவெல்லாம் ஆப்தமிறே. சுயுக்தவாதிநா - அஃது இல்லையே யாகிலும் வார்த்தையைக் கேட்டால் 'இது அப்படியே' என்று நம்பி ஓடுகிற சோகம் தீரும்படி வார்த்தை சொல்ல வல்லனவது. நிவார்யமாணு - இவனாலே 'இது வேண்டா' என்று தடுக்கப்படா நிற்கச் செய்தேயும். சுதசோக கர்சிதா - இப்படி[1] இவனைப் போரப் பொலியச் சொல்லுங்காட்டில் நீங்காதேயன்றே, இவள் பிரிந்த விஷயத்தில் ஆற்றாமை. நெடுநாள் கூடிப் பெற்ற பிள்ளையைப் பிரிந்தால் தரிக்கப்போகாதிறே. நசைவ தேவீ விரராம கூஜிதாத் - பிறர் கண்ணீரையும் மாற்றி, இதற்கு முன்பு சோகமும் புதியது உண்ணாதே போந்தவள், கூப்பிடுகிற கூப்பீட்டினில் நின்றும் ஓவிற்றிலள்; கூப்பிடுகிறபோது தான் கேட்டார்க்கு அடைய இரக்கம் பிறக்கும்படி குயில்கூவினாற்போலே காணும் கூப்பிடுவது. கூப்பிட்ட பாசுரம், பிரியேதி புத்ரேதிச ராகவேதிச - பிரிந்தால் தரிக்க ஒண்ணாதபடி எனக்கு இனியவரே! உம்மைப் பிரிந்தாருடைய ஆற்றாமைக்கு நிவர்த்தகரானவரே! சர்வரக்ஷகர் குடியிலே பிறந்து பெற்ற தாயை நலியலாமோ! என்று அவள் கூப்பிட்டாற்போலே இவரும் கூப்பிடுகிறார்.

---

399

சில மில்லாச் சிறிய னேலும் செய்வினை யோபெரிதால்
ஞால முண்டாய்! ஞான மூர்த்தி! நாராயணா! என்றென்று
காலந் தோறும் யானி ருந்து கைதலை பூசலிட்டால்
கோல மேனி காண வாராய் கூவியும் கொள்ளாயே.

பொ - ரை:—உலகத்தை யெல்லாம் உண்டவனே! ஞானத்தையே வடிவாக வுடையவனே! நாராயணனே! என்று என்று யான்

---

1. இவனை - சுமந்திரனை.

இங்கே இருந்துகொண்டு காலமெல்லாம் கையைத் தலையிலே குவித்துக்கொண்டு அழைத்தால், அழகிய உன் திருமேனியைக் காணும்படி வருகின்றாயில்லை; நீ இருக்குமிடத்திற்குக் கூவிக்கொள்ளுகின்றாயும் இல்லை; ஆதலால், யான் நல்லொழுக்கம் இல்லாத சிறியேனாயினும் என்னால் செய்யப்பட்ட பாவங்கள் மிகமிகப் பெரியனவாக இருக்கின்றன என்கிறார்.

வி - கு :—சீலம் - ஒழுக்கம். ஓகாரம் : துக்கத்தின் மிகுதிப்பொருளைக் காட்டுவதோர் இடைச்சொல். பூசலிடல் - அழைத்தல். பூசல் - ஒலி. வாராய் கொள்ளாய் என்பன : எதிர்மறை முற்றுக்கள். கூவியும் கொள்ளாய் ; ஆதலால், செய்வினை ஓ பெரிது எனக் கூட்டுக.

இத் திருவாய்மொழி, அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

ஈடு :—முதற்பாட்டு. [1]நெடுங்காலம் கூப்பிடச் செய்தேயும், அங்கீகரியாதபடியாக நான்செய்த பாவங்களின் மிகுதி இருக்கிறபடி என்னே! என்கிறார்.

சீலம் இல்லா - சீலம் - நன்மை. அதாவது, நல்லொழுக்கம். நல்லொழுக்கத்தை, சீலம் என்னக்கடவதன்றோ? இப்போது நன்மை இல்லாவிட்டால், மேல் ஒரு நன்மையையுண்டாக்கிக் கொள்ளுகைக்கு ஓர் இடமும் இல்லை கண்டீர் என்கிறார் மேல்: சிறியனேலும் - [2]ஆத்மா அணுவாய், ஞானம் விபுவாயன்றோ இருப்பது; ஆற்றாமையாலே ஞானஒளி அடங்கி, ஆத்ம சத்பாவமேயாயிற்றுக் காணும். [3]இப்போதும் ஒரு நன்மையின்றிக்கே, மேலும் ஒரு நன்மையைச் சம்பாதித்துக் கொள்ளுவதற்கு இடம் இல்லாதபடி சிறியனாயிருந்தேனேயாகிலும். செய்

1. "காலந்தோறும் யான் இருந்து கைதலை பூசலிட்டால், கூவியும் கொள்ளாய், செய்வினையோ பெரிதால்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'ஆத்மா அணு அளவினது' என்பது எல்லார்க்கும் ஒவ்வாதோ? "சிறியன்" என்றதனால் இவருக்கு வாசி ஏது? என்ன, இங்குச் "சிறியன்" என்கிறது, அணுத்வமன்று; ஞான சூக்ஷ்மத்தை என்கிறார் 'ஆத்மா' என்று தொடங்கி. என்றது, அல்லாதார்க்கு ஆத்மா அணுவாகிலும் ஞான வைபவமாகிலும் உண்டே? அதுவும் தமக்கு இல்லை என்கிறார் என்றபடி. இதனால், சொரூப சங்கோசம் சொல்லுகிறதன்று; ஞான சங்கோசத்தை நோக்கிச் "சிறியன்" என்கிறார் என்றபடி. சத்பாவம் - உண்மை.

3. "சிறியன்" என்பதோடு "சீலமில்லா" என்றதனையும் கூட்டிப் பாவம் அருளிச்செய்கிறார் 'இப்போதும்' என்று தொடங்கி.

வினைஓ பெரிது -[1] செய்த பாவத்தைப் பார்த்தவாறே, சித்து அசித்தொடு ஈசன் என்று செப்புகின்ற மூவகைத் தத்துவங்களையும் விளாக்குலை கொள்ளும்படி பெருத்திருந்தது. அன்றிக்கே, சம்சாரிகளுடைய குற்றங்களைப்பொறுக்கும் ஈசுவரனுடைய குணங்களைக் காட்டிலும், அவன் தந்த மதி நலன்களைக் காட்டிலும் பெரிதாயாயிற்று இருக்கிறது என்னுதல். [2] அந்த ஞானமும் அகிஞ்சித்கரமாய், அந்தக் குணங்களும் நடையாடாநிற்கச்செய்தே யன்றோ பாவம் தொடர்கிறது. [3] உலகத்தில் பெரியது தத்துவத்திரயமாயிற்று; அவற்றிலும் பெரியதாயிற்று இவருடைய ஞானம்; இதனையும் விளாக்குலை கொள்ளும்படி காணும் பாவத்தின் பெருமை இருப்பது. செய்வினை-இவைதாம் ஈசுவரனைப்போலே சங்கல்பத்தாலே உண்டாக்கப்பட்டனவல்ல வாதலின், '**செய்வினை**' என்கிறது. இவையடையச் செய்து அற்றவையே யன்றோ என்றபடி. ஓ-[4] இஃது என்ன ஆச்சரியம்! அன்றிக்கே, துக்கத்தின் மிகுதியைக் குறிக்க வந்ததாதல். திருநாமப் பிரசங்கத்தாலே உணரும்படி

---

1. இதைக் காட்டிலும் பெரிது என்னாது, பொதுவாகப் "பெரிதால்" என்கையாலே, அதனை விரித்து அருளிச்செய்கிறார் 'செய்த' என்று தொடங்கி.

2. "பெரிது" என்று அறிந்தபடி யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அந்த ஞானமும்' என்று தொடங்கி. அகிஞ்சித்காம்-பயனற்றுப்போதல்.

3. குணங்களிலும் பெரிது என்றால் போராதோ? மதி நலன்களைக் காட்டிலும் பெரிது என்றால் பாவங்களின் மிகுதி தோன்றும்படி யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உலகத்தில்' என்று தொடங்கி. தத்துவத் திரயம் - சித்து அசித்து ஈசுவரன்.

இவ்விடத்திலே முதலிகள், மேலே "சிறியன்" என்கையாலே, ஞான ஒளி அடங்கிற்று என்று ஞான சங்கோசம் சொல்லப்பட்டதன்றோ? அங்ஙனமிருக்க, 'மதிநலன்களைக் காட்டிலும்' என்று ஞானம் இருப்பதாக அருளிச்செய்வது சேருமோ? என்று கேட்க, "'கேவலம் ஒன்றுமில்லை' என்கிறதன்று; அவனைப் பெறுகைக்கு உறுப்பாயிருப்பதொரு சாதன அநுஷ்டானம் செய்கைக்கு ஈடான ஞானம் இல்லை; அவன் மயர்வற தந்த மதிநலமாகிய பக்தி ரூபாபந்ந ஞானம் உண்டு" என்று அருளிச்செய்வர். இல்லையாகில், கூப்பிடக்கூடாதே யன்றோ?

4. ஆஸ்ரயத்தின் சிறுமையையும் பாபத்தின் பெருமையையும் பார்த்து 'இஃது என்ன ஆச்சரியம்' என்றும், 'துக்கத்தின் மிகுதியைக் குறிக்க வந்ததாதல்' என்றும் அருளிச்செய்கிறார். இவை, ஓகாரத்தின் பொருள்.

யானராகில் இவர்க்குப் பாவமாவது என்? என்னில், அப்படி, தம்முடைய இருப்புக்குத் தாரகமாயுள்ள சர்வேசுவரனை இப்போது விரும்பியவாறே அநுபவிக்கப் பெறுமையாலே இழக்கைக்குக் காரணம் பாபமே யன்றோ? [1] "மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித்-என்னுடைய தீய செயலே" என்றாளேயன்றோ பிராட்டியும். என்றது, என் சொல்லியவாறோ? எனின், பகைவர்கள் கூட்டத்தை அடியோடு அழித்து என்னைக் காப்பதற்குத் தகுதியான ஆற்றலையுடையவராவது, இதற்கு முன்னரெல்லாம் பகைவர்கள் மண்ணுண்ண வளர்ந்து போந்தவர்களாவது, நான்தான் தங்களை அழிய மாறியும் பாதுகாக்க வேண்டும்படி துன்பத்தை யுடையவளாயிருப்பது; இப்படியிருக்க, அவர்கள் என்னைப் பார்த்துத் திருவருள் புரியாதிருந்தார்கள்; இதற்குக் காரணம், அவர்கள்பக்கலிலேயாதல் என்பக்கலிலேயாதல் ஆகவேணுமேயன்றோ? ஆயின், அவர்கள்பக்கல் ஒரு கண்ணழிவு சொல்லலாயிருந்ததில்லை; இனி, என்னுடைய பாபமேயாமித்தனையன்றோ என்கிறாள் என்றபடி. நாம்தாம் எல்லாம் அறிகைக்கு முற்றறிவினர்கள் அல்லோமேயன்றோ? அறியாதிருப்பது ஏதேனும் ஒன்று உண்டாக வேணுமே யன்றோ? என்பாள் "கிஞ்சித்" என்கிறாள். [2] காரியத்தைக் கொண்டு காரணம் கல்பிக்கப்படுவது உண்டேயன்றோ?

ஞாலம் உண்டாய் - [3]'தங்கள் தங்களுடைய முயற்சியாலே பேறு' என்றிருப்பவர்கள், பாவங்களின் மிகுதியை நினைத்

---

1. விரும்பியவாறே அநுபவிப்பியாமை அவன் குற்றமாயிருக்க, இப்படித் தம் குற்றமாக நினைத்தபேர் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "மமைவ" என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா.சுந். 38 : 48. திருவடியைப் பார்த்துப் பிராட்டி கூறியது. ஷ சுலோகத்தில் வந்துள்ள "கிஞ்சித்" என்பதற்கு, ஒன்று என்று பொருள் கூறத் திருவுள்ளம்பற்றி, 'ஒன்று' என்கிறது என்? என்ற சங்கையிலே அருளிச்செய்கிறார் 'நாம்தாம்' என்று தொடங்கி.

2. 'ஒன்று உண்டு' என்று அறிந்தபடி எப்படி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'காரியத்தைக்கொண்டு' என்று தொடங்கி. ஒன்றாகிலும் சிறியதாகில் அதனைப் பரிஹரித்துக்கொள்ளலாகாதோ? என்ன, 'மஹத் - பெரியது' அதாவது, அவனுடைய கிருபையையும் தப்புவிக்கத் தக்கதாயிருப்பதொன்றுண்டு என்று பிராட்டி அருளிச்செய்தாற்போலே, இவரும் இழக்கைக்குக் காரணம் என் பாபமே யன்றோ என்கிறார் என்று மேலே கூட்டிக் கொள்க.

3. பாபம் அதிகமானால் பிராயஶ்சித்தம் செய்தாலோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தங்கள் தங்களுடைய' என்று தொடங்கி. என்றது, என் சொல்லியவாறோ? எனின், இவர்தாம் பிரபந்நராகையாலே, அவன் கைபார்த்திருக்குமவராகையாலே பிராயஶ்சித்தம் செய்ய மாட்டார் என்றபடி.

நால் பிராயஸ்சித்தம் செய்ய இழிவார்களத்தனையன்றோ? இவர் 'இதற்குப் பரிஹாரம் அவன் கையிலே' என்றேயன்றோ அறுதியிட்டிருப்பது; எப்போதும் [1] "கைகழலா நேமியான் நம்மேல் வினைகடிவான்" என்றேயன்றோ இவர் சொல்லுவது; [2] இதுதான் சுதர்சனமா யிருக்குமேயன்றோ? [3] "பகவானுடைய பலத்தினாலே பகவத் கைங்கர்ய ரூபமான கர்மங்களைச் செய்கிறேன்" என்ற ஜிதந்தா தோத்திரத்தையும் ஈண்டுக் காணல் தகும். ஆகையாலே, 'ஞாலம் உண்டாய்' என்று [4] அவன் படியை அநுசந்திக்கிறார். ஆயின், அப்படி அவன் படியை அநுசந்தித்துப் பயம் அற்றவர்களாய் இருந்த பேர் உளரோ? எனின், [5] "யானைகளையும் புலிகளையும் சிங்கங்களையும் கண்டு பிராட்டி பயப்படவில்லை" என்று ஸ்ரீ ராமாயணம் கூறுதலை ஈண்டு அநுசந்திக்கத் தகும். இனி, ஞாலமுண்டாய் என்றதனால், [6] 'இனிப் பரிஹாரம் இல்லை' என்னும்படியான ஆபத்துக்களிலே வந்து உதவுமவனன்றோ? பூமியாகப் பிரளயங் கொள்ளிலோ காக்கையாவது, எல்லார்க்கும் உண்டான ஆபத்து ஒருவனுக்கே உண்டானால் உதவலாகாதோ? தங்கள் தங்களுடைய ஆபத்தை அறிந்து கூப்பிடாதார்க்கோ உதவலாவது? ஆபத்து அறிந்து கூப்பிடுவார்க்கு உதவோம் என்னும் நிர்ப்பந்தம் உண்டோ? என்கிறார் என்னுதல். அன்

---

1. 'அவன் கையிலே பரிஹாரம்' என்று அறுதியிட்டிருப்பர் என்னுமதற்குப் பிரமாணம் "கைகழலா" என்ற திருப்பாசுரம். இது, பெரிய திருவந்தாதி. 87.

2. 'இதுதான்' என்று தொடங்கும் வாக்கியம் சிலேடை. இதுதான் - இவ்வாறு அறுதியிடுவதுதான். சுதர்சனமாயிருக்கும் - மங்களம் பொருந்திய மதமாயிருக்கும் என்றும், 'ஈசுவரனே ரக்ஷகன்' என்கிறது நல்ல ஞானமாயிருக்கும் என்றும் பொருளாம்.

3. அவன் கையிலே பரிஹாரம் என்பதற்கு வேறும் ஒரு பிரமாணங் காட்டுகிறார் 'பகவானுடைய' என்று தொடங்கி.

4. அவன்படியை - அவனுடைய சக்தியோகத்தை.

5. ஸ்ரீராமா. அயோத். 62 : 20.

6. இப்படிக் கனத்த பாவத்தைப் பண்ணினீராகில் நம்மால் ரக்ஷிக்கப் போமோ? என்ன, மீண்டும் வேறு ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'இனிப் பரிஹாரம்' என்று தொடங்கி. "ஞாலம்" என்ற சொல்லிற்கு பாவம் 'தங்கள் தங்களுடைய' என்று தொடங்கும் வாக்கியம்.

றிக்கே, [1] பிரளயத்தால் கொள்ளப்பட்ட பூமி, தன்னைத் தானே எடுக்க முயற்சி செய்யுமன்றேயன்றோ தாங்கள் தாங்கள் செய்த கர்மங்களைத் தாங்கள் தாங்களே போக்கிக்கொள்ளத் தகுதியுள்ளது; சம்பந்தமும் ஆபத்தையுடையவராகையுமன்றோ உனக்குக் காப்பாற்றுவதற்கு வேண்டுவது என்கிறார் என்னுதல்.

நாம் உதவி செய்யும் தன்மையோமானாலும், பேறு [2] இத்தலையாலேயான பின்பு, பேற்றுக்குத் தகுதியான ஞானம் வேணுங்காணும் உதவும்போது என்ன, ஞானமூர்த்தி-நிதானமறிந்து பாவங்களைப் போக்குவதற்குத் தகுதியான ஞானத்தையே சொரூபமாக வுடையவனே! என்றது, என் சொல்லியவாறோ? எனின், [3] "ஆமாறு ஒன்று அறியேன் நான்", [4] "ஆமாறு அறியும் பிரானே" என்கிறபடியே, என்னை நித்திய சம்சாரி ஆக்கிக் கொள்ளுகைக்குத் தகுதியான ஞானமன்றோ என் கையிலுள்ளது; இதனைக் கழித்து என்னையும் நல்வழி போக்கும் ஞானமுள்ளது உன்கையிலேயன்றோ? என்கிறார் என்றபடி. மேலும், [5] "தேவரீரால் அறியப்படாத பொருள் ஒன்றுமில்லை" என்கிறபடியே, நான் அறிவது ஒன்றும் இல்லை. நீ அறியாதது ஒன்றும் இல்லை, நான் செய்யவல்லது ஒன்றும் இல்லை, நீ செய்யமாட்டாதது ஒன்றும் இல்லை, யார் காரியம் யாருக்குப் பரம்? [6] ஒருவனுக்குக் கண்தோற்றாதே காலும் நடைதாராதே இருந்தது; ஒருவனுக்குக் கண்ணும் தோற்றிக் காலும் நடைதருவதுமாயிருந்ததானால், யார்க்கு யார் வழிகாட்டிப் போவார்? என்கிறார்.

ஆபத்துக்கு உதவி செய்பவனுமாய், அறிந்து போக்குதற்குத் தகுதியான ஞானமும் உண்டானாலும் சம்பந்தமுள்ள விஷயங்களிலேயன்றோ உதவுவது? என்ன, நாராயணா - இப்

1. "நாராயணா" என்ற பதத்திலே நோக்காக பாவம் அருளிச்செய்கிறார் 'பிரளயத்தால்' என்று தொடங்கி. ஆக, "ஞாலமுண்டாய்" என்பதற்கு மூன்றுவகையான கருத்து அருளிச்செய்தபடி.

2. இத்தலையாலே - நம்மாலே; ஈசுவரனாலே என்றபடி.

3. திருவாய். 4. 9 : 2.

4. பெரியாழ். திரு. 2. 7 : 8.

5. ஜிதந்தா.

6. ஞானமுள்ளவன், ஞானமில்லாதவனுக்குக் காரியம் செய்ய வேணுமோ? என்ன, 'ஒருவனுக்கு' என்று தொடங்கி விடை அருளிச்செய்கிறார்.

படிக் காப்பதற்குச் சம்பந்தமுள்ளவனே! என்கிறார். [1] இது தான் சரீரமாயிருப்பதனால் சேஷமாயிருக்கிறது என்றே யன்றோ இத்தால் சொல்லுகிறது. [2] ஆனால், கேவலம் சரீரமோ சரீரியைப் பெறுகைக்கு முயற்சி செய்வது? உடையவன் அன்றோ உடைமை பெறுகைக்கு முயற்சி செய்வான். [3] என்று என்று - உபாயத்திற்கு உறுப்பான வாத்சல்யம் முதலிய குணங்களும், உபேயத்திற்கு உறுப்பான சேஷித்வம் முதலிய குணங்களும் நாராயண சப்தத்துக்கு அர்த்தமாகையாலே அவ்விரண்டனையும் பற்ற 'என்று என்று' என்கிறார். இனி, இவர்தாம் ஒரு பிரயோஜனத்திற்காக ஒருகால் சொல்லி, 'அது கைபுகுந்தது' என்று ஆறியிருக்குமவரல்லரே? [4] நம் உபாயத்தில் வர்த்தமானம்போலே இதுதான் பிரயோஜனமாயிருக்குமே இவர்க்கும்; ஆதலின், 'என்று என்று' என்கிறார் என்னுதல். "நமோ நாரணா என்று ஓவாதுரைக்கும் உரை" யன்றோ இதுதான்.

---

1. "நாராயணன்" என்றால், சம்பந்தத்தைச் சொல்லுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இதுதான்' என்று தொடங்கி. இத்தால் - நாராயண சப்தத்தால்.

2. இத்தால் பலித்தது எது? என்ன, 'ஆனால்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, நாராயண சப்தத்தை அன்மொழித் தொகையாகக் கொண்டு கூறும் பொருள்; 'உடையவன் அன்றோ உடைமை பெறுகைக்கு முயற்சிசெய்வான்' என்பது, அதனை வேற்றுமைத் தொகையாகக் கொண்டு கூறும் பொருள். ஆக, அன்மொழித் தொகையாகக் கொண்டு கூறும் பொருளில் சரீர சரீரி பாவ சம்பந்தமும், வேற்றுமைத் தொகையாகக் கொண்டு கூறும் பொருளில் ஸ்வஸ்வாமி பாவ சம்பந்தமும் பொருளாகக் கொள்க.

3. "என்று என்று" என்ற அடுக்குத் தொடருக்குக் கூறப்படும் பொருள் இரண்டனுள், பின்னையது இனிமையிலே நோக்கு. 'ஆறி இருக்குமவரல்லரே? ஆகையாலே, போக்யதையாலே பல்காலும் சொல்லுகிறார் என்றபடி.

4. ஆறியிராமைக்குக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நம் உபாயத்தில்' என்று தொடங்கி. என்றது, என் சொல்லியவாறோ? எனின், நம் உபாய வாசகமான த்வயம் என்னும் மந்திரத்தில் "பிரபத்யே - பற்றுகிறேன்" என்கிற வர்த்தமானம்போலே, இதுதான் பிரயோஜனமாயிருக்குமே இவர்க்கு என்றபடி. வர்த்தமானத்திற்கு அநேக அர்த்தம் உண்டானாலும் இவ்விடத்தில், இனிமையிலேயே நோக்கு. இனிமையாக இருக்கும் என்பதற்குப் பிரமாணம், "நமோ நாரணா" என்ற திருப்பாசுரம். இது, முதல் திருவந்தாதி. 95. இத்திருப்பாசுரத்தில் "ஓவாதுரைக்கும்" என்றதற்கு இரண்டு கருத்து. அதாவது, ஸஹஸ்ராக்ஷரீ மந்திர ஜபம்போலன்றிக்கே மூச்சுவிடாமல் சுலபமாக அநுசந்திக்கலாயிருக்கும் என்னுதல்; இனிமையாலே நித்யமாக அநுசந்திக்கப்படும் என்னுதல். இதுவே இங்கு வேண்டுவது. வர்த்தமானம் - நிகழ்காலம்,

காலந்தோறும் - [1] ஒரு காலத்திலே இதனையும் சொல்லி, வேறு ஒரு காலத்திலே 'வேறு ஒரு பொருள் வணங்கத் தக்கது' என்று அதிலே கால் வாங்குகிறேனோ? என்பார் '**காலந்தோறும்**' என்கிறார். யான் இருந்து - படுவன எல்லாம் பட்டும் நூறே பிராயமாக இருக்கவேணுமோ? [2] குணாதிக விஷயத்தைப் பிரிந்தால் முடியவொட்டாது, 'இன்னமும் காணலாமோ?' என்னும் நசை. கைதலை பூசல் இட்டால் - [3] தலையிலே கைவைத்தால் மெய் காட்ட வேண்டாவோ? அன்றிக்கே, தலையில் கைவைத்துக் கூப்பிட்டால் என்னுதல்; அன்றிக்கே, கையும் தலையுமான பூசல் மாறாதே ஒருபடியே இருந்தாலும் என்னுதல். கோல மேனி - [4] ஆசைப்பட்டார்க்கு அன்றாகில் அவ்வடிவு யார்க்கு? "உனது திருமேனியும் உனக்காகவன்று, பக்தர்களுக்காகவே" என்றேயன்றோ சாஸ்திரம் சொல்லுகிறது? [5] சேர்ந்து குளிர்ந்த தண்ணீரை விடாயர்க்கு எட்டாமல் வைப்பாரைப்போலே, வேட்டார்க்கு உதவாத

---

1. போக்யதையாலே விடமுடியாமையைத் தெரிவிக்கிறார் "என்று என்று" என்ற அடுக்குத் தொடரால் என்றார் மேல். இங்கு, அவனே சாதனமாக இருப்பதனாலும் விடமுடியாமையைத் தெரிவிக்கிறார் "காலந்தோறும்" என்றதனால் என்று கூறத் திருவுள்ளம்பற்றி, அதனை விளக்குகிறார் 'ஒரு காலத்திலே' என்று தொடங்கி. அயன சப்தத்தினுடைய கரணவியுத்பத்தியினாலே உபாயத்வமாகிய பொருளும் கிடைக்கும்.

2. இருந்து படுகிறது என்? முடிந்து பிழைக்க ஒண்ணாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'குணாதிக விஷயத்தை' என்று தொடங்கி.

3. "கைதலை பூசலிட்டால்" என்பதற்கு மூன்று வகையாகக் கருத்து அருளிச்செய்கிறார். முதல் கருத்து, பூசல் என்று பொருந்துதலாய், தலையிலே கைபொருந்தினால்; அதாவது, அஞ்சலி செய்தால் என்பது. இதனை அருளிச்செய்கிறார் 'தலையிலே' என்று தொடங்கி. 'மெய் காட்ட வேண்டாவோ?' என்றது, சிலேடை: "கோலமேனி" என்றதிலே நோக்கு. இரண்டாவது கருத்து, தலையிலே கையை வைத்துக் கூப்பிட்டால் என்பது; பூசலிடல் - கூப்பிடுதல். மூன்றாவது கருத்து, காலந்தோறும் இருந்து அஞ்சலி இட்டால் என்பது; அதாவது, இத்தலையில் அஞ்சலிமாறாமல் ஒருபடியே இருந்தால் என்றபடி. பூசல் - பொருந்துதல்.

4. "கைதலை பூசலிட்டால் கோல மேனி காணவாராய்" என்று கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'ஆசைப்பட்டார்க்கு' என்று தொடங்கி. "உனது திருமேனியும்" என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகம், ஜிதந்தா.

5. "வாராய்" என்ற துன்பமிகுதியினாலே பலித்த கருத்தை அருளிச்செய்கிறார் 'சேர்ந்து' என்று தொடங்கி.

தண்ணீராவதே! [1] "மரகத மணித்தடம்" என்னப்படுமவ னன்றோ அவன்? காண - கருமுகை மாலை தேடுவார், சூட அன் றிக்கே, சும்மாட்டைக் கொள்ளத் தேடுவர்களோ? [2] கிட்டினு லும் "ஸதாபஶ்யந்தி - எப்பொழுதும் பார்த்துக்கொண்டே யிருக்கின்றார்கள்" என்பதே யன்றோ? [3] "காரார் திருமேனி காணுமளவு" மே யன்றோ இங்கும்; "அழைப்பன் திருவேங்க டத்தானைக் காண" இத்தனையே யன்றோ? "என் கணவனைப் புண்ணியம் செய்த மகாபுருஷர்கள் பார்க்கிறார்கள்" என்கிற படியே, நாடாகக் கொள்ளை கொள்ளாநின்றது கண்டீர் என் றாளேயன்றோ பிராட்டியும். வாராய் - வருகின்றிலை; [4] வாரா யேயானல், விளைக்க ஒண்ணாதேயன்றோ. 'காண' என்றதனால் பலம் சொல்லிற்று; 'வாராய்' என்றதனால் உபாயம் சொல்லு கிறது. [5]அவ்வடிவைக்காணும்போது என்றும் அத்தலையாலே வரப்பெற இருக்கைபோலே காணும் முறை. நீ முறைசெய்யப் பார்த்திலையே யாகிலும் என் கிலேசம் தீரும் அத்தனையே எனக்கு வேண்டுவது என்கிறார். கூவியும் கொள்ளாயே - முறைகெட அழைத்தாகிலும் கொள்ளுகின்றிலை.

காலம்தோறும் யான் இருந்து கைதலை பூசல் இட்டால் கோலமேனி காண வருகின்றிலை, கூவியும் கொள்ளுகின்றிலை; இதற்குக் காரணம்,சிலமில்லாச் சிறியனே லும் செய்வினையோ பெரிதால் எனக் கூட்டுக. 'நாராயணன்' என்கையாலே,

---

1. அவன் தண்ணீர் ஆவனோ? என்ன, 'ஆவன்' என்பதற்குப் பிர மாணங் காட்டுகிறார் "மரகதமணி" என்று தொடங்கி. இது, திருவாய். 10 : 1 : 8.

2. காண்கையே பிரயோஜனமாக இருக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கிட்டினும்' என்று தொடங்கி.

3. பரமபதத்திலே சதாபஶ்யந்தியானலும், இங்குவேறேயும் சில இல் லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "காரார் திருமேனி" என்று தொடங்கி. இது, சிறிய திருமடல். 69. "அழைப்பன்" என்ற பகு தியையுடைய பாசுரம், நான்முகன் திரு. 'என் கணவனை' என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகம், ஸ்ரீராமா. சுக். 25 : 16.

4. இப்படிச் சொல்லுவான் என்? வரவேணும் என்று நிர்ப்பந்தித்தால் என்னை? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வாராயேயானல்' என்று தொடங்கி.

5. வருகின்றிலை என்பது என்? தாமே செல்ல ஒண்ணாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவ்வடிவை' என்று தொடங்கி. 'முறை' என்றது, அவன் தானே வந்து முகங்காட்டுதலை.

பிராப்யம் சொல்லிற்று; 'சிறியன்' என்கையாலே, ஜீவாத்ம சொரூபம் சொல்லிற்று; 'வாராய்' என்கையாலே, உபாயம் சொல்லிற்று; 'காண' என்கையாலே, பலம் சொல்லிற்று; 'செய்வினையோ பெரிதால்' என்கையாலே, விரோதி சொல்லிற்று; ஆக, ஐந்து பொருள்களும் இப்பாசுரத்திலே சொல்லப்பட்டன. (1)

400.

கொள்ள மாளா இன்ப வெள்ளம் கோதில தந்திடும்என்
வள்ள லேயோ! வையங் கொண்ட வாம னாவோ! என்றென்று
நள்ளி ராவும் நன்பகலும் நானிருந் தோல மிட்டால்
கள்ள மாயா! உன்னை என்கண் காணவந் தீயாயே.

பொ - ரை:—பூவுலகை அளந்துகொண்ட வாமனனே! குற்றமில்லாதனவும் அநுபவிக்க அநுபவிக்கக் குறைவு படாதனவுமான ஆனந்தக்கடலைக் கொடுக்கின்ற வள்ளலே! என்று என்று நள்ளிராவும் நன் பகலும் நான் இருந்து அழைத்தால், கள்ளமாயனே! உன்னை என் கண்கள் காணும்படியாக நடந்து வந்து திருவருள் புரிதல் வேண்டும் என்கிறார் என்றவாறு.

வி - கு:—'கோதில' என்பது, இன்பத்திற்கு அடைமொழி. கோதில்லாதனவும் கொள்ள மாளாதனவுமான இன்பம் என்க. கோது-குற்றம். நள் - செறிவு. வந்து ஈயாய் என்க. ஈயாய் என்பது விதிவினை; ஈதல் வேண்டும் என்பது பொருள். இனி, இதனை மறைவினையாகக் கொண்டு ஈகின்றிலை; கொடுக்கின்றிலை என்னலுமாம். ஓகாரங்கள் துக்கத்தின் மிகுதியைக் காட்ட வந்தன.

ஈடு:—இரண்டாம் பாட்டு. [1] முன்பு செய்த உபகாரங்களைச் சொல்லி, அப்படி உபகரித்து உன் இனிமையை அறிவித்து, இப்போது நான் கூப்பிட முகங் காட்டாதே எழவாங்கியிருத்தல் போருமோ? என்கிறார்.

கொள்ள மாளா இன்பவெள்ளம்-அநுபவிக்க அநுபவிக்கக் குறை பிறவாதபடியான ஆனந்த மாக் கடல்; [2] "வீவில்

---

1. "கொள்ள மாளா இன்ப வெள்ளம் கோதில தந்திடும்" என்றதனைக் கடாக்ஷித்து 'முன்பு செய்த உபகாரங்களைச் சொல்லி' என்றும், "ஈயாய்" என்றதனைக் கடாக்ஷித்து 'எழவாங்கியிருத்தல் போருமோ?' என்றும் அருளிச்செய்கிறார். எழவாங்கி - தூரப்போய்.

2. அவன்தான் இவர்க்கு ஆனந்தத்தைக் கொடுத்தானோ? என்ன, "வீவில்" என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, திருவாய். 4. 5: 3.

இன்பம் மிக எல்லை நிகழ்ந்தனன்" என்றதனைச் சொல்லுகிறார். கோது இல தந்திடும் - ஆனந்தத்திற்குக் கோது ஆகிறது, அநுபவித்தால் 'அமையும்' என்றிருத்தல், வேறு விஷயங்களிலே ஆசையையுண்டாக்குதல் செய்கை; இஃது அங்ஙனன்றிக்கே, அநுபவிக்க அநுபவிக்கத் தன் பக்கலிலே ஆசையைப் பிறப்பித்து, இதர விஷய வைராக்கியத்தையும் பிறப்பிப்பதான ஆனந்தமாதலின் 'கோதில' என்கிறார். ஆக, கோது இலவாய்க் கொள்ளக் கொள்ள மாளாதபடியான ஆனந்த வெள்ளத்தைத் தந்தவன் என்றபடி. என் வள்ளலேயோ - தருகிறபோது உன் பேறாக உபகரித்து, இப்போது என்னது பேறாக்கி, நான் கூப்பிட இருக்கிறாயே? வள்ளல் தனமாவது, தன் பேறாக உபகரித்தலே யன்றோ? [1] "ஆனந்தமய:", "ஆனந்தோ பிரஹ்ம" என்கிற தன்னை உபகரித்தபடியன்றோ? [2] இப்படி இப்போது கூப்பிடப் பண்ண நினைத்திருந்தால், "வீற்றிருந்தேழுல"கிலே அப்படி என்னை அநுபவிப்பிக்க வேணுமோ? என்கிறார். [3] சிறியதுக்கு இனியது இட்டுக்கெடுத்தான்காணும். [4] "சிறியன்" என்றாரே தம்மை. வையம் கொண்ட வாமனனோ - இரந்தார்க்குக் கொடுக்கைக்காக நீ இரக்குமவனன்றோ? 'மூன்று உலக ஆட்சியையும் இழந்தேன்' என்று காலிலே விழுந்த இந்திரனைக் கண்ணநீரை மாற்றுகைக்காக, திருமகள் கேள்வனான தன்னை இரப்பாளனாக்கினனே யன்றோ? என்றது, நீ இரந்து தருகை ஒழிய நான் இரந்து கூப்பிட இருப்பதே இப்போது! என்கிறார் என்றபடி.

என்று என்று - [5] இந்திரனைப் போன்று இராச்சியம் பெற்றுப் போகிறாரல்லர், மஹாபலியைப் போலே ஔதார்யம்

---

1. தன்பேறாக உபகரித்தது எதனை? என்ன, "இன்பவெள்ளம்" என்றதனைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் "ஆனந்தமய:" என்று தொடங்கி.

2. "வள்ளலேயோ!" என்றதனால் போதரும் மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இப்படி' என்று தொடங்கி.

3. மேற்பாசுரத்தில் "சிறியன்" என்றதனைக் கடாக்ஷித்து ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'சிறியதுக்கு' என்று தொடங்கி.

4. இவர்தாம் சிறியரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "சிறியன்" என்று தொடங்கி.

5. "என்று என்று" என்ற அடுக்குத்தொடருக்கு பாவம் அருளிச்செய்கிறார் 'இந்திரனைப்போன்று' என்று தொடங்கி. இதனையே - வாமன அவதாரத்தையே.

கொண்டாடிப் போகின்றார் அல்லர், எப்போதும் இதனையே சொல்லி. [1] வையங்கொண்ட பின்பும் வாமன வேஷமாயிற்று இவர் திருவுள்ளத்தில் ஊற்றிருந்தது; ஆதலின், '**வையம் கொண்ட, வாமனா!**' என்கிறார். நள் இராவும் - 'நள்' என்று நடுவாதல்; செறிவாதல்; இரவில் மற்றைய பொருள்களின் ஒலி மாறினால் வருவதொரு ஒலி யுண்டு, அந்த ஒலியாதல். எல்லாவற்றாலும் பலித்த பொருள், நடு இரவு என்பது. [2] "இந்தப் பூதங்கள் தூங்குகிறகாலத்தில் எவன் விழித்துக்கொண்டிருக்கிறானோ" என்கிறபடியே, நீ உணர்ந்து நோக்குங் காலத்திலே, நான் உணர்ந்து கூப்பிடும்படி செய்வதே! என்பார் '**நள்ளிராவும்**' என்கிறார். நன்பகலும் - "தீர்ப்பாரையாமினி" என்ற திருவாய்மொழியோடு "வீற்றிருந்தேழுலகு" என்ற திருவாய்மொழியோடு வேற்றுமை யற, பகவானுடைய சம்பந்தம் மாறாதே போருகையாலே '**நன்பகல்**' என்கிறார். [3] புறம்பு ஒரு விஷயத்தை அநுபவித்தால், காணாதபோது மறந்து வேறு ஒன்றிலேயும் நெஞ்சை வைக்கலாம்படி இருக்குமேயன்றோ? அவனைக் காணப் பெறாமையாலே சூந்யமான காலமாகையாலே, செவ்வாய்க் கிழமையை மங்களவாரம் என்னுமாறுபோன்று '**நன்பகல்**' என்கிறார் என்னலுமாம். நான் இருந்து - கூப்பிடுகைக்குச் சக்தன் அல்லாதபடி பலமற்றவனான நான் இருந்து. அன்றிக்கே, வீவில் இன்பம் மிக எல்லை நிகழ்ந்த நான் இருந்து என்னலுமாம். ஓலம் இட்டால் - கூப்பிட்டால். கள்ள மாயா-கண்களால் பார்க்கவொண்ணாதபடியாக்கி, நெஞ்சிலே மறக்கவொண்ணாதபடி செய்கிற ஆச்சரியத்தை யுடையவனே! உன்னை - கண்டல்லது தரிக்கவொண்ணாதபடியான வைலக்ஷண்யத்தையுடைய உன்னை; [4] "கோல

---

1. வையங்கொண்ட திரிவிக்கிரமன் என்னாது "வாமனா!" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'வையங்கொண்டபின்பும்' என்று தொடங்கி.

2. கடவல்லி உப. 2: 5.

3. பிரிவுகாலத்திலும் பகவத் சம்பந்தம் மாறாதே இருக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'புறம்பு ஒரு விஷயம்' என்று தொடங்கி. 'இருக்குமேயன்றோ' என்றது, அப்படி அன்றிக்கே, இந்த விஷயம் பிரிவு காலத்திலும் மறக்கப் போகாது என்றபடி.

4. அப்படி விலக்ஷணமோ திருமேனி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "கோலமேனி" என்று. இது, மேற்பாசுரத்தின் ஈற்றடி.

மேனி"யே யன்றோ? என் கண் காண - [1]விரும்பும் என் கண்கள் காணும்படி. வந்து ஈயாய் - [2]நடையழகு கண்டு வாழும்படி முன்னே நடந்து வந்து தரவேணும். அன்றிக்கே, "பிராட்டியைப் பிரிந்து ஒரு கணமும் ஜீவித்திருக்கமாட்டேன்" என்றும், "இப்படிப்பட்ட பிராமணர்கள் வந்து என்னைத் தஞ்சம் அடைந்தார்கள் என்பது எனக்கே நாணமாக இருக்கின்றது" என்றும் கூறும்படி யிருக்கையாலே, 'இவன் பக்கல் ஒருகுறை இல்லையாகாதே!' என்று தோற்றும்படி யாயிற்று வருவது. [3]உன்னை நீயே கொண்டுவந்து தரவேணும். [4]தந்தேர்மே-அல்லாதார் இப்படிக் கூப்பிடாதிருக்க, உம்மை நம்மையே சொல்லிக் கூப்பிடச்செய்தோமே! என்ன, அதனால் போராது, கண் காண வந்து ஈயாய் என்கிறார். என்றது, மாநச அநுபவத்தால் போராது; கண்களுக்கு இலக்காம்படி வரவேணும் என்றபடி. 'ஈயாய்' என்பதற்கு, [5]ஈகின்றிலை என்னலுமாம்; அங்ஙனம் கொள்ளுமிடத்துச் "செய்வினையோ பெரிதால்" என்ற மேல் பாசுரத்தோடே கூட்டுக. (2)

## 401.

ஈவி லாத தீவி னைகள் எத்தனை செய்தனன்கொல்?
தாவி வையங் கொண்ட எந்தாய்! தாமோதரா! என்றென்று
கூவிக் கூவி நெஞ்சுருகிக் கண்பனி சோர நின்றால்
பாவி நீயென் றென்று சொல்லாய் பாவியேன் காணவந்தே.

பொ - ரை:—அழியக் கூடியன அல்லாத பாவங்கள் எத்தனை செய்தேனோ? அறியேன்; பூலோகத்தை அளந்துகொண்ட எங்

---

1. திருவாய். 3. 8 : 4.

2. "ஈயாய்" என்னாது, "வந்து ஈயாய்" என்றதற்கு இரண்டு கருத்து அருளிச்செய்கிறார் 'நடையழகு' என்று தொடங்கி. இரண்டாவதற்குக் கருத்து, தன் குணம் தோன்றும்படி வரவேணும் என்பது. "பிராட்டி" என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகம், ஸ்ரீராமா. சுந். 66 : 10. "இப்படிப்பட்ட" என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகம், ஸ்ரீராமா. ஆரண். 10 : 9. இவ்விரண்டும் ஸ்ரீராமபிரான் கூறியது.

3. "ஈயாய்" என்றதற்கு பாவம், 'உன்னை' என்று தொடங்கும் வாக்கியம்.

4. "கண் காண" என்றதற்கு வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'தந்தேர்மே' என்று தொடங்கி.

5. இப்பொருளில் "ஈயாய்" என்பது, மறைவினை.

தையே! தாமோதரனே! என்று என்று கூவிக் கூவி நெஞ்சம் உருகிக் கண்களிலே நீர் சோரும்படி நின்றால், பாவியேன் காணும்படி முன்னே வந்து நீ பாவி என்றாகிலும் ஒரு வார்த்தை சொல்லுகின்றாயில்லையே! என்கிறார்.

வி - கு :—'ஈ' என்பது, 'வீ' என்ற சொல்லின் விகாரம்; தழல் - அழல், மலர் - அலர் என்பன போன்று வந்தது. வீ - அழிவு. "ஈபாவம்செய்து" என்றார் முன்னரும். (திருவாய். 2. 2: 2.) சொல்லாய் என்பது, விதி மறை இரண்டற்கும் பொதுவான முற்று. சொல்லுவாய் என்ற பொருளில் விதி. சொல்லமாட்டாய் என்ற பொருளில் மறை. காண வந்து ஒன்று சொல்லாய்; ஆதலால், பாவியேன் ஈவிலாத தீவினைகள் எத்தனை செய்தனன் கொல் என்க.

ஈடு :— மூன்றாம்பாட்டு. [1]எனக்கு உன்னைக் காட்டா தொழிந்தால், 'நீ என்னைப் பார்ப்பதற்கு நல்வினை செய்தாயில்லை' என்றாகிலும் என் கண்முன்னே வந்து ஒரு வார்த்தை சொல்லுகின்றிலை என்கிறார்.

ஈ இலாத தீவினைகள் எத்தனை செய்தனன் கொல் - [2]நான்தான் பெரிய பாவத்தைப் பண்ணுகிறேன்; அநுபவித்தாலும் மாளாதபடியான பாவத்தைச் செய்யவேணுமோ? [3]"கர்மங்கள் அவசியம் அநுபவித்தே தீர்க்கவேணும்; அநுபவிக்கப்படாத கர்மங்கள் பலகோடி கற்ப காலங்கள் கழிந்தாலும் நாசத்தை யடையமாட்டா" என்கிற வசனமும் என்னளவிலே பொய்யோ? அநுபவித்தாலும் குறையாதிருக்க வேணுமோ? ஆயின், அநுபவித்தாரோ? என்னில், சிறிதுநேரம் முகம் மாற வைத்தபோதே எல்லாம் அநுபவித்தார் அன்றோ? 'செய்வினை' என்று ஒன்றா யிருந்ததோ? எத்தனை கோடி பாவங்களைச் செய்தேனோ? என்பார் 'தீவினைகள் எத்தனை

1. "பாவியேன் காண வந்து, பாவி நீ என்று ஒன்று சொல்லாய்" என்றதிலே நோக்காக அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "செய்வினையோ பெரிதால்" என்றதனைக் கடாக்ஷித்து 'நான்தான்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

3. அநுபவித்தால் 'கர்மங்கள் மாளுமோ? என்ன, 'மாளும்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் "கர்மங்கள்" என்று தொடங்கி. 'அநுபவிக்கப்படாத கர்மங்கள் நாசம் அடையா' என்றதனாலே, அநுபவித்தால் நாசம் அடையும் என்பது தானே போதருமன்றோ? ஆகையால், 'அநுபவித்தால் நாசமடையும் என்னுமதுவும் என்னளவில் பொய்யோ?' என்கிறார். பொய்யான பிரகாரத்தைக் காட்டுகிறார் 'அநுபவித்தாலும்' என்று தொடங்கி.

செய்தனன் கொல்?' என்கிறார். [1] தாவி வையம் கொண்ட எந்தாய் - அரிய செயல்களையும் வருத்தம் அறச் செய்யவல்லவன் அன்றோ? அது செய்யுமிடத்தில் வரையாதே எல்லாரையும் காக்குமவ னன்றோ? அவன் இவற்றைக் காப்பதற்கு அடியிட்டான், அச் செயலிலே இவரும் தோற்று அவனுக்கு உரியவராய் 'எந்தாய்!' என்கிறார். தாமோதரா - [2] 'நீ எங்களுக்குப் பிள்ளையாகப் பிறக்கவேணும்' என்று சிலர் இரக்க, அவர்களுக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி உன்னைப் பரதந்திரனாக்கினவ னன்றோ? உன் வயிறு வாழாமலன்றோ இப்படிக் களவுகண்டு கட்டுண்டு அடியுண்டது.

என்று என்று - இதனை ஒருகால் சொல்லி, பின்பு வேறு ஒன்றனைச் சொல்லுமவ ரன்றே! கூவிக் கூவி - இத்தகைய பெருஞ்செயல்களைச் சொல்லிக் கூப்பிட்டுக் கூப்பிட்டு. நெஞ்சு உருகி - முந்துறக் கூவுகிற இது பிற்படக் கூவுமதனை விருத்தி செய்யும்படி கூவுகிற தம்மிடற்று ஓசை செவிவழியே புக்கு, நெஞ்சமானது நீர்ப்பண்டமாய் உருகுமாயிற்று. கண் பனி சோர நின்றால்-உருகின மனத்திற்குப் போக்குக் கண்டு விடுமாறுபோலே கண்ணநீர் பெருக்கு எடுக்கும்படி நின்றால். பாவி நீ என்று ஒன்று சொல்லாய் - 'இந்திரனுக்கு உதவினோம், யசோதை முதலானவர்கட்கு உதவினோம் என்றதனை நினைத்து நகை பண்ணுகிறது என்? இந்திரன் சத்வகுணத்தையுடையவன், யசோதை தாய், நீ பாவி' என்று ஒரு வார்த்தை சொன்னலாகாதோ? இந்திரனைச் சத்வகுணத்தையுடையவன் என்னலாமோ? எனின், தேவர்களையும் அசுரர்களையும் வேறுபடுத்திப் பார்க்கும் வகையில் அவனையும் சத்வநிஷ்டன் என்னலாமேயன்றோ? நான் ஆசையற்றவனாகும்படி

---

1. தீவினைகள் மிகுதியாக இருந்தால் நம்மைச் செய்யச் சொல்லுகிறது என்? என்ன, "தாவி வையம் கொண்ட எந்தாய்" என்கிறார். "தாவி" என்றதற்கு பாவம், 'அரிய செயல்களையும்' என்று தொடங்கும் வாக்கியம். "வையம்" என்றதற்கு பாவம், 'அது செய்யுமிடத்தில்' என்று தொடங்கும் வாக்கியம். மேலதனோடு கூட்டி ரசோக்தியாக "எந்தாய்" என்றதற்கு பாவம், 'அவன் இவற்றை' என்று தொடங்கும் வாக்கியம்.

2. "தாமோதரா" என்ற சப்த ஸ்வாரஸ்யத்தைத் திருவுள்ளம்பற்றி 'நீ' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். 'வாழாமல் அன்றோ' என்றது, உனக்காகவோ செய்தாய், பிறர் பொருட்டாக வன்றோ செய்தாய் என்கிறார் என்றபடி.

ஒரு வார்த்தை சொல்லவேண்டும் என்பார் 'நீ பாவி என்று சொல்லாய்' என்கிறார். 'நீ பாக்கியவான்' என்னவுமாம், பாக்கியஹீநன் என்னவுமாம்; அதில் அர்த்தங்கொண்டு காரியமில்லை; உன்மிடற்றோசை கேட்குமித்தனையே எனக்கு வேண்டுவது என்பார் 'ஒன்று சொல்லாய்' என்கிறார். ஆனால், அங்ஙனம் சொல்லுமிடத்து நிர்ப்பந்தம் ஒன்று உண்டு; என்னை? எனின், அதனைச் சொல்லுகிறார் மேல்: பாவியேன் காண வந்து-என் கண்களுக்கு இலக்காம்படி வந்து சொல்லவேணும்; நாடு முழுதும் உண்டு உடுத்துத் திரியாநிற்க, இப்படிக் கேளாவிடில் ஜீவியாதபடி பாவத்தைச் செய்தேன் என்பார் தம்மைப் 'பாவியேன்' என்கிறார். நெஞ்சிலே மறைந்து நின்று சொல்லினும் ஆமே யன்றோ? அத்தால் போராது என்பார் 'காணவந்து' என்கிறார். 'சொல்லாய், காண' என்கிறார்; இவற்றால், இவருடைய [1]சப்தாதி விஷய ஈடுபாடு இருக்கிறபடி. 'சொல்ல மாட்டுகின்றிலை; ஆதலால், 'ஈவிலாத தீவினைகள் எத்தனை செய்தனன் கொல்' எனக் கூட்டுக. [2]இனி, 'சொல்லாய்' என்பதற்குச் சொல்லவேணும் என்று பொருள் கூறலுமாம். (3)

402.

காண வந்துஎன் கண்மு கப்பே தாமரைக் கண்பிறழ
ஆணி செம்பொன் மேனி எந்தாய்! நின்றருளாய் என்றென்று
நாண மில்லாச் சிறுத கையேன் நானிங் கலற்றுவதென்?
பேணி வானோர் காண மாட்டாப் பீடுடை யப்பனையே.

பொ - ரை :—பிரமன் முதலான தேவர்கள் விரும்பியும் காண முடியாத பெருமை பொருந்திய சுவாமியை, ஒட்டு அற்ற ஆணிச் செம்பொன் போன்ற திருமேனியையுடைய எந்தையே! உன் தாமரை போன்ற கண்கள் விளங்கும்படியாக, நான் காணும்படி வந்து என் கண்களின் முன்னே நிற்கவேண்டும் என்று என்று வெட்கம் இல்லாத சிறு தகையேனாகிய நான், இந்த உலகத்திலே இருந்துகொண்டு அலற்றுவதனால் என்ன பிரயோஜனம் உண்டு? என்கிறார்.

வி - கு :—வானோர் பேணிக் காணமாட்டாத பீடுடை யப்பனை, எந்தையே! நின் தாமரைக்கண் பிறழக் காண வந்து கண்முகப்பே

1. "சொல்லாய்" என்கையாலே, சப்தம். "காணவந்து" என்கையாலே, உருவம்.

2. "சொல்லாய்" என்பதற்கு இருவகையான பொருள் அருளிச்செய்கிறார். முதல்வகை, மறைவினை. இரண்டாவது வகை, விதி வினை.

நின்றருளாய் என்று என்று சிறுதகையேன் இங்கு அலற்றுவது என்? எனக் கூட்டுக. பிறழ நின்றருளாய் என்றும், காண வந்து நின்றருளாய் என்றும் தனித்தனியே கூட்டுக. ஆணி - மாற்றுயர்ந்த பொன்.

ஈடு:—நான்காம் பாட்டு. [1]தாம் காணும்படியாக வர வேணும் என்றார்; சம்சார சம்பந்தம் சிறிதும் இல்லாதவரான நித்தியசூரிகள் அநுபவிக்கும் வடிவை, பிரமன் சிவன் முதலானோர்களும் காணமாட்டாததை 'நான் காணவேணும்' என்று ஆசைப்படுகிற இதனால் என்ன பிரயோஜனம் உண்டு? இதற்குக் காரணம், என்னுடைய நாணமின்மையும் ஞானமின்மையுமேயன்றோ? என்கிறார்.

காண வந்து - மானச அநுபவம் மாத்திரம் அன்றிக்கே, கண்களாலே காணும்படிக்குத் தகுதியாக வந்து என்னுதல்; அன்றிக்கே, புறப்படுதல் தொடங்கி நான் கண்டு அநுபவிக்கும்படிக்குத் தகுதியாக வந்து என்னுதல். 'ஆணிசெம்பொன் மேனி எந்தாய்! என் கண்முகப்பே நின்றருளாய்' என்பாராயிற்று. [2]"மற்று ஒப்பாரை இல்லா ஆணிப் பொன்னே!" என்கிற இவ்வாணியை இட்டுப் பார்த்தவாறே, "சுட்டுரைத்த நன்பொன் உன் திருமேனி ஒளி ஒவ்வாது" என்றதுவும் மழுங்கிக் காட்டிற்று; ஆதலின், 'ஆணிப்பொன்மேனி' என்னாது, 'ஆணி செம்பொன் மேனி' என்கிறார். [3]நாவாகிற உரைகல்லிலே உரைத்து, நெஞ்சாகிற மெழுகிலே இட்டுப் பார்த்

---

1. "பேணி வானோர் காணமாட்டாப் பீடுடை அப்பனை, நாணமில்லாச் சிறுதகையேன் நான் இங்கு அலற்றுவது என்?" என்பதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. உலகிலேயுள்ள ஆணிப்பொன்னையும், 'மற்றொப்பாரையில்லா ஆணி' என்று சொல்லப்படுகிற சர்வேசுவரனாகிற இவ்வாணியையும் இட்டு உரைத்துப் பார்த்தவாறே, 'சுட்டுரைத்த நன்பொன் உன் திருமேனி ஒளி ஒவ்வாது' என்கிறபடியே, உலகிலேயுள்ள அந்த ஆணியும் மழுங்கிக் காட்டிற்று; ஆகையாலே, "செம்பொன்" என்று அடை கொடுத்து ஓதுகிறார் என்பது. 'என்றதுவும்' என்றது, இப்படிச் சுட்டு உரைத்த நன்பொன்னும் என்றபடி. ஆணிப்பொன் - அதிகமாற்றுடைய பொன். "மற்றொப்பாரை" என்னும் இப்பாசுரம், திருவிருத்தம். 85.

3. ஆணிப் பொன்னாகில் உரைக்கிறது எதிலே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நாவாகிற உரைகல்லிலே' என்று தொடங்கி. இங்கு "என்னுடைப்பால் மாற்றின்றி உரைத்துக்கொண்டேன்" என்ற பெரியாழ்வார் திருமொழி அநுசந்தேயம்.

தால் அது தள்ளுண்ணுமே யன்றோ ; [1] இவர்தாம் கண்ணணி யாகவன்றோ காண்பது. [2] மாற்று அற்ற பொன்போலே இருக்கும் திருமேனியில் அழகினைக் காட்டி என்னை உனக்கே உரியவனாகும்படி செய்தவனே என்பார் 'செம் பொன் மேனி எந்தாய்!' என்கிறார். [3] "பொன்னானாய்" என்கிற தன்னைக் காட்டிக் காணும் இவரை அடிமை கொண்டது.

எப்போதும் ஒரே தன்மையாயிருக்கும் அவன் வடிவிலே ஆழ்வாரைக் கண்டால் பிறக்கும் விகாரம் சொல்லுகிறது மேல் : தாமரைக் கண் பிறழ - கடல் கலங்கினாற்போலே, ஆழ்வாரைக் கண்ட காட்சியிலே திருக்கண்கள் மிளிர என்னுதல். அன்றிக்கே, திருக்கண்கள் விளங்க என்னுதல். நின்றருளாய் - என் கண் வட்டத்திலே நிற்கவேணும். என்று என்று - [4] "நான் உனக்குக் கொடுக்கிறேன், நீ எனக்குக் கொடு" என்னுமவர்களேயன்றோ ஒருகால் சொல்லுவார். என்றது, அவன் கண்வட்டத்திலே வந்தால், இவன் போவதற்கு முன்னர் பிரயோஜனத்திற்கு மடி எற்போம் என்பவர்களைத் தெரிவித்தபடி. நாணம் இல்லாச் சிறுதகையேன் - என்னுடைய முன்னைய ஒழுக்கத்தை நினைக்கமாட்டாத நாணமில்லாதவனும், மிக்க அல்பனுமான நான். சிறுதகையேன் - சிறிய ஞானத்தன். பிரமன் முதலானோர்களும் நித்தியசூரிகளுடைய கோடியிலே யாம்படி இவர் தம்மைச் சிறுக நினைத்திருக்கிறாராதலின், 'சிறுதகையேன்' என்கிறார். இதனால், யார்சொல்லும் வார்த்தையை யார் சொல்லுவது? என்கிறார். நான் இங்கு அலற்றுவது என்-அவனுக்கு அடியிட ஒண்ணாத நிலத்திலே இருந்து கூப்பிடுகிற இதற்கு என்ன பிரயோசனம் உண்டு?

1. ஒரு மெழுகும் உரைகல்லும் வேணுமோ? ஆற்றலையுடையவன் கண்ணாலே பார்த்து 'இத்தனை' என்று சொல்லிவிடானோ? அப்படியே, இவரும், மயர்வற மதிநலம் அருளப்பெற்றவராகையாலே பகவானுடைய திருவருளாலே அடைந்த ஞானமே ஆணியாக 'இது உபமானம் அன்று' என்று கண்டார் என்கிறார் 'இவர்தாம்' என்று தொடங்கி. கண்ணணி என்று கருவிழிக்குப் பெயர்; கருவிழியாலேயன்றோ காண்பது என்றபடி. கண்ணே ஆணியாக என்பது, வேறும் ஒருபொருள். கண் - ஞானம்.

2. "செம்பொன்மேனி எந்தாய்" என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'மாற்று அற்ற' என்று தொடங்கி.

3. இது, திருநெடுந்தாண்டகம். 10.

4. "என்று என்று" என்ற அடுக்கிற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'நான்' என்று தொடங்கி. அவன் - சர்வேசுவரன்.

பேணி வானோர் காண மாட்டாப் பீடுடை அப்பனை - பூமியில் கால்இடாதவர்களாலே தான் காணப் போமோ? என்பார் 'வானோர்' என்கிறார். [1] பிரமன் முதலானோர்கட்கும் உபாசிக்கும் தொழில் உண்டு; ஆதலின், 'பேணி' என்கிறார். பேணுதல் - ஆசைப்படுதல்; அதனாலே, உபாசனத்தைச் சொல்லுகிறது. [2] "உபாசனத்திற்கு வேண்டிய சாதனங்கள் உண்டு; ஆகையாலே, மனிதர்களுக்கு மேலேயுள்ள தேவர்களுக்கும் உபாசனத்தில் அதிகாரம் உண்டு" என்பது சூத்திரம்.

ஆக, பேணி வானோர் காண மாட்டாப் பீடு உண்டு - பெருமை; அதனையுடைய சர்வேசுவரனை, நாணமில்லாச் சிறுதகையேன் நான் இங்கு அலற்றுவது என்? என்கிறார் என்றபடி. (4)

## 403.

அப்பனே! அடலாழி யானே! ஆழ்க டலைக்க டைந்த
துப்பனே! உன்தோள்கள் நான்கும் கண்டிடக் கூடுங்கொ லென்று
எப்பொழு தும்கண்ண நீர்கொண்டு ஆவி துவர்ந்து துவர்ந்து
இப்பொழு தேவந் திடாய்என்று ஏழையேன் நோக்கு வேனே.

பொ - ரை:—எந்தையே! வலிமை பொருந்திய சக்கரத்தையுடையவனே! ஆழ்ந்துள்ள திருப்பாற்கடலைக் கடைந்த வலிமையையுடையவனே! உன்னுடைய தோள்கள் நான்கையும் கண்டதாய் விடக் கூடுமோ? என்று, எப்பொழுதும் கண்ணும் கண்ணீருமாய் நின்று என் உயிரும் பசைஅற உலற, இந்தக் கணத்திலேயே வரவேணும் என்று விரும்பி, அறிவில்லாத யான், நீ வரக்கூடிய திசையைப் பார்ப்பேன் என்றவாறு.

வி - கு:—கூடுங்கொல் என்று கண்ணநீர் கொண்டு துவர்ந்து துவர்ந்து நோக்குவன் என்க. ஏழையேன்-அறிவில்லாதவனான யான்; சபலனான நான்.

---

1. உத்தரமீமாம்சை சூத். 1. 3 : 25.

2. ஆரா தனஞ்செய்து கண்டனின் சேர்த்தி அறைவன் திரு
ஆரா தனம்செய்வன் வேதாஎன் றால்அடி யேன் புகழ்கைக்கு
ஆரா தனஞ்செய்ய போதாள் திருமக ளாக! பல்பூண்
ஆரா! தனஞ்செயன் பாகா! அரங்கத் தமர்ந்தவனே!

என்றார் திவ்ய கவியும்.

ஈடு:—ஐந்தாம்பாட்டு. [1]பிரமன் சிவன் முதலானோர்கட்கும் காண முடியாதிருக்கிற உன்னுடைய வடிவழகைக் காண வேணும் என்று ஆசைப்படாநின்றேன்; என் ஆசை இருந்த படி என்? என்கிறார்.

அப்பனே - [2]நீ முகங்காட்டாதபோதும் நான் உன்னையே சொல்லிக் கூப்பிடும்படி எனக்கு இவ்வளவான பெரிய உபகாரத்தைச் செய்தவனே! அடல் ஆழியானே - மிடுக்கையுடைய சக்கரத்தை யுடையவனே! அன்றிக்கே, எப்போதும் ஒக்கப் போர் செய்தற்கு ஆயத்தமாக இருப்பவனும், [3]விரோதிகளை அழிக்கக்கூடியவனும், என் தடைகளைப் போக்குகைக்குப் பரிகரமானவனுமான திருவாழியை யுடையவனே! என்னுதல். ஆழ் கடலைக் கடைந்த துப்பனே - உன்னை விரும்பாமல் 'வேறு பிரயோஜனங்களே அமையும்' என்னுமவர்களுக்கும் [4]"அளவிட முடியாத கடல்" என்கிறபடியே, ஒருவரால் அளவிட ஒண்ணாதபடியான கடலைக் கடைந்து கொடுத்த ஆற்றலை யுடையவனே! உன் தோள்கள் நான்கும் கண்டிடக் கூடுங்கொல் என்று - உன் தோள்கள் நான்கனையும் கண்டேனாய் விடக் கூடுமோ? என்று. [5]அவர்களைப் போன்று உப்புச்சாறு கொண்டுபோமவர் அல்லரே இவர். அந்தக் கடலைக் கடைகிறபோது பரந்திருந்த தோள்களைக் காணக் காணும்

---

1. "மேல் பாசுரத்தில் வந்துள்ள "வானோர் காணமாட்டா" என்றதனைக் கடாக்ஷித்து, இப்பாசுரத்தில் "உன் தோள்கள் நான்கும் கண்டிடக் கூடுங்கொல் என்று ஏழையேன் நோக்குவேன்" என்றதனைத் திருவுள்ளம் பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. பிரிந்து நோவுபடாநிற்க, "அப்பனே" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நீ' என்று தொடங்கி.

3. "அடல்" என்றதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'விரோதிகளை' என்று தொடங்கி.

4. ஸ்ரீராமா. யுத். 14 : 31.

5. "ஆழ் கடலைக் கடைந்த" என்றதனையும் கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'அவர்களைப்போன்று' என்று தொடங்கி. உப்புச்சாறு - அமிர்தம். பின்னை எப்படிப் பட்டவர் இவர்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அந்தக் கடலை' என்று தொடங்கி. தோள்கள் அப்படிக் கவர்ச்சிகரமா யிருக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மதுரம்' என்று தொடங்கி. இது, நாய்ச்சியார் திருமொழி. 9 : 1.

இவர் ஆசைப்படுகிறது. மதுரக் கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத் தோள்களே யன்றோ அவை.

எப்பொழுதும் கண்ணநீர் கொண்டு - கிடைப்பதற்குச் சம்பாவனையுள்ள நிலம் போலே கண்ணநீர் பாயாநிற்பரா யிற்று. ஆவி - என் உயிரானது, துவர்ந்து துவர்ந்து - பசை யற உலர்ந்து. அன்றிக்கே, இங்ஙனம் உலர்ந்து முடிந்து போகவும் பெறுமல், குணாதிக விஷயமாகையாலே 'காண லாம்' என்னும் நசை முடியவும் ஒட்டாமையாலே, தரிப்பது மீண்டும் உலருவதான நிலை [1]உருவச் செல்லுமாயிற்று என்னு தல். என்றது, 'சென்றற்றது, சென்றற்றது' என்னும் நிலை முடியச் செல்லுகின்றது என்றபடி. இப்பொழுதே வந்திடாய் என்று - தம் துன்பமே [2]செப்பேடாக அரைக் கணமும் தாழாமல் வரவேணும் என்று. நோக்குவேனே - வருவதற்குச் சம்பாவனையுள்ள திசையைப் பாராநிற்பன். வருகைக்கு அவன் பக்கலிலும் ஏதேனும் நினைவு உண்டாயோ இவர் இப்படிச் செய்கிறது? என்னில், ஏழையேன் - [3]அஃது ஒன்றில்லை, இவர்தம் ஆசையே உள்ளது. [4]ஆழ்வான் பணித்த வரதராஜ ஸ்தவத்திலே ஒரு சுலோகத்தைக் கேட்டு, எம்பெருமானர் 'இப்பாசுரங் கேட்டால் பெருமாள் இரங்காமையில்லை; ஆழ்

---

1. உருவச் செல்லுதல் - முடியச் செல்லுதல்.

2. செப்பேடு - தாமிர சாசனம்.

3. அஃது - அவன் நினைவு.

4. கிடையாததிலும் ஆசை செல்லுவதற்குச் சம்வாதம் காட்டுகிருர் 'ஆழ்வான்' என்று தொடங்கி. என்றது, எம்பெருமானர், ஆழ்வானுக்கு வந்த ஆபத்தைக் கண்டு திருவுள்ளம் மிகவும் புண்பட்டு ஆழ்வானைப் பார்த் தருளி 'ஆழ்வான்! நான் உம்மை இப்படிக் காணச் சகியேன்; ஸ்வரூப விருத்த மானாலும் ஆயிடுக; நீர் பெருமாள் சந்நிதியிலே சென்று தோத்திரம் பண்ணி நம் அபீஷ்டத்தைப் பெற்று வாரீர்' என்ன, இவரும் சென்று தோத்திரம் பண்ணி மீண்டு எழுந்தருள, 'இரங்கியருளினரோ?' என்று கேட்டருள, 'இரங்கியருளினர் இலர்' என்று விண்ணப்பம் செய்ய, 'உம்முடைய அபேக்ஷை தோன்ற விண்ணப்பம் செய்தீரோ?' என்ன, 'அப்படியே விண்ணப்பம் செய் தேன்' என்ன, ஆனல், அதிலே ஒரு சுலோகம் சொல்லீர் என்று அதனைக் கேட்டருளி 'இப்பாசுரம் கேட்டால் பெருமாள் இரங்காமை இல்லை; ஆழ்வான்! முகத்தைக் காட்டிக் காணும்' என்று பார்த்தருளினராம் என்பது. இது, சாபலத்தின் மிகுதியே யன்றோ? பக். 147. குறிப்புப் பார்க்கவும்.

வான்! உன்முகத்தைக் காட்டிக் காணாய்' என்று பார்த் தருளினர். (5)

404.

நோக்கி நோக்கி உன்னைக் காண்பான் யானென தாவியுள்ளே
நாக்கு நீள்வன் ஞான மில்லை நாள்தொறும் என்னுடைய
ஆக்கை யுள்ளும் ஆவி யுள்ளும் அல்ல புறத்தினுள்ளும்
நீக்க மின்றி எங்கும் நின்றாய் நின்னை யறிந்தறிந்தே.

பொ - ரை :—என்னுடைய சரீரத்தினுள்ளும் உயிருக்குள்ளும் அவையல்லாத இந்திரியங்களுக்குள்ளும் ஒன்றையும் விடாமல் எல்லா விடங்களிலும் எப்பொழுதும் அந்தராத்மாவாய் நிற்கின்றவனே! உன்னை அறிந்திருந்தும், இனிமையான வடிவையுடைய உன்னைக் காணும் பொருட்டுப் பலகாலும் பார்த்து, யான் என் மனத்திற்குள்ளே ஆசைப்படாநின்றேன்; அறிவு இல்லாமையாலே என்கிறார்.

வி - கு :—நின்னை அறிந்து அறிந்து உன்னைக் காண்பான் நோக்கி நோக்கி எனது ஆவியுள்ளே நாக்கு நீள்வன்; என்? எனில், ஞான மில்லாமையாலே என முடிக்க. நாள்தொறும் நின்றாய் என்க. நாள் தொறும் - எப்பொழுதும். நாள்தொறும் நாக்குநீள்வன் எனக் கூட்டலுமாம். நாக்குநீள்தல் - ஆசைப்படுதல்.

ஈடு :—ஆறும்பாட்டு. [1]'என் பக்கவிலே எப்பொழுதும் உடனிருப்பவனாயிருந்தே உன்னைக் காட்டாதொழிகிறது நீ நினையாமை' என்று அறிந்து வைத்தே, காண ஆசைப்படா நின்றேன்; அதற்குக் காரணம் என் அறிவுகேடு என்கிறார்.

நோக்கி நோக்கி - அடுத்து அடுத்து அவன் வரும் திசை யையே பார்ப்பாராயிற்று. இப்படிப் பார்ப்பது என்ன பிரயோ ஜனத்துக்கு? என்னில், உன்னைக் காண்பான் - உன்னைக் காணவேணும் என்னும் நசையாலே. யான் எனது ஆவியுள்ளே நாக்கு நீள்வன் - என் மனத்திலே ஆசைப் படாநின்றேன். வாய்விட்டுச் சொல்லமாட்டாமல் என்பார் 'எனதாவியுள்ளே' என்கிறார். ஒரு விஷயத்திலே ஆசையுள்ளவனை 'இவன் இவ் விஷயத்திலே நாக்கு நீட்டா நின்றான்' என்பார்களேயன்றோ? ஆதலால், நாக்கு நீள்வன் என்பது, ஆசைப்படுவன் என்னும் பொருளைக் காட்டாநின்றது. ஆசைப்படுவதற்குக் காரணம் என்? என்னில், ஞானம் இல்லை - இது இருந்தபடியால் என்

1. "நின்னை அறிந்து அறிந்தே, நாக்குநீள்வன் ஞானமில்லை" என்பதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

னைப்போன்ற அறிவுகேடர் இலர். 'சர்வேசுவரனைக் காண வேணும்' என்று ஆசைப்படுகிற இது அறிவு கேடாக வேண்டுகிறது என்? என்னில், என்னுடைய ஆக்கையுள்ளும் ஆவியுள்ளும் அல்ல புறத்தினுள்ளும் நீக்கம் இன்றி எங்கும் நாள் தொறும் நின்றாய் - [1]உன்னைப் பெறுவதற்குத் தடையாக வுள்ள என் சரீரத்திலும், பெற இருக்கிற ஆத்மாவிலும், இவை ஒழிந்த தடையாயுள்ள உறுப்புக்களிலும் விடாதே எங்கும் எல்லாக்காலத்திலும் புக்கு நின்றாய். [2]கிழிச்சீரையிலே தனம்கிடக்கப் புறங்கால் வீங்குவாரைப்போலே காணும் இவர்படி.

நின்னை அறிந்து அறிந்து - 'இதன் [3]ரக்ஷணத்திற்குப் பிராப்தனுவது, நிதானமறிந்து பரிஹரித்தற்கு முற்றறிவினனுவது, தொடங்கினது முடிக்கவல்ல எல்லா ஆற்றலையுமுடையனுவது, 'ஐயோ!' என்று இரங்குகைக்கு நீர்மை யுடையனுவது, எப்பொழுதும் உடனிருத்தலையுடையனுவது; இப்படியிருக்க, இவன் முகங் காட்டா தொழிகிறது, செய்ய நினையாமையேயன்றோ? என்று இருக்க மாட்டாதொழிகிறது என் அறிவு கேடா மித்தனையே யன்றோ? [4]அன்றிக்கே, நான் பிராப்தனுய் நீ அப்ராப்தனுயிருக்கிறாய் அல்லை; நான் முற்றறிவினனுய் நீ அறிவில்லாதவனுயிருக்கிறாய் அல்லை; நான் எல்லா ஆற்றலையுமுடையவனுய் நீ ஆற்றலில்லாதவனு யிருக்கிறாய் அல்லை; நான் விபுவாய் நீ அணுவாயிருக்கிறாய் அல்லை; இத்தலை நோவுபட விட்டுத் தயை அற்றவனு யிருக்கிறாய் அல்லை; 'உடையவனுய்

---

1. சரீரம், புண்ணிய பாப கர்ம மூலமாகையாலே, அதனை நோக்கி 'உன்னைப் பெறுவதற்குத் தடையாகவுள்ள என் சரீரம்' என்கிறார்.

2. "நீக்க மின்றி எங்கும் நின்றாய், உன்னைக் காண்பான், நாக்கு நீள்வன்" என்றதற்கு வியாக்யாதா தம் அபிப்பிராயமாக அருளிச்செய்கிறார் 'கிழிச் சீரையிலே' என்று தொடங்கி. கிழிச் சீரை - பணப்பை.

3. இத்திருவாய்மொழியில் வந்துள்ள "நாராயணனே" என்றதனை நோக்கிப் 'பிராப்தனுவது' என்றும், "ஞானமூர்த்தி" என்றதனை நோக்கி 'முற்றறிவினனுவது' என்றும், "அப்பனே" என்றதனை நோக்கி 'ஆற்றலையுடையனுவது' என்றும், "ஞாலமுண்டாய்" என்றதனை நோக்கி 'நீர்மையுடையனுவது' என்றும், "நீக்கமின்றி எங்கும் நின்றாய்" என்றதனை நோக்கி 'உடனிருத்தலையுடையனுவது' என்றும் அருளிச்செய்கிறார்.

4. வேறே ஒருவகையாகவும் கருத்து அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. பிராப்தன் - சம்பந்தமுள்ளவன்.

வைத்து உடைமை நோவுபட விட்டிருக்கிறது செய்ய நினையாமையே யன்றோ' என்று ஆறி இருக்க மாட்டாதொழிகிறது என் அறிவுகேடா யித்தனை யன்றோ? என்க. (6)

405.

அறிந்தறிந்து தேறித் தேறி யான்என தாவி யுள்ளே
நிறைந்த ஞான மூர்த்தி யாயை நின்மல மாகவைத்துப்
பிறந்தும் செத்தும் நின்றிடறும் பேதைமை தீர்ந்தொழிந்தேன்
நறுந்து ழாயின் கண்ணி யம்மா! நானுனைக் கண்டுகொண்டே.

பொ-ரை:-வாசனைபொருந்திய திருத்துழாய் மாலையைத் தரித்த அம்மானே! நான் உன்னை நெஞ்சாலே கண்டுகொண்டு அறிந்து அறிந்து தெளிந்து தெளிந்து யான் என் உயிரினுள்ளே நிறைந்திருக்கின்ற ஞானமே திருமேனியாகவுடைய உன்னை, ஐயம் திரிபுகள் அறும்படி வைத்துப் பிறப்பதும் சாவதுமாய் நிலைபெற்றுத் தடுமாறுகின்ற அறிவின்மை தீர்ந்துவிட்டேன் என்கிறார்.

வி-கு:—கண்ணி அம்மா! நிறைந்த ஞான மூர்த்தியாயை உன்னை நான் கண்டுகொண்டு அறிந்து தேறி அறிந்து தேறி யான் எனதாவியுள்ளே நின்மலமாக வைத்து இடறும் பேதைமை தீர்ந்தொழிந்தேன் எனக் கூட்டுக. நின்மலம் - மலம் அறும்படி. தீர்ந்தொழிந்தேன்: ஒரு சொல்.

ஈடு:—ஏழாம் பாட்டு. [1]'நீர் நம்மைப் போர இன்னாதாகா நின்றீர்; உமக்கு ஒன்றும் உதவிற்றிலேமோ? நாம் ஒன்றும் உதவிற்றிலோம் என்றேயோ நீர் நினைத்திருக்கிறது?' என்ன, 'சிறிது செய்தமை உண்டு; இந்த அம்சத்தைப் பெற்றேன்; எனக்கு இதனால் போராது' என்கிறார்.

அறிந்து தேறி அறிந்து தேறி - முதல் திருவாய்மொழியிலே பரத்துவத்தை அநுசந்தித்தார், அது விஷயமானவாறே பிறப்பதொரு தெளிவு உண்டேயன்றோ, அந்தத் தெளிவும்;

1. இத்திருவாய்மொழியிலே முன்னும் பின்னும் விஸ்லேஷமாயிருக்க, இத்திருப்பாசுரம் பிரீதியாகச் சொல்லுமது பிரகரணத்திற்கு முரண் ஆகையாலே, பிரகரணத்திற்குச் சேர விருப்பம் முற்றுப் பெறாத தன்மையாக அவதாரிகை அருளிச்செய்கிறார் 'இந்த அம்சத்தைப் பெற்றேன்' என்று. என்றது, மயர்வற மதிநலம் அருள, அதனாலே, இறப்பது பிறப்பதான அறிவுகேடு தவிரப் பெற்றேன் என்றபடி.

பின்பு, [1]பஜிக்கத்தக்கவன் என்று அநுசந்தித்தார், அத னாலே பிறப்பதொரு தெளிவும்; பின்பு, குற்றங்களைப் பொறுப் பவன் என்று அநுசந்தித்தார், அதனாலே பிறப்பதொரு தெளிவும்; இப்படி, கிரமத்திலேயன்றோ திருவாய்மொழி முடிய நடந்தது. [2]இவையெல்லாம் மானச அநுபவங்களே யன்றோ? [3]அன்றிக்கே, நீ மயர்வற மதிநலம் அருளுகையாலே, பரமாத் மாவின் சொரூபம், [4]"மனன் உணர்வளவிலன், பொறியுணர் வவையிலன், எதிர் நிகழ் கழிவினும் இனன் இலன், மிகுநரை இலன், உணர் முழுநலம், இனன்" என்று அறிந்து அத னாலே பிறப்பதொரு தெளிவும், அந்தப் பரமாத்ம சொரூ பத்தினுடைய யாதாத்மியம், [5]"அது நமது விதி வகையே", [6]"நெஞ்சினால் நினைப்பான் யவன் அவனாகும் நீள் கடல் வண்ணன்" என்கிறபடியே, அர்ச்சாவதார பர்யந்தமான அடி யார்கட்குப் பரதந்திரப்பட்டவனா யிருத்தல் என்று அறிந்து, அதனாலே பிறப்பதொரு தெளிவும்; ஜீவாத்ம சொரூபம், [7]"சென்று சென்று பரம்பரமாய் யாதுமின்றித் தேய்ந்தற்று, நன்று தீது என்று அறிவரிதாய் நன்றாய் ஞானம் கடந்திருக்

---

1. 'பஜிக்கத் தக்கவன்' என்றது, "வீடுமின்முற்றவும்" என்ற திருவாய்மொழியைத் திருவுள்ளம்பற்றி. "பத்துடையடியவர்" என்ற திருவாய்மொழியைக் கடாக்ஷித்துச் 'சுலபன்' என்கிறார். 'குற்றங்களைப் பொறுப்பவன்' என்றது, "அஞ்சிறைய" என்ற திருவாய்மொழியைத் திருவுள்ளம்பற்றி.

2. இப்படித் திருவாய்மொழிதோறும் அறிவும் தெளிவுமாய்ச் சென் றால் அநுபவம் உண்டே யன்றோ? அங்ஙனமிருக்கக் கூப்பிடுகிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவையெல்லாம்' என்று தொடங்கி.

3. இனி, "அறிந்து அறிந்து தேறித் தேறி" என்றதனை அர்த்த பஞ்சக பரமாக்கி வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. என்றது, பரம்பொருளின் சொரூபத்தை அறிந்து தேறி, அந்தப் பரம்பொருளின் யாதாத்மியத்தை யறிந்து தேறி என்றபடி. இப்படியே, மற்றை நாலுக்கும் கண்டுகொள்க. யாதாத்மியம் - அதனுடைய முடிவின் எல்லை.

4. திருவாய். 1. 1: 2.

5. திருவாய். 10. 6: 1.

6. திருவாய். 3. 6: 9.

7. திருவாய். 8. 8: 5.

கும்" என்று அறிந்து அதனாலே பிறப்பதொரு தெளிவும், அதனுடைய யாதாத்மியம், [1]"சிறுமாமனிசராய் என்னை ஆண்டார் இங்கே திரிய, நறு மா விரை நாண்மலர் அடிக்கீழ்ப் புகுதல், உறுமோ" என்றும், [2]"தம்மடியார் அடியோங்களே" என்றும் 'அடியார்கட்கு அடிமையா யிருத்தல் பர்யந்தமா யிருக்கும்' என்று அறிந்து அதனாலே பிறப்பதொரு தெளிவும்; உபாய சொரூபம், [3]"நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்று அறிந்து அதனாலே பிறப்பதொரு தெளிவும், அதனுடைய யாதாத்மியம், அறிவின் காரியமாய் அதிகாரி விசேஷணமான பிரபத்தியையும் பொறாத ஸஹகாரி நைரபேக்ஷ்யம் என்று அறிந்து அதனாலே பிறப்பதொரு தெளிவும்; பல சொரூபம், [4]"ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி, வழுவிலா அடிமை செய்கை" என்று அறிந்து அதனாலே பிறப்பதொரு தெளிவும், அதனுடைய யாதாத்மியம், [5]"உன் தன் திருவுள்ளம் இடர் கெடுந்தோறும் நாங்கள் வியக்க இன்புறுதும்" என்று அறிந்து அதனாலே பிறப்பதொரு தெளிவும்; விரோதி சொரூபம், [6]'யானே என்தனதே என்றிருக்கை' என்று அறிந்து அதனாலே பிறப்பதொரு

1. திருவாய். 8. 10 : 3.
2. திருவாய். 3. 7 : 10,
3. திருவாய். 5. 10 : 11.

ஸஹகாரிநைரபேக்ஷ்யம் - வேறொரு துணையை விரும்பாதது.

4. திருவாய். 3. 3 : 1.
5. திருவாய். 10. 3 : 9.
6. திருவாய். 2. 9 : 9.

ஆக, பரம்பொருளின் சொரூபத்தை அறிதலாவது, சித்து அசித்து இவற்றைக் காட்டிலும் வேறுபட்டிருப்பது என்று அறிதல்; பரம்பொருளின் யாதாத்மியத்தை அறிதலாவது, ஆஸ்ரிதபாரதந்திரியம் என்று அறிதல். ஜீவாத்மாவின் சொருபத்தை அறிதலாவது, ஞான ஆனந்தங்கள் தொடக்கமானவை என்று அறிதல்; ஜீவாத்மாவின் யாதாத்மியத்தை அறிதலாவது, அவன் அடியார்கட்கு அடிமைப்பட்டிருத்தல் என்று அறிதல். உபாயத்தின் சொரூபத்தை அறிதலாவது, அவனே மோக்ஷத்திற்குச் சாதனமாயிருப்பவன் என்று அறிதல்; உபாயத்தின் யாதாத்மியத்தை அறிதலாவது, இவன் செய்யும் பிரபத்தியையும் சாதனமாகப் பொறாது தானே சாதனமாக இருப்பவன் என்று அறிதல். பலத்தின் சொரூபத்தை அறிதலாவது, கைங்கரியம் புருஷார்த்தம் என்று அறிதல்; பலத்தின் யாதாத்மியத்தை அறிதலாவது, தனக்கும் அவனுக்கும் பொதுவாக இல்லாமல், அவனுக்காகவே செய்தல் என்று அறிதல். விரோதி சொரூபத்தை அறிதலாவது, அகங்கார மமகாரங்கள் என்று அறிதல்; விரோதி யாதாத்மியத்தை அறிதலாவது, கைங்கரியத்தில் அகங்கார மமகாரங்கள் என்று அறிதல் எனக் கொள்க.

தெளிவும், அதனுடைய யாதாத்மியம், 'கைங்கரியத்தில் அகங்காரத்தையுட்கொண்டதான மமகாரம்' என்று அறிந்து அதனாலே பிறப்பதொரு தெளிவும் என்று பொருள் கூறலுமாம்.

யான் - இப்படி நீ அறிவிக்க அறிந்த யான். எனது ஆவியுள்ளே - என்னுடைய மனத்தினுள்ளே. நிறைந்த ஞான மூர்த்தியாயை - நிறைந்த ஞானமே உருவமான உன்னை. என்றது, பெற்ற அம்சத்தைக் கொண்டு மனம் நிறைவு பெற்றவனாக ஒண்ணாதபடியான வைலக்ஷண்யத்தையுடைய உன்னை என்றபடி. நின்மலமாக வைத்து - குற்றம் அறும்படியாக நினைத்து. பிறந்தும் செத்தும் நின்று இடறும் பேதைமை தீர்ந்தொழிந்தேன்-சாவது பிறப்பதாய்க் கொண்டு தடுமாறுகிற அறிவுகேடு தவிரப் பெற்றேன். என்றது, அறிவு பிறந்த பின்பு, "இந்நின்ற நீர்மை இனி யாமுறாமை" என்று விரும்பிய அது பெற்றேன் என்றபடி. நறும் துழாயின் கண்ணி வேந்தே - வைத்த வளையத்தைக் காட்டி அவ்வடிவிலே குருகுலவாசத்தைப் பண்ணுவித்து அறிவு பிறப்பித்தாயிற்றுத் தனக்கு ஆக்கிக்கொண்டது. [1]இவ் வறிவு பிறக்கைக்கு அவன் இட்ட பச்சை இருக்கிறபடியைத் தெரிவித்தபடி. நான் உன்னைக் கண்டு கொண்டு - உன் இனிமையை அறிந்த நான், எல்லையற்ற இனியனான உன்னைக் கண்டு கொண்டு. நறும் துழாயின் கண்ணி அம்மா! நான் உன்னைக் கண்டுகொண்டு, அறிந்து அறிந்து தேறித்தேறி யான் எனது ஆவியுள்ளே நிறைந்த ஞானமூர்த்தியாயை நின்மலமாக வைத்து, பிறந்தும் செத்தும் நின்று இடறும் பேதைமை தீர்ந்தொழிந்தேன்! இது நான் பெற்ற அம்சம் என்கிறார். [2] (7)

406.

கண்டு கொண்டென் கைகளார நின்திருப் பாதங்கள்மேல்
என்திசையு முள்ள பூக்கொண்டு ஏத்தி உகந்துகந்து
தொண்ட ரோங்கள் பாடி யாடச் சூழ்கடல் ஞாலத்துள்ளே
வண்துழாயின் கண்ணி வேந்தே! வந்திட கில்லாயே.

1. 'இவ் வறிவு பிறக்கைக்கு' என்று தொடங்கும் வாக்கியம், ரசோக்தி. 'பச்சை' என்றது, சிலேடை: திருத்துழாய் என்றும், உபகாரம் என்றும் பொருள்.

2. இத் திருப்பாசுரம் எச்சமாய்க் கிடக்கிறது; அதாவது, பேதைமை தீர்ந்தொழிந்தேன் வித்தனை; மார்பும் மாலையுமான வடிவழகைக் கண்ணிட்டுக் காணப்பெற்றிலேன் என்பது எச்சம்.

பொ - ரை :—வாசனை பொருந்திய திருத்துழாய் மாலையைத் தரித்த தலைவனே! உன்னைப் பார்த்துக்கொண்டு என் கைகளின் உருவுதல் திரும்படியாக உனது அழகிய திருவடிகளின்மேல் எட்டுத் திசைகளிலுமுள்ள மலர்களைப் பறித்துக் கொண்டு தூவித் மகிழ்ந்து மகிழ்ந்து தொண்டாகிய யாங்கள் பாடி ஆடும்படியாகக் கடல் சூழ்ந்துள்ள இவ்வுலகத்திற்குள் வருகின்றாய் இல்லையே? என்கிறார்.

வி - கு :—தொண்டரோங்கள் பாடி ஆடச் சூழ்கடல் ஞாலத்துள்ளே வந்திடகில்லாயே? என்க.

ஈடு :—எட்டாம்பாட்டு. [1] மேற்பாசுரத்தில் பெற்ற அம்சம் சொன்னார்; பெறாத அம்சம் இது என்கிறார் இப்பாசுரத்தில்.

கண்டு கொண்டு - [2] "காண விரும்பும் என் கண்கள்" என்கிறபடியே, காணப்பெறாமல் பட்டினிவிட்ட கண்கள் பட்டினி தீரும்படி கண்டுகொண்டு. [3] "அரவிந்தம்போன்று நீண்ட கண்ணனைக் கண்ணாரக் கண்டுகொண்டு" என்கிறபடியே, இக்கண்களின் வயிறு ஆரக் கண்டுகொண்டு. என்கைகள் ஆர - [4] "தாயவனே என்று தடவும் என்கைகள்" என்கிற கைகளின் உருவுதல் தீரும்படியாக. கலியர், 'வயிறார உண்ண' என்னுமாறுபோன்று, 'கைகள் ஆர' என்கிறார். நின் திருப் பாதங்கள்மேல் - உனக்குத் [5] தாரகமுமாய் இனிய பொருளுமான

1. "வந்திடகில்லாயே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "கண்டு" என்னாமல், "கண்டுகொண்டு" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் "காணவிரும்பும்" என்று தொடங்கி. இது, திருவாய். 3. 8 : 4.

3. "கண்டுகொண்டு" என்றால், 'பட்டினி தீரும்படி கண்டுகொண்டு' என்ற பொருளைக் காட்டுமோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் "அரவிந்தம்" என்று தொடங்கி. இது, பெரிய திருமொழி. 2. 5 : 8. இப்பாசுரத்தில் "கண்ணார" என்றதிலே நோக்கு.

4. திருவாய்மொழி. 3. 8 : 3. "ஆர" என்றதற்குத் திருஷ்டாந்தம், 'கலியர்' என்று தொடங்குவது.

5. "திரு" என்றதனாலே, போக்யமும், "பாதம்" என்றதனாலே, தாரகமும் பெறப்படுதலின், 'தாரகமுமாய் இனிய பொருளுமான' என்கிறார். திருவடிகள் இறைவனுக்குத் தாரகமும் போக்யமுமாய் இருப்பதற்கு மேற்கோள், "பிடித்துச் சுவைத்து" என்று தொடங்கும் பாசுரம். இது, பெரியாழ்வார் திருமொழி. 1 2 : 1. "சுவைத்துண்ணும் பாதம்" என்றதிலே நோக்கு.

திருவடிகளிலே. பிடித்துச் சுவைத்துண்ணும் பாதக் கமல மாதலின் தாரகம் தானேயாய் நின்றது. அன்றிக்கே, "உன் தேனே மலரும் திருப்பாத"மாதலின், [1]எனக்கு வகுத்ததுமாய் இனிய பொருளுமான உன் திருவடிகளிலே என்னுதல். [2]முன்பும் விஷயங்களிலே தொடர்ந்து செல்லுமது உண்டே யன்றோ? அங்ஙன் அன்றிக்கே, அடையத் தக்கவனான உன் திருவடிகளிலே; [3]"உன்னுடைய தாமரைபோன்ற பாதங்களை அடைவதனாலே பிறவியின் பயனை அடைந்தவனாகக் கடவேன்" என்பதனைக் கேட்ட ஆளவந்தார் 'வார்த்தை அழகிது, வகுத்த விஷயத்திலே யாகப் பெற்றிலோம்' என்று அருளிச்செய்தார்.

எண் திசையும் உள்ள பூக் கொண்டு - விஷயத்திற்குத் தகுதியாகவும் தம்முடைய ஆசைக்குத் தகுதியாகவும் இருக்க வேண்டுமாதலின், '**எண் திசையு முள்ள பூ**' என்கிறார். [4]தம்முடைய ஆசைக்குத் தகுதியாக ஆசையி லுள்ளவையெல்லாம் வேணுமென்கிறார். அவ் வாசை தான் திக்குப்பட்டே யன்றோ இருப்பது. கலியர், 'கல அரிசிச் சோறு உண்ணவேணும்' என்னுமாறு போன்று. இங்ஙனமே யன்றோ கைங்கர்ய ருசி யுடையார் வார்த்தை இருப்பது. [5]"நான் உமக்கு எல்லா அடிமைகளையும் செய்வேன்" என்றாரே யன்றோ இளையபெருமாள்? உகந்து உகந்து - பிரீதி மாறாதே சொல்லும்படியாக. தொண்டரோங்கள் - இந்தக் கைங்கர்யத்தில் இனிமை யறிந்த

---

1. திருவாய். 1. 5 : 5. "நின் திருப்பாதம்" என்றதிலே நோக்காக 'எனக்கு வகுத்ததுமாய்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. 'போக்யமான' என்றால், போராதோ? 'வகுத்ததுமாய்' என்றதற்குக் கருத்து என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'முன்பும்' என்று தொடங்கி.

3. போக்யதை யுண்டானாலும் அடையத் தக்கதா யிராதாகில், அது தியாஜ்யம் என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் "உன்னுடைய" என்று தொடங்கி. இது, மாலதீ மாதவ நாடகம்.

4. 'ஆசை' என்பது, சிலேடை: ஆசையும் திக்கும் என்பது பொருள். 'திக்குப் பட்டே யன்றோ' என்றது, "எண்திசையும்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி. அவ்வாசை - அந்தத் திக்கு.

5. ஸ்ரீராமா. அயோத். 31 : 25.

நாங்கள். [1]"கேசவன் தமர்"க்குப் பின் தனியரல்லராதலின், "தொண்டரோம்" என்கிறார். பாடி ஆட - பிரீதியினாலே தூண்டப்பட்டவர்களாகிப் பாடுவது ஆடுவதாம்படி. 'இதுவாயின், [2]முன்பே நாம் செய்வதாக இருந்தது ஒன்றே யன்றோ? இந்தச் சரீர சம்பந்தம் அற்றால் ஒரு தேச விசேடத்திலே கொண்டுபோய், "[3]மேலே சொல்லப் போகிற சாமத்தைப் பாடிக்கொண்டிருக்கிறான்" என்னும்படி பண்ணுகிறோம்' என்ன, அதுவோ நான் விரும்புகிறது? அன்று; இங்கேயே என்கிறார் மேல்:

சூழ் கடல் ஞாலத்துள்ளே - கடல் சூழ்ந்த இவ்வுலகத்துள்ளே நான் காண வரவேணும். என்றது, எங்கேனும் விடாய்த்தாரை எங்கேனும் விடாய் தீர்க்க ஒண்ணாது என்கிறார் என்றபடி. வண் துழாயின் கண்ணி வேந்தே - சம்சாரத்துக்குள்ளே காட்டுமிடத்தில், அங்குள்ளார்க்குக் காட்சி கொடுக்குமாறுபோலே காட்டவும் வேணும். நித்தியசூரிகளுக்குக் காட்சி கொடுக்கும் ஒப்பனையோடே காட்டவும் வேணும் என்பார் 'துழாயின் கண்ணி வேந்தே' என்கிறார். வந்திடகில்லாயே - வந்திடுகின்றிலை. இதனால், 'கூவியுங் கொள்ளாயே' என்றது பற்றாது என்கிறார். இது நான் பெறாத அம்சம். இவைதாம் இருந்தபடி என்? இந்தச் சரீர சம்பந்தம் அற்றமையும் இல்லை; கைங்கரியம் பெற்றமையும் இல்லை; இங்ஙன மிருக்க, 'இவ்வம்சம் பெற்றேன், இவ்வம்சம் பெற்றிலேன்' என்கிறபடி என்? என்னில், [4]ஒன்று உத்தேஸ்யமாய், மற்றையது அதற்கு உறுப்பாய் வருவதே யன்றோ? 'இவர்தாம் முதலிலே "இந்நின்ற நீர்மை இனி யாமுறாமை" என்றார், அவனும் சர்வசக்தனா யிருந்தான்; ஆதலால், இது கழிந்ததே யன்றோ' என்று அதனைப் பெற்றாராக நினைத்திருந்தார்; கைங்கரியம் அவசியம் பெற்றல்லது நிற்க ஒண்ணாமையாலே, அது கைபுகுராமையைப் பற்றப் பெற்றிலேன் என்கிறார். (8)

---

1. "கேசவன்தமர்" என்ற திருவாய்மொழி பாடியதற்குப் பிறகு என்றபடி. இது, திருவாய்மொழி. 2: 7.

2. 'முன்பே' என்றது, "பொய்ந்நின்ற" என்ற திருப்பாசுரத்தைப் பாடியபோதே என்றபடி.

3. தைத்திரீய பிரு. 10.

4. ஒன்று - கைங்கர்யம். மற்றையது - சரீர சம்பந்த நீக்கம்.

407.

இடகி லேன்ஒன் றட்ட கில்லேன் ஐம்புலன் வெல்லகிலேன்
கடவ னாகிக் காலந் தோறும் பூப்பறித் தேத்தகிலேன்
மடவல் நெஞ்சம் காதல் கூர வல்வினை யேன் அயர்ப்பாய்த்
தடவு கின்றேன் எங்குக் காண்பன் சக்கரத் தண்ணலையே.

பொ - ரை :—பசியுடையார்க்கு ஒருபிடி சோற்றை இட்டேன் அல்லேன், தாகமுடையார்க்கு ஒரு மிடறு தண்ணீர் வார்த்தேன் அல்லேன், ஐம்புலன்களையும் வென்றேன் அல்லேன், கடமையை யுடையவனாய் அவ்வக் காலங்களில் பூக்களைப் பறித்துத் துதித்தேன் அல்லேன், மடமையையும் வலிமையையுமுடைய மனத்திலே காதல் மிக, கொடிய வினையையுடைய யான் அறிவின்மையால், சக்கரத்தையுடைய தலைவனைக் காண வேணும் என்று தடவுகின்றேன் ; எங்கே காணக் கடவேன் ? என்கிறார்.

வி - கு :—வல்வினையேன் சக்கரத்து அண்ணலைக் காணவேண்டுமென்று அயர்ப்பாய்த் தடவுகின்றேன் ; எங்குக் காண்பன் ? எனக் கூட்டுக. காதல் கூரத் தடவுகின்றேன் என்க.

ஈடு :—ஒன்பதாம்பாட்டு. [1] எம்பெருமானைக் காண்கைக்குத் தகுதியான கர்மயோகம் முதலான உபாயங்கள் ஒன்றும் இன்றிக்கே இருக்கிற நான் 'காணவேணும்' என்று ஆசைப்பட்டால், காண்கைக்கு உபாயம் உண்டோ? என்கிறார்.

இடகிலேன் - வருந்துகிற ஆத்மாக்களைக் கண்டால் 'ஐயோ!' என்று இரங்கிச் சில இடில், அது சர்வேசுவரன் திருவுள்ளத்துக்கு மிகவும் உகப்பே யன்றோ ; அங்ஙனம் ஒன்றும் செய்யப் பெற்றிலேன். ஒன்று அட்டகில்லேன் - கையில் பொருளை அவிழ்த்து இடாவிட்டால், உடம்பு நோவத் தண்ணீர் சுமந்து வார்க்கலாமே யன்றோ ? அதுவும் செய்திலேன். ஐம்புலன் வெல்லகில்லேன் - 'பிறர்க்கு ஒன்று வேணும்' என்று இராவிட்டால், 'எனக்கு' என்னுமதுதான் தவிரப் பெற்றேனோ? என்கிறார் ; சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம்

---

1. பாசுரம் முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். "இடகிலேன் ஒன்றட்டகில்லேன்" என்கையாலே கர்மயோகம் இன்மையும், "ஐம்புலன் வெல்லகில்லேன்" என்கையாலே ஞானயோகம் இன்மையும், இரண்டாமடியாலே பக்தியோகம் இன்மையும் சொல்லுகிறது.

என்னும் விஷயங்களிலே [1] பட்டி போகாதபடி வென்றிலேன். கடவனாகிக் காலந்தோறும் பூப் பறித்து ஏத்தகிலேன் - சாஸ்திரங்களில் சொல்லுகிறபடியே, அடைத்த காலங்களிலே மலர் முதலான உபகரணங்களைக் கொண்டு தேவர் திருவடிகளிலே சிறந்த ஆராதனத்தைச் செய்தேன் இலன். ஆயின், [2] இவர் சமாராதனம் செய்து அறியாரோ? என்னில், நூல் பிடித்தாற்போலே சாஸ்திரங்களிலே சாதனரூபமாகச் சொல்லுகிற சமாராதனத்தில் இவர்க்குச் சம்பந்தம் இல்லை; தேக யாத்திரைக்கு உடலாகச் செய்யுமது உண்டு. [3] இவை உண்டாயினவானால் பக்தி சொரூபத்திலே அடக்கி விடலாம், அதுவும் இல்லை என்கிறார். ஆயின், கர்மயோகம் முதலானவற்றை விலக்குகிறதோ? எனின், அவற்றினுடைய சொரூபத்தை விலக்க வந்தது அன்று, அவற்றினுடைய உபாயத் தன்மையை விலக்குகிறது.

மடம் வல் நெஞ்சம் - மடப்பத்தால் மென்மையை நினைக்கிறது; அதாவது, 'பகவத் விஷயம்' என்றால் கடுக விழுந்து கொண்டு நிற்கை. வன்மையாவது, விழுந்தால் பின்னை அங்கு நின்றும் மீட்க அரிதாயிருக்கை. காதல் கூர - இப்படிப்பட்ட மனத்திலே அன்பு மிக. வல்வினையேன் எங்குக் காண்பன் - அன்பிற்குத் தகுதியாகக் காணப் பெறாத பாவத்தைச் செய்தவன். காதலுக்கு விஷயம் பெற்றேன் அல்லேன்; [4] இதனை அகஞ்சுரிப்படுத்தினேன் அல்லேன், ஆசை சிறிதுடையார்க்கு

---

1. பட்டி போதல் - பயிர் மேய்தல். அல்லது, கண்டபடி திரிதல்.

2. மேலே, "எண்திசையுமுள்ள பூக்கொண்டு ஏத்தி" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'இவர் சமாராதனம் செய்து அறியாரோ?' என்னில், என்கிறார். 'நூல் பிடித்தாற்போலே' என்றது, சிலேடை: நூல் - சாஸ்திரமும், முறையும். முறை தப்பாமல் என்றபடி. தேக யாத்திரைக்கு - கைங்கரியத்திற்கு. அதாவது, கைங்கரியம் செய்யாதபோது தரிக்கமாட்டாமையாலே செய்துகொடு நிற்பர். இதனால், பிராப்யம் என்ற எண்ணத்தால் செய்யுமது உண்டு என்றபடி.

3. 'இவை யுண்டாயினவானல்' என்றது, பூப் பறித்து ஏத்துதல் முதலாய இவை யுண்டாயின ஆனல் என்றபடி.

4. "கூர்" என்றதனை நோக்கி 'இதனை அகஞ்சுரிப்படுத்தினேனல்லேன்" என்கிறார். அகஞ்சுரிப்படுத்தினேன் அல்லேன் - குறைக்கவல்லேனல்லேன். 'கூர்' என்பது, மிகுதியைக் காட்டுவதோர் இடைச்சொல். "வல்வினையேன்" என்றதனை நோக்கி அருளிச்செய்கிறார் 'ஆசை சிறிதுடையார்க்கு' என்று தொடங்கி,

முகங்கொடாதவனாய் இழந்தேன் அல்லேன்; என் பாவம் இருந்தபடி என்? என்கிறார். அயர்ப்பாய் - அறிவு கேட்டை யுடையேனாய். தடவுகின்றேன் - [1]"கௌசல்யையே! உன்னைப் பார்க்கிறேன் இல்லை" என்கிறபடியே, முன்னே வந்து நின்றாலும் காணமாட்டாதபடி தடவா நின்றேன். எங்குக் காண்பன்-[2]ஒரு கைம் முதல் இன்றிக்கே இருக்கக் கூப்பிடுகிற நான் எங்கே காணக் கூப்பிடுகிறேன். சக்கரத்து அண்ணலையே - கையில் திருவாழியையுடைய சர்வேசுவரனை, எங்கே காணக் கடவேன்? [3]யசோதைப்பிராட்டி கையும் வெண்ணெயுமாகப் பிடித்துக்கொண்டாற்போலே, கையும் நெய்யார் ஆழியுமாகப் பிடித்துக் கொள்ளவாயிற்று இவர் ஆசைப் படுகிறது. (9)

408.

சக்கரத் தண்ணலே! என்று தாழ்ந்து கண்ணீர் ததும்பப்
பக்கம் நோக்கி நின்ற லந்தேன் பாவியேன் காண்கின்றிலேன்
மிக்க ஞான மூர்த்தி யாய வேத விளக்கினைஎன்
தக்க ஞானக் கண்க ளாலே கண்டு தழுவுவனே.

பொ - ரை :—சக்கரத்தையுடைய சுவாமியே! என்று சொல்லி அநுபவிக்கப் பெறாமையாலே கீழே வீழ்ந்து கண்களில் நீர் மிகும்படி சுற்றும் பார்த்து நின்று வருந்தினேன்; பாவத்தைச் செய்த நான் காணப்பெறுகின்றிலேன்; மேம்பட்ட ஞானத்தையே உருவமாக வுடையவனும் வேதமாகிற விளக்காலே காணப்படுகின்றவனுமான எந்தையை எனக்குத் தகுதியான ஞானமாகிற கண்களாலே கண்டு தழுவுவேன் என்பதாம்.

ஈடு :—பத்தாம்பாட்டு. [4]காணப் பெறுவிட்டால் மறந்து பிழைக்க ஒண்ணாதபடி எனக்குத் தக்கது ஒரு ஞானக்கண் எங்ஙனே உண்டாயிற்று? என்கிறார்.

---

1. ஸ்ரீராமா. அயோத். 42 : 34. இது, ஸ்ரீராமபிரானைப் பிரிந்த காரணத்தால் கலக்கமடைந்த சக்கரவர்த்தி கூறியது.

2. முதல் இரண்டு வரிகளைத் திருவுள்ளம்பற்றி 'ஒரு கைம் முதல்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

3. "சக்கரத் தண்ணலே" என்று அருளிச்செய்கையாலே ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'யசோதைப் பிராட்டி' என்று தொடங்கி. இந்தக் கருத்திற்குக் காரணம், "ஆனுயர், தாயவனே யென்று தடவும் என் கைகளே" என்ற பாசுரப் பகுதி.

4. "கண்டு தழுவுவன்" என்கையாலே பிரீதி தோன்றினாலும், பிரகரணத்திற்கு உசிதமாக இன்னாப்பாக அவதாரிகை அருளிச்செய்கிறார். 'காணப் பெறுவிட்டால்' என்று தொடங்கி,

சக்கரத்து அண்ணலே என்று தாழ்ந்து - திருவாழியைக் காட்டி என்னை எழுதிக்கொண்டவனே! என்று இவ்வார்த்தை யோடே தரைப்பட்டு. கண் நீர் ததும்ப - கண்கள் நீர்மிகைக் கும்படி. [1] இவருடைய துக்கத்தின் எல்லை காண்பது கண்ண நீரிலே காணும். பக்கம் நோக்கி நின்று அலந்தேன் - வருகைக் குத் தகுதியுள்ள திசையைப் பார்த்து நின்று வெறுத்தேன். [2] "பெரிய ஆபத்தை அடைந்தானாய்" என்னுமளவே யன்றோ? பாவியேன் காண்கின்றிலேன் - [3] ஆபத்திற்குத் துணைவனாயிருக்க, மஹாபாவி ஆகையாலே நான் காணப் பெறுகின்றிலேன். [4] காணப் பெறாது ஒழிந்தால் மறந்து பிழைக்கலாம்படி நெஞ்சில் பிரகாசிக்காமல் ஒழியத்தான் பெற்றேனோ? என்கிறார் மேல்:' மிக்க ஞான மூர்த்தியாய - நிறைந்த ஞானத்தையே சொரூபமாகவுடையவனை, வேத விளக்கினை - [5] வேதமாகிற விளக்காலே காணப்படுமவனை. அன்றிக்கே, வேதத்தைப் பிரகாசிக்கச் செய்கின்றவனை என்னலும் ஆம்; என்றது, வேதத்திற்கு விளக்காக இருப்பவன் என்றபடி. என் தக்க ஞானக் கண்களால் கண்டு தழுவுவன் - எனக்குத் தக்காற்போலே ஒரு ஞானக்கண் உண்டாய், அதனாலே கண்டு அநுபவிப்பன். [6] காணப்பெறாமையாலே அன்பு துக்கத்திற்குக் காரணம் ஆகிறாப் போலே, நெஞ்சில் பிரகாசிப்பதுவும் துக்கத்திற்குக் காரணம் ஆகாநின்றது. என்றது,

---

1. மேலே யுள்ள பதத்தையும் கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'இவருடைய' என்று தொடங்கி.

2. வெறுக்கிறது என்? கணநேரம் தரிக்க ஒண்ணாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பெரிய ஆபத்தை' என்று தொடங்கி. இது, விஷ்ணு தர்மம். 68. முதலையால் பிடிக்கப்பட்டு வருந்திய கஜேந்திராழ்வான் செய்தியைக் கூறுவது.

3. "அலந்தேன்" என்று ஆபத்தின் மிகுதி சொல்லுகையாலே, பொருளாற்றலால் சித்திக்கின்ற ஆபத்திற்குத் துணைவனாகும் அவன் தன்மையை அருளிச்செய்கிறார் 'ஆபத்திற்கு' என்று தொடங்கி.

4. மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் 'காணப் பெறாது' என்று தொடங்கி.

5. "வேத விளக்கினை" என்பதற்கு இரண்டு பொருள் அருளிச்செய்கிறார். முதலது, வேதத்தைத் தனக்கு விளக்காக வுடையவன் என்பது; வேதத்தாலே பிரதிபாதிக்கப்படுகின்றவன் என்றபடி. இரண்டாவது, வேதத்திற்கு விளக்கு என்பது.

6. ஞானக் கண்களாலே காண்கை நல்லதன்றோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'காணப் பெறாமையாலே' என்று தொடங்கி.

"மயர்வற மதிநலம் அருளினன்" என்கிற ஞானபக்திகள் இரண்டும் [1]கழுத்துக்கட்டியாய்விட்டது என்றபடி. [2]மறந்து பிழைக்க ஒண்ணுதபடி எனக்குத் தக்காற் போலே ஒரு ஞானமும் வேணுமோ? என்கிருர். (10)

## 409.

தழுவி நின்ற காதல் தன்னுல் தாமரைக் கண்ணன் தனைக்
குழுவு மாடத் தென்குருகூர் மாறன் சடகோ பன்சொல்
வழுவி லாத ஒண்த மிழ்கள் ஆயிரத்துள் இப்பத்தும்
தழுவப் பாடி யாட வல்லார் வைகுந்தம் ஏறுவரே.

பொ - ரை:—கூட்டங் கூட்டமான மாடங்களையுடைய அழகிய திருக்குருகூரில் அவதரித்த மாறன் சடகோபராலே, தம்மைத் தழுவிக் கொண்டு நிற்கின்ற காதலால், தாமரைபோன்ற கண்களையுடைய சர்வேசுவரனைப் பற்றி அருளிச்செய்யப்பட்ட குற்றம் இல்லாத பிரகாசம் பொருந்திய ஆயிரம் திருப்பாசுரங்களுள் இந்தப் பத்துத் திருப் பாசுரங்களையும் மனம் பொருந்தப் பாடி ஆடவல்லவர்கள் பரமபதத்தை அடைவார்கள் என்றவாறு.

வி - கு:—சடகோபன் தாமரைக் கண்ணனைக் காதலால் சொல் தமிழ்கள் ஆயிரம் என்க. தமிழ்கள் - திருப்பாசுரங்கள். வல்லார் ஏறுவர் என்க.

ஈடு:—முடிவில், [3] இத்திருவாய்மொழி கற்ருர் எம்பெருமானேடே எப்பொழுதும் சேர்ந்திருக்கலாம்படியான திருநாட்டிலே செல்லப் பெறுவர் என்கிருர்.

தழுவிநின்ற காதல் தன்னுல் - 'நான் விடுவேன்' என்றுலும் விட ஒண்ணுதபடியாய் உடன் வந்தியான அளவு கடந்த காதலாலே. தாமரைக் கண்ணன்தன்னை - இந்தக் காதலுக்குக் கிருஷிபண்ணின [4]நேத்திரபூதரைச் சொல்லு

1. கழுத்துக் கட்டி-கழுத்தைக் கட்டுவது; பாதகம் என்றபடி. அதாவது, கண்டு அநுபவிக்கவும் ஒட்டாது, மறந்து பிழைக்கவும் ஒட்டாது என்றபடி.

2. மேலே கூறியதற்கு பாவம் அருளிச்செய்கிருர் 'மறந்து' என்று தொடங்கி.

3. "வைகுந்தம் ஏறுவரே" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

4. 'நேத்திர பூதர்' என்றது, சிலேடை: அந்தரங்கரை என்றும், கண்ணுனவரை என்றும் பொருள்.

கிறார். குழுவு மாடம் தென் குருகூர்-[1] "ஆழ்வார்க்குத் துக்கம் மிக மிக சர்வேசுவரன் வரவு தப்பாது' என்று திருநகரி குடி நெருங்கிக் குளிர்ந்து தேறினபடி. இதனை "வீட்டில் எல்லோரும் சௌக்கியமாக இருக்கிறார்கள்" என்பது போன்று கொள்க. மாறன்-சம்சாரத்தை மாற்றினவர். சடகோபன்-பகவானிடத்தில் விருப்பமில்லாதவர்கட்குச் சத்துரு. சொல் வழு இலாத-பாகவானைப் பிரிந்த பிரிவாலே கூப்பிடுகிற இந் நன்மையில் ஒன்றும் தப்பாதபடி சொன்ன. ஆயிரத்துள் இப் பத்தும் தழுவப் பாடி ஆட வல்லார்-[2] ஆழ்வாருடைய பாவ விருத்தி ஒருவர்க்கும் பிறக்கமாட்டாதே யன்றோ? அதிலே சிறிது அணைய நின்றாகிலும் இதனைக் கற்கவல்லவர்கள். வைகுந்தம் ஏறுவரே-காண ஆசைப்பட்டுக் கூப்பிடுகிற சம்சாரத்தைக் கழித்து, எப்பொழுதும் அநுபவிக்கத் தக்க பரமபதத்திலே புகப்பெறுவர். குழுவு மாடம்-நெருங்கின மாடம். தென்குருகூர்-ஆதலால், அழகிய திருநகரி. (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

சீலமிகு கண்ணன் திருநாமத் தாலுணர்ந்து
மேலவன்தன் மேனிகண்டு மேவுதற்குச்—சால
வருந்தி இரவும் பகலும் மாறாமற் கூப்பிட்டு
இருந்தனனே தென்குருகூர் ஏறு.

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. ஆழ்வார் ஆற்றாமையாலே துன்ப மிகுந்தவராய் இருக்க, திருநகரிக்குக் குளிர்த்தி எங்ஙனே? என்ன, அதற்கு விடையும் அருளிச்செய்து மேற்கோளும் காட்டுகிறார் 'ஆழ்வார்க்கு' என்று தொடங்கி. "தென்" என்பது அழகாய், அதனால், குளிர்ச்சியைச் சொல்லுகிறது. அதற்குப் பிரமாணம் "வீட்டில்" என்று தொடங்குவது. இது, ஸ்ரீராமா. யுத். 127 : 5. ஸ்ரீ பரதாழ்வான் துன்பக்கடலில் மூழ்கினவனாயிருக்கிறபடியைக் கண்டு பெருமாள் வரவை நிச்சயித்துத் தரித்த படியாலே யன்றோ 'எல்லாரும் சௌக்கியமாக இருக்கிறார்கள்' என்று பரத்வாச முனிவர் ஸ்ரீ ராமபிரானைப் பார்த்துக் கூறியருளினார் என்றபடி.

2. "தழுவி நின்ற காதல்" என்றாற்போலே, "தழுவி நின்று பாடவல்லார்" என்னாதது என்? என்ன அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆழ்வாருடைய' என்று தொடங்கி. தழுவுதல் என்றது, பரிசித்தலாய் ஆழ்வாருடைய பாவ விருத்தியிலே சிறிது அந்வயத்தை யுடையாராய்க் கொண்டு என்றபடி.

## எட்டாந் திருவாய்மொழி—"ஏருளும்"

### முன்னுரை

ஈடு:—[1] மேல் திருவாய்மொழியிலே, கேட்டாரடைய நீராகும்படி கூப்பிட்டார்; 'இப்படிக் கூப்பிடச் செய்தேயும், சர்வேசுவரன் நமக்கு முகம் தாராதிருந்தது நம்பக்கல் உபேக்ஷையாலே யாக அடுக்கும்' என்று பார்த்து, [2] 'சம்பந்தமுள்ளவனுமாய் சுசீலனுமாய் விரோதிகளை அழிக்கிற தன்மையனுமாயிருக்கிறவன் இது வேண்டா என்றிருக்குமாகில் எனக்கோதான் இது வேண்டுவது' என்று விடப் பார்த்து, [3] 'அவனுக்கு வேண்டாத நானும் என்னுடைமையும் வேண்டா எனக்கு' என்று ஆத்மாவிலும் ஆத்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களிலும் நசை அற்றபடியை அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறார். [4] 'அவன் விரும்பின வழியாலே காணும்

---

1. மேல் திருவாய்மொழிக்கும் இத் திருவாய்மொழிக்கும் இயைபு அருளிச்செய்கிறார் 'மேல் திருவாய்மொழியிலே' என்றது முதல் 'அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறார்' என்றது முடிய.

2. இத்திருவாய்மொழியிலே வருகின்ற "அடியேனைப் பணிகொண்ட" என்றதனைத் திருவுள்ளம்பற்றிச் 'சம்பந்த முள்ளவனாய்' என்றும், "கூருளும் தனியுடம்பன்" என்றதனைத் திருவுள்ளம்பற்றிச் 'சுசீலனுமாய்' என்றும், "அசுரர்களை நீருகும்படியாக" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'விரோதிகளை அழிக்கின்ற தன்மையனுமாய்' என்றும் அருளிச்செய்கிறார்.

3. "உயிரினால் குறைவிலம்", "உடம்பினால் குறை இலம்" என்பனவற்றைத் திருவுள்ளம்பற்றி 'அவனுக்கு வேண்டாத நானும் என்னுடைமையும்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். அந்யாபதேசம் - மாற்றிச் சொல்லுதல்; வேறு வகையில் பேசுதல்.

4. அவன் விரும்பிலனாகில், அதற்காகத் தான், தன்னையும் தன் பொருள்களையும் விரும்பாதிருத்தல் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவன் விரும்பின வழியாலே' என்று தொடங்கி.

"காதலர் நயந்தது யாமுடை நயப்பே
காதலர் வேண்டின யாம்வேண் டினமே
காதலர் எம்மை வேண்டார் எனிலே
யாமும் வேண்டலம் இனியே"

என்றார் பிறரும்.

ஆத்ம வஸ்துவை விரும்பச் சம்பந்தமுள்ளது; [1] இங்ஙனம் விரும்பாதபோது பழைய தேக ஆத்ம அபிமானத்தைப் போன்றதே யன்றோ?

[2] "நதேகம் - இத்தனை சாந்து நாற்றத்துக்காக நிலை நின்ற அத்ருஷ்டத்தையுங் கூட அழிய மாறும்படி யன்றோ சரீரத்தில் பண்ணியிருக்கும் அபிமானம்; அப்படிப்பட்ட சரீரம் வேண்டா. நபிராணுந் - சரீரத்தை விரும்புகிறது பிராணனுக்காக; அந்தப் பிராணன்களும் வேண்டா. நசுகம் - பிராணன்களை விரும்புகிறது சுகத்துக்காக; அந்தச் சுகமும் வேண்டா. இதற்கு உறுப்பாக வருமவையெல்லாம் எனக்கு வேண்டா. இவையெல்லாம் புருஷார்த்தமாவது, ஆத்மாவுக்கே யன்றோ, அந்த ஆத்மாதானும் வேண்டா. இங்ஙனம் பிரித்துச் சொல்லுமது என்? உன் திருவடிகளில் சேஷத்வ சாம்ராஜ்யத்துக்குப் புறம்பானவை யாவை சில, அவை ஒன்றும் எனக்கு வேண்டா. நாத - உடையவனுக்குப் புறம்பாயிருக்குமவற்றை விரும்பச் சம்பந்தமுண்டோ? அங்ஙனேயாமாகில், கிரமத்திலே கழித்துத் தருகிறோம்; என்ன, 'ஒருகணமும் பொறுக்கமாட்டேன்; இவை தம்மைத் தவிர்த்துக் கடக்க வைக்க வொண்ணாது, நசித்துப்போம்படி செய்யவேணும். இது கழுத்துக்குமேலே வருகின்ற வார்த்தை யன்றோ?' என்ன, தத் சத்யம் - மெய். மது மதந — இங்ஙனம் அன்றாகில், தேவர் முன்பு பொய்யரானார் பட்டது படுகிறேன்" என்றார் ஸ்ரீ ஆளவந்தார். [3] "மகாரதராகிய பெருமாளைப் பிரிந்து அரக்கியர் நடுவில் வசிக்கிற எனக்குப் பிராணனால் பயன் இல்லை, பொருள்களாலும் பயன் இல்லை, ஆபரணங்களாலும் ஒரு பயன் இல்லை" என்றாள் பிராட்டி. பிராணன் முதலியவற்றால் காரியம் இன்றிக்கே ஒழிகிறது என்? என்னில், இருக்கிறது அரக்கியர்கள் நடுவே, பிரிகிறது பெருமாளை; இவற்றால், என்ன பிரயோஜனம் உண்டு? என்றபடி.

---

1. ஆத்மா இயல்பிலே ஆனந்தமயனாயிருக்க, அவன் விரும்பின வழியாலே விரும்புகிறது என்பது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இங்ஙனம் விரும்பாதபோது' என்று தொடங்கி.

2. அவனுக்கு உறுப்பு அல்லாத ஆத்மாவிலும் ஆத்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களிலும் இப்படி நசை அற்றவர் உளரோ? என்ன, "நதேகம்" என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, தோத்திரரத்நம். 57.

3. ஸ்ரீராமா. சுந். 26; 5,

## 410.

ஏறாளும் இறையோனும் திசைமுகனும் திருமகளும்
கூறாளும் தனியுடம்பன் குலங்குலமா அசுரர்களை
நீறாகும் படியாக நிருமித்துப் படைதொட்ட
மாறாளன் கவராத மணிமாமை [1] குறையிலமே.

பொ - ரை :—இடபவாஹனத்தையுடைய சிவபிரானும் நான்கு முகங்களையுடைய பிரமனும் திருமகளும் தனித்தனியே ஆளுகின்ற ஒப்பற்ற திருமேனியையுடையவனும், கூட்டம் கூட்டமாக அசுரர்கள் சாம்பலாகும்படியாக நினைத்துப் படையைப் பிரயோகித்த மாறாளனுமான சர்வேசுவரனால் விரும்பப்படாத அழகிய இந்நிறத்தால் ஒருவித பயனும் உடையோம் அல்லோம் என்கிறாள்.

வி - கு :—குறை - பயன். இத் திருவாய்மொழி, தரவு கொச்சகக் கலிப்பா.

ஈடு :—முதற்பாட்டு. [2]எல்லையில்லாத பெருமை பொருந்திய குணத்தையுடையவனுமாய் விரோதிகளை அழிக்கிற ஆற்றலையுடையவனுமாயிருக்கிற எம்பெருமான் விரும்பாத சிலாக்கியமான நிறங்கொண்டு எனக்கு ஒரு காரியம் இல்லை என்கிறாள்.

---

1. 'குறைவிலமே' என்பது, முன்னைப பாடம். ஒவ்வொரு பாசுரத்தின் ஈற்றிலும் வியாக்கியாதா அருளிச்செய்யும் பொருளை நோக்குமிடத்துக் 'குறையிலமே' என்ற பாடமே ஏற்புடையதாகும். "மயக்குறு மக்களை இல்லோர்க்குப், பயக் குறை இல்லைத் தாம் வாழுநாளே" என்ற புறநானூற்றின் அடிகட்கு, 'மயக்கும் புதல்வரை இல்லாதார்க்குப் பயனாகிய முடிக்கப்படும் பொருள் இல்லை, தாம் உயிர் வாழும் நாளின்கண் என்றவாறு' என்று அதன் உரையாசிரியர் எழுதிய உரையாலும், "குறை - இன்றியமையாத பொருள் ; அது, 'பயக்குறை இல்லைத் தாம் வாழுநாளே' என்பதனாலும் அறிக" என்ற பரிமேலழகர் உரையாலும், (குறள். 612.) "பொருளைச் சொல் இன்றியமையாமையின், அதனைக் குறை என்றார் ; பயக்குறை இல்லைதாம் வாழு நாளே என்றாற்போல" என்று சேனாவரையர் கூறுதலானும் (தொல். சொல். சூத். 396.) உணர்தல் தகும்.

2. பாசுரத்தில் "ஏறாளும்" என்றது முதல் "தனி யுடம்பன்" என்பது முடியக் கடாக்ஷித்து 'எல்லையில்லாத - குணத்தை யுடையவனுமாய்' என்றும், "குலம் குலமா" என்றது முதல் "படை தொட்ட" என்றது முடியக் கடாக்ஷித்து 'விரோதிகளை - ஆற்றலை யுடையவனுமாய்' என்றும், ஈற்றடியைத் திருவுள்ளம்பற்றி 'எம்பெருமான்' என்று தொடங்கியும் அவதாரிகை அருளிச்செய்கிறார். இங்குக் 'குணத்தை' என்றது, சௌசீல்ய குணத்தை. சௌசீல்யமாவது, ஸ்ரீ வைகுண்டத்தைக் கலவிருக்கையாக வுடைய இறைவன் அங்கு நின்றும் சம்சாரி சேதநர் நின்றவிடத்தே வந்து அவதரித்து எளியனாகி எல்லாரோடும் கலந்து பரிமாறித் தன்னைத் தாழ விட்டான், 'இப்படிச் சிறியாரளவிலே நம்மைத் தாழ விட்டோமே!' என்று தன் திருவுள்ளத்திலும் இன்றிக்கே இருத்தல்.

ஏறு ஆளும் இறையோனும் திசைமுகனும் கூறு ஆளும் தனி உடம்பன் - இதனால், [1]'நான், நான்' என்பார்க்கும் அணையலாம்படியான உடம்பை யன்றோ நான் இழந்திருக்கிறது என்கிறாள். [2]கண்ட காபாலி கந்தர் பெற்றுப் போகிற உடம்பன்றோ எனக்கு அரிதாகிறது என்கிறாள். ஏறாளும் - [3]சர்வேசுவரன் வேதமே சொரூபமான பெரியதிருவடியை வாஹனமாகவுடையனாய் இருக்குமாகில், தானும் கைக்கொள் ஆண்டிகளைப்போலே 'ஓர் எருத்தை யுடையேன்' என்று அபிமானித் திருப்பவனாதலின் '**ஏறு ஆளும்**' என்கிறார். ஆளும் - [4]இவனுடைய உபயவிபூதிகளின் ஆட்சி இருக்கிறபடி. [5]அவன் உபயவிபூதிகளுக்கும் கடவனாய் சர்வேசுவரனாயிருப்பான்; கள்ளியை '**மஹாவிருக்ஷம்**' என்பதனைப்போன்று, தானும் 'ஈசுவரன்' என்றிருப்பவனாதலின் '**இறையோன்**' என்கிறார். திசைமுகனும் - படைத்தலுக்கு உறுப்பாக நான்கு வேதங்களையும் உச்சரிப்பதற்குத் தகுதியான நான்கு முகங்களையுடையனாய் '**நான் படைப்பவன்**' என்று அபிமானித்

---

1. 'சிவன், பிரமன்' என்னாமல் "ஏறாளும்", "திசைமுகன்" என்று விசேடித்ததற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'நான், நான்' என்று தொடங்கி. என்றது, அவர்களுடைய உயர்வைச் சொல்லுகிறது அன்று; அகங்காரங் கொண்டவர்களுக்கும் சுலபமானது எனக்கு அரியதாயிற்றே என்னுமதனைச் சொல்ல வந்தது.

2. அதனை ரசோக்தியாக விவரிக்கிறார் 'கண்ட காபாலி' என்று தொடங்கி. காபாலி - கபாலத்தை யுடையவன்; சிவன். கந்தன் - கந்தையை யுடையவன்; சிவன். அன்றிக்கே, கந்தன் என்பது, உலகத்திற்கெல்லாம் மூலமான திரு நாபீ கமலத்தில் பிறந்தவன் என்று பிரமனைச் சொல்லுகிறது என்னுதல்.

3. "ஏறு" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'சர்வேசுவரன்' என்று தொடங்கி.

4. உடையவன் என்னாமல், "ஆளும்" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'இவனுடைய' என்று தொடங்கி.

5. சிவனை "இறையோன்" என்றதற்குக் கருத்து, 'அவன்' என்று தொடங்கும் வாக்கியம்.

திருக்கிற பிரமனும். [1] தர்ம தர்மிகளுக்கு ஐக்யமுண்டித்தனை போக்கி, தர்மி த்வயத்துக்கு ஐக்யமில்லை என்க. திருமகளும் - [2] "நான் ஸ்ரீ ராகவனுக்கு வேறு ஆகாதவள்" என்று சொல்லுகிறபடியே இருக்கிற பெரிய பிராட்டியாரும். கூறு ஆளும் தனி உடம்பன் - இவர்கள் கூறு இட்டு ஆளும்படி ஒப்பற்ற உடம்பு படைத்தவன். [3] 'நாங்கள் அதிகாரி புருஷர்களுடையவர்கள்' என்று பிராட்டி பக்கத்திலே புக்குச் சிலர் அழிவு செய்தல், 'நாங்கள் படுக்கைப் பற்றிலுள்ளோம்' என்று சிலர் அவர்கள் எல்லையிலே புக்கு அழிவு செய்தல் செய்ய வொண்ணாதபடி ஆளுகின்றாராதலின் 'கூறாளும்' என்கிறார். [4] திவ்யாத்ம சொரூபத்திலும் வீறுடையது திருமேனியே யன்றோ? [5] எல்லார்க்கும் இடமா யன்றோ திருமேனிதான் இருப்பது. [6] இப்படிச் சீலமுடையவனா யிருக்கின்றவனை யன்றோ நான் இழந்திருக்கிறது என்கிறாள்.

---

1. "சிவனாய் அயனாய்" என்று ஐக்யம் சொல்லாநிற்க, "இறையோன், திசைமுகன்" என்று பேதமாகச் சொன்னதற்குக் கருத்து அருளிச் செய்கிறார் 'தர்ம தர்மிகள்' என்று தொடங்கி. என்றது, தேவன் என்றால், தேவ சரீரத்துக்கும், சரீரியான ஆத்மாவுக்கும் ஐக்யம் சொல்லுகிறாப் போலே, இவர்கள் சரீரமாயும் அவன் சரீரியாயும் இருக்கையாலே ஐக்யம் சொன்னயித்தனை போக்கி, சொரூப ஐக்யம் சொல்லவில்லை என்றபடி. தர்மம் - சரீரம். தர்மி - ஆத்மா. தர்மி த்வயம் - இரண்டு தர்மிகள்.

2. ஸ்ரீராமா. சுந்- 21: 15. இது, இராவணனைப் பார்த்துப் பிராட்டி கூறியது.

3. "ஆளும்" என்னாது, "கூறாளும்" என்றதற்குக் கருத்து அருளிச் செய்கிறார் 'நாங்கள்' என்று தொடங்கி. 'படுக்கைப்பற்றிலுள்ளோம்' என்றது, அந்தப்புரசம்பந்திகளாயுள்ளோம் என்றபடி.

4. திவ்யாத்ம சொரூபம் அன்றோ ஒப்பற்றது; அங்ஙனமிருக்க, திருமேனியைத் "தனியுடம்பு" என்னுதல் என்? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'திவ்யாத்ம சொரூபத்திலும்' என்று தொடங்கி.

5. பெரிய பிராட்டியாருக்கு ஒழிய, யான் எனது என்னும் செருக்கையுடைய சிவனுக்கும் பிரமனுக்கும் இருப்பிடம் என்னலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'எல்லார்க்கும்' என்று தொடங்கி.

6. "கூறாளும் தனியுடம்பன்" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'இப்படி' என்று தொடங்கி.

குலம் குலமா அசுரர்களை நீறாகும்படியாக நிருமித்துப் படை தொட்ட மாறாளன் - இதனால், [1]அணைக்கைக்குத் தடையுண்டாய்த்தான் இழக்கின்றேனோ? என்கிறாள். மேற்கூறியது, [2]"இந்த உலகத்தில் இக்காலத்தில் குணங்களையுடையவர் யாவர்?" என்பது போன்றது. "வீரத்தையுடையவர் யாவர்?" என்பது போன்றது இது. குலம் குலமா அசுரர்களை - குலம் குலமாக அசுரர்கூட்டத்தை. நீறாகும் படியாக நிருமித்து - [3]"என்னால் முன்னரேயே கொல்லப்பட்டு இருக்கிறார்கள்" என்கிறபடியே, 'உறவு வேண்டேம்' என்றபோதே சாம்பலாகப் போகும்படி நினைத்து. படைதொட்ட - [4]"உலகத்தைப் படைக்கின்ற காலத்தில் சங்கல்பத்தாலே அதனைச் செய்யுமவன், அடியார்கட்குப் பகைவர்களை அழியச் செய்யுமிடத்தில் படையையுடையவனாய் மேல் விழுவான். [5]படைத்தல் முதலிய தொழில்களில் சத்திய சங்கல்பனாய் இருப்பான், அடியார்களுடைய பகைவர்களிடத்திலே அசத்திய சங்கல்பனாய் இருப்பான். [6]"யாகங்களுக்கு இடையூறு செய்கின்றவர்களையும், பாண்டவர்கட்குத் துன்பம் செய்கின்றவர்களையும் நான் வருத்துவேன்" என்கிறபடியே, தன்னை மிடற்றைப் பிடித்தா

1. 'விரோதிகளை அழிக்கின்றவன்' என்று சொல்லுகின்றவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அணைக்கைக்கு' என்று தொடங்கி.

2. சங்க்ஷேப ராமாயணம். 'மேற் கூறியது' என்றது, "கூறாளுந் தனியுடம்பன்" என்றதனாற் கூறப்பட்ட சௌசீல்ய குணத்தை.

3. ஸ்ரீ கீதை 11: 33. இது, நினைத்தபோதே நீறு ஆயினமைக்குப் பிரமாணம்.

4. நினைத்தல் மாத்திரமே போதியதாமே? படை எடுப்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உலகத்தை' என்று தொடங்கி. என்றது, அடியார்களிடத்து வைத்த அன்பினால் செய்கிறான் என்றபடி. சங்கல்பம் - நினைத்தல்.

5. "படைதொட்ட" என்றதற்குப் பாரதப் போரைத் திருவுள்ளத்திலே கொண்டு பாவம் அருளிச்செய்கிறார் 'படைத்தல் முதலிய' என்று தொடங்கி. 'அசத்திய சங்கல்பன்' என்றது, வீடுமனைக் கொல்லுதற்குத் திருவாழியைத் திருக்கரத்தில் ஏந்தியது, திருவாழியைக் கொண்டு சூரியனை மறைத்தது முதலிய செயல்களைத் திருவுள்ளம்பற்றி என்க. சங்கல்பத்தோடு அமையாது அதற்கு மேலும் காரியங்களைச் செய்வான் அடியார்கள் விஷயத்தில் என்றபடி.

6. சங்கல்பத்தால் அன்றிக்கே, தானே அழியச் செய்வான் என்பதற்குப் பிரமாணம், 'யாகங்களுக்கு' என்று தொடங்குவது. 'தன்னை மிடற்றைப் பிடித்தாரையும்' என்றது, யாகங்கட்கு இடையூறு செய்கின்றவர்களைக் குறித்தபடி. பரிபாடல், 2-ஆம் பாடல் 61-முதல் 68-முடியவுள்ள அடிகளையும், அதன் உரையையும் காண்க. 'உயிர் நிலையிலே நலிந்தாரையும்' என்றது, பாண்டவர்கட்குத் துன்பம் செய்கின்றவர்களைக் குறித்தபடி.

ரையும், உயிர் நிலையிலே நலிந்தாரையும் நலியுமவன் என்பதாம். நீறும் படியாக - [1]"அறுக்கப்பட்டதாகவும் பிளக்கப்பட்டதாகவும் பாணங்களால் கொளுத்தப்பட்டதாகவும்" என்கிறபடியே, தூளியாகும்படியாக நினைத்து ஆயுதம் எடுக்குமவன் ஆதலின், 'நீறும்படியாக நிருமித்துப் படைதொட்ட' என்கிறார். மாறாளன் - மிடுக்கன் என்னுதல்; பகைவன் என்னுதல். [2]துரியோதனன் உண்ணவேணும் என்ன, "பகைவனுடைய அன்னம் உண்ணத்தக்கதன்று, பகைவர்களையும் உண்பிக்கக்கூடாது" என்கிறபடியே, தன் அடியார்களுடைய விரோதிகளைத் தனக்கு விரோதிகளாகக் கொண்டு வழக்குப் பேசுமவனன்றோ? கவராத மணி மாமை குறை இலமே - விரோதிகளை அழியச்செய்து விடாய்த்துத் 'தண்ணீர், தண்ணீர்' என்று அவன் வந்து அணையாத நல்ல நிறத்தால் ஒரு விருப்பமுடையோம் அல்லோம். [3]நிறத்திலே அவன் ஆதரிக்குமன்றன்றோ இத்தால் காரியமுள்ளது? அல்லது, நிறக்கேடாமித்தனை யன்றோ. (1)

## 411

மணிமாமை குறையில்லா மலர்மாதர் உறைமார்பன்
அணிமானத் தடவரைத்தோள் அடலாழித் தடக்கையன்
பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட
மணிமாயன் கவராத மடநெஞ்சால் குறையிலமே.

---

1. ஸ்ரீராமா. யுத். 94: 12.

2. எல்லா உயிர்களிடத்திலும் ஒத்த அன்பினையுடைய சர்வேசுவரனுக்குப் பகைவர் ஆவார் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'துரியோதனன்' என்று தொடங்கி. இது, பாரதம் உத்தியோக பர். 74: 27. என்றது, அடியார்கட்குப் பகைவர்கள், தனக்கும் பகைவர்கள் என்றபடி. மேற்காட்டிய சுலோகப் பொருளோடு,

என்னி னின்னிலொரு பேத மில்லையிது என்னி னின்னிலது என்னினும்
மின்னில் முன்னிலகு விறல் நெடும்படை விதுரன் வந்தெதிர் விளம்பினான்
உன்னி னின்னமுன தொன்று பஞ்சவருரைக்க வந்த ஒரு தூதன்யான்
நின்னி லின்னடிசி லுண்டு நின்னுடன் வெறுக்க வெண்ணுவது நீதியோ?

என்ற வில்லி பாரதச் செய்யுள் ஒப்பு நோக்குக.

3. அழகிய நிறமாகில், அதனை வேண்டா என்கிறது என்? என்ன, 'நிறத்திலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'நிறத்திலே' என்றது, சிலேடை: நிறத்திலே என்றும், முறையிலே என்றும் பொருள். நிறக்கேடாம் - நிறத்திற்குத் தாழ்வாம் என்றும், முறையிலே செய்த நன்றிக்கே ஒழியும் என்றும் பொருளாம்.

**பொ - ரை:**—மணிபோன்ற ஒளியையுடைய அழகிலேயாதொரு குறைவும் இல்லாத பெரிய பிராட்டியார் நித்தியவாசம் செய்கின்ற மார்பையுடையவனும், அழகிய பெருமை பொருந்திய விசாலமான மலைபோன்ற தோள்களையும் பகைவர்களைக் கொல்லுகின்ற சக்கரத்தைத் தரித்த திருக்கரத்தையு முடையவனும், கைங்கரியத்தின் அளவிலே தவறாமல் அடியேனை அடிமைகொண்ட நீலமணிபோன்ற நிறத்தையுடைய மாயவனுமான சர்வேசுவரனால் விரும்பப்படாத மடநெஞ்சால் ஒரு காரியத்தையுடையோம் அல்லோம் என்கிறாள்.

**வி - கு:**—குறை இல்லா மாதர் என்க. அடல் - கொல்லுதல். பணி - தொண்டு. மானம் - அளவு.

**ஈடு:**—இரண்டாம்பாட்டு. [1] மேற்பாசுரத்திற் கூறிய சீலத்துக்கும் அடியான பிராட்டியோடே கூட வடிவழகைக் காட்டி அடிமை கொண்டவன் விரும்பாத உரிமைப்பட்ட நெஞ்சால் என்ன காரியம் உண்டு? என்கிறாள்.

மணி மாமை குறை இல்லா மலர் மாதர் உறை மார்பன்-'மணி மாமை குறை இல்லா மாதர்' என்கையாலே, தன்னைப் போன்று "மணிமாமை குறையிலமே" என்ன வேண்டாதவள் என்பதனைத் தெரிவிக்கிறாள். [2] அவள் எப்பொழுதும் அண்மையில் இருப்பதாலே என்னை அடிமை கொண்டவன். "குற்றம் செய்யாதவர்கள் ஒருவரும் இலர்" என்கிறவளும் கூட இருக்கச்செய்தே என்னை உபேக்ஷித்திருக்குமாகில், என் உடைமையால் [3]எனக்குத்தான் பிரயோஜனம் என்?-மலரில் மணத்தையே வடிவாக வகுத்தாற்போலே இருக்கையாலே '**மலர் மாதர்**' என்கிறாள். நிறமே யன்றிக்கே, பிரியத் தகாத மென்மைத் தன்மையுமுடையவள் என்பாள் '**மாதர்**' என்கிறாள். மாது-மிருதுத்தன்மை. உறை மார்பன் - அவள் நித்திய வாசம் செய்கிற திருமார்வையுடையவன். மலரில் பிறப்பு மாத்திரமேயாய், நித்தியவாசம் செய்வது மார்பிலேயாதலின்

---

1. பாசுர முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "மலர்மாதர் உறைமார்பன், அடியேனைப் பணிகொண்ட" என்று கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'அவள் எப்பொழுதும்' என்று தொடங்கி.

3. ஆக, பிராட்டி சம்பந்தத்தைச் சொன்னதற்கு 'எனக்குத் தான் பிரயோஜனம் என்?' என்றது முடிய மூன்று வகையில் பாவம் அருளிச்செய்தவாறு. "குற்றம் செய்யாதவர்கள்" என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகம், ஸ்ரீராமா. யுத். 116 : 45. இது, திருவடியைப் பார்த்துப் பிராட்டி கூறியது.

'உறைமார்பன்' என நிகழ் காலத்தாற் கூறுகிறாள். [1] தான் பிறந்த மலர் நெருஞ்சிக் காடாம்படியான மார்வு படைத்தவன் என்பதாம், [2] "அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர், அடிக்கு நெருஞ்சிப் பழம்" என்றானேயன்றோ. [3] முக்தன் சம்சார யாத்திரையை நினையாதாப்போலே பூவை நினையாமலே வசிக்கும் மார்வு படைத்தவன். [4] பிராட்டி பெருமாளைக் கைப்பிடித்தபின்பு ஸ்ரீ மிதிலையை நினைத்தாலாயிற்று, இவள் தான் பிறந்த மலரை நினைப்பது. [5] அவள் "அகலகில்லேன்" என்கிற மார்வை நான் இழப்பதே!

அணி மானம் தடவரைத் தோள்-[6] "எல்லா ஆபரணங்களையும் அலங்கரிக்கத் தக்க திருத்தோள்கள்" என்கிறபடியே, 'ஆபரணத்துக்கு ஆபரணமான தோள்' என்று நஞ்சீயர் அருளிச்செய்வர். [7] "நீண்டும் அழகாய்த் திரண்டும் உலக்கையை ஒத்தும்" என்கிறபடியே, நீட்சியையுடைத்தாய்ச் சுற்றுடைத்தாய் ஒருவரால் சலிப்பிக்க ஒண்ணாத தோள் படைத்தவன் என்பதாம். அணி - ஆபரணம். மானம் - அளவு; நீட்சி. அன்றிக்கே, 'அணி என்று அழகாய், மானம் என்று பெருமையாய், அணி பெருகிய தோள்' என்றார் ஒரு தமிழ்ப்புலவர்.

---

1. மலரை நீங்கித் திருமார்விலே இருக்கைக்குக் காரணம் யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தான் பிறந்த' என்று தொடங்கி.

2. மலர் நெருஞ்சிக் காடாக இருக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "அனிச்சமும்" என்று தொடங்கி. இம் மேற்கோள், திருக்குறள்.

3. 'தான் பிறந்த மலர் நெருஞ்சிக் காடு' என்றனால் போந்த பொருளை ஓர் எடுத்துக்காட்டு மூலம் அருளிச்செய்கிறார் "முக்தன்" என்று தொடங்கி. இது, சாந்தோக். 8. 12: 3.

4. நினையாமைக்கு வேறும் ஒரு திருஷ்டாந்தங் காட்டுகிறார் 'பிராட்டி' என்று தொடங்கி.

5. "உறைமார்பன்" என்று நிகழ்காலத்தாற் கூறுகின்றவளுடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அவள்' என்று தொடங்கி. "அகலகில்லேன்" என்பது திருவாய்மொழி.

6. ஸ்ரீராமா. கிஷ். 3: 14.

7. "நீண்டும்" என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகப் பகுதியும் மேற்கூறிய சுலோகத்தைச் சார்ந்ததேயாம்.

[1] அதனாலும், "ஆபரணத்துக்கு ஆபரணம்" என்கிறபடியாயிருக்கை. அடல் ஆழித் தடக்கையன் - [2] பிராட்டியும் தானுமான சேர்த்திக்குப் பரமபதத்திலும் கூட என் வருகிறதோ என்று ஐயங்கொண்டு எப்போதும் ஒக்க யுத்த சந்நத்தனாய்ப் பகைவர்களைக் கொல்லுந் தன்மையையுடைய திருவாழியை தடக்கையிலேயுடையவன். [3] இவனுடையவிருத்தம் கைமேலே காணலாயிருக்கிறபடி. பணி மானம் பிழையாமே- [4] "நான் உமக்கு எல்லா அடிமைகளையும் செய்வேன்" என்கிறபடியே, கைங்கர்யத்தில் ஓரளவும் குறையாமல். பணி-கைங்கர்யம். மானம்-அளவு. அடியேனைப் பணி கொண்ட - இளைய பெருமாளை அடிமை கொண்டாற்போலே, இருவருங் கூட இருந்துகாணும் அடிமை கொண்டது. [5] குமரிருந்து போகாமே என்பார் 'அடியேனைப் பணிகொண்ட' என்கிறார். என்றது, பரதந்திர ஜன்மமாயிருக்க, வகுத்தவனுக்கு உறுப்பன்றிக்கே

---

1. தமிழ்ப்புலவர் கூறிய பொருளால், அழகின் மிகுதியைச் சொல்லி, ஆபரணத்தின் அழகையும் விஞ்சியிருக்கும் என்பதனைத் தெரிவித்தபடி. இந்தப் பொருளாலும் சீயர் அருளிச்செய்த பொருளே சித்திக்கும் என்கிறார் 'அதனாலும்' என்று தொடங்கி. 'அதனாலும்' என்றது, அணி பெருகிய தோள் என்ற பொருளாலும் என்றபடி. "ஆபரணத்திற்கு" என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகம், விக்கிரமோர்வசி நாடகம். இங்கே,

'அமிழிமைத் துணைகள் கண்ணுக் கணியென அமைக்கு மாபோல்
உமிழ்சுடர்க் கலன்கள் நங்கை யுருவினை மறைப்ப தோரார்
அமிழ்தினைச் சுவைசெய் தென்ன அழகினுக் கழகு செய்தார்
இமிழ்திரைப் பரவை ஞாலம் ஏழைமை யுடைத்து மாதோ.

(கம். கோலங்காண்பட. 3.)

"பூணுக் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்கால்
நாணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்" (நளவெண்பா)

என்பனவற்றை நினைவுகூர்க.

2. "மலர்மாதர் உறைமார்பன்" என்றதற்குத் தகுதியாக "அடலாழி" என்றதற்குப் பிரயோஜனத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு, சொல்லுக்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'பிராட்டி' என்று தொடங்கி.

3. 'இவனுடைய விருத்தம்' என்று தொடங்கும் வாக்கியம், ரசோக்தி. விருத்தம் - ஆசாரமும், திருவாழியும். 'கைமேலே' என்பதற்குக் கையின் மேலே என்றும், பிரத்யக்ஷமாக என்றும் பொருள்.

4. ஸ்ரீராமா. அயோத். 31 : 25.

5. 'குமர் இருந்துபோகாமே' என்றது, அடியேன் என்ற சேஷத்வம் பயன் அற்றுப் போகாமல் என்றபடி. அதனை விவரிக்கிறார் 'என்றது' என்று தொடங்கி.

போகாமல் என்றபடி. இங்கே அருளிச்செய்யும் வார்த்தை: [1]'உடையவர் எழுந்தருளியிருக்கிற மடத்திலே ஸ்ரீ வைஷ்ணவர்கள் அமுது செய்யாநிற்க, ஆச்சான் தண்ணீரமுது பரிமாறுகிறவர், ஓர் அருகே சாயநின்று பரிமாறினார்; அத்தை உடையவர் கண்டு ஓர் அடி வந்து முதுகிலே மோதி, 'நேரே நின்றன்றோ வுடோ பரிமாறுவது?' என்றார்; என்ன, "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" என்று பணித்தான் ஆச்சான்.

பணி கொண்ட மணி மாயன் - நீலஇரத்தினம்போன்ற கறுத்த நிறத்தையுடையவன்; என்றது, "தஹ பச-சுடு அடு" என்று அன்று அடிமைகொண்டது; [2]பிடாத்தை விழவிட்டு வடிவைக் காட்டி அடிமை கொண்டான் என்றபடி. கவராத மடநெஞ்சால் குறை இலமே - வடிவில் சுவட்டை அறிவித்து என்னை அநுபவிப்பியானாகில், பணிவையுடைய நெஞ்சால் என்ன காரியம் உண்டு? [3]நஞ்சீயர் இவ்விடத்திலே அருளிச்செய்வதொரு வார்த்தை உண்டு: "பூசுஞ் சாந்து என் நெஞ்சமே" என்கிறபடியே, அன்று அப்படியே இத்தை விரும்பினவன் இன்று இப்படியே உபேக்ஷிக்கையாலே, 'நாயகன் வரவு தாழ்த்தான்' என்று அவன்முன்னே சாந்தைப் பரணியோடே உடைப்பாரைப் போலே, என் நெஞ்சு எனக்கு வேண்டா என்கிறாள்' என்பது. [4]பிராட்டி அவனோடே சேர இருந்திலளாகில் நான் ஆறி இரேனோ? தோள் அழகை எனக்

---

1. "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" என்றதன் பொருளை, ஆப்தர்களுடைய சரிதையைக் காட்டி உறுதிப்படுத்துகிறார் 'உடையவர்' என்று தொடங்கி. ஆச்சான் - கிடாம்பியாச்சான்.

2. பிடாத்தை - பச்சை வடத்தை.

3. "மடநெஞ்சால் குறையிலம்" என்கிறவளுடைய மனோபாவத்தை ஆப்தசம்வாதத்தாலே விளக்குகிறார் 'நஞ்சீயர்' என்று தொடங்கி. "பூசும் சாந்து என் நெஞ்சமே" என்றவிடத்தில், நெஞ்சின் காரியமான நினைவினைச் சாந்தாகச் சொன்னதை நோக்கி, நெஞ்சைச் சாந்துப் பரணியாகக் கொண்டு 'சாந்தைப் பரணியோடே உடைப்பாரைப் போலே' என்று திருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார். நெஞ்சு பரணியாகவும், அதிலுண்டான நினைவு சாந்தாகவும் கொள்க. பரணி - சிமிழ். இவ்வாக்கியம், ரசோக்தி.

4. "மலர்மாதர் உறைமார்பன்" என்றதனை நோக்கிப் 'பிராட்டி' என்று தொடங்கியும், "அணிமானத் தடவரைத்தோள்" என்றதனைக் கடாக்ஷித்துத் 'தோள் அழகை' என்று தொடங்கியும், "அடலாழித் தடக்கையன்" என்றதனைத் திருவுள்ளம்பற்றிக் 'கையும் திருவாழியும்' என்று தொடங்கியும், "மணிமாயன்" என்றதனைப்பற்றி 'வடிவழகால்' என்று தொடங்கியும் அருளிச்செய்கிறார்.

குக் காட்டிற்றிலனாகில், நான் ஆறி இரேனோ? கையும் திருவாழியுமான அழகைக் காட்டிற்றிலனாகில், 'சம்பந்தமில்லாத விஷயம்' என்று ஆறி இரேனோ? வடிவழகால் அன்றிக் குணத்தாலே என்னை அங்கீகரித்தானாகில் நான் ஆறி இரேனோ? என்கிறாள். (2)

412.

மடநெஞ்சால் குறைவில்லா மகள்தாய்செய் தொருபேய்ச்சி
விடநஞ்ச முலைசுவைத்த மிகுஞானச் சிறுகுழவி
படநாகத் தணைக்கிடந்த பருவரைத்தோட் பரம்புருடன்
நெடுமாயன் கவராத நிறையினால் குறையிலமே.

பொ - ரை :—மடப்பம் பொருந்திய நெஞ்சால் குறைவில்லாத தாய்மகளாகத் தன்னைச் செய்துகொண்டு வந்த ஒரு பேயாகிய பூதனையினது மிக்க விஷத்தையுடைய முலையைச் சுவைத்துப் பால் குடித்த மிகுந்த ஞானத்தையுடைய சிறிய குழவியும், படத்தையுடைய பாம்பின் படுக்கையிலே சயனித்திருக்கின்ற பெருத்த மலைபோன்ற தோள்களையுடைய பரம்புருடனும், நெடுமாயனுமான சர்வேசுவரன் விரும்பாத நிறை என்னும் குணத்தால் யாதொரு பயனையுமுடையோம் அல்லோம் என்றவாறு.

வி - கு :—மனித வடிவிலே தாய் உருவத்தோடு வந்தவளாதலின் 'மகள் தாய்' என்கிறாள். மகள் என்பது, மக்கள் என்ற சொல்லின் சிதைவு. விடம் நஞ்சம் என்பன : ஒரு பொருட்சொற்கள். மிகுஞானம் என்றது, ஈண்டுச் சுவை உணர்வை யுணர்த்திற்று. குழவி - குழந்தை. பரம்புருடன் - புருடோத்தமன்.

ஈடு :—மூன்றாம்பாட்டு. [1] விரோதிகளை அழிக்கும் ஆற்றலையுடையனாய், எல்லையற்ற வேறுபாட்டினையுடையனாய், முன்னர் என்பக்கல் மிக்க காதலையுடையனானவன் விரும்பாத அடக்கம் எனக்கு வேண்டா என்கிறாள்.

---

1. "பேய்ச்சி விடம் நஞ்சம் முலை சுவைத்த, பரம்புருடன் நெடுமாயன்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'எல்லையற்ற வேறுபாட்டினையுடையான்' என்றது, "பரம்புருடன்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி. "நெடுமாயன்" என்றதனைக் கடாக்ஷித்து 'மிக்க காதலையுடையனானவன்' என்கிறார்.

மடம் நெஞ்சால் குறையில்லா - மடப்பமாவது - மென்மை: அதாவது, நெஞ்சில் நெகிழ்ச்சி. என்றது, [1] முலையுண்ணும் போது யசோதைப் பிராட்டிக்குப் பிறக்கும் பரிவையும் ஏறிட்டுக் கொண்டு வந்தபடி. [2] அகவாயிலுள்ளது த்வேஷமா யிருக்கச் செய்தே, அத்தை மறைத்துக்கொண்டு ஆநுகூல்யம் தோற்ற வந்தவள் என்பதனைத் தெரிவித்தபடி. மகள் தாய் செய்து - தாய் மகள் செய்து; என்றது, பேயான தான் மனித வேடத்தைக் கொண்டு, அது தன்னிலும் [3] "பெற்றதாய் போல்" என்கிறபடியே, தாய் வடிவைக் கொண்டு வந்தவள் என்றபடி. மகள் என்று மனிதர்கட்குப் பெயர். மகள் - மக்கள். ஒரு பேய்ச்சி - இஃது என்ன வஞ்சனைதான்! வஞ்சனைக்கு ஒப்பற்றவள் என்றபடி. அன்றிக்கே, 'நலிய வந்தாள்' என்னும் கோபத்தாலே விருப்பமில்லாத வார்த்தையாகவுமாம். விடம் நஞ்சம்-விஷம் என்றும், நஞ்சம் என்றும் மீமிசைச் சொல்லாய், நாட்டில் விஷங்களெல்லாம் அமிருதம் என்று சொல்லக் கூடியதான விஷம் என்னுதல். அன்றிக்கே, பேய்ச்சி விட - பேயானவள் உயிரை விடும்படி, நஞ்சம் முலை சுவைத்த - நஞ்சு முலையை அமுதுசெய்த என்னுதல்; என்றது, அம் முலை வழியே "உயிரை வற்ற வாங்கி யுண்ட வாயான்" என்கிறபடியே, பாலும் உயிரும் ஒக்க வற்றி வரும்படி சுவைத்தமையைத் தெரிவித்தபடி. [4] "உயிரோடு குடித்தான்" என்னக் கடவதன்றே? மிகு ஞானச் சிறுகுழவி- [5] இளமைத் தன்மையில் கண்ணழிவற்றிருக்கச் செய்தேயும், சுவை உணர்வாலே 'இது தாய் முலை யன்று, வேற்று முலை' என்று அமுதுசெய்

---

1. பூதனைக்கு நெகிழ்ச்சி யுண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'முலையுண்ணும்போது' என்று தொடங்கி.

2. ஏறிட்டுக்கொண்டு வந்தபடியை விளக்குகிறார் 'அகவாயில்' என்று தொடங்கி.

3. பெரியதிருமொழி. 1. 3: 1.

4. பாலை உயிரோடு குடித்தமைக்கு மற்றும் ஒரு மேற்கோள் காட்டுகிறார் "உயிரோடு குடித்தான்" என்று. இது, விஷ்ணுபுரா. 4. 5: 5.

5. "சிறு குழவி" என்னாநிற்கச் செய்தே, "மிகுஞானம்" என்றல் பொருந்துமோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இளமைத் தன்மையில்' என்று தொடங்கி. என்றது, "மிகுஞானம்" என்றது, ஈண்டு முற்றறிவினைக் கூற வந்ததன்று; சுவையுணர்வினை மாத்திரம் சொல்லுகிறது; ஆதலாலே, 'வேற்றுமுலை' என்று அறிந்து உயிரோடு உண்டான் என்றபடி.

தான். [1] அன்றிக்கே, அவள் தாயாய் வந்தாலும், இவன் 'தாய்' என்றே முலையுண்டாலும், பொருளின் தன்மையாலே வருமது தப்பாதே யன்றோ? அத்தாலே தப்பிற்றித்தனை என்னுதல்.

படம் நாகத்து அணைக் கிடந்த-[2] உணவுக்குத் தகுதியாகக் காணும் கிடந்தபடியும். நஞ்சையுண்டு நஞ்சு அரவிலே யன்றோ கிடக்கிறது. நஞ்சுக்கு நஞ்சு மாற்றே யன்றோ? [3] விரோதியை அழியச்செய்து படுக்கையிலே சாய்ந்தபடி. [4] அன்றிக்கே, "திருவனந்தாழ்வானுகிற கட்டிலை விட்டு விட்டு" என்கிறபடியே, படுக்கையை விட்டுப் போந்து விரோதியைப் போக்கினபடி என்னுதல். [5] அடியார்களுடைய துக்கக் குரல் கேட்டால் போகத்திலே நெஞ்சு பொருந்தாதேயன்றோ? சர்வேசுவரன் திருமேனியிலே சாய்கையாலுண்டான சந்தோஷத்தாலே **விரிந்த படங்களையுடையவனதலின் 'படநாகம்'** என்கிறது. [6] அசுரர்களுடைய கூட்டம் கிட்டினல் "வாய்ந்த, மதுகைட

---

1. இனி, "மிகுஞானம்" என்றது, பூதனைபக்கலிலும் 'தாய்' என்றே நினைத்து முலையுண்ட அறிவைச் சொல்லுகிறது என்று வேறும் ஒருபொருள் கூறத் திருவுள்ளம்பற்றி, அப்படியானுல், அவள் முடியவும் இவன் பிழைக்கவும் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர் 'அன்றிக்கே' என்று தொடங்கி. 'அத்தாலே' என்றது, பொருளின் தன்மையாலே என்றபடி. "அமரர்தம் அமுதே! அசுரர்கள் நஞ்சே!" என்பது தமிழ்மறை. 8. 1: 4.

2. நஞ்சுமுலை உண்ட பின்பு நச்சரவிலே கிடந்தது, 'ஸ்த்தாவரமான விஷத்துக்கு ஜங்கமமான விஷம் பரிஹாரம்' என்னும் நினைவாலே என்று கொண்டு அருளிச்செய்கிறுர் 'உணவுக்குத் தகுதியாக' என்று தொடங்கி.

3. "முலைசுவைத்த, படநாகத் தணைக் கிடந்த" என்று கூட்டி பாவம் அருளிச்செய்கிறுர் 'விரோதியை' என்று தொடங்கி.

4. "படநாகத் தணைக் கிடந்த பரம்புருடன் முலைசுவைத்த" என்று கூட்டி பாவம் அருளிச்செய்கிறுர் 'அன்றிக்கே' என்று தொடங்கி. "திருவனந்தாழ்வானுகிற கட்டிலை விட்டு" என்பது, ஹரிவம்சம். 113 : 62.

5. படுக்கையை விட்டு வரக் கூடுமோ? என்ன. அதற்கு விடை அருளிச்செய்கிறுர் 'அடியார்களுடைய' என்று தொடங்கி. 'போகம்' என்றது, சிலேடை: பாம்பின் உடல் என்றும், இன்பம் என்றும் பொருள்.

6. சர்வேசுவரனைக் கிட்டினர்க்கெல்லாம் சந்தோஷம் வரக் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறுர் 'அசுரர்களுடைய கூட்டம்' என்று தொடங்கி. "வாய்ந்த" என்ற பகுதியையுடைய பாசுரம், மூன்றாம் திருவந். 66.

பரும் வயிறுருகி மாண்டார்" என்று முடியுமாறுபோலே யாயிற்று, அநுகூலர் கூட்டம் கிட்டினால் வாழும்படி. பருவரைத் தோள் - [1] திருவனந்தாழ்வானுடைய சம்பந்தத்தால், ஏகரூப மான விக்கிரஹத்துக்குப் பிறக்கும் வேறுபாட்டைச் சொல்லு கிறது. [2] கர்மங் காரணமாக வருகின்ற வேறுபாடுகள் இல்லை என்ற இத்தனை போக்கி, அடியார்களுடைய சேர்க்கையில் வேறுபாடு இல்லை எனில், அவ்வஸ்துவை அணைய ஆசைப்பட வேண்டாவே? பரம்புருடன் - தகட்டில் அழுத்தின மாணிக்கம் நிறம் பெறுமாறு போன்று, திருவனந்தாழ்வான் மேலே சாய்ந்த பின்பாயிற்று, 'சர்வாதிகன்' என்று தோன்றிற்று. நெடு மாயன் - [3] என் மடியில் சுவடு அறிந்த பின்பு படுக்கை யில் பொருந்தி அறியாதவன். கவராத நிறையினால் குறை இலமே - அப்படி ஆதரித்தவன் இப்படி உபேக்ஷித்த பின் னர், எனக்கு என்னுடைய பெண்மையால் என்ன காரியம் உண்டு? [4] நிறை - அடக்கம். என்றது, தன்னகவாயில் ஓடு கிறது பிறர்க்குத் தெரியாதபடி யிருக்கும் பெண் தன்மை. (3)

## 413.

நிறையினால் குறையில்லா நெடும்பணைத்தோள் மடப்பின்னை
பொறையினால் முலையணைவான் பொருவிடைஏழ் அடர்த்துகந்த
கறையினார் துவருடுக்கைக் கடையாவின் கழிகோல்கைச்
சறையினார் கவராத தளிர்நிறத்தால் குறையிலமே.

---

1. "படநாகத் தணைக் கிடந்த" என்றதன்பின், "பருவரைத்தோள்" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'திருவனந்தாழ்வானுடைய' என்று தொடங்கி.

2. ஆனால், "அவிகாராய" என்றதற்குக் கருத்து என்? என்னில், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கர்மங் காரணமாக' என்று தொடங்கி.

3. "நெடுமாயன்" என்பதற்கு, மிக்க வியாமோகத்தையுடையவன் என்று பொருள் கூறத் திருவுள்ளம்பற்றி, மிக்க வியாமோகத்தையுடையனாகை யாவது ஏது? என்ன, 'என்மடியிலே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார். மடி - வயிறு. சுவடு - இனிமை. 'என்மடியில் சுவடு' என்ற இவ்விடத்தில் "கண்ணன் என் ஒக்கலையானே" என்னும் மறைமொழி அநுசந்திக்கத்தகும். திருவாய். 1. 9 : 4.

4. நிறை - காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கம் என்பர் கலியுரையாசிரியர். "நிறைஎனப் படுவது மறைபிறர் அறியாமை" என்பது, கலித்தொ. 133.

பொ - ரை :—நிறை என்னும் குணத்தாலே குறைவற்றிருக்கின்ற, நீண்ட மூங்கில்போன்ற தோள்களையுடைய மடப்பம் பொருந்திய நப்பின்னைப் பிராட்டியினது தனங்களைச் சேரும் பொருட்டுப் பொறையினாலே, போர் செய்கின்ற இடபங்கள் ஏழனையும் கொன்று மகிழ்ந்த, கறைதோய்ந்த துவர் ஊட்டின உடுக்கையினையும், கடையாவினையும் கழிகோலினையுமுடைய கையினையுடைய சறையினார் விரும்பாத தளிர்போன்ற நிறத்தால் யாதொரு பயனையும் உடையோமல்லோம் என்கிறாள்.

வி - கு :—குறை இல்லா பின்னை என்க. பின்னையினது முலை அணைவான் பொரு விடை ஏழனைப் பொறையினால் அடர்த்து உகந்த சறையினார் என்க. துவர் உடுக்கைச் சறையினார் என்றும், கடையாவினையும் கழிகோலினையுமுடைய கையையுடைய சறையினார் என்றும் தனித்தனியே கூட்டுக. 'கறையினார் துவர் உடுக்கைக் கடையாவின் கழிகோற் கைச் சறையினார்' என்றதன் பொருளை வியாக்கியானத்திற் காணலாகும்.

ஈடு :—நான்காம்பாட்டு. [1] தன்னைப் பேணாமல், பெண் பிறந்தாரைப் பேணும் கிருஷ்ணன் விரும்பாத நிறம் எனக்கு வேண்டா என்கிறாள்.

நிறையினால் குறை இல்லா - [2] கிருஷ்ணன், தன்னைப் பெறுகைக்கு எருதுகளின்மேல் விழுகிற வியாபாரங்களில் தான் வேறுபடாதவளாய் இருக்கிற பெண் தன்மையில் குறைவற்றிருக்கை. என்றது, வேறுபடுதற்குக் காரணம் உண்டாயிருக்கத் தான் வேறுபடாதவளாய் இருந்தபடி. நெடும்பணைத் தோள் - மேல் ஆத்ம குணம் சொல்லிற்று; இங்கு உருவத்தின் குணம் சொல்லுகிறது. [3] நெடியதாய்ப் பணைத்த தோள் என்னுதல்; நெடிய மூங்கில்போலே இருந்த தோள் என்னுதல். இதனால், [4] அரியன செய்தும் பெறவேண்டும்படி காணும் வடிவழகு இருப்பது என்பதனைத் தெரிவித்தபடி.

---

1. "பின்னை முலை யணைவான் பொரு விடை ஏழ் அடர்த்து உகந்த சறையினார் கவராத தளிர் நிறத்தால் குறை இலம்" என்பதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. நிறையின் தன்மையை விளக்குகிறார் 'கிருஷ்ணன்' என்று தொடங்கி.

3. 'பணை' என்பதற்குப் பெருத்த என்றும், மூங்கில் என்றும் இருவகையான பொருள்.

4. "பொரு விடை ஏழ் அடர்த்து உகந்த" என்றதனையுங் கூட்டிபாவம் அருளிச்செய்கிறார். 'அரியன செய்தும்' என்று தொடங்கி.

மடப் பின்னை-மிருதுத்தன்மையுடையவள். மூலை யணைவான் - சேர்க்கைக்காக. பொறையினால் - வியசனத்தைப் பொறுக்குந் தன்மையனாய். என்றது, எருதுகளின் கொம்பாலும் குளம்பாலும் நெருக்குண்ட இதனை, அவள் மூலையாலே பிறந்த [1]விமர்த்தமாக நினைத்திருந்தான் என்றபடி. பொருவிடை ஏழ் அடர்த்து - கேவலம் இடபங்கள் அல்ல கண்டீர், அசுர ஆவேசத்தாலே யுத்த சன்னத்தங்களாய் வந்தவை ஆதலின், 'பொருவிடை' என்கிறது. ஒன்று இரண்டு அல்ல, ஏழு ஆத தன், 'ஏழ்' என்கிறது. அவற்றை ஒருகாலே ஊட்டியாக நெரித்து. உகந்த - 'இனி நாம் இவளைப் பெற்றோமே' என்று உகந்தான். நப்பின்னைப்பிராட்டியை [2]விடைகொண்டு வந்து காணும் கைப்பிடித்தது. நிறையினால் குறையில்லா நெடும்பணைத் தோள் மடப்பின்னை மூலை அணைவான் பொறையினால் பொருவிடை ஏழ் அடர்த்து உகந்த எனக் கூட்டுக.

கறையினார் துவர் உடுக்கை - கறை மிக்குத் [3]துவர் ஊட்டின சிவந்த தோலாயிற்று உடுக்கை. காட்டில் பழங்களைப் பறித்து இடுகையாலே கறை மிக்கிருக்கும்; அதனால், கறைமிக்க துவராயிற்று உடுக்கை; அதனை நோக்கி 'கறையினார் துவர்' என்கிறது. 'உடுக்கை' என்றது, ஆயர்கள் காட்டிற்குப் போகும்போது முள் கிழியாமைக்கு உடுக்கும் உடைத்தோலைச் சொல்லுகிறது.[4]இதனால், அரையில் பீதகவண்ண ஆடை வேண்டாளாயிற்று இவள்; பசுக்களைக் காப்பாற்றின வடிவோடே அணையக் கணிசிக்கிறாள் என்றபடி. கடையாவின்கை - உரிய காலங்களிலே கறப்பதற்குக் கையிலே கடையாவும் கொண்டாயிற்றுத் திரிவது; கடையா - மூங்கிற்குழாய். கழிகோல்கை -

---

1. விமர்த்தம் - இடித்தல். ஊட்டி - கழுத்து. ஏழ் எருதுகளின் கழுத்துக்களையும் கூட்டி ஒரு காலே முறித்ததனைத் தெரிவித்தபடி.

2. 'விடைகொண்டு' என்றது, சிலேடை: இடபங்களைக்கொண்டு என்றும், சேஷத்வம் தோன்ற என்றும் பொருள்.

3. துவர் - சாயம்.

4. திருப்பீதாம்பரத்தைச் சொல்லாமல், தோலைச் சொல்லுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இதனால்' என்று தொடங்கி.

"பெண்ணின் வருத்த மறியாத பெருமான் அரையில் பீதக
வண்ண வாடை கொண்டு என்னை வாட்டந் தணிய வீசீரே"

என்பது நாய்ச்சியார் திரு. 13 : 1.

கணிசிக்கிறாள் - விரும்புகிறாள்.

மூங்கிற்குழாயையும் வீசுகோலையும் கையிலேயுடையவர். கழி கோல்-வீசுகோல். அன்றிக்கே, [1]கொடுவைப் பசுக்களை நியமித்துக் கறக்கைக்கு வீசுகோலைக் கையிலே கொண்டு திரியுமவர் என்னலுமாம். அன்றிக்கே, கழிகோல் என்பதற்கு, முன்னணைக்கன்று பசுக்களோடே போனால் முலையுண்ணுமைக்கு, கொறுக்கோல் என்பது ஒன்றனை அதன் முகத்திலே கட்டி விடுவார்கள்; அதனைச் சொல்லுதல் என்னுதல். [2]சந்யாசிகள் தந்தாமுக்கு என்ன ஓர் இருப்பிடம் இல்லாமையாலே மாத்திரை தொடக்கமானவற்றைக் கையிலே கூடக்கொண்டு திரிவார்களாயிற்று, அவர்கள் போன்று பசுக்களுக்குப் புல்லும் நீரும் உள்ளவிடத்திலே தங்குவார்களித்தனையன்றோ இவர்களும். சறையினர் - [3]சறைகைமணி என்று ஒரு மணி உண்டாயிற்று, ஆயர்கள் அரையிலே கோத்துக்கட்டி முன்னே போகாநின்றால் அந்த ஒலியின் வழியே பசுக்களெல்லாம் ஓடிவரும்படியா யிருப்பதொன்று; அதனையுடையவர்கள். அன்றிக்கே, சறை என்று தாழ்வாய், முதன்மை பெற்ற சாதிகளில் ஒக்க எண்ண ஒண்ணுத தாழ்ந்த ஆயர் குலத்திலே பிறந்தவர் என்னுதல். அன்றிக்கே, சறை என்று சரும்புகையாய், மற்றைய ஆயர்கள் விஷு அயந சங்கிரமணங்களுக்கு உடம்பிருக்கத் தலை குளித்தல், உடம்பிலே துளி நீர் ஏறிட்டுக் கொள்ளுதல் செய்வர்களாகில், இவன் அவ்வாறு செய்வதற்கும் சமயம் அற்று இருக்குமாயிற்றுப் பசுக்களின் பின்னே திரிகையாலே என்னுதல். [4]பாதுகாக்கப்படுகின்ற

1. கொடுவைப்பசு-துஷ்டப்பசு; கறப்பதற்கு இடம் கொடாமல் உதைக்கின்ற பசு.

2. பசுக்களோடே கூடத் திரிவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறூர் ‘சந்யாசிகள்’ என்று தொடங்கி. மாத்திரை - பிக்ஷாபாத்திரம், உறி முதலானவை.

3. “சறையினர்” என்பதற்கு, மூன்று பொருள்: சறைகை மணியையுடையவர் என்றும், தாழ்ந்த சாதியிற் பிறந்தவர் என்றும், அழுக்கடைந்த உடம்பையுடையவர் என்றும். சரும்புகை - தன்னைப் பேணுமை. விஷு - மேஷம் அல்லது, துலாத்தில் சூரியன் பிரவேசிக்குங் காலம். அயனம் - வழி; உத்தராயண தக்ஷிணாயன பிரவேச காலம். சங்கிரமணம் - சூரியன் ஓர் இராசியிலிருந்து அடுத்த இராசிக்குச் செல்லுதல்.

4. அழுக்கடைந்த உடம்பை விரும்புவது என்? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறூர் ‘பாதுகாக்கப்படுகின்ற’ என்று தொடங்கி.

பொருள்களினுடைய ரக்ஷணத்துக்காகத் தன்னைப் பேணாத அவ்வடிவை அணைப்பதற்காயிற்று இவள் ஆசைப்படுகின்றது. என்றது, [1]பிராட்டி, ஆசார பிரதானமான ஜனககுலத்திற் பிறந்தவளாகையாலே, "தீக்ஷிதம்" என்ற சுலோகத்திற் கூறிய அவ்வடிவை விரும்பியது போன்று, ஆசார நிர்ப்பந்தமில்லாத ஆயர்குலத்தில் பிறந்தவளாகையாலே இவ்வடிவை விரும்பினாளாயிற்று இவள் என்றபடி. கவராத தளிர் நிறத்தால் குறை இலம் - அவன் விரும்பாத பிரமசாரி நிறத்தால் என்ன காரியம் உண்டு? என்றது, [2]இராவணனைக் கொன்ற பின்பு பிராட்டி நீராடி எழுந்தருளின போதை நிறம்போலே அவனுடைய வெறுப்புக்கு விஷயமான நிறம் நமக்கு என் செய்ய என்றபடி. [3]இவளைப் போன்று மற்றைப் பிராட்டிமாரில் இப்படி நிறத்தைப் பற்றிச் சொன்னார் இலரே? முதற் பாட்டில் "மணிமாமை குறை யிலம்" என்றாள்; இப்பாட்டில் 'தளிர் நிறத்தால் குறையிலம்' என்கிறாள்; இவற்றுக்கு வாசி என்? என்னில், அங்கு, 'மணிமாமை' என்று அழகையும் மென்மையையும் சொல்லிற்று; இங்கு, நிறத்தைச் சொல்லிற்று. அன்றிக்கே, அங்கு நிறத்தைச் சொல்லிற்றாகில், இங்கு, சேர்க்கையாலுண்டாய அழகிய நிறத்தைச் சொல்லுகிறது.

[4]தீக்ஷிதம்-உறுப்புத்தோலும் வெண்ணெய் பூசின உடம்புமான யஜமான வேஷத்தோடே நின்ற நிலையைக் காண ஆசைப்படாநின்றேன் என்கிறாள். விரத சம்பந்நம் - இருடி ஒரு பட்டினி விடச்சொன்னானாகில் 'இவன் நம்முடைய சௌகுமார்யத்துக்குப் பொறாது என்று சொன்னானித்தனை' என்று நினைத்து நான்கு பட்டினிவிட ஒருப்படுவாராயிற்றுத் தர்ம சிந்தையாலே. வராஜிந தரம் - கூறையுடையையும் காற்கடைக்

1. இவள் ஆசைப்பட்டது, பிராட்டி ஆசைப்பட்டாற்போன்று இருக்கிறது என்று கூறத் திருவுள்ளம்பற்றி அதனை அருளிச்செய்கிறார் 'பிராட்டி' என்று தொடங்கி. இவள் - நப்பின்னைப்பிராட்டி. பிராட்டி - ஜானகி.

2. இதன் விரிவைக் கம்பராமாயணம் மீட்சிப்படலம் 39-முதல் 68-முடியவுள்ள செய்யுட்களில் காணலாகும்.

3. இவளைப்போன்று - ஆழ்வாராகிய நாயகியைப் போன்று. 'நிறம்' என்றது, சிலேடை : முறையும், நிறமும் என்பது பொருள்.

4. மேலே எடுத்த சுலோகத்திற்கு வியாக்கியானம் அருளிச்செய்கிறார் "தீக்ஷிதம்" என்று தொடங்கி. கூறையுடை - திருப்பீதாம்பரம். காற்கடைக்

கொள்ள வேண்டும்படியிருக்கை. சுசிம் - 'ஒரு பெண்ணையும் தீண்டலாகாது; தர்மபத்நியாகையாலே பிராட்டியைத் தீண்டினல் வருவதொரு குற்றம் இல்லையேயன்றே? ஆனபின்னர், அதொழியப் பரிஹரிப்பது' என்றால், அது தன்னிலும் அதிசங்கைபண்ணி, பிராட்டியுடைய திருப்பரிவட்டம் தாக்கினும் முழுகத் தேடாநிற்பர். குரங்கசிருங்கபாணிஞ்ச - "ஏகவஸ்திர தரோ தந்வீ - ஒரே வஸ்திரத்தைத் தரித்தவர், வில்லையுடையவர்" என்னுமதைக்காட்டிலும், கையும் கலைக்கொம்புமாயிருக்குமது தானே போந்திருக்கை. பஶ்யந்தித்வா பஜாம்யஹம் - பகவானைப் பஜனம் பண்ணுவார் பண்ணுவனவெல்லாம் திருஷ்டத்துக்கேயன்றே? ஆகையாலே, திருஷ்டத்துக்காகப் பஜிக்கிறாள் காணும். [1] அங்கும் "சதாபஶ்யந்தி - எப்பொழுதும் பார்த்துக்கொண்டிருப்ப"தே யன்றே? நன்று; வழியில் கண்ணெச்சில் வாராமல் மங்களாசாசனம் செய்கிற பிரகரணத்தில், திருவபிஷேகத்திற்கு அங்கமானவற்றை ஆசைப்படுவான் என்? எனின், மேல் வரும் பலத்தை விரும்பவே, நடுவிலுள்ளது தன்னடையே வருமேயன்றே என்னுமதனைப் பற்றச் சொல்லுகிறாள். என்றது, 'வழிப்போக்கில் கண்ணெச்சில் வாராதொழியவேணும்' என்றேயன்றே மங்களாசாசனம் பண்ணுகிறது; மேல் வரும் பலத்தை விரும்பவே, அது தன்னடையே வருமேயன்றே? என்றபடி. [2] சாவித்திரி

---

கொள்ள - உபேக்ஷை செய்ய. அதிசங்கை - வீண் சந்தேகம். "ஏகவஸ்திரம்" இது, ஸ்ரீராமா. ஆரண். 18 : 12. கலை - மான். 'திருஷ்டத்துக்கு' என்றது, சிலேடை : காட்சியும், கண்களுக்குப் பயனும் என்பது பொருள்.

1. காட்சிக்காகவோ பகவானை வணங்குவது? என்ன, 'அங்கும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. இடையில் வரும் பலத்தின் பொருட்டு மேல் வரும் பலத்தைப் பிரார்த்தித்த பேர் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சாவித்திரி' என்று தொடங்கி. அதாவது, சாவித்திரி என்பாள் ஒரு பெண்பிள்ளையைத் தாய்தந்தையர்கள் ஒருவனுக்குக் கொடுக்க என்று முயற்சி செய்த அளவில், நாரதர் வந்து, 'அவனுக்கு ஆயுள் குறைவு' என்று சொல்ல, அவர்களும் அதனைக்கேட்டு இருக்க, அந்தச் சாவித்திரியானவள் 'எனக்கு அவனேயாகவேணும்; அவனுக்கு என்னைக் கொடுங்கோள்; அவன் ஆயுளுக்கு நான் கடவேன்' என்ன, அதனைக் கேட்டு அவர்களும் அவனுக்கு நீர் வார்த்துக் கொடுக்க, நாட்கள் சில சென்றவாறே, இவனைக் கொண்டுபோக யமதூதர்கள் வந்து கொண்டுபோகிற அளவிலே, அவளும் கூடப் போய் யமன் ஓலக்கத்திலே செல்ல, யமனும் தூதர்களைப் பார்த்து 'இவளை என் கூட்டிக்கொண்டு வந்தீர்கோள்' என்று வெறுத்து, அந்தச் சாவித்திரியைப் பார்த்து, 'உனக்கு

தன் கணவனைக் காட்டி, 'இவனுக்கு நான் பல பிள்ளைகளைப் பெறவேணும்' என்று வேண்டிக்கொண்டாளேயன்றோ. (4)

## 414.

தளிர்நிறத்தால் குறையில்லாத் தனிச்சிறையில் விளப்புற்ற
கிளிமொழியாள் காரணமாக் கிளரரக்கன் நகர்எரித்த
களிமலர்த் துழாயலங்கல் கமழ்முடியன் கடல்ஞாலத்து
அளிமிக்கான் கவராத அறிவினால் குறையிலமே.

பொ - ரை:— தளிர்போன்ற நிறத்தாலே குறைபாடில்லாத, தனித்த சிறையிலே பிரசித்தமா யிருந்த கிளிபோன்ற சொற்களையுடைய பிராட்டி காரணமாக, கிளர்ச்சியையுடைய இராவணனது நகரமாகிய இலங்கையை எரித்த, தேன் பொருந்திய மலர்களையுடைய திருத்துழாய் மாலையானது வாசனை வீசுகின்ற திருமுடியையுடையவனும், கடலாற் சூழப்பட்ட இவ் வுலக மக்களிடத்தே திருவருள் மிகுந்தவனுமான சர்வேசுவரன் விரும்பாத அறிவினால் ஒரு பயனையும் உடையோம் அல்லோம் என்கிறாள்.

வி - கு:—குறை இல்லாத கிளிமொழியாள் என்றும், விளப்புற்ற கிளிமொழியாள் என்றும் தனித்தனியே கூட்டுக. காரணமாக நகர் எரித்த முடியன் என்க.

ஈடு:— ஐந்தாம்பாட்டு. [1]பரம காதலனாய் எல்லாரையும் காக்கின்றவனான சக்கரவர்த்தி திருமகன் விரும்பாத அறிவினால் என்ன பிரயோஜனம் உண்டு எனக்கு? என்கிறாள்.

தளிர் நிறத்தால் குறை இல்லா - [2]"தன் திருமேனியின் ஒளியால் எல்லாத் திக்குக்களையும் இருள் இல்லாதபடி செய்

---

என்ன வேண்டும்?' என்ன, 'கணவன் வேண்டும்' என்ன, 'அவனை ஒழியக் கேள்' என்ன, 'ஆகில், அவனுக்குப் பல பிள்ளைகளை நான் பெறுதல் வேண்டும்' என்ன, அவனும் அப்படியே அவள் விருப்பத்தை முடித்தான் என்பதனைத் தெரிவித்தபடி.

1. "கிளிமொழியாள் காரணமா நகர் எரித்த" என்றதனைக் கடாக்ஷித்துப் 'பரமகாதலனாய்' என்றும், "கடல் ஞாலத்து அளிமிக்கான்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'எல்லாரையும் காக்கின்றவனான' என்றும் அருளிச்செய்கிறார்.

2. பிரிவு நிலையிலேயுள்ள பிராட்டியின் நிறத்தைத் 'தளிர் நிறம்' என்னலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தன் திருமேனியின்' என்று தொடங்கி. இரா. ஸ்ரீராமா. சுந். 15 : 28. அகஞ்சரிப்பட்டபடி - குறைவுபட்டபடி.

கிறவள்" என்கிறபடியே, பிராட்டி பத்து மாதங்கள் திருமஞ்சனம் பண்ணுமையாலே திருமேனியில் புகர் அகஞ்சுரிப்பட்டபடி, பத்துத் திக்குக்களிலும் உண்டான இருளைப் போக்குமளவாயிற்று; [1] "வருத்தம் இருள் இவைகளைப் போக்கவல்ல பிள்ளை என்று பேர்பெற்ற ஒளி" என்பது இரகுவம்சம். தனிச் சிறையில் - [2] ஒளியையும் ஒளியையுடைய பொருளையும் (சூரியனையும்) பிரித்து வைத்தாற்போலே இருப்பது ஒன்றேயன்றோ? அரக்கியர் நடுவில் நிருத்தையா யிருந்தபடி. விளப்புற்ற - [3] "கண்ணீரால் நிறைந்த முகமுடையவளும், இரங்குவதற்குரியவளும், ஆகாரம் இன்மையால் இளைத்திருப்பவளும்" என்கிறபடியே, 'தன்னைப் பேணுதே இருந்தாள்' என்று திருவடியாலே பெருமாளுக்கு விண்ணப்பம் செய்யப்பட்டவள் என்னுதல்; அன்றிக்கே, தெய்வப் பெண்கள் கால்களில் விலங்கை வெட்டி விடுகைக்காகத் தன்னைப் பேணுதே அங்கே புக்குத் தன் காலிலே விலங்கைக் கோத்துக் கொண்டவள் என்று நாட்டிலே பிரசித்தையானவள் என்னுதல். கிளிமொழியாள் காரணமா - திருவடி வாயிலே ஒன்று தங்கிய அவள் வார்த்தையைக் கேட்டு, அவ் வழியாலே [4] "இனியவளும் இனிய வார்த்தையை யுடையவளும்" என்றாரே யன்றோ? அதனை நினைத்துக் '**கிளிமொழியாள்**' என்கிறது. அப்படிப் பட்ட வார்த்தையையுடையவள் காரணமாக என்றபடி. கிளர் அரக்கன் - "கொழுத்தவனான இராவணனுடைய" என்கிற

---

1. இருளைப் போக்கும் என்பதற்குப் பிரமாணம் 'வருத்தம்' என்று தொடங்குவது. இங்கு 'இருளைப்போக்கவல்ல' என்பதுவே வேண்டுவது. இது, இரகுவம்சம். 10 : 2.

2. பிராட்டி, இராக்ஷசிகள் நடுவே இருக்கச்செய்தேயும் "தனிச்சிறை" என்பது என்? என்ன, 'ஒளியையும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். பிராட்டிக்கு ஸ்ரீராமபிரானுடைய பிரிவை ஒழிய வேறு தனி இல்லை என்றபடி. நிருத்தை - தடைபட்டவள்.

3. விளப்புற்ற என்பதற்கு இரண்டு பொருள்: ஒன்று, சொல்லுதல்; இரண்டாவது, பிரசித்தையாயிருத்தல். முதற்பொருளை அருளிச்செய்கிறார் 'கண்ணீரால்' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. சுந். 15 : 23.

4. திருவடி வாயிலே ஒன்று தங்கி வந்த அவள் வார்த்தையைக் கேட்ட பெருமாள் "இனியவள் இனிய வார்த்தையைப் பேசுகின்றவள்" என்கிறார். நேரே பிராட்டியினுடைய வார்த்தையைக் கேட்கும்போது அவருக்கு உண்டாகும் இனிமை சொல்லவேண்டாவே யன்றோ? ஆதலால், "கிளிமொழியாள்" என்கிறது என்றபடி. "இனியவள்" என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகம், ஸ்ரீராமா. சுந். 64 : 15.

படியே, [1] தாயும் தமப்பனும் சேர இருக்கப் பொருதபடியான கிளர்த்தியையுடைய இராவணன். நகர் எரித்த - [2] இராவணனுடைய எல்லாவற்றாலும் நிறைவுற்றிருந்த நகரத்தை எரித்துச் சாம்பலாக்கின. என்றது, பையல் குடியிருப்பை அழித்து [3] மூலையடியே வழி நடத்தின என்றபடி.

களி மலர்த் துழாய் அலங்கல் கமழ் முடியன் - தேனையுடைத்தான மலரோடு கூடின திருத்துழாய் மாலை கமழா நின்றுள்ள திருமுடியையுடையவனே. [4] அவன்தான் இதர சஜாதீயனாய்க் கொண்டு அவதரித்தால், பிரகிருதி சம்பந்தம் இல்லாத பொருள்களும் அதற்குத் தகுதியான வடிவைக் கொண்டு வந்து தோன்றுவன இத்தனையேயன்றோ? ஆகையாலே, அவன் கலம்பகன் கொண்டு வளையம் வைத்தாலும் இவர்கள் எடுத்துச் சொல்லுவது திருத்துழாயை இட்டேயாம். [5] தனக்கேயுரிய சிறப்புப் பொருள்களைக் கொண்டேயன்றோ கவிபாடுவது; பாண்டியர்கள் மற்றையார் கருமுகை மாலையைக் கொண்டு வளையம் வைத்தாலும், அவர்களுக்கே யுரியதான வேம்பு முதலானவற்றை யிட்டே யன்றோ கவிபாடுவது. கடல் ஞாலத்து அளி மிக்கான் - சம்சாரத்தில் தண்ணளி மிக்கவனாயிற்று. சம்சாரிகள் படுகிற கிலேசத்தை நினைத்து, 'இதைப்

---

1. "கிளர்" என்றதனை இராவணனுக்கு அடையாக்கிப் பொருள் அருளிச்செய்கிறார் 'தாயும் தமப்பனும்' என்று தொடங்கி. அதற்கு மேற்கோள் 'கொழுத்தவனான' என்று தொடங்குவது. இது, ஸ்ரீராமா. அயோத். 1 : 7.

2. "கிளர்" என்றதனை நகருக்கு அடையாக்கிப் பொருள் அருளிச்செய்கிறார் 'இராவணனுடைய' என்று தொடங்கி. "கிளர்" என்றது, இராவணனுக்கு அடையாகும்போது செருக்கிலே நோக்கு. நகருக்கு அடையாகும்போது நிறைவிலே நோக்கு.

3. 'மூலையடியே வழிநடத்தின' என்றது, நகரம் பாழானால் தடையில்லாமல் மூலைக்கு மூலை நடக்கலாம்படி செய்கையைக் குறித்தபடி.

4. சக்கரவர்த்திதிருமகனுக்குத் திருத்துழாய்மாலையுண்டோ? என்ன, 'அவன்தான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். கலம்பகன் - பல மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை.

5. அதற்கே வேறும் ஒரு காரணத்தை அருளிச்செய்கிறார் 'தனக்கேயுரிய' என்று தொடங்கி. மற்றையார் - சேர சோழர்கள். 'முதலானவற்றை' என்றது, ஆத்திமாலையையும் பனம்பூமாலையையும்.

போக்கவேணும்' என்று திருவுள்ளம் [1] இங்கே வேரூன்றின படி. என்றது, பிராட்டியைப் பிரிப்பது, இளையபெருமாளை அகற்றுவதாய், பின்னர் 'அவதாரத்துக்குக் காலமாயிற்று' என்று தேவ காரியத்திலே ஒருப்படுவித்துக் கிளப்பவேண்டும் படியன்றோ இங்கே வேரூன்றினபடி என்றவாறு. கவராத அறிவினால் குறை இலம் - அப்படிப்பட்டவன் விரும்பாத அறிவினால் காரியம் உடையோம் அல்லோம். [2] பிராட்டியுடைய இரண்டாம் பிரிவிற்கு அடியான வனவாச ஞானம் போலே இருக்கிற இந்த அறிவால் என்ன பிரயோஜனம் உண்டு? [3] பிரிவோடே சேரும்படியாயன்றோ அது இருப்பது. (5)

## 415.

அறிவினால் குறையில்லா அகல்ஞாலத் தவர்அறிய
நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறைஞானத் தொருமூர்த்தி
குறியமாண் உருவாகிக் கொடுங்கோளால் நிலங்கொண்ட
கிறியம்மான் கவராத கிளரொளியால் குறையிலமே.

பொ - ரை:—அறிவு ஒன்றில் மாத்திரம் குறைபாடு இருப்பதை அறியாத அகன்ற உலகிலேயுள்ள மக்கள் அறியும்படியாக உபாயங்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கூறிய நிறை ஞானத்து ஒரு மூர்த்தியும், சிறிய பிரமசரிய வடிவங் கொண்டு கொடிய செயலாலே உலகத்தை அளந்துகொண்ட விரகையுடைய தலைவனுமான சர்வேசுவான் விரும் பாத மிக்க ஒளியால் யாதொரு பயனையும் உடையோம் அல்லோம் என்கிறாள்.

வி - கு:—மூர்த்தியாகிய அம்மான், ஆகிக் கொண்ட அம்மான் என்க. கிறி - விரகு; உபாயம்.

---

1. 'இங்கே வேர் ஊன்றினபடி' என்றது, கிருபையின் மிகுதி யினாலே இவ்வுலகத்தில் திருவுள்ளம் ஊற்றிருந்தபடியைத் தெரிவித்தபடி. அந்த ஊற்றத்தை அருளிச்செய்கிறார் 'பிராட்டியைப் பிரிப்பது' என்று தொடங்கி. என்றது, தேவர்கள் இவர் அங்கே எழுந்தருளுவதற்காகப் பிராட் டியைப் பிரிப்பது முதலான காரியங்களைச் செய்தார்கள் என்றபடி.

2. ஞானம் உத்தேஸ்யம் அன்றோ? என்ன, 'பிராட்டியுடைய' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. பிரயோஜனம் இல்லையோ? என்ன, 'பிரிவோடே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

ஈடு :—ஆறும்பாட்டு. [1]அறிவில்லாதார்க்குத் தன்னை அடைவதற்குரிய உபாயங்களை உபதேசித்து, அறிவு பிறத்தற்குத் தகுதியில்லாதாரை வடிவழகாலே தனக்கு ஆக்கிக் கொள்ளுமவன் விரும்பாத மிக்க ஒளியால் என்ன காரியம் உண்டு?' என்கிறாள்.

அறிவினால் குறை இல்லா - அறிவினால் குறைவுபட அறியாத. அறிவு ஒன்றிலும் ஆயிற்றுக் குறைவுபட அறியாதது. என்றது, நாட்டார் [2]அன்னம் பானம் முதலிய எல்லாவற்றாலும் காரியமுடையராய் இருப்பார்களேயன்றோ? அறிவால் காரியம் இன்றிக்கே இருப்பாராயிற்று என்றபடி. அகல் ஞாலத்தவர் அறிய - பரப்பையுடைத்தான பூமியில் அறிவில் குறைவுபட அறிவார் ஒருவரும் இல்லையாயிற்று; ஆதலால், கல்லைத் துளைத்து நீரை நிறுத்தினாற் போலே இவர்கள் நெஞ்சிலே படும்படி செய்தானாதலின் 'அறிவினால் குறையில்லா அகல் ஞாலத்தவர் அறிய' என்கிறது. நெறி எல்லாம் எடுத்து உரைத்த - கர்மயோகம் முதலாகப் பிரபத்தியோகம் முடிவாக எல்லா உபாயங்களையும் விளக்கமாக உபதேசித்தபடி. [3]ஆத்மாக்களினுடைய பேதங்களைப் போலே போருமேயன்றோ உபாயங்களினுடைய பேதங்களும் ஆதலின், 'நெறி எல்லாம்' என்கிறது. என்றது, கர்ம ஞான பக்திகள், அவதார ரஹஸ்ய ஞானம், புருஷோத்தம வித்யை, ஆத்மாவினுடைய உண்மைத் தன்மை, விரோதிகள் போவதற்குப் பிரபத்தி, கைவல்யத்தை அடைவதற்குப் பிரபத்தி, பகவானை அடைதற்

1. பாசுரம் முழுதினையும் கடாக்ஷித்து, கீதோபதேசத ஆசாரியனையும் வாமனனையும் சொல்லுகிறதற்குப் பிரயோஜனம் சொல்லுகிற வழியாலே அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'அன்னம் பானம் முதலிய எல்லாவற்றாலும் காரியமுடையவர்களாயிருப்பர்' என்றது, அவற்றால் பிரயோஜனமுடையராயிருப்பர் என்றபடி. ஆக, முதல் அடியால் சொன்ன பொருள் யாது? எனின், 'பகவத் விஷய ஞானம் நமக்கு இல்லையே!' என்று குறைவுபட அறியாதவர்கள் என்றதனைத் தெரிவித்தபடி.

3. "நெறி எல்லாம்" என்ற பன்மைக்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'ஆத்மாக்களினுடைய' என்று தொடங்கி. என்றது, ஆத்மாக்கள் பல ஆகையாலே, அந்த அந்தச் சேதநர்க்குக் கர்மத்திற்குத் தகுதியாக ருசி பேதங்களும் உண்டேயன்றோ? அந்த ருசிக்கு அநுகுணமாக என்றபடி. "அவரவர் தமதம" என்ற திருப்பாசுரத்தின் வியாக்கியானத்தை இங்கு நினைவுகூர்க.

குப் பிரபத்தி இவை அடங்க விளக்கமாக அருளிச்செய்தவன் என்றபடி. [1] கர்மயோகத்தை உபதேசிக்க, அவன் 'இந்திரியங்களை அடக்குதல் அரிது' என்ன, 'ஆகில், என்பக்கலிலே நெஞ்சை வை' என்று கர்மத்தை அநுஷ்டித்தாரைப் பிரசங்கத்து, அந்தப் பிரசங்கத்தாலே அவதார ரஹஸ்யத்தை உபதேசித்து, பின்னர் ஞானயோகத்தை உபதேசித்து, 'ஞானத்தின் தெளிவிற்கு உறுப்பாக என்பக்கலிலே நெஞ்சை வை' என்று பின்பு பக்தியோகத்தை உபதேசித்து, அங்கு 'விரோதியாகிய பாபங்கள் அழிவதற்கும் பக்தி அதிகரிப்பதற்குமாக என்பக்கலிலே நெஞ்சை வை' என்றுகூறி, பின்னர் [2] "எந்தப் புருஷனிடத்திலிருந்து சம்சாரத்தின் சம்பந்தமானது நீண்ட காலமாகப் பரவி இருக்கிறதோ" [3] "அந்தச் சர்வேசுவரனையே ரக்ஷகமாக அடைவாய்" என்றும், [4] "சத்யசங்கல்பம் முதலான குணங்களோடு கூடின என்னையே எவர்கள் சரணமடைகின்றார்களோ" என்றும் அவற்றுக்கு உறுப்பாகப் பிரபத்தியை விதித்து, அவ்வழியாலே சொரூப ஞானத்தைப் பிறப்பித்து, [5] "என்னுடைய இந்த மாயைதானே மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம் என்னும் இந்த எட்டு வகையாகப் பிரிந்திருக்கிறது" என்று தொடங்கி, [6] "ஜீவசொரூபமானதும் என்னுடைய அதீனமானதுமான பிரகிருதியைச் சிரேஷ்டம் என்று அறி" என்கிறபடியே, சேதன அசேதனங்கள் தனக்குச் சரீரம் என்றுகூறி, அவ்வழியாலே ஒருவன் தன் பேற்றுக்குத் தனக்குச் சாதன அநுஷ்டானம் பண்ணுகையில் தகுதியின்றிக்கே இருக்கிறபடியைக் காட்டி, [7] 'இவைதாம் செய்து தலைக்கட்டப்போகாது'

---

1. 'கர்மயோகத்தை' என்றது முதல், 'பிரபத்திமார்க்க முடிவாக உபதேசித்தபடியைச் சொல்லுகிறது' என்றது முடிய, பகவத்கீதையைச் சுருங்க அருளிச்செய்தபடி. பிரசங்கித்தல் - இடைப்பிறவரலாகச் சொல்லுதல்.

2. ஸ்ரீ கீதை. 15: 4.

3. ஸ்ரீ கீதை. 18: 62.

4. ஸ்ரீ கீதை. 7: 14.

அவற்றுக்கு உறுப்பாக - அந்தக் கர்ம ஞான பக்திகளுக்கு அங்கமாக.

5. ஸ்ரீ கீதை. 7: 4.

6. ஸ்ரீ கீதை. 7: 5.

7. ஸ்ரீ கீதை 3: 1-ஆம் சுலோகத்தைத் திருவுள்ளம்பற்றி, "இவைதாம் செய்து தலைக்கட்டப்போகாது என்று சொல்லும்படி" என்கிறார்.

என்று சொல்லும்படி இதன் அருமையை அவன் நெஞ்சிற் படுத்தி, [1]அவன்தான் அறிந்து கேட்டவற்றிற்குப் பரிஹாரம் பண்ணி, [2]அவன் அறியாதே கேட்கமாட்டாதவற்றையும் தானே அறிவித்து, பிரபத்திமார்க்கம் முடிவாக உபதேசித்த படியைச் சொல்லுகிறது. 'ஒருவன் சொன்னான்' என்ற அள வில் அது பிரமாணமாமோ? ஆப்தமாக வேண்டாவோ? என் னில்,அதற்குவிடை அருளிச்செய்கிறார் மேல்: நிறை ஞானத்து ஒருமூர்த்தி-நிறைந்த ஞானத்தை யுடைத்தான ஒப்பற்றதான சொரூபத்தையுடையவன். என்றது, இத்தலையில் [3]அஜ்ஞான மும் அகிஞ்சித்கரமாம்படியான ஞானபூர்த்தியையுடையவன் என்பதனைத் தெரிவித்தபடி. [4]பிரமாணமாய் எல்லார்க்கும் ஞானத்தைப் பண்ணிக்கொடுப்பதான வேதத்தினுடைய நித்தியத்வமும் அபௌருஷேயத்வமும் தன் அதீனமாம்படி அவற்றை நினைத்துச் சொல்லுமவனுயுள்ளவன். [5]வேதார்த் தத்தை விரித்து அருளிச்செய்தவன். குறிய - கோடியைக் காணியாக்கிக் கொண்டாற் போலே, வளர்ந்த போதையிற் காட்டிலும் கவர்ச்சிகரமாய் இருக்கிறபடி. மாண் உருவாகி - [6]பிறந்தபோதே இரப்பினை மேற்கொண்டு, அதுவே பயிற்சி யாய் இருந்தபடியாலே, 'பிறப்பதற்கு முன்பெல்லாம் இது வேயோ யாத்திரை?' என்னும்படிக்குத் தகுதியாகவாயிற்று, [7]'உண்டு' என்று இட்டபோதொடு 'இல்லை' என்று சொல்லிக்

---

1. 'அவன்தான் அறிந்து கேட்டவற்றிற்குப் பரிஹாரம் பண்ணி' என்றது, ஸ்ரீ கீதை. 6 : 38-ஆம் சுலோகத்தைத் திருவுள்ளம்பற்றி.

2. 'அவன் அறியாதே கேட்கமாட்டாதவற்றையும் தானே அறிவித்து' என்றது, ஸ்ரீ கீதை. 18 : 64-ஆம் சுலோகத்தைத் திருவுள்ளம்பற்றி.

3. 'அஜ்ஞானமும் அகிஞ்சித்கரமாம்படி' என்றது, இவனுடைய அறிவின்மையால் அழிவு வாராதபடி என்றபடி.

4. ஞானநிறைவு மாத்திரம் போதியதாமோ? என்றும் உள்ளதாய்ப் புருஷனால் செய்யப்படாததாயுமுள்ள வேதம் மூலமாக வேண்டாவோ பிரமாணம் ஆவதற்கு? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரமாணமாய்' என்று தொடங்கி.

5. ஸ்ரீ கீதையும் வேதார்த்தம் என்கிறார் 'வேதார்த்தத்தை' என்று தொடங்கி.

6. "ஆகி" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'பிறந்தபோதே' என்று தொடங்கி. 'தகுதியாகவாயிற்று' என்றதனைப் பின்னே வருகின்ற 'தழும்பு எறினபடி' என்றதனோடு கூட்டிப் பொருள் காண்க.

7. "மாண்" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'உண்டு என்று இட்டபோதொடு' என்று தொடங்கி.

கதவு அடைத்த போதொடு வாசியற முகமலர்ந்து போகும் படிக்குத் தகுதியாகவாயிற்று இரப்பிலே தழும்பு ஏறினபடி. ஆக, அறிவிக்கக் கேளாதாரை [1] வடுக விடுநகம் இட்டு வடிவழகாலே தனக்கு ஆக்கிக் கொள்ளுமவன் என்பதனைத் தெரிவித்தபடி. கொடுங் கோளால் - [2] வெட்டிய கோளாலே; என்றது, வடிவழகைக் காட்டி அவனை வாய்மாளப் பண்ணினபடியைத் தெரிவித்தபடி. அன்றிக்கே, 'கொடு' என்றதனைக் 'கோடு' என்றதனுடைய குறுக்கல் விகாரமாகக் கொண்டு, கோடு என்பதற்கு,விலங்குதல் என்று பொருள்கூறி, விலங்குதலாவது, செவ்வைக்கேடு என்று கொண்டு, செவ்வைக்கேடாவது, மூன்று அடி கேட்டு இரண்டு அடிகளாலே அளப்பது, சிறு காலைக் காட்டிப் பெரிய காலாலே அளப்பது; ஆக, இப்படிகளாலே அவனை வஞ்சித்தபடியைச் சொல்லுகிறது என்னுதல். என்றது, துஷ்டசாதனத்தைப் பிரயோகம் செய்தவர்களுக்கு அதற்குத் தகுதியாக உத்தரம் சொல்லுவாரைப் போலே, அவன் செவ்வைக் கேட்டிற்குத் தகுதியாகத் தானும் செவ்வைக் கேடனாய்க் கொண்டமையைத் தெரிவித்தபடி. கிறி அம்மான் - அவன் தரும் விரகு அறிந்து வாங்க வல்ல பெருவிரகனான சர்வேசுவரன். [3] "பெருங்கிறியான்" என்னக் கடவதன்றோ? கவராத கிளர் ஒளியால் குறை இலமே- செவ்வை கெடவாகிலும் தன்னுடைமையைத் தனக்கு ஆக்கிக் கொள்ளுமவன், முன்னரே இசைந்து தன்னைப் பெறவேணும் என்றிருக்கிற எனக்கு வந்து முகங்காட்டித் தனக்கு ஆக்கிக் கொள்ளாத பின்பு எனக்கு இத்தால் காரியமுண்டோ? கிளர் ஒளி - மிக்க ஒளி; என்றது, சமுதாய சோபை. (6)

## 416.

கிளரொளியால் குறையில்லா அரியுருவாய்க் கிளர்ந்தெழுந்து
கிளரொளிய இரணியனது அகல் மார்பங் கிழித்துகந்த
வளரொளிய கனலாழி வலம்புரியன் மணிநீல
வளரொளியான் கவராத வரிவளையால் குறையிலமே.

---

1. வடுக விடு நகம் - வடுகன் கட்டும் கிட்டிக்கோல்.

2. 'வெட்டிய கோளாலே' என்றது, பலாத்காரத்தாலே கொள்ளுதலைத் தெரிவித்தபடி. கோள் - கொள்ளுதல்.

3. திருவிருத்தம். 91.

பொ - ரை:—கிளர்ந்த ஒளியாலே குறைபாடில்லாத நரசிங்க உருவமாய்க் கிளர்ந்து எழுந்து, கிளர்ந்த ஒளியையுடைய இரணியனுடைய அகன்ற மார்பினைக் கிழித்து மகிழ்ந்த, வளர்கின்ற ஒளியையுடைய பிரகாசம் பொருந்திய சக்கரத்தையும் பாஞ்சஜன்யம் என்னும் சங்கினையும் நீலமணிபோன்று வளர்கின்ற ஒளியினையுமுடைய சர்வேசுவரன் விரும்பாத வரிகளையுடைய வளையல்களால் ஒரு பிரயோஜனத்தையுமுடையோம் அல்லோம் என்கிறாள்.

வி - கு:—கிளர்தல் - மிக்குப்பொலிதல். எழுந்து கிழித்து உகந்த ஒளியான் என்க. அரி - சிங்கம். வரி - அழகு; கீற்றுமாம்.

ஈடு:—ஏழாம்பாட்டு. [1]பெற்ற தமப்பன் பகையாக, பாலனானவனுக்கு உதவினவன், தன்னால் உதவப்பெறாமல் நோவுபடுகிற எனக்கு உதவானாகில், நான் ஆபரணம் பூண்டு அலங்கரித்திருக்கின்ற இவ் வலங்காரம் யார்க்கு? என்கிறாள்.

கிளர் ஒளியால் குறை இல்லா அரி உருவாய் - கிளர்ந்த ஒளியால் குறைவின்றிக்கேயிருக்கின்ற நரசிம்ஹமாய். [2]"ஜ்வலந்தம் - பிரகாசித்துக்கொண்டிருப்பது" என்கிற மந்திரார்த்தம் தோற்றச் சொல்லுகிறது. கிளர்ந்து எழுந்து - சீறிக்கொண்டு தோற்றி என்றது, [3]"பிறை எயிறு அன்று அடல் அரியாய்ப் பெருகினனே" என்கிறபடியே, சிறுக்கன்மேலே அவன் முடுகினவாறே கிளர்ந்தபடி. கிளர் ஒளிய இரணியன் - மிக்க ஒளியையுடைய இரணியன். ஆசுரமான ஒளியைக் குறித்தபடி. [4]நரசிம்ஹமும் பிற்காலித்து வாங்கும்படியாயிற்றுப் பையல் கிளர்த்தி இருந்தபடி. அகல் மார்பம் - அகன்ற

---

1. "கிளர் ஒளியால் குறையில்லா அரியுருவாய்" என்பது போன்றவைகளையும், "கவராத வரிவளையால் குறை இலம்" என்பதனையும் திருவுள்ளம் பற்றி அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. நரசிம்ஹ அவதாரத்தில் ஒளி உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "ஜ்வலந்தம்" என்று.

> உக்ரம் வீரம் மஹாவிஷ்ணும் ஜ்வலந்தம் ஸர்வதோமுகம்
> ந்ருஸிம்ஹம் பீஷணம் பத்ரம் ம்ருத்யு ம்ருத்யும் நமாம்யஹம்.

என்பது அம் மந்திரமாகும்.

3. பெரிய திருமொழி. 2. 5: 8.

4. "கிளர் ஒளிய இரணியன்" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'நரசிம்ஹமும்' என்று தொடங்கி. பையல் - அற்பன்.

மார்வை; தேவர்களுடைய வரத்தை [1]ஊட்டியாக இட்டுத் திருவுகிருக்கு இரைபோரும்படியாக வளர்த்த மார்பாதலின் 'அகல் மார்பம்' என்கிறது. கிழித்து - [2]நரசிம்ஹத்தினுடைய மொறுந்த முகத்தையும், நா மடிக் கொண்ட உதட்டையும், குத்துதற்கு முறுக்கின கையையும், அதிர்ந்த அட்டகாசத்தையும் கண்டவாறே, பொசுக்கின பன்றி போலே உருகினுயிற்றுப் பொன்னனுகையாலே, பின்னர் வருத்தமின்றியே கிழித்துப் போகட்டான். [3]நெற்றியது கண்ணும் உச்சியது புருவமுமாய்க் கொண்டு தோற்றினபோது மரத்தினைப் பற்றியுள்ள நெருப்புப் போலே அச்சமாகிய நெருப்பு உள்ளே நின்று எரியப் புக்கவாறே பதஞ்செய்யுமேயன்றோ? உகந்த- 'சிறுக்கனுடைய விரோதி போகப் பெற்றோமே!' என்று உகந்தபடி. அன்றிக்கே, [4]"ஏ தேவனே! உன்னைத் துதித்த என்னிடத்தில் என் தகப்பனுக்குத் துவேஷ பந்தம் உண்டாயிற்று; என்னுடைய அந்தத் தகப்பனுருக்கு அதனாலுண்டான பாபமானது நாசம் அடையட்டும்" என்கிறபடியே, இவன்தான் காற்கட்டி ஆணையிடாதே, இவன்தானே 'கொல்லவேணும்' என்று இசையப் பெற்றோமே யன்றோ என்று உகந்த உகப்பு என்னுதல்.

வளர் ஒளிய கனல் ஆழி வலம் புரியன் - [5]காவற்காட்டில் துஷ்ட மிருகங்களுக்கு ஊட்டி இட்டு வளர்க்குமாறுபோலே, தேவர்களுடைய வரங்களை ஊட்டியாக இட்டு வளர்த்த பையலுடைய மார்பு முழுதும் திருவுகிருக்கு அரைவயிறும்படியாயிற்றே யன்றோ? [6]ஒருவன் கைபார்த்திருப்பார் பலர்

---

1. ஊட்டி - உணவு.

2. பொன்னன் உரத்தைக் கிழிக்கப் போமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நரசிம்ஹத்தினுடைய' என்று தொடங்கி. மொறுந்த - திறந்த.

3. உருக்குவதற்கு நெருப்பு எங்கே உள்ளது? என்ன, 'நெற்றியது கண்ணும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

4. விஷ்ணு புரா. 1. 20 : 21. காற்கட்டி - தடைசெய்து.

5. "கனல்" என்ற அடைமொழிக்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'காவற்காட்டில்' என்று தொடங்கி.

6. 'ஒருவன் கைபார்த்திருப்பார்' என்று தொடங்கிச் சிலேடையாக அருளிச்செய்கிறார். கைபார்த்திருப்பார் - ஒருவனுக்குப் பரதந்திரராயிருப்பார் என்றும், கையிலே இருப்பார் என்றும் பொருள். கைசெய்து - துணைசெய்து என்றும், கையிலே இருந்து என்றும் பொருள்.

உளரானல், அவர்களிலே [1] சிலவர் இவனேடே கைசெய்து, அவனுக்குள்ள [2] உடலையும் தாங்கள் கண்டபடி அழித்து, நீக்கியுள்ள உடலையும் கூறிட்டுத் தாங்களே கொண்டுவிட்டால், மற்றுள்ளார் கத கத எனச் சொல்லாவேண்டாவன்றே? [3] இவர்கள்தாம் முனியாடிகள் அலரோ? [4] 'இப்படி இவர்கள் தாமேயாவது என் நாம் இருக்க?' என்று திவ்ய ஆயுதங்கள் கிளர்ந்தனவாயிற்று. மணி நீல வளர் ஒளியான் - நீலமணி போலே வளராநின்றுள்ள ஒளியையுடையவன். கைமேலே [5] இலக்கைப் பெருதார்க்கு நாடோறும் படி விடவேணுமேயன்றே? படி விடாதபோது அரைக்கணமும் நில்லார்களே அவர்கள். இவர்கள் விருத்தவான்கள் ஆகையாலேயன்றே கைமேலே இப்படி பெற்று ஜிவிக்கிறுர்கள்; "படி கண்டறி

---

1. அழுதனர் சிலவர் முன்னின் றூர்த்தனர் சிலவர் அண்மித்
தொழுதனர் சிலவர் ஆடித் துள்ளினர் சிலவர் அள்ளி
முழுதுற விழுங்கு வார்போல் மொய்த்தனர் சிலவர் சுற்றும்
தழுவினர் சிலவர் கொண்டு சுமந்தனர் சிலவர் தாங்கி.

என்பது கம்பராமாயணம். திருவடி தொழுத பட. 4.

2. உடல் - செல்வமும், சரீரமும். கண்டபடி - கண்ட பிரகாரம். 'கிழித்து' என்பதற்கு அழித்து என்றும், இரண்டு கூருக்குதல் என்றும் பொருள். 'கூறிட்டு' என்பதற்கு, கண்டித்து என்றும், கூறுசெய்து என்றும் பொருள். 'தாங்களே' என்றது, நகங்களே. 'மற்றுள்ளார்' என்றது, திருவாழியாழ்வான் தொடக்கமானுரை. கத கத என்ன - கோபிக்க என்றும், ஒலிசெய்ய என்றும் பொருள்.

3. இவர்கள் சீறுதற்குக் காரணம் என்? என்ன, 'இவர்கள்தாம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறுர். 'முனியாடிகள்' என்றது, சிலேடை: கையின் முன்னிடத்திலிருப்பவர்கள் என்றும், சேனையின் முன்னிடத்திலிருப்பவர் என்றும் பொருள்.

4. "கிளர்" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறுர் 'இப்படி' என்று தொடங்கி. 'தாமே யாவது என்?' என்றது, நகங்கள் தாமே கூறிட்டுக் கொள்கிறபடி எப்படி? என்றபடி.

5. இலக்கு - யாத்ரா ஜீவனமான பணமும், இலக்ஷ்யமும். படி - அரிசிப் படியும், திருமேனியும். என்றது, கைமேலே இருந்துவைத்து இலக்ஷ்யம் பெருதார்க்குச் சந்தோஷத்தையுண்டாக்குவதற்காகத் திருமேனியைக் கொடுக்க வேணுமேயன்றே? என்றபடி. 'படி' என்பது, திருமேனி என்ற பொருளைக் காட்டுவதற்கு மேற்கோள், "படி கண்டறிதியே" என்பது. இது, முதல் திருவந். 55.

தியே" என்னக்கடவதன்றே ? [1] "எப்பொழுதும் பார்த்துக் கொண்டே இருக்கிறார்கள்" என்கிறபடியே, இப்படி கண்டு ஜீவிக்குமதேயன்றே உள்ளது. 'மணி நீல வளர் ஒளி' என்பது என் ? அப்போது திருமேனி வெளுத்தன்றே இருந்தது ? என்னில், 'சிறுக்கன் துன்பம் தீரப் பெற்றேமே' என்று திருமேனி குளிர்ந்தபடியைச் சொல்லுகிறது. கவராத வரிவளையால் குறை இலமே - அவ்வடிவையுடையவன் தானே வந்து மேல் விழுந்து விரும்பி வாங்கி இட்டுக்கொள்ளாத இவ் வளையால் எனக்கு என்ன காரியம் உண்டு ? என்கிறாள். (7)

## 417.

வரிவளையால் குறையில்லாப் பெருமுழக்கால் அடங்காரை
எரியழலம் புகஊதி இருநிலம்முன் துயர்தவிர்த்த
தெரிவரிய சிவன்பிரமன் அமரர்கோன் பணிந்தேத்தும்
விரிபுகழான் கவராத மேகலையால் குறையிலமே.

பொ - ரை :—வரிகளையுடைய பாஞ்சஜன்யம் என்னும் சங்கினது குறைபாடு இல்லாத பெரிய ஒலியால், எரிகின்ற அச்சமாகிய நெருப்பானது பகைவர்கள் மனங்களிலே புகும்படியாக ஊதிப் பெரிய நிலத்தினது துன்பத்தை நீக்கிய, அறிதற்கு அரிய சிவனும் பிரமனும் இந்திரனும் வணங்கி ஏத்துகின்ற விரிந்த கல்யாண குணங்களையுடைய சர்வேசுவரன் விரும்பாத மேகலையால் யாதொரு பயனையும் உடையோம் அல்லோம் என்கிறாள்.

வி - கு :—வரிவளையினது குறை இல்லாத பெருமுழக்காலே அடங்கார் மனங்களிலே எரி அழலம் புக ஊதி நிலத்தினது துயரைத் தவிர்த்த விரிபுகழான் என்க. வளையால், அடங்காரை என்பன : வேற்றுமை மயக்கங்கள். 'தெரிவரிய' என்பது, 'சிவன்' முதலானோர்கட்கு அடை.

ஈடு :—எட்டாம்பாட்டு. [2] உலகத்திற்கு உபகாரத்தைச் செய்த சர்வேசுவரன், தனக்கே உரியவளான என்னை

---

1. இந்தப் படியைக் காணுதல் ஜீவிப்பதற்குக் காரணமாயிருக்குமோ ? என்ன, 'எப்பொழுதும்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, ஸ்வோதாஸ்வதரம்.

2. "இருநில முன் துயர் தவிர்த்த" என்றதனைக் கடாக்ஷித்து 'உலகத்திற்கு' என்று தொடங்கி அவதாரிகை அருளிச்செய்கிறார். மேகலை - உயர்ந்த உடை.

உபேக்ஷை செய்வானேயாகில், என்னுடைய மேகலையால் எனக்கு என்ன பிரயோஜனம் உண்டு? என்கிறாள்.

வரி வளையால் - [1]ஸ்ரீ பாஞ்ச ஜன்யத்தாலே. வளை - சங்கு. குறை இல்லாப் பெருமுழக்கால் - [2]"அந்த ஒலியானது திருத ராஷ்டிரன் புத்திரர்களுடைய நெஞ்சுகளைப் பிளந்தது" என்றும், [3]"அந்தப் பாஞ்சஜன்யமானது, பாதாளம் ஆகாயம் திக்குக்கள் திக்குப்பாலர்கள் ஆகிய இவற்றோடு கூடின உலகத்தை நடுங்கச்செய்தது" என்றும் கூறப்படுகின்றபடியே, பகைவர்கள் அளவல்லாத பெரிய ஒலியாலே. "ஹஸ்தேந ராமேண-கையினாலே ஸ்ரீ ராமனாலே" என்னுமாறுபோன்று, 'வரிவளையால் பெருமுழக்கால்' என்பது வேற்றுமை மயக்கம். அடங்காரை - பகைவர்களை. எரி அழலம் புக ஊதி - எரியாநின்றுள்ள நெருப்பானது அவர்கள் மனங்களிலே புகும்படி ஊதி. என்றது, பயஅக்னி கொளுந்தும்படிசெய்து என்றபடி. அடியார்களுடைய பகைவர்கள் கழிய ஊதியது [4]இவளையிட்டேயன்றோ? இருநிலம் முன் துயர் தவிர்த்த-பரப்பையுடைத்தான பூமியில் முன்பே யுண்டான துக்கத்தைப் போக்கின. என்றது, என் சொல்லியவாறோ? எனின், முன்பே பிடித்துத் துக்கத்தைப் போக்குமவனைப் போருமவன், இன்று இத்தலையை நோவுபட விட்டிருக்குமாகில், பின்னை எனக்கு என்னுடைமை கொண்டு காரியம் என்? என்கிறாள் என்றபடி. [5]"தேவர்களுக்குப் பலம் விருத்தியடைந்தது, யோகிகளுக்குத் தெளிவும்

---

1. "வரி" என்பதற்கு அழகு என்று பொருள் கூறத் திருவுள்ளம் பற்றி அதனை அருளிச்செய்கிறார் 'ஸ்ரீ பாஞ்சஜன்யத்தாலே' என்று. 'ஸ்ரீ' என்பதற்கு, அழகு என்பது பொருள்.

2. "குறையில்லா" என்று கூறிப் பின்னர், "பெருமுழக்கால்" என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'அந்த ஒலியானது' என்று தொடங்கி. இது, ஸ்ரீ கீதை. 1 : 19.

3. பாரதம் துரோண பர்.

4. 'இவளையிட்டே யன்றோ?' என்றது, சிலேடை: இந்தப் பாஞ்சசன்யம் என்னும் சங்கைக் கொண்டே யன்றோ? என்பது நேர் பொருள். இவள் காரணமாக அல்லவா? என்பது, தொனிப் பொருள். சங்கு என்ற பொருளில் 'இவ்வளை' என்று ஒற்று மிகுக்க.

5. ஸ்ரீ பாஞ்சசன்யத்தின் ஒலி அநுபவிக்கப் படுகின்ற பொருளாயிருக்க அதனை இவள் 'விரோதி நிரசகம்' என்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தேவர்களுக்கு' என்று தொடங்கி. இது, விஷ்ணுபுரா. 5. 23 : 26.

விருத்தியடைந்தது", [1]"அந்தச்சங்கின் ஒலியானது திருதராஷ்டிரன் புத்திரர்களுடைய மனங்களைப் பிளந்தது" என்கிற படியே, ஸ்ரீ பாஞ்சஜன்யத்தின் ஒலியாகிற இதுதான் அநுகூலர் கேட்க ஆசைப்பட்டிருப்பதுமாய், பிரதிகூலர் முடிகைக்கு ஏதுவுமாய் இருப்பது ஒன்றே யன்றோ?

[2]பெரியாழ்வார் திருமகளார்க்கும் விசேடித்து ஜீவனமாயிருப்பது ஒன்றே யன்றோ இது; "பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியும், சார்ங்கவில் நாணொலியும் தலைப் பெய்வது எஞ்ஞான்று கொலோ" என்பது நாய்ச்சியார் திருமொழி. [3]என்றது, ஸ்ரீ ஜனகராஜன் திருமகளுக்கும் உருக்குமிணிப் பிராட்டிக்கும் உண்டான விடாய் தனக்கு ஒருத்திக்கும் உண்டாகையாலே, அவர்கள் இருவரும் பெற்ற பேற்றை நான் ஒருத்தியும் ஒருகாலே பெறவேணும் என்கிறாள் என்றபடி. [4]'இது பட்டர் அருளிச்செய்ய நான் கேட்டேன்' என்று நம்பிள்ளை அருளிச்செய்வர். [5]சிசுபாலன், சுயம்வரத்திலே வந்தபோது உருக்குமிணிப் பிராட்டி, 'இவ்வளவிலே கிருஷ்ணன் வந்து முகங்காட்டிற்றிலனாகில் நான் பிழையேன்' என்ன, அவள் கலங்கின சமயத்திலே புறச்சோலையிலே நின்று ஸ்ரீ பாஞ்சஜன்யத்தை முழக்க, அது வந்து செவிப் பட்டது; இராவணன் மாயாசிரசைக் காட்டியபோது பிராட்டி தடுமாற, அவ்வளவிலே வில்லின் நாண் ஒலி வந்து

---

1. ஸ்ரீகீதை. 1 : 19.

2. ஸ்ரீ பாஞ்சசன்யத்தின் ஒலி தாரகம் என்று ஆசைப்பட்ட பேர் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பெரியாழ்வார்' என்று தொடங்கி.

கோங்கலரும்பொழில் மாலிருஞ் சோலையில் கொன்றைகள்மேல்
தூங்குபொன் மாலைக ளோடுஉட னாய்நின்று தூங்குகின்றேன்
பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியும்
சார்ங்கவில் நாணொலியும் தலைப்பெய்வது எஞ்ஞான்று கொலோ.

என்பது அத் திருப்பாசுரம்.

3. அவர்கள் ஒன்றை விரும்ப, ஆண்டாள் இரண்டனையும் விரும்புகிறபடி என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'என்றது' என்று தொடங்கி.

4. இது - இந்தப் பொருள்.

5. உருக்குமிணிப் பிராட்டியும், பிராட்டியும் விரும்பியது எப்போது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சிசுபாலன்' என்று தொடங்கி,

செவிப்பட்டது; [1] அவ்விருவர் விடாயும் தனக்கு ஒருத்திக்கும் உண்டாகையாலே, இரண்டும் ஒருகாலே பெறவேணும் என்று ஆசைப்படுகிறாளாயிற்று இவள். தெரிவு அரிய சிவன் பிரமன் அமரர்கோன் பணிந்து ஏத்தும் விரி புகழான் - [2] பாரதப் போரை முடிய நடத்தினமை காண்கையாலே, தாங்கள் பிறரால் அறியப்படமாட்டாதவர்களாக நினைத்திருப்பாருமாய்ப் பூமியில் கால்பாவாமையால் வந்த செருக்கினையுடையருமான சிவன் தொடக்கமானார் செருக்கு அற்றவர்களாய்க் கொண்டு வந்து விழுந்து ஏத்தும்படியான பரந்த புகழையுடையவன். [3] ஒரு கொசுகுத் திரள் இருந்தது என்னா, திருப்பாற்கடலில் ஒருமூலை சுவறாதே யன்றோ? அப்படியே, இவர்கள் ஏத்தா நின்றால் ஏத்தின இடம் அளவுபட்டு ஏத்தாத இடம் விஞ்சும்படியான புகழையுடையவனாதலின் 'விரிபுகழான்' என்கிறது. கவராத மேகலையால் குறை இலமே - அவன் விரும்பாதே நானே உடுத்து முசியும்படியான மேகலை எனக்கு என் செய்ய? அன்றிக்கே, [4] உடைமாறாத பரிவட்டங்கொண்டு காரியம் என்? என்னுதல். அன்றிக்கே, ரக்ஷகனாய்த் தான் வந்து புகழ் படைத்துப்போருகிறவன், 'இத்தலையை ரக்ஷித்து வரும் புகழ் வேண்டா, அது தவிர்ந்தால் வரும் பழி வர அமையும்' என்று இருந்தானாகில், நான் எனக்குப் பழியாம்படி [5] பரிவட்டம் பேணி இருக்கவோ? என்னுதல்.

இனி, வரிவளையால்....குறையிலமே-வாயாடி. வாய்க்கரைப் பற்றை அடுத்தூணாகவுடையவன். எதிரிகள் முடுகினால் இவன்

---

1. மேலே கூறிய பொருளை, பிரகரணத்தோடே சேர்த்துக் காட்டுகிறார் 'அவ்விருவர் விடாயும்' என்று தொடங்கி. இவள் - ஆண்டாள்.

2. 'நடத்தினமை காண்கையாலே' என்பதனை, பின்வருகின்ற 'செருக்கு அற்றவர்களாய்க் கொண்டு வந்து' என்பதனோடு கூட்டுக.

3. "விரி" என்றதற்கு, திருஷ்டாந்தத்தோடு பாவம் அருளிச்செய்கிறார் 'ஒரு கொசுகுத்திரள்' என்று தொடங்கி. அளவுபட்டு - குறைவுபட்டு.

4. உடைமாறாத - மாறாடி உடுக்காத.

5. பரிவட்டம்பேணி இருக்கவோ - நல்ல புடைவை உடுத்திருக்கவோ?

6. முதல் இரண்டு அடிகட்குச் சிலேடையாக வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'இனி' என்று தொடங்கி. வாயாடி - வாசாலனும், வாயிலே வசிக்கிறவனும். வாய்க் கரைப்பற்று - அதரமும், கடி சீமையும். அடுத்தூணாகவுடையவன் - இலக்கைக்கு விட்ட சீமையாகவுடையவன். இலக்கை - மாதச்சம்பளம், அதரத்தை உசந்ஜீவனமாகவுடையவன்.

தான் வாய்க்கரையிலே இருந்து செய்யும் ஆர்ப்பரவத்தைக் கேட்டு எதிரிகள் முழுக்காயாக அவியும்படியாக இருப்பவன். அந்தப்புரத்திலுள்ளார் 'எங்கள் வாய்புகு சோற்றைப்பறித்து ஜீவியாநின்ருன்' என்று முறைப்பட்டால், அவன் [1]வாய் விடாச்சாதி என்னலாம்படியன்ருே இருப்பது. ஓசையும் ஒளியுமுடையனுய் எதிரிகளை ஊதப் பறக்கும்படி செய்தே யன்ருே இருப்பது. [2]அல்லாத ஆழ்வார்கள் கூரியரேயாகிலும், தடியர் கழுந்தர் என்னலாய், இவனைப்போலே சுஷியுடையார் இலரே யன்ருே? [3]மரங்கள்போல் வலிய நெஞ்சராகையாலே எரி யழலம் புக ஊதிக் கொளுத்தினபடி. இப்படி அடியார்களைப் பாது காத்தவன் விரும்பாத மேகலையால் எனக்கு என்ன பிரயோஜனம் உண்டு? என்கிருள் என் னுதல். (8)

418.

மேகலையாற் குறையில்லா மெலிவுற்ற அகல் அல்குல்
போகமகள் புகழ்த்தந்தை விறல்வாணன் புயந்துணித்து
நாகமிசைத் துயில்வான்போல் உலகெல்லாம் நன்கொடுங்க
யோகணைவான் கவராத உடம்பினுற் குறையிலமே.

பொ - ரை :—மேகலையாலே குறைவில்லாத மெலிந்திருக்கின்ற அகன்ற அல்குலையுடைய இன்பத்திற்குத் தக்கவளான உஷையினது

---

1. வாய்விடாச்சாதி - வார்த்தை சொல்லமாட்டாதவன் என்றும், வாயை விடாதவன் என்றும் பொருள். "வரி" என்ற "பதத்தையும், பெரு முழக்கால்" என்றதனையும் கடாக்ஷித்து, 'ஓசையும் ஒளியு முடையனுய்' என்கிருர். இதனுல், வார்த்தை சொல்லவல்லவன் என்றும், ஒளியை யுடையவன் என்றும் தெரிவித்தபடி. என்றது, உலகத்தில் வார்த்தை சொல்ல வல்லவனுனல் ஒளி இல்லாமல் இருப்பான், ஒளியுடையனுயிருப்பின் வார்த்தை சொல்ல வல்லவனல்லனுயிருப்பான்; அப்படியன்றிக்கே, ஒளியையும் ஓசையையு முடையவனுய் என்றபடி. 'ஊதப்பறக்கும்' என்றது, ஊதினுல் பறந்து போகும்படி என்றபடி.

2. மற்றைய ஆழ்வார்களைக் காட்டிலும் ஸ்ரீ பாஞ்சசன்யத்திற்கு உயர்வு ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'அல்லாத' என்று தொடங்கி. மற்றைய ஆழ்வார்களாவார்: சக்கரம் கதை முதலானவர்கள். கூரியர் - கூரிய அறிவினர்; தீக்ஷணர்கள். தடியர் - கதை, முஷ்கார். கழுந்தர் - வில் கழுந்து, சப்பரை. சுஷி - ஞானம், துவாரம்.

3. ஊதிக் கொளுத்துகிறபோது மரத்திலே ஆகவேண்டாவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'மரங்கள்போல்' என்று தொடங்கி. இது, திருமாலை. 27-ஆம் பாசுரம்.

புகழையுடைய தந்தையாகிய, வெற்றி பொருந்திய பாணாசுரனுடைய தோள்களைத் துணித்து, ஆதிசேஷ சயனத்தின்மேலே தூங்குகின்றவனைப் போன்று உலகமெல்லாம் நன்மையிலே பொருந்தும்படி யோக நித்திரையைச் செய்கின்ற சர்வேசுவரன் விரும்பாத இந்தச் சரீரத்தால் யாதொரு பயனையும் உடையோம் அல்லோம் என்கிறாள்.

வி - கு :—மேகலை - ஓர் ஆபரணம்; இடையிலே அணிந்து கொள்வது; ஏழு அல்லது, எட்டுக் கோவையாலாயது. அன்றிப் புடைவையுமாம். குறையில்லாப் போகமகள் என்றும், குறைவுற்ற போகமகள் என்றும் தனித்தனியே கூட்டுக. தந்தையாகிய வாணன் என்க. புகழையும் விறலையுமுடைய வாணன். துணித்து யோகணைவான் எனக் கூட்டுக.

ஈடு :—ஒன்பதாம்பாட்டு. [1] அடியார்க்கு விரோதியான வாணனை அழியச்செய்து, எல்லாரும் உய்வுபெறும் வழியை எண்ணுமவன் விரும்பாத உடம்புகொண்டு காரியம் என்? என்கிறாள்.

மேகலையால் குறை இல்லா மகள் - [2] 'உஷைக்குக் கூறை உடை அழகியதாய் இருக்கும்போலே காண்' என்றருளிச்செய்வராம் வங்கிப்புரத்து நம்பி. மெலிவுற்ற மகள் - மென்மைத் தன்மையுடையளாயுள்ளவள். என்றது, பிரிந்து தனியிருக்கப் பொறுதவள் என்றபடி. அகல் அல்குல் மகள் - அகன்ற அல்குலையுடையளாயிருக்கை. போக மகள் - [3] போகத்திற்குத் தக்கவளான பெண்பிள்ளை. புகழ்த் தந்தை - உஷைக்குத் தந்தையான வார்த்தைப் பாட்டால் உள்ள புகழையுடையவன். அன்றிக்கே, சௌரியம் வீரியம் முதலியவைகளாலுள்ள பிரசித்தியையுடையவன் என்னுதல். விறல் வாணன் - மிடுக்கையுடைய வாணன். ஒருதேவதையின் சந்நிதியிலே இருந்தால் சத்துவகுணம் தலையெடுத்து இருக்கக் கூடியதாயிருக்

1. "விறல்வாணன் புயம் துணித்து யோகணைவான் கவராத" என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. மற்றையோர் உடையில்லாதவர்களோ? இவளை "மேகலையால் குறையில்லா" என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உஷைக்கு' என்று தொடங்கி.

3. ஆக, "மேகலையால் குறையில்லா மெலிவுற்ற அகல் அல்குல் போக மகள்" என்ற அடைமொழிகளால், ஒப்பனையழகாலும், ஆத்ம குணத்தாலும், பருவத்தாலும் குறைவற்றவள் என்பதனைத் தெரிவித்தபடி.

குமேயன்றோ எல்லோர்க்கும்; அவ்வளவிலும் [1]யுத்த கண்டூதி மிக்கு 'எனக்கு எதிரியாயிருப்பான் ஒருவனைக் காட்ட வேணும்' என்று வேண்டிக்கொள்ளும்படியான பெருமிடுக்கையுடையவனாதலின் '**விறல் வாணன்**' என்கிறது. புயம் துணித்து - 'இவன் அறக் கை விஞ்சினான்' என்று கரத்தைக் கழித்துவிட்டான். தலையை அறுத்து வைக்கவேண்டும் குறை உண்டாயிருக்கச் செய்தேயும் 'உஷை தந்தை யற்றவள் ஆக வொண்ணாது' என்று உயிரை நிறுத்தி வைத்துக் கையை மாத்திரம் கழித்தானாகலின் '**புயம்துணித்து**' என்கிறது.

நாகமிசைத் துயில்வான் போல் - வர்ணனுடைய தோள்களாகிய காட்டினைத் துணித்த பின்பாயிற்றுப் [2]போகத்தில் பொருந்திற்று. '**துயில்வான்போல்**' என்பது என்? துயில இல்லையோ? என்னில், உலகு எல்லாம் நன்கு ஒடுங்க யோகு அணைவான் - 'இன்னமும் வாணன் போல்வார் எதிரிடுவார் உளராகில் அவர்களையும் அழித்து, உலகத்தார் நம்மையே பற்றிக் கரைமரம் சேரும் விரகு ஏதோ?' என்று இதனையே சிந்தித்துக் கொண்டு யோகநித்திரை செய்யாநிற்பான். கவராத உடம்பினால் குறை இலம் - இப்படி எல்லார் பக்கலிலும் செய்யும் பரிவை அவன் என்பக்கலிலே செய்யாதே இருக்க, நான் என் உடம்பைக் கட்டிக்கொண்டு கிடக்கவோ? [3]அவனுக்காகக் கண்ட உடம்பாயிற்று இவளது. அவனுக்கு உறுப்பாகவேயன்றோ [4]இவள்தான் இத்தச்சரீரத்தை விரும்பு

---

1. 'யுத்த கண்டூதி' என்றது, போர் கிடையாமையால் தோள்களில் உண்டாகும் தினவு.

என்றுகொண் டுண்மை யாதவ னுரைப்ப இருபுய வலியின் எண்திசையும்
சென்றுகொண்டடர்த்துத்தெவ்வர்தம்உயிரும்திறைகளும்முறைமுறைகவர்ந்து
வென்றுகொண் டணிந்த வாகையோன் தினவு மிக்கன எமதிணை மேருக்
குன்றுகொண்டமைந்ததோள்கள்எம்முடன்நீர்குறித்தமர்புரியும்என்றுரையா.

என்பது வில்லிபாரதம்.

2. 'போகம்' என்றது, சிலேடை: பாம்பின் உடலும், போகமும் என்பது பொருள்.

3. தன் உடம்பு தனக்குப் பேண வேண்டாவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவனுக்காக' என்று தொடங்கி.

4. 'இவள்தான்' என்றது, மற்றையோரைப் போன்று உண்மையை அறியாதிருக்கை யன்றிக்கே, அவனுக்காகவே 'படைக்கப்பட்டது' என்ற உண்மையை அறியும் இவள்தான் என்றபடி.

வது. [1] அவன்தான் தன் உடம்பு "பக்தர்களுக்காகவே" என்று இருக்குமாறு போன்று சேஷிக்காகக் கண்ட உடம்பாயிற்று இது. (9)

## 419.

உடம்பினாற் குறையில்லா உயிர்பிரிந்த மலைத்துண்டம்
கிடந்தனபோல் துணிபலவா அசுரர்குழாம் துணித்துகந்த
தடம்புனல சடைமுடியன் தனிஒருகூறு அமர்ந்துறையும்
உடம்புடையான் கவராத உயிரினால் குறையிலமே.

பொ - ரை :—சரீரபலத்தில் குறைவில்லாத அசுரர் கூட்டங்கள், உயிர்நீங்கிய மலைத்துண்டுகள் கிடந்தனபோலத் துண்டங்கள் பலவாகத் துணித்து மகிழ்ந்த, மிகப் பெரிய கங்கையைத் தரித்த சடையாகிய முடியையுடைய சிவபிரான் ஒருபக்கத்திலே ஒப்பில்லாதபடி விரும்பி வசிக்கின்ற திருமேனியையுடைய சர்வேசுவரன் விரும்பாத என்னுடைய இந்த உயிரால் யாதொரு பயனையும் உடையோம் அல்லோம் என்கிறாள்.

வி - கு :—உடம்பினால் குறையில்லா அசுரர் என்க. துணித்து உகந்த உடம்புடையான் எனக் கூட்டுக. புனல: அகரம் சாரியை. ஆறும் வேற்றுமை உருபுமாம்.

ஈடு :—பத்தாம்பாட்டு. முதற்பாசுரத்தில் சொன்ன சீல குணத்தையும் விரோதிகளை அழித்தலையும் சொல்லி, அவன் விரும்பாத உயிரால் என்ன காரியம் உண்டு? என்று, முதற் பாசுரத்தில் தொடங்கியதற்குச் சேர முடிக்கிறாள். 'உடம்பினால் குறையில்லா அசுரர் குழாம் உயிர் பிரிந்த மலைத்துண்டம் கிடந்தன போல் துணி பலவாத் துணித்து' என்றதனால், "நீறுகும்படியாக நிருமித்துப் படைதொட்ட" என்றதனைச் சொல்லுகிறது. 'தடம்புனல சடைமுடியன் தனி ஒரு கூறு அமர்ந்துறையும் உடம்புடையான்' என்றதனால், "கூறாளும் தனி உடம்பன்" என்றதனைச் சொல்லுகிறது.

[2] உடம்பினால் குறை இல்லா அசுரர் குழாம் - உயிரைத் தேய்த்து உடம்பை வளர்த்திருந்தவர் நித்திய சம்சாரிகளாய்ப்

1. இவன்தான், தன் உடம்பை 'அவனது' என்று இருக்கும் என்னு மதனைத் திருஷ்டாந்தத்தாலே காட்டுகிறார் 'அவன்தான்' என்று தொடங்கி. "பக்தர்களுக்காகவே" என்ற பொருளையுடைய சுலோகம், ஜிதந்தா.

2. "உடம்பினால் குறையில்லா அசுரர்" என்றதன் கருத்து, சரீரத்தை வளர்ப்பதில் ஒரு குறை இன்றிக்கே இருக்கிற அசுரர்கள் என்றவாறும்.

போமித்தனையன்றோ? என்றது, உயிரிலேயாயிற்றுக் குறை உண்டாகில் உள்ளது என்றபடி. உயிர் பிரிந்த மலைத்துண்டம் கிடந்தன போல் துணி பலவாத் துணித்து உகந்த-உயிரோடு கூடிச் சஞ்சரிக்கின்ற மலைகள் இந்திரன் கையில் வச்சிரா யுதத்தாலே பல கூறு ஆகும்படி துணியுண்டு கிடந்தாற் போலே, அசுரர் கூட்டத்தைத் துணித்து உகந்தானாயிற்று. உயிர் பிரிந்த மலைத் துண்டம் கிடந்தன போல் உடம்பினால் குறையில்லா அசுரர்குழாம் துணித்து உகந்த என்று கூட்டுக. [1]"திருமகள் கேள்வன் தேவர்களுக்கும் தானவர்களுக்கும் பொதுவான தெய்வம்" என்கிறபடியே, சம்பந்தம் எல்லார் பக்கலிலும் உண்டாயிருக்க, 'இவர்கள் அடியார்கட்கு விரோதிகள்' என்னும் தன்மையாலே இவர்களை அழித்து, 'அடியார்கட்குப் பகைவர்கள் அழியப் பெற்றோமேயன்றோ!' என்றத்தாலே உகந்தானாயிற்று.

தடம் புனல சடை முடியன் தனி ஒருகூறு அமர்ந்து உறையும் உடம்புடையான் - மிக்க நீர் வெள்ளத்தையுடைத்தான கங்கையைத் தன் சடையில் ஒரு பக்கத்திலே தரிக்கையால் வந்த செருக்கையுடைய சிவபிரானானவன், [2]பிராட்டி திருமார்வைப் பற்றி 'இவ்விடம் என் இருப்பிடம்' என்று அபிமானித்திருக்குமாறுபோலே, ஒருபக்கத்தைப்பற்றி 'இவ்விடம் என் இருப்பிடம்' என்று அபிமானிக்கும்படி அவனுக்கு இடங்கொடுத்துக் கொண்டிருக்கிற திருமேனியையுடையவன். [3]திருமேனியில் இடங்கொடுக்கச்செய்தே, இது தன்

---

1. கொலைசெய்து அதனைக் கண்டு மகிழ்வது முறையாமோ? என்ன, 'திருமகள் கேள்வன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, ஜிதந்தா. 1 : 2. இச் சுலோகப் பொருளோடு,

> "அணிமணிப் பைம்பூண் அமரர்க்கு முதல்வன் நீ
> ... ... ... ...
> அன்னவர் படவல்லா அவுணர்க்கு முதல்வன் நீ
> அதனால், பகைவர் இவரிவர் நட்டோர் என்னும்
> வகையும் உண்டோ நின் மரபறிவோர்க்கே"

என்ற பரிபாடற் பகுதி ஒப்பு நோக்குக. (பரிபாடல். 3. 53-58.)

2. "ஒரு கூறு தனி அமர்ந்துறையும் உடம்புடையான்" என்று கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'பிராட்டி' என்று தொடங்கி.

3. எல்லார்க்கும் இடமான திருமேனியிலே சிவனுக்கு இடம் கொடுத்தால் இது சீலகுணமாகவேணுமோ? என்ன, 'திருமேனியில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

னைக் குணமாக விரித்துக் கூற வேண்டும்படியாயிற்று அவர்களுடைய அகங்காரம். என்றது, அகங்காரமில்லாதவர்கள் அணையக்கூடிய உடம்பிலேயாயிற்று அகங்காரம் கொண்டவர்களுக்கும் இடங்கொடுக்கிறான் என்றபடி. கவராத உயிரினால் குறை இலம் - இப்படிப் பொதுவான உடம்பு படைத்தவன் ஆசைப்பட்ட எனக்கு உதவானாகில், இவ்வாத்ம வஸ்துவைக்கொண்டு என்ன காரியம் உண்டு? என்கிறாள். [1] இதற்கு முன்னர் எல்லாம் சரீரத்தையும் சரீரத்தோடு சேர்ந்திருக்கின்ற பொருள்களையுமேயன்றோ 'வேண்டா' என்றது; அவைதாம் அழியக்கூடியவையாய் இருக்கையாலே தாமாகவே அழியுமவற்றை 'வேண்டா' என்றதாய் இருக்குமேயன்றோ? அதற்காக நித்தியமான ஆத்மவஸ்துவையும் 'வேண்டா' என்கிறாள் இப்பாசுரத்தால். இதனை 'வேண்டா' என்பதற்குக் காரணம் என்? என்னில், இது கிடக்குமாகில், இன்னமும் ஒரு பிறவி யுண்டாய்ப் [2] பழையவையும் எல்லாம் வந்து தோற்றி மூலை எழுந்து நோவு படுகைக்குக் காரணமாய் இருக்குமே யன்றோ? அதனைப் பற்ற என்க. [3] இனித்தான், அவனுடைய நித்திய இச்சையாலே யன்றோ இவ்வாத்மாவினுடைய நித்தியமாய் இருக்குந் தன்மையும் உளது; அவனுக்கு இச்சை இல்லாதபோது பின்னை இவ்வாத்மாவைக் கொண்டு காரியம் இல்லையே யன்றோ? (10)

## 420.

உயிரினாற் குறையில்லா உலகேழ்தன் உள்ளொடுக்கித்
தயிர்வெண்ணெய் உண்டானைத் தடங்குருகூர்ச் சடகோபன்
செயிரில்சொல் இசைமாலை ஆயிரத்துள் இப்பத்தால்
வயிரஞ்சேர் பிறப்பறுத்து வைகுந்தம் நண்ணுவரே.

பொ - ரை:—உயிர்களால் குறைவில்லாத ஏழ் உலகங்களையும் தன் வயிற்றினுள்ளே ஒடுக்கிக்கொண்டு, தயிரையும் வெண்ணெயையும்

---

1. மேல், 'வேண்டா' என்றவற்றைக் காட்டிலும் ஆத்மாவுக்கு ஏற்றம் என்? என்ன, 'இதற்கு முன்னர்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. 'பழையவையும்' என்றது, பகவானுடைய சொரூப ரூப குண அநுபவங்களை. 'மூலை' என்றது, ஸ்வாப தேசத்தில் பக்தியைக் குறித்தபடி.

3. நித்யமான ஆத்ம வஸ்துவை 'வேண்டா' என்றால், அது போமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இனித்தான்' என்று தொடங்கி.

உண்ட சர்வேசுவரனை, விசாலம்பொருந்திய திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீ சடகோபராலே அருளிச்செய்யப்பட்ட குற்றமில்லாத இசையோடு கூடின மாலையாகிற ஆயிரம் திருப்பாசுரங்களுள் இந்தப் பத்துத் திருப்பாசுரங்களாலும் காழ்ப்பு ஏறிய இந்தப் பிறவியை நீக்கிக் கொண்டு பரமபதத்தை அடைவார்கள் என்றபடி.

வி - கு :—ஒடுக்கி உண்டான் என்க. உண்டானைச் சடகோபன் சொல் மாலை ஆயிரம் என்க. பத்தால் அறுத்து நண்ணுவர் என்க.

ஈடு :—முடிவில், [1] இத் திருவாய்மொழியைக் கற்றவர்கள், காழ்ப்பு ஏறின சம்சாரத்தினது கலக்கம் நீங்கிப் பரமபதத் திலே புகப்பெறுவார்கள் என்கிறார்.

[2]உயிரினால் குறை இல்லா ஏழ் உலகு - கணக்கு இல்லா தவைகளான ஆத்மாக்கள் நிறைந்துள்ள ஏழ் உலகங்களையும். தன்னுள் ஒடுக்கித் தயிர் வெண்ணெய் உண்டானை - தயிரும் வெண்ணெயும் களவு காணப் புகுகிறபோது, 'செருப்பு வைத்துத் திருவடி தொழச், செல்லுவாரைப்போலே வேறு ஒன்றற்கு உடலாக ஒண்ணாது' என்று எல்லாவுலகங்களுக்கும் வேண்டுவனவற்றையெல்லாம் தன் நினைவாலே செய்து, பின்னையாயிற்று வெண்ணெய் அமுதுசெய்தது. அன்றிக்கே, கருவுற்ற மகளிர் வயிற்றிலுள்ள பிள்ளைக்குத் தகுதியாக உணவு முதலானவைகளை உட்கொள்ளுமாறு போன்று உள் விழுங்கின உலகங்கட்கு ஜீவனமாகத் தயிர் வெண்ணெய் உண்டான் என்னுதல். அன்றிக்கே, [3] "எல்லா உலகங்களையும் பாதுகாக்கின்றவர்களான அந்தக் கிருஷ்ண பலராமர்கள் கன்றுகளைக் காப்பாற்றுகின்றவர்கள் ஆனார்கள்" என்கிற படியே, சர்வேசுவரனாயிருந்து வைத்து, அடியார்கள் சம்பந்த முள்ள பொருள்களால் அல்லது செல்லாதபடி இருக்குமவன் என்னுதல். தடம் குருகூர்ச் சடகோபன் - [4] "அயோத்தியா நகரத்தில் கூட்டம் கூட்டமாக" என்கிறபடியே, 'பெருமா ளுடைய திருவபிஷேக மங்கள மஹோத்சவத்தைக் காண வேணும்' என்று நாடுகளடையத் திரண்டு கிடந்தாற்போலே, இவர் 'ஆத்மாவையும் ஆத்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்

---

1. பாசுரத்தின் ஈற்றடியைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய் கிறார்.

2. "உயிர்" என்றது, தொகுதி ஒருமை.

3. விஷ்ணு புரா. 5. 6 : 34. இது, பரனாயிருந்த சுலபனானதற்குப் பிரமாணம். இதனால், பரத்வ சௌலப்யங்க ளிரண்டும் சொல்லப்பட்டன.

4. ஸ்ரீராமா. அயோத். 5 : 16. திருவபிஷேகம் - திருமுடி.

களையும் வேண்டா' என்று கழித்திருக்கிற இருப்பைக் காண்கைக்காகத் திரண்ட ஸ்ரீவைஷ்ணவ மக்களுக்கு அடைய இடம் போரும்படியான பரப்பையுடைத்தான திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார். செயிர் இல் சொல் இசை மாலை - செயிர் - குற்றம். இல் - இல்லாமை: குற்றம் இன்றிக்கே இருக்கை. என்றது, 'ஆத்ம ஆத்மீயங்கள் வேண்டா' என்ற வார்த்தையில் குற்றமின்றி இருக்கையைத் தெரிவித்தபடி. வயிரம் சேர் பிறப்பு அறுத்து - இவர் 'வேண்டா' என்று கழித்தாலும் விடாதபடி காழ்ப்பு ஏறிக் கிடக்கிற சம்சாரத்தைக் கழித்து. வைகுந்தம் நண்ணுவரே - ஓர் உடம்பாய், 'இதுதானும் வேண்டா' என்று கழிக்கும்படியான இவ்வுடம்பை விட்டு, [1]"அந்த முக்தன் பல சரீரங்களை மேற்கொள்ளுகிறான்" என்கிறபடியே, அவனுடைய நினைவின் வண்ணமும் அஃது அடியான தன் நினைவின் வண்ணமும் பல சரீரங்களை மேற்கொண்டு அடிமை செய்யலாம்படியான தேசத்திலே போய்ப் புகப் பெறுவர். என்றது, [2]பல படிகளாலும் அடிமை செய்யப் பெறுவர் என்றபடி. [3]அவன் விரும்பின படி இது என்று அறியாதேயன்றோ இவர்தாம் 'வேண்டா' என்கிறது. (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

ஏறு திருவுடைய ஈசன் உகப்புக்கு
வேறுபடில் என்னுடைமை மிக்கவுயிர்—தேறுங்கால்
என்தனக்கும் வேண்டா எனுமாறன் தாளைநெஞ்சே!
நந்தமக்குப் பேறாக நண்ணு.

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. சாந்தோக்யம். 7 : 26.

2. 'பலபடிகளாலும்' என்றது, சிலேடை: பல சரீரங்களாலும், பல விதங்களாலும் என்பது பொருள்.

3. இவர் திருமேனியை நித்யமுக்தர்கள் திருமேனிகளைப் போன்று அவன் விரும்பாநிற்க, இவர் 'வேண்டா' என்பான் என்? என்ன, 'அவன் விரும்பின படி' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இங்கே, "மங்க வொட்டு உன்மா மாயை" என்ற திருப்பாசுரம் அநுசந்திக்கத் தகும். 'விரும்பினபடி' சிலேடை: விரும்பினவிதம் என்றும், விரும்பின திருமேனி என்றும் பொருள்.

## ஒன்பதாந் திருவாய்மொழி - "நண்ணாதார்"

### முன்னுரை

ஈடு:—[1] 'உடம்பு வேண்டா, உயிர்வேண்டா' என்று இவற்றை உபேக்ஷித்துப் பார்த்தார்; தாம் 'வேண்டா' என்றவாறே தவிரும் என்று நினைத்து; அவை தவிர்ந்தன இல்லை; ஒன்றனைப் பெறுகைக்கு அன்றிக்கே முடிகைக்கும் உன் தரவு வேணுமாகில் அதனைத் தந்தருளவேணும் என்கிறார் இத் திருவாய்மொழியில். [2] இந்த அமங்கள வார்த்தையைத் திருமுன்பே விண்ணப்பஞ் செய்ய வேண்டும்படியாகக் காணும் இவர் சம்சாரத்தை வெறுத்தபடி. [3] எம்பார், 'உன்னைப் பிரிந்திருந்து படுகிற கிலேசத்தின் அளவல்ல, உன்னை ஒழியப் புறம்பே பேறும் இழவுமாயிருக்கிற சம்சாரிகள் நடுவே இருக்கிற இருப்பால் படுகிற கிலேசம்; இதனைத் தவிர்த்தருளவேணும் என்கிறார்' என்று அருளிச்செய்வர். [4] "கதையைக் கையிலேயுடையவனாய் நான்கு மந்திரிகளோடு மேலே கிளம்பி

---

1. மேல் திருவாய்மொழிக்கும் இத் திருவாய்மொழிக்கும் இயைபு அருளிச்செய்கிறார் 'உடம்பு வேண்டா' என்றது முதல் 'இத்திருவாய்மொழியில்' என்றது முடிய. தரவு - சீட்டு.

2. இவர், இறைவன் திருமுன்னர் நின்று "சாமாறே பணி கண்டாய்" என்னலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இந்த அமங்கள வார்த்தை' என்று தொடங்கி.

3. பகவானைப் பிரிந்து பிரிவாலே நோவுபடுகிற பிரகாரணத்தோடு, உலக யாத்திரையை நினைத்து 'இதனைக் கண்டிராதபடி என்னை அங்கீகரிக்க வேணும்' என்று கூறுகிற இது, பொருந்தாதே? என்ன, அதற்கு இருவகையாகச் சமாதானம் கூறுகிறார் 'எம்பார்' என்று தொடங்கி.

4. பகவானிடத்தில் விருப்பமில்லாதாரோடு சேர்ந்திருத்தலாகாது என்பதற்கு உதாஹரணம் காட்டுகிறார் 'கதையை' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. யுத். 16 : 16. 'கிளம்பினான்' என்றது, ஸ்ரீ விபீஷணாழ்வானை.

> "என்றலும் இளவலும் எழுந்து வானிடைச்
> சென்றனன்"

> "அனலனும் அனிலனும் அரன்சம் பாதியும்
> வினைவலர் நால்வரும் விரைவின் வந்தனர்
> கனைகழல் காலினர் கருமச் சூட்சியர்
> இனைவரும் வீடண னேடு மேயினர்"

என்றார் கம்பநாட்டாழ்வாரும்.

னன்" என்கிறபடியே, இராவணனோடு பொருந்தாமை பிறந்த பின்பு நெருப்புப்பட்ட தரையில் கால் பாவாதாப்போலே அவ்விடம் அடி கொதித்துப் போந்தானாயிற்று. இத்தால், ஒருவன் 'பகவானிடத்தில் விரோதங்கொண்டு அதிலே நிலைநின்றான்' என்று அறிந்தானாகில் தன்னைக்கொண்டு அகலவன்றோ அடுப்பது என்பது போதருகின்றதன்றோ.

[1] அங்ஙன் அன்றிக்கே, ஆழ்வான், "ஏறாளுமிறையோனும்" என்ற திருவாய்மொழியில் தம்முடைய ஆற்றாமைக்குக் கூட்டு ஆவார் உளரோ" என்று உலகத்தாருடைய செயல்களை ஆராய்ந்து சம்சாரிகளைப் பார்த்தார்; அவர்கள், தாம் சர்வேசுவரனிடத்தில் ஈடுபட்டவராய் இருப்பது போன்று, ஐம்புல இன்பங்களில் ஈடுபட்டவராய் அவற்றினுடைய பேறு இழவுகளே லாபாலாபமாம்படி இருந்தார்கள்; அதனைக் கண்டவாறே [2] வாளேறு காணத் தேளேறு மாய்ந்தாற் போலே, தம் இழவை மறந்தார்; இவர்களுடைய துக்கமே நெஞ்சிலே பட்டது; [3] சர்வேசுவரனைப் பார்த்தார்; அவன் முற்றறிவினனாய்ச் சர்வசக்தியாய்ப் பரம உதாரனாய் எல்லாரு

---

1. இரண்டாவது ஆழ்வான் நிர்வாஹம்: ஆழ்வான் நிர்வாஹத்துக்குக் கருத்து, "கண்ணாளா! கடல் கடைந்தாய்!" என்று அவன் குணங்களையும் சொல்லி, "நண்ணாதார் முறுவலிப்ப" என்று சம்சாரிகளுடைய இழவையும் அநுசந்தித்து, "இவை என்ன உலகியற்கை" என்று 'நீ இப்படிக் குணாதிகனாயிருக்க இவர்கள் யாத்திரை இருந்தபடி என்!' என்று விண்ணப்பம் செய்ய, அவனும் 'இதனைவிட்டு உம்முடைய பலத்தை நீர் கண்டுகொள்ளும்' என்று அருளிச்செய்ய, 'ஆனால், இவர்களோடு சேர்ந்திருத்தல் தகாத காரியம்; இவர்கள் நடுவில் இராதபடி திருவடிகளிலே சேர்த்துக்கொண்டருளவேணும்' என்று பிரார்த்திக்கிறார் என்பது. இவர் நிர்வாஹத்தில், "கண்ணாளா! கடல் கடைந்தாய்!" என்பன போன்ற குண அநுசந்தானங்கள் எல்லாம் பிறர் பொருட்டு எனக் கொள்க. ஆழ்வான் நிர்வாஹத்தை அருளிச்செய்கிறார் 'அங்ஙன் அன்றிக்கே' என்று தொடங்கி. ஆழ்வான் - கூரத்தாழ்வான். 'ஆழ்வான்' என்ற பெயரை, மேலே வருகின்ற 'பணிக்கும்' என்ற முற்றோடு முடிக்கவும்.

2. "வேலேறுபடத் தேளேறு மாய்ந்தாற்போலே" என்றார் கலிவிய லுரைகாரர்.

3. நெஞ்சிலே பட்டால், அவர்களுக்கு ஹிதம் அருளிச் செய்யலாகாதோ? என்ன, 'சர்வேசுவரனை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச் செய்கிறார். இத் திருவாய்மொழியில் வருகின்ற "ஆமாறு ஒன்றறியேன் நான்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'அவன் முற்றறிவினன்' என்றும், (தம்மை 'ஆமாறு ஒன்று அறியேன்' எனின், அவன் முற்றறிவினன் என்பது

டைய பாதுகாப்பிலும் விரதம் பூண்டிருக்குமவனாய் எல்லாக் குற்றங்களையும் பொறுக்குமவனாய் எல்லாரையும் நியமிக்கின்ற வனாயிருந்தான்; அவன்படி இதுவாயிருக்க, இவை இப்படி நோவுபடுகைக்கு இவ்விடம் [1]தன்னரசு நாடோ? என்று பார்த்து, [2]'நீ சர்வேசுவரனாய்ப் பேர் அருட்கடலாய்ச் சம்பந்த முள்ளவனுமாய் இவற்றின் கிலேசம் அறிந்து போக்குவதற்குத் தக்க ஞானசக்திகளையுடையையுமாயிருக்க, இவை இங்ஙனம் கிடந்து நோவுபடுகை போருமோ? இவற்றைக் கரைமரம் சேர்க்கவேணும்' என்று அவன் திருவடிகளைப் பிடிக்க, 'நம்மால் செய்யலாவது உண்டோ? இவை சேதநரான பின்பு இவைதமக்கே ருசி உண்டாகவேணுமே? நாம் கொடுக்கிற இது புருஷார்த்தமாக வேணுமே? புருஷன் விரும்பக் கொடுக்குமது அன்றோ புருஷார்த்தமாவது; அசித்தாய் நாம் நினைத்தபடி காரியங்கொள்ளுகிறோமல்லோமே? இவற்றிற்கு நம்பக்கல் ருசி பிறக்கைக்கு நாம் பார்த்து வைத்த [3]வழிகளை யடையத் தப்பின பின்பு நம்மாற் செய்யலாவது இல்லைகாணும்; நீர் இதனை விடும்' என்று சமாதானம்செய்ய, 'நீ கூறிய இது பரிஹாரமாய் நான் சமாதானத்தையடைந்

---

தானே போதருமன்றோ?) "கடல் கடைந்தாய்" என்றதனைத் திருவுள்ளம் பற்றிச் 'சர்வ சக்தியாய்' என்றும், "வள்ளலே" என்றதனைத் திருவுள்ளம் பற்றிப் 'பரம உதாரனாய்' என்றும், "அரவணையாய்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'எல்லாருடைய பாதுகாப்பிலும் விரதம் பூண்டிருக்குமவனாய்' என்றும், "வினையேனை உனக்கு அடிமை அறக் கொண்டாய்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'எல்லாக் குற்றங்களையும் பொறுக்குமவனாய்' என்றும், "கண்ணா!" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'எல்லாரையும் நியமிக்கின்றவனாய்' என்றும் அருளிச்செய்கிறார்.

1. தன்னரசு நாடு - அராஜகமாய் ஸ்வதந்திரமாய் இருக்கிற நாடு.

2. இத்திருவாய்மொழியில் வருகின்ற "அம்மானே!" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'நீ சர்வேசுவரனாய்' என்றும், "கண்ணா!" என்றதனைத் திருவுள்ளம்பற்றிப் 'பேரருட் கடலாய்' என்றும், (கண் - அருள்) "அம்மானே!" என்றதனையே திருவுள்ளம்பற்றிச் 'சம்பந்தமுள்ளவனுமாய்' என்றும் அருளிச்செய்கிறார்.

3. 'வழிகளை யடையத் தப்பின' என்றது, படைத்தலையும் அவதாரங்களையும் நோக்கி.

தேனுவது [1]'இவர்கள் தம் காரியத்திற்குத் தாம் கடவர்களாய் நோவுபடுகின்றார்கள்' என்று உன்னால் சொல்லலாம் அன்று அன்றோ?' என்ன, 'இவர்கள் சேதநராகையாலே இவர்களின் வாசி அறியவேணும் என்று [2]நம்மை ஒரு தட்டும் ஐம்புல இன்பங்களை ஒருதட்டுமாக வைத்து உங்களுக்கு வேண்டியது ஒன்றனைக் கொள்ளுங்கோள் என்ன, ஐம்புல இன்பங்கள் இருந்த தட்டு [3]தாழ்ந்திருக்கையாலே அந்தத் தட்டை 'அமையும்' என்று பற்றினார்கள்; நாமும் ஆகும்தனையும் பார்த்து முடியாமை காணும் கைவாங்கியது; இனி நம்மாற் செய்யலாவது இல்லை; இனி, நீரும் இதனைவிடும்' என்ன, 'ஆகில், உன்னை ஒழியப் புறம்பே பேறும் இழவுமாயிருக்கிற இவர்கள் நடுவில் நின்றும் [4]என்னை முன்னம் வாங்கவேணும்' என்ன, 'முன்பே உம்மை வாங்கினோமே; [5]சம்சாரிகளோடு பொருந்தாதபடி செய்தோமாகில், சம்சாரத்தை நினைத்த நினைவாலே வந்த கிலேசம் எல்லாம் போகும்படி உம்முடைய இருப்பு இது காணும் என்று பரமபதத்தில் அயர்வறும் அமரர்கள் அடிமைசெய்யப் பெரிய பிராட்டியாரும் யாமுமாக வேறுபாடு தோன்ற இருக்கும் [6]இருப்பைக் காட்டித் தந்து அங்கே உம்முடைய மனம் ஈடுபடும்படி செய்தோமாகில், இனி, உமக்

---

1. "ஆயே இவ்வுலகத்து" என்ற 427-ஆம் பாசுரத்தைத் திருவுள்ளம் பற்றி 'இவர்கள் தம் காரியத்துக்கு' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. விபவம் அர்ச்சை இவைகளிலே தான் அழகு முதலியவற்றோடு கூடினவனாய் இவற்றின் கண்முன்னே நின்ற நிற்கின்ற தன்மைகளை நினைத்து 'நம்மை ஒரு தட்டும்' என்கிறார். 'நம்மை ஒரு தட்டும் ஐம்புல இன்பங்களை ஒரு தட்டுமாக வைத்து' என்றதற்குச் சூசகம், "அறப்பொருளை அறிந்தோரார்" என்ற 426-ஆம் பாசுரம்.

3. சம்சாரிகள் நினைவாலே 'தாழ்ந்திருக்கையாலே' என்கிறார். அன்றிக்கே, இரத்தினத்தோடே பெரிய கல்லை வைத்து நிறுத்தால், கல் வைத்த தட்டுத் தாழினும், அத்தாழ்வாலே அக்கல்லிற்கு ஓர் உயர்வு இல்லையாமே யன்றோ? அதுபோன்றது என்று கோடலுமாம்.

4. "ஆங்கு வாங்கு" (425-பா.) என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'என்னை முன்னம் வாங்கவேணும்' என்கிறார்.

5. 'சம்சாரிகளோடு பொருந்தாதபடி செய்தோமாகில்' என்றது, "வேட்கையெல்லாம் விடுத்து" (429-பா.) என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

6. 'இருப்பைக் காட்டித் தந்து' என்றது, "ஒண்டொடியாள் திருமகளும்" (430-பா.) என்ற திருப்பாசுரத்தைத் திருவுள்ளம்பற்றி.

குப் பேற்றுக்குக் [1] குவால் உண்டோ? நாம் செய்யவேண்டுவது என்?' என்ன, [2] இவை இரண்டனையும் நினைத்துத் தரித்துக் கிருதார்த்தராய்த் தலைக்கட்டுகிறார் என்று பணிக்கும்.

[3] ஆழ்வான், தான் ஒரிடத்திலே வழியிலே போகாநிற்க, ஒரு பாம்பினாலே பிடிக்கப்பட்ட தவளையானது கூப்பிடா நிற்க, 'இது யார் அறியக் கூப்பிடுகிறது?' என்று மோகித்தாராம்; இவ் வாழ்வான் தன்மைக்குச் சேருமே இவர் நிர்வாஹமும்.

---

## 421.

நண்ணாதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க
எண்ணாத் துயர்விளைக்கும் இவைஎன்ன உலகியற்கை!
கண்ணாளா! கடல்கடைந்தாய்! உனகழற்கே வரும்பரிசு
தண்ணாவாது அடியேனைப் பணிகண்டாய் சாமாறே.

**பொ - ரை :**—பகைவர் மகிழ்ச்சி கொள்ளவும் சிறந்த உறவினர்கள் மனங்கரைந்து வருந்தவும் எண்ணுவதற்கு அமையாத துன்பத்தை உண்டாக்குகின்ற இவை என்ன உலகத்தின் தன்மை! கிருபையையுடையவனே! திருப்பாற்கடலைக் கடைந்தவனே! உன் திருவடி.

---

1. குவால் - அதிகம்.

2. 'இவை இரண்டனையும்' என்றது, சம்சாரிகளோடு பொருந்தாதபடி செய்தமையையும், பிராட்டியும் தானுமான இருப்பைக் காட்டித் தந்தமையையும் திருவுள்ளம்பற்றி என்க.

ஆழ்வான் நிர்வாஹத்திலே இவற்றையும் திருத்தி நல்வழிப் போக்க வேண்டும் என்பது கருத்து. எம்பார் நிர்வாஹம் "கொடு உலகம் காட்டேலே" என்றதிலே நோக்கு.

3. ஆழ்வாருடைய பேர்அருளைக் குறிக்கின்ற இந்நிர்வாஹம், பரம தயாளுவான ஆழ்வான் தன்மைக்குச் சேரும் என்பதற்கு ஓர் ஐதிஹ்யம் காட்டுகிறார் 'ஆழ்வான்' என்று தொடங்கி.

இவ்விடத்தில், ஆழ்வாருக்கு மூன்றுவிதமான துன்பங்கள் உண்டு என்று அருளிச்செய்வர் பெரியோர். பிரகிருதி சம்பந்தமான துன்பம், "முந்நீர் ஞாலம்" என்ற திருவாய்மொழியிலே; பகவானைப் பிரிந்ததனாலுண்டான துன்பம், "சிலமில்லா" என்ற திருவாய்மொழியிலே; சம்சாரிகள் இழவைக் கண்டு வாடும் துன்பம், இத்திருவாய்மொழியிலே.

களுக்கே நான் வரும்படி காலம் நீட்டிக்காமல் அடியேனைச் சாருமாறு ஒரு வார்த்தை சொல்ல வேண்டும் என்கிறார்.

வி-கு :—முறுவலிப்ப எங்க துயர் விளைக்கும் உலகு என்க. உலகு இயற்கை இவை என்ன என்க. என்ன - எத்தன்மையவாய் இருக்கின்றன. அன்றிக்கே, என்னே! எனலுமாம். வரும் பரிசு பணி கண்டாய் என்க. கண்டாய்: முன்னிலை யசைச்சொல். சாமாறு - உடலை விட்டு உயிர் பிரியும் வழியை. தண்ணாவாவது - காலம் நீட்டிக்காமல்.

இத்திருவாய்மொழி, தரவு கொச்சகக் கலிப்பா.

ஈடு :—முதற்பாட்டு. [1] உன்னை ஒழியப் புறம்பே பேறும் இழவுமாயிருக்கின்ற இவர்கள் நடுவில் நின்றும் நான் உன் திருவடிகளிலே வந்து கிட்டும்படி எனக்கு இச் சரீரத்தின் பிரிவினைச் செய்து தந்தருளவேணும் என்கிறார்.

நண்ணாதார் முறுவலிப்ப - [2] ஒருவனுக்கு ஒருகேடு வந்தவாறே, அற்றைக்கு முன்பு வெற்றிலை தின்று அறியார்களேயாகிலும், அன்றைய தினத்திலே ஒரு வெற்றிலை தேடித் தின்பது, ஓர் உடுப்பு வாங்கி உடுப்பது, சிரிப்பது ஆகா நிற்பார்களாயிற்று. நண்ணாதார்-பகைவர். [3] பிறர் கேடு கண்டு சிலர் உகக்கும்படியாவதே, இஃது என்ன ஆச்சரியந்தான்! [4] அருச்சுனன் 'என் பரகு பரகு கெடுவது என்று?' என்ன, "எல்லா ஆத்மாக்களுக்கும் சிநேகிதனாயிருக்கிற என்னை" என்கிறபடியே, 'நான் எல்லா ஆத்மாக்களுக்கும் சிநேகிதன்' என்று அறிந்தவாறே நீயும் என்னைப் போன்று என் விபூதிக்குப் பரியத் தேடுவுதி காண்' என்றானேயன்றோ? நல் உற்றார் - சர்வேசுவரனே நிருபாதிக பந்துவாய், அவனைப்

---

1. "இவை என்ன உலகு இயற்கை, உன கழற்கே வரும் பரிசு சாமாறு பணி" என்றதனைக் கடாக்ஷித்து, எம்பார் நிர்வாகத்திலே அவதாரிகை அருளிச்செய்கிறார். இவர்கள் - சம்சாரிகள்.

2. முறுவலித்தற்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் 'ஒருவனுக்கு' என்று தொடங்கி.

3. "நண்ணாதார் முறுவலிப்ப - இவை என்ன உலகியற்கை" என்று தன்பப்படுகிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'பிறர்கேடு' என்று தொடங்கி. என்றது, பிறர்கேட்டினைக் கண்டால் அதனை நீக்கவேண்டியிருக்க, உகக்குமது பகவானைப் பற்றிய ஞானம் இன்மையாலே யன்றோ? என்றபடி.

4. பிறர் கேட்டினைக் கண்டால் எப்படி இருக்கவேணும்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அருச்சுனன்' என்று தொடங்கி. பரகு பரகு - சாகர்வேஷங்களாலே தடுமாறித் திரிதல். 'எல்லா ஆத்மாக்களுக்கும்' என்று தொடங்கும் சுலோகம், ஸ்ரீ கீதை. 5 : 29.

பற்றினவர்களையே [1]"அவன் தமர் எவ் வினையராகிலும் எங் கோன் அவன் தமரே" என்று, அவர்களை [2]"ஒருகாலும் பிரிகிலேன்" என்றிருத்தல் தகுதியாக இருக்க, சரீர சம்பந் தங் காரணமாக வருகின்றவர்களை நிருபாதிக பந்துக்களாக நினைத்து அவர்களுக்கு ஒன்று வந்தவாறே, [3]"நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு இடிந்துகும்" என்று இவர் பகவத் விஷயத்தை நினைத்தல் சொல்லுதல் செய்யப்புக்கால் படுவன எல்லாம் படாநிற்பர்களாயிற்று. [4]"எல்லா ஆத்மாக்களையும் சரீரமாகவுடைய கோபாலனிடத்தில் பகைவன் நட்டோன் என்கிற கதை ஏது?" என்றது, 'கரைந்தேங்க, முறுவலிப்ப' என்ற இரண்டனையுமே யன்றோ? [5] ஆசையையும் துவேஷத் தையும் பற்றி வருகையாலே, நட்புத்தன்மையோடு பகைத் தன்மையோடு வாசி இல்லையன்றோ? [6]"சுகம் துக்கம் என்கிற பெயரையுடைய இரண்டால் விடப்பட்டவர்கள்" என்கிற படியே, 'சுக துக்கங்கள்' என்று சில பெயர் மாத்திரமே யன்றோ? உள்ளது; உண்மையை நோக்குங்கால், இரண்டும்

---

1. அவன்தமர் எவ்வினைய ராகிலும் எங்கோன்
அவன்தமரே என்றொழிவ தல்லால்—நமன் தமரால்
ஆராயப் பட்டறியார் கண்டீர் அரவணைமேல்
பேராயற் காட்பட்டார் பேர். முதல் திருவந். 55

2. "பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே" என்பது பெரிய திருமொழி.

3. "நினைதொறும் சொல்லுந் தொறும்நெஞ்சு இடிந்துகும்
வினைகொள்சீர் பாடிலும் வேம் என தாருயிர்"
என்பது திருவாய்மொழி. 9. 6 : 2.

4. பகைமைதான் கூடாது, இரங்குதல் நல்லதேயன்றோ? என்ன, 'இரண்டும் தியாஜ்யமே யாம்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'எல்லா ஆத்மாக்களையும்' என்று தொடங்கி. இது, விஷ்ணு புரா. 1. 19 : 31. இரணியனைப் பார்த்துப் பிரஹ்லாதாழ்வான் கூறியது.

5. இரண்டும் தியாஜ்யம் என்கைக்குக் காரணம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆசையையும்' என்று தொடங்கி.

6. வேற்றுமை இல்லை என்னலாமோ? நட்பு உத்தேஸ்யம் அன்றோ? என்ன, சுகம் அநுகூலமாயிருக்க, துக்கத்தைப் போன்று, அதுவும் தியாஜ்யம் என்று நின்றதே யன்றோ? என்று அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'சுகம் துக்கம்' என்று தொடங்கி. இது, ஸ்ரீ கீதை. 15 : 5. இங்கு, "இருள்சேர் இருவினையும் சேரா" என்ற திருக்குறளின் பொருளினை நினைவு கூர்தல் தகும்.

துக்கமாயன்றோ இருப்பன. ஆதலால், இரண்டாய் வரும் துக்கங்களை யடைய நினைக்கிறது. [1]"ஸ்ரீராமபிரானையே நினைத்தவர்களாய் ஒருவருக்கொருவர் நலியவில்லை" என்கிறபடியே, திருவயோத்யையிலுள்ளார், ஒருவரை ஒருவர் வேரோடே வாங்கிப் போகட வேண்டும்படியான பகைமை தொடர்ந்து நிற்கச் செய்தேயும் எல்லாரும் ஒருமிடறாக விரும்பினார்கள்; அதற்கு அடி என்? என்னில், பகைமை நெஞ்சிலே பட்டு அவர்களை நலிய நினைத்தபோதாகப் பெருமாளை நினைப்பார்கள்; 'அவர்முகஞ் சுளியும்' என்னுமதனாலே அதன் காரியம் பிறக்கப் பெற்றது இல்லை.

எண் ஆராத் துயர் விளைக்கும்-முறுவலிக்கிறதும், கரைந்தேங்குகிறதும் இரண்டும் துயராய்த் தோற்றுகிறதாயிற்று இவர்க்கு. அந்தமில் பேரின்பத்துக்கு எல்லைகாணிலும் துக்கத்துக்கு எல்லை காண வொண்ணாதபடியாயிற்று இருப்பது; அதனால், 'எண் ஆரா' என்கிறார். பரமபதத்தில் [2]நிஷ்கிருஷ்ட சுகமேயாயிருக்குமாறுபோலே, இதுவும் எல்லையில்லாத துக்கமேயாய் இருக்குமாயிற்று. [3]"இராஜ்யத்தில் நின்று நீங்கியதும் வனத்தில் வாசம் செய்கிறதும் சீதை காணாமற் போனதும் பெரியவுடையார் (ஜடாயு) மரணமடைந்ததும் ஆகிய இப்படிப் பட்ட என்துக்கங்கள் அக்நியையுங்கூட எரித்துவிடும்." என்

---

1. 'எல்லா ஆத்மாக்களுக்கும் சிநேகிதன் சர்வேசுவரன்' என்று அறிந்து துவேஷத்தை விட்ட பேர் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஸ்ரீ ராமபிரானையே' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. யுத். 131: 95.

2. நிஷ்கிருஷ்ட சுகம் - துக்கம் கலவாத சுகம்.

3. இன்னார்க்குத் துயர்விளைக்கும் என்று விசேடித்துக் கூறாமையாலே, கர்மங்கட்குக் கட்டுப்படாத சர்வேசுவரன் அவதரித்தாலும் அவனுக்கும் துக்கத்தை விளைக்கக் கூடியது என்று கூறத் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் 'இராஜ்யத்தில் நின்று' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. ஆரண்ய. 16:

"ராஜ்யாத் ப்ரம்ஶ:" என்ற மேற் சுலோகத்திற்கு வியாக்யாதா அருளிச்செய்த பொருள் வருமாறு: திருவபிஷேகம் பண்ண நாளிட்டவாறே, 'ராஜ்யம் எனக்கு வேணும்' என்றார்கள் சிலர். அத்தை இழந்தால் படை வீட்டில் இருக்கப் பெற்றதாகிலுமாமிறே. 'என் மகன் ராஜ்யம் பண்ணவேண்டா, பிசைபுக்காகிலும் என் கண்வட்டத்திலே இருக்க அமையும்' என்றாளிறே ஸ்ரீ கௌசல்யையார். சீதா நஷ்டா - 'பிராட்டியும் தாமுமாய் ஏகாந்தமாகப் புஜிக்கலாம்' என்று போர இருவரும் இரண்டு இடத்திலேயாம்படி விழுந்தது.

றூரேயன்றே பெருமாள்; [1] இவர்கள் படுகிற கிலேசத்தைக் கண்டு தன் கிருபையாலே அவன் எடுக்கக் கைநீட்டின இடத்திலே படுகிற பாடேயன்றே இது? [2] "சர்வேசுவரன் பெரிய பிராட்டியாரோடு பரிமாறும்போது மற்றுள்ள பிராட்டிமார் மலர் சந்தனம் முதலியவைகளைப்போன்று போக உபகரண கோடியிலே சேர்ந்திருப்பார்கள்; மற்றைப் பிராட்டிமார்களோடு பரிமாறும்போது பெரியபிராட்டியார் தன்னேடு பரிமாறுவதைப்போன்றே நினைத்து மகிழா நிற்பார்;" [3] "திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால், திருமகட்கே தீர்ந்தவாறு என்கொல்?" என்கிறபடியே, அவர்களோடு இவன் பரிமாறும்போது பிராட்டிக்கே அற்றானுயிருக்கும்; அதற்கு அடி, அதனால் பிறக்கும் முகமலர்ச்சி அவள் பக்கல் காண்கையாலே. [4] அல்பம் குணாதிக்யமுள்ள ஸ்ரீ கௌசல்யையார், தனக்கு

பிராட்டிக்குத் தனியிடத்திலே உதவப் புக்க பெரிய உடையாரையும் இழந்தது. * "ராஜ்ய நாசோ பஹூர்ஷதி" என்றும், "வனவாசோ மஹோதய:" என்றும் சொல்லிப் போந்தவற்றை இப்போது அநர்த்தமாகச் சொல்லுகிறது என்? என்னில், ஆஸ்ரித சம்ஸ்லேஷத்துக்கும், ருஷிகளை எடுக்கைக்கும் என்றிறே போந்தது; அத்தோடே விரோதிக்கையாலே சொல்லுகிறார். பிராட்டியைப் பிரிகையாலும், பெரியவுடையார் இழவு பலிக்கையாலும், இவற்றுக்கு அடியானவையும் இப்போது அநர்த்தமாய்த் தோற்றுகையாலே சொல்லுகிறார். இவ்விரண்டாலும் வரும் துக்கங்களை யடைய நினைக்கிறது. நிர்த்தஹேதபி பாவகம் - பிரியாத இளையபெருமாளையும் பிரிக்கவற்றாயிறே இருக்கிறது.

* இப்பொழு தெம்ம னோரால் இயம்புதற் கெளிதே யாரும்
செப்பருங் குணத்தி ராமன் திருமுகச் செவ்வி நோக்கில்
ஒப்புதே முன்பு பின்பவ் வாசகம் உரைக்கக் கேட்ட
அப்பொழு தலர்ந்த செந்தா மரையினை வென்ற தம்மா.

என்ற செய்யுள் நினைவிற்கு வருகின்றது. (கம்.)

1. வியாக்கியாதாவின் ஈடுபாடு: 'இவர்கள் படுகிற கிலேசத்தை' என்று தொடங்கும் வாக்கியம்.

2. இந்தத்தன்மை இவ்வுலகத்தில் மாத்திரமன்றிக்கே, பரமபதத்திலும் உண்டு என்கிறார் 'சர்வேசுவரன்' என்று தொடங்கி. பட்டர் அருளிச் செய்த ஸ்ரீ குணரத்நகோசத்தில் 26-ஆம் சுலோகத்தை இங்கே அநுசந்திக்கத் தகும்.

3. மற்றைப் பிராட்டிமாரோடு பரிமாறும்போதும் பெரியபிராட்டியார் மகிழ்வர் என்பதற்குப் பிரமாணம், 'திருமகளும்' என்று தொடங்குவது. இது, முதல் திருவந். 42. இந்தப் பாசுரத்திற்கு பாவம் 'அவர்களோடு' என்று தொடங்கும் வாக்கியம்.

4. மஹரிஷிகளுக்குள் விரோதவுணர்ச்சி இல்லாதவாறு இருத்தல் கூடுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அல்பம் குணாதிக்ய முள்ள' என்று தொடங்கி. இங்கே, ஸ்ரீ ராமாயணம் அயோத்யா காண்டம் 12-ஆம் சர்க்கத்தின் 68-ஆம் சுலோகம் அநுசந்தேயம்.

என ஓர் ஆகாரமின்றிக் காலந்தோறும் காலந்தோறும் சக்கரவர்த்தியின் நினைவுக்குத் தகுதியாக மற்றைய பத்தினிகளுக்கு விரோதவுணர்ச்சி தோன்றுதவாறு பரிமாறிப் போந்தாளே யன்றோ? இவை என்ன உலகு இயற்கை - [1] உன்னை ஒழியப் புறம்பேயும் இந்த உலகம் பேறு இழவாம்படி இது ஒரு உலக யாத்திரையை நீ பண்ணிவைத்தபடி என்! பிரானே! 'நான் பண்ணுகையாவது என்? இவர்கள் தாங்கள் செய்த கர்மங்களினுடைய பலம் தொடர்ந்து வருகிறது இத்தனையன்றோ? நம்மால் வந்தது அன்று காணும்' என்று பகவானுடைய அபிப்பிராயமாக, அருளிச்செய்கிறுர் மேல்: [2] கண்ணுளா - இவர்கள் செய்த கர்ம பலன்களை இவர்களே அநுபவிக்கவேணும் என்று இருந்தாயாகில், உன் கிருபைக்குப் புறம்பு விஷயம் எங்கே? கண்ணுளன் - கிருபையையுடையவன். கிருபையை யுடையவனைக் "கண்ணுடையவன்" என்னக்கடவதன்றோ? அன்றிக்கே, கண் என்று இடமாய், அதனுல், அகலிடம் என்றபடியாய், பூமியை ஆளுகின்றவனே! என்னுதல். அன்றிக்கே, இது ஏதேனும் தன்னரசு நாடோ? என்றது, நீ நிர்வாஹகனுயிருக்க இவை சொரூப விரோதங்களிலே செல்லுதல் என்? என்னுதல். கண் என்று நிர்வாஹகனுக்கும் பெயர். தாங்கள் தாங்கள் சூழ்த்துக்கொண்ட கர்மங்களைத் தாங்கள் தாங்களே அநுபவிக்க வேண்டாதபடி நாம் உதவ எங்கே கண்டீர்? என்ன, 'ஒரு வெள்ளமன்றோ' என்று உதாஹரணம் காட்டுகிறுர் மேல்: கடல் கடைந்தாய் - தூர்வாச முனிவரது சாபத்தால் வந்த கேட்டினைத் தப்புகைக்கு வேறு பிரயோஜனங்களை விரும்புகிறவர்களுக்கும் அரியன செய்து உதவுமவனன்றோ? என்கிறுர். நன்று; அவர்களுக்கு இச்சை உண்டு; இச்சையில்லாதவர்களுக்கு நம்மாற் செய்யலாவதுண்டோ? என்ன, ஆகில், இவர்கள் நடுவே இராதபடி என்னை உன் திருவடிகளிலே வரும்படி செய்யவேணும் என்கிறுர் மேல்:

---

1. "இவை என்ன உலகியற்கை" என்று கூறுகின்றவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறுர் 'உன்னை ஒழிய' என்று தொடங்கி.

2. "கண்ணுளா" என்பதற்கு, மூன்றுவகையாகப் பொருள் அருளிச்செய்கிறுர். 'இவை சொரூப விரோதங்களிலே செல்லுதல்' என்றது, தாம் தாம் செய்த கருமங்களைத் தாங்கள் தாங்களே போக்கிக்கொள்ள முயற்சிசெய்தலைக் குறித்தபடி.

உன கழற்கே வரும் பரிசு-[1] விலக்கடிகளில் போகாமல், வகுத்ததுமாய் இனியதுமான உன் திருவடிகளிலே வந்து கிட்டுவது ஒருவகை. இவர்க்குக் [2] காற்கூறு இச்சை யுண்டா யிருந்தபடியாலே, ‘அப்படிச் செய்கிறோம்’ என்றான் ஈசுவ ரன். தண்ணுவாது - தாழாது; தண்ணுக்கை - தாழ்க்கை. என்றது, ‘செய்கிறோம்’ என்று ஆறியிருக்க ஒண்ணாது; செய்துகொடு நிற்கவேணும் என்றபடி. நாம் இப்படிப் பதறிச் செய்ய வேண்டுவது என்? என்ன, ‘அடியேனை’ என்கிறார்; என்றது, சொரூப ஞானத்தாலே சம்சாரிகளோடு பொருந் தாத என்னை என்றபடி. பணிகண்டாய் சாமாறே - பணிக்கை - சொல்லுகை; [3] சொல்லுதல் நினைவோடே யன்றோ கூடி யிருப்பது. அன்றிக்கே, [4] சாமாறு பணிக்கவேணும்; என் றது, உனக்கு ஒருசொலவு; அடியேன் பெறுகிறது சத்தை என்கிறார் என்றபடி. அன்றிக்கே, அடியேன் மரணத்தைப் பெறும்படி பார்த்தருளவேணும் என்னுதல். நன்று; பிரபந்ந ஜன கூடஸ்தரான இவர், கேவலரைப் போன்று [5] இவ் வளவை விரும்புகிறது என்? என்னில், [6] “கண்ணபிரா னுடைய தியானத்தில் ஆசையில்லாத மனிதர்களோடு சக வாசம் செய்தலாகிற பெருந்துன்பத்தைக் காட்டிலும் நெருப் பினுடைய சுவாலைகளாகிற கூட்டின் நடுவில் அடங்கி யிருப்ப தான து சிறந்தது” என்கிறபடியே, இவர்கள் நடுவில் இருக் கிற இருப்புத் தவிருகை தானே இப்போது தேட்டம் ஆகை யாலே சொல்லுகிறார். என்றது, காட்டுத் தீயில் அகப்பட்டவ னுக்கு நீரும் நிழலுமேயன்றோ முற்படத் தேட்டமாவது, பின்பே யன்றோ இனிய பொருள்களிலே நெஞ்சு செல்வது; அப்படியே, இப்போது இவர்கள் நடுவில் இருத்தற்கு அடி யான சரீரத்தின் பிரிவைப் பிறப்பிக்கவேணும் என்கிறார் என்றபடி.

---

1. விலக்கடிகள் - செல்வம் முதலானவைகள்.

2. காற்கூறு - திருவடிகளாகிற பாகத்தில் என்பது பொருள். ஒன்றில், நாவில் ஒருபாகம் என்பது தொனிப்பொருள்.

3. ‘சொல்லுதல் நினைவோடேயன்றோ கூடி இருப்பது?’ என்றது, சொல்லுதலுக்கு அடியான நினைவினைச் சொல்லுகிறது என்றபடி. நான் சாமாறு நீ சங்கல்பிக்கவேணும் என்றவாறு.

4. ‘சாமாறு பணிக்கவேணும்’ என்றது, சொல்லவேண்டும் என்றபடி.

5. ‘இவ்வளவை’ என்றது, சரீரத்தின் பிரிவினை.

6. செளனகசம்ஹிதை.

422.

சாமாறும் கெடுமாறும் தமர்உற்ருர் தலைத்தலைப்பெய்து
ஏமாறிக் கிடந்துஅலற்றும் இவைஎன்ன உலகியற்கை!
ஆமாறென்று அறியேன்நான் அரவணையாய்! அம்மானே!
கூமாறே விரைகண்டாய் அடியேனைக் குறிக்கொண்டே.

பொ - ரை:—சாகின்ற விதமும் செல்வம் கெடுகின்ற விதமும், தாயாதிகளும் மற்றைய உறவினர்களும் மேல்விழுந்து மேல்விழுந்து துக்கத்தினுல் கிடந்து அழுகின்ற வகையுமான உலக இயற்கை இவை என்ன! இவர்கள் உய்யும் வகை ஒன்றனையும் அறிகின்றிலேன் யான். அரவணையாய்! அம்மானே! அடியேன் விஷயத்தில் திருவுள்ளம்பற்றி அடியேனை உன்னிடத்தில் அழைத்துக்கொள்ளும் வகையில் விரைய வேண்டும் என்கிருர்.

வி - கு:—தமர் - தாயத்தார். உற்ருர் - மற்றைய உறவினர். தலைத்தலை - இடங்கள்தோறும். அரவணை - பாம்புப் படுக்கை. குறிக்கொண்டு அடியேனைக் கூமாறே விரை கண்டாய் என்க. கண்டாய்: முன்னிலை யசைச் சொல்.

ஈடு:—இரண்டாம்பாட்டு. [1] முதற் பாசுரத்திலே "எண்ணுராத்துயர்" என்று தொகுத்துக் கூறினுர்; அவற்றிலே சிலவகைகளைச் சொல்லித் துன்பம் அடைந்தவராய், 'இவர்கள் துக்கத்தைப் போக்காயாகில் என்னை உன் திருவடிகளிலே அழைத்தருளவேணும்' என்கிருர்.

சாமாறும் கெடுமாறும் - சாகும்படியும், கெடும்படியும். 'ஆறும்' 'ஆறும்' என்னுதல் என்னை? சாதலுக்கும் கெடுதலுக்கும் மேற்பட சில வகைகளும் உளவோ? என்னில், பல காலம் [2] ஒருபடிப்பட ஜீவிக்கக்கடவனுகவும், தன்னேடு ஒக்க ஜீவிப்பாரை அழியச்செய்யக் கடவனுகவும் கோலிக்கொண்டு போதாநிற்க, நினைவு அற முடிந்து கொடு நிற்கும்படியும், நான்கு [3] சின்னம் கைப்பட்டவாறே 'இனி, நமக்கு உள்ளதனையும் ஜீவிக்கைக்கு ஒருகுறை இல்லை' என்று நினைத்திருக்கச் செய்தே, அதனை இழந்து கிலேசப்பட்டுக் கூப்பிடும்படியும் என சில உளவே யன்றே, அவற்றைத் தெரிவித்தபடி.

1. பாசுர முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிருர்.

2. ஒருபடிப்பட - துன்பம் கலத்தலின்றிக்கே சுகமே யாகும்படி.

3. சின்னம் - காசு.

[1] ஒருவன் தன் சாக்காட்டிற்கும் இசைவான், தன் கையில் அகப்பட்ட பொருள் தப்பினால்; [2] அதனையே யன்றோ இவன் தஞ்சமாக நினைத்திருப்பது; ஆதலின், சாதற்குப் பின் 'கெடுதலை' வைத்து ஓதுகின்றார். [3] ஒருத்தனை 'ராஜத் துரோஹி' என்று கையையும் காலையும் தரிக்க, இவனை வினவப் புகுந்தவர்கள், 'இப்படிப்பட்டது வரலாகாதே!' என்ன, 'ஆயிரம் ஐந்நூறு என்று காசு சில தா' என்னாதே இவ்வளவோடே போயிற்று உங்கள் அநுக்கிரஹமே யன்றோ என்னும். [4] இவர் நோவுபடுகைக்கு வேறே சில உளவாயிற்று; [5] "நின்னலால் இலேன்காண்" என்றும் [6] "பல நீ காட்டிப் படுப்பாயோ", [7] "இன்னம் கெடுப்பாயோ" என்றும் பகவானை அடையாதொழிவது விநாசத்திற்குக் காரணம் என்றும், இதர விஷயங்களைப் பார்ப்பது கேட்டிற்குக் காரணம் என்றுமாயிற்று இவர் இருப்பது. [8] "அடியவனான என்னைத் தேவரீர் பின்னே சஞ்சரிக்கின்றவனாகச் செய்தருளவேணும்; என்னை அழைத்துக் கொண்டு போவதில் பாவம் இல்லை; தேவரீருக்கே பயன் கிடைக்கின்றது; நான் தேவரீருக்குக் கைங்கர்யத்தைச்

---

1. 'கெடுமாறும் சாமாறும்' என்னாது, "சாமாறும் கெடுமாறும்" என்று சாவிற்குப் பின் கேட்டினைச் சொல்லுவான் என்? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'ஒருவன்' என்று தொடங்கி. என்றது, சாதலைக் காட்டிலும் செல்வத்தின் அழிவே துக்கமாயிருக்கும் என்பது கருத்து.

2. அதற்குக் காரணம் என்? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அதனையே யன்றோ' என்று தொடங்கி. அதனை - செல்வத்தை.

3. தஞ்சமாக நினைத்திருப்பதற்கு ஒரு சம்வாதம் காட்டுகிறார் 'ஒருத்தனை' என்று தொடங்கி.

4. உலகமக்களை இங்ஙனம் நிந்திப்பதற்குத் தமது தன்மை ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவர்' என்று தொடங்கி. இவர் - ஆழ்வார்.

5. திருவாய். 2. 3 : 7.

6. திருவாய். 6. 9 : 9.

7. திருவாய். 6. 9 : 8.

8. பகவானை அடையாதொழிவது விநாசத்திற்குக் காரணம் என்பதற்கும், இதர விஷயங்களைப் பார்ப்பது கேட்டிற்குக் காரணம் என்பதற்கும் வேறு பிரமாணங்களையும் காட்டுகிறார் 'அடியவனான' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. அயோத். 31 : 22.

செய்து அதனல் பலத்தை யடைந்தவன் ஆகப் போகிறேன்" என்றும், [1]"ஸ்ரீ ராமா! உன்னேடுகூடி வசிக்கும் இடம் எதுவோ அது சுவர்க்கம்; உம்மைப் பிரிந்து வசிக்கும் இடம் எதுவோ அது நரகம் என்று எண்ணுகின்ற எனது சிறந்த பிரீதியை அறிந்தவரான நீர் என்னுடன் புறப்படும்" என்றும், இவற்றை விநாசமும் கேடு மாகவேயன்றே இவர்கள் நினைத்திருப்பது. [2]இவர்கள் இவை ஒழிய விநாசத்தையும் கேட்டினையும் எங்கே தேடிக் கொண்டார்கள்? "என் ஒருவர் தீக் கதிக்கண் செல்லுந் திறம்" என்னுமவர்களே யலரோ இவர்கள்.

தமர் உற்ருர் - சரீரசம்பந்தங்காரணமாக வந்தவர்களாய்த் 'தாயத்தார்' என்றும், 'சம்பந்திகள்' என்றும் சிலரை உறவாக நினைத்துப் பாரம் அற்றவர்களா யிருப்பர்களாயிற்று; [3]இஃது ஒழியவே வேறே "தமர்கள் தமர்கள் தமர்கள்" என்று ஓர் உறவு முறை உண்டாயிற்று இவர்க்கு. தலைத் தலைப்பெய்து - மேல் விழுந்து மேல் விழுந்து. ஏமாறிக் கிடந்து அலற்றும் - [4]ஏ என்று ஏக்கமாய், மாறுகை - தவிருகையாய், ஏங்காதே கூப்பிட்டு என்னுதல். அன்றிக்கே, ஏமாற்றம் என்பதே ஒருசொல்லாய், அதாவது, துக்கமாய், துக்கித்துக் கிடந்து கூப்பிட்டு என்னுதல்: "ஏமாற்றம் என்னைத் தவிர்த்தாய்" என்னக்கடவதன்றே? அன்றிக்கே, ஏ என்று தெளிவு; மாறுகை என்பது அழிகை; அதாவது, தெளிவு அழிகை என்று பிள்ளை அமுதனர் பணிப்பர். இவை என்ன உலகு இயற்கை - இவை ஒரு உலக யாத்திரை இருக்கும்படி என்! என்றது, ஜீவிக்க எண்ணுநிற்க முடிவது; நான்கு காசு கையிலே உண்டானவாறே 'இது நமக்கு உண்டு' என்று

---

1. ஸ்ரீராமா. அயோத். 30 : 18.

2. "சாமாறும் கெடுமாறும்" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'இவர்கள்' என்று தொடங்கி. 'இவர்கள்' என்றது, உலகமக்களை. 'என் ஒருவர்' என்று தொடங்கும் பாசுரம், முதல் திருவந். 95. 'இவர்கள்' என்றது, ஆழ்வார்களை.

3. இஃது ஒழிய - இந்தத் தமர்களையும் உற்ருர்களையும் ஒழிய. 'தமர்கள் தமர்கள்' என்று தொடங்கும் பாசுரம், திருவாய்மொழி. 8. 10 : 9.

இவர்க்கு - ஆழ்வார்க்கு.

4. "ஏமாறி" என்பதற்கு, ஏங்காதே என்றும், துக்கித்து என்றும், தெளிவழிந்து என்றும் மூன்று வகையான பொருள் அருளிச்செய்கிருர். 'ஏ என்று' தொடங்கி. இரண்டாவது பொருளுக்கு மேற்கோள், 'ஏமாற்றம்' என்று தொடங்குவது. இது, பெரியாழ்வார் திருமொழி. 2. 7 : 8.

இருக்க, அது அழிந்துபோவது; சரீரசம்பந்தங் காரணமாக வருகிறவர்களையே தனக்கு எல்லாவித உறவுமாக நினைத்து, அவர்களுக்கு ஒன்று வந்தவாறே 'பட்டேன், கெட்டேன்' என்று கூப்பிட்டு அலற்றுவது; ஆகிற இவையும் ஒரு உலக யாத்திரையே! பிரானே! என்கிறார் என்றபடி. நன்று; 'அவர்கள் என்படில் உமக்கு நல்லது? நீர் நம்மையே சொல்லிக் கூப்பிடும்படி பண்ணினோமே! "சீலமில்லாச் சிறியனேனும்" என்ற திருவாய்மொழியில் கூப்பீடு அன்றோ உம்மது?' என்ன, அருளிச்செய்கிறார் மேல்: நான் ஆமாறு ஒன்று அறியேன் - [1] அவர்கள்தாம் கூப்பிடுகிறது உன்னோடு சம்பந்தம் இல்லையாயோ? சரீரத்தோடே இருக்கையாலே யன்றோ? அதனை என்னினின்றும் தவிர்த்தாயோ? இவ்வுடம்பு கிடக்கையாலே, 'இன்னதற்கு நான் கூப்பிடப் புகுகின்றேன்' என்று அறியாநின்றேனோ? என்கிறார். [2] அன்றிக்கே, 'சம்சாரிகளுடைய இந்தத் துக்கம் போதற்கு விரகு ஏதோ?' என்று அறிகிலேன் என்கிறார் என்னுதல்; என்றது, நீ எனக்குச் செய்து தந்த வாசி நான் இவர்களுக்குச் செய்து கொடுக்கும் விரகு ஏதோ? என்று அறிகிலேன் என்கிறார் என்றபடி.

அரவணையாய் அம்மானே - இவற்றைக் காக்கும் பொருட்டுத் திருவனந்தாழ்வான்மேலே திருப்பாற்கடலிலே கண் வளர்ந்தருளி, இவற்றைப் பாதுகாத்தல் உன்பேறும்படியான குடல் சம்பந்தத்தை யுடையவனே! [3] இவற்றிற்கு இவனோடு மெய்யான குடல் சம்பந்தமே யன்றோ? [4] இவனுடைய பொய்யோடு மெய்யோடு வாசியற இவனுக்கு இரண்டும் காப்ப

---

1. "ஆமாறு ஒன்று அறியேன்" என்கிறவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'அவர்கள் தாம்' என்று தொடங்கி.

2. ஆழ்வான் நிர்வாஹத்திற்குச் சேரப் பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி.

3. ரசோக்தியாக அருளிச்செய்கிறார் 'இவற்றிற்கு' என்று தொடங்கி. 'மெய்யான' என்றது, சிலேடை: சத்தியமான என்றும், சரீரமான என்றும் பொருள். குடல் சம்பந்தம் - சரீர சரீரி பாவ சம்பந்தம்.

4. பிராசங்கிகமாக அருளிச்செய்கிறார் 'இவனுடைய' என்று தொடங்கி. 'இவனுடைய பொய்' என்றது, கிருஷ்ணாவதாரத்தில் பொய்யை. என்றது, 'ஆயுதம் எடேன்' என்று கூறி, ஆயுதம் எடுத்தல் போல்வன. 'இவனுடைய மெய்' என்றது, இராமாவதாரத்தில் மெய்யை. என்றது, அபயப் பிரதான் விருத்தாந்தத்தை. இனி, 'இவனுடைய பொய்யோடு மெய்யோடு'

தற்குக் காரணமாக இருக்கும். [1] கூமாறே விரை - சுலபனுய் இவற்றைக் காப்பதற்காகத் திருப்பாற்கடலிலே கூக்குரல் கேட்கைக்காகக் கிட்டி வந்து கிடக்கிற நீ, நான் உன் திருவடிகளை வந்து கிட்டும்படி என்னை அழைத்துக்கொள்வதிலே விரையவேணும். இப்படி விரையவேண்டுகிறது என்? என்னில், கண்டாய் - என்னைக் கண்ட உனக்கு விரையாதே இருக்கலா யிருந்ததோ? [2] "காட்டிலே கொடியவர்களான இராக்கதர்களாலே பலவகையில் துன்புறுத்தப்பட்ட முனிவர்கள் பலருடைய சரீரங்களைக் கடாக்ஷிக்கவேணும்; எழுந்தருளவேணும்" என்றாற்போலே, 'பாராய்' என்று தம் வடிவைக் காட்டுகிறார். ஆனாலும், அநாதிகாலம் நீர் பிரியில் தரியாதே போந்த உடம்பும் உற்றாரும் அன்றோ? என்ன, அடியேனைக் குறிக்கொண்டே - இந்த உலக யாத்திரையால் செல்லாத படியாயிருக்கிற [3] என் வாசியைத் திருவுள்ளம்பற்றி யருளவேணும். [4] உன் திருவடிகளில் சம்பந்தம் அறிந்த அன்று தொடங்கி உன்னைப் போன்று பிறருடைய துக்கத்தைப் பொறுக்கமாட்டாதபடியான என் வாசியைத் திருவுள்ளம் பற்றியருளவேணும் என்னுதல். நன்று; 'கூமாறே விரை கண்டாய்' என்ற அளவில், 'பிறருடைய துக்கம் பொறுக்க மாட்டார்' என்னுமிடம் தோற்றுமோ? என்னில், 'இவை என்ன உலகியற்கை' என்று இந்த உலக யாத்திரையை நினைத்து வெறுத்து, என்னை அங்கே அழைக்கவேணும் என்கையாலே தோற்றுமே யன்றோ? (2)

---

என்றதற்கு, நாஸ்தி சப்த வாச்யமான அசித்தோடு, அஸ்தி சப்த வாச்யமான ஆத்ம வஸ்துவோடு என்று பொருள் கோடலுமாம். ஈண்டு, 'இவனுடைய' என்பதற்குப் புருஷனுடைய என்பது பொருள். "இல்லது முள்ளதும்" என்ற பாசுர வியாக்கியானம் ஈண்டு நினைவு கூர்க. 'உடலாயிருக்கும்' என்றதும் சிலேடை: சரீரமாக இருக்கும் என்றும், காரணமாக இருக்கும் என்றும் பொருள்.

1. "அரவணையாய் கூமாறே விரை" என்று கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'சுலபனுய்' என்று தொடங்கி.

2. "கண்டாய்" என்பதற்குச் சம்வாதம் காட்டுகிறார் 'காட்டிலே' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. ஆரண்ய. 6 : 16. இராமபிரானைப் பார்த்து முனிவர்கள் கூறியது.

3. 'என்வாசி' என்றது, மயர்வற மதிநலம் பெற்றதனாலுண்டான வேறுபாட்டினை.

4. ஆழ்வான் நிர்வாகத்துக்குச் சேரப் பொருள் அருளிச்செய்கிறார் 'உன் திருவடிகளில்' என்று தொடங்கி.

423.

கொண்டாட்டும் குலம்புனைவும் தமருற்றார் விழுநிதியும்
வண்டார்பூங் குழலாளும் மனைஒழிய உயிர்மாய்தல்
கண்டாற்றேன் உலகியற்கை கடல்வண்ணா! அடியேனைப்
பண்டேபோல் கருதாதுஉன் னடிக்கேகூய்ப் பணிகொள்ளே.

பொ - ரை :—கடல்போன்ற நிறத்தை யுடையவனே! மக்களால் கொண்டாடப்படுகின்ற கொண்டாட்டமும் குலத்தின் பெருமையும் பங்காளிகளும் உறவினர்களும் சிறந்த செல்வமும் வண்டுகள் தங்கியிருக்கின்ற மலர்களையுடைய கூந்தலையுடைய மனைவியும் வீட்டிலேயே தங்கியிருக்க, இறத்தலாகிற இந்த உலகியற்கையைக் கண்டு பொறுக்ககிலேன்; ஆதலால், அடியேனை முன்புபோல் கருதாது உனது திருவடிகளிலே சேரும்படி அழைத்து அடிமை கொள்ளவேண்டும் என்கிறார்.

வி - கு :—ஒழிதல் - ஈண்டு இறவாது தங்கியிருத்தல். "அகமென் கிளவிக்குக் கைம்முன் வரினே, முதனிலை யொழிய முன்னவை கெடுதலும்" (தொல். எழுத். சூ. 315.) என்றவிடத்து 'ஒழிய' என்பதூஉம் இப்பொருளிலேயே வந்திருத்தல் காண்க.

ஈடு :—மூன்றாம் பாட்டு. [1] குலம் முதலானவைகள் எல்லாம் கிடக்க, இவை முடிகிறபடியைக் கண்டு பொறுக்கமாட்டுகின்றிலேன்; துக்கம் சிறிதுமில்லாத உன் திருவடிகளிலே அடிமைகொள்ளவேணும் என்கிறார்.

கொண்டாட்டும் - முன்பு 'இன்னான்' என்று அறிய ஒண்ணாதபடி பொருள் அல்லாதானாய்ப் போந்தான் ஒருவன் அல்பம் ஜீவிக்கப் புக்கவாறே 'முதலியார்' என்றாற்போலே சொல்லுவர்கள். [2] "பயிலும் திருவுடையார்" என்றேயன்றோ தாங்கள் கொண்டாடும் விஷயம். குலம் புனைவும் - ஜீவிக்கப் புக்க அன்று தொடங்கி இவனுக்கு ஒருகுலம் உண்டாகத்

---

1. பாசுரம் முழுதினையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'முதலியார்' என்றாற்போலே சொல்லுவது, 'கொண்டாட்டம்' அன்றோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பயிலும் திருவுடையார்' என்று தொடங்கி. என்றது, 'சர்வேசுவரன் அடியார்கள்' என்று அவர்களைக் கொண்டாட வேண்டியிருக்க, இவர்கள் ஒரு கொண்டாட்டத்தை உண்டாக்கிக்கொள்வதே! என்றபடி. 'பயிலும் திருவுடையார்' என்பது, திருவாய். 3. 7 : 1.

தொடுத்துச் சொல்லுவர்கள். தமர் -[1] முன்பு 'இவனோடு நமக்கு ஓர் உறவு உண்டாகச் சொல்லுமது சாலத் தண்ணிது' என்று போனவர்கள், இவன் ஜீவித்தவாறே உறவு சொல்லிக் கொடு வந்து கிட்டுவர்கள். "அவன் தமர்" என்று தமக்குத் தமர் புறம்பே யன்றோ? உற்றார் -[2] முன்பு, 'இவனோடு சம்பந்தம் செய்து கோடல் தரமன்று; நிறக்கேடாம்' என்று போன வர்கள் இப்போது 'இவனோடு ஒரு சம்பந்தம் பண்ணினோமாக வல்லோமே' என்று ஆதரித்து மேல் விழுவர்கள். விழு நிதியும் - நினைவின்றிக்கே இருக்கச்செய்தே சருகிலே திரளு மாறுபோலே சீரிய நிதி வந்து கைப்புகுருமே; அச் செல்வத் திற்குப் போக்கடி காணாமல் [3] செய்வதறியாமல் அதனை முன் னிட்டு ஒரு பெண்ணை மணந்து கொள்வான்; அவள்தான் வண்டார் பூங்குழலாளாயிற்று. இவள் செவ்வி வண்டே புஜித் துப் போமித்தனை போக்கித் தான் புஜிக்கமாட்டான் ஆத லின் '**வண்டார் பூங்குழலாள்**' என்கிறது. என்னை? எனின், இன்பத்திற்குத் தகுதியில்லாத பருவத்திலேயாயிற்றுத் தான் அவளை மணந்துகொண்டது. [4]"சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய் தந்தையும்' இவை யெல்லாம் சர்வேசுவரனே யன்றோ தமக்கு.

மனை ஒழிய - அவளுக்கும் தனக்கும் ஏகாந்தமாக அநுப விக்கைக்கு, தன் சக்தியெல்லாங் கொண்டு [5] பல நிலமாக அகத்தை எடுப்பான். உயிர் மாய்தல் -[6] இவை குறியழியா திருக்க, இவனைக் கூட்டோடே கொடுத்து, இப்படிப் பாரித்த

---

1. "தமர்" என்ற சொல்லுக்கு பாவம் அருளிச்செய்கிறார் 'முன்பு' என்று தொடங்கி. இதற்கு மறுதலையாக பாவம் அருளிச்செய்கிறார் 'அவன் தமர்' என்று தொடங்கி. இது, முதல் திருவந். 55.

2. "உற்றார்" என்ற சொல்லுக்கு பாவம் அருளிச்செய்கிறார் 'முன்பு இவனோடு' என்று தொடங்கி.

3. 'செய்வதறியாமல்' என்றது, 'நாம் முதுமைப் பருவத்தை அடைந் தோம், நாம் பெண்ணை மணந்தால் இன்பம் நுகர்தற்கு நமக்குத் தகுதியில்லை, ஆதலால், ஒரு தர்மத்தைச் செய்து உஜ்ஜீவிப்போம்' என்று நினையாமல் ஒரு பெண்ணை மணப்பான் என்றபடி.

4. மேலே கூறியவற்றிற்கெல்லாம் மறுதலையாக பாவம் அருளிச்செய் கிறார் 'சேலேய் கண்ணியரும்' என்று தொடங்கி. இது, திருவாய். 5. 1: 8.

5. பல நிலமாக - உபரிகையின்மேல் உபரிகையாக.

6. "இவை" என்றது, பாசுரத்தின் முதல் இரண்டடிகளில் கூறிய வற்றை. கூட்டோடே - சரீரத்தோடே,

தான் முடிந்து போவான். கண்டு ஆற்றேன் உலகுஇயற்கை- இப்படிப்பட்ட உலகயாத்திரை என்னால் பொறுக்கலா யிருக் கிறதில்லை. கடல்வண்ணா -[1] இந்த உலக யாத்திரையின்படி அன்றிக்கே அநுபவிக்கலாவதும் ஒருபடி உண்டே. இவர்கள் துக்கத்தை நினைத்தலால் வந்த கிலேசம் தீர சிரமஹரமான உன் வடிவைக் காட்டியருளாய். அடியேனைப் பண்டேபோல் கருதாது - "பொய்ந் நின்ற ஞானம்" என்ற பாசுரத்தில் "இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை" என்ற அளவாக என்னைத் திருவுள்ளம்பற்ற ஒண்ணாது. என்னை? எனின், பகவத் விஷயத்தில் மூழ்கிச் சொல்லுகிற சொல், இதர விஷயங்களினுடைய தோஷங்களைப் பார்த்துச் சொல்லுகிற சொற்களைப்போன்றது அன்றே யன்றோ? [2] சிற்றாள் கொண் டார், 'இவர்க்காகில் இது சேர்க்கைப் பல்லி போலே பணி யன்றோ என்று இருக்க ஒண்ணாது' என்கிறார் என்றாராம். [3]அன்றிக்கே, மேலே, உன்னைப் பிரிந்து கூப்பிட்ட அவ்வள வாக நினைக்க ஒண்ணாது, பிறருடைய துக்கத்தைக் கண்டு கூப் பிடுகின்ற இதனை என்னலுமாம். உன் திருவடிக்கேகூய்ப்பணி கொள்ளே - உன் திருவடிகளிலே அழைத்து என்னை அடிமை கொண்டருளவேணும். [4] உன் திருவடிகளிலே அழைத்தா லும், அடிமையின் இனிமை அறியில் அன்றோ நான் மீளா தொழிவது; ஆனபின்னர், என்னை நித்திய கைங்கர்யங்

---

1. "கடல்வண்ணா" என்பதற்கு, எம்பார், ஆழ்வான் நிர்வாஹங்களுக்கு ஏற்ப, இருவகையாக பாவம் அருளிச்செய்கிறார் 'இந்த உலகயாத்திரையின்' என்று தொடங்கி.

2. மேற்கூறிய பொருளுக்கு ஆப்த சம்வாதம் காட்டுகிறார் 'சிற்றாள் கொண்டார்' என்று தொடங்கி. சேர்க்கைப்பல்லி - நிலைப்பல்லி. சேர்க்கைப் பல்லி ஓர் இடத்திலேயே பல்கால் சொல்லிக் கொண்டிருக்கும்; அந்தப் பல்லி போலே, இவர்க்கும் இது பணி அன்றோ? என்று இருக்க ஒண்ணாது என் கிறார் என்றபடி.

3. ஆழ்வான் நிர்வாஹத்திற்குத் தகுதியாக அருளிச்செய்கிறார் 'அன் றிக்கே' என்று தொடங்கி.

4. 'உன்னடிக்கே கூவாய்' என்னாது, "கூய்ப்பணிகொள்" என்றதற்கு வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார் 'உன் திருவடிகளிலே' என்று தொடங்கி. முன்னைய கருத்து, பரமபதத்திலே அழைத்துக் கைங்கர்யம்கொள்ள வேணும் என்பது. இரண்டாவது கருத்து, கூவுதல் - ஏவுதலாய், ஏவிப் பணி கொள்ள வேணும் என்பது. அதாவது, வார்த்தை தாரகம் என்றபடி.

கொண்டருளவேணும் என்னுதல்; அன்றிக்கே, 'சோற்றை யிட்டுப் பணிகொள்' என்னுமாறு போலே, 'கூய்ப் பணி கொள்" என்கிறார் என்னுதல். (3)

424.

கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம் நெருப்பாகக்
கொள்ளென்று தமமூடும் இவைஎன்ன உலகியற்கை!
வள்ளலே! மணிவண்ணா! உனகழற்கே வரும்பரிசு
வள்ளல்செய்து அடியேனை உனதருளால் வாங்காயே.

பொ - ரை:-'என்னைக்கொள், என்னைக்கொள்' என்று கிளர்ந்து வருகின்ற பெரிய செல்வமானது,நெருப்பைப்போன்று தங்களை யழிக்க, பின்னையும் செல்வத்தைக் கொள்வாய் என்று பிறர் சொன்ன அளவிலே அறிவின்மையால் மூடப்பட்டு அச்செல்வத்தை விரும்புகின்ற இவை என்ன உலகு இயற்கை! வள்ளலே! மணிவண்ணா! உன் திருவடிகட்கே வரும்படி திருவருளைச்செய்து அடியேனை உன் திருவருளால் கைக்கொண்டருளவேணும் என்கிறார்.

வி - கு:—நெருப்பாக என்றது, நெருப்பைப் போன்று இருக்க என்பது பொருள். 'என்று' என்பது, செயவென்எச்சத்திரிபு. "கொள்ளென்று தம மூடும்" என்ற இடத்தில் கொள்ளென்று தூண்டுதல் மனம் எனக் கொள்ளினுமாம்.

ஈடு:—நான்காம் பாட்டு. [1] சேதநர், செல்வத்தை விரும்பினால் அது அழிவிற்குக் காரணமாதலைக் காணாநிற்கச் செய்தேயும், மீண்டும் அந்தச் செல்வத்தை விரும்புதலே இயல்பாம்படி இருக்கிற இதற்குக் காரணம் யாதோ? நான் இது கண்டு பொறுக்கமாட்டுகின்றிலேன்; முன்னம் என்னை இவர்கள் நடுவில் நின்றும் வாங்கவேணும் என்கிறார்.

கொள் என்று கிளர்ந்து எழுந்த பெரும் செல்வம் - இவன் தான் விரும்பாதிருக்கச் செய்தேயும் 'கொள், கொள்' என்று [2]மொண்டெழு பானை போலே கிளர்ந்துவருகிற எல்லையில்லாத செல்வமானது. நெருப்பாக - [3]அடியோடு அழிய என்னுதல்;

1. முன் இரண்டு அடிகளால் பலித்த பொருளை அருளிச்செய்யா நின்றுகொண்டு, "வாங்காய்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. மொண்டெழுபானை - எற்றப்பானை.

3. 'அடியோடழிய' என்றது, நெருப்பு அழியும்போது அடியோடு அழியுமாறுபோன்று, இச்செல்வமும் அடியோடு அழிய என்றபடி.

[1] அன்றிக்கே, தன்னுடைய அழிவிற்குக் காரணமாக என்னுதல். செல்வம் அழிவிற்குக் காரணமாதல் யாங்ஙனம்? எனின், 'இவன் ஜீவிக்கிறன்' என்கிற இது கேட்டுப் பொறுக்க மாட்டாமலே யன்றோ பிறர் இவனை அழிக்க வருவது; ஆதலால், தன் அழிவிற்குச் செல்வம் காரணமாதல் காண்க. கொள் என்று தமம் மூடும் - [2] இப்படிச் செல்வமானது அழிவிற்குக் காரணமாதலைக் காணச் செய்தேயும், பிறர் இவனைக் 'கொள், கொள்' என்று தூண்ட, அறிவின்மையால் மூடப்பட்டவனாய், பேராசையாலே முன்பு அழிவிற்குக் காரணமான அச் செல்வத்தை ஏற்றுக் கொள்வான். அறிவின்மையால் மூடப்பட்டவனாய் விரும்புகிறான் என்பதனை இவர் அறிந்தவாறு யாங்ஙனம்? எனின், மீளவும் அச் செல்வத்தை அவன் விரும்பும்போது தமோ குணத்தாலே மூடப்பட்டவனாகத் தானே இருத்தல்வேண்டும். அன்றிக்கே, 'கொள் என்று' தூண்டுகிறது, மனமாகவுவாம். அன்றிக்கே, 'இது அழிவிற்குக் காரணமாம்' என்று அறியச் செய்தேயும், இவனுடைய மனத்தைத் தமோ குணத்தாலே மறைப்பித்து, அதனைக் கொள் என்று தூண்டி இவனை விரும்பும்படியாகச் செய்யும், இச்செல்வத்தினுடைய வலிமை என்னலுமாம். [3] "மஹாரதரான வீடுமன் இறந்தபின்னரும் துரோணர் இறந்தபின்னரும் கர்ணன் இறந்தபின்னரும் சல்லியன் பாண்டவர்களை வெல்வான் என்ற ஆசையானது அதிகரித்தது" என்கிறபடியே, அதிரதர் மஹாரதர் அடையப் பட்டுப் போகா நிற்கச் செய்தேயும், பின்னையும் சல்லியனைக்கொண்டே பாண்டவர்களை

---

1. நெருப்பு, 'சேர்ந்தாரைக்கொல்லி' ஆகையாலே, அப்படியே, செல்வமும் தான் சேர்ந்திருக்கின்ற ஒருவனை அழிப்பிக்கும் என்று கூறத் திருவுள்ளம்பற்றி அதனை அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. ஆக "நெருப்பாக" என்றதற்கு இரண்டு வகையான கருத்து அருளிச்செய்தபடி.

2. "கொள்ளென்று தமம்மூடும்" என்பதற்கு மூன்று வகையாகக் கருத்து அருளிச்செய்கிறார். முதல் கருத்து, 'இப்படிச் செல்வமானது' என்று தொடங்கும் வாக்கியம். இரண்டாவது கருத்து, 'அன்றிக்கே' என்று தொடங்கும் வாக்கியம். மூன்றாவது கருத்து, 'அன்றிக்கே, இது அழிவிற்குக் காரணமாம்' என்று தொடங்கும் வாக்கியம்.

3. அழிவிற்குக் காரணமானவற்றை விரும்புவதற்குக் காரணம் யாது? என்ன, 'துராசைதான் காரணம்' என்று கூறத் திருவுள்ளம்பற்றி, அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'மஹாரதரான' என்று தொடங்கி. இது, பாரதம், சல்லியபர்வம்.

ஜெயிக்கப் பார்த்தான் அன்றோ துரியோதனன். இவை என்ன உலகியற்கை - இவை உலக யாத்திரை சில இருக்கிற படியே!

வள்ளலே - [1]"செல்வம் அழிவதற்குக் காரணம்' என்னு மதனை என் நெஞ்சிலே படுத்தி எனக்கு ஔதார்யத்தைச் செய்தவனே! மணி வண்ணா - மாணிக்கப் பண்டாரத்தை யன்றோ ஔ தா ர் ய ம் செய்தது. [2]சாதநஅநுஷ்டானம், மற்றொன்றனைப் பண்ண அன்றாயிற்று. அன்றிக்கே, செல்வம் முதலானவற்றில் வெறுப்பினைப் பிறப்பித்தது, [3]பிடாத்தை விழவிட்டு வடிவழகைக் காட்டியாயிற்று என்பார் 'மணி வண்ணா' என்கிறார் என்னலுமாம். உன கழற்கே வரும் பரிசு- [4]ஞானலாப மாத்திரத்தால் போதுமோ? பேற்றினைப் பண்ணித் தரவேண்டாவோ? [5]மயர்வற மதிநலம் அருளினதைப் போன்று, துயரறு சுடர் அடி தொழுது எழப் பண்ண வேண்டாவோ? பசியை விளைத்தால் சோறு இடவேண்டாவோ? வள்ளல் செய்து-உன் திருவடிகளிலே நான் வந்து கிட்டும்படியாக ஔதார்யத்தைப் பண்ணி. என்றது, 'இவன் இப்பேற்றைப் பெறுவான்' என்று அங்கீகரித்து என்றபடி. அடியேனை - [6]பிறர் உடைமை நசியாமல் நோக்கவேணும் என்று பிரார்த்திக்கின்ற என்னை. உனது அருளால்-மயர்வற மதிநலம் அருளினதைப் போன்று பேற்றுக்கும் தனியே ஓர்

---

1. "வள்ளலே" என்றதற்கு, இரண்டு வகையாக பாவம் அருளிச் செய்கிறார். முன்னையது, செல்வமானது அழிவிற்குக் காரணமானது என்றதனைக் காட்டிய ஔதார்யம். பின்னையது, விக்கிரஹத்தை ஔதார்யம் பண்ணியது. மாணிக்கப்பண்டாரம் - மாணிக்கப் பொக்கிஷம்.

2. 'மாணிக்கப்பண்டாரத்தை' என்று மேலே அருளிச்செய்த வாக்கிய விவரணம்: 'சாதநாநுஷ்டானம்' என்று தொடங்கும் வாக்கியம். 'மற்றொன்றனை' என்றது, ஆசார்ய உபதேசத்தை.

3. பிடாத்தை - போர்த்த பச்சைவடத்தை.

4. "வள்ளலே" என்றதற்கு அருளிச்செய்த முதற்பொருளுக்குச் சேர பாவம் அருளிச்செய்கிறார் 'ஞானலாபம்' என்று தொடங்கி.

5. ஞானலாபம் பண்ணித் தந்தால், பேற்றினைப் பண்ணித் தரவேண்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மயர்வற' என்று தொடங்கி. அதற்கே ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'பசியை விளைத்தால்' என்று தொடங்கி.

6. பிறருடைமை - உனது உடைமை. முன்னிலையைப்படர்க்கையாக வைத்துக் கூறுவது.

அருளிச் செய்யவேணும். 'வாங்காய்' என்று அஃறிணையைப் போன்று சொல்லுகிறார். அதற்கு அடி, இத்தலையில் பரம பக்தி பர்யந்தமாகப் பிறந்தாலும், [1]பெறுகிற பேற்றின் கனத்தைப் பார்த்தால், அத்தலையின் கிருபையாலே பெற்ற தாம்படி இருக்கையாலே. (4)

425.

வாங்குநீர் மலருலகில் நிற்பனவும் திரிவனவும்
ஆங்குயிர்கள் பிறப்பிறப்புப் பிணிமூப்பால் தகர்ப்புண்ணும்
ஈங்கிதன்மேல் வெந்நரகம் இவைஎன்ன உலகியற்கை!
வாங்கெனை நீ மணிவண்ணா! அடியேனை மறுக்கேலே.

பொ - ரை :—வளைந்த கடலாற் சூழப்பட்ட பரந்த உலகத்திலே நிற்பனவும் திரிவனவுமான அவ்வவ்விடங்களிலே வசிக்கின்ற உயிர்கள் பிறப்பாலும் இறப்பாலும் வியாதியாலும் வருந்தாநிற்கும்; ஈங்கு இதற்குமேலே கொடிய நரகமுமாம்; இவை என்ன உலகு இயற்கை! நீலமணிபோன்ற நிறத்தையுடையவனே! நீ என்னை அங்கீகரித்தருள வேணும்; அடியேனைக் கலங்கும்படி செய்யாதொழியவேணும் என்கிறார்.

வி - கு :— 'வாங்கு நீர்' வியாக்கியானம் பார்க்கவும். தகர்ப் புண்ணல் - வருத்தத்தை அடைதல்; அழிதல். மறுக்கேல் - கலங்கப் பண்ணாதே.

ஈடு :—ஐந்தாம்பாட்டு. பிறப்பு மூப்பு இறப்பு முதலியவை களாலே நோவுபடுகிற சம்சாரிகள் நடுவில் நின்றும், இவை நடையாடாத தேசத்திலே அழைத்துக் கொண்டருளவேணும் என்கிறார்.

வாங்கு நீர் மலர் உலகில் - இவ்வருகு உண்டான காரிய வர்க்கத்தை யடையத் தன்பக்கலிலே வாங்காநின்றுள்ள நீரிலே உண்டாய் விரிவடைந்துள்ள உலகத்திலே. [2]காரியங்க ளெல்லாம் காரணத்திலே லயமாகக் கடவன அன்றோ?

---

1. 'பெறுகிறபேறு' என்றது, அத்வேஷம் தொடங்கிக் கைங்கர்ய பர்யந்தமாக வருகிற பலத்தைக் குறித்தபடி.

2. தண்ணீரோ எல்லாவற்றையும் வாங்குகிறது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'காரியங்கள் எல்லாம்' என்று தொடங்கி. தண்ணீர், காரணம்; பூமி, காரியம். தண்ணீரினின்றும் பூமி உண்டாயிற்று என்ற சிருஷ்டி முறையை நினைவுகூர்க.

[1]லயத்தை முன்னிட்டன்றே படைப்பு இருப்பது. அன்றிக்கே, நீராலே சூழப்பட்டதும் திருநாபீ கமலத்தில் பிறந்ததுமான உலகத்திலே என்னுதல். வாங்கு - வளைந்த. திரிவனவும் நிற்பனவும் - தாவரங்களும் சங்கமங்களும். ஆங்கு உயிர்கள் - அந்த அந்தச் சரீரத்திலேயுள்ள ஆத்மாக்கள். அன்றிக்கே, நிற்பனவும் திரிவனவுமான உயிர்கள் என்று கூட்டித் தாவரமாகவும் சங்கமமாகவும் இருக்கின்ற உயிர்கள் என்னலுமாம். 'ஆங்கு' என்பதனை, மேலே வருகின்ற 'வாங்கு எனை நீ' என்றதனோடு கூட்டுக. பிறப்பு இறப்பு பிணி மூப்பால் தகர்ப்புண்ணும் - பிறப்பு மூப்பு மரணம் முதலியவைகளாலே நெருக்குண்ணுநிற்பர்கள், சம்சாரத்தில் இருக்கும் நாட்கள் முழுதும். இதன்மேல் வெம் நரகம் - இதற்குமேல் போனால் கொடிதான நரகம். இங்கு இருந்த நாள் [2]மூலையடியே சுகாநுபம் பண்ணித் திரிந்ததைப் போன்றது அன்றே, அங்குப் போனால் படுந் துக்கம் என்பார் 'வெந் நரகம்' என்கிறார். என்றது, சுகப் பிராந்தியாகிலும் உண்டு இங்கு; அங்கு, வடிகட்டிய துக்கமேயாயிற்று உள்ளது என்றபடி. [3]உயிர்க்கழுவில் இருக்குமவன் நீர்வேட்கை கொண்டு தண்ணீரும் குடித்துத் திருப்தனாய் இருக்குமாறுபோன்றதே யன்றோ இங்குள்ளவை; அதுவும் இல்லை அங்கு. இவை என்ன உலகு இயற்கை-இது ஓர் உலக யாத்திரையைப் பண்ணி வைக்கும்படியே! ஆனால், உமக்குச் செய்யவேண்டுவது என்? என்ன.

ஆங்கு வாங்கு எனை - [4]"நினைவிற்கும் எட்டாத உலக நாதனான ஸ்ரீ விஷ்ணுவானவர் நித்தியர்களாலும் முக்தர்களாலும் சூழப்பட்டுப் பிராட்டியோடுகூட ஸ்ரீ வைகுண்டம் என்கிற மேலான உலகத்தில் எழுந்தருளியிருக்கிறார்" என்கிறபடியே, ஏழுலகும் தனிக்கோல் செல்ல நீ வீற்றிருக்கிற

---

1. சிருஷ்டியைச் சொல்லி, பின்பு அழித்தலைச் சொல்லவேண்டாவோ? என்ன, 'லயத்தை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

2. மூலையடி - தன் இச்சையின்படி. சுகப்பிராந்தி - சுகமல்லாததனைச் சுகமாக நினைக்கும் மயக்கம்.

3. இங்குச் 'சுகப்பிராந்தி' என்பது என்? சுகாநுபவம் காண்கின்றோமே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'உயிர்க்கழு' என்று தொடங்கி. உயிர்க்கழு - உயிரை வாங்கும் கழுமரம்.

4. "ஆங்கு" என்பது, பிரமாணப் பிரசித்தியாலே பரமபதத்தைக் காட்டுகிறது. அதற்குப் பிரமாணத்தைக் காட்டுகிறார் 'நினைவிற்கும் எட்டாத' என்று தொடங்கி.

இடத்திலே என்னை வாங்கவேணும். மணிவண்ணா - [1] ஐம்புல இன்பங்களிலே ஈடுபாடுடையவனாய் அவற்றின் வடிவிலே துவக்குண்டிருக்கிற என்னை, 'அவ் வடிவை நாய்க்கு இடாய்' என்னும்படியான உன் வடிவைக் காட்டிக்கொண்டு போக வேணும். [2] "மனைப்பால், பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்ப மெல்லாம், துறந்தார் தொழுதார் அத்தோள்" என்கிறபடியே, இவன்படியைக் கண்டால் வேறு ஒன்றும் பிடியாதேயன்றோ? அடியேனை - [3] உன்படி அறிந்த என்னை; என்றது, நீயும் அவ் வோலக்கமுமாய் இருக்கிற இருப்பில் இனிமை யறிந்த என்னை என்றபடி. மறுக்கேலே - [4] பிறப்பு மூப்பு மரணம் முதலியவைகளாலே நெருக்கு உண்கிற இவர்கள் நடுவே இருந்து நெஞ்சு மறுகாதபடி பண்ணவேணும். என்னைக் கலங்கப்பண்ணாதேகொள். தெளிவிசும்பிலே வாங்கியருளவேணும். உனக்கே யுரியராய்ச் சேஷபூதராய் இருப்பாரையுங்கொண்டு லீலாரசம் அநுபவிக்கக் கடவதோ? என்பார் 'அடியேனை மறுக்கேல்' என்கிறார். (5)

## 426.

மறுக்கிவல் வலைப்படுத்திக் குமைத்திட்டுக் கொன்றுண்பர்
அறப்பொருளை யறிந்தோரார் இவைஎன்ன உலகியற்கை
வெறித்துளவ முடியானே! வினையேனை உனக்கடிமை
அறக்கொண்டாய் இனிஎன்னா ரமுதே! கூய் அருளாயே.

பொ - ரை:—உலகத்து மக்கள் ஒருவரை ஒருவர் மனத்தினைக் கலக்கிக் கொடியவலையிலே அகப்படச்செய்து வருத்திப் பின் கொன்று

---

1. "எனை மணிவண்ணா வாங்கு" என்று கூட்டிப் பொருள் அருளிச் செய்கிறார் 'ஐம்புல இன்பங்களிலே' என்று தொடங்கி.

2. இதர விஷயங்களை நீக்கலாம்படி அவன் வடிவழகு இருக்குமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் "மனைப்பால்" என்று தொடங்கி. இது, இரண்டாந் திருவந். 42.

3. "மணிவண்ணா" என்றதனைக் கடாக்ஷித்து பாவம் அருளிச்செய்கிறார் 'உன்படி' என்று தொடங்கி. படி: சிலேடை.

4. ஆழ்வான் நிர்வாஹத்துக்குச் சேர அர்த்தம் அருளிச்செய்கிறார் 'பிறப்பு மூப்பு' என்று தொடங்கி. எம்பார் நிர்வாஹத்துக்குச் சேர அர்த்தம், 'என்னைக்கலங்கப் பண்ணாதேகொள்' என்பது; என்றது, சம்சாரிகளுடைய வியாபாரங்களைக் கண்டு நான் கலங்காதபடி செய்யவேணும் என்றபடி. "ஆங்கு எனைவாங்கு" என்றதனைக் கடாக்ஷித்து பாவம் 'தெளிவிசும்பிலே வாங்கியருளவேணும்' என்பது.

அவர்கள் பொருள்களைக் கொண்டு தாங்கள் ஜீவிப்பர்; தர்மமாகிற பரம புருஷார்த்தத்தை அறிந்து அதனை ஆராயார்; இவை என்ன உலகியற்கை! வாசனை பொருந்திய திருத்துழாயைத் தரித்த திரு முடியையுடையவனே! தீவினையையுடைய என்னை உனக்கே அடிமை யாகும்படி செய்தவனே! உனக்கு அடிமையான பின்பு, எனக்கு அரிய அமுதமாய் இருப்பவனே! அழைத்துக் கொண்டருளவேணும் என்கிறார்.

வி - கு:—'ஓரார்' என்பதற்கு மக்கள் என்னும் எழுவாயை வருவித்து முடிக்க. உண்பர் ஓரார் என்க. வெறி - வாசனை.

ஈடு:— ஆறும்பாட்டு. சம்சாரிகளுடைய [1] பகவத் வைமுக் யாதி தோஷங்களை நினைத்து ஈசுவரனை இன்னாதாகை தவிர்ந்து, ஜீவனத்தின் பொருட்டுப் பிறரைத் துன்புறுத்து கின்ற சம்சாரிகள் நடுவில் நின்றும் என்னை உன் திருவடி களிலே அழைத்தருளவேணும் என்கிறார்.

முதல் அடியாலே, கிராமணிகள் செல்வத்தைத் தேடிச் சேர்க்கும்படியை அருளிச்செய்கிறார்: மறுக்கி - 'சாது' என்று தோற்ற வாழ்கின்ற ஒருவன், 'ஒரு தேசத்திலே வாழா நின்றால், பயம் இன்மைக்காகப் பற்றுக்கோடாக ஒருவனைப் பற்றியிருக்கவேணும்' என்று ஒரு கிராமணி பக்கல் சென்று சேர்வான்; 'இவன் சாது' என்று அவனுக்குத் தோற்றின வாறே 'உன்னை இன்னாரும் இன்னாரும் இன்னபடி சொன்னார் களே' என்பான்; அவன் அஞ்சினவனாய், 'இவன் நமக்கு ரக்ஷகன்' என்று இவனை அவன் நம்பினபடியாலே, 'அதற் குப் பரிஹாரம் என்?' என்று இவன் தன்னையே கேட்பான்; 'உனக்கு ஒன்று வந்தால் சொல்லலாவது இல்லாதபடி என் வீட்டிலே உனக்குள்ள செல்வத்தையும் போகட்டு உன் நிலம் முதலாயினவற்றையும் என்மேலே [2] திரிய விட்டு வை' என் பான்; இப்படி அவன் நெஞ்சைக் கலங்கச்செய்து. [3]வல் வலைப் படுத்தி - இவன் இனி இவை கொண்டு தப்ப ஒண்ணாதபடி

1. பகவத் வைமுக்யாதி தோஷங்கள் - பகவானிடத்தில் விருப்பமில் லாமை முதலிய குற்றங்கள். இன்னாதாகை - துன்புறுதல்.

2. திரியவிட்டு - எறிட்டு எழுதி. என்றது, தன்பேரில் எழுதிய பத்தி ரங்களை வேறு ஒருவன் பேரில் எழுதுதல்.

3. வல்வலை - வலிதானவலை. வலையின் சுவபாவத்தைப் பற்ற பாவம் அருளிச்செய்கிறார் 'இவன்' என்று தொடங்கி. "தீவினை முதிர்வலைச் சென்றுபட்டிருந்த கோவலன்" என்பது சிலப்பதிகாரம்.

தன்பக்கலிலே அகப்படுத்தி. குமைத்திட்டு - பின்னர் இவன் கொடுத்த செல்வத்தைஅடையத் தன்பேரிலே செலவு எழுதிச் [1]சிகைக்கு அடிப்பிக்கும். கொன்று - 'இவன் இருக்குமாகில் ஒருநாள் வரையில் சிலரை அடைந்து தொடரிலோ?' என்று இவனைக் கொல்லுவான். உண்பர் - இப்படிச் செய்தால் தான் செய்வது வயிறு வளர்க்கையே யன்றோ?

அறப் பொருளை அறிந்து - 'தேகத்திற்கு வேறுபட்டதா யிருப்பதொரு ஆத்ம வஸ்து உண்டு, நாம் இப்போது செய்கிறவை அதிலே வந்தவாறே [2]தட்டுப்படும்' என்று தர்மத்தின் உண்மையை அறிந்து. ஓரார் - அதனுடைய நிருபணத்திலே முதலிலே இழியார்கள். அன்றிக்கே, பிறரைத் துன்புறுத்துவதில் நின்றும் நீங்கார் என்றுமாம்; ஓர்தல் - ஒருவுதலாய், ஒருவுதல் - நீங்குதல் என்றபடி. [3] அன்றிக்கே, செல்வமாகிய புருஷார்த்தம் ஒன்றனையுமே அற விரும்பி, நன்மை தீமைகளை நிருபணம் பண்ணார் என்னுதல். இவை என்ன உலகியற்கை - இது ஒரு உலக யாத்திரை இருக்கும்படியே பிரானே! வெறித்துளவ முடியானே - வாசனையையுடைய திருத்துழாயை முடியிலே யுடையவனே! என்றது, இந்தச் சம்சாரிகள் நடுவே இருக்கிற என்னை உன்னுடைய இனிமையைக் காட்டி அடிமை கொண்டவனே! என்றபடி. வினையேனை - [4]ஐம்புல இன்பங்களிலே ஈடுபட்டிருக்கிற இவர்களிலே ஒருவனாகப் பிறப்பதற்கு அடியான பாபத்தையுடைய என்னை. உனக்கு அடிமை அறக் கொண்டாய் - நான் நின்ற நிலைக்குச் சேராதபடியான உன் திருவடிகளில் அடிமையை [5]நிர்ஹேதுகமாக என்னைக் கொண்டருளினாய். இனி - அடிமைகொண்ட பின்பு. என்

1. சிகைக்கு - வட்டிக்கு.

2. தட்டுப்படும் - தர்மம் ஆகாமல் அதர்மமாகவே முடிவுறும்.

3. 'அன்றிக்கே' என்று தொடங்கிக் கூறும் பொருளுக்கு, "அறப் பொருளை அறிந்து" என்பதனை, பொருளை அற அறிந்து எனப் பிரித்துக் கூட்டுக.

4. "அறப் பொருளை யறிந்து ஓரார்" என்பதற்கு அருளிச்செய்த மூவகைப் பொருள்களில், இரண்டாவது பொருளிலே நோக்காக அருளிச் செய்கிறார் 'ஐம்புல இன்பங்களிலே' என்று தொடங்கி.

5. "அறக்கொண்டாய்" என்பதில் "அற" என்பதற்கு 'ஒரு காரணம் அற' என்று பொருள் கொண்டு அதனை அருளிச்செய்கிறார் 'நிர்ஹேதுகமாக' என்று.

ஆர் அமுதே - எனக்கு நிரதிசய இனியனானவனே! கூய் அருளாயே - நான் இவர்கள் நடுவே இருக்கிற இருப்பை விட்டு உன் திருவடிகளிலே சேரும்படி அழைத்துக்கொண்டருள வேணும். [1] அன்றிக்கே, இனி என் - அவர்கள் ஒருபடியாலும் பேற்றிலே நெஞ்சு வையாரான பின்பு, நான் அவர்கள் கேட்டிற்குக் கரைந்ததற்குப் பிரயோஜனம் என்? அதனைவிடலாகாதோ? என்னை முதல் அங்கே அழைத்துக் கொண்டருள வேணும் என்னுதல். (6)

427.

ஆயே! இவ் வுலகத்து நிற்பனவும் திரிவனவும்
நீயேமற் றொருபொருளும் இன்றிநீ நின்றமையால்
நோயேமூப் பிறப்பிறப்புப் பிணியேஎன் றிவைஒழியக்
கூயேகொள் அடியேனைக் கொடுஉலகம் காட்டேலே.

பொ - ரை :—இந்த உலகத்திலே நிற்கின்ற பொருள்களும் திரிகின்ற பொருள்களும் நீயேயாகி, உன்னைத் தவிர வேறு ஒரு பொருளும் இல்லாதபடி நீ நின்ற காரணத்தாலே, நோய் மூப்பு இறப்புப் பிறப்புப் பிணி என்ற இவைகள் ஒழியும்படியாக அடியேனைக் கூவிக் கொள்வாய்; இந்தக் கொடிய உலகத்தை எனக்குக் காட்டாதே என்கிறார்.

வி - கு :—முதலிலேயுள்ள 'ஆய்' என்ற சொல்லை 'நீயே' என்ற சொல்லோடு சேர்த்து நீயேயாய் நின்றமையால் எனக் கூட்டுக. ஆய்: வினையெச்சம். அன்றி, 'ஆயே' என்பதனை விளிப்பெயராகக் கோடலுமாம். நின்றமையால் இவை ஒழிய அடியேனைக் கூயே கொள் என்க. என்றது, சரீரத்திற்கு வருகின்ற நோய் முதலானவைகளை ஆத்மா நீக்குவது போன்று, உனக்குச் சரீரமாக இருக்கின்ற எனக்கு வரும் நோய் முதலானவற்றையும் சரீரியாகிய நீயே நீக்கவேண்டும் என்பது கருத்து.

ஈடு :—ஏழாம்பாட்டு. [2] விரும்பியவை அப்போதே கிட்டாமையாலே, 'பேறு தம்மதான பின்பு தாமே முயற்சிசெய்து

1. "கூயருளாய்" என்பதற்கு, ஆழ்வான் நிர்வாஹத்துக்குச் சேரப் பொருள் அருளிச்செய்கிறார் 'அன்றிக்கே' என்று தொடங்கி. கரைந்ததற்கு- வருந்தியதற்கு. 'அதனை விடலாகாதோ' என்பதற்கு, அதனை விட்டு நீங்கினால் என்ன? என்பது பொருளாகக் கொள்க. அதாவது, அவர்கள் செயலைக் கண்டு வருந்துதலை நீக்கினால் வரும் குற்றம் யாது? என்றபடி.

2. "நீயே - கூயே கொள்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

வருகிறார்' என்று இறைவன் நினைத்தானாகக் கொண்டு 'எல்லாப் பொருள்களும் உனக்கு அதீனமான பின்பு நீயே உன்னைக் கிட்டும் வழி பார்த்தருளவேணும்' என்கிறார்.

ஆயே - தாயே! என்றபடியாய், [1] "மாதா பிதா" என்கிற படியே, எனக்கு எல்லாவிதமான உறவின் கூட்டமும் ஆனவனே! என்கிறார். அன்றிக்கே, இவ் உலகத்து நிற்பனவும் திரிவனவும் நீயேயாய் என்று கொண்டு கூட்டி, இந்த உலகத்திலே தாவரங்களாயும் சங்கமங்களாயும் கூடியிருக்கின்ற எல்லாப்பொருள்களும் 'நீ' என்கிற சொல்லுக்குள்ளேயாம்படி பிரகாரமாய் அற்று, [2] நீ ஒருவனுமே பிரகாரியாய் என்று பொருள் கோடலுமாம். "உலகம் பரமாத்மாவுக்குச் சரீரம் என்ற புத்தி எப்பொழுது இவனுக்கு உண்டாகிறதோ அப்பொழுது தனித்த ஒரு சாதனத்தாலே தனித்தஒருவனைப் பார்க்கக் கடவன்" என்பது உபநிடத வாக்கியம். [3] மற்று ஒரு பொருளும் இன்றி - "இவ்வுலகில் பல பொருள்கள் பரமாத்மாவை நீங்கித் தனித்து இயங்குகின்றன என்று எவன் எண்ணுகிறானோ அவன் நனிபேதை யாவான்; (ஆதலால்) இவ்வுலகில் பல இல்லை என்று மனத்தால் எண்ணக் கடவன்" என்று சொல்லுகிறபடியே, பரம் பொருளினின்றும் நீங்கி நிற்பதாய் ஸ்வதந்திரமாயிருப்பதொரு பொருளாயிற்று ஈண்டு 'இல்லை' என்கிறது. நீ நின்றமையால் - நீ இப்படி நின்ற பின்பு.

நோயே மூப்பு இறப்புப் பிறப்புப் பிணி என்ற இவை ஒழிய - [4] சரீரத்துக்கு வந்தவற்றுக்குச் சரீரியான ஆத்மா இன்புறுதல் துன்புறுதல் செய்யுமதனைப் போன்று, எனக்கு

---

1. சுபாலோபநிடதம். "தாயும் தமப்பனும் உடன்பிறந்தவனும் இருப்பிடமும் ரக்ஷகனும் சிநேகிதனும் பேறும் எல்லாம் நாராயணனே" என்பது அவ்வுபநிடத வாக்கியத்தின் பொருள்.

2. 'நீ ஒருவனுமே பிரகாரியாய்' என்றது, சாமாநாதிகரண்யம்; பிரகார பிரகாரி பாவ நிபந்தனம். இதற்குப் பிரமாணம், 'உலகம் பரமாத்மாவுக்கு' என்று தொடங்குவது. இது, பிரு. உப. 6 : 5.

3. "மற்று ஒரு பொருளுமின்றி" என்றதனால் சொரூப ஐக்யம் சொல்லுகிறதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவ்வுலகில் பல பொருள்கள்' என்று தொடங்கி. இது, கடவல்லி உப. 2. 4 : 11.

4. இப்போது, பிரகார பிரகாரி பாவம் சொன்னதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'சரீரத்துக்கு' என்று தொடங்கி.

'வந்தவற்றுக்கு இன்புறல் துன்புறல் செய்வாய் நீயாம்படி சம்பந்தமுண்டாயிருந்த பின்பு, பிறவி காரணமாக வருகின்ற இந்த வியசனங்களைக் கழித்து. [1]நோயும் பிணியும் - ஆதி வியாதிகள். கூயே கொள் - 'இவன்தானே வருகிறான்' என்று இராமல் நீயே அழைத்துக் கொண்டருளவேணும். கொடு உலகம் - உன்னை விட்டு ஐம்புல இன்பங்களால் போது போக்கி இருக்கிற உலகம். காட்டேல் - [2]திட்டிவிடம்போலே காணில் முடிவன். [3]இந்த உலகயாத்திரை என் கண்களுக்கு இலக்கு ஆகாதொழிய வேணும் என்கையாலே, இந்த உலக யாத்திரை இவர் கண்களில் பட்டது இல்லையாயிருந்தபடி. [4]மயர்வற மதிநலம் அருளினதைப் போன்று சர்வ சக்தியானவன் இதனைக் காட்டில் காணுமித்தனை. [5]ஆனல், "இவை என்ன உலகியற்கை" என்றதனோடு சேரும்படி என்? என்னில்,

---

1. நோய்க்கும் பிணிக்கும் வேறுபாடு காட்டுகிறார் 'நோயும் பிணியும்' என்று தொடங்கி. 'ஆதி வியாதிகள்' என்றது, ஆதியும் வியாதியும் என்றபடி. ஆதி - மனோவியாதி. வியாதி - உடல் நோய்.

2. "காட்டேல்" என்கைக்கு, காட்டினால் வரும் கேடு யாது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'திட்டிவிடம்போலே' என்று தொடங்கி. திட்டிவிடம் - கண்ணிலே விஷத்தையுடையது ஒரு பாம்பு. திட்டி - கண். திருஷ்டி ; திட்டி.

"கண் விழித் துமிழ்விடக் கனலரா வரசு" (கம். தாடகை. 10.)
"திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை
விட்டிலை யோவிது விதியின் வண்ணமே" (கம். கும். 80.)

என வருதலைக் காண்க.

"உண்ணாதே யுயிர் உண்ணா தொரு நஞ்சு சனகியெனும் பெருநஞ்சு உன்னைக் கண்ணாலே நோக்கவே போக்கியதே உயிர்"

(கம். இராவணன்வதைப். 220.)

என்பதூஉம் அக்கருத்தே பற்றி வந்தது.

3. "காட்டேல்" என்றதனால் பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'இந்த உலகயாத்திரை' என்று தொடங்கி.

4. ஆயின், இப்போது உலக யாத்திரையை நினைப்பதற்குக் காரணம் யாது? என்ன, 'மயர்வற' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். "காட்டேல்" என்கையாலே, ஈசுவரன் தானே காட்டுவதற்கு முன்பு இவர் காணாமையும், ஈசுவரன் தானே காட்டினான் என்பதும் போதரும்.

5. அவன் காட்டினால், "காட்டேலே" என்று வெறுப்பாகச் சொல்லுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆனல்' என்று தொடங்கி.

'பரஹிதம்' என்கிற புத்தியாலே முன்பு நினைந்தார்; 'இது தான் வந்து தம்மைக் கிட்டாதபடி பண்ணவேணும்' என்கிறார் இப்பாசுரத்தில். (7)

428.

காட்டிநீ கரந்துமிழும் நிலம்நீர்தீ விசும்புகால்
ஈட்டிநீ வைத்தமைத்த இமையோர்வாழ் தனிமுட்டைக்
கோட்டையினிற் கழித்தென்னை உன் கொழுஞ்சோதி உயரத்துக்
கூட்டரிய திருவடிக்கண் எஞ்ஞான்று கூட்டுதியே.

பொ - ரை:— நீ உலகத்தை உண்டாக்கிக் காட்டிப் பிரளயம் வந்தவாறே உண்டு மறைத்துப் பிரளயம் நீங்கினவாறே வெளிநாடு காண உமிழ்ந்த, நிலமும் நீரும் தீயும் ஆகாயமும் காற்றும் ஆகிய ஐந்து பூதங்களையும் சேர்த்துச் சமைத்து வைத்த, தேவர்கள் வாழ்கின்ற ஒப்பற்ற அண்டமாகிற கோட்டையினின்றும் நீக்கி என்னை உன்னுடைய மிக்க ஒளியோடு கூடிய பரமபதத்திலே பெறுதற்கு அரிதான திருவடிகளிலே எப்பொழுது கூட்டுவாய்? என்கிறார்.

வி - கு:— உமிழும் முட்டை, வைத்து அமைத்த முட்டை, இமையோர் வாழ் முட்டை, தனி முட்டை என்று தனித் தனியே கூட்டுக. முட்டை - அண்டம். கொழுஞ்சோதி உயரம் - பரமபதம்.

ஈடு:— எட்டாம் பாட்டு. [1]நாமே செய்யப் புக, நீர் 'வேண்டா' என்றவாறே யன்றோ தவிர்ந்தது; இதற்கு நம்மைக் காற்கட்ட வேணுமோ? என்ன, 'செய்யக்கடவதாகில், அது செய்வது என்று?' என்கிறார். "எம்மா வீட்டுத் திறமும் செப்பம்" என்றாரே முன்னர்.

காட்டி - முன்பு[2] தானே தானும்படி இவற்றை யடையத் தன்பக்கலிலே சேர்த்துச் 'சத்' என்னும் நிலையினதான உலகத்தை, [3]"பிரமன் முன்னிருந்தபடியே படைத்தான்" என்கிறபடியே, இதனை உண்டாக்கிக் காட்டி. 'காட்டி'

---

1. "எஞ்ஞான்று கூட்டுதி" என்று காலாவதி கேட்கும்போது செய்கை நிச்சயிக்கப்பட்டதாக வேண்டுகையாலே, அதற்குத் தகுதியாக அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'தானே தானும்படி' என்றது, தானே அழிக்குமிடத்தில், தானும்படி இவற்றை யடையத் தன் பக்கலிலே சேர்த்துக்கொண்டு என்றபடி.

3. தைத்திரீய நாரா. 1.

என்ற சொற்போக்கால், [1] ஐந்திரஜாலிகரைப்போலே இதனை உண்டாக்கிக் காட்டுகிறான் என்பது போதரும். நீ கரந்து உமிழும் - படைத்தவனை நீயே பிரளயம் வந்தவாறே உள்ளே வைத்துக் காப்பாற்றி, அது கழிந்தவாறே வெளிநாடு காண உமிழுகின்ற. அன்றிக்கே, [2] நீ கரந்து காட்டி, உமிழ்ந்து காட்டும் என்னலுமாம். நிலம் நீர் தீ விசும்பு கால் - இப்படி உண்பது உமிழ்வதான மண் முதலான ஐந்து பூதங்களாலே. ஈட்டி - திரட்டி. [3] திரிவிருத் கரணத்தைச் சொன்னபடி. [4] "மண் முதலிய பூதங்கள் ஒன்றோடொன்று கலந்து எல்லாவற்றிலும் எல்லாம் உள்ளன" என்கிறபடியே, இவை தனித்தனியும் காரியத்தைப் பிறப்பிக்கமாட்டா; கூடினாலும் எல்லாம் ஒத்ததாய் நிற்கில் காரியம் பிறப்பிக்கமாட்டா; [5] செதுகையும் மண்ணையும் நீரையும் கூட்டிக் குயவன் குடம் முதலியனவற்றைச் செய்யுமாறு போலே, தேவர்கள் முதலான பல காரியங்களும் பிறக்கும்படி பிரதான அப்பிரதானங்களாக

---

1. 'ஐந்திரஜாலிகரைப்போலே' என்றதனை, ஐந்திரஜாலிகர் ஒருவரும் அறியாமல் சில பொருள்களை விழுங்கி அவற்றைப் புறப்பட விடுமாறு போலே என விரித்துப் பொருள் காண்க.

2. 'நீ கரந்து காட்டி, உமிழ்ந்து காட்டும் என்னலுமாம்' என்றது, அவற்றை, ஒரு சொல் நீர்மையனவாகக் கோடல்வேண்டும் என்றபடி. கரந்தும் உமிழ்ந்தும் என்பன பொருள். கரத்தல்-அழித்தல். உமிழ்தல் - சிருஷ்டித்தல்.

3. திரிவிருத்கரணம் - பூமி தண்ணீர் நெருப்பு இவற்றைக் கூட்டுதல். திரிவிருத்கரணத்தைக் கூறியது, பஞ்சீகரணத்துக்கும் உபலக்ஷணம். பஞ்சீகரணமாவது, ஐம்பெரும் பூதங்களையும் கூட்டுதல். கூட்டுதலாவது, ஆகாசம் முதலிய பூதங்கள் ஐந்தனையும் தனித்தனியே இரண்டு கூறாக்கி, அவற்றில் ஒவ்வொரு கூற்றை நான்கு கூறாக்கி, மற்றைப் பூதங்களில் ஒவ்வொரு கூறு கூட்டிவிடுதல். இதனால், எல்லாப் பூதங்களிலும் எல்லாக் குணங்களும் கலந்து நிற்கும்.

"நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலக மாதலின்"

என்பது தொல்காப்பியம்.

4. பஞ்சீகரணம் வேண்டுமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மண் முதலிய' என்று தொடங்கி. இது, விஷ்ணுபுரா. 1. 2: 54.

5. பஞ்சபூதங்களும் ஒன்றோடொன்று கலக்கும்போது பிரதான அப்பிரதானங்களாய்க் கலப்பதனால் காரியம் உண்டாகிறது என்பதனைத் திருஷ்டாந்த மூலம் விளக்குகிறார் 'செதுகையும்' என்று தொடங்கி. செதுகை - பதரும் கூளமும். "இவை கூடினாலல்லது காரியகரம் ஆகாமையாலே, மண்ணையும் மணலையும் நீரையும் சேர்த்து ஒரு திரவியமாக்கிச் சுவர் இடுவாரைப் போலே ஈசுவரன் இவற்றை எல்லாம் தன்னிலே சேர்த்து ஓர் அண்டமாக்கி அதுக்குள்ளே சதுர்முகனைச் சிருஷ்டித்தருளும்" என்பது, தத்துவத்திரயம், அசித் பிரகரணம், சூ. 34.

[1]நிற்கும். [2]பரஸ்பரம் காரணம் ஒரே தன்மையாய் நிற்கில் காரியமும் ஒரே தன்மையாயிருக்குமே யன்றோ? ஆக, இப்படி இவற்றைத் திரட்டி இவற்றாலே, நீ வைத்து அமைத்த - நீ சமைத்து வைத்த. இமையோர் வாழ் தனி முட்டைக்கோட்டையினிற் கழித்து - பிரமன் முதலானோர் [3]வன்னியம் செய்கிற ஒப்பற்ற அண்டமாகிற கோட்டையினின்றும் என்னைப் புறப்படவிட்டு. [4]கோட்டை என்பது, புறம்புள்ளாரால் புகுர ஒண்ணாததுமாய், உள்ளுள்ளாரால் புறப்படவும் ஒண்ணாதே, புக்கவிடமும் புறப்பட்டவிடமும் தெரியாததாயிருக்குமே யன்றோ? அப்படியே, இந்தச் சம்சாரமும் இருத்தலின், இதனைக் '**கோட்டை**,' என்கிறது. [5]"என் மாயை ஒருவராலும் தாண்டமுடியாதது" என்றானேயன்றோ தானும்.

என்னை - இக்கோட்டையிலே அகப்பட்டுப் புறப்பட வழியறியாதிருக்கிற என்னை. அன்றிக்கே, [6]"எவர்கள் என்னையே சரணம் அடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையைக் கடக்கிறார்கள்" என்று நீ சொன்னபடியே உன்னையே பற்றின என்னை என்னுதல். இதனைக் கழித்து உம்மைக் கொடு போகச் சொல்லுகிறது எங்ஙனே? என்ன, அருளிச்செய்கிறார் மேல்: உன் கொழும் சோதி உயரத்து - சம்சார சம்பந்தம் சிறிதும் இல்லாததாய்ச் சுத்த சத்துவமயமாய் நிரவதிக தேஜோரூபமான பரமபதத்திலே. கூடு அரிய திருவடிக்கண்- தன் முயற்சியால் அடையமுடியாததான திருவடிகளை. எஞ்

1. 'நிற்கும்' எவை? எனின், ஐம்பெரும் பூதங்கள் என்க.

2. சமப் பிரதான பாவம் ஆனால் என்னை? என, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பரஸ்பரம்' என்று தொடங்கி. 'காரியமும் ஒரே தன்மையாயிருக்குமே யன்றோ' என்றது, காரியத்திலே வேற்றுமையின்றிக்கே இருக்கவேண்டுமே யன்றோ? என்றபடி. ஆகையால், 'தேவர்கள் முதலான' என மேலே உள்ள வாக்கியத்தோடு இதனைக் கூட்டுக.

3. 'வன்னியம் செய்கிற' என்றது, "வாழ்" என்ற சொல்லின் பொருள். வன்னியம் செய்தல் - சிற்றரசர்களாய் இருந்துகொண்டு அரசாட்சி செய்தல்.

4. புறப்பட விட வேண்டுமோ? தானே புறப்பட்டால் ஆகாதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'கோட்டை என்பது' என்று தொடங்கி.

5. இதுவும் அப்படிப் புறப்பட ஒண்ணாததோ? என்ன, 'என் மாயை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். இது, ஸ்ரீ கீதை. 7 : 14,

6. ஸ்ரீ கீதை.

ஞான்று கூட்டுதி-[1]"சோகியாதே" என்று ஒரு வார்த்தையைச் சொல்லிலும் [2]"மனம் நிம்மதியுடையவனா யிருக்கிறேன்" என்றிருக்கலாயன்றோ இருப்பது; அப்படியே, 'நான் கூட்டக் கடவேன்' என்று ஒருவார்த்தை அருளிச்செய்யவேணும். [3]"பிறகு ஸ்ரீ பரதாழ்வான் பாதுகைகளைத் தலையில் வைத்துக் கொண்டு அப்போது ஆனந்தமடைந்தவராய்ச் சத்துருக்னழ்வானோடு கூடினவராய்த் தேரில் ஏறினர்" என்னலாம்படி "பதினான்கு வருஷங்களும் முடிந்து வருகிறேன்" என்றதைப் போன்று வார்த்தை அருளிச்செய்தருளவேணும். [4]'இதனைக் கழிக்கவேணும்' என்றிருக்கிற என்னை, நீ உகந்தாரைக் கொடுபோய் வைக்கும் தேசத்திலே, சர்வசக்தியான நீயே என்று கொடுபோய் வைக்கக்கடவை? என்றது, இக்கோட்டை இட்ட இவன்தானே கழிக்கவேணும் என்றபடி. [5]"எவர்கள் என்னையே சரணம் அடைகிறார்களோ, அவர்கள் இந்த மாயையைக் கடக்கிறார்கள்" [6]"அந்தச் சர்வேசுவரனையே சரணமாக அடைவாய்; அவன் திருவருளாலே பரமபதத்தை அடைவாய்" என்கிறபடியே, விரோதியைப் போக்கிலும் இவனைப் பற்றவேணும், தன்னைப் பெறிலும் தன்னாலே பெறவேணும்.

---

1. 'கூட்டவேணும்' என்னாதே, "எஞ்ஞான்று" என்பதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'சோகியாதே' என்று தொடங்கி. இது, ஸ்ரீ கீதை. 18 : 66.

2. ஸ்ரீ கீதை. 18 : 73.

3. "எஞ்ஞான்று" என்கையாலே, கால அளவு பெற்றால் தரிக்கலாம் என்னுமிடம் சித்திக்கிறது என்று கொண்டு, அங்ஙனம் காலவரையறை பெற்றுத் தரித்திருந்தவர்கள் உளரோ? எனின், 'உளர்' என்பதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'பிறகு ஸ்ரீ பரதாழ்வான்' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. அயோத். 112 : 25.

4. "என்னை உன் கொழுஞ்சோதி உயரத்துக் கூட்டரிய திருவடிக்கண் எஞ்ஞான்று கூட்டுதி" என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'இதனைக் கழிக்கவேணும்' என்று தொடங்கி.

5. "கோட்டையினில் கழித்து என்னை" என்று தொடங்கி "எஞ்ஞான்று கூட்டுதி" என்கையாலே, பலித்த பொருளைப் பிரமாணங்களோடு அருளிச்செய்கிறார் 'எவர்கள்' என்று தொடங்கி. இது, ஸ்ரீ கீதை. 7 : 14. இது, அவனைப் பற்றி விரோதியைப் போக்கிக் கொள்ளுவதற்குப் பிரமாணம்.

6. ஸ்ரீ கீதை. 18 : 62. இது, அவனையே பற்றிப் பரமபதத்தை அடைவதற்குப் பிரமாணம்.

[1] 'ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவரால் அவிழ்க்க ஒண்கிற தில்லை; ஒரு சர்வசக்தி, கர்மத்திற்குத் தகுதியாகப் பிணைத்த பிணையை, அவனைக் காற்காட்டாதே, இவ் வெலிஎலும்பனான சம்சாரியால் அவிழ்த்துக் கொள்ளப் போமோ?' என்று பணிப்பர் பிள்ளை திருநறையூர் அரையர். (8)

429.

கூட்டுதிநின் குரைகழற்கண் இமையோரும் தொழாவகைசெய்து
ஆட்டுதிநீ அரவணையாய்! அடியேனும் அஃதறிவன்;
வேட்கையெலாம் விடுத்தெனையுன் திருவடியே சுமந்துழலக்
கூட்டரிய திருவடிக்கண் கூட்டினைநான் கண்டேனே.

பொ - ரை:—ஞானமில்லாதவரே யாயினும் நீ உகந்தாரை ஒலிக்கின்ற கழலையுடைய திருவடிகளிலே கூட்டிக் கொள்ளுகின்றாய்; நீ உகவாதாரை அவர்கள் தேவர்களேயாயினும் உன்னைத் தொழாதபடி செய்து விஷயங்களிலே திரியும்படி செய்கின்றாய்; அதனை அடியேனும் அறிவேன்; அரவணையாய்! வேட்கையெல்லாம் விடுத்து உன் திருவடிகளையே சுமந்து திரியும்படியாக, தன் முயற்சியால் ஒருவராலும் அடையமுடியாத திருவடிகளிலே என்னைச் சேர்த்தாய்; நான் பார்த்தேன் என்கிறார்.

வி - கு:—குரைகழற்கண் கூட்டுதி என்க. பின்னர் 'இமையோரும்' என வருவதனால், இங்கு 'ஞானமில்லாத சிறியராயினும் அவர்களை' எனச் செயப்படுபொருள் வருவித்து அதனைக் 'குரைகழற்கண் கூட்டுதி' என்றதனோடு முடிக்க.

ஈடு:—ஒன்பதாம்பாட்டு. [2]இவர் சம்சாரத்தை நினைத்தமையால் வந்த வியசனம் எல்லாம் தீரும்படி, திருநாட்டில் இருந்த இருப்பைக் காட்டியருள, கண்டு அநுபவிக்கப் பெற்றேன் என்று திருப்தராகிறார்.

நின் குரைகழற்கண் கூட்டுதி - அறிவில்லாதவர்களாகவுமாம், நீ உகந்தாரை உன் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளுதி. குரை - [3]பெருமை; அன்றிக்கே, ஆபரணங்களின் ஒலி

1. விரோதிகளை அவனைப் பற்றியே போக்கிக் கொள்ளவேணும் என்பதற்கு ஆப்த சம்வாதம் காட்டுகிறார் 'ஒரு குருவி' என்று தொடங்கி.

2. "வேட்கையெல்லாம் விடுத்து, கூட்டரிய திருவடிக்கண் கூட்டினை" என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

3. 'பெருமை' என்றது, இனிமையின் மிகுதியைக் குறித்தது.

என்னுதல். இமையோரும் தொழாவகைசெய்து ஆட்டுதி நீ - பிரமன் முதலான தேவர்களேயாகிலும், நீ நினையாதாரை வந்து கிட்டாதபடிசெய்து அலையச்செய்வை. 'அரவணையாய்!' என்ற இவ்விளி, [1]'கூட்டுதி' என்றதற்கு உதாஹரணம். [2]அடியேனும் அஃது அறிவன் - உலக வேதங்களிலே பிரசித்தமான உன்படியை நானும் அறிவேன். [3]அறிந்தபடி தான் என்? என்னில், வேட்கை எல்லாம் விடுத்து - எனக்கு உன்னை ஒழிந்தவையாமத்தனை யன்றே ஆசைப்படுகைக்கு; உன் உலகத்தில் நான் 'எனக்கு, எனக்கு' என்னுமதுண்டோ? [4]யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை நல்வீடு செய்திலையோ? உன் திருவடியே சுமந்து உழல - புறம்பான விஷயங்களிலே உண்டான ஆசை எல்லாம் உன்பக்கலிலேயாய், உன் திருவடிகளையே நான் ஆதரித்து, அதுவே யாத்திரையாய்ச் செல்லும் படிக்காக. கூட்டரிய திருவடிக்கண் எனைக் கூட்டினை - யாவர் சிலர்க்கும் தந்தாமால் சேர்த்துக்கொள்ள அரிய திருவடிகளை நான் சேரும்படி என்னைச் சேர்த்துக்கொண்டாய். நான் கண்டேனே - [5]இது கேட்டார் வாய்க் கேட்டு நான் சொல்லுகிறேன் அல்லேன்; அநுபவத்தாலே சொல்லுகிறேன். (9)

430.

கண்டுகேட் டுற்றுமோந்து உண்டுழலும் ஐங்கருவி
கண்ட இன்பம் தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்
ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்
கண்டசதிர் கண்டொழிந்தேன் அடைந்தேனுன் திருவடியே.

1. திருவனந்தாழ்வானை ஞானமில்லாத பொருளாகச் சொன்னது, 'பாம்பு' என்பது அஃறிணையாதலால், அந்த ஒப்புமை நோக்கி.

2. "அடியேனும்" என்ற உம்மை, திருவனந்தாழ்வானைத் தழுவுகிறது. "அஃது" என்ற சுட்டு பிரசித்தியைக் காட்டுகிறது. அந்தப் பிரசித்தியை அருளிச்செய்கிறார் 'உலக வேதங்களிலே' என்று தொடங்கி. ஈண்டு 'உலக' சப்தம், இதிகாச புராணங்களைக் காட்டுகிறது.

3. 'அறிந்தபடிதான் என்? என்னில்,' என்றது, சாஸ்திர முகத்தாலே கேட்டு அறிந்தீரோ? என்றபடி.

4. "விடுத்து" என்பதற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'யாதானும்' என்று தொடங்கி.

> "யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை நல்வீடு செய்யும்
> மாதா பிதுவாக வைத் திரு மாலை வணங்குவனே."

என்பது திருவிருத். 95.

5. "கண்டேனே" என்ற ஏகாரத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'இது கேட்டார்வாய்' என்று தொடங்கி.

பொ. ரை:—கண்டும் கேட்டும் உற்றும் மோந்தும் உண்டும் திரிகின்ற ஐந்து இந்திரியங்களாலே அநுபவிக்கிற ஐஸ்வரிய இன்பமும், இந்த இந்திரியங்களாலே தெரிந்து அநுபவிக்க அரியதான அளவில்லாத ஆத்ம அநுபவ இன்பமும், ஒள்ளிய தொடியினையுடையளாய திருமகளும் நீயும் ஒருபடிப்பட்டு நிற்கும்படியாகச் செய்துவைத்த நல் விரகை நேரே கண்டு, மேலே கூறிய இரண்டு இன்பங்களையும் ஒழிந்தேன்; உன் திருவடிகளை அடைந்தேன் என்கிறார்.

வி - கு:—நிலாநிற்பக் கண்ட சதிரைக் கண்டு, கண்ட இன்பமும், சிற்றின்பமும் ஒழிந்தேன் என்க.

ஈடு:—பத்தாம்பாட்டு. [1] மேற் பாசுரத்தில், "விடுத்து" என்றும், "கூட்டினை" என்றும் சொல்லப்பட்ட பேற்றினைப் பிரீதியின் மிகுதியாலே விட்டது இது, பற்றினது இது என்று விளக்கமாக அருளிச்செய்கிறார் இப்பாசுரத்தில்.

[2] கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு உழலும் ஐங்கருவி-காட்சிக்குக் கருவியாக இருக்கும் கண், கேட்கைக்குக் கருவியாக இருக்கும் செவி, பரிசித்தறிதற்குக் கருவியாக இருக்கும் சரீர இந்திரியம், நாற்றத்தை அறிதற்குக் கருவியாக இருக்கும் மூக்கு, சுவையை அநுபவிப்பதற்குக் கருவியாக இருக்கும் நாக்கு; கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு இப்படி இவையே யாத்திரையாய்ப் போருகைக்குக் கருவிகளாக இருப்பனவேயாமன்றோ கண் முதலான இந்திரியங்கள். ஐங்கருவி கண்ட இன்பம் - [3] உழக்காலே அளக்குமாறுபோன்று அளவிற்குட்பட்ட பொருள்களை அறியத் தக்கவைகளான இந்திரி

1. பாசுரத்தில் முன் இரண்டு அடிகளையும் கடாக்ஷித்த 'விட்டது இது' என்றும், பின் இரண்டு அடிகளையும் கடாக்ஷித்துப் 'பற்றினது இது' என்றும் அருளிச்செய்கிறார்.

2. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள.

என்பது திருக்குறள்.

"உண்டுகேட் டுற்றுமோந் துப்பார்க்கு மைவர்க்கே
தொண்டுபட லாமோ உன் தொண்டனேன்"

என்பது நூற்றெட்டுத் திருப்பதியந். 25.

3. "ஐங்கருவி கண்ட இன்பம்" என்கையாலே, அளவிற்குட்பட்ட இன்பம் என்பது சித்திக்கிறது என்னுமதனைத் திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய்கிறார் 'உழக்காலே' என்று தொடங்கி.

யங்களாலே அநுபவிக்கப்பட்ட இவ்வுலக இன்பம். [1] ஆத்மாவிற்கு ஞானம் நித்ய தர்மமாய், அதுதான் விபுவாயிருக்கக் கூடியது; இப்படி இருக்கச் செய்தேயும், கர்மம் காரணமாகக் குறைவுபட்டதாய், மனத்தின் அடியாகப் புறப்பட்டு, புறஇந்திரியங்களின் வழியாக விஷயங்களைக் கிரஹிக்கக் கூடியதாயன்றோ இருப்பது; ஆதலின், 'ஐங்கருவி கண்ட இன்பம்' என்கிறது. தெரிவு அரிய அளவு இல்லாச் சிற்றின்பம் - இவ்வுலக அநுபவத்தைப் பற்றத் தான் தெரிவரியதாய், அவ்வுலகில் பகவத் அநுபவத்தைப் பற்றத் தான் ஆதிக்கியமில்லாததாய், அணுவான ஆத்மாவைப் பற்ற வருகிற இன்பமாகையாலே சொரூபத்தாலே அளவிற்குட்பட்டதாய் இருக்கிற ஆத்ம அநுபவ சுகம். அந்தமில் பேரின்பத்திற்கு எதிர்த்தட்டானதாகையாலே 'சிற்றின்பம்' என்கிறது. ஒழிந்தேன் - இவற்றை விட்டேன்.

விட்டது இதுவாகில், பற்றியது எதனை? என்னில், அருளிச்செய்கிறார் மேல்: ஒண்டொடியாள் திருமகளும் நீயும் - தொடி என்பது, முன்கை வளை. அதற்கு ஒண்மையாவது, இவள் கையினின்று நீங்காதிருக்கை. [2] எப்பொழுதும் சர்வேசுவரனை விட்டுப் பிரியாமல் இருப்பவளாகையாலே, முன்பு ஒருகால் கழன்று பின்பு பொறுக்க வேண்டும்படியிருப்பதில்லையேயன்றோ? [3] "சங்கு தங்கு முன்கை நங்கை" என்னக் கடவதன்றோ? ஆதலால், 'ஒண்டொடியாள்' என்கிறது; இப்படியிருக்கிற பிராட்டியும், [4] அவள்தானுங்கூட "இறையும் அகலகில்லேன்" என்றிருக்கிற நீயும். நீயுமே நிலாநிற்ப - [5] இருவருடையவும் அபிமானத்துக்குள்ளே திரிபாத்விபூதி

---

1. நித்யமாயும் விபுவாயுமுள்ள தர்மபூதஞானமிருக்க, 'இந்திரியங்களாலே அநுபவிக்கிற' என்கிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆத்மாவிற்கு' என்று தொடங்கி. விபுவாய் - பரந்திருப்பதாய்.

2. நீங்காமல் இருத்தலுக்குக் காரணம் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'எப்பொழுதும்' என்று தொடங்கி.

3. திருச்சந்த விருத். 57.

4. பிராட்டியை "ஒண்டொடியாள்' என்று அடைகொடுத்து ஓதியவர், பெருமானைக் குறிக்கும்போது அடைகொடாமல் "நீயும்" என வாளா ஓதியதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'அவள்தானும்கூட' என்று தொடங்கி.

5. "நீயுமே" என்கிறது என்? நித்திய முக்தர்கள் இலரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இருவருடையவும்' என்று தொடங்கி.

திரிபாத் விபூதி - பரமபதம். இந்த உலகம் கால்பாகமாகவும், பரமபதம் முக்கால் பாகமாகவும் இருத்தலின் 'திரிபாத் விபூதி' எனப்படுகிறது.

யாக அடங்கிக் கிடக்கும். [1] "புருஷன் என்பவன் பகவானாகிய நாராயணனே, பெண் என்பவள் பிராட்டியே, இவர்களைத் தவிர வேறு பொருள் இல்லை" என்னாநிற்க, வாசல்தோறும் ஈசுவரர்களேயன்றோ இங்கு; ஆதலின், '**நீயுமே நிலா நிற்ப**' என்கிறது. நிலா நிற்பக் கண்ட சதிர் - உங்கள் இருவருடைய வும் அபிமானத்திலே கிடக்குமதுவே யாத்திரையாம்படி நீ பார்த்து வைத்த நேர்பாடு. கண்டு - [2]"நினைவிற்கும் எட்டாத, உலகத்திற்கெல்லாம் பதியான மகா விஷ்ணுவானவர் நித்திய முக்தர்கள் சூழப் பிராட்டியோடுகூட ஸ்ரீவைகுண்டம் என்கிற மேலான உலகத்திலே எழுந்தருளி இருக்கிறார்" என்கிற படியே, நீ பார்த்து வைத்த வாய்ப்பான அதனைக் கண்டு. என்றது, பெரிய பிராட்டியாரும் நீயுமாகச் சேர இருக்கிற உங்கள் இருவருடையவும் அபிமானத்திலே ஒரு விபூதியாக அடங்கியிருக்கிற இருப்பைக் கண்டேன் என்றபடி. உன் திரு வடியே அடைந்தேன் - [3]'அந்த நித்தியசூரிகளோடு ஒரு கோவையாய் உன் திருவடிகளிலே அடிமை செய்யவேணும்' என்று உன் திருவடிகளைக் கிட்டினேன். இது நான் உற்றது; கீழ்ச்சொன்னவை நான் விட்டவை.

நன்று; 'ஒண்தொடியாள் திருமகளும் நீயுமே' என்ற அளவில், நித்தியவிபூதியில் அடியார்களுடன் இருக்கும் இருப் பைச் சொல்லியது ஆமோ? என்னில், "அடியார்கள் குழாங்

---

1. உபய விபூதியும் ஈசுவரனுக்கு உரியதாயிருக்க, நித்திய விபூதியை மாத்திரம் இருவருடைய அபிமானத்துக்குள்ளே அடங்கிக் கிடக்கும் என்று சொல்வது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'புருஷன்' என்று தொடங்கி. இது, விஷ்ணு புரா. 1. 8 : 35. என்றது, 'ஈஸ்வரோஹம்' என்று கொண்டு பாரதந்திரியத்தை இசையாமல் இருப்பர்களே யன்றோ இவர்கள்; அவர்கள் பாரதந்திரியத்தை இசைந்திருக்கையாலே விசேடித்துச் சொல்லுகிறார் என்றபடி.

2. பரமபதம் இருவருடையவும் அபிமானத்திலே கிடக்கும் என்ப தற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'நினைவிற்கும் எட்டாத' என்று தொடங்கி.

3. "கண்ட சதிர் கண்டு உன் திருவடி அடைந்தேன்" என்றதனாலே பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'அந்த நித்யசூரிகளோடு' என்று தொடங்கி.

களை உடன் கூடுவதென்றுகொலோ" என்று இவர் சொல்லு கையாலும், "நித்தியர்களோடும் முக்தர்களோடும்கூட" என்று வேறு பிரமாணங்கள் உண்டாகையாலும் சொல்லத் தட்டு இல்லை என்க. மேலும், "நிற்பனவும் திரிவனவும் நீயே மற்று ஒரு பொருளும்இன்றி" என்று கூறிவைத்துக் "கொடு உலகம் காட்டேல்" என்றதைப் போன்று, 'அவர்கள் இருவருமே' என்ற இடத்தில், அவர்கள் அபிமானத்திலே அடங்கிக் கிடப்பது ஒரு உலகம் உண்டாகச் சொல்லத் தட்டில்லையேயன்றோ? அங்ஙனமாயின், பிராட்டியும் தானும் நித்தியசூரிகளுமாயிருக்கிற அவ்வுலகம் இவ்வுலகமானாலோ? என்னில், [1] தனக்கேயுரிய விக்கிரஹத்தோடே, [2] "நீர் சீதாபிராட்டியாரோடுகூட" என்கிறபடியே, தானும் பிராட்டியுமாக இருந்து [3] "இதனைச் செய்க" என்று சொல்லுகிறபடியே, இளையபெருமாளை அடிமை கொண்டாற்போலே, இவரை அடிமை கொள்ளுவது ஒரு தேச விசேடமாக இருக்க வேண்டுமேயன்றோ? (10)

## 431.

திருவடியை நாரணனைக் கேசவனைப் பரஞ்சுடரைத்
திருவடிசேர் வதுகருதிச் செழுங்குருகூர்ச் சடகோபன்
திருவடிமேல் உரைத்ததமிழ் ஆயிரத்துள் இப்பத்தும்
திருவடியே அடைவிக்கும் திருவடிசேர்ந் தொன்றுமினே.

பொ - ரை :—திருவடியும் நாரணனும் கேசவனும் பரஞ்சுடருமான சர்வேசுவரனுடைய திருவடிகளை அடையவேண்டும் என்று நினைத்து, செழுமை பொருந்திய திருக்குருகூரில் அவதரித்த ஸ்ரீசடகோபரால், எம்பெருமானுடைய திருவடிகளின்மேலே அருளிச்செய்யப்பட்ட தமிழ்ப் பாசுரங்கள் ஆயிரத்துள் இப்பத்துப் பாசுரங்களும் திருவடிகளிலே சேர்ப்பிக்கும்; நீங்களும் திருவடிகளைச் சார்ந்து அடிமை செய்யப் பாருங்கோள் என்றவாறு.

வி - கு :—கருதி உரைத்த தமிழ் என்க. இப்பத்தும் அடைவிக்கும் என்க.

---

1. 'தனக்கே யுரிய விக்ரஹத்தோடே' என்பதனை, பின் வருகின்ற 'அடிமை கொள்ளுவது' என்ற சொற்றொடருடன் கூட்டுக.

2. 'நீர் சீதாபிராட்டியாரோடு' என்று தொடங்குவது, ஸ்ரீராமா. அயோத். 31. : 25.

3. 'இதனைச் செய்க' என்றது, ஸ்ரீராமா. அயோத்.

ஈடு:—முடிவில், [1] இத்திருவாய்மொழி கற்றவர்களை இது தானே அவன் திருவடிகளிலே சேர்க்கும் என்கிறார்.

[2] புறம்பு உண்டான ருசியைப் போக்கித் தன்பக்கலிலே ருசியைப் பிறப்பித்த உபகாரத்தை நினைத்து ஏத்துகிறார் 'திருவடியை' என்று தொடங்கி. திருவடியை - எல்லார்க்கும் ஸ்வாமியாயுள்ளவனை. நாரணனை - [3] கேவலம் ஸ்வாமியாயிருக்குமளவே யன்றிக்கே, இவை 'அல்லோம்' என்ற அன்றும் தான் விடமாட்டாதபடி வத்சலனுயுள்ளவனை. கேசவனை - வத்சலனுய்க் கடக்க இருக்கை யன்றிக்கே, இவர்களோடே சஜாதியனுய் வந்து அவதரித்து இவர்கள் [4] விரோதியைப் போக்குமவனை. பரஞ்சுடரை - இப்படி அவதரித்து நின்ற இடத்திலே உண்டான மனிதத்தன்மையிலே பரத்துவத்தைச் சொன்னபடி. திருவடி சேர்வது கருதி - அவன் திருவடிகளைக் கிட்டினேமாகவேணும் என்னும் எண்ணத்தையுடையராய்; "துயர் அறு சுடரடி தொழுது எழு" என்று அடியே பிடித்து வருகின்ற எண்ணம் இதுவேயன்றோ?

செழுங் குருகூர்ச் சடகோபன் - [5] திருவயோத்தியையில் மண்பாடுதானே ஸ்ரீராம பக்தியைப் பிறப்பிக்குமாறுபோலே, அவ்வூரில் பிறப்பாயிற்று இவர்க்கு இந்த ஈடுபாட்டிற்குக் காரணம். திருவடிமேல் உரைத்த தமிழ் ஆயிரத்துள் இப்பத்தும் திருவடியே அடைவிக்கும் திருவடி சேர்ந்து ஒன்றுமின் - அவன் திருவடிகளிலே சொன்ன தமிழ் ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இந்தப் பத்தும் அவன் திருவடிகளிலே சென்று அடைவிக்கும்; நீங்களும் அதற்கு உறுப்பாகத்

---

1. "திருவடியே அடைவிக்கும்" என்பது போன்றவைகளைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "திருவடியை" என்பது போன்றவைகளால் ஏத்துவதற்குக் காரணம் என்? என்ன, 'புறம்பு உண்டான' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'உபகாரத்தை' என்றது, மேற் பாசுரத்திற் கூறிய உபகாரத்தை.

3. "நாராயணன்" என்ற தொகையை அன்மொழித்தொகையாகக் கொண்டு பொருள் அருளிச்செய்கிறார் 'கேவலம்' என்று தொடங்கி.

4. 'விரோதியைப் போக்குமவன்' என்றது, கேசி என்ற அசுரனைக் கொன்றதனைக் குறித்தபடி.

5. "செழும்" என்ற அடைமொழிக்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'திருவயோத்யையில்' என்று தொடங்கி. மண்பாடு - மண்ணின் தன்மை.

திருவடிகளிலே சென்று கிட்டுங்கோள். [1] அவன் திருவடிகளிலே கிட்டக்கொள்ள, நீங்கள் உங்களுக்குமாய் இராமல், அடிசிற்பானை போலே அவன் திருவடிகளிலே நித்திய கைங்கர்யத்திலே சேரப் பாருங்கோள். [2] "சமானமான பதவியை அடைந்தவர்களாய், விரோதி கழிந்தவர்களாய் எப்பொழுதும் என்னுடைய கைங்கரியபரர் ஆகின்றார்கள்" என்றும், "பகவான் எந்த எந்த வழியாலே செல்லுகிறானோ, அந்த அந்த வழியிலே ஜீவனும் செல்கிறான்" என்றும் சொல்லுகிறபடியே, இளைய பெருமாளைப்போலே பிரியாதே நின்று அவன் நினைவிற்குத் தகுதியாக அடிமைசெய்யப் பாருங்கோள். இப்படி அடிமை செய்வார்க்கு, இவர் விட்டவையும் விட்டுப் பற்றியதும் பற்றவேணுமோ? என்னில், இவர் அருளிச்செய்த இத் திருவாய்மொழியைச் சொல்லவே, தன்னடையே ஐம்புல இன்பங்களில் விரக்தியையும் பிறப்பித்து அவன் திருவடிகளில் சேர விடும் இத்திருவாய்மொழிதானே என்க. (11)

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி

நண்ணாது மாலடியை நானிலத்தே வல்வினையால்
எண்ணாத் துன்பமுறும் இவ்வுயிர்கள்-தண்ணிமையைக்
கண்டிருக்க மாட்டாமல் கண்கலங்கும் மாறனருள்
உண்டுநமக்கு உற்றதுணை ஒன்று. (39)

---

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

1. "ஒன்றுமின்" என்பதற்கு வேறும் ஒரு கருத்து அருளிச்செய்கிறார் 'அவன் திருவடிகளிலே' என்று தொடங்கி. அடிசிற்பானைபோலே நித்திய கைங்கர்யத்திலே சேரப் பாருங்கோள் என்று கூட்டுக. 'உங்களுக்குமாயிராமல்' என்றது, ஸ்வாதந்திரியம் கொண்டாடாமல் என்றபடி. 'அடிசிற்பானை போலே' என்றது, பாரதந்திரியம் கொண்டாடி என்றபடி.

2. "ஒன்றுமின்" என்றது, "அவனிடத்தில் லயம் அடைந்தது" என்கிறபடியே, ஐக்யம் போன்று இராநிற்க, 'அவனுடைய திருவடிகளிலே நித்திய கைங்கர்யத்திலே சேரப் பாருங்கோள்' என்று சொல்லுகிறது யாங்ஙனம்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'சமானமான பதவியை' என்று தொடங்கி.

## பத்தாந் திருவாய்மொழி—"ஒன்றுந்தேவும்"

### முன்னுரை

ஈடு:—[1] ஒரு நிலத்திலே ஒரு கூறு உவர்ந்து கிடக்க மற்றைக் கூறு விளைவது அறுப்பதுமாயிருக்குமாறுபோலே, நித்ய விபூதியும் நித்தியசூரிகளும் பகவத் அநுபவமே யாத்திரையாகச் செல்லாநிற்க, சம்சாரமாகிற பாலை நிலத்திலுள்ளார் சிற்றின்பங்களிலே ஈடுபாடுடையவர்களாய் இவற்றினுடைய லாபாலாபங்களே பேறும் இழவுமாய்ப் பகவானிடத்தில் விருப்பில்லாதவர்களாய்க் கிலேசப்படுகிறபடியை நினைத்து, 'அவர்களைத் திருத்துவோம்' என்று பார்த்து, 'சர்வேசுவரன் உளனாயிருக்க நாம் இருந்து கிலேசப்படவேணுமோ?' என்று, 'தேவர் உள்ளீராயிருக்க, இவர்கள் இப்படி நோவுபட விட்டிருக்கை போருமோ? [2] இவர்களையும் திருத்தி நல்வழி போக்க வேணும்' என்று அவன் திருவடிகளிலே விழ, 'நம் குறையன்று காணும்; இவர்கள் அசித்தாய் நாம் நினைத்தபடி காரியங் கொள்ளுகிறோம் அல்லோமே? சேதநரான பின்பு இவர்கள் பக்கலிலேயும் [3] ருசி உண்டாகவேணுங் காணும், மீண்டு வருதல் இல்லாத தன்மையையுடைய மோக்ஷத்தைப் பெறும்போது; நாமும் உம்மைப்போன்று ஆவன எல்லாம் பார்த்தோம், முடியாமையாலே கண்ண நீரோடே காணும் கை வாங்கினோம்' என்ன, 'இவர்களுக்கு ருசி இல்லையேயானாலும் பேற்றுக்கு வேண்டுவது இச்சாமாத்திரமேயாயிற்று, ஆன

---

1. மேல் திருவாய்மொழியில் அருளிச்செய்த ஆழ்வான் நிர்வாஹத்திற்குத் தகுதியாக அவதாரிகை அருளிச்செய்கிறார் 'ஒரு நிலத்திலே' என்று தொடங்கி. ஒரு கூறு - ஒரு பாகம். உவர்ந்து கிடக்க - உவர் நிலமாகக் கிடக்க. 'நித்திய விபூதியும்' என்றது, முக்தர்களைக் கூறியபடி; ஆகுபெயர்.

2. 'இவர்களையும்' என்றது, என்னைப்போலவே இவர்களையும் என்றபடி.

3. 'ருசி உண்டாகவேணுங்காணும்' என்றது, ருசி முன்னாகப் போகாமையாலே வைதிக புத்திரர்கள் மீண்டார்களே யன்றோ என்றபடி.

தாளாற் சகங்கொண்ட தாரரங்கா! பண்டு சாந்திபன் சொல்
கேளாக் கடல்புக்க சேயினை மீட்டதுங் கேதமுடன்
மாளாப் பதம்புக்க மைந்தரை மீட்டதும் மாறலவே
மீளாப் பதம்புக்க மைந்தரை நீயன்று மீட்டதற்கே,

என்பது திருவரங்கத்து மாலை.

பின்பு, இந்த இச்சையையும் தேவரீரே பிறப்பித்துக் கொள்ளு மித்தனை யன்றோ?' [1] என்று, ஸ்ரீ கிருஷ்ணன், துரியோதனாதியர்களை அழியச்செய்து வெற்றிகொண்டு நிற்கச்செய்தே, துரியோதனாதியர்கள் பக்கலுண்டான அன்பினாலே உதங்கன் வந்து, 'உனக்குச் சம்பந்தம் ஒத்திருக்க, பாண்டவர்களிடத்தில் அன்புள்ளவனாய்த் துரியோதனாதியர்களை அழியச்செய்தாயே' என்ன, 'அவர்களை ஆந்தனையும் பொருந்தவிட்டுப் பார்த்தோம்; அவர்கள் 'பந்துக்கள் ஜீவிக்கில் நாங்கள் ஜீவியோம்' என்ற பின்பன்றோ நாம் அவர்களை அழியச்செய்தது' என்ன, 'நீ எல்லாப் பொருள்களையும் நியமிக்கின்றவனான பின்பு அவர்களுக்கு இசைவைப் பிறப்பித்துப் பொருந்தவிட்டுக்கொள்ளாதுவிட்டது என்?' என்று அவன் நிர்ப்பந்தித்தாற்போலே, இவரும் நிர்ப்பந்திக்க, 'சேதநரான பின்பு ருசி முன்பாகச் செய்யவேணும் என்று இருந்தோம் இத்தனை காணும்; அது கிடக்க, உமக்குக் குறை இல்லையே? உம்மைக் கொடுபோய் வைக்கப் புகுகிற தேசத்தைப் பாரீர்' என்று [2] பரமபதத்தைக் காட்டிக்கொடுக்க, கண்டு கிருதார்த்தரானார் மேல் திருவாய்மொழியிலே.

[3] பின்னையும் தம் செல்லாமையாலே, சர்வேசுவரன் கைவிட்ட சம்சாரத்தையும் திருத்தப் பார்க்கிறார். [4]' சம்சாரத்தை

---

1. "என்று" என்னும் எச்சத்தை, பின்னே வருகின்ற 'இவரும் நிர்ப்பந்திக்க' என்றதிலேயுள்ள 'நிர்ப்பந்திக்க' என்ற எச்சத்தோடு முடிக்கவும். இவரும் - ஆழ்வாரும். இவர் நிர்ப்பந்தித்ததற்கு ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிறார் 'ஸ்ரீ கிருஷ்ணன்' என்றது முதல் 'பொருந்தவிட்டுக்கொள்ளாதுவிட்டது என்?' என்றது முடிய.

2. 'பரமபதத்தைக் காட்டிக் கொடுக்க' என்றது, மேல் திருவாய்மொழியிலேயுள்ள "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக், கண்டசதிர் கண்டொழிந்தேன்" என்ற பாசுரத்தைத் திருவுள்ளம்பற்றி.

3. பின்னையும் - ஈசுவரன் கைவிட்ட பின்பும். "அருள்கொண்டாயிரம் இன்தமிழ் பாடினன், அருள்கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே" என்றும், "நின்கண்வேட்கை எழுவிப்பனே" என்றும் சொல்லுகையாலே 'தம் செல்லாமையாலே' என்கிறார். ஈசுவரன் கைவிட்டிருக்க, இவர் திருத்தினால் திருந்துவர்களோ? என்னில், உபரிசரவசுவினுடைய உபதேச சத்தியாலே பாதாளத்தை யடைந்தவர்கள் திருந்தினாற் போன்று, மஹாபாகவதரான இவருடைய கடாக்ஷ விசேஷத்தாலும் உபதேச சத்தியாலும் திருந்துவார்கள் என்க.

4. திருத்தும் பிரகாரம் ஏது? என்ன, 'சம்சாரத்தை' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

அடி அறுக்கவேணும்' என்று பார்த்தார்; சம்சாரத்துக்கு வித்து, மற்றைத் தேவர்கள் பக்கல் பரத்துவ புத்தி யடியான ஈடுபாடும், பகவானே பரம்பொருள் என்ற ஞானம் இல்லாமையுமாயிருந்தது; அத்தேவர்கள் பக்கல் பரத்துவ புத்தி நீங்குதற்கு உறுப்பாக, பகவத் பரத்வ ஞானத்தை உபதேசிக்கிறார் இத்திருவாய்மொழியில். [1] முதல் திருவாய்மொழியிலே, தம்முடைய அநுபவத்திற்கு உறுப்பாக, அவன் காட்டிக் கொடுத்த பரத்துவத்தை அநுசந்தித்து, அது தன்னை "உளன்சுடர்மிகு சுருதியுள்" என்று சுருதிச் சாயையாலே விரித்து அருளிச் செய்தார்; [2] 'ஸ்வாநுபவந்தான் பிறர்க்கு உறுப்பாயிருக்கையாலே, சேதனராகில் இவ்வளவு அமையுமேயன்றோ'? என்று பார்த்து. பின்னர் [3] இதிகாச புராணப் பிரக்கிரியையாலே பரத்துவத்தை அருளிச்செய்தார், "திண்ணன் வீடு" என்ற திருவாய்மொழியில். அதிலும் அவர்கள் திருந்தாமையாலே, 'அவர்கள் தம்மையே உத்தேசித்தே பகவானுடைய பரத்துவத்தை விளக்கி விரித்துப் பேசுவோம்' என்று பார்த்து, அதற்கு உறுப்பாக, மற்றைத் தேவர்கள் பக்கலுண்டான [4] பரத்துவ சங்கையை அறுத்துக்கொண்டு பகவானுடைய பரத்துவத்தை விளக்கி விரித்துப் பேசுகிறார் இத்திருவாய்மொழியில். அன்றிக்கே, முதல் திருவாய்மொழியிலே பரத்துவத்திலே பரத்துவத்தை அருளிச்செய்தார்; அது சம்சாரிகளுக்கு எட்டாநிலமாயிருந்தது. அதற்காக, அவதாரத்திலே பரத்துவத்தை அருளிச்செய்தார்; "திண்ணன் வீடு" என்ற

---

1. முதல் திருவாய்மொழி தொடங்கிப் பகவத் பரத்துவத்தை அருளிச் செய்திருக்க, மீளவும் இத்திருவாய்மொழியில் அதனையே அருளிச்செய்வது கூறியது கூறல் ஆகாதோ? எனின், கூறியது கூறல் ஆகாமைக்கு இரண்டு வகையான காரணங்கள் காட்டி விளக்குகிறார் 'முதல் திருவாய்மொழியிலே' என்று தொடங்கி. 'சுருதிச் சாயையாலே' என்றது, பரத்துவத்திலே பரத்துவத்தை.

2. தம் அநுபவத்தின் பொருட்டுப் பரத்துவத்தை அநுசந்தித்தால் பிறர்க்குக் காரியகரம் ஆகுமோ? உபதேசிக்க வேண்டாவோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஸ்வாநுபவந்தான்' என்று தொடங்கி.

3, 'இதிகாச புராணப் பிரக்கிரியையாலே' என்றது, அவதாரத்திலே பரத்துவத்தைக் குறித்தபடி. பிரக்கிரியை - முறை.

4. 'பரத்துவ சங்கையை அறுத்துக்கொண்டு' என்றது, "நாயகன் அவனே" என்று சுருதிச் சாயையாலும், "கபால நன்மோக்கம்" என்று இதிகாச புராணப் பிரக்கிரியையாலும் விரித்துப் பேசுகிறார் இதில் என்றபடி.

திருவாய்மொழியில். அதுவும் பரத்துவத்திலே பரத்துவத்தை ஒத்ததாய்ப் பிற்பாடர்க்கு எட்டிற்று இல்லை. இரண்டும் தேசத்தாலும் காலத்தாலும் கைகழிந்தன. அக்குறைகள் ஒன்றும் இன்றிக்கே, [1]"பின்னானார் வணங்குஞ்சோதி" என்கிறபடியே, பிற்பாடர்க்கும் இழக்கவேண்டாத அர்ச்சாவதாரத்திலே பரத்துவத்தை அருளிச்செய்கிறார் இத்திருவாய்மொழியில் என்னுதல்.

[2]எம்பார், "சிலர் சகலவேத சாஸ்திரங்களும் கைவரப் பெற்று வைத்து, 'பரதத்துவம் இன்னது' என்று அறுதியிட மாட்டாதே, சேம்புக்குக் கூராச் சிற்றறிவாள் உண்டோ? 'நமக்கு உபாசிக்கத் தகுந்தவர் அல்லாதார் உளரோ?' என்று கண்டவிடம் எங்கும் புக்குத் தலை சாய்த்துத் தடுமாறி நிற்க, எம்பெருமானார் தரிசனத்தில் எத்தனையேனும் கல்வி இல்லாத பெண்களும் மற்றைத் தெய்வங்களை அடுப்பிடு கல்லைப் போன்று நினைத்திருக்கிறது இந்த "ஒன்றுந்தேவும்" என்ற திருவாய்மொழி உண்டாகையினாலே யன்றோ?" என்று அருளிச்செய்வர்; [3]"எம்பெருமானாருடைய திருவடித் தாமரை

---

1. திருநெடுந்தாண். 10.

2. சாஸ்திரங்கள் எல்லாம் ஒரே மிடறாகப் பகவானுடைய பரத்துவத்தையும் அவனை உபாசிக்குந் தன்மையையும் சொல்லாநிற்க, இவர் இப்போது உபதேசிக்க வேணுமோ? இவர் உபதேசத்தாலே பலித்தது உண்டோ? என்ன, சாஸ்திரமுண்டானாலும் பலியாதபடியையும், இவ் வாழ்வார் அருளிச்செய்தது பலித்தபடியையும் பெரியார் ஒருவர் வார்த்தையாலே வெளியிடுகிறார் 'எம்பார்' என்று தொடங்கி. என்றது, சகல வேத சாஸ்திரங்களும், கூளமும் பலாப்பிசினும் போலே வேறு தெய்வங்களையும் கலந்து கட்டியாகக் கூறுவதால், அவற்றால் பரத்துவ விவேகம் பண்ணப் போகாமையாலே, அவை சம்சாரிகளுக்குப் பயன் பட்டன இல்லை; அங்ஙன் அன்றிக்கே, திருவாய்மொழி, கேவலம் பகவத் பரமாகையாலே, இதிலே சேர்ந்தவர்களுக்குக் கலக்கம் இல்லாமையாலும் ஐயம் இல்லாமையாலும் பகவத் பரத்துவ நிர்ணயம் பண்ணலாம்படி இருக்கையாலே இவர் உபதேசம் பயன்பட்டது என்றபடி. "சாஸ்திர ஞானம் பஹு க்லேசம்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'அறுதியிட மாட்டாதே' என்கிறார். இங்கே பட்டர் அருளிச்செய்த வார்த்தையை நினைவுகூர்வது. முதல் பத்து ஈட்டின் தமிழாக்கம், ஐதிஹ்யம் 5. பக். காண்க. 'பெண்களும்' என்றது, அகளங்க நாட்டாழ்வான் மனைவியார் திரிபுரா தேவியார் சரிதையைத் திருவுள்ளம்பற்றி.

3. அடுப்பிடு கல்லைப்போன்று நினைத்திருப்பர் என்பதற்குப் பிரமாணம் அருளிச்செய்கிறார் 'எம்பெருமானாருடைய' என்று தொடங்கி. இது, கோவிந்த பட்டருடைய திருவார்த்தை.

களை அடைந்தவர்கள் பிரமன் முதலாயினருடைய குறைவற்ற செல்வத்தைத் துரும்புக்குச் சமமாக நினைப்பார்கள்" என்னக் கடவதன்றோ. [1] 'கார்த்தவீர்யார்ஜுனன் என்பான் ஒருவன் தான் இராச்சிய பரிபாலனம் செய்கிற காலத்தில் யாரேனும் ஒருவர் பாபசிந்தனை பண்ணினார் உளராகில் அவர்கள் முன்னே கையும் வில்லுமாய் நின்று அவற்றைத் தவிர்த்துப் போந்தான் என்றால் இது பொருந்தக் கூடியதே' என்று இருப்பர்கள்; ஒரு அற்ப மனிதனுக்கு 'இது கூடும்' என்று இருக்கிறவர்கள், 'சர்வசக்தியாய் சர்வாந்தர்யாமியா யிருக்கிற சர்வேசுவரன் இப்படிப் பரந்து நின்று நோக்கும்' என்றால், சேதநர் 'இது பொருத்தம் அற்றது' என்று இருப்பார்கள். 'ஜாதி, பொருள்கள்தோறும் நிறைந்து வர்த்திக்கும்' என்றால், 'அசித் பதார்த்தத்திற்கு இதுகூடும்' என்று இருப்பர்கள்; 'பரம சேதநனாய் இருப்பான் ஒருவன் நிறைந்து வர்த்திப் பான்' என்றால், 'இதுகூடாது' என்று ஐயப்படாநிற்பார்கள்.

[2] இனி, இவர் திருத்தப் பார்த்த வழிதான் யாது? என்னில், எல்லாரும் ஒருசேர விரும்புவது சுகங்கள் உண்டாகவும், துக்கங்கள் இன்றிக்கே ஒழியவுமாயிருக்கச்செய்தே, விரும்பிய சமயத்தில் விரும்பப்பட்டசுகம் வரக் காணாமையாலும், விருப்ப மில்லாத துக்கம் வரக் காண்கையாலும் 'இவற்றையெல்லாம் நியமிக்கின்றவனாய் நின்று அநுபவிப்பிக்கிறான் ஒருவன் உளன்' என்று கொள்ளவேண்டி இருந்தது. [3] அது என்? சுக துக்கங்களுக்குக் காரணமான புண்ணிய பாவங்கள் அநுபவிப் பிக்கின்றன என்று கொண்டாலோ? என்னில், அந் நல்வினை தீவினைகளினுடைய சொரூபத்தை ஆராய்ந்தவாறே, அவை, அறிவு அற்றனவாய் இருப்பன சில கிரியா விசேடங்கள்

1. மேலே, சகல சாஸ்திரங்களும் கூளமும் பலாப்பிசினும் போலே தேவதாந்தரங்களையும் கலந்து கட்டியாகச் சொல்லுகையாலே பரத்துவம் இன்னதென்று அறியப் போகாது என்று அருளிச்செய்து, வேதசாஸ்திரங்கள் உண்மையை உள்ளவாறு தெரிவித்தாலும் பாபங்களின் மிகுதியாலும் சேதநர்க்கு நம்பிக்கை உதியாது என்கிறார் 'கார்த்தவீரியார்ச்சுனன்' என்று தொடங்கி.

2. 'சர்வேசுவரன் கைவிட்ட சம்சாரத்தையும் திருத்தப் பார்க்கிறார்' என்று முன்னர்க் கூறியவற்றைப் பற்றிச் சங்கிக்கிறார். 'இனி'இவர்' என்று தொடங்கி.

3. பொதுவான சங்கையை அநுவதித்து நீக்குகிறார் 'அது என்?' என்று தொடங்கி.

ஆகையாலே [1] அப்போதே நசிப்பனவாம்; [2] இனி ஒரு மரத்தைச் செப்பனிடுங்காலம் வந்தால் கருத்தாவை ஒழிய வாய்ச்சி முதலானவைகட்கு ஒரு வியாபாரம் கூடாதது போன்று, அந்தக் கிரியைகளுக்கும் ஒரு சேதநனை ஒழியப் பலத்தைக் கொடுக்கும் சக்தி கூடாமையாலே ஒருசேதநனைக் கொள்ள வேண்டிவரும்; [3] இனி, 'அபூர்வம்' என்று ஒன்றைக் கல்பித்து 'அது அதிருஷ்டரூபேண நின்று பலத்தைக் கொடுக்கிறது' என்பதனைக் காட்டிலும், 'ஒரு பரமசேதநன் நெஞ்சிலேபட்டு அவனுடைய தண்டனை உருவத்தாலும் திருவருள் உருவத்தாலும் இவை பலிக்கின்றன' என்று கூறுதல் [4] நன்றேயன்றோ?

இனி, 'அந்தப் பரமசேதநன் ஆகிறான் யார்? அவனுடைய சொரூப சுவபாவங்கள் இருக்கும்படி எங்ஙனே? அவனுடைய

---

1. "சப்தம் புத்தி கர்மம் இவை மூன்றும் மூன்று கணங்கள்தான் இருக்கும்" என்று சொல்லப்படும்தன்மையைத் திருவுள்ளம்பற்றி 'அப்போதே நசிப்பனவாம்' என்கிறார்.

2. கிரியா விசேடங்களை நிலைத்திருப்பவைகளாகக் கொண்டாலும் அவை அறிவில்லாத பொருள்கள் ஆகையாலே, அவற்றுக்குப் பலத்தைக் கொடுக்கும் தன்மை கூடாது என்னுமதனைத் திருஷ்டாந்தத்தோடு காட்டுகிறார் 'இனி' என்று தொடங்கி.

3. ஒருசேதனனைக் கொள்ளவேண்டியது என்? 'தர்மியைக் கற்பிக்குமதைக் காட்டிலும் தர்மத்தைக் கற்பிப்பது சிறந்தது' என்கிற நியாயத்தாலே, தர்மியான சேதனனைக் கற்பிப்பதைக் காட்டிலும் கர்மங்களால் உண்டாகின்ற 'அபூர்வம்' என்கிற தர்மத்தைக் கற்பித்து, 'அதுவே, பலத்தைக் கொடுக்கிறது' என்றாலோ? என்னில், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இனி, அபூர்வம் என்று ஒன்றை' என்று தொடங்கி. 'அபூர்வம்' என்பது, கர்மங்களால் உண்டாகின்ற ஒரு சம்ஸ்கார விசேடம். 'அதிருஷ்டம்' என்பது, கர்மங்களால் தோன்றுகிற ஒரு சக்தி விசேடம்.

தர்மியான ஈசுவரன் சுருதிகளாலே பிரதிபாதிக்கப்பட்டவன் ஆகையாலே கற்பிக்கப்பட்டவன் அல்லனேயன்றோ; ஆகையாலே, "தர்மி கல்பநாதோவரம் தர்ம கல்பநா" என்கிற நியாயம் இங்குத் தடை செய்யாது என்பது கருத்து.

4. 'நன்றேயன்றோ' என்றது, 'அபூர்வத்தைக் கல்பித்தாலும், அதுவும் அசேதநமாகையாலே பலத்தைக் கொடுக்க முடியாது; அதன் பொருட்டுச் சேதனனைக் கற்பிக்குமளவில் அவ்வாறு கல்பிக்கிறவனுக்கு மிகவும் கல்பநா கௌரவம் (கௌரவம்-அருமை) உண்டாகையாலே, முதலிலேயே சேதனனைக் கற்பித்தல் எளிதாகையாலே 'நன்றேயன்றோ' என்கிறார் என்றபடி.

செயல்கள் இருக்கும்படி எங்ஙனே? என்னில், [1] அவற்றைப் பிரமாணம் கொண்டு அறியவேணும். அவற்றுள், [2] பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்கள் இந்திரியத்தாலே காணமுடியாத பொருளைக் காண்பதற்குப் பயன் படாமையாலே அவை பிரமாணம் ஆகமாட்டா; இனி, ஆகமம் முதலானவைகள் பிரமாணம் ஆனாலோ? என்னில், புருஷனுடைய புத்தியால் வருகின்ற [3] வஞ்சகம் முதலான தோஷங்கள் அவற்றிற்கு உளவாகையாலே அவையும் பிரமாணம் ஆகமாட்டா; இனி, [4] பதினான்கு வகைப்பட்ட வித்யைகளுள் முக்கியமானதாய் நித்தியமாய்ப் புருஷனாலே செய்யப்படாதது ஆகையாலே, வஞ்சகம் முதலான தோஷங்கள் இல்லாததாய் [5] சாத்துவிக புராணங்களாலே விரித்துரைக்கப்படுகின்ற வேதம் பிரமா

---

1. 'மக்கள் நினைத்தபடி இன்ப துன்பங்கள் வாராமையாலே ஒரு சேதனன் உளன்' என்று அவன் செய்யும்படியை அநுமானத்தாலே சாதித்தார் மேல். அவனுடைய ஸ்வரூபம் ஸ்வபாவம் முதலானவை இருக்கும்படி எங்ஙனே? என்ன, 'பிரமாணங்கொண்டு அறியவேண்டும்' என்று பிரமாணத்தை அறுதியிடுகிறார் 'அவற்றைப் பிரமாணங்கொண்டு அறியவேணும்' என்று தொடங்கி.

2. பிரத்யக்ஷம், அநுமானம், உபமானம், ஆகமம், அர்த்தாபத்தி, அபாவம், சம்பவம், ஐதிஹ்யம் எனப் பிரமாணங்கள் எட்டு வகைப்படும். அவற்றுள், மறுவினாலே அங்கீகரிக்கப்பட்ட பிரமாணங்கள் மூன்று; அவை, பிரத்யக்ஷம், அநுமானம், ஆகமம் என்பனவாம். அவற்றையே, இங்குப் 'பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்கள்' என்று அருளிச்செய்கிறார். 'முதலான' என்றதனால், அநுமானத்தைக் கொள்க. 'ஆகமம் முதலானவைகள்' என்றது, பாசுபத சாங்கிய யோகங்களைக் குறித்தபடி.

3. 'வஞ்சகம் முதலான தோஷங்கள்' என்றது, பிரமம், பிரமாதம், அசக்தி இவைகளை.

4. 'பதினான்கு வகைப்பட்ட வித்யைகள்' என்றது, இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதங்களையும், சிக்ஷை வியாகரணம் கல்ப சூத்திரம் நிருத்தம் ஜோதிஷம் சந்தோவிச்சிதி என்னும் ஆறு அங்கங்களையும், நியாயம் மீமாம்சை புராணம் தர்மசாத்திரம் என்னும் உபாங்கங்கள் நான்கனையுமாம்.

5. 'சாத்துவிக புராணங்களாலே விரித்துரைக்கப்படுகின்ற வேதம்' என்றது, என்னை? வேதார்த்தத்தை நிர்ணயம் செய்வதற்கு உபப்பிரும்ஹணங்கள் வேண்டுமோ? எனின், வேதார்த்தத்தை அறுதியிடுவதற்கு, சர்வ சாகைகளிலும் சர்வ வேதாந்த வாக்கியங்களிலும் நிறைந்த அறிவுபடைத்திருத்தல் வேண்டும்; அத்தகைய ஞானம் படைத்தவர்கள் மஹரிஷிகளே யாவர்; ஆதலால், "இதிஹாச புராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்", "பிபேதி அல்ப சுருதாத் வேதோமாமயம் பிரதரிஷ்யதி" என்கிறபடியே, மஹருஷிகள் வசனங்களாகிய உபப்பிருஹ்மணங்கள் வேண்டும். "வேதார்த்தம் அறுதியிடுவது ஸ்மிருதி இதிகாச புராணங்களாலே" என்பது, ஸ்வாமி பிள்ளைலோகாசாரியர் ஸ்ரீ சூக்தி. (ஸ்ரீ வசன பூஷணம்)

ணம் ஆகவேணும். [1] 'சாத்துவிக புராணங்கள்' என்று விசேடித்துக் கூறுவதற்குக் கருத்து என்? என்னில், [2] புராண கர்த்தாக்கள் எல்லாரும் பிரமன் பக்கலிலே சென்று இவ் விரண்டு காதைகளைக் கேட்டுப் போந்து தாங்கள் தாங்கள் புராணங்கள் செய்தார்கள்; [3] அந்தப் பிரமனும் [4] "ஸ்ரீமந் நாராயணன் உலகங்களைப் படைப்பதற்கு முன்னே பிரமனைப் படைத்தார்; அந்த நாராயணனே அந்தப் பிரமனுக்கு வேதங்களையும் உபதேசித்தார்" என்கிறபடியே, சர்வேசுவரனாலே படைக்கப்பட்டவனாய் அவனாலே ஞானத்தையடைந்தவனுமாய் இருக்கச் செய்தேயும், [5] "முனிபுங்கவர்களான தக்ஷர் முதலானவர்களாலே கேட்கப்பட்டவரும் முக்காலங்களையும் உணர்ந்தவரும் தாமரைமலரில் உதித்தவருமான பிரமாவானவர் உள்ளவாறு சொல்லுகிறேன் என்று சொன்னார்" என்கிறபடியே, இருடிகளைக் குறித்து உபதேசிக்கிறவிடத்திலே, 'நான் முக்குணங்களுக்கும் வசப்பட்டவனாயிருப்பேன்; தமோகுணம் மேலிட்டபோதும் ரஜோகுணம் மேலிட்டபோ

---

1. "சாத்துவிக புராணங்கள்' என்று விசேடித்துக் கூறுவதற்குக் கருத்து என்? என்னில்' என்றதற்குக் கருத்து, புராணங்களுக்கு முக்குண பேதங்கள், சத்துவம் முதலான குணங்களை யுடையவர்களாய்க் கொண்டு அவற்றைச் சொன்னவர்கள் காரணமாகவே யன்றோ வந்தன; எல்லாப் புராணங்களையும் கூறியவன் பிரமன் ஒருவனுமேயாக இருக்க, இங்ஙனம் விசேடிக்க வேணுமோ என்பது.

2. புராணங்கள் எல்லாம் பிரமனாலே கூறப்பட்டதாகில் ஸ்ரீவிஷ்ணு புராணம் முதலான புராணங்களுக்குப் பராசரர் தொடக்கமான மஹருஷிகளைக் கர்த்தாக்களாகச் சொல்லக்கூடாதே? என்ற வினாவைத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'புராணகர்த்தாக்கள்' என்று தொடங்கி. 'இவ்விரண்டு காதைகளை' என்றது, இரண்டு மூன்று வார்த்தைகளை என்றபடி. 'தாங்கள் தாங்கள் புராணங்கள் செய்தார்கள்' என்றது, ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு குணம் மேலோங்கி நிற்கும் பிரமனுக்கு; அந்தப் பிரமனும், அந்த அந்தக் குணத்திற்குத் தகுதியாகக் கூறுவான்; அவன் கூறியதற்குத் தகுதியாக மஹருஷிகளும் புராணங்கள் செய்தார்கள் என்றபடி.

3. பகவானால் படைக்கப்பட்டவனாய், அவனாலேயே ஞானத்தையடைந்தவனான பிரமனுக்கும் முக்குணங்களுக்குக் கட்டுப்பட்டிருக்கும் தன்மை உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அந்தப்பிரமனும்' என்று தொடங்கி.

4. ஸ்வேதாஸ்வதரம்.

5. விஷ்ணுபுரா. 1, 2: 10.

தும் சொன்னவற்றைப் போகட்டு, சத்துவகுணம் மேவிட்ட சமயத்தில் சொன்னவற்றை எடுத்துக்கொள்ளுங்கோள்' என்றானே யன்றோ. இனி, [1] "தாமச கல்பங்களிலே அக்நி சிவன் இவர்களுடைய மாஹாத்மியமானது பரக்கச் சொல்லப்படுகிறது, இராஜச கல்பங்களிலே பிரமனுடைய மாஹாத்மியம் அதிகமாகச் சொல்லப்படுவதை அறிகிறார்கள், சாத்துவிக கல்பங்களிலே விஷ்ணுவினுடைய மாஹாத்மியம் அதிகமாகச் சொல்லப்படுகிறது" என்னாநின்றதேயன்றோ; ஆகையாலே, [2] குணபேதங்களாலே புருஷபேதங்களைக் கொண்டு அவ்வழியாலே புராணபேதம் கொள்ளலாயிருந்தது. ஆகையாலே, 'சாத்துவிக புராணங்களாலே அறியப்படுகின்ற வேதம்' என்று விசேடித்துச் சொல்லவேண்டியிருந்தது. [3] ஆதலால், சாத்துவிக புராணங்களாலே விரிக்கப்படுகின்ற வேதமே பிரமாணமாகக்கொள்ள வேண்டி இருந்தது என்க.

[4] அந்த வேதத்துக்கு மூன்று குணங்களால் வருகின்ற தோஷம் இல்லையேயாகிலும், உபயவிபூதிகளோடு கூடின சர்வேசுவரனை விளக்கிப் பேச வந்ததாகையாலே, "மூன்று

---

1. சத்துவம் முதலான குணங்கள் மேலோங்கி இருக்கும் சமயத்தில் சொல்லப்பட்டவை யாவை? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தாமச கல்பங்களிலே' என்று தொடங்கி. இது, மாத்ஸ்யபுராணம். 'தாமச கல்பம்' என்றது, தமோகுணம் மேலோங்கியிருக்கும் தினத்தில் என்றபடி. கல்பம் - பிரமனுடைய ஒருநாள். இராஜச கல்பம், சாத்துவிக கல்பம் என்பனவற்றையும் இங்ஙனமே கொள்க. 'என்னாநின்றதேயன்றோ' என்றது, மாத்ஸ்யபுராணம் இங்ஙனம் கூறுகின்றதேயன்றோ என்றபடி.

2. 'குணபேதங்களாலே புருஷபேதம் கொண்டு' என்றது, ஒருவனே ஒவ்வொரு குணத்தோடு கூடியிருக்கின்ற கால வேற்றுமையால், அந்த அந்தக் குணத்தையுடையவனாகக் கருதப்படுகின்ற வேற்றுமையால் என்றபடி.

3. இது காறும் கூறி வந்த விஷயத்தை முடிக்கிறார் 'ஆதலால்,' என்று தொடங்கி.

4. 'சாத்துவிக புராணங்களாலே விரிக்கப்படுகின்ற வேதம்' என்பது என்? வேதம் புருஷனாலே செய்யப்படாதது ஆகையாலே, முக்குணங்களால் வருகின்ற தோஷம் இல்லையே அதற்கு? எனின், விடை அருளிச்செய்கிறார் 'அந்த வேதத்துக்கு' என்று தொடங்கி. 'மூன்று குணங்களையுமுடைய' என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகம், ஸ்ரீகீதை. 2: 45. "இந்த உதாரத் தெரிப்பு, த்ரைகுண்ய விஷயமானவற்றுக்குப் பிரகாசகம். வத்சலையான மாதா, பிள்ளை பேழ்கணியாமல் மண் தின்ன விட்டுப் பிறகு ஒளஷதம் இடுமா போலே, எவ்வுயிர்க்கும் தாய் இருக்கும் வண்ணமான இவனும், ருசிக்கு ஈடாகப் பந்தமும் பந்தம் அறுப்பதோர் மருந்தும் காட்டுமிறே" என்னும் ஆசார்ய ஹ்ருதய வாக்கியங்கள் இங்கு அநுசந்தேயங்கள். (13, 14, சூ.)

குணங்களையுமுடைய மக்களை விஷயமாகவுடையன, வேதங்கள்" என்கிறபடியே, முக்குணங்கட்கும் பற்றுக்கோடாயிருக்கின்ற சேதநரை விஷயமாகவுடையதாய் அவர்களுக்கு ஹிதம் சொல்லப் போந்தது ஆகையாலே, அவர்களுடைய குணங்கட்குத் தகுதியாக ஹிதம் சொல்லுமது உண்டாயிருக்கும் வேதத்துக்கும். [1] அது அங்ஙனம் சொல்லிற்றேயாகிலும், [2] "எல்லாவிடங்களிலும் நிறைந்த தண்ணீரில் வேட்கையுடையவனுக்கு எவ்வளவு நீர் பிரயோஜனப் படுகிறதோ, அறிந்த பிராமணனுக்கு எல்லா வேதங்களிலும் அவ்வளவே பிரயோஜனப் படுகின்றது" என்கிறபடியே, ஆறு பெருகி ஓடாநின்றால், நீர் வேட்கையால் வருந்தின ஒருவன் தன்விடாய் தீருகைக்கு வேண்டுவது எடுத்துக்கொள்வானே யல்லாது, ஆற்றுநீரை யடங்கலும் வற்றுவிக்கவேணும் என்னும் நிர்ப்பந்தம் இல்லையேயன்றோ? அப்படியே, முமுக்ஷுவானவன் இந்த வேதத்தில் தனக்குக் கொள்ளவேண்டியதான அம்சத்தையன்றோ அறியவேண்டுவது. [3] இனி, இந்த வேதந்தான் 'பூர்வபாகம்' என்றும், 'உத்தரபாகம்' என்றும் இரண்டு வழிகளாலே பிரிவுண்ணக் கடவதாய், அதில் பூர்வபாகமானது, ஆராதன வேஷத்தைச் சொல்லியும், சுவர்க்கம் முதலான பேறுகளையும் அவற்றை யடைதற்குரிய சாதனம் முதலானவற்றையும் சொல்லியும், அவற்றிலே நின்று பரக்குமதாயிருக்கும்; இனி, உத்தரபாகமானது, சர்வேசுவரனுடைய சொரூப ரூப குணங்களைப் பரக்க நின்று விளக்கிப் பேசும்.

---

1. வேதம் அவரவர்களுடைய குணங்களுக்குத் தகுதியாக ஹிதம் சொல்லிப் போந்ததாகில், அறிவுள்ளவனுக்கு உபாதேயம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அது அங்ஙனம்' என்று தொடங்கி.

2. ஸ்ரீகீதை. 2: 46.

3. இனி, பற்றத் தகுந்ததையும், விடத் தக்கவைகளையும் அறுதியிடுவது எது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இனி, இந்த வேதந்தான்' என்று தொடங்கி.

"ஆதௌ வேதா: பிரமாணம் ஸ்மிருதி: உபகுருதே ஸேதிஹாஸை: புராணை: நியாயை: ஸார்த்தம் த்வத் அர்ச்சாவிதிம் உபரி பரிக்ஷீயதே பூர்வ பாக:, ஊர்த்வோபாக: த்வத் ஈஹா குண விபவ பரிஜ்ஞாபனை: த்வத் பதாப்தௌ வேத்யோ வேதைச் ச ஸர்வை: அஹம் இதி பகவந்! ஸ்வேந ச வியாசகர்த்த - பகவானே! வேதங்களானவை முதலிலே (வேறொரு பிரமாணத்தை விரும்பாமல் தாமாகவே) பிரமாணமாகின்றன; மநு முதலான ஸ்மிருதிகளானவை, இதிகாசங்களோடு கூடின புராணங்களோடும் பூர்வ

[1] இனி, வணங்குவதற்குரிய பரம்பொருள் எது? என்ருல், உலகத்தைப் படைத்தல் முதலிய முத்தொழில்கட்கும் காரண மாயிருக்கும் பொருள் எதுவோ அதுவே, வணங்கத் தக்க பொருள் என்று காரண வாக்கியங்கள் ஒருங்கவிட்டு வைத்தன. எங்ஙனே? என்னில், [2] "எதனிடத்திலிருந்து இந்தப் பொருள்கள் உண்டாகின்றனவோ? எதனுல் உண்டான பொருள்கள் பிழைத்திருக்கின்றனவோ? நாசத்தையடைந்து எதனிடத்தில் லயப்படுகின்றனவோ? அதனைத் தியானம் பண்ணுவாயாக; அதுதான் பரம்பொருள்" என்று கொண்டு, மற்றைப் பொருள்கட்குத் தியானம் பண்ணத்தகாததாகுகையை முன்னுக உலகத்திற்குக் காரணமாயுள்ள பொருளுக்குத் தியானம் பண்ணத் தகுந்ததாகுகையை விதித்துக்கொண்டு நின்றது; [3] "காரணப் பொருளே தியானம் செய்வதற்குரிய யது" என்னக்கடவதன்றே. தியானம் செய்தற்குரிய அந்தப்

---

உத்தர மீமாம்சைகளோடுங் கூடி (அந்த வேதங்களுக்குப் பொருள் விவரணம் செய்தலாகிற) உபகாரத்தைச் செய்கின்றன; (அந்த வேதத்தில்) கர்ம காண்டம் எனப்படுகிற பூர்வபாகமானது, தேவரீருடைய திருவாராதன முறைமையைச் சொல்லும் வகையில் முடிகின்றது; பிரமகாண்டம் எனப்படு கின்ற உபநிடத பாகமானது, தேவரீருடைய செயல்கள் குணங்கள் விபூதிகள் ஆகிய இவற்றை விளங்கத் தெரிவிப்பதனுலே தேவரீருடைய திருவடிகளைச் சேர்வதில் முடிகின்றது; 'எல்லா வேதங்களாலும் அறியக்கூடியவன் நானே' என்று தேவரீர் அருளிச்செய்ததும் உண்டேயன்றே" என்பது ஸ்ரீரங்க ராஜஸ்தவம்.

1. "பொருளை அறுதியிடுவது, லக்ஷணத்தாலும் பிரமாணத்தாலும்" என்கிற நியாயத்தாலே, மேலே பிரமாணத்தை அறுதியிட்டார். இனிமேல், அந்தப் பரம சேதனனுடைய லக்ஷண விஷய சம்பந்தமான கேள்வியை அநுவதித்து அதற்கு விடை அருளிச்செய்கிருர் 'இனி, வணங்குவதற்குரிய' என்று தொடங்கி.

2. "யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே யேந ஜாதாநி ஜீவந்தி யத்பிரயந்தி அபிசம்விசந்தி தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்பிரஹ்ம"

என்பது, தைத்திரீயபிருகு. 1.

"எல்லா வாக்கியங்களும் ஏகாரத்தோடு கூடியது" என்கிற நியாயத்தாலே, இங்கு, 'தத்விஜிஜ்ஞாஸஸ்வ' என்ற தொடர்மொழியை 'ததேவ விஜிஜ்ஞாஸஸ்வ' என்று ஏகாரத்தோடு கூட்டினுல் 'அந்தப்பொருளையே தியானம் பண்ணுவாய்' என்ற பொருள் போதரும்; அவ்வாறு போதரவே, மற்றைப் பொருள்கள் தியானம் செய்யத் தக்கவையல்ல என்ற பொருளும் கிடைக்குமே யன்றே; அதனைத் திருவுள்ளம்பற்றியே 'மற்றைப் பொருள் கட்கு' என்று தொடங்கி அருளிச்செய்கிருர்.

3. "காரணந்து த்யேய:" இதி, அதர்வசிகை.

பொருளை, [1]"சோமபானம் செய்வதற்குரிய சுவேதகேதுவே! இந்த உலகமானது படைப்பதற்கு முன்னே 'சத்' என்று சொல்லக்கூடியதாயிருந்தது" என்று 'சத்' என்றசொல்லால் சொல்லி, வேறு சாகைகளிலே நின்று, [2]"இந்த உலகமானது படைப்பதற்கு முன்னே பிரஹ்மம் என்ற ஒன்றேயாக இருந்தது" என்று பிரஹ்ம சப்தத்தாலே சொல்லி, அந்தப் பிரஹ்ம சப்தந்தானும் [3]அநேக பொருள்களைக் கூறுமாகையாலே, [4]"இந்த உலகமானது படைப்பதற்கு முன்னே ஆத்மா என்ற ஒன்றேயாக இருந்தது" என்று ஆத்ம சப்தத்தாலே சொல்லி, [5]அந்த ஆத்ம சப்தமும் பலவிடங்களிலும் ஒட்டிக்கொள்ளலாயிருக்கையாலே, [6]"நாராயணன் ஒருவனே இருந்தான்" என்று நாராயணன் என்ற சொல்லுக்குரிய பொருளாகச் சொல்லி நின்றது. [7]ஆனல், பின்னர் [8]"சத்தும் இல்லை, அசத்தும் இல்லை, சிவன் ஒருவனே இருந்தான்" என்றும், [9]"சம்புஃ ஆகாஶ மத்யே த்யேயஃ" என்றும்

---

1. "ஸதேவ ஸோம்யேத மக்ர ஆஸீத்
ஏகமேவ அத்விதீயம்"

இது, சாந்தோக்யம்.

2. "பிரஹ்ம வா இதம் ஏகமேவ அக்ர ஆஸீத்"

இது, வாஜசநேயம்.

3. 'அநேக பொருள்களைக் கூறுமாகையாலே' என்றது, பிரஹ்மம் என்ற சொல், வேதம் முதலிய பொருள்களைக் காட்டுமாகையாலே என்றபடி.

4. "ஆத்மா வா இதம் ஏக ஏவ அக்ர ஆஸீத்"

இது, ஐதரேயம்.

5. 'அந்த ஆத்ம சப்தமும் பல இடங்களிலும் ஒட்டிக்கொள்ளலா யிருக்கையாலே' என்றது, ஆத்மா என்ற சொல்லுக்கு ஜீவாத்மா, பரமாத்மா முதலிய பல பொருள்கள் உண்மையாலே என்க.

6. "ஏகோஹவை நாராயண ஆஸீத் நபிரஹ்மா
நேஶாநோ நேமேத்யாவா பிருதிவீ ந நக்ஷத்ராணி"

இது, மஹோபநிடதம்.

7. 'ஆனல், பின்னர்' என்றது, நாராயணனே காரணனும் தியானிக்கத் தக்கவனுமாதலால் என்றபடி.

8. "ந சத் ந ச அசத் சிவ ஏவ கேவலஃ"

இது, ச்வேதாஸ்வதரம். 'சத்' என்றது, நாமரூபங்களோடு கூடின சித்தினை. 'அசத்' என்றது, நாமரூபங்களோடு கூடின அசித்தினை.

9. "சம்பு: ஆகாச மத்யே த்யேயஃ"

இது, ச்வேதாஸ்வதரம்.

காரணனுயுள்ள தன்மையையும், தியானம் செய்யத்தகுந்த வனுயுள்ள தன்மையையும் சிவன் முதலானவர்களுக்கு விதியா நின்றதே; அவை செய்வன என்? என்னில், அப்பெயர்களால் [1] அவர்கள் உத்தேசியர்களாகச் சொல்லப்பட்டார்களேயாகிலும் சுத்தி குணத்தையுடையவன், சுகத்தைக் கொடுக்கிறவன் என்ற காரணங்களால் அப்பெயர்களும் [2] விசேடியமான நாராயணன் என்ற பெயரால் சொல்லப்படுகிறவன் பக்கலிலே சென்று சேரும். [3] சம்பு சிவன் முதலிய பெயர்களை நாராயணன் என்ற பெயரால் சொல்லப்படுகின்றவனுக்கு விசேடணமாக்கிக் கூறியதுபோன்று, இந்த நாராயணன் என்ற பெயரையும், சம்பு சிவன் முதலிய பெயர்களால் சொல்லப்படுகின்றவனுக்கு விசேடணமாக்கிக் கூறி

---

1. ‘அவர்கள் உத்தேசியர்களாகச் சொல்லப்பட்டார்களே யாகிலும்’ என்றதனுல், ஸ்வபக்ஷத்தால் அவர்கள் உத்தேசியராகச் சொல்லக்கூடாது என்கை. யாங்ஙனம்? எனின், “நாராயணுத் பிரஹ்மா ஜாயதே நாராயணுத் ருத்ரோ ஜாயதே”, “த்ரயக்ஷ சூலபாணி: புருஷோ ஜாயதே” என்பனவற்றுல் பிறப்பும், “நபிரஹ்மாநேஸாநோ” என்றதனுல் அழிவும், சிவனுக்குச் சொல்லுகையாலே “சிவ ஏவ கேவலம்” என்ற காரணத்வம் கூடாது. சதபதத்திலே அஷ்டமூர்த்திப் பிராஹ்மணத்திலே, “பூதாநாம்பதிஃ ஸம்வத்சர உஷவி” என்பது முதலாகத் தொடங்கப்படும் வாக்கியங்களால், நான்முகனுல் படைக்கப்படுதலும், பாவங்கள்நீக்கப்படுதலும், பெயர்வைக்கப்படுதலும் முதலாயின சிவனுக்குச் சொல்லப்படுதலால் தியானிக்கப்படுதலும் கூடாது என்றபடி. ஆயின், “பிரஹ்ம விஷ்ணு ருத்ர இந்த்ரா: தே ஸர்வே சம்பிரஸூயந்தே” என்பதனுல், விஷ்ணுவுக்கும் பிறப்புச் சொல்லப்படுகிறதே? எனின், அது, அநுவாத ரூபமாகையாலே, “அஜாயமாநஃ” முதலிய விதி வாக்கியங்களுக்குத் தகுதியாக, கர்மங்கட்குக் கட்டுப்படாதவனும் கர்மபலன்களை அநுபவிக்காதவனும் தன் இச்சையாலே அவதரிக்கின்ற சர்வேசுவரனுடைய அவதாரங்களைக் குறிக்கின்றது. “தஸ்யதீராஃ” என்பது முதலான சுலோகங்கள் இங்கே அநுசந்தேயங்கள். சிவன் முதலியோர்கட்கு இத்தகைய விதிவாக்கியங்கள் இல்லாமையாலே, பிறப்பு, கர்மங் காரணமாக வந்தது என்றே கோடல் வேண்டும் என்க.

2. ‘விசேடியமான’ என்றது, சிவனுக்குப் பிரகாரியாக இருக்கும் தன்மையால், விசேடியமான என்றபடி.

3. ‘சொல்லிற்றேயாகிலும்’ என்றது, ‘உடன்பட்டு மறுத்தல்’ என்னும் வாதமாகையாலே, பிரதானமான அவயவ சக்தியாலே நேராகப் பகவானையே காட்டும் என்ற பக்ஷத்திலே சங்கிக்கிருர் ‘சம்பு சிவன்’ என்று தொடங்கி.

னாலோ? என்னில், [1]சுத்தி குணத்தையுடையவன், சுகத்தைக் கொடுக்கிறவன் என்ற காரணங்களால் அவற்றை இங்கே சேர்க்கலாம்; நாராயணன் என்னும் பெயர், காரண இடுகுறிப் பெயராகையாலே வேறு பொருள்கட்குச் சேர்க்க ஒண்ணாது. நன்று; [2]சிலர்க்கே உரியனவாய் அவர்கட்கே முடிவு செய்யப் பட்டனவாயுள்ள பெயர்களை வேறு ஒருவர் பக்கலிலே கொடு போய்ச் சேர்க்கும்படி எங்ஙனே? என்னில், இந்திரன், பிராணன், ஆகாசம் என்னும் இப் பெயர்கள், அவ்வப்பொருள்கள் அளவில் முடிந்து நில்லாது, அவற்றிற்குரிய நேர் பொருளில் சென்று முடிந்து நிற்கின்றனவே யலவோ? யாங்ஙனம்? எனின், இந்திரன் என்றால், இப்பெயர் உண்டாக்கப்பட்ட இந்த இந்திரனைக் காட்டுதலோடு அமையாது, சர்வேசுவரன் பக்கலிலே சென்று முடிவுபெறுதலைப் போலவும், பிராணன் என்னும் பெயர், ஐவகைப்பட்ட பிராணன்களில் ஒன்றனைக் காட்டுதலோடு அமையாது, பிராணனாக இருக்கின்ற சர்வேசுவரன் பக்கலிலே சென்று முடிவுறுதலைப் போலவும், ஆகாசம் என்னும் பெயர், ஐம்பெரும் பூதங்களில் ஒன்றான ஆகாசத்தைக் காட்டுதலோடு அமையாது, அவனளவும் காட்டுகிறாப் போலேயும், சம்பு, சிவன் முதலிய பெயர்களும், சர்வேசுவரன்

---

1. 'சுத்தி குணத்தை யுடையவன்' என்று தொடங்கும் வாக்கியத்திற்குக் கருத்து யாது? என்னில், சிவன், சம்பு முதலிய பெயர்கள், வேறு பொருள்களிலும் இருவகை வழக்கிலும் வழங்கி வருகின்றன; ஆதலால், அப்பெயர்களை இங்குச் சேர்க்கலாம். நாராயணன் என்ற பெயர், வேறு பொருள்களுக்குப் பெயராக வழங்காமையின், அதனை வேறு பொருளுக்குச் சேர்க்க ஒண்ணாதே என்பது. இப்பெயர் காரண இடுகுறிப் பெயர் என்க. ஆயின், சிவன் சம்பு முதலிய பெயர்களும் காரண விடுகுறிப் பெயர்களே யன்றோ? எனின், அவை, சாதாரண காரண விடுகுறிப் பெயர்கள்; இது, அசாதாரண காரணவிடுகுறிப்பெயர் என்க. இதனை, 'அத்யந்தா யோகரூடி' என்பர். [illegible], பங்கஜம் என்னும் பெயர்களைப் போன்று கொள்க.

2. இப்படி இன்றிக்கே, பிரசித்தியின் மிகுதியைக் கொண்டு, சம்பு சிவன் முதலிய பெயர்களைச் சிவனுக்கே வாசகம் என்று கொள்ளுமளவில், பிரதிபர்த்யா அநிஷ்ட பிரஸஞ்ஜனம் பண்ணுவாராக, அவர்களுடைய பக்ஷத்தைத் தொடங்குகிறார் 'சிலர்க்கே யுரியனவாய்' என்று. அதனைப் பரிஹரிக்கிறார் 'இந்திரன், பிராணன்' என்று தொடங்கி,

பக்கலிலே சென்று முடிந்தல்லது நில்லா. [1] இனித்தான் பிரகாரவாசி சப்தங்கள் பிரகாரிபர்யந்தம் சென்று தத்தம் பொருளைச் சொல்லக்கூடியன ஆகையாலும், பிரகாரியான சர்வேசுவரன் பக்கல் சென்று முடிந்தல்லது நில்லா. நன்று; இனி, [2] "ததோயதுத்தரதரம்" என்று கொண்டு சொல்லு கிறவிடத்தில் செய்வது என்? என்னில், மேலே சர்வேசு வரனைப் புருஷன் என்ற பெயர்க்குரிய பொருளாகச் சொல்லி, அதற்குமேலே "உத்தரதரம்" என்னும்போது 'புருஷோத்த மன்' என்பதனைத் தெரிவித்ததாமத்தனை. அங்ஙனங்கோடற் குக் காரணம் என்? என்னில், [3] "எந்தப் பரம்பொருளுக்கு ஒத்ததாயும் மிக்கதாயுமுள்ள பொருள் வேறு ஒன்றும் இல்லை" என்று கூறிவைத்து [4] 'அதற்குமேலே ஒன்று உண்டுகாண்' என்னும்போது அறிவில்லாதவனாகச் சொன்

---

1. நன்று; சம்பு சிவன் முதலிய பெயர்கள், காரணத்தை நோக்கு மிடத்துப் பகவத் பரம் ஆகலாம்; 'உமாபதி' என்பது போன்ற அசாதாரண மான பெயர்களில் நிர்வாஹம் எப்படி? என்ன, 'இனித்தான்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'பிரகாரவாசி சப்தங்கள்' என்றது, விசேஷணம் அல்லது, சரீரம் என்ற பொருளைக் காட்டுகின்ற சொற்கள் என்றபடி. பிரகாரி - விசேடியம்; அல்லது, சரீரி. சிவன் முதலா னோர் சர்வேசுவரனுக்குச் சரீரமாக உள்ளவர்கள் என்பதனை, "ஸபிரஹ்மா ஸசிவ:", "ஸ: அந்தராத் அந்தரம் பிராவிசத்", "பிரஹ்ம விஷ்ணு சிவாத் மிகாம்" என்ற வாக்கியங்களால் உணர்தல் தகும்.

2. "தத:" என்ற சொல், மேலே கூறிய புருஷனைக் காட்டுகிறது என்றும், "உத்தரதரம்" என்றது, அவனுக்கு மேலேயுள்ள சிவனைக் காட்டு கிறது என்றும் பிற மதத்தினர் பொருள் கூறுவர். "தத:" என்பதற்கு, ஹேது பரமாகவும், "உத்தரதரம்" என்பதற்கு, சர்வ உத்கிருஷ்ட புருஷ பரமாகவும் பொருள் கூறவேண்டும் என்பது நமது சித்தாந்தம். என்றது, "அந்தக் காரணங்களால், புருஷோத்தமன்" என்பதனைத் தெரிவித்தபடி என்றவாறு. தத:—ஆகையால். இதனையே அருளிச்செய்கிறார் 'மேலே சர் வேசுவரனை' என்று தொடங்கி. 'புருஷன் என்ற பெயர்க்குரிய பொருளாகச் சொல்லி' என்றது, "வேதாஹ மேதம் புருஷம் மஹாந்தம்" "தேநேதம் பூர்ணம் புருஷேண ஸர்வம்" என்று வருகின்ற மேல் வாக்கியங்களைத் திருவுள்ளம்பற்றி.

3. "யஸ்மாத் பரம் நா பரம் அஸ்தி கிஞ்சித்" என்பது சுருதி வாக்கியம்.

4. "ததோயதுத்தரதரம்" என்று கூறும் வாக்கியத்திற்குப் பிறர் கூறும் பொருளைத் திருவுள்ளம்பற்றி 'அதற்கு மேலே ஒன்று உண்டுகாண் என்னும்போது' என்று அருளிச்செய்கிறார்.

னவனு மத்தனே; [1]முதலிலே ஓதாதவன் வார்த்தையாமத் தனை நன்று; [2]"அந்தப் பகவானிடத்தில் உள்ளே இருக் கிற பொருள் உபாசிக்கத் தக்கது" என்கிறதோ? எனின், அது, வேறு ஒருபொருள் உபாசிக்கத் தக்கது என்கிறது அன்று; அந்தப் பகவானைப் போன்றே அவன் குணங்களும் தியானிக்கத் தக்கவை என்பதனைக் கூறியதாம்.

[3]இனித்தான், உலகத்திற்குக் காரணப் பொருளா யிருந்துகொண்டு வணங்கத் தக்கதாயிருப்பது, என்றும் ஒக்க இருக்கும் பொருளாக வேண்டுமேயன்றோ; [4]அதில் சம்ஹார காலத்தில் "நாராயணனே இருந்தான்" என்று நாராயணன் என்ற பெயரால் சொல்லப்படுகின்றவன் ஒருவனுமே உளன் என்று சொல்லி, "பிரமனும் இல்லை, சிவனும் இல்லை" என்று அவர்களை இல்லையாகச் சொல்லிற்றேயன்றோ. இனி, மற்றைத் தேவர்களைக் காட்டிலும் அவர்களுக்கு ஓர் உயர்வு உளதோ?

---

1. 'முதலிலே ஓதாதவன் வார்த்தையாமத்தனை' என்றது, "யஸ் மாத் பரம் நா பரம் அஸ்தி கிஞ்சித்" என்ற முன் வாக்கியத்தைப் படிக்காத அறிவில்லாதவனுடைய வார்த்தை என்றபடி. நன்னூலுக்கு உரை எழுதிய சங்கர நமச்சிவாயப் புலவர்

"அவற்றுள்,
மெல்லெழுத் தியற்கை யுறழினும் வரையார்
சொல்லிய தொடர்மொழி இறுதி யான"

என்ற தொல்காப்பியச் சூத்திரத்தின் முதலடிக்குத் தாம் கூறும்பொருள், இரண்டாம் அடிக்கு முற்றும் முரணுதலை உணராமலேயே "இவ்வாறு இடையின மிகுதலை ஆசிரியர் தொல்காப்பியரும் 'அவற்றுள், மெல்லெழுத் தியற்கை உறழினும் வரையார்' என உம்மையாற் றழீஇயினர். அச்சூத்திரத் திற்கு அவ்வாசிரியர் கருத்தன்றி வேறுரை செய்வாரும் உளர்" என்று எழுதியிருக்கும் உரை இங்கு நினைவிற்கு வருகின்றது. சிவஞான முனிவரும் தமது விருத்தியுரையில் அதனையே தழீஇயினர். (நன். சூத். 158-உரை.)

2. "தஸ்மிந்யதந்த:ததுபாஸிதவ்யம்" இங்கு "அந்த:" என்பதற்கு, 'உள்ளே இருக்கிற வேறொரு தத்வம்' என்று பிற மதத்தினர் பொருள் கூறுவர். 'உள்ளே இருக்கின்ற கல்யாண குணங்கள்' என்பது நமது சித்தாந் தம். சாந்தோக்ய உபநிடதமும் இங்ஙனமே கூறுகிற்கும்; "தஹரோஸ்மிந் அந்த: ஆகாஶ: தஸ்மிந்" என்று தொடங்கி விரிவாகக் கூறிச்செல்லுதலை ஆண்டுக் காணல் தகும்.

3. மற்றைத் தேவர்கட்கு அபரத்வ பூர்வகமாக எம்பெருமானுடைய பரத்துவத்தைக் காட்டுவதற்கு மூன்று ஏதுக்களை அருளிச்செய்கிறார் 'இனித் தான்' என்று தொடங்கி.

4. "ஏகோஹவை நாராயண ஆஸீத் நபிரஹ்மா
நேஶாநோ நேமேத்யாவா பிருதிவீ ந நக்ஷத்ராணி"

என்று ஐயப்படாமைக்கு "ஆகாயம் பூமி இல்லை, நக்ஷத்திரங்களும் இல்லை" என்று அவற்றோடு ஒக்க இவர்களையும் ஒரு சேரச் சேர்த்துவிடுகிறது. [1]படைத்தலைக் கூறுமிடத்தும், "நன்மைப்புனல்பண்ணி நான்முகனைப்பண்ணி" என்று ஒரு நீராகப் பொருந்த வைத்தன்றோ கிடக்கின்றது.

ஆக, இப் படிகளாலே மற்றைத் தேவர்கள் பக்கல் உண்டான பரத்துவ சங்கையை அறுத்து, எல்லாப்பொருள்களைக் காட்டிலும் உயர்ந்தவனாய் எல்லாப்பொருள்களையும் படைக்கின்றவனாய்க் கல்யாண குணங்கள் எல்லாவற்றையுமுடையவனாய் எல்லாப்பொருள்களையும் காப்பாற்றுகின்றவனாய் எல்லாப்பொருள்களுக்கும் அந்தர்யாமியாய் நாராயணன் என்ற பெயரால் சொல்லப்படுகின்றவனான சர்வேசுவரன் தன் பெருமைகள் எல்லாவற்றோடுங் கூடக் கண்களுக்குப் புலனாகும்படி திருநகரியிலே வந்து அண்மையிலே இருப்பவனானன்;

---

1. பிரமனை அசேதனத்தோடு சேர்த்துச் சொல்லலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'படைத்தலைக் கூறுமிடத்தும்' என்று தொடங்கி. திருவாய். 7. 5 : 4.

ஆக, இத்திருவாய்மொழியில் சொல்லுகிற பரத்துவ நிர்ணயத்துக்கு உபயோகமான பிரமாண உபபத்திகளைத் தெரிவித்தபின்பு, இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற பொருளைத் தொகுத்து அருளிச்செய்கிறார் 'ஆக, இப்படிகளாலே' என்று தொடங்கி. இத் திருவாய்மொழியில் வருகின்ற "இலிங்கத் திட்ட புராணத் தீரும்", "விளம்புமாறு சமயமும்" என்ற பாசுரங்களைத் திருவுள்ளம்பற்றி 'மற்றைத் தேவர்கள் பக்கலுண்டான பரத்துவ சங்கையை யறுத்து' என்றும், "நாயகன் அவனே" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'எல்லாப் பொருள்களைக் காட்டிலும் உயர்ந்தவனாய்' என்றும், "உலகோடு உயிர் படைத்தான்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'எல்லாப் பொருள்களையும் படைக்கின்றவனாய் என்றும், "வீடில் சீர்ப் புகழ்" என்றதனைத் திருவுள்ளம்பற்றிக் 'கல்யாணகுணங்கள் எல்லாவற்றையுமுடையவனாய்' என்றும், "கரந்து உமிழ்ந்து கடந்து இடந்தது" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'எல்லாப்பொருள்களையும் காப்பாற்றுகின்றவனாய்' என்றும், "மறுவில் மூர்த்தியோடொத்து இத்தனையும் நின்றவண்ணம் நிற்க" என்றதனைக் கடாக்ஷித்து 'எல்லாப் பொருள்களுக்கும் அந்தர்யாமியாய்' என்றும், "நாராயணன் அருளே" என்றதனைக் கடாக்ஷித்து 'நாராயணன் என்ற பெயரால் சொல்லப்படுகின்றவனான' என்றும், "இத்தனையும் நின்றவண்ணம் நிற்கவே" என்றதனைக் கடாக்ஷித்துத் 'தன் பெருமைகள் எல்லாவற்றோடுங் கூட' என்றும் அருளிச்செய்கிறார்.

அவனையடைந்து எல்லாரும் பயன்பெற்றவர்களாகப் போங்கோள் என்று அருளிச்செய்கிறார்.

---

432.

[1] ஒன்றுந் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லா
அன்று நான்முகன் தன்னொடு தேவர் உலகோடு உயிர்படைத்தான்
குன்றம் போல்மணி மாட நீடு திருக்குரு கூரதனுள்
நின்ற ஆதிப் பிரான்நிற்க மற்றைத் தெய்வம் நாடுதிரே !

பொ - ரை :—தேவர்களும் தேவர்கள் தங்கியிருக்கின்ற உலகங்களும் மக்கள் முதலான உயிர்களும் மஹத்து முதலான தத்துவங்களும் மற்றும் எல்லாப்பொருள்களும் ஒன்றும் இல்லாத அந்தக் காலத்தில் நான்கு முகங்களையுடைய பிரமனோடுகூட தேவர்களையும் அவர்கள் தங்கியிருக்கின்ற உலகங்களையும் மற்றை உயிர்க் கூட்டங்களையும் படைத்தவன் ; மணிமாடங்கள் மலைகளைப்போன்று உயர்ந்து விளங்குகின்ற திருக்குருகூரில் நின்ற திருக்கோலமாய் எழுந்தருளியிருக்கின்ற ஆதிப்பிரான் நிற்க மற்றைத் தெய்வங்களைத் தேடுகின்றீர்களே ! என்கிறார்.

வி - கு :—மற்றும் யாதும் ஒன்றும் இல்லா அன்று என்று கூட்டுக. அன்றிக்கே, ஒன்றும் என்பதனைப் பெயரெச்சமாகக் கொண்டு தேவும் முதலான பொருள்கட்கு அடைமொழியாக்கலுமாம். உயிர் படைத்தானாகிய ஆதிப்பிரான் என்க. நாடுதிர் - விரும்புகின்றீர்கள் எனலுமாம்.

இத்திருவாய்மொழி, அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

---

1. "ஒன்றும் தேவும்" என்ற இத்திருப்பதிகத்தில் திருமந்திரத்தின் பொருள் சொல்லப்படுகிறது. யாங்ஙனம்? எனின், முதல் இரண்டு திருப்பாசுரங்களாலே காரணத்வத்தையும், மூன்றாந் திருப்பாசுரத்தாலே ரக்ஷகத்வத்தையும், நான்காந் திருப்பாசுரத்தாலே சேஷித்வத்தையும், ஐந்தாந் திருப்பாசுரத்தாலே அந்நிய சேஷத்வ நிவர்த்தியையும், ஆறாந் திருப்பாசுரத்தாலே நமஸ்சப்தார்த்தமான உபாயத்வத்தையும், ஏழாந் திருப்பாசுரத்தில் "ஆடுபுட்கொடியாதி மூர்த்தி" என்கையாலே நாராயண பதத்திற் சொன்ன உபய விபூதி யோகத்தையும், எட்டாந் திருப்பாசுரத்தாலே நாராயண சப்தந் தன்னையும், ஒன்பதாந் திருப்பாசுரத்தாலே அவனடியார்கட்கு அடிமைப்பட்டிருத்தலையும், பத்தாந் திருப்பாசுரத்தாலே கைங்கர்யத்தையும் அருளிச்செய்திருத்தலான் என்க.

ஈடு:—முதற்பாட்டில், [1] "நாராயணன் ஒருவனே இருந்தான்" என்ற காரண வாக்கியப் பிரக்கிரியையை அநுசந்தித்துக் கொண்டு, எல்லாப்பொருள்களையும் படைத்தவனான சர்வேசுவரன், தாய் சந்நிதி ஒழிய குழந்தை வளராதாப் போலே தன் சந்நிதி ஒழியக் இவை ஜீவிக்கமாட்டா என்று பார்த்துத் திருநகரியிலே சர்வசுலபனாய் நிற்க, 'வேறே அடையக்கூடிய பொருளும் ஒன்று உண்டு' என்று தேடித் திரிகின்றீர்கோளே! என்று நிந்திக்கிறார்.

தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதும் ஒன்றும் இல்லா அன்று - தேவசாதியும் அவர்களுக்கு இருப்பிடமான உலகங்களும், மனிதர்கள் முதலான ஆத்மாக்களும், அண்டத்திற்குக் காரணமான மகத்து முதலான தத்துவங்களும் இவை ஒன்றும் இல்லாத அன்று என்னலுமாம்; [2] அங்ஙனன்றிக்கே, காரியத்துக்குக் காரணத்திலே லயமாகச் சொல்லுகையாலே, காரணமாயிருக்கிற தன் பக்கலிலே சென்று ஒன்றுகின்ற தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதும் இல்லா அன்று என்னவுமாம். "சத்து ஒன்றே இருந்தது" என்னக்கடவதன்றோ? நான்முகன் தன்னொடு தேவர் உலகோடு உயிர் படைத்தான் - பிரமனோடுகூட தேவசாதியையும், அவர்களுக்கு இருப்பிடமான உலகங்களையும் ஆத்மவர்க்கத்தையும் படைத்தான். அன்றிக்கே, பதினான்கு உலகங்களையும் படைத்த பிரமனோடு, அவனாலே படைக்கப்பட்டவர்களாய் நித்யசிருஷ்டிக்குக் கடவரான [3] பிரஜாபதிகள் பதின்மரோடு, அவர்களுக்குப் போகத்திற்கு இடமான உலகங்களோடு அவர்களுக்குக்

---

1. திருப்பாசுரத்தின் முதல் இரண்டு அடிகளாலே பலித்த பொருளையும், இப்படிப்பட்டவன் திருநகரியிலே நிற்கிறதற்குப் பிரயோஜனத்தையும் அருளிச்செய்யா நின்று கொண்டு, "மற்றைத் தெய்வம் நாடுதிரே" என்ற சொற்றொடரைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். "ஒன்றும் தேவும்" என்று தொடங்கி "யாதும் இல்லா அன்று" என்கையாலே, காரண வாக்கியப் பிரக்கிரியையே அநுசந்தித்தபடி. திருநகரியிலே நிற்கைக்குக் காரணம், 'தாய் சந்நிதி ஒழிய' என்று தொடங்குவது.

2. "ஒன்றும்" என்பதற்கு இருவகையாகப் பொருள் அருளிச்செய்கிறார். முன்னைய பொருளில் பெயர்ச்சொல். பின்னைய பொருளில் பெயரெச்சம். பின்னைய பொருளுக்கு மேற்கோள் - "சத்து ஒன்றே இருந்தது-சதேவ" என்பது.

3. பிரஜாபதிகள் பதின்மர்:—மரீசி, அத்திரி, அங்கிரசு, புலஸ்தியர், புலகர், கிரது, வசிஷ்டர், தக்ஷர், பிருகு, நாரதர்.

குடிமக்களான மனிதர்கள் முதலானவர்களோடு வாசியறப் படைத்தான் என்னலுமாம். [1] சர்வேசுவரன் நான்முகனைப் படைத்தான்; நான்முகன் ஐம்முகனைப் படைத்தான்; ஐம்முகன் ஆறுமுகனைப் படைத்தான்; ஆக, இதுதான் பல முகமாயிற்றுக்காணும். [2] நாட்டார் சிவனுக்கு உயர்வுகளைச் சொல்லி மயங்கா நிற்கவும், இவர் அவன்பக்கல் ஒன்றும் காணமையாலே, திருநாபிக் கமலத்தில் நேரே பிறந்து அதனாலே உண்டான ஏற்றத்தையுடையவனாகையாலே பிரமனை (முதலாக) எடுத்துச் சொல்லி, சிவனைத் தேவகூட்டத்திலே சேர்த்துப் பேசுகிறார். [3] சம்ஹாரத்தில் மகத்து முதலானவைகள் அளவும் சொன்னார்; படைப்பில் பிரமன் தொடக்கமாகச் சொன்னார்; இதற்குக் கருத்து என்? என்னில், மகத்து முதலான தத்துவங்களிலே பரத்துவ சங்கை பண்ணுவாரிலர்; அறிவில்லாத மாக்களாக இருப்பவர்கள் பிரமன் முதலாயினார் பக்கல் பரத்துவ சங்கை பண்ணுவார்கள்; அதற்காக அவ்விடமே பிடித்துக் கழிக்கிறார். நன்று; நித்தியமான உயிர்களைப் 'படைத்தான்' என்றல் என்? எனின், போகமோக்ஷங்களை விளைத்துக் கொள்ளுகைக்குக் [4] கரண களேபரங்களைக் கொடுத்தலைத் தெரிவித்தபடி.

குன்றம் போல் மணி மாடம் நீடு திருக்குருகூரதனுள் நின்ற - இப்படிப் படைத்தவன்தான் தூரத்தில் உள்ளவனாய்

---

1. 'பிரமன்' என்னாது, "நான்முகன்" என்கையாலே, ரசோக்தியாகச் 'சர்வேசுவரன்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார். இங்கு,

"யுத் தத் பத்மம் அபூத் பூர்வம் தத்ர பிரஹ்மா வியஜாயத
பிரஹ்மணச் சாபி ஸம்பூதః சிவ இதி அவதார்யதாம்
சிவாத் ஸ்கந்தః சம்பபூவ ஏதத்சிருஷ்டி சதுஷ்டயம்"

என்ற பகுதி நினைத்தல் தகும்.

2. 'நான்முகன் தன்னொடு சிவனைப் படைத்தான்' என்னாமல், "நான்முகன் தன்னொடு தேவருலகோடு உயிர் படைத்தான்" என்பதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'நாட்டார்' என்று தொடங்கி.

3. 'சம்ஹாரத்தில் மகத்து முதலானவைகள் அளவும் சொன்னார்' என்றது, பாசுரத்தின் முதல் அடியினைத் திருவுள்ளம்பற்றி. "மற்றும்" என்ற சொல்லை நோக்கி, 'மகத்து முதலானவைகள்' என்கிறார். 'படைப்பில் பிரமனைத் தொடக்கமாகச் சொன்னார்' என்றது, இரண்டாம் அடியினைத் திருவுள்ளம்பற்றி.

4. கரணம் - உறுப்புக்கள். களேபரம் - உடல்.

நிற்கையன்றிக்கே, மலைகளைக் கொடுவந்து சேர வைத்தாற் போலே இருப்பனவாய் மணிமயமான மாடங்களினுடைய உயர்ச்சியை யுடைத்தான திருநகரியிலே நின்ற. [1] "பெருமாள் மீண்டும் என்னைக் கூப்பிடுவரோ என்னும் ஆசையால் பலநாட்கள் குகனோடுகூட அங்கே நின்றிருந்தேன்" என்னுமாறுபோலே, நாம் கொடுத்த கரணங்களைக்கொண்டு "நான் வணங்கமாட்டேன்" என்னமல், வணங்குவர்களோ? அன்றிக்கே, நாம் வளைந்து கூட்டிக் கொள்ளப் புக்கால் விலக்காதொழிவர்களோ? என்று கொண்டு காலத்தை எதிர்நோக்கினவனாய் நிற்கின்றபடி. [2] அங்குச் சேஷியைப் பெறுகைக்குச் சேஷபூதனானவன் நின்ற நிலை; இங்குச் சேஷபூதரைப் பெறுகைக்குச் சேஷி நின்ற நிலை யன்றோ! ஆதிப்பிரான் நிற்க - இப்படி உங்கள் பக்கல் ஆசையாலே திருநகரியிலே நித்தியவாசம்செய்கிற [3] இவனை விட்டு. மற்றைத் தெய்வம் நாடுதிரே - தேடித் திரியுமது ஒழிய ஆஶ்ரயணீயர் கிடையார். [4] "எவன், வசுதேவன் புத்திரனான ஸ்ரீ கிருஷ்ணனை விட்டு வேறு தேவனை வணங்குகிறானோ அந்த மூடன், நீர் வேட்கை யுடைய ஒருவன் புத்தியில்லாதவனாய்க் கங்கையின் கரையிலே கிணறு தோண்டுகின்றான் என்பவனோடு ஒப்பன்" என்கிறபடியே, நீர்வேட்கையுடைய ஒருவன், கங்கை பெருகி ஓடா நிற்க அதிலே அள்ளிக் குடித்துத் தன்விடாய் தீரமாட்டாதே, அதன் கரையிலே குந்தாலி கொண்டு கிணறுதோண்டித் தன் விடாய்க்கு உதவ நாக்கு நனைக்க இருக்குமாறு போலே,

---

1. "உலகோடு உயிர்படைத்தான் நின்ற" என்று கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'பெருமாள்' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. அயோத். 59 : 3. சுமந்திரன் கூற்று.

2. சேஷபூதன் (சுமந்திரன்) "ஆசயா யதிவா ராம:—பெருமாள் மீண்டும் என்னைக் கூப்பிடுவரோ என்னும் ஆசையால்" நின்றதனை, சேஷியான இவன் நிற்கின்றமைக்குப் பிரமாணம் ஆக்குகிறபடி எப்படி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அங்கு' என்று தொடங்கி. சேஷி - ஸ்ரீராமபிரான். சேஷபூதன் - சுமந்திரன்.

3. இவனைவிட்டு - காரணனான உபகாரகனை விட்டு.

4. "நாடுதிரே" என்ற ஏகாரத்திற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'எவன்' என்று தொடங்கி,

[1] அடையத் தக்கவனுமாய் எளியனுமாய் எளிதில் ஆராதிக்கக் கூடியவனுமாய் நல்ல சுவபாவத்தையுடையனுமான இவனை விட்டு, அடையத் தகாதவராய் அரியராய் அரிதில் ஆராதிக்கக் கூடியவராய்க் கெட்ட சுவபாவத்தையுடையராய், சிலித்து ஆராதித்தாலும் [2]சேட்டை தன் மடியகத்துச் செல்வம் பார்த்திருக்குமாறுபோலே பலிப்பதும் ஒன்று இன்றிக்கே இருக்கிற [3]திருவில்லாத் தேவரைத் தேடி அடைவதற்குத் திரிகின்றீர்கோளே என்று நிந்திக்கிறார். (1)

433.

நாடி நீர் வணங்குந் தெய்வமும் உம்மையும் முன்படைத்தான்
வீடில் சீர்ப்புகழ் ஆதிப் பிரானவன் மேவி யுறைகோயில்
மாட மாளிகை சூழ்ந்து அழ காய திருக்குரு கூரதனைப்
பாடி யாடிப் பரவிச் சென்மின்கள் பல்லுல கீர்! பரந்தே.

பொ - ரை:—பலவகைப்பட்ட நாடுகளிலும் நகரங்களிலும் உள்ளவர்களே! நீங்கள் விரும்பி வணங்குகின்ற தெய்வங்களையும் உங்களையும் ஆதிகாலத்திலேயே படைத்தான், அழிதல் இல்லாத கல்யாண குணங்களையும் புகழையுமுடைய ஆதிப்பிரான், அவன் மனம் விரும்பி வசிக்கின்ற கோயில், மாடங்களும் மாளிகைகளும் சூழ்ந்து அழகு நிறைந்திருக்கின்ற திருக்குருகூர் என்னும் திவ்ய தேசத்தைப் பாடி ஆடித் துதித்துப் பரந்து செல்லுங்கோள் என்றவாறு.

---

1. "ஆதிப்பிரான்" என்றதனை நோக்கி 'அடையத்தக்கவனுமாய்' என்றும், "திருக்குருகூரதனுள்" என்றதனை நோக்கி 'எளியனுமாய்' என்றும், "யாதுமில்லா அன்று உயிர் படைத்தான்" என்றதனை நோக்கி 'எளிதில் ஆராதிக்கக் கூடியவனுமாய்' என்றும், "நின்ற" என்றதனை நோக்கி 'நல்ல சுவபாவத்தை யுடையனுமான' என்றும் அருளிச்செய்கிறார். இதற்கு மறுதலையாக "மற்றைத் தெய்வம் நாடுதிரே" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'அடையத் தகாதவராய்' என்று தொடங்கி.

2. நாட்டினான் தெய்வம் எங்கும் நல்லதோர் அருள்தன் னாலே
காட்டினான் திருவ ரங்கம் உய்பவர்க்கு உய்யும் வண்ணம்
கேட்டிரே நம்பி மீர்காள்! கெருட வா கனனும் நிற்கச்
சேட்டைதன் மடிய கத்துச் செல்வம் பார்த் திருக்கின் றீரே.

திருமாலை. 10. சேட்டை - மூதேவி.

3. கல்லா தவரிலங்கை கட்டழித்த காகுத்தன்
அல்லால் ஒருதெய்வம் யானிலேன்—பொல்லாத
தேவரைத் தேவரல் லாரைத் திருவில்லாத்
தேவரைத் தேறேன்மின் தேவு.

நான்முகன் திருவந். 53.

**வி - கு:**—உலகீர்! நீர் திருக்குருகூரதனைப் பாடி ஆடிப் பரவிப் பரந்து சென்மின் எனக் கூட்டுக. படைத்தானாகிய ஆதிப்பிரான் அவன் மேவி உறை கோயில் என்க. கோயிலாகிய திருக்குருகூர் என்க. அன்றி, கோயிலையுடைய திருக்குருகூர் எனலுமாம். "மாயோன் மேய காடுறை யுலகமும்" என்புழிப்போன்று, ஈண்டு 'உலகு' என்றது, உலகின் உட்பகுதிகளைக் காட்டிற்று.

**ஈடு:**—இரண்டாம்பாட்டு. [1] அடைகின்ற உங்களோடு, அடையப்படுகின்ற அந்தத் தேவர்களோடு வாசியற எல்லாரையும் உண்டாக்கினவன் நின்றருளுகையாலே அடையத்தக்கதான திருநகரியை அடையுங்கோள் என்கிறார்.

நீர் நாடி வணங்கும் தெய்வமும் - [2] இயல்பாகவே அமைந்தது ஓர் உயர்வு இல்லாமையாலே அவைதாம் இறையாநிற்கச் செய்தே, வசன ஆபாசங்களாலும் யுக்தி ஆபாசங்களாலும் நீங்கள் பொரி புறந்தடவி வருந்திச் சேமம் சாத்திவைத்து அடைகின்ற தேவதைகளையும். கள்ளரைத் தேடிப் பிடிக்குமாறுபோலே, தேடிப் பிடிக்க வேண்டியிருப்பவர்களாதலின் 'நாடி' என்கிறார். ஆடு திருடின கள்ளர்களேயன்றோ இவர்கள் தாம்; [3] அணங்குக்கு அருமருந்து என்று அங்கே ஆடு கட்டினவர்கள் ஆகையாலே தேடிப்பிடிக்க வேணுமே.

---

1. "தெய்வமும் உம்மையும்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'அடைகின்ற' என்று தொடங்கியும், "திருக்குருகூரதனைப் பரவிச் சென்மின்கள்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'அடையத்தக்கதான' என்று தொடங்கியும் அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "நீர் நாடி வணங்கும் தெய்வம்" என்று சொற்களைக் கூட்டிப் பொருள் அருளிச்செய்கிறார். "நீர் நாடி" என்றதனாலே, அவற்றுக்கு இல்லாதவற்றை நாடி என்று தோன்றுமே யன்றோ? அதனைக் காட்டுகிறார் 'இயல்பாகவே' என்று தொடங்கி. 'வசன ஆபாசங்கள்' என்றது, "ஏக ஏவ ருத்ர: ந த்விதியாய தஸ்தே" என்பது போன்றவைகளை. 'யுக்தி ஆபாசங்கள்' என்றது, கிருஷ்ணனுக்கு வரங்கொடுத்தான் என்பது போன்றவைகளை. ஆபாசம் - போலி. போலி வசனங்கள், போலி யுக்திகள். 'பொரி புறந்தடவி' என்றது, புறஞ்சுவர் கோலஞ்செய்தலைக் குறித்தபடி.

3. ஆடு திருடியது எங்கே? என்ன, 'அணங்குக்கு' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். 'ஆடு கட்டினவர்கள்' என்றது, ஆட்டினைக் கட்டுவித்துக் கொண்டவர்கள் என்றபடி. 394-ஆம் பாசுரம் இங்கு நினைவு கூர்தல் தகும். பெரியவர்களுக்குத் தெரியாமல், சிறியவர்களைக் கொண்டு ஒன்று வாங்கினால் அவர்களைக் கள்ளர் என்று கூறப்படும் வழக்கு உண்டேயன்றோ?

[1] ‘கள்ளர் அச்சம் காடு கொள்ளாது’ என்று தன்னை அடைய வருகிறவர்களையும் தன்னைக் கட்ட வந்தார்களாகக் கொண்டு போகிறபடி. நீர் - இராஜஸராயும் தாமஸராயும் உள்ள நீர். அன்றிக்கே, நீர் என்று, அவர்களோடு தமக்கு ஒட்டு அறச் சொல்லுகிறார் என்னலுமாம். ஆக, ‘நீர் நாடி வணங்கும்’ என்றதனால், உங்கள் நினைவு ஒழிய அவர்கள் பக்கல் ஓர் உயிர் இல்லை என்பதனைத் தெரிவித்தபடி. நீர் வணங்கும் தெய்வமும் உம்மையும் - நீங்கள் வணங்குகின்ற இராஜசராயும் தாமசராயுமுள்ள தேவர்களையும் உங்களையும். முன்படைத்தான் - படைக்கிற இடத்தில் முற்பட அவர்களைப் படைத்துப் பின்னர் உங்களைப் படைத்தான். [2] “உலகங்களைப் படைப்பதற்கு முன்னே பிரமனைப் படைத்தார்” என்கிறபடியே, பிரமனைப் படைத்துப் பின்பேயன்றோ இவ்வருகுள்ளாரைப் படைத்தது. அவன் சிருஷ்டித்திலனாகில் நீங்கள் மற்றைத் தேவர்களை ஆஸ்ரயிக்கும்படி எங்ஙனே? என்பார் ‘படைத்தான்’ என்கிறார். [3] அவன் படைத்திலனாகில் எங்ஙனே உண்ண இருப்பீர் கோள் என்றபடி. [4] உங்களுக்கு ஆஸ்ரயணீயத்வம் உண்டாகும் அன்றே யன்றோ, அவர்கள் ஆஸ்ரயணீயராவது என்பார் ‘உம்மையும் படைத்தான்’ என்கிறார்.

வீடு இல் சீர் - இயல்பாகவே அமைந்துள்ளதான செல்வத்தையுடையவன். என்றது, நீங்கள் அடைகின்ற தேவர்களுடைய ஐஸ்வரியம்போலே ஒருவனுடைய புத்திக்கு வசப்பட்டதாய், அவன் நினைத்திலனாகில் இல்லையாய், அது தனக்கு அடி கர்மமாய், அந்தக் கர்மம் குறைந்தவாறே அழியக் கூடியது அன்று ஆகலின் ‘வீடு இல் சீர்’ என்கிறது. வீடு -

---

1. ஆஸ்ரயிக்கிறவர்கள் தேடிப் பிடிக்கும்படி போகிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் ‘கள்ளர் அச்சம்’ என்று தொடங்கி. கள்ளர்க்கு உண்டாகும் பயம் பெரிய காடும் இடம் போராது என்றபடி.

2. முன்னே படைத்ததற்குப் பிரமாணம், ‘உலகங்களை’ என்று தொடங்குவது. இது, ஸ்வேதாஸ்வதரம்.

3. ‘அவன் படைத்திலனாகில்’ என்று தொடங்கும் வாக்கியம் சிலேடை.

4. “உம்மையும் படைத்தான்” என்று அவர்களோடு கூட்டிச் சொல்லுவதற்கு பாவம் அருளிச்செய்கிறார் ‘உங்களுக்கு’ என்று தொடங்கி. ஆஸ்ரயணீயத்வம் - அடையப்படும் தன்மை. ஆஸ்ரயணீயர் - அடையப்படுகின்றவர்கள்.

அழிவு. சீர் - செல்வம். அன்றிக்கே, நீங்கள் அடைகின்ற தேவர்களுடைய செல்வம்போலே [1]அவதியுடன் கூடியிருப்பது அன்று ; [2]கர்மம் அடியாய் அதிலே ஒன்று குறையக் குறைதல், பலத்தைக் கொடுக்கின்றவனுடைய அநுக்ரஹம் குறையக் குறைதல் இல்லையேயன்றோ ? [3]“எல்லாப் பலன்களும் அந்தப் பரம்பொருளிடத்திலிருந்துதான் பெறப்படுகின்றன” என்றதே அன்றோ. அன்றிக்கே, வீடு இல் சீர் என்பதற்கு, அழிவில்லாத கல்யாண குணங்களையுடையவன் என்னுதல். [4]“அவனிடத்தில் எந்தக் குணம் உள்ளதோ அதுவும் தியானிக்கத் தக்கதே” என்கிறபடியே, அவனைப் போன்றே அவன் குணங்களும் உபாசிக்கத் தக்கவை என்னுமிடம் சொல்லுகிறது. புகழ் - எல்லாரையும் பாதுகாத்து, அவ்வாறு பாதுகாத்தலால் வந்த புகழையுடையவன். [5]ரக்ஷணத்தால் வந்த புகழையுடையவன் அன்றோ அடையத் தக்கவனாவான்; “கீர்த்திக்குத் தானே இருப்பிடமாக இருப்பவர்” என்னக்கடவதன்றோ. ஆதிப்பிரான் - பாதுகாத்துப் புகழைப் படையாமல் பழிபடைத்தாலும் விட ஒண்ணாத சம்பந்தத்தை ‘ஆதி’ என்கிற பதத்தால் சொல்லுகிறது. கேவலம் சம்பந்தமே யன்று, உபகாரகன் என்பதனைச் சொல்லுகிறது ‘பிரான்’ என்ற

---

1. ‘அவதியுடன் கூடியிருப்பது அன்று’ என்றது, “வீடு இல்” என்றதன் பொருள். எங்ஙனே? என்னில், வீடு என்று விடப்படுமதாய், அதாவது - குறைதலாய், அதனால், அல்பமாயிருத்தலைச் சொல்லி, அது இல்லாமை - பெரியதாய், எல்லை இல்லாமையைச் சொல்லுகிறது என்க.

2. அவதி இல்லாமைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார் ‘கர்மம் அடியாய்’ என்று தொடங்கி.

3. ஆயின், பலத்தைக் கொடுக்கின்றவன் இறைவனோ? எனின், ‘ஆம்’ என்று அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் ‘எல்லாப் பலன்களும்’ என்று தொடங்கி. இது, உத்தரமீமாம்சை. 3. 2 : 37.

4. இவ்விடத்தில் குணங்களைக் கூறுதற்குக் கருத்து என்? என்னில், அதற்கு விடை அருளிச்செய்கிறார் ‘அவனிடத்தில்’ என்று தொடங்கி. இது, உபநிடதம்.

5. புகழைச் சொன்னதற்குப் பிரயோஜனத்தை அருளிச்செய்கிறார் ‘ரக்ஷணத்தால்’ என்று தொடங்கி. அப்படிப் புகழை யுடையவனோ அவன்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் ‘கீர்த்திக்கு’ என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. கிஷ்கிந். 15 : 19.

சொல். [1]உபகாரகனுமாய், சம்பந்தத்தையுடையனுமாய், கீர்த்தியாளனுமாய்; ஐஸ்வர்யம் என்ன, அழியாத கல்யாண குணங்கள் என்ன, இவற்றையுடையவனை ஒழிய, இவையில்லாதாரை ஆஸ்ரயிக்கத் தகுதியில்லை. [2]காரண வஸ்துவேயன்றோ உபாசிக்கத் தக்கது; [3]"காரண வஸ்துவே தியானிக்கத் தகுந்தது" என்னுநின்றதேயன்றோ. அவன்மேவி உறைகோயில் - [4]அவன் பரமபதத்திலே உள்வெதுப்போடே காணும் இருப்பது. [5]சம்சாரிகள்படுகிற கிலேசத்தை அநுசந்தித்து, 'இவை என்படுகின்றனவோ?' என்கிற திருவுள்ளத்தில் வெறுப்போடேயாயிற்று அங்கு இருப்பது. [6]"முக்தன் ஜனங்களின் மத்தியில் இருக்கிற இந்தச் சரீரத்தை நினையாமலே நாலு பக்கமும் சஞ்சரிக்கின்றான்" என்கிறபடியே, இங்குத்தை துக்கத்தை நினையாது ஒழிய வேண்டுவது, பண்டு துக்கியாயிருந்து சம்சாரத்தில் நின்றும் போனவனுக்கேயன்றோ? [7]'இங்குத்தைத் துக்கத்தை நினைக்குமாகில் அநுபவிக்கின்ற சுகத்துக்குக் கண்ணழிவு ஆகாதோ?' என்னும் கண்ணழிவு

1. மேலே கூறியவற்றையெல்லாம் அவரோகக்கிரமத்திலே நிகமிக்கிறார் 'உபகாரகனுமாய்' என்று தொடங்கி.

2. ஆக, "நாடிநீர்" என்றது முதல் "படைத்தான்" என்றது முடிய, ஆஸ்ரயணீயதைக்கு உறுப்பாக நிகமிக்கிறார் 'காரணவஸ்துவேயன்றோ' என்று தொடங்கி. இதனால், மேலே கூறிய பதங்களுக்கெல்லாம் பிரயோஜனத்தைக் காட்டி முடிக்கிறார். 'காரண வஸ்துவே யன்றோ' என்று தொடங்கும் வாக்கியத்துக்கு நோக்கு, "படைத்தான்" என்ற பதம்.

3. ஸ்வேதாஸ்வதரம்.

4. "மேவி" என்ற சொல்லிலே நோக்காகப் பொருள் அருளிச்செய்கிறார் 'அவன் பரமபதத்திலே' என்று தொடங்கி.

5. பரமபதத்தில் இருக்கும்போது உள் வெதுப்பிற்குக் காரணம் யாது? என்ன, 'சம்சாரிகள்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

6. பரமபதத்தில் இப்படி வெறுப்போடே இருக்குமாகில் ஆனந்தத்தையுடையனாயிருக்கிறான் என்பதற்குக் குற்றம் வாராதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'முக்தன்' என்று தொடங்கி. இது, சாந்தோக்யம். 8. 12 : 3.

7. எல்லையில்லாத ஆனந்தத்தையுடையவனாயிருக்கும் ஒருவன், துக்கத்தை நினைத்தால் சுகத்திற்குக் குறைவு வாராதோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இங்குத்தைத் துக்கத்தை' என்று தொடங்கி. இங்குத்தை - இவ்விடம். 'அவனுக்கு' என்றது, அநுக்கிரஹத்தையே செய்கின்றவனும், கர்மங்கட்குக் கட்டுப்படாதவனுமாயிருக்கும் அவனுக்கு என்றபடி.

இல்லையே அவனுக்கு. [1] 'பரமபதத்திலும் சம்சாரிகள் படுகிற கிலேசத்தை அநுசந்தித்துத் திருவுள்ளத்தில் வெறுப்போடே யாயிற்று எழுந்தருளியிருப்பது' என்று பட்டர் அருளிச் செய்ய, '**பண்டிதர்**' என்கிறவர், 'ஆச்சானும் பிள்ளையாழ்வானும் [2] இத்தைக் கேட்டுப் பரமபதத்திலே ஆனந்தத்தால் பூர்ணனாயிருக்கிற இருப்பிலே திருவுள்ளத்திலே ஒரு வியசனத்தோடே இருந்தான் என்கை உசிதமோ? என்கிறார்கள்' என்று வந்து விண்ணப்பஞ்செய்ய, [3] '"மனிதர்களுக்குத் துக்கம் வருகின்ற காலத்தில் தானும் மிகவும் துக்கிக்கின்றான்" என்றது, குணப் பிரகரணத்திலேயோ? துக்கப் பிரகரணத்திலேயோ? என்று கேட்கமாட்டிற்றிலீரோ? [4] இது குணமாகில், '**குணம்**' என்று பேர்பெற்றவற்றில் அங்கு இல்லாதது ஒன்று உண்டோ?' என்று அருளிச்செய்தார். "எல்லாக் கல்யாண குணங்களையும் இயல்பாகவே யுடையவன்" என்னக்கடவ

---

1 இயல்பாகவே துக்கம் இல்லாதவன், சம்சாரிகளுக்கு இரங்கித் துக்கிக்கிறான்; ஆகையாலே, ஆனந்தத்துக்குக் குற்றம் இல்லை என்று அருளிச்செய்தார் மேல். இனி, ஆனந்தத்துக்குக் குற்றமானாலும் அதுவும் குணமேயாகும் என்று வேறு ஒரு சமாதானத்தைப் பரமாசாரியர் வசனத்தைக்கொண்டு சாதிக்கிறார் 'பரமபதத்தில்' என்று தொடங்கி.

2. 'இத்தைக்கேட்டு' என்றது, பட்டர் அருளிச்செய்ததாகப் பண்டிதர் என்பவர் சொல்லக்கேட்டு என்றபடி. பட்டர் 'பரமபதத்திலும்' என்று தொடங்கும் வாக்கியத்தை அருளிச்செய்ய, பண்டிதரும் கேட்டு, வேறோர் இடத்தில் இருந்து அதனைச் சிந்தித்துக்கொண்டிருக்கையில், அங்கே வந்து சேர்ந்த ஆச்சானும், பிள்ளையாழ்வானும் இதனைக் கேட்டு 'இது கூடுமோ' என்ன, பண்டிதர் அவ்வினாவிற்கு விடை கூறத் திறன் இல்லாமல், பட்டரிடம் வந்து 'இவர்கள் இப்படிச் சொன்னார்கள்' என்று விண்ணப்பம் செய்ய, அதற்குப் பட்டர் உத்தரம் அருளிச்செய்தபடியைத் தெரிவித்தவாறு.

3. ஸ்ரீராமா. அயோத். 2 : 42.

4. சம்சாரிகளுடைய துக்கத்தைக் கண்டு துக்கப்படுவது குணப்பிரகரணத்திலே சொல்லப்பட்டிருக்கையாலே குணமானாலும், அது அவதாரத்திலே சொன்னதேயன்றோ? என்ன, 'இது குணமாகில்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். அங்கு - பரமபதத்தில். 'பரமபதநாதன் குணபூர்ணன்' என்னுமதற்குப் பிரமாணம் அருளிச்செய்கிறார் 'எல்லாக் கல்யாண குணங்களையும்' என்று தொடங்கி. இது, விஷ்ணுபுரா. 6. 5 : 84.

தன்றே. [1] தன் இச்சை ஒழியக் கர்மங் காரணமாக வருமவை இல்லை என்னுமத்தனைபோக்கி, அநுக்ரஹ கார்யமாய் வருமவை இல்லை எனில், முதலிலே சேதனன் அன்றிக்கே ஒழியுமேயன்றோ? [2] "அந்தப் பரம்பொருள் சேதந வர்க்கமெல்லாம் பிரகிருதியில் லயப்பட்டிருக்கும் காலத்தில் தான் தனியாக இருந்துகொண்டு துக்கத்தை அடைந்தான்" என்றது, நித்திய விபூதியும் குணங்களும் உண்டாயிருக்கச் செய்தேயன்றோ.

ஆதிப்பிரான் அவன்மேவி உறைகோயில்-[3]பரமபதத்தில் தன்னில் குறைந்தார் இல்லாமையாலே அவ்விடத்தை விட்டு, நல்ல படுக்கையையும் போகத்துக்கு ஏகாந்தமானவற்றையும் காற்கடைக்கொண்டு,குழந்தையினுடையதொட்டிற் காற்கடையிலே கிடக்கும் தாயைப் போலே, காப்பாற்றுவாரை விரும்புமவர்களான சம்சாரிகள் இருக்கிற இடமாகையாலே விரும்பி வசிக்கும் இடம் இவ்விடமாயிற்று. மாட மாளிகை சூழ்ந்து அழகாய திருக்குருகூர் - மாடங்களாலும் மாளிகைகளாலும் சூழ்ந்து காட்சிக்கு இனியதாயிருக்கும் திருக்குருகூர். [4] உங்களுக்குத்தான் நல்ல தேசம் தேட்டமே; 'முக்தப் பிராப்பிய

---

1. அங்ஙனமாயின், "விஶோகஃ" என்கிற சுருதியோடு மாறு ஆகாதோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தன் இச்சை ஒழிய' என்று தொடங்கி. என்றது, பரமசேதனன் ஆகையாலே இவ்வநுக்கிரஹ காரியம் சொரூபத்தோடு சேர்ந்தே இருக்கும் என்பது கருத்து.

2. 'உள்வெதுப்போடு இருப்பான்' என்பதற்கு உபபத்தி காட்டினார், பிரமாணமும் காட்டுகிறார் 'அந்தப் பரம்பொருள்' என்று தொடங்கி. இது, மஹோபநிஷதம்.

3. "மேவியுறைகோயில்" என்பதற்கு, போகஸ்தானமான பரமபதத்திலே எழுந்தருளியிருக்கச்செய்தேயும், சம்சாரிகள் படுகிற கிலேசத்தை அநுசந்திக்கையாலே உள்வெதுப்போடே இருப்பான் அங்கு என்று ஒரு கருத்து அருளிச்செய்தார் இதுகாறும். இனி, ரக்ஷக அபேக்ஷை இன்றிக்கே தன்னோடு ஒத்த நித்திய முக்தர்களுக்கு முகங்கொடுத்துக்கொண்டிருக்கையாலே பொருத்தம் இல்லை அங்கு; ரக்ஷகத்தை விரும்புகின்றவர்களான சம்சாரிகளை ரக்ஷிக்கையாலே பொருந்தி வசிப்பது இங்கே என்று வேறும் ஒரு கருத்து அருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றிப் 'பரமபதத்தில்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

4. "மாடமாளிகை சூழ்ந்து அழகாய" என்ற விசேடணத்திற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'உங்களுக்கு' என்று தொடங்கி.

தேசம்' என்று தோற்றுகிறதில்லையோ? என்றபடி. அதனைப் பாடி ஆடி - பிரீதியினாலே தூண்டப்பட்டவராய்க் கொண்டு பாடி, உடம்பு இருந்த இடத்தில் இராமல் ஆடி, கிரமமின்றியே கூப்பிட்டுக்கொண்டு. [1] இதனால், "அதனுள் நின்ற ஆதிப் பிரான்" என்ற இடம் மிகை என்கிறார். என்றது, [2]"பகவான் எழுந்தருளியிருக்கும் ஊரில் வசிக்கக்கடவன்", [3]"இந்தத் தேசமானது, புண்ணியத்தைக் கொடுக்கக் கூடியது, விரும்பியனவற்றை எல்லாம் கொடுக்கக் கூடியது" என்கிறபடியே, இதுதானே பேறு என்றபடி. [4]அந்தத் தேசம் என்றால் தம் திருவுள்ளம் இருக்குமாறுபோலே இருக்கும் என்று இருக்கிறார் காணும் எல்லார்க்கும். பல் உலகீர் - ஒருவன் சமித்தைக் கையிலே யுடையவனாய் ஐம்பொறிகளையும் அடக்கியவனாய் வர, அவனுக்கு ஹிதத்தை உபதேசம் செய்கிறார் அன்று; "இவை என்ன உலகியற்கை" என்று, உலகம் கிலேசப்படுகிறபடியைக் கண்டு எல்லார்க்கும் சொல்லுகிறாரேயன்றோ? ஆதலால், 'உலகீர்' எனப் பொதுவில் அழைக்கிறார். பரந்தே - [5]பெரிய திருநாளுக்கு எல்லாத் திக்குக்களில் நின்றும் வந்து ஏறுமாறு

---

1. "அதனை" என்ற பதத்தைத் திருவுள்ளம்பற்றி, 'இதனால்' என்கிறார்.

2. சர்வேசுவரன் பிராப்யன் ஆவான்; அவன் இருந்த தேசமும் பிராப்யம் ஆமோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பகவான்' என்று தொடங்கி.

3. காருடபுராணம் பதினோராவது அத்யாயம். இங்கே,

விரும்பினவை எய்தும் வினையனைத்தும் தீரும்
அரும்பரம வீடும் அடைவீர் - பெரும்பொறிகொள்
கள்ளம்பூ தங்குடிகொள் காயமுடை யீரடிகள்
புள்ளம்பூ தங்குடியிற் போம்.

என்ற திவ்வியகவியின் திருவாக்கு நினைவு கூர்தல் தகும்.

4. சம்சாரிகள் பாடி ஆடுவார்களோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறார் 'அந்தத் தேசம்' என்று தொடங்கி.

வளந்தழைக்க உண்டால் என்? வாசம் மணந்தால் என்?
தெளிந்தகலை கற்றால் என்? சீசீ - குளிர்ந்த பொழில்
தண்குருகூர் வாவிச் சடகோபன் ஊர் எங்கள்
வண்குருகூர் என்னாத வாய்.

என்றார் திவ்வியகவி.

5. பெரிய திருநாள் - திருவரங்கத்தில் மார்கழி மாதத்தில் நடக்கும் திருவத்யயன உத்சவம்.

போன்று, பல திக்குக்களில் நின்றும் பாடி ஆடிப் பரவிச் செல்மின்கள். (2)

434.

பரந்ததெய்வமும் பல்வுலகும் படைத்து அன்றுஉடனே விழுங்கிக்
கரந்துஉமிழ்ந்து கடந்து இடந்தது கண்டும் தெளிய கில்லீர்
சிரங்களால் அமரர் வணங்கும் திருக்குருகூர் அதனுள்
பரன்திறம் அன்றிப் பல்லுலகீர்! தெய்வம் மற்றில்லை பேசுமினே.

பொ - ரை:—பார்த்திருக்கின்ற தெய்வங்களையும் அவர்களுக்கு உறைவிடமான பலவகைப்பட்ட உலகங்களையும் படைத்தும், பிரளயம் வந்த அக்காலத்தில் உடனே விழுங்கியும், பிரளயம் அறியாதவாறு மறைத்தும், பின்னர் வெளிநாடு காண உமிழ்ந்தும், திரிவிக்கிரமாவதாரத்தில் இரண்டு அடிகளால் அளந்தும், வராஹ அவதாரத்தில் பிரளயத்தில் நின்று எடுத்தும் செய்துபோன காரியங்களைப் பார்த்திருந்தும் அவனே பரன், அவனுக்கேயுரியது உலகம் என்பதனைத் தெளியமாட்டுகின்றிலீர்; தேவர்கள் தலைகளாலே வணங்குகின்ற திருக்குருகூர் என்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற சர்வேசுவரனுக்குச் சரீரமாயல்லாது ஸ்வதந்திரத்தோடு கூடியிருக்கிற வேறு தெய்வம் இல்லை; இருக்குமேயாயின், பலவகைப்பட்ட உலகத்திலுள்ளவர்களே! என்னோடு வந்து பேசுங்கள்.

வி - கு:—பல உலகீர்! கண்டும் தெளியகில்லீர்; திருக்குருகூரதனுள் பரன் திறம் அன்றி மற்றுத் தெய்வம் இல்லை; பேசுமின் எனக் கூட்டுக. அன்றி எல்லை என்க. திறம் - பிரகாரம்; சரீரம்.

ஈடு:—மூன்றாம்பாட்டு. [1] உலகத்தை விழுங்குதல் முதலிய தெய்வத்தன்மை வாய்ந்த செயல்களாலும் இவனே பரன்; இதனை உடன்படாதார் என்னோடு வந்து கலந்து பேசிக் காணுங்கோள் என்கிறார்.

பரந்த தெய்வமும் - [2] கொள் கொம்பு மூடப் படர்ந்து நியாமகரோடு ஒக்க எடுத்துக் கழிக்கவேண்டும்படி, கைவிஞ்சின தேவசாதியும். பல உலகும் - அவர்கள் பரப்புக்கெல்

1. இரண்டாம் அடி மூன்றும் அடியைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. மற்றைத் தேவர்கள், தங்களைத் தாங்களே ஈசுவரர்களாக அபிமானித்திருக்கும் அபிமானத்தினுடைய பரப்பின் உரப்பை அருளிச்செய்கிறார் 'கொள்கொம்புமூட' என்று தொடங்கி,

லாம் போரும்படியான உலகங்களும். அன்றிக்கே, அவர்கள் நியமிக்கின்றவர்கள் ஆகைக்குக் காரணமாக [1] நியமிக்கப்படுகின்றவர்களான மற்றைய ஆத்மாக்களையும் என்னவுமாம். படைத்து - உண்டாக்கி. [2] இவருக்கு அந்தத் தேவர்களோடு அல்லாதாரோடு வாசியற்று இருக்கிறபடி. அன்று உடனே விழுங்கி - அந்தப் பரமாத்மா "முன்னே பிரமனைப் படைத்தார்" என்கிறபடியே, [3] படைக்கிறபோது கிரமத்திலே படைத்தான்; ஆபத்து வந்தால் அங்ஙனம் கிரமம் பார்க்க ஒண்ணாதே, பிரளயாபத்திலே ஒருகாலே வயிற்றில் வைத்து. கரந்து - பிரளயம் வந்தாலும் 'இங்கு உண்டோ?' என்று இளைத்துக் காட்டலாம்படி மறைத்து. உமிழ்ந்து - 'உள்ளே இருந்து நோவுபடுகின்றனவோ?' என்று வெளிநாடு காண உமிழ்ந்து. கடந்து - நடுவே மஹாபலி போல்வார் பருந்து இருஞ்சிறைப்போலே பறித்துக்கொள்ள எல்லை நடந்து மீட்டுக்கொண்டு. இடந்தது - பிரளயத்திலே அழுந்தி அண்ட பித்தியிலே சேர்ந்த இந்த உலகத்தை மஹாவராஹமாய்ப் புக்கு ஒட்டு விடுவித்து எடுத்து இப்படிச்செய்த இவற்றை. கண்டும் - [4] இவர்க்குப் பிரத்தியக்ஷத்திலும் சாஸ்திரம் விளக்கமாகக் காணப்படுகிறது காணும். தெளியகில்லீர் - இவ்வதிமாநுஷ சேஷ்டிதங்களைக்கொண்டே 'அவன் ஆஸ்ரயணீயன்' என்று அறியலாயிருக்க, அறியமாட்டுகின்றிலீர்கோள். இவர்கள் தெளிவும் தெளியாமையும் ஒழிய, அர்த்தஸ்திதியில் மாறுபாட்டம் அற்று இருக்கிறது ஆதலின், 'கண்டும் தெளியகில்லீர்' என்கிறார். உங்கள் கலக்கமும் தெளிவும் ஒழிய, அவனை ஈஸ்வரன் அல்லனாகச் செய்தல், இவர்களை ஈஸ்வரர்கள் ஆக்குதல் செய்ய ஒண்ணாதே யன்றோ என்றபடி.

அமரர் சிரங்களால் வணங்கும் - 'எல்லாப் பொருள்களையும் படைத்தவனும் அல்லன், ஆபத்திற்குத் துணைவனும்

1. "உலகு" என்றதற்கு அருளிச்செய்யும் பொருள்கள் இரண்டனுள், இரண்டாவது பொருளில் "உலகு" என்பது ஆகுபெயர்.

2. அசேதனமான உலகத்தோடு தேவர்களையும் சேர்த்துக் கூறியதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'இவருக்கு' என்று தொடங்கி.

3. "உடனே" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'படைக்கிறபோது' என்று தொடங்கி.

4. "கண்டும்" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'இவர்க்கு' என்று தொடங்கி. 386-ஆம் பாசுரம் குறிப்புப் பார்க்கவும். பக். 193,

அல்லன்' என்று இருந்தீர்கோளேயாகிலும், நீங்கள் அடைகிற தேவர்கள் செய்கிறது முன்னம் உங்களுக்குக் கண்டால் தெளியலாமே; [1] அவர்கள் 'தலை படைத்த பிரயோஜனம் பெற்றோம்' என்று வணங்குகிறபடியைக் கண்டாகிலும் நீங்கள் அவனைப் பற்றப் பாருங்கோள். [2] "தாமரைபோன்ற ஒளியுள்ளதும், பிரமன் சிவன் இவர்களால் அருச்சிக்கப்பட்டதுமான திருவடிகளால் தடவினார்" என்றும், [3] "பின்னிட்ட சடையானும் பிரமனும் இந்திரனும், துன்னிட்டுப் புகலரிய" என்றும், [4] "நாத்தழும்ப நான்முகனும் ஈசனுமாய் முறையால் ஏத்த" என்றும் கூறப்படும் பிரமாணங்களைக் காண்க. திருக்குருகூர் அதனுள் பரன் - [5]மனித வடிவத்தில் பரத்துவத்துக்கும் அவ்வருகே ஒரு பரத்துவமேயன்றோ இது. [6] இவ்வருகே போரப்போர உயர்வு மிகுமத்தனை. [7] குணத்தாலே யன்றோ வஸ்துவுக்கு உயர்வு; [8] குணாதிக்கியம் உள்ளது இங்கேயே யன்றோ. [9] "அவர்கள் இருவரில் சேதனன் கருமபலத்தை இனிமையாக அநுபவிக்கிறான், மற்றவனான ஈசுவரன் கர்ம பலத்தை அநுபவியாமல் மிகவும் பிரகாசிக்கிறான்" என்கிற

---

1. "சிரங்களால்வணங்கும்" என்ற விசேடணத்துக்கு பாவம் அருளிச்செய்கிறார் 'அவர்கள் தலை படைத்த' என்று தொடங்கி.

2. பிரமன் சிவன் முதலானோர்களால் வணங்கப்பட்டதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'தாமரைபோன்ற' என்று தொடங்கி. இது, பாரதம். ராஜதர்மம்.

3. பெருமாள் திருமொழி. 4 : 3.

4. பெரிய திருமொழி. 1. 7 : 8.

5. இப்பாசுரத்தில் இரண்டாம் அடியைத் திருவுள்ளம்பற்றி 'மனித வடிவத்திலே பரத்துவத்துக்கும்' என்கிறார். 'இது' என்றது, திருநகரியிலே எழுந்தருளியிருக்கும் அர்ச்சையைக் குறித்தபடி.

6. பரனாயிருக்கும் தன்மை அவ்விபூதியில் ஒழிய இங்கு உண்டோ? என்ன, 'இவ்வருகே' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

7. அதற்குக் காரணம் அருளிச்செய்கிறார் 'குணத்தாலே' என்று தொடங்கி.

8. அர்ச்சையில் குணம் உண்டோ? என்ன, 'குணாதிக்யம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

9. இவ்வருகே போந்தால் குணங்கள் குறைவுபடுதல் ஒழிய, அதிகமாகக் கூடியோ? என்ன, 'அதிகமாகும்' என்பதனைத் திருஷ்டாந்தத்தோடு காட்டுகிறார் 'அவர்கள் இருவரில்' என்று தொடங்கி. இது, இருக்குவேதம்,

படியே, சேதநர் சரீரத்தோடே கலசக் கலச ஒளி மழுங்கி வாராமிற்கச்செய்தே, அவனுக்கு நியமிக்கும் தன்மையால் வந்த புகர் அறவிஞ்சி வருமாறுபோன்று, சம்சாரிகள் நடுவே போரப் போர ஆயிற்றுப் பரத்துவம் பிரகாசிப்பது.

திறம் அன்றி - அவனுக்குப் பிரகாரமாயல்லாது. திறம் - பிரகாரம். தெய்வம் மற்று இல்லை - ஸ்வதந்திரமாய்த் தனக்கு உரித்தாய் இருப்பது ஒரு தெய்வம் இல்லை. [1]தேவர்களுடைய ஸ்வரூப நிஷேதம் பண்ணுகிறார் அன்று, 'அவனுக்கு விபூதி வேணும்' என்று இருக்கிறவர் ஆகையாலே; அவர்களுடைய ஸ்வாதந்திரிய நிஷேதம் பண்ணுகிறார். [2]மற்றைத் தேவர்களை அவனுக்குப் பிரகாரமாகப் புத்திபண்ணி ஆஸ்ரயித்தீர் கோளாகில், அவனுடைய ஆஸ்ரயணத்திலே புகும்; அவர்கள் ஸ்வதந்திரர்கள் என்று புத்திபண்ணி ஆஸ்ரயித்தீர்கோளாகில் ஸ்வதந்திரமாய் இருப்பதொரு வேறு தெய்வம் இல்லை; [3]"ஸ்வதந்திரப்பொருள் இங்குப் பல இல்லை" என்றும், [4]"எவர்கள் பிதிரர்களையும் தேவர்களையும் அக்கியோடு கூடிய பிராமணர் களையும் பூஜிக்கிறார்களோ அவர்கள் எல்லா ஆத்மாக்களுக்கும் அந்தர்யாமியாயிருக்கிற விஷ்ணுவையே பூஜிக்கிறார்கள்" என்றும் வருவன காண்க. [5]பேசுமின் - நான் 'அவனுக்குப் பிரகாரமாயல்லது ஸ்வதந்திரமாயிருப்பது ஒரு தேவதை இல்லை' என்றேன்; 'இப்படி வேறு ஒருவருக்கும் வசப்பட்டிராத நியமிக்குந் தன்மையையுடைய இவனைத் தனக்குப் பிரகாரமாகவுடையது ஒரு தெய்வம் உண்டு' என்று சொல்லவல்லார் உண்டாகில் வாய்படைத்தார் என் முன்னே நின்று சொல்லிக் காணுங்கோள் என்கிறார். (3)

---

1. "தெய்வம் மற்றில்லை" என்றால் போராதோ? "திறம் அன்றி" என்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தேவர்களுடைய' என்று தொடங்கி. நிஷேதம் - விலக்குதல்.

2. "திறம் அன்றி" என்றும், "மற்று இல்லை" என்றும் பேசுகின்றவருடைய மனோபாவத்தை அருளிச்செய்கிறார் 'மற்றைத் தேவர்களை' என்று தொடங்கி.

3. ஸ்வதந்திரப்பொருள் அவனையன்றி வேறு இல்லை என்பதற்குப் பிரமாணம், 'ஸ்வதந்திரப்பொருள்' என்று தொடங்குவது.

4. மற்றைத் தேவர்களைச் சர்வேசுவரனுக்குப் பிரகாரமாக நினைத்து ஆஸ்ரயித்தால் சர்வேசுவரனையே சாரும் என்பதற்குப் பிரமாணம், 'எவர்கள்' என்று தொடங்குவது. இது, தக்ஷஸ்மிருதி.

5. பேசுமின் - உபபத்தி சொல்லுங்கோள். உபபத்தியாவது, பேசும் விஷயத்தை நிலைநிறுத்தும்பொருட்டு எடுத்துக் காட்டப்படும் யுக்திகள். இதனையே விளக்குகிறார் 'இப்படி வேறு ஒருவருக்கும்' என்று தொடங்கி.

435.

பேசநின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும்
நாயகன் அவனே கபாலநன் மோக்கத்துக் கண்டுகொண்மின்
தேச மாமதிள் சூழ்ந்துஅழ காய திருக்குருகூரதனுள்
ஈசன் பால்ஓர் அவம்பறைதல் என்னாவ திலிங்கியர்க்கே.

பொ - ரை :—பேசப்படுகின்ற சிவபெருமானுக்கும் பிரமனுக்கும் மற்றைத் தேவர்கட்கும் தலைவன் அவனேயாவன்; இதனைக் கபாலம் விடுபட்ட சரிதையாலே கண்டுகொள்ளுங்கள். ஒளிபொருந்திய பெரிய மதில்கள் சூழ்ந்த அழகாக இருக்கின்ற திருக்குருகூர் என்னும் திவ்ய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற சர்வேசுவரன் விஷயத்தில் பயனில்லாத வார்த்தைகளை ஏற்றிப் பேசுதல் அநுமானத்தைப் பிரமாணமாக வுடையவர்கட்கு என்ன பயனைத் தருவதாம் என்கிறார்.

வி - கு :—கபாலம் - பிரமனது மண்டை ஓடு. மோக்ஷம் - விடுபடுதல். தேசம்-ஒளி. அவம்-பயன் இன்மை. இலிங்கியர்க்கு என்னாவது என்க. இலிங்கியர் - அநுமானத்தைப் பிரமாணமாகக் கொண்டவர்கள்; அவர்களாவார்: பாசுபத நையாயிக வைசேடிகர்கள்.

ஈடு :—நாலாம்பாட்டு. [1] வியோமாதீத நையாயிக வைசேடிகர்கள் முதலானவர்கள் வந்து கிட்டினவர்களாய் [2] "உலகம்

---

1. "நாயகன் அவனே" என்று சுருதிப் பிரசித்தியையும், "கபால நன்மோக்கத்துக் கண்டுகொண்மின்" என்று அர்த்த சாமர்த்திய ரூப லிங்கத்தையும் அருளிச்செய்கையாலே, அதற்குத் தக அவதாரிகை அருளிச்செய்கிறார் 'வியோமாதீத' என்று தொடங்கி. 'வியோமாதீதர்' என்பது, பாசுபத மதத்தினராய சைவர்களைச் சொல்லுகிறது. வியோம சப்தவாச்யனான சர்வேசுவரனைக்காட்டிலும் மேம்பட்டதொரு பொருள் உண்டு என்று சொல்லுகின்றவர்கள் ஆகையாலே, இவர்களை 'வியோமாதீதர்' என்கிறார். வியோமம் - ஆகாசம்.

இவர்கள் 'ஈசன், ஈசானன்' என்கிற பெயர்களாலே சிவபரத்துவத்தைச் சாதிப்பவர்கள். நையாயிக வைசேடிகர்கள் அநுமானத்தாலே சிவனுக்குக் காரணத்துவத்தைச் சாதிப்பார்கள். ஆக, வியோமாதீதர்க்குச் சமாக்யை பிரதானம்; நையாயிக வைசேடிகர்களுக்கு அநுமானம் பிரதானம். நையாயிக வைசேடிகர்கள், தார்க்கிகரில் அவாந்தரபேதம்.

2. இலிங்கியரை ஆநுமானிகர் என்றும், சமாக்யைப் பிரதானர் என்றும் இரண்டு வகையாகப் பிரித்து, இவர்களில் சமாக்யைப் பிரதானராகிறார், 'ஆகாச சப்த வாச்யனான விஷ்ணுவுக்குப் புறம்பே உருத்திர தத்துவம் உண்டு' என்று சொல்லுகிற பாசுபதர் என்றும், அநுமானப் பிரதானராகிறார், நையாயிக வைசேடிகர்கள் என்றும் பிரதிஜ்ஞை செய்து, இவர்கள் இருவரும் அநுமான

உறுப்புக்களோடு கூடியிருக்கையால் காரிய ரூபமாயிராநின்றது; [1] ஆகையாலே, இதற்கு ஒரு கருத்தாவேணும்; [2] இந்த உலகந்தான் விசித்திரமான அமைப்பை யுடைத்தாயிருக்கையாலே இதற்குத் தக்க "உபாதாந உபகரண சம்பிரதாந பிரயோஜன அபிஜ்ஞ: கர்த்தா-உபாதானமும் உபகரணமும் சம்பிரதானமும் பிரயோஜனமும் அறிகைக்குத் தகுதியான விசித்திரமான ஞான சக்தி முதலியவைகளையுடையனாய் இருப்பான் ஒருவன் கருத்தாவாகவேணும்" என்கிறபடியே, இங்ஙனே அநுமானத்தாலே ஒருவனைக் கல்பித்து, [3] வேதத்தை ஆப்தவசனமாக்கி இதற்குத் துணைசெய்வதாகக் கொண்டு, அநுமானப் பிராதான்யத்தாலே ஈசுவரனைச் சாதித்து, அவனாகிறான், [4] "ஈசன், ஈசானன்" என்று இங்ஙனே வேதத்திலே பிரசித்தமாகப் பெயர்கள் உண்டாயிராநின்றன; இந்தப் பெயர்களாலே அவற்றால் சொல்லப்படுகிற அவனே ஈசுவரனாகிறான்' என்று அநுமானத்தாலும் சமாக்யைகளாலும் ஆகப் பகவானுக்கு வேறுபட்டவன் ஒருவனுக்கு உயர்

---

சமாக்யைகளாலே உருத்திர காரணத்துவத்தைச் சாதிக்கும் பிரகாரத்தைக் காட்டுகிறார் 'உலகம்' என்று தொடங்கி. 'எது எது அவயவத்தோடு கூடியது, அது அது காரியம்; குடத்தைப்போல' என்கிறபடியே, காரிய ரூபம் உலகம் என்பதற்கு 'உறுப்புக்களோடு கூடியிருக்கை' நியாமகம். என்றது, உலகம், மண் மலைகள் முதலான அவயவத்தோடு கூடியதாய் இருக்கின்றதே அன்றோ என்றபடி.

1. 'ஆகையாலே, இதற்கு ஒரு கருத்தா வேணும்' என்றது, "மண் முதலானவைகள் கருத்தாவையுடையனவாம்; காரியமாயிருக்கையாலே; குடம் போன்று" என்னும் அநுமானத்தை நோக்கி.

2. அந்தக் கர்த்தா முற்றறிவினனாகவேணும் என்று காட்டுகிறார் 'இந்த உலகந்தான்' என்று தொடங்கி. உபாதானம் - முதற்காரணம்; மண். உபகரணம் - துணைக்காரணம்; தண்டம் சக்கர முதலாயின. சம்பிரதானம் - உபயோகம். பிரயோஜனம் - தண்ணீர் எடுத்தல் முதலாயின.

3. இப்படி அநுமானத்தாலே சாதிப்பது எதற்காக? இயல்பாகவே பிரமாணமாக அமைந்த வேதம் இருக்கிறதே? என்ன, 'வேதத்தை' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார். ஆப்த வசனமாக்கி - ஈசுவரனாலே சொல்லப்பட்டதாக்கி.

4. "ஈஶ: சர்வஸ்ய ஜகத: பிரபு: பிரீணாதி" "ஈஶான: சர்வவித்யானும் ஈஸ்வரஸ் ஸர்வபூதாநாம்" என்பன போன்றவைகளைத் திருவுள்ளம்பற்றி 'ஈசன் ஈசானன்' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

வினைச் சாதித்தார்கள். அவர்களைப் பார்த்து, ‘நீங்கள் சொல்லு கிற [1]அநுமானம் சுருதியின் முன்பு நேர் நில்லாது; லிங்கத்தின் முன்பு சமாக்யை நேர்நில்லாது’ என்று சுருதி லிங்கங்களாலே அநுமானத்தையும் சமாக்யையையும் தள்ளிப் பகவானுடைய பரத்துவத்தைச் சாதிக்கிறார்.

[2]அது செய்கிற வழிதான் என்? என்னில், [3]“வேதத்தின் முதலிலும் வேதத்தின் முடிவிலும் சொல்லப்படுகிற ஸ்வரமாகிறது, பிரணவம்; உலகத்திலுள்ள எல்லாச் சொற்களும் அதிலே லயம் அடைகின்றன; அந்தப் பிரணவந்தான் இயல்பிலே அமைந்த அகாரத்திலே லயம் அடைகின்றது; அந்த அகாரத்துக்குப் பொருளாக இருப்பதனாலே பரனாயிருக்கிறான் யாவன் ஒருவன் அவன் மஹேஸ்வரன்” என்று

---

1. “சுருதி லிங்க வாக்ய பிரகரண ஸ்தான சமாக்யானாம் சமவாயே பார தௌர்பல்யம் அர்த்த விப்ரகர்ஷாத்” என்கிற நியாயத்தின்படி, பூர்வ பூர்வ பிராபல்யமும், உத்தர உத்தர தௌர்பல்யமும் சொல்லுகையாலே, முன்னே சொல்லப்பட்ட சுருதியின் முன்பு அநுமானம் நேர் நில்லாது; ஈற்றில் சொல்லப்பட்ட சமாக்யையும் லிங்கத்தின் முன் நேர் நில்லாது என்றபடி. சமாக்யை - பெயர். லிங்கம் - அர்த்தசாமர்த்தியம். லிங்கம் என்பதும், அநுமானம் என்பதும் பரியாயம்.

2. “நாயகன் அவனே” என்கையாலே, சுருதிப் பிரசித்தி. “கபால நன்மோக்கம்” என்கையாலே, லிங்கம். இவ்விரண்டனையும் விரித்துப் பேசுவதற்காக, தத் ஜிஜ்ஞாஸா பிரஸ்நத்தை அநுவதிக்கிறார் ‘அது செய்கிற வழிதான் என்? என்னில்,’ என்று. அது செய்கிற வழி - சுருதி லிங்கங்களாலே அநுமான சமாக்யைகளைத் தள்ளி, பகவானுடைய பரத்துவத்தைச் சாதிக்கிற வழி.

3. சுருதியை நோக்குமிடத்து அநுமானத்திற்குப் பலம் இல்லாத தன்மையை விரித்துப் பேசுகிறார் ‘வேதத்தின் முதலிலும்’ என்று தொடங்கி.

“யத்வேதாதௌ ஸ்வரః ப்ரோக்தோ வேதாந்தேச பிரதிஷ்டிதః
தஸ்ய ப்ரக்ருதி லீநஸ்ய யః பரஸ்ஸ மஹேஸ்வரః”

என்பது, தைத்திரீய நாராயண உப. 6 : 10.

ஆதி யந்தம் அரியென யாவையும்
ஓதி னாரல கில்லன உள்ளன
வேத மென்பன மெய்ந்நெறி நன்மையன்
பாத மல்லது பற்றிலர் பற்றிலார்.

ஓமெனும் ஓரெழுத் ததனி னுள்ளுயிர்
ஆமவன் அறிவினுக் கறிவு மாயினான்
தாமமும் உலகமும் தழுவிச் சார்தலால்
நாமமுங் கனலும் போல் தொடர்ந்த தோற்றத்தான்.

என்றார் கம்பநாட்டாழ்வார்.

நன்று; மஹேஸ்வரன் என்ற சொல், சர்வேசுவரனைக் காட்டும் என்பதற்கு நியாமகம் ஏது? எனின், அந்த மஹேஸ்வரனை அகாரவாச்யனாகச் சொல்லுகையாலே, “அக்ஷராணாம் அகாரோஸ்மி” என்றும், “அகாரோ விஷ்ணு வாசகః” என்றும், “அ இதி பிரஹ்ம” என்றும், அகாரவாச்யன்

கூறுகின்ற சுருதியாலும், [1] "ஈசன், ஈசானன்" என்கிற பெயர்களால் தோற்றுகிறவர்களும் தலையறுப்புண்பாரும் தலையறுத்துப் பாவமுடையராய் நிற்பாருமாய் இராநின்றார்கள்; இவன் அவர்களுக்குத் துக்கத்தைப் போக்குமவனாய் இராநின்றான்; ஆனால், அவர்களைப் 'பரன்' என்னவோ? இவனைப் 'பரன்' என்னவோ? என்ற லிங்கத்தாலுமாக அநுமானத்தையும் சமாக்யையையும் தள்ளிப் பகவானுடைய பரத்துவத்தை நிலையிடுகிறார்.

ஆக, இப்படிகளாலே, எல்லா உபநிடதங்களாலும் பிரசித்தமாகச் சொல்லப்படுகின்றவனான **நாராயணனே பரம்பொருள்** என்று அறுதியிட்டு, [2] காலாத்யயாபதிஷ்டமாகிற தூஷணத்தாலே அவர்களை மறுக்கிறார்.

பேச நின்ற சிவனுக்கும் - [3] 'நீர் சுருதி சொன்னீராகில் நாங்களும் ஒரு சுருதி சொல்லுகிறோம்' என்று 'அநந்யபரமான நாராயண அநுவாக சித்தன்' என்று நான் சொன்னால், அதற்கு மாறாக, புறம்பே உபயோகிக்கப்பட்டதாய் கர்மவிதி சேஷமாயிருப்பன சில புனைந்துரைகளாலும் தாமச புராணங்களாலும் சொல்லலாம்படி முட்டுப்பொறுத்து நின்ற சிவனுக்

---

விஷ்ணுவாகச் சொல்லப்படுகையாலே, இங்கு அகாரவாச்யனான மஹேச்வரன் சர்வேசுவரனேயாவன் என்பது சித்தம். தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் கருத்தும் இதுவே என்பதனைத் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் 46-ஆம் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையாலும் உணர்தல் தகும்.

1. இலிங்கத்தாலே சமாக்யையைத் தள்ளுகிறார் 'ஈசன் ஈசானன்' என்று தொடங்கி. தலையறுப்புண்பார் - பிரமன். தலையறுத்துப் பாவமுடையராய் நிற்பார் - சிவன்.

2. காலாத்யயாபதிஷ்டம் என்னும் தூஷணமாவது, பிரபல பிரமாணத்தாலே பாதிக்கப்படுகின்ற தூஷணம். அதாவது, நெருப்பு குளிர்ந்த தன்மையுடையது, பொருளாக இருக்கையால்; தண்ணீர் போன்று என்ற அநுமானத்தில், நெருப்பினுடைய உஷ்ணத்தை அறிகின்ற பிரத்யக்ஷத்தால் உஷ்ணம் இன்மையாகிய சாத்தியம் பாதிக்கப்படுதல் போல்வன. தூஷணம் - தோஷத்தையுடையது.

3. "பேசநின்ற" என்றது, போலிப் பிரமாணங்களாலே பேச நின்ற என்னுதல்; உங்களாலே பேசும்படி நின்ற என்னுதல். பேச நிற்கையை வெளியிடுகிறார் 'நீர் சுருதி சொன்னீராகில்' என்று தொடங்கி. 'கர்மவிதி சேஷமாயிருப்பன சில புனைந்துரைகள்' என்றது, ஒரு பலத்தின் பொருட்டு ஒரு கர்மத்தை விதித்து, அக் கர்மத்திற்குரிய அதிதெய்வங்களைப் புனைந்துரைகளால் துதிப்பது.

கும். அன்றிக்கே, நீங்கள் 'பரன்' என்று பேசும்படி நின்ற சிவனுக்கும் என்னவுமாம். அர்த்தம் முட்டப் பொருது; பேசுகைக்குப் பற்றுக்கோடு மாத்திரமே யுள்ளது என்பார் 'நின்ற' என்கிறார். [1]மற்றையோரை 'ஈசுவரர்கள்' என்னாதே இவனைச் சொல்லலாம்படி இருக்கிறது ஓர் ஏற்றம் உண்டேயன்றோ இவனுக்கு. பிரமன் தனக்கும் - அவனுக்கும் தமப்பனான பிரமனுக்கும். [2]"பிரமனுக்கு ஜேஷ்டபுத்திரனாகிச் சிறப்பை யடைந்த" என்றும், "பிரமனுக்குப் புத்திரனாகச் சிவன் தோன்றினான்" என்றும் சொல்லப்படுகின்றவனே யன்றோ. [3]"மஹாத்மாவான சிவன் சர்வமேதம் என்னும் யாகத்தில் ஆத்மாவை ஓமஞ்செய்து தேவ தேவனாக ஆனார்" என்கிறபடியே, சிவனுடைய ஈசுவரத்வம் பகவானுடைய திருவருளாலே வந்தது. பிறர்க்கும் - [4]இவர்தம் திருவுள்ளத்தால் அவர்களோடு இவர்களோடு வாசி யற்று இருக்கிறபடி. அவர்கள்

---

1. பேசுதற்குப் பற்றுக் கோடாயிருக்குந் தன்மை மற்றையோர்க்கும் இல்லையோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மற்றையோரை' என்று தொடங்கி. சொல்லலாம்படி - அறிவில்லாத மக்களுக்குச் சொல்லலாம்படி. இவனுக்கு - சிவபிரானுக்கு.

2. பிரமனுடைய புத்திரன் சிவன் என்பதற்குப் பிரமாணம், 'பிரமனுக்கு ஜேஷ்ட புத்திரனாகி' என்று தொடங்குவது. இது, சாமவேதம்.

நான்முகனை நாரா யணன்படைத்தான் நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான் - யான்முகமாய்
அந்தாதி மேலிட்டு அறிவித்தேன் ஆழ்பொருளைச்
சிந்தாமற் கொண்மின்நீர் தேர்ந்து.

என்பது, நான்முகன் திருவந்தாதி.

3. பிரமனுக்குப் புத்திரனாயின் இவனுக்கு ஈசுவரத்வம் உண்டானபடி எங்ஙனே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மஹாத்மாவான சிவன்' என்று தொடங்கி.

"மஹாதேவ: ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வா ஆத்மாநம் தேவதேவோ பபூவ
சர்வான் லோகாந் வியாப்ய விஷ்டப்ய கீர்த்யா விராஜதே த்யுதிமான்
[கீர்த்தி வாஸா:"

இது, மஹாபாரதம். ராஜதர்மம்.

4. பிரமன் சிவன் இவர்கட்கு நாயகன் என்றபோதே, பிறர்க்கும் நாயகன் என்பது தானே போதருமே யன்றோ? அங்ஙனமிருக்க, "பிறர்க்கும்" என்று விசேடித்துக் கூறுவான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இவர் தம்' என்று தொடங்கி.

தங்கள் தங்கள் நினைவாலும் அப்படியே யன்றோ? [1] பிரமன் சிவனை நோக்கி "உனக்கும் எனக்கும் அந்த விஷ்ணு அந்தர் யாமியாக இருக்கிறார், மற்றும் எவர்கள் சரீரம் படைத்தவர்கள் என்று பெயர் பெற்றிருக்கின்றார்களோ அவர்கள் எல்லாருக் கும் அந்த விஷ்ணுவானவர் சாக்ஷியாக இருக்கிறார்" என் றானே யன்றோ? நாயகன் அவனே - [2] இக்காரியத்திற்குத் தகுதியான காரணத்தைக் கல்பிக்கிலும் அவனையே கொள்ள வேணும். சுருதிப் பிரசித்தியை நினைத்து 'அவனே' என்கிறார். [3] அநந்ய பரமான நாராயண அநுவாகப் பிரசித்தியையும், "யஃ பரஸ்ஸ மஹேஸ்வரஃ" என்கிற அகாரார்த்தப் பிரசித்தி யையும் நினைக்கிறார்.

[4] இவனையும் ஒக்கச் சொல்லாநிற்க 'அவனே' என்பான் என்? என்னில், '**கபால நன்மோக்கத்துக் கண்டுகொண்மின்**' என்று [5] கையோடே காட்டிக் கொடுக்கிறார். நீங்கள் இப் படிச் சொன்னால் மறுமாற்றம் சொல்லுகைக்கு இது ஒன்று

---

1. அவர்கள் தங்களுடைய எண்ணமும் அங்ஙனம் இருக்குமோ? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரமன், சிவனை நோக்கி' என்று தொடங்கி.

"தவ அந்தராத்மா மமச யேச அந்யே தேஹி ஸம்ஜ்ஞிதாஃ
ஸர்வேஷாம் சாக்ஷிபூதஃ அஸௌ ந க்ராஹ்யஃ கேநசித் க்வசித்"

இது, பாரதம் மோக்ஷதர்மம். 189 : 4.

2. 'இக்காரியத்திற்கு' என்றது, விசித்திரமான பரப்போடு கூடிய உலக உருவமான இக்காரியத்திற்கு என்றபடி.

3. சுருதிப் பிரசித்தியை விளக்குகிறார் 'அநந்ய பரமான' என்று தொடங்கி.

4. 'இவனையும் ஒக்கச் சொல்லா நிற்க' என்றது, "ஸ சிவஃ - அவனே சிவன்" என்றதனைத் திருவுள்ளம்பற்றி. அன்றிக்கே, "ஈசானஸ் ஸர்வ வித்யாநாம் ஈஸ்வரஸ் ஸர்வ பூதாநாம் - எல்லா வித்யைகளுக்கும் ஈசுவரன், எல்லா ஆத்மாக்களுக்கும் ஈசுவரன்" என்று இவனையும் சர்வேசுவரனோடு நாயகனாகச் சொல்லா நிற்க என்னவுமாம்.

5. 'கையோடே காட்டிக் கொடுக்கிறார்' என்பது, ரஸோக்தி. கை ஓடே - கையிலுள்ள ஓட்டினை (கபாலத்தை) என்றும், கைமேலே என்றும் பொருள்.

உண்டாகப்பெற்றேமே! [1] "தத்ர நாராயணஃ ஸ்ரீமாந் - 'தாம் தாம் செய்த கர்மத்தின் பலத்தைத் தாம் தாம் அநுபவிக்கிறார்களாகில் நாம் என்?' என்றிருக்கும் ஈசுவர ஸ்வாதந்தரியம் தலைதூக்காதபடி "குற்றம் செய்யாதார் ஒருவரும் இலர்" என்பாரும் அருகே உண்டு என்கிறான். ஸுஸ்ரோணி - உன் வடிவழகாலே வந்த சௌபாக்கியம் நான் சர்வேசுவரன் பக்கலிலே சென்ற அளவிலே உதவிற்றுக் காண். ஸ்வப்நலப்தம் - அநுபவம் செல்லாநிற்கச் செய்தே விழித்துப் பார்க்குங்காட்டில் இல்லையாயிருந்தது; ஆகையாலே, '**நன் மோக்கம்**' என்கிறது. [2] உங்களுக்கு இப்போது மறுமாற்றம் சொல்லலாம்படியாக இது ஒன்று உண்டாயிற்று என்கிறானாதல்; ஸ்வப்நலப்த தநம் யதா-கனவில் கிடைத்த தனம்போலே போனவழி தெரியாமலே போயிற்று" என்கிறானாதல். நீங்கள் ஈசுவரர்களாகச் சந்தேகப்படுவதற்குரியவர்கள் இருவரும் நின்ற நிலை கண்டீர்களே! ஒருவன் தலை கெட்டு நின்றான், ஒருவன் ஓடு கொண்டு பிராயஶ்சித்தம் செய்யவேண்டியவனாய் நின்றான். ஓட்டை ஓடத்தோடு ஒழுகல் ஓடமாய் உங்கள் குறை தீரப் பற்றுகிற நீங்கள் உங்களிலும் பெருங்குறைவாளரையோ பற்றுவது! 'பாவமுடையவனாய்ப் பிச்சை புக்குத் திரிந்தான்' என்று நீங்களே சொல்லி வைத்து, அவனுக்கே பரத்துவத்தைச் சொல்லவோ? [3] ஒருவனுடைய ஈசுவரத்வம் அவன்

---

1. கபால மோக்கத்திற்குப் பிரமாணம் காட்டுகிறார் "தத்ர" என்று தொடங்கி.

> "தத்ர நாராயணஃ ஸ்ரீமான் மயாபிக்ஷாம் பிரயாசிதஃ
> ததஸ்தேந ஸ்வகம் பார்ஶ்வம் நகாக்ரேண விதாரிதம்
> மஹதீ ஸ்ரவதீ தாரா தஸ்ய ரக்தஸ்ய நிஸ்ஸ்ருதா
> விஷ்ணு பிரஸாதாத் ஸுஸ்ரோணி கபாலம் தத் ஸஹஸ்ரதா
> ஸ்புடிதம் பஹுதா யாதம் ஸ்வப்நலப்தம் தனம்யதா"

என்பது மாத்ஸ புராணம்.

"ஸ்ரீமாந்" என்ற பதத்திற்கு பாவம், 'தாம் தாம் செய்த' என்று தொடங்குவது. "குற்றம் செய்யாதார்" என்பது, ஸ்ரீராமா யுத். 116 : 45.

'உன் வடிவழகாலே வந்த சௌபாக்கியம் நான் சர்வேசுவரன் பக்கலிலே சென்ற அளவிலே உதவிற்றுக் காண்' என்றது, சிவன், தன் மனைவியாகிய பார்வதியைப் பார்த்துக் கூறியது. மனைவியின் தன்மையால் தனக்கு நன்மை கிடைத்ததைத் தெரிவித்தபடி.

2. "நல்" என்ற அடைமொழிக்கு, மேலும் விசேடவுரை அருளிச்செய்கிறார் 'உங்களுக்கு இப்போது' என்று தொடங்கி.

3. "கண்டு கொண்மின்" என்பதற்கு, அவதாரிகை அருளிச்செய்கிறார் 'ஒருவனுடைய' என்று தொடங்கி.

தலையோடே போயிற்று. மற்றவனுடைய ஈசுவரத்வம் அவன் கையோடே காட்டிக் கொடுக்கிறார்; கண்டு கொண்மின் - முன்னே நின்று பிதற்றாமல், உம் தம் ஆகமங்களிலே நீங்கள் எழுதியிட்டு வைத்த கிரந்தங்களைப் பார்த்துக்கொள்ள மாட்டீர்களோ? என்கிறார்.

தேச மா மதிள் சூழ்ந்து அழகாய-பகைவர்களுக்குக் கிட்டுதற்கும் முடியாத ஒளியையுடைத்தாய், அரணாகப் போரும்படியான மதிளையுடைத்தாய், காட்சிக்கு இனியதாயிருக்கிற. திருக் குருகூரதனுள் ஈசன்பால் - விட்டுப் பிரியாத சுவபாவத்தை யுடையவனாகையாலே, [1]சௌலப்யத்திலே அந்த மேன்மை குலையாதிருக்கிற "யஃ பரஸ்ஸ மஹேஸ்வரஃ" என்கிற சர்வேசுவரன் பக்கலிலே. [2]மேலே நாராயண சப்தார்த்தத்தைச் சொல்லிவைத்து, அகாரத்தின் பொருளாய்ப் பரனானவனையே மஹேஸ்வரன் என்கையாலே, மஹேஸ்வரன் என்ற சொல்லால் சொல்லப்படுகின்ற பொருளானவன் நாராயணனே என்பது சுருதியாலே அறுதியிடப்பட்டிருக்கையாலே, இந்தச் சுருதியாலே உன்னுடைய அநுமானம் தள்ளப்பட்ட விஷயமாகும். 'கண்டு கொண்மின்' என்கிற அர்த்த சாமர்த்தியத்தோடு (லிங்கம்) விரோதித்த சமாக்யை நேர்நில்லாது; ஆகையாலே இவனே பரன் என்கிறார்.

ஓர் அவம் பறைதல் - மற்றுள்ளக்ஷேத்ரஜ்ஞரோடு ஒக்க ஸ்ரீமந் நாராயணனுக்கு ஈசுவரத் தன்மை இல்லை என்பதற்குச் சாதகமாக ஏதேனும் போலி யுக்திகளைச் சொல்லுமது.

---

1. அர்ச்சாவதாரமாகையாலே 'சௌலப்யத்திலே' என்கிறார். 'அந்த மேன்மைகுலையாதிருக்கிற' என்றது, "ஈசன்" என்ற பதத்தைத் திருவுள்ளம்பற்றி.

2. 'மேலே, நாராயண சப்தார்த்தத்தைச் சொல்லிவைத்து' என்றது, தைத்திரீய நாராயண உபநிடதத்தில் "யத்வேதாதௌ" என்று தொடங்கும் வாக்கியத்திற்கு மேலே, "யத: பிரஸூதா ஜகத: பிரஸூதீ" என்றும், "சர்வேநிமேஷா ஜஜ்ஞிரே வித்யுதஃ புருஷாததி" என்றும், "யமந்தஸ் ஸமுத்ரே கவயோவயந்தி" என்றும், "நதஸ்ய ஈஸேகச்சந" என்றும், வருகின்ற வாக்கியங்களாலே காரணனாயிருத்தல், கடலில் சயனித்திருத்தல், நியமிக்கின்றவனாயிருத்தல் ஆகிற நாராயண சப்தார்த்தத்தைச் சொல்லிவைத்து என்றபடி. மேற்கூறிய மூன்று பொருள்களும் நாராயணன் என்ற திருப்பெயருக்குரிய பொருள்களாதலைத் தெள்ளியார்பால் கேட்டுத் தெளிதல் தகும்.

[1]அவற்றைத் தம்வாயால் சொல்ல மாட்டாமையாலே, "அவம்" என்கிறார். தங்கள் கூட்டத்தில் ரஹஸ்யமாகச் சொல்லுமது ஒழிய எல்லாரும் அறியச் சொல்லுதல் இல்லையாதலின், 'பறைதல்' என்கிறார். [2]மஹாபலி, ஸ்ரீ பிரஹ்லாதாழ்வான் பக்கலிலே வந்து "ராஜ்யமடைய ஒளி மழுங்கி வாராநின்றது; என் பலமும் குறைந்து வாராநின்றது; இதற்கு அடி என்?" என்ன, 'நீ சர்வேசுவரன் பக்கல் பண்ணின அபராதத்தாலே காண்' என்ன, "இந்த விஷ்ணு எவன்" என்பது போன்ற விருப்பு இல்லாத வார்த்தைகள் சிலவற்றைப் பேச, "எனது தலையை அறுப்பதைக் காட்டிலும் பெரிது இந்த வார்த்தை" என்கிறபடியே, என் தலையை யறுத்து என் கையிலே தந்தா யாகில் 'என் பேரன் செய்த உபகாரம்' என்று இருப்பேன் யான்; "என் முன்பே பகவானை நிந்தை செய்தாய், நீ ராஜ்யப் பிரஷ்டனாவாய்" என்று சபித்துவிட்டான்; [3]இதனை இப் படியே பட்டர் அருளிச்செய்தவாறே, 'பிரகிருதி புருஷ விவே கம் பண்ணியிருக்கிற இவன் ஆத்மாவுக்குக் குறைவு வரு வது ஒன்றனைச் சபியாமல் "ராஜ்யத்திலிருந்து நழுவினவனாய் விழுவாயாக" என்று சபிப்பான் என்? என்று கேட்க, 'நாயைத்தண்டிக்கையாவது,மலத்தை விலக்குகையேயன்றோ, சாந்தை விலக்குகை அதற்கு விருப்பம் இல்லாதது அன்றே? ஆகையால், இவனுக்கு அநிஷ்டம் செய்கையாவது இதுவே யன்றோ?' என்று அருளிச்செய்தார். இலிங்கியர்க்கு என் ஆவது - அநுமானத்தைப் பிரமாணமாகக் கொண்டவர்க்கு

---

1. 'அவற்றைத் தம் வாயால் சொல்லமாட்டாமையாலே, "அவம்" என்கிறார்' என்னு மிவ்விடத்தில்,

அரசன் அன்னவை புரைசெய மறையவன் அஞ்சிச்
சிரத லங்கரஞ் சேர்த்திடச் செவித்தொளை சேர்த்த
உரகம் அன்னசொல் யான் உனக் குரைசெயி னுரவோய்!
நரக மெய்துவன் நாவும் வெந் திடுமென நவின்றான்.

என்ற கம்பராமாயணச் செய்யுள் நினைவிற்கு வருகின்றது. (இரணியன் வ. 37.)

2. தம் வாயால் சொல்லப் போகாமைக்குக் காரணம் அதில் உண்டான அலைவுபாதை என்று கூறத் திருவுள்ளம்பற்றி அதற்குப் பிரமாணம் காட்டு கிறார் 'மஹாபலி' என்று தொடங்கி.

3. இடைப் பிறவரல் (பிராசங்கிகம்) ஆக அருளிச்செய்கிறார் 'இதனை இப்படியே' என்று தொடங்கி.

என்ன பிரயோஜனம் உண்டு? என்றது, அந்தத் தேவதைக்கு ஓர் உயர்வு பெற்றிகோள் அன்று; அத்தேவதையைப் பற்றிய தற்கு ஒரு பலம் பெற்றிகோள் அன்று; இதனால், உங்களுக்கு ஓர் உயர்வு பெற்றிகோள் அன்று; என்றிய பட்டிகோள் என்கிறார் என்றபடி. (4)

## 436.

இலிங்கத் திட்ட புராணத் தீரும் சமணரும் சாக்கியரும்
வலிந்து வாதுசெய் வீர்களும் மற்றுநும் தெய்வமு மாகிநின்றான்
மலிந்து செந்நெல் கவரி வீசும் திருக்குரு கூரதனுள்
பொலிந்துநின்றபிரான்கண்டீர் ஒன்றும் பொய்யில்லை போற்றுமினே.

பொ - ரை:—இலிங்க புராணத்தைப் பிரமாணமாகவுடைய நீங்களும் சமணர்களும் பௌத்தர்களும் மேலும் மேலிட்டு வாதுசெய்கின்றவர்களான வைசேடிகர்களான நீங்களும், நீங்கள் வணங்குகின்ற தெய்வங்களும் ஆகி நிற்கின்றவன், செந்நெற்பயிர்கள் மிக ஓங்கி வளர்ந்து கவரியைப்போல வீசுகின்ற திருக்குருகூர் என்னும் திவ்விய தேசத்தில் எல்லாக் குணங்களோடும் பொலிந்து நின்ற திருக்கோலமாய் எழுந்தருளியிருக்கின்ற பிரானே யாவன்; ஆதலால், யான் கூறுகின்றவை சிறிதும் பொய்யில்லை; அவனையே துதிசெய்யுங்கோள் என்கிறார் என்றவாறு.

வி - கு:—இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும் மற்றும் வலிந்து வாது செய்வீர்களும் ஆகி நின்றவன், நும் தெய்வமும் ஆகி நின்றான்; அவன் யார்? எனின், பொலிந்து நின்ற பிரான் கண்டீர் என்க. நின்றான்: வினையாலணையும் பெயர். பொலிந்து நின்ற பிரான் ஆகி நின்றான் என முடிக்கவுமாம்.

ஈடு:—ஐந்தாம்பாட்டு. [1] இலிங்கபுராணம் தொடக்கமான குத்ருஷ்டி ஸ்மிருதிகளையும், வேதத்திற்குப் புறம்பான ஸ்மிருதிகளையும் பிரமாணமாகக் கொண்டு வந்தவர்களை விலக்குகிறார்.

---

1. மேல் திருப்பாசுரத்தில் அநுமானத்தைப் பிரமாணமாகக் கொண்டு வந்தவர்களைத் தள்ளினார். ஆகமத்தைப் பிரமாணமாகக் கொண்டு வந்தவர்களைத் தள்ளுகிறார் இத்திருப்பாசுரத்தில். முதல் இரண்டு அடிகளையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'புறம்பான ஸ்மிருதிகள்' என்றது, ஜைந சார்வாக பௌத்தாதி ஸ்மிருதிகளை.

இலிங்கத்திட்ட புராணத்திரும்-இலிங்க விஷயமாக இடப்பட்ட புராணத்தையுடைய நீங்களும். [1] சாத்துவிகபுராணங்களைக் காட்டிலும் இராஜஸமாயும் தாமஸமாயுமுள்ளபுராணங்களுக்கு வேற்றுமை இதுவாயிற்று. [2] அவற்றை நிச்சயம் பண்ணுதல் அந்த அந்தப் புராணங்களினுடைய தொடக்கத்திலே காணலாயிருக்கும்; [3] "ஓ பிராமணோத்தமரே! இந்த உலகமானது எதனை ஆத்மாவாக வுடையது, இந்தச் சராசரங்கள் எங்கிருந்து உண்டாயின, எப்படி எங்கே லயத்தை அடைந்தன, எங்கு லயத்தை அடையப் போகின்றன?" என்று பொதுவிலே வினவ, [4] "உலகமெல்லாம் விஷ்ணுவின் சமீபத்தில் நின்றும் உண்டாயின, அந்த விஷ்ணுவினிடத்திலேயே லயப்படுகின்றன, அந்த விஷ்ணுவே இந்த உலகங்கட்கெல்லாம் வாழ்வையும் சாவையும் கொடுப்பவர், அந்த விஷ்ணுவே அந்தர்யாமியாகவும் உலகமே உருவமாயும் காணப்படுகின்றார்" என்று கொண்டு [5] கோல்விழுக்காட்டாலே சமாதானமாயிருத்தல் அன்றிக்கே, [6] ஒரு பொருளைக் குறித்

---

1. "இலிங்கத்து இட்ட புராணத்தீர்" என்று விசேடிக்கையாலே, இராஜஸ தாமச புராணங்களினுடைய பக்ஷபாதித்வமும், சாத்துவிக புராணங்களினுடைய அபக்ஷபாதித்வமும் தோற்றுகிறது என்கிறார் 'சாத்துவிக புராணங்களை' என்று தொடங்கி. 'வேற்றுமை இதுவாயிற்று' என்றது, இலிங்க விஷயமாகக் கற்பித்துச் சொன்னது ஆகையாலே, நிகர்ஷமே வேற்றுமை என்றபடி. நிகர்ஷம் - தாழ்வு.

2. இவர் அருளிச்செய்த நிகர்ஷம் அறியும்படி எப்படி? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அவற்றை நிச்சயம் பண்ணுதல்' என்று தொடங்கி.

3. தொடக்கத்திலே காணலாயிருக்கும் பிரகாரத்தை அருளிச்செய்கிறார் 'ஓ பிராமணோத்தமரே!' என்று தொடங்கி.

"யந்மயஞ்ச ஜகத் பிரஹ்மன் யதஶ்சைதச் சராசரம்
லீநம் ஆஸீத் யதா யத்ர லயமேஷ்யதி யத்ரச"

என்பது விஷ்ணுபுராணம். 1. 1: 6.

4. "விஷ்ணோ꞉ ஸகாஶாத் உத்பூதம் ஜகத் தத்ரைவச ஸ்திதம்
ஸ்திதிஸம்யம கர்த்தாஸௌ ஜகதோஸ்ய ஜகச்ச ஸ꞉"

என்பது விஷ்ணு புரா. 1. 1: 32.

5. கோல்விழுக்காட்டாலே-தெய்வாதீனமாக. அல்லது, இயல்பாகவே.

6. 'ஒருபொருளை' என்றது, சிவலிங்கத்தை.

"தஸ்மாத் பவந்தம் பிருச்சாம꞉ ஸூதபௌராணிகாத்யது
புராண ஸம்ஹிதாம் புண்யாம் லிங்க மாகாத்மிய ஸம்புதாம்"

என்ற சுலோகம் இங்கு அநுசந்தேயம். இலிங்க மாஹாத்மியத்தோடு கூடிய ஒரு புராண சம்ஹிதையை இப்பொழுது செய்து தரும்படி, ஸூத பௌராணிகர் சொல்லிய நாங்கள் உங்களைக் கேட்கிறோம் என்பது அச் சுலோகத்தின் பிண்டப் பொருள்.

துச் சொல்லி 'அதற்கு உயர்வினைப் பண்ணித் தரவேணும்'. என்று கேட்டவனும் தமோகுணத்தால் மறைக்கப்பட்டவனை இக் கேட்க, சொன்னவனும் தமோ குணத்தால் மறைக்கப் பட்டவனைச் சொல்ல, ஓர் இலிங்க விஷயமாக இடப்பட்ட புராணமாகும் அது. [1] 'இளி கண்ணனைப் புண்டரீகாக்ஷனாகக் கவிபாடித் தரவேணும்' என்றும், 'எருமையை யானையாகக் கவிபாடித் தரவேணும்' என்றும் சொல்ல, அப்படியே, கவி பாடுவாரைப்போலே இருப்பது ஒன்றே யன்றோ, அவர் களுக்கு இல்லாத உயர்வுகளை இட்டுச் சொல்லுமது? [2] தான் சொல்லப் புக்க பொருளுக்கு உயர்வினைச் சாதிக்கமாட்டா மல், மற்றுள்ளவற்றினுடைய உயர்வினைக் கழிக்கமாட்டாதே இருப்பது ஒன்றாயிற்று அது. சமணரும் - சைனர்களும். சாக்கியரும் - பௌத்தர்களும். மற்றும் வலிந்து வாதுசெய்வீர் களும் - [3] மிக உயர்ந்ததான பிரமாணத்தை அங்கீகரித்துக் கொண்டு நின்று பிரமாணங்களுக்கு அநுகூலமான தர்க்கங் களை ஒழியக் கேவல தர்க்கங்களைக் கொண்டு அர்த்தத்தைச் சாதிக்கப் பார்க்கும் புறச் சமயத்தாரில் எஞ்சியவர்களும். [4] "எவை, வேதத்திற்குப் புறம்பான ஸ்ம்ருதிகள்; யாவை சில, குத்ருஷ்டி ஸ்ம்ருதிகள்; அவையாவும் மறுமை இம்மைகட்குப் பயனற்றவை; அவை தமோகுணமுடையவைகள்" என்கிற படியே, தமோகுணமுடையராயிருக்கை எல்லார்க்கும் ஒத் ததேயன்றோ; ஆகையாலே, புறச் சமயத்தாரையும் குத்ருஷ்டி

1. இதனால், சொன்னவனுடைய அறிவின்மையே வெளிப்படுமித்தனை போக்கி, பரத்துவத்திற்குச் சாதகம் ஆகமாட்டாது என்னுமதனைப் பரிஹாஸ மாக அருளிச்செய்கிறார் 'இளி கண்ணனை' என்று தொடங்கி.

2. அப்படிச் சொல்லுகிறவர்களைப் பரிஹாஸம் செய்வான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'தான் சொல்லப் புக்க' என்று தொடங்கி.

3. "வலிந்து வாது செய்வீர்களும்" என்றதனால், கேவல தர்க்கத்தால் ஒழிய, பிரமாணத்தாலும் பிரமாணத்திற்கு அநுகூலமான தர்க்கத்தாலும் சாதியார் என்பது போதருகின்றது; ஆகையாலே, அதனை அருளிச்செய்கிறார் 'மிக உயர்ந்ததான' என்று தொடங்கி.

4. ஆயினும், 'வேதம் பிரமாணம்' என்கையாலே, குத்ருஷ்டிகள் புறச் சமயத்தாரைக் காட்டிலும் வேறுபட்டவர்கள் அலரோ? பாசுபதராகிற குத்ருஷ்டிகளைப் புறச் சமயத்தாரோடு கூட்டி "இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும்" என்று சொல்லலாமோ? எனின், அதற்கு விடை அருளிச்செய் கிறார் 'எவை, வேதத்திற்கு' என்று தொடங்கி. இது, மனுதர்மசாஸ்திரம்.

களையும் ஒருசேரச் சொல்லுகிறார். நும் தெய்வமும் ஆகி நின்றான் - [1]உங்களோடு நீங்கள் பற்றுகின்ற தேவர்களோடு வேற்றுமையற ஆத்மாவாக நின்றான். என்றது, நீங்கள் அவ் வத் தெய்வங்கட்கு உயர்வுகளைச் சொல்லும்போது பகவா னுடைய பரத்துவத்தை அங்கீகரித்துக்கொண்டு நின்று சொல்லவேணும். அதற்கு அடி என்? என்னில், அவ்வத் தெய் வங்களினுடைய சொரூபம் நிலைபெறுதல் முதலானவைகள் அவன் அதீனமாயிருக்கையாலே என்பதனைத் தெரிவித்த படி.

இனித்தான் மதங்கள் தோறும், [2]'முற்றறிவினன்' 'ஈசுவரன்' என்றாற்போலே ஒவ்வொரு தெய்வமும் கொள்ளக் கூடியதாய் இருக்குமே யன்றோ? 'அவ்வத்தெய்வங்களுடைய சொரூபம் ஸ்திதி முதலானவைகள் அவன் அதீனம்' என்ற இது, சுபக்கத்தாலே சொல்லுகிறதோ? பரபக்கத்தாலே சொல்லுகிறதோ? என்னில், இரண்டும் ஒழியப் பிரமாணங் களின் போக்கினாலே சொல்லுகிறது. எங்ஙனே? என்னில், [3]ஒருதேவதைபக்கலிலே மக்கள் செயலுக்கு அப்பாற்பட்டதா யிருப்பதொரு செயலைக் கண்டு 'இதற்கு அடி என்?' என்ன, [4]"அளவிடற்கரிய ஒளியையுடையவனும் பூஜிக்கத் தக்கவனு மான சிவனுக்கு விஷ்ணு அந்தராத்மாவாய் இருக்கின்றார்" என்கிறபடியே, சர்வேசுவரன் அந்தராத்மாவாய் நிற்கை

---

1. "ஆகி நின்றான்" என்கிற சாமாநாதிகரண்யம், சரீர ஆத்ம பாவ நிபந்தனம் என்கிறார் 'உங்களோடு' என்று தொடங்கி.

2. 'முற்றறிவினன்' என்பது, பௌத்தர்கள்; 'ஈசுவரன்' என்பது: சைவர்கள்.

3. ஒருதேவதை - சிவன். மக்கள் செயலுக்கு அப்பாற்பட்ட செயல் - திரிபுரதகனம்.

4. "விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்ய அமித தேஜஸ:
தஸ்மாத் தநுர்ஜ்யா ஸம்ஸ்பர்ஸம் ஸ விஷேஹே மஹேஸ்வர:"
என்பது மஹாபாரதம் கர்ணபர்வம்.

"பணிவில்சீர்ச்
செல்விடைப் பாகன் திரிபுரம் செற்றுழிக்
கல்லுயர் சென்னி இமயவில் நாணாகித்
தொல்புகழ் தந்தாரும் தாம்"

என்பது பரிபாடல்.

யாலே என்றதே யன்றோ? [1] சர்வேசுவரன் தன் சர்வாத்ம பாவத்தைச் சொல்லுமாறுபோன்று, சிவன், அதர்வ சிரஸ்ஸிலே நின்று, [2] தன் படிகளைச் சொல்லி, 'அவன்தானே இங்ஙனம் சொல்லுகைக்கு அடி என்?' என்று ஐயங்கொண்டு [3] "ஸঃ அந்தராத் அந்தரம் பிராவிசத்" என்கிற படியே, பரமாத்ம பிரவேசத்தாலே சொன்னேன் என்றானே யன்றோ? [4] "என்னிடத்திலிருந்து எல்லா உலகங்களும் உண்டாகின்றன, அநாதியான என்னிடத்தில் எல்லாம் லயம் அடைகின்றன, யானே எல்லாப் பொருள்களுமாக இருக்கிறேன், யானே அழிவில்லாதவனும் முடிவில்லாதவனும் ஆகிறேன், பரமாத்மாவை ஆத்மாவாகப் பெற்றுள்ளேன்" என்றானே அன்றோ பிரஹ்லாதாழ்வான். [5] பிரஹ்லாதாழ்வான் பக்கல்

---

1. 'சர்வேசுவரன், தன் சர்வாத்ம பாவத்தைச் சொல்லுமாறு போன்று' என்றது, ஸ்ரீ கீதையில் பத்தாவது அத்தியாயத்தில் 20-முதல் 42-முடிய உள்ள சுலோகங்களைத் திருவுள்ளம்பற்றி.

2. 'தன்படிகளைச் சொல்லி' என்றது, "அஹம் ஏகঃ பிரதமம் ஆஸம் வர்த்தாமிச பவிஷ்யாமிச நாந்யঃ கச்சின் மத்தோ வியதிரிக்த இதி" (அதர்வசிகை) என்ற வாக்கியங்களைத் திருவுள்ளம்பற்றி.

3. "ஸঃ அந்தராத் அந்தரம் பிராவிசத்" இது, அதர்வசிகை.

ஸঃ—அந்தச் சிவபிரான், அந்தராத் - தேக இந்திரியங்களைக் காட்டிலும் உள்ளே இருக்கிற ஜீவாத்மாவாகிற தன்னினின்றும் அந்தரம் - பரமாத்மாவை, பிராவிசத் - அடைந்தார். என்றது, சிவபிரான் பரமாத்ம பாவத்தை அடைந்தார் என்பது கருத்து. அன்றிக்கே, ஸঃ-அந்தப் பரமாத்மா, அந்தராத் - தேக இந்திரியங்களைக் காட்டிலும் உள்ளே இருக்கின்ற ஜீவாத்மாவின், அந்தரம் - உள்ளே, பிராவிசத் - பிரவேசித்தார் என்னவுமாம். என்றது, பரமாத்மா சிவபிரான் உள்ளே பிரவேசித்தார்; ஆதலால், பரமாத்ம பாவத்தைச் சிவன் அடைந்தார் என்பது கருத்து.

4. பரமாத்ம பிரவேசத்தாலே இப்படிச் சொன்ன பேர் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'என்னிடத்திலிருந்து' என்று தொடங்கி.

"மத்தஸ் ஸர்வம் அஹம் சர்வம் மயிசர்வம் சநாதநே
அஹமேவ அவ்யயঃ அநந்தঃ பரமாத்ம ஆத்ம ஸம்ச்ரயঃ

என்பது, விஷ்ணு புராணம். 1. 19: 95.

"கடல் ஞாலம் உண்டேனும் யானே என்னும்"

என்ற திருவாய்மொழி இங்கு அநுசந்தேயம்.

5. பிரஹ்லாதாழ்வானைத் திருஷ்டாந்தமாகச் சொன்னதற்குக் கருத்து என்? எனின், அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பிரஹ்லாதாழ்வான் பக்கல்' என்று தொடங்கி,

பரத்துவம் உண்டாமன்றாயிற்று, சிவன் பக்கல் பரத்துவம் உள்ளது.

மலிந்து செந்நெல் கவரி வீசும் திருக்குருகூரதனுள் - செந்நெற்பயிர்கள் கதிர்களின் கனத்தாலே அவ்வருகுக்கு இவ்வருகு அசைகிறபோது சாமரை வீசினாற்போலேயாயிற்று இருப்பது. என்றது, இப்படி எல்லாப்பொருள்கட்கும் அந்த ராத்மாவாய் இருக்கிற சர்வேசுவரன் 'தூரத்திலுள்ளான்' என்ற கண்ணழிவும் இல்லாதபடி திருநகரியிலே வந்து அண்மையில் இருப்பவன் ஆனான்; எல்லாப் பொருள்கட்கும் பற்றுக் கோடாயிருக்கிற அவன் இங்கே வந்து நிற்கையாலே, சேதன அசேதநங்கள் என்ற வேறுபாடு இல்லாமல், [1]"நீ வனத்தில் வசிப்பதற்காகவே சிருஷ்டிக்கப்பட்டாய்" என்று சொல்லப் பட்ட இளையபெருமாளைப்போன்று அநுகூலமான தொழில் களைச் செய்கிறபடியைத் தெரிவித்தவாறு. பொலிந்து நின்ற பிரான் கண்டீர் - பரமபதத்தை விட்டுச் சம்சாரிகள் நடுவே வந்து புகுந்த இடத்து அவர்கள் படுகின்ற கிலேசத்தைத் தானும் ஒக்கப் படுகை அன்றிக்கே, இவ்வருகே போதரப் போதரச் சொரூப ரூப குண விபூதிகள் மேன்மேலென விஞ்சி வாரா நின்றனவாயிற்று. அன்றிக்கே, சொன்னார் சொன்ன யுக்திகளுக்கு அவ்வருகாயிருக்கும் என்னுதல். ஒன்றும் பொய் இல்லை - [2]மற்றைத் தேவர்கட்குச் சொல்லுகிற உயர்வுகள் ஒன்று ஒழியாமல் பொய்யாய் இருக்குமாறுபோலே, பகவான் சம்பந்தமாகச் சொல்லுமவற்றில் ஒன்றும் பொய்யில்லை. [3]அவ்வத் தேவர்கட்கு இயல்பிலே உயர்வு இல்லாமையாலே

1. ஸ்ரீராமா. அயோத். 40 : 5. செந்நெலைக் கூறியது, அசேதனங் களுக்கெல்லாம் உபலக்ஷணம். "கவரி வீசும்" என்றது, அநுகூலமான தொழில்களுக்கெல்லாம் உபலக்ஷணம். இளையபெருமாளைத் திருஷ்டாந்த மாகக் கூறியது, "சத்ர சாமர பாணிஸ்து" (ஸ்ரீராமாயணம்) என்று சொல் லப்பட்டவராகையாலே.

2. 'மற்றைத் தேவர்கட்கு' என்று தொடங்கும் வாக்கியப் பொரு ளோடு "இறைமைக் குணங்கள் இலராயினாரை உடையர் எனக் கருதி அறிவிலர் கூறுகிற புகழ்கள் பொருள்சேரா ஆகலின், அவை முற்றுமுடைய இறைவன் புகழே 'பொருள்சேர் புகழ்' எனப்பட்டது" என்ற பரிமேலழகர் உரையை ஒப்பு நோக்குக. (திருக்குறள். 5.)

3. மற்றைத் தேவர்கட்குச் சொல்லும் உயர்வுகள் பொய்யாயிருப்ப தற்கும், பகவான் விஷயத்தில் பொய்யில்லாமைக்கும் அடி எது? என்ன, 'அவ்வத்தேவர்கட்கு' என்றுதொடங்கி அதற்கு விடைஅருளிச்செய்கிறார்.

மெய் ஒன்றும் இல்லை; பகவானுடைய உயர்வுக்கு எல்லை இல்லாமையாலே பொய் சொல்லுகைக்கு இடம் இல்லை. போற்றுமினே - [1] நீங்கள் விரும்பாதிருக்க, நானே இப்படிச் சொல்லுகிறது, எனக்கு உங்கள் பக்கல் உண்டான "அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே" என்கிறபடியே, மிக்க அருளாலே யன்றோ? அவ்வருளின் காரியம் பிறக்க வேணுமே; [2] 'கிரமத்திலே செய்கிறோம்' என்று ஆறியிராமல், சடக்கென அவன் திருவடிகளிலே அடைவதற்குப் பாருங் கோள். (5)

437.

போற்றி மற்றோர் தெய்வம் பேணப் புறத்திட்டு உம்மைஇன்னே
தேற்றி வைத்தது எல்லீரும் வீடுபெற் றால்உல கில்லைஎன்றே
சேற்றில் செந்நெல் கமலம் ஓங்கும் திருக்குரு கூரதனுள்
ஆற்ற வல்லவன் மாயங் கண்டீர் அதறிந் தறிந் தோடுமினே.

பொ - ரை :—வேறு ஒரு தெய்வத்தைத் துதித்து ஆதரிக்கும்படியாகத் தனக்குப் புறம்பாக்கி உங்களை இவ்வகையாகத் தெளியும்படியாகச் செய்துவைத்தது; எல்லோரும் மோக்ஷத்தை அடைந்தால் சாஸ்திர மரியாதை கெட்டுவிடும் என்றே யாம்; சேற்றிலே செந்நெற்பயிர்களும் தாமரைகளும் உயர்ந்து வளர்கின்ற திருக்குருகூர் என்னும் திவ்ய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற மிக்க ஆற்றலோடு கூடிய எம்பெருமானது மாயமாகும் இது; அதனை அறிந்து அறிந்து தப்பிப் பிழைப்பதற்குப் பாருங்கோள்.

வி - கு :—மற்றோர் தெய்வம் போற்றிப் பேண எனக் கூட்டுக. உலகு - சாஸ்திரம். ஆற்றவல்லவன் - இறைவன். கண்டீர் : முன்னிலையசைச்சொல்.

ஈடு :—ஆறாம்பாட்டு. [3] பகவானுடைய பரத்துவத்தை நீர் அருளிச்செய்யக் கேட்டபோது வெளிச்சிறத்து அல்லாத போது வேறு தெய்வங்களிடத்தில் ஈடுபாடு உண்டாகா நின்றது; இதற்கு அடி ஏது? என்ன, உங்கள் பாபம் என்கிறார்.

1. "போற்றுமின்" என்று நீர் சொல்லுமது 'ஆப்தம்' என்று நம்புவதற்குக் காரணம் ஏது? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'நீங்கள் விரும்பாதிருக்க' என்று தொடங்கி.

2. 'கிரமத்திலே' என்று தொடங்கி அருளிச்செய்யும் பொருள், "போற்றுமினே" என்ற ஏகாரத்திலே நோக்கு.

3. "எல்லீரும் வீடு பெற்றால் உலகு இல்லை" என்றதிலே நோக்காக அவதாரிகை அருளிச்செய்கிறார். வெளிச்சிறத்து - ஞானம் உண்டாகி.

[1] எம்பெருமானே சர்வேசுவரனுகில் எங்களை வேறு தெய்வங்களிடத்திலே ஈடுபாடுடையவர்களாக்கி வைப்பான் என்? என்ன, உங்களை இங்ஙனே வைத்தது, 'புண்ணிய பாவங்களைச் செய்த ஆத்மாக்கள் அவ்வவ்வற்றிற்குத் தகுதியான பலன்களை அநுபவிக்கவேண்டும்' என்று கூறுகின்ற சாஸ்திர மரியாதை அழியும் என்று; ஆனபின்னர், அதனையறிந்து எம்பெருமானையே இறுகப் பற்றி அவன் வஞ்சனத்தைத் தப்புங்கோள் என்கிறார்.

போற்றி - [2] நான் பகவத் விஷயத்தில் செய்வன முழுதும் நீங்கள் இதர தேவதைகள் பக்கலிலே செய்து போருகின்றீர்கோள்; உங்கள் பக்கல் ஒரு குறை இல்லை; அடையத்தகாதன வாய் இருத்தல் ஒன்றே குறை. மற்றோர் தெய்வம் - [3] "அருச்சுனா! எவர்கள் வேறு தேவதைகளிடத்தில் பக்தியுடையவர்களாய்க் கொண்டு சிரத்தையோடு பூஜிக்கின்றார்களோ அவர்களும் என்னையே விதி முன்னாக அன்றியே பூஜிக்கின்றார்கள்" என்னுமாறுபோலே. பேண - அவை தமக்கு என்ன ஒன்று இல்லாமையாலே, அவற்றிற்கு ஓர் உயர்வினைச் சாதித்தல் அவர்களை அடைகின்ற உங்களுக்கே பாரம் என்பார் 'பேண' என்கிறார். புறத்திட்டு - ஈசுவரனுகிய தனக்குப் புறம்பாம்படி செய்து. உம்மை இன்னே தேற்றி வைத்தது - உங்களை இப்படியே தெளியும்படி செய்து வைத்தது; என்றது, [4] "ஓர் இடத்தில் நின்றும் அஞ்சுகிறேன் இல்லை" என்கிறபடியே,

---

1. பாசுர முழுதினையும் கடாக்ஷித்து, மேலே கூறியதனை விவரிக்கிறார் 'எம்பெருமானே' என்று தொடங்கி. "மாயம்" என்றதனை நோக்கி 'வஞ்சனத்தை' என்கிறார்.

2. 'நான் பகவத் விஷயத்தில் செய்வன முழுதும்' என்றது, "போற்றி என்றே கைகளாரத் தொழுது" என்றதனைத் திருவுள்ளம்பற்றி.

3. "ஓர் தெய்வம்" என்னாமல், "மற்றோர் தெய்வம்" என்று இவர்களைத் தனியே ஸ்வதந்திரராக்கிச் சொல்லுவான் என்? என்ன, அவர்கள் தங்களை ஸ்வதந்திரராக நினைத்துக் கொண்டிருக்கையாலே என்று கூறத் திருவுள்ளம்பற்றி, அதற்குப் பிரமாணம் காட்டுகிறார் 'அருச்சுனா!' என்று தொடங்கி. இது, ஸ்ரீ கீதை. 9 : 23.

4. 'ஓர் இடத்தில் நின்றும் அஞ்சுகிறேன் இல்லை' என்னும் இவ்விடத்தில்

> இடராக வந்தென்னைப் புன்சிறு தெய்வங்கள் என்செயுமான்
> இடராக வன்பிணி மாநாக மென்செயும் யான்வெருவி
> இடராக வன்னி புனலிடி கோள் மற்று மென்செயும்வில்
> இடராக வன்னரங் கன் திருத் தாள் என னிதயத்ததே.

என்ற திருவரங்கத்தமுதனார் திருவாக்கு நினைவு கூர்க.

நான் மேல் வரும் கேட்டிற்கு அஞ்சாதே பாரம் அற்றவனு யிருக்கின்ருற்போலே, ஓட்டை ஓடத்தோடு ஒழுகல் ஓடமான இதர தேவதைகளைப் பற்றி உங்களுக்கு அவர்கள் பக்கலிலே ருசி விசுவாசங்கள் உண்டாம்படிசெய்து பாரம் அற்றவர்களா யிருக்கும்படி வைத்தது என்றபடி. எல்லீரும் வீடு பெற் ருல் உலகு இல்லை என்றே - எல்லாரும் இருந்ததே குடியாக மோக்ஷத்தைப் பெற்ருல், லீலைக்கு அடியான சாஸ்திரம் பயன் அற்றதாய்விடும். என்றது, புண்ணியங்களைச் செய்வாரும் பாவங்களைச் செய்வாருமாயன்றோ நாடுதான் இருப்பது; பாவம் செய்தவர்களும் புண்ணியம் செய்தவர்களுடைய பலத்தை அநுபவிக்குமன்று, "புண்ணியத்தினலே புண்ணியனுகவும் பாவத்தாலே பாவியாகவும் ஆகின்ருன்" என்கிற சாஸ்திர மரியாதை குலையும் என்றபடி. ஆக, பாவம் செய்தவர்கள் அதன் பலத்தினை அநுபவித்தலும், புண்ணியம் செய்தவர் கள் அதன் பலத்தினை அநுபவித்தலும் ஆகிற சாஸ்திர மரி யாதை குலையாதபடியாகச் செய்து வைத்தான் என்றவாறு. [1]"ஆதலால், உலகத்திலும் (சாஸ்திரங்களிலும்) வேதங்களி லும் புருஷோத்தமன் என்று பிரசித்தனுக இருக்கிறேன்" என்றவிடத்தில் 'லோக' சப்தத்தால், பிரமாணத்தைச் சொல் லிற்று என்று கொண்டதைப்போன்று, இங்கும் 'உலகம்' என்ற சொல் சாஸ்திரத்தைச் சொல்லுகிறது.

சேற்றில் செந்நெல் கமலம் ஓங்கும் - அவ்வூரில் உள்ள பொருள்கள் முழுதும் ஒன்றற் கொன்று [2] இசலி வளராநிற் கும். இதனல், "உரம்பெற்ற மலர்க்கமலம்" என்பதுபோன்று, அவ்வூரிலே உள்ள பொருள்களில் ஒன்றில் ஒன்று குறைந் திருப்பது இல்லையாயிற்று என்பதனைத் தெரிவித்தபடி. ஆற்ற வல்லவன் - மிகவும் வல்லவன். என்றது, சம்பந்தம் ஒத்திருக் கச் செய்தே, புண்ணியம் செய்தார் அதன் பலத்தினை அநு பவிக்கவும், பாவம் செய்தார் அதன் பலத்தினை அநுபவிக் கவும் செய்யவல்லவன் என்றபடி. மாயம் கண்டீர் - [3]"என்

---

1. "உலகு" என்ற சொல், சாஸ்திரத்தைக் காட்டுவதற்குப் பிரமாணம் காட்டுகிருர் 'ஆதலால்' என்று தொடங்கி. இது, ஸ்ரீ கீதை. 15: 14.

2. இசலி - மாறுபட்டு. "உரம்பெற்ற" என்ற திருப்பாசுரம், பெரி யாழ்வார் திருமொழி. 4: 8. மாறுபட்டு வளர்வதற்கு இது மேற்கோள்.

3. தைவீஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா
மாமேவயே ப்ரபத்யந்தே மாயா மேதாம் தரந்தி தே.

இது, ஸ்ரீ கீதை. 7: 14.

னுடைய மாயையானது ஒருவராலும் தாண்டக்கூடாதது" என்கிறபடியே, தான் அகற்ற நினைத்தாரைத் தன்பக்கல் வந்து கிட்டாதபடி பிரகிருதியை இட்டு வஞ்சித்து வைத்தபடி கண்டீர்கோள். அது அறிந்து - இது அவனுடைய மாயம் என்னுமதனை அறிந்து. அறிந்து ஓடுமின் - [1]"சத்திய சங்கல்பம் முதலான குணங்களையுடைய என்னையே எவர்கள் சரணம் அடைகின்றார்களோ அவர்கள் இந்த மாயையினைத் தாண்டுகிறார்கள்" என்கிறபடியே, மாயையினைத் தாண்டுதற்கு உபாயமான பிரபத்தியையும் தானே அருளிச்செய்து வைத்தான்; அதனை யறிந்து, அவ்வழியாலே அவனைப்பற்றி இந்த மாயையினைத் தப்பப் பாருங்கோள். என்றது, இது அவன் செய்து வைத்ததான பின்பு, அவனை வெல்ல வேண்டில், அவனோடு பிரிய நின்று வெல்லப் பாராமல், அவனையே காற்கட்டி இதனைத் தப்பப் பாருங்கோள் என்றபடி. (6)

## 438.

ஓடி ஓடிப் பலபி றப்பும் பிறந்து மற் றோர் தெய்வம்
பாடி யாடிப் பணிந்து பல்படி கால்வழி ஏறிக்கண்டீர்
கூடி வானவர் ஏத்த நின்ற திருக்குரு கூர தனுள்
ஆடு புட்கொடி ஆதி மூர்த்திக்கு அடிமை புகுவதுவே.

பொ - ரை:—வேறு ஒரு தெய்வத்தைப் பாடியும் ஆடியும் வணங்கியும் பலப்பல வகைகளாலே சாஸ்திரங்கள் கூறிய வழிகளிலே சென்று திரிந்து திரிந்து பல பிறப்பும் பிறந்து அதன் பலன்களைக் கண்டீர்கள்; ஆனபின்பு, தேவர்கள் ஒருங்கு கூடித் துதிக்கும் படியாகத் திருக்குருகூர் என்னும் திவ்ய தேசத்திலே நின்ற திருக்கோலமாய் எழுந்தருளியிருக்கின்ற ஆடுபுட்கொடியையுடைய ஆதிமூர்த்திக்கு அடிமை புகுங்கோள் என்கிறார்.

வி - கு:—மற்று ஓர் தெய்வம் பாடி ஆடிப் பணிந்து வழி ஏறி ஓடி ஓடிப் பிறந்து கண்டீர் என்க. வானவர் கூடி ஏத்த திருக்குருகூரதனுள் நின்ற ஆதிமூர்த்தி என்க. ஆடுபுள்-வெற்றி பொருந்திய கருடப் பறவை. ஆதிமூர்த்தி-உலகத்திற்குக் காரணனான மூர்த்தி. மூர்த்தி-திருமேனியையுடையவன். புகுவது : வியங்கோள் வினைமுற்று. "கொள்ளப்படாது மறப்பது அறிவிலென் கூற்றுக்களே" (திருக்கோவையார். 87.) என்புழிப்போன்று கொள்க.

---

1. ஸ்ரீ கீதை. 7 : 14.

ஈடு:—ஏழாம்பாட்டு. [1] 'அது செய்கிறோம், மற்றைத் தேவர்கட்கும் உயர்வுகள் சில உண்டு' என்று நெடுநாள் அவர்கட்குப் பச்சை இட்டுப் போந்தோம்; அப் பச்சையின் பயன் அற்றுப்போகாமல் இன்னம் சிலநாள் அவை பலிக்கும்படி கண்டு பின்பு பகவானை அடைகிறோம்' என்ன, 'அவையும் எல்லாம் செய்து கண்டீர்கோள் அன்றோ; இனி அமையும் காணுங்கோள்' என்கிறார்.

ஓடி ஓடி - [2] "சுவர்க்கம் முதலான உலகங்களில் விருப்பமுள்ளவர்கள், போவதையும் வருவதையும் அடைகிறார்கள்" என்கிறபடியே, போவது, பிறவிகளோடே வருவதாய்த் திரிந்த தித்தனையன்றோ? பல பிறப்பும் பிறந்து - [3] ஆத்மா நித்யன்; அசித்தும் அப்படியே; அசித்தினுடைய சேர்க்கையும் நித்தியமாய், கர்மப் பிரவாஹத்தாலே பரம்பரையாக வருகிற பிறவிகளும் உருவப்போருகிறது; நீங்கள் முன்னும் பின்னும் அறியாமலேயன்றோ 'இது ஒரு ஜன்மமே உண்டாயிற்று' என்று இருக்கிறது. மற்று ஓர் தெய்வம் பாடி ஆடிப் பணிந்து - வேறு ஒரு தெய்வத்தை அடைந்து பிரீதியினாலே தூண்டப்பட்டவராய்ச் சொல்லி, அவ்வளவில் முடிவுபெறாமல் வேறுபட்டவராய் [4] "என்னை நமஸ்காரம் செய்" என்கிறபடியே, பகவத் விஷயத்தில் உட்புகுமளவும் உட்புகுந்து. என்றது, இப்படி அநாதியாகப் போதருகிற ஜன்ம பரம்பரைகளிலே ஒரு ஜன்மம் ஒழியாமல் மற்றைத் தேவர்களை அடைக்கலமாக அடைந்து போந்தீர்கள்; அது செய்கிறவிடத்தில் [5] முக்கரணங்

1. "மற்றோர் தெய்வம் பாடி ஆடிப் பணிந்து பல்படிகால் வழி ஏறி ஓடி ஓடிக் கண்டீர் அடிமை புகுவதுவே" என்ற பதங்களுக்குத் தகுதியாக அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. "ஓடி ஓடி" என்ற அடுக்குத் தொடரின் பொருளை மேற்கோளோடு அருளிச்செய்கிறார் 'சுவர்க்கம்' என்று தொடங்கி. இது, ஸ்ரீ கீதை. 9 : 21. 'பிறவிகளோடே வருவதாய்' என்றது, பிறவிகளை எடுப்பதற்காகப் பூலோகத்திற்கு வருவது என்றபடி.

3. இப்போது ஒரு பிறவி பிறந்திருக்கப் பல பிறவி உண்டோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'ஆத்மா' என்று தொடங்கி. உருவப் போருகிறது - பலகாலமாகத் தொடர்ந்து வருகிறது.

4. ஸ்ரீ கீதை. 9 : 34.

5. 'முக் கரணங்களாலும்' என்றது, "பாடி ஆடிப் பணிந்து" என்ற பதங்களைத் திருவுள்ளம்பற்றி. 'பணிந்து' என்றது, மனத்தின் தொழில்.

களாலும் செய்தீர்கள்; ஆதலால், பற்றுகிற தன்மையில் குறையால் பலியாது இருந்தது அன்று; அதில் குறையில்லை என்றபடி. பல்படிகால்-ஒருவகையாகப் பற்றிவிட்டீர்களோ? [1]பலவகைகளால் பற்றினீர்கள். வழி ஏறிக் கண்டீர் - அவ்வத் தேவர்களைப் பற்றும்படி சொன்ன சாஸ்திர மரியாதை தப்பாமல் பற்றி அதன் பலமும் கண்டீர்கோள் அன்றோ? நன்று; 'பல் படி கால் வழி ஏறிக் கண்டீர்' என்கைக்கு, 'இவர்கள் ஒரு பிறவியிலும் பகவானிடத்தில் சரணாகதி பண்ணிற்றிலர்கள்' என்று இவர் அறிந்தபடி எங்ஙனே? என்னில், இப்போது தாம் இந்த அர்த்தத்தை உபதேசிக்க வேண்டும்படி இவர்கள் இருக்கக் காண்கையாலே, 'இதற்கு முன்னர் இவர்கள் பகவானிடத்தில் சரணாகதி பண்ணிற்றிலர்கள்' என்று அறியத் தட்டு இல்லையே யன்றோ?

[2]"சூரியனிடமிருந்து ஆரோக்கியத்தை விரும்பக் கடவன், அக்னியிடமிருந்து செல்வத்தை விரும்பக்கடவன், சிவனிடமிருந்து ஞானத்தை விரும்பக்கடவன், ஸ்ரீமந்நாராயணனிடமிருந்து மோக்ஷத்தை விரும்பக்கடவன்" என்கிறபடியே, பகவானிடத்தில் சரணாகதி செய்திருப்பார்களேயானால் முக்தர்கள் ஆவார்களேயன்றோ? மற்றைத் தேவர்களைப்பற்றிய காரணத்தினாலேயே இவ்வளவும் வர இறந்தும் பிறந்தும் போந்தார்கள்; [3]"பிரமனையும் சிவனையும் மற்றும் ஸ்மிருதிகளில் சொல்

---

1. 'பலவகைகள்' என்றது, தர்ப்பண ஜப ஹோம பிராஹ்மண போஜனாதிகளைக் குறித்தபடி.

2. "ஆரோக்யம் பாஸ்கராத் இச்சேத் தனம் இச்சேத் உதாசநாத்
ஈஸ்வராத் ஞானம் அந்விச்சேத் மோக்ஷம் இச்சேத் ஜநார்த்தநாத்"
என்பது பிரம்மாண்ட புராணம்.

3. "பிராஹ்மாணம் ஶிதிகண்டம் ச யாச்ச அந்யாঃ தேவதாঃ ஸ்மிருதாঃ
பிரதிபுத்தா ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் பலம்"
என்பது, பாரதம் மோக்ஷதர்மம். 169: 35. இங்கே,

"அங்காக்கைக் கேமங்கைக் கீந்தான் அரங்கன் அவனிக்குவாய்
அங்காக்கைக் கேபசித் தானிற்க வேமுத்தி யாக்கித்துயர்
அங்காக்கைக் கேசிலர் வேறே தொழுவர் அருந்திரவிய
அங்காக்கைக் கேதனத் தாள்தரு மோதிரு வன்றியிலே."

"சித்திக்கு வித்தது வோ இது வோ என்று தேடிப் பொய்நூல்
கத்திக் குவித்தபல் புத்தகத் தீர்! கட் டுரைக்கவம்மின்
அத்திக்கு வித்தனை யும் முண்ட வேங்கடத் தச்சுதனே
முத்திக்கு வித்தகன் என்றே சுருதி முறையிடுமே."
என்ற திவ்ய கவியின் திருவாக்குக்கள் நினைவு கூர்தல் தகும்.

லப்பட்டிருக்கும் தேவர்களையும் மோக்ஷத்தில் இச்சையுடையவர்கள் சேவிக்கமாட்டார்கள்; என்னை? எனின், அந்தத் தேவர்களிடமிருந்து கிடைக்கும் பலம் மிகச் சிறியது" என்கிறபடியே, 'மோக்ஷபலம் சித்திக்கவேணும்' என்றிருக்கிறவர்கள் புன்சிறு தெய்வங்களைப் பின் செல்லார்களேயன்றோ? அதற்குக் காரணம், அவர்களால் கொடுக்கப்படுமவை அநித்தியப் பலன்களாகையாலே. [1] "முருகன் சிவன் இந்திரன் முதலான தேவர்கள் ஆராதிக்கும் விஷயத்தில் விலக்கப்பட்டிருக்கிறார்கள்" என்றதேயன்றோ சாஸ்திரமும். [2] ஒருவன் பகவானைத் தியானம் செய்து கொண்டிருக்கச்செய்தே, 'இவன் சமாதியிலே நின்ற நிலையை அறியவேணும்' என்று பார்த்துச் சர்வேசுவரன் இந்திரன்வேடத்தை மேற்கொண்டு ஐராவதத்திலே ஏறி வந்து முன்னே நின்று, 'உனக்கு வேண்டுவது என்?' என்ன, 'ஒரு புழுவும் தானுமாய் வந்து நிற்கிறவன் யார்?' என்றான்; 'சர்வேசுவரன் பெரிய திருவடியை மேற்கொண்டு வந்தான்' என்னுமிடம் அறியானேயன்றோ? கொண்டு வந்த வேடம் இதுவாகையாலே; வந்தவனைப் பார்த்து, 'நீ யாவன் ஒருவனை ஆஸ்ரயித்து இந்தச் செல்வம் முழுதும் பெற்றாய், அப்படிப்பட்டவனைக் காண் நான் ஆஸ்ரயிக்கிறது; இப்படி வழியிலே போவார்க்கெல்லாம் பச்சையிட்டுத் திரியுமவன் அல்லேன் காண்; இப்போது முகங்காட்டாதே போகவல்லையே பிரானே! உன்னைக் கும்பிடுகிறேன்' என்றானேயன்றோ?

பகவானிடத்தில் சரணாகதி செய்து [3] ஞானாதிகராயிருப்பார் ஒருவர் இருந்து தம்முடைய வஸ்திரத்தைப் புரையாநின்றாராய், அவ்வளவிலே தேவியும் தேவனுமாகப் போகாநிற்க, இவர் அநாதரித்திருந்தாராய், 'தேவியானவள், நீர்

---

1.

2. முமுக்ஷுக்கள் இதர தேவர்களைப் போற்றமாட்டார்கள் என்பதற்கு அநுஷ்டானமும் காட்டுகிறார் 'ஒருவன்' என்று தொடங்கி. 'ஒருவன்' என்றது, அம்பரீஷனை. இங்கே, சரபங்கர் பிறப்பு நீங்கிய வரலாறும் நினைவிற்கு வருகின்றது. கம்பராமாயணம், சரபங்கர் பிறப்பு நீங்கிய படலம் காணல் தகும்.

3. 'ஞானாதிகராயிருப்பார் ஒருவர்' என்றது, திருமழிசைப் பிரானை. இவ்வரலாற்றின் விரிவை, அவர் திவ்ய சரிதையில் காணல் தகும். புரைதல் - தைத்தல்.

சர்வாதிகராயிருக்க உம்மைக் கண்ட இடத்தில் 'இவன் அநாதரித்துக் காலை நீட்டிக்கொண்டிருந்தானே' என்ன, தேவனும் 'அவன் பகவத்பக்தன் போலே காண்' என்ன, தேவியும் 'அதுதான் இருக்கிறபடி அறிவோம்' என்ன, இருவரும் இவர் பக்கலிலே வந்து, 'நீ என்? தேவர்களை மனிதர்கள் கண்டால் அவர்களிடம் சென்று வேண்டும் வரங்களும் வேண்டிக்கொள்ளக் கடவர்களாயிருப்பர்கள்; நீ நம்மைக் கண்ட இடத்தில் நீட்டின காலை முடக்குதல், சில உபசாரங்களைச் செய்தல், சிலவற்றை வேண்டிக்கோடல் செய்யாமல் இருந்தாயே' என்ன, 'அழகிது! அவையெல்லாம் செய்யக் கடவன், மோக்ஷம் தரலாமோ?' என்ன, 'அது நம்மாலே செய்யலாமதன்று; பகவானிடத்தில் சரணகதிசெய்து அவன் திருவருளாலே பெறவேணும்' என்ன, 'ஆகில், இன்று சாவாரை நாளை இறக்கும்படி பண்ணலாமோ?' என்ன, 'அதுவும் கர்மங்களுக்குத் தகுதியாக அன்றோ இருப்பது; நம்மால் செய்யப்போகாது' என்ன, 'ஆகில், நீ செய்யுமது, இந்த ஊசி போகும் வழியே நூலும் போகும்படி அநுக்கிரஹித்து நடக்குமித்தனை' என்ன, தேவனும் கோபத்தாலே நெற்றியிற் கண்ணைக்காட்ட, இவரும் காலிலே பல கண்களை உண்டாக்கிக் காட்டினர் என்ற சரிதம் இங்கு அநுசந்திக்கத் தகும்.

கூடி வானவர் ஏத்த நின்ற திருக்குருகூர் அதனுள் - [1] உங்களால் அடையப்படுகின்ற தேவர்கள் இவ்வளவும் உங்களைக் கும்பீடுகொண்டு, இத்தனைபோது சென்று அங்கே வணங்காநிற்பர்கள்; அவர்கள் செய்கின்றவற்றைக் கண்டாகிலும் நீங்களும் அவனை வணங்கப் பாருங்கோள். [2] தலையறுப்பாரும் தலையறுப் புண்பாருமாய், கிராமணிகளைப்போலே ஒருவரை ஒருவர் வேரோடே அலம்பிப் போகடவேண்டும்படியான விரோதம் செல்லாநிற்கச் செய்தேயும், ஆபத்து எல்லார்க்கும் ஒத்திருக்கையாலே எல்லாரும் ஒருமிடறாய் ஏத்தாநிற்பர்கள். பரஸ்பரம் விரோதமுங் கிடக்கச் செய்தே 'ஊராகக் கூடி வந்தது' என்பார்களேயன்றோ? ஆடுபுட் கொடி

---

1. "கூடி வானவர் ஏத்த நின்ற" என்றதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'உங்களால்' என்று தொடங்கி.

2. "கூடி" என்கையாலே, அவர்களுக்குள் பரஸ்பரம் விரோதம் உண்டு என்னுமதனையும், அப்படி விரோதம் உண்டாயிருக்கக் கூடுகைக்குக் காரணத்தையும், திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய்கிறார் 'தலையறுப்பாரும்' என்று தொடங்கி. தலையறுப்பார் - சிவன். தலையறுப்புண்பார் - பிரமன்,

மூர்த்தி - வெற்றிப்புள்ளைக் கொடியாகவுடையவன்; அடியார்களுடைய விரோதிகளை அழிக்கும் விஷயத்தில் சர்வேசுவரன் செய்யவேண்டுவது ஒன்றும் இன்று; திருவடி திருத்தோளிலே சலியாமல் இருக்குமத்தனையே வேண்டுவது என்பார் '**ஆடுபுள்**' என்கிறார். ஆடுபுள் - வெற்றிப்புள்; ஆடு - வெற்றி. புள் - பறவை. அன்றிக்கே, 'சர்வேசுவரன் வாஹனம்' என்கிற மகிழ்ச்சியின் மிகுதியாலே மதித்து ஆடாநின்ற புள் என்றுமாம். [1]'கருடக் கொடியன், கருடவாஹநன்' என்று சொல்லப்படுமவனாயிற்று மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடியவனாவான். ஆதிமூர்த்திக்கு - [2]"காரணப் பொருளாகவுள்ளவனே தியானிப்பதற்கு உரியன்" என்கிறபடியே, உலக காரண வஸ்துவேயன்றோ உபாசிக்கத் தக்கதாவது. ஆக, [3]மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடியவனுமாய் எல்லாரையும் நியமிக்கின்றவனுமான சர்வேசுவரனுக்கு என்றபடி. அடிமை புகுவதுவே - அடிமை புகுவதுவே செய்யத் தக்க காரியம். [4]'உங்களுக்குச் செய்ய வேண்டுவது ஒன்று இல்லை; [5]அவன் உடைமையை அவனுக்காக இசைய அமையும் என்பார் '**புகுவதுவே**' என ஏகாரம் கொடுத்து ஓதுகிறார். அவன் இதனை '**என்னுடைமை**' என்றிருக்க, நீங்களும் '**என்னுடைமை**' என்றிராமல் '**அவனது**' என்று இசைய அமையும் என்றபடி. [6]'அடிமை புகுவது' என்ற இடம், விதியாய்,

---

1. பின் வருகின்ற "அடிமை புகுவதுவே" என்றதனைத் திருவுள்ளம் பற்றி, "ஆடு புட்கொடி மூர்த்தி" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார் 'கருடக்கொடியன்' என்று தொடங்கி. "நிவந்தோங் குயர் கொடிச் சேவலோய்! நின், சேவடி தொழாரு முளரோ" என்ற பரிபாடற் பகுதியும் இக் கருத்தே பற்றி வந்தது.

2. அதர்வசிகை.

3. "ஆடுபுட்கொடி, கூடி வானவர் ஏத்த நின்ற" என்ற விசேடணங்களாலே, பலித்த பொருளை அருளிச்செய்கிறார் 'மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடியவனுமாய்' என்று தொடங்கி.

4. 'உங்களுக்குச் செய்யவேண்டுவது ஒன்று இல்லை' என்றது, பாடி ஆடிப் பணிதல் முதலானவை வேண்டுவது இல்லை-என்றபடி.

5. "ஆதிமூர்த்தி" என்றதனைத் திருவுள்ளம்பற்றி 'அவன் உடைமையை' என்கிறார்.

6. "அடிமை புகுவதுவே" என்றதும், "கண்டீர்" என்றதும், சேரும்படி எங்ஙனே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'அடிமை புகுவது' என்று தொடங்கி.

'கண்டீர்' என்கிற இடம், அதுவும் செய்து பார்த்தீர்கோள் அன்றோ? இனி, அவன் திருவடிகளில் அடிமை புகப் பாருங்கோள் என்கிறார்.

[1] யயாதி சரிதத்தைப் பட்டர் வாசித்துப் போந்திருக்கச் செய்தே, பிள்ளை விழுப்பரையரும் ஆப்பான் திருவழுந்தூர் அரையரும் 'வேதத்தின் பொருளை அறிதற்குக் கருவியாக வெளிப்போந்த பிரபந்தங்களில் இது எந்த அர்த்தத்தை விரித்துப் பேசுகிறது?' என்று கேட்க, 'புன்சிறு தெய்வங்கள் தந்தாமை ஆஸ்ரயித்துப் பெற்றாலும் பிறர் பக்கல் ஓர் உயர்வு கண்டால் அது பொறுக்கமாட்டார்கள் என்றும், சர்வேசுவரனே 'பிறர் வாழ்வு நம் வாழ்வு' என்று நினைத்திருப்பான் என்றும் சொல்லி, ஆனபின்பு, மற்றைத் தேவர்கள் வணங்கத் தக்கவரல்லர், இவன் ஒருவனுமே வணங்கத் தக்கவன் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது' என்று அருளிச்செய்தார். [2] "முனிபுங்கவரே! இதற்கு முன் ஏவிய காரியங்களையெல்லாம் செய்து முடித்தவர்களாய் வந்து உம்மைச் சார்ந்திருக்கிறோம்" என்கிறபடியே, தாழ நிற்க வல்லான் இவனே யன்றோ? [3] 'யாதவர்கள் முடிவிலே வந்தவாறே வாட்கோரையை இட்டு ஒருவரை ஒருவர் எறிந்து முடிந்து போனார்கள்' என்று கேட்டவாறே, 'கிருஷ்ணன் இவர்கள் விஷயமாகச் சங்கநிதி பத்மநிதி தொடக்கமானவற்

---

1. மோக்ஷத்தைக் கொடுக்கும் முதன்மை மற்றைத் தேவர்கட்கு இல்லையாயினும், சுவர்க்கம் முதலான புருஷார்த்தங்களைக் கொடுக்கின்ற முதன்மை அவர்களுக்கு உளதே? எனின், அவர்கள், தம்மை யடைந்தவர்கள் பக்கல் அழுக்காறு கொள்ளுகின்றவர்கள் ஆகையாலே, அவ்வழியாலும் அவர்களுக்கு உயர்வில்லை என்னுமதனை ஆப்த சம்வாதத்தாலே காட்டுகிறார் 'யயாதி' என்று தொடங்கி. 'இது' என்றது, மஹாபாரதத்தில் வந்துள்ள யயாதி சரிதத்தைக் குறித்தபடி. இதனால், இதிகாச புராணங்களில் வந்துள்ள ஒவ்வொரு சரிதையும் ஒவ்வொரு தத்துவத்தை உட்கொண்டது என்று தெளிதல் தகும்.

2. இறைவன், அடியார்கள் வாழ்வே தனக்கும் வாழ்வாக நினைத்திருப்பானோ? என்ன, அங்ஙனம் நினைத்திருப்பதல்லாமல், அவர்களை உயர்வாகவும் தன்னைத் தாழ்வாகவும் நினைத்திருப்பான் என்கிறார் 'முனிபுங்கவரே!' என்று தொடங்கி. இது, ஸ்ரீராமா. பால. 31 : 4.

3. மற்றைத் தேவர்களை அடைவதனால் ஒருவித பயனும் இல்லை என்று சொன்னீர்; பகவானை அடைந்தவர்கட்கும் பலத்தில் தடை உண்டாயிற்றே? என்று சங்கித்து அந்த ஐயத்தை நீக்குகிறார் 'யாதவர்கள்' என்று தொடங்கி.

றைக் கொடுவந்து கொடுத்துச் செய்யாதன இல்லை; பின்னை யும் முடிவிலே வந்தவாறே இப்படியேயாய் இருந்தது; 'நாம் பகவானை வணங்குகிற வணக்கத்துக்கும் பலம் அங்ஙனே ஆகிறதோ? என்று அஞ்சியிருந்தோம்' என்ன, 'அங்ஙன் ஆகாது; அஞ்சவேண்டா; அவர்கள் 'இவன் என் தோழன், மைத்துனன்' என்று சரீர சம்பந்தத்தைக் கொண்டு விரும் புகையாலே அவர்களுக்குத் தேகம் எல்லையாய்விட்டது; நாம் சொருபஞானத்தாலே, நித்யனான ஆத்மாவுக்கு வகுத்த பேறு பெறவேணும் என்று பற்றுகையாலே பேறும் உயிர் உள்ள வரையிலும் இருக்கும்' என்று அருளிச்செய்தார். (7)

439.

புக்கடி மையினால் தன்னைக் கண்ட மார்க்கண் டேயனவனை
நக்கபி ரானுமன் று உய்யக் கொண்டது நாரா யணனருளே
கொக்கு லர் தடந் தாழை வேலித் திருக்குரு கூரதனுள்
மிக்க ஆதிப் பிரான் நிற்க மற்றைத் தெய்வம் விளம்புதிரே!

பொ - ரை :— அடிமையாகப் புகுந்து சிவபிரானுகிய தன்னைக் கண்ட மார்க்கண்டேயனைச் சிவபிரானும் ஆபத்துக்காலத்தில் காப் பாற்றியது நாராயணனுடைய திருவருளாலேயாம்; கொக்கைப் போன்று வெண்மை நிறத்தோடு மலர்கின்ற பெரிய தாழைகளை வேலி யாகவுடைய திருக்குருகூர் என்னும் திவ்ய தேசத்திலே மேன்மையை யுடைய ஆதிப்பிரான் நின்ற திருக்கோலமாய் எழுந்தருளியிருக்க, வேறு தெய்வங்களைப் பற்றிப் பேசுகின்றீர்களே உங்கள் அறிவின்மை இருந் தவாறு என்னே! என்கிறார்.

வி - கு :—அடிமையினால் புக்குத் தன்னைக் கண்ட மார்க்கண்டே யன் என்க. 'தன்னை' என்றது, சிவபெருமானை. நக்கன்-வஸ்திரமில்லா தவன்; சிவபிரான். திகம்பரன் என்றபடி. அருளே-அருளாலே என்று மூன்றும் வேற்றுமை விரிக்கவும். கொக்கு - ஒரு பறவை.

ஈடு :—எட்டாம்பாட்டு. [1] இங்ஙனே இருக்கச் செய்தேயும், மற்றைத் தேவனாகிய சிவபிரானை வணங்கியன்றோ மார்க் கண்டேயன் தான் விரும்பிய பயனைப் பெற்றது; என்ன, ஆகில், அது இருந்தபடி கேட்கலாதோ? என்கிறார்.

---

1. முன் பாசுரத்தில் கூறிய பொருளையும் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'இங்ஙனே இருக்கச் செய்தேயும்' என்றது, மற்றைத் தெய்வங்கள், பிறப்பு இறப்புக்கட்குக் காரணர்கள், சர்வேசுவரனே மோக்ஷத் தைக் கொடுக்கக் கூடியவன்' என்று பிரசித்தி உண்டாயிருக்கச் செய்தேயும் என்றபடி.

புக்கு அடிமையினல் - அடிமையினல் புக்கு; என்றது, சர்வேசுவரனுக்கு அடிமை என்று புக்கான் அல்லன்; 'உருத்திரனுக்கு அடிமை' என்று புக்கான் என்றபடி. [1] தன்னைக் கண்ட - காணப் பெருமையாலே தான் இழந்தான் அல்லன். ஆக, போற்றி வணங்கிய தன்மையில் குறையினலே இழந்தான் அல்லன்; காணப்பெருமையாலே இழந்தான் அல்லன் என்றபடி. மார்க்கண்டேயன் அவனை - மார்க்கண்டேயனை வனை. [2] நக்கபிரான் - நக்கன் - நக்நன். 'பிரான்' என்கிறார், தன்னுடைய கோஷ்டிக்கு உபகாரகனயிருக்கையாலே. அன்றிக்கே, [3] ஞானத்தினைக் கொடுக்கக் கூடியவன் ஆதலாலே 'பிரான்' என்கிறார் என்னுதல். [4] மேல், 'நாராயணன்' என்கையாலே, 'அவனுக்குச் சேஷமாமிடத்தில் உன்னேடு என்னேடு வாசியில்லை' என்று ஞானேபதேசத்தைச் செய்து அவன் திருவடிகளிலே காட்டிக் கொடுத்தான் என்கை. அன்று உய்யக்கொண்டது - ஆபத்துக் காலத்திலே பாது காத்தது. நாராயணன் அருளே - நாராயணனுடைய திருவருளாலேயாம்; என்றது, [5] 'நீ நெடுநாள் பச்சையிட்டு என்னை வணங்கிறுய்; அவ்வணக்கம் பயனற்றுப் போயிற்றதாக ஒண்ணுது' என்று அவனை அழைத்து, 'நானும் உன்னைப்போன்று ஒருவனை ஆஸ்ரயித்துக்காண் இப்பதம் பெற்றது; ஆதலால், இனி உன்னுடைய விருப்பத்தை நம்மால் செய்து முடிக்க இயலாது; இனி, ஊண் கொடுத்தல் உபதேசங் கொடுத்தலே

---

1. தன்னை - சிவபிரானை.

2. நக்கன் - சிவன். நிர்வாணமாக வுள்ளவன் என்பது பொருள்.

3. 'ஞானத்தினைக் கொடுக்கக் கூடியவன்' என்றது, "சிவபிரானிடமிருந்து ஞானத்தை விரும்பவேண்டும்" என்ற பிரம்மாண்ட புராண வசனத்தை நோக்கி. 424-ஆம் பக். காண்க.

4. 'மேல்' என்று தொடங்கும் வாக்கியத்திற்குக் கருத்து, அவனுடைய திருவடிகளைக் காட்டி உஜ்ஜீவிப்பித்தான் என்பது. இங்குச் 'சேஷம்' என்றது, நாராயண பதத்தை வேற்றுமைத் தொகையாகக் கொண்டு கூறும் பொருளால் கிடைக்கும் சேஷத்துவத்தை.

5. நாராயணன் அருளை உபதேச முகத்தாலே அவனுக்குப் பண்ணிக் கொடுத்த விதத்தை விரித்து அருளிச்செய்கிறுர் 'நீ நெடுநாள்' என்று தொடங்கி.

'ஊண்கொடுத்தல் உபதேசங் கொடுத்தலேயன்றே?' என்றது, ஒருவன் வீட்டில் ஒருவன் பசியாளனுய் வந்து 'என் பசியைப் போக்கவேணும்'

யன்றோ?' என்று அவனைக்கொண்டுபோய்ச் சர்வேசுவரன் பக்கலிலே காட்டிக்கொடுத்தமையைத் தெரிவித்தபடி. 'அருள்' என்ற பெயர்ச்சொல் எல்லா வேற்றுமையோடும் சேரத் தக்க தாகையாலே, 'அருளாலே' என்று மூன்றும் வேற்றுமை யாக விரித்துக் கொள்க. அன்றிக்கே, சிவபிரான் இவனைக் காப்பாற்றிக் கொண்டது சர்வேசுவரன் திருவருளைப் பண் ணிக் கொடுத்து என்று இரண்டாம் வேற்றுமையாக விரித் துப் பொருள்கோடலுமாம். இவன் புருஷகாரமாக நின்று திருவருள்புரியச் செய்தான் என்றபடி.

கொக்கு அலர் தடம் தாழை வேலித் திருக்குருகூரதனுள்- கொக்குப் போன்று வெளுத்த நிறத்தையுடைய மலர்களை யுடைத்தாயிருப்பதாய்ப் பெருத்திருந்துள்ள தாழைகளை வேலி யாக உடைத்தாயிருக்கின்ற திருநகரியாயிற்று; இதனால், நிலத் தியல்பு இருக்கிறபடியைத் தெரிவித்தபடி. மிக்க ஆதிப் பிரான் நிற்க - சர்வாதிகனாய் உலகத்திற்கெல்லாம் காரணமா யுள்ளவன் நிற்க; 'மிக்க' என்றதனால், சொல்லும்போது கனக்கச்சொல்லி, கிட்டினவாறே குறைந்திராதொழிகையைத் தெரிவிக்கிறார். என்றது, என் சொல்லியவாறோ? எனின், நெடுநாள் ஆஸ்ரயிப்பித்துக்கொண்டு, பின்பு காரியகாலத்தில் வந்தவாறேவேறே ஒருவன் வாசலேறக் கொண்டுபோகவேண் டாதிருக்கையைத் தெரிவித்தபடி. மற்றைத் தெய்வம் விளம் புதிரே - [1] பிரகாரங்களிலே ஒன்றை ஈசுவரனாகச்சொல்லு கின்றீர்கோளே! என்றது, அவனுக்குப் பிரகாரமாய் அல்லது ஒன்றற்கும் பொருளாகுந் தன்மை இன்றிக்கேயிருக்க, பிர காரியாகச் சொல்லிக் கேட்டினை அடைகின்றீர்கோளே கெடு விகாள்! என்கிறார் என்றபடி. 'விளம்புதிரே' என்ற ஏகாரத் தால், 'எடுத்துப் பேசுவதற்கும் யோக்யதை இல்லை' என்று இருக்கிறார் காணும் இவர். (8)

---

என்றால், உண்டானால் அன்னமிட்டுப் பசியைப் போக்குவர்; இல்லாவிடில், 'இன்னார் வீட்டில் பசியாளர்க்கு இடுவர், அங்கே போ' என்று சொல்லுதல் செய்வர்கள்; அதனைச் சொன்னபடி.

1. மேலே கூறிய நாராயண பதத்தைத் திருவுள்ளம்பற்றிப் 'பிரகாரங் களிலே ஒன்றை' என்று அருளிச்செய்கிறார்.

440.

விளம்பும் ஆறு சமய மும்அவை யாகியும் மற்றும் தன்பால்
அளந்து காண்டற் கரிய னாகிய ஆதிப் பிரான்அமரும்
வளங்கொள் தண்பணை சூழ்ந்து அழ காய திருக்குரு கூரதனை
உளங்கொள் ஞானத்து வைம்மின் உம்மை உயக்கொண்டு போகுறிலே.

பொ - ரை:—சொல்லப்படுகின்ற ஆறு புறச் சமயங்களும் மற்று முள்ள குத்ருஷ்டிகளும் சபையாகத் திரண்டு வந்தாலும் தன் விஷயத்தில் அளவிட்டுக் காண்பதற்கு அரியனாய் இருக்கிற ஆதிப்பிரான் அவன் எழுந்தருளியிருக்கின்ற, வளப்பம் பொருந்திய குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த அழகாய் இருக்கின்ற திருக்குருகூர் என்னும் திவ்ய தேசத்தை, நீங்கள் உங்களை உஜ்ஜீவிப்பித்துக் கொண்டு நடக்கவேண்டியிருந்தீர்களாகில், மானச ஞானத்திலே வையுங்கோள் என்கிறார்.

வி - கு:—ஆறு சமயமும் மற்றும் அவை யாகியும் என்க. அவை-சபை. அமரும் திருக்குருகூர் என்க. உம்மை உய்யக்கொண்டு போகிறில், அதனை உளம்கொள் ஞானத்து வைம்மின் என்க.

ஈடு:—ஒன்பதாம்பாட்டு. [1] உங்களுடைய உஜ்ஜீவனத்திற்கு அவ்வளவும் செல்லவேணுமோ? அவன் தங்கியிருக்கிற திருநகரியை உங்கள் ஞானத்துக்கு விஷயமாக்க அமையும் என்கிறார்.

விளம்பும் ஆறு சமயமும் - [2] சிலவற்றைச் சொல்லா நின்றால், தாங்களும் சில தர்க்கங்களைச் சொல்லா நிற்பர்களத்தனை போக்கி, பிரமாணத்திற்கு அநுகூலமான தர்க்கம் அல்லாமை யாலே கேவலம் உக்திசாரமேயாயிருக்கிற புறச்சமயங்கள் ஆறும். புறச் சமயங்கள் ஆறுவன: சாக்கிய உலூக்ய அக்ஷபாத க்ஷபண கபில பதஞ்சலி மதங்கள். இது பாஷ்யகாரர் அருளிச்செய்தது. மற்றும் அவை யாகியும் - மற்றும் அவற்

1. "திருக்குருகூரதனை உளம்கொள் ஞானத்து வைம்மின்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார். 'அவ்வளவும்' என்றது, பகவான் அளவும் என்றபடி.

2. "விளம்பும்" என்ற விசேஷணத்திற்குப் பொருள் அருளிச்செய்கிறார் 'சிலவற்றை' என்று தொடங்கி. 'சிலவற்றைச் சொல்லா நின்றால்' என்றது, வேதாந்திகள் பிரமாண அநுகூலமாகச் சில தர்க்கங்களைச் சொல்லா நின்றால் என்றபடி. சாக்கியமதம் - பௌத்தமதம். உலூக்கியமதம் - சார்வாகமதம். அக்ஷபாதமதம் - கௌதமமதம், க்ஷபணமதம் - ஜைநமதம்.

ரோடு ஒத்த குத்ருஷ்டிகளும். [1]"புற மதத்தில் உள்ளவர்களும் குத்ருஷ்டிகளும் மோக்ஷ பலனைப் பெருதவர்கள்; அவர்கள் தாமத குணமுடையவர்கள் என்று எண்ணப்படுகின்றனர்." தன்பால் அளந்து காண்டற்கு அரியனுகிய ஆதிப் பிரான் அமரும் - பிரமாணத்திற்கு மாறுபட்ட தர்க்கங்களால் 'இவ் வளவு' என்று அளவிட்டு அறிய ஒண்ணுதபடி இருக்கிற ஜகத்காரண பூதனனவன் விரும்பித் தங்கியிருக்கிற; [2]தன் னளவில் வந்தால் 'இல்லை' என்கைக்கும் 'இவ்வளவு' என்று அளவிட அரிதாய் இருக்கும்; [3]'இல்லை' என்னும்போதும், வஸ் துவை 'இது' என்று அளவிடவேணுமே? அதாவது, இவ னுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகள் புறம்பான குத்ருஷ்டி களால் அசைக்க முடியாததாய் இருக்கும் என்றபடி. [4]அதற்கு அடி என்? என்றல், '**ஆதிப்பிரான்**' என்கிறர். என்றது, "என்னுடைய தாய் மலடி" என்ன ஒண்ணுதே யன்றே? என் றபடி.

வளங்கொள் தண் பணை சூழ்ந்து அழகாய திருக்குரு கூரதனை - சம்பத்தையுடைத்தாய்ச் சிரமத்தைப் போக்கக் கூடியதான நீர்நிலங்களாலே சூழப்பட்டு, கண்டார்க்கு வைத்த கண் வாங்க ஒண்ணுதபடி காட்சிக்கு இனியதான திருநகரியை. உளம்கொள் ஞானத்து வைம்மின் - [5]ஞானம் உதித்து, புறத் தேயுள்ள இந்திரியங்களாலே புறப்பொருள்களைக் கிரஹிப்

---

1. குத்ருஷ்டிகளைப் புறச் சமயங்களோடு சேர்த்து "அவையாகியும் மற்றும்" என்று அருளிச்செய்யலாமோ? என்ன, அதற்கு விடை அருளிச் செய்கிறர் 'புறமதத்திலுள்ளவர்களும்' என்று தொடங்கி.

2. 'தன்னளவில் வந்தால்' என்று தொடங்கும் வாக்கியத்திற்குக் கருத்து, வஸ்துவை 'இது' என்று அளவிட்டு, பின்னேயன்றே தூஷிப்பது; அளவிட முடியாதது ஆகையாலே, அளவிட்டு தூஷிக்கமுடியாது என்பது.

3. அவர்கள் இவனை அங்கீகரித்தாலன்றே அளவிட வேண்டுவது இவனை இசையாதார்க்கு அது வேண்டாவே? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறர் 'இல்லை என்னும் போதும்' என்று தொடங்கி.

4. 'அதற்கு அடி என்? என்றல்' என்றது, அளவிட முடியாமைக்கு அடி என்? என்னுதல்; இல்லை என்னக் கூடாமைக்கு அடி என்? என்னுதல் என்றபடி.

5. "உளம் கொள் ஞானம்" என்று மானச ஞானத்திலே வைக்கச் சொல்லுகிறது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறர் 'ஞானம் உதித்து' என்று தொடங்கி.

புதற்குமுன்னே, மானச ஞானத்துக்குத் திருநகரியை விஷய மாக்குங்கோள். உளம்கொள் ஞானம்-மானச ஞானம். என்றது, [1]புறத்திலே செல்லாதபடி ஞானத்தை உள் விஷயத்தில் (திருநகரியில்) ஈடுபடும்படியாகச் செய்யப் பாருங்கோள் என்றபடி. உம்மை உய்யக்கொண்டு போகுறிலே - "இவனை இருக்கின்றவனாக அறிகிறார்கள்" என்கிறபடியே, உம்முடைய சத்தை பெற்றுப் போக வேண்டியிருக்கில். [2]"இல்லாதவனாக ஆகிறான்" என்கிறபடியே, 'சென்றற்றது' என்றே இருக்கிறாராயிற்று இவர். [3]"மஹாத்மநா — தன்னில் தான் வாசி சொல்லுமத்தனை போக்கிப் புறம்பு ஒரு ஒப்புச் சொல்ல ஒண்ணாதபடியான பெருமாளோடே விரோதம் உண்டு; ஆகையாலே, இலங்கையும் இல்லை; இராவணனும் இல்லை; நீங்களும் இல்லை" என்று திருவடி கூறினாற்போலே. (9)

## 441.

உறுவ தாவதெத் தேவும் எவ்வுல கங்களும் மற்றும்தன்பால்
மறுவின் மூர்த்தியோ டொத்துஇத் தனையும்நின்றவண்ணம்நிற்கவே
செறுவில் செந்நெல் கரும்பொ டோங்கு திருக்குரு கூரதனுள்
குறிய மாணுரு வாகிய நீள்குடக் கூத்தனுக் காட்செய்வதே.

---

1. "ஆதிப்பிரான் அமரும் திருக்குருகூர்" என்பதற்கு, வேறும் ஒரு பாவம் அருளிச்செய்கிறார் 'புறத்திலே' என்று தொடங்கி. 'உள் விஷயம் என்பது, திருநகரியைக் காட்டுமாறு யாங்ஙனம்? எனின், உள் பொருள்களாலே பலமாக விரும்பப்படுகின்ற காரணத்தால், திருநகரியும் 'உள் விஷயம் எனப்படுகின்றது. உள்பொருள்கள் - ஆழ்வாரும் எம்பெருமானும்.

2. நித்தியமான ஆத்மாவை இப்போது "உய்யக்கொண்டு போகுறிலே" என்பான் என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'இல்லாதவனாக' என்று தொடங்கி. தைத்திரீய ஆனந். 6.

3. அவர்கள் சத்தை உண்டு என்றிருக்க, இப்படி 'இல்லை' என்று சொன்ன பேர் உளரோ? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மஹாத்மநா' என்று தொடங்கி. என்றது, தன்னைக் கட்டிக்கொண்டு போகின்ற இராக்கதர்களைப் பார்த்து, 'பெருமாளோடு உங்களுக்கு விரோதம் வந்த காரணத்தாலே, இலங்கையும் இராவணனும் நீங்களும் இல்லை' என்று கூறியதைத் தெரிவித்தபடி. இது, ஸ்ரீராமா. சுந். 43 : 25. 'தன்னில் தான் வாசி சொல்லுமத்தனை போக்கி' என்றது, அவதார வேடத்தோடே நின்ற ஸ்ரீராமபிரானாகிய தனக்கு, பரத்துவ ஆகாரமே ஒப்பு என்று சொல்லுமத்தனை போக்கி ஒப்பாகச் சொல்லத்தக்க வேறு பொருள் இல்லை என்பதனைத் தெரிவித்தபடி.

பொ - ரை :—எல்லாத் தேவர்களும் எல்லா உலகங்களும் மற்றும் உண்டான எல்லாப் பொருள்களும் ஆகிய இத்தனையும், குற்றம் இல்லாத மூர்த்தியைப் போன்று இருந்தபடியே தன்பக்கலிலே நிற்க, வயல்களிலே செந்நெற்பயிர்கள் கரும்புகளைப் போன்று ஓங்கி வளர்கின்ற திருக்குருகூர் என்ற திவ்ய தேசத்திலே எழுந்தருளி இருக்கின்ற பிரஹ்மசாரி வேடத்தையுடைய வாமனனாகிய நீள்குடக்கூத்தனுக்கு அடிமை செய்வதே சீரியதாயும் உசிதமாயுமுள்ள புருஷார்த்தம் ஆகும்.

வி - கு :—இத்திருப்பாசுரத்தை, ஆட்செய்வதே உறுவது ஆவது எனப் பூட்டுவிற் பொருள்கோளாக முடிக்க. மற்றும் இத்தனையும் மறுவின் மூர்த்தியோடு ஒத்துத் தன்பால் நின்றவண்ணம் நிற்க எனக் கூட்டுக. மாண் - பிரஹ்மசாரி. குடக்கூத்தன் - குடக்கூத்து ஆடியவன்; கிருஷ்ணன்.

ஈடு :—பத்தாம்பாட்டு. [1] தன் ஐஸ்வரியத்தில் ஒன்றும் குறையாமல் வந்து திருநகரியிலே நின்றருளுகின்ற பொலிந்து நின்ற பிரானுக்கு அடிமை செய்கையே உசிதம் என்கிறார்.

நீள் குடக் கூத்தனுக்கு ஆட்செய்வதே உறுவதாவது என்க. [2] உறுவதும் இது - சீரியதும் இது; ஆவதும் இது - செய்யத்தக்கதும் இது என்னுதல். அன்றிக்கே, உறுவதாவது இதுவே என்னுதல். எத் தேவும் எவ் உலகங்களும் - எல்லாத் தேவர்களும், தேவர்களுக்குப் போகஸ்தானமான எல்லா உலகங்களும். மற்றும் - மற்றும் உண்டான உயிர்ப் பொருள்களும் உயிரல் பொருள்களும். தன்பால் மறுவின் மூர்த்தியோடு ஒத்து - தன்னிடத்து வந்தால் [3] மறுவில்லாதபடி மூர்த்தியோடு ஒத்து. என்றது, [4] இவை மூர்த்தியாமிடத்தில் பிரகிருதி சம்பந்தம் இல்லாத விக்கிரஹத்தைப் போன்று

1. "இத்தனையும் நின்றவண்ணம் நிற்கவே" என்றதனைக் கடாக்ஷித்துத் 'தன் ஐசுவரியத்தில் ஒன்றும் குறையாமல் வந்து' என்கிறார். "திருக்குருகூரதனுள்" என்றது முதல் "ஆட்செய்வதே உறுவதாவது" என்பது முடியக் கடாக்ஷித்துத் 'திருநகரியிலே' என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

2. "உறுவதாவது" என்பதனைத் தொடர்மொழியாகவும், ஒரு மொழியாகவும் கொண்டு இருவகையாகப் பொருள் அருளிச்செய்கிறார்.

3. 'மறுவில்லாதபடி மூர்த்தியோடு ஒத்து' என்றது, அசாதாரண விக்கிரஹத்தை ஒத்திருக்க என்றபடி.

4. 'இவை' என்றதனால், "எத்தேவும் எவ்வுலகங்களும்" என்றதனைக் குறிக்கிறார்.

குறைவின்றிக்கே இருக்கையைத் தெரிவித்தபடி. மறு ஆகிறது - குற்றம்; அதாவது, குறைவு; அது இன்றிக்கே இருக்கை. பிரிந்து நிலைத்திருக்கையும் தோன்றுதலும் முதலானவைகள் இன்றிக்கே இருக்கையைத் தெரிவித்தவாறு. அன்றிக்கே, மறுவையுடைத்தான விக்கிரஹம் - ஸ்ரீவத்சத்தையுடைத்தான விக்கிரஹம்; அதனோடு ஒத்து என்னுதல்; மறு-ஸ்ரீவத்சம்; இல் - வீடு; இரும்பிடம். அன்றிக்கே, மறு இல்லாத மூர்த்தி உண்டு - குற்றங்கட்கு எதிர்த்தட்டான விக்கிரஹம்; அதனோடு ஒத்து என்னுதல்; மறு - குற்றம்.[1] இவை சரீரத்தோடு ஒத்திருத்தலாவது என்? என்னில், பிரிந்து நிலைத்திருத்தலுக்குத் தகுதியில்லாத ஆதாரஆதேய பாவ, ஏவுகின்ற ஏவப்படுகின்ற பாவ, சேஷசேஷி பாவமான சரீர இலக்கணங்கள் இவற்றிற்கு உண்டு ஆகையாலே. [2]மரத்திலே தேவதத்தன் நின்றால் அது அவனுக்குச் சரீரமாகாதேயன்றோ? இங்கு அங்ஙன் அன்றிக்கே இருக்கையைத் தெரிவித்தபடி. இத்தனையும் நின்ற வண்ணம் தன்பால் நிற்க - இவையடங்கலும் இருந்தபடியே தன் பக்கலிலே நிற்க. [3]தன்னை ஒழிந்த சகல பதார்த்தங்களும் தனக்குச் சரீரமாகையாலே சேஷமாம்படி இருக்கிற இந்த ஐஸ்வர்யத்தில் ஒன்றும் குறையாதபடி வந்து நிற்கை. என்றது, உபய விபூதிகளையுமுடையவனாகையாலே வந்த ஐஸ்வர்யம் அடையத் தோற்றும்படிக்கு ஈடாகவாயிற்று இங்கு வந்து நிற்கிறது என்றபடி. நன்று; தாழ நிற்கிற இடத்தில் ஐஸ்வர்யம் தோற்றுமோ? எனின், இராஜபுத்திரன் ஓர்

---

1. ஆக, "மறுவில் மூர்த்தி" என்றதற்கு மூன்று வகையாகப் பொருள் அருளிச்செய்தபடி. இம்மூன்று வகையான பொருள்களாலும் சரீரமாக இருப்பதனாலே சேஷம் என்பதனைத் தெரிவித்தபடி.

2. ஆதார ஆதேய பாவம் சொன்னால் போதியதாகாதோ? 'பிரிந்து நிலைத்திருத்தலுக்குத் தகுதியில்லாத' என்ற விசேஷணம் எற்றிற்கு? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'மரத்திலே' என்று தொடங்கி. 'மரத்திலே தேவதத்தன் நின்றான் என்றால், அங்குச் சரீர ஆத்ம பாவம் இல்லை; சாதி குணங்கள் ஒரு வடிவிலே கிடந்தன என்றால், அங்குச் சரீர ஆத்ம பாவம் இல்லை; தாரகமாகவும் நியாமகமாகவும் சேஷியாகவும் இருக்கிற ஒரு பொருளிலே ஆத்ம பாவத்தையும், தார்யம் நியாம்யம் சேஷம் இவற்றோடு கூடியிருக்கின்ற ஒரு பொருளிலே சரீர பாவத்தையும் கோடல் வேண்டும்' என்றார் முன்னும். (7-ஆம் பாசுரம் உரை காண்க.)

3. "இத்தனையும் நின்றவண்ணம் நிற்க" என்பதற்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'தன்னை ஒழிந்த' என்று தொடங்கி.

ஒலியலை உடுத்துத் தாழ இருந்தாலும் ஐஶ்வர்யத்தில் குறைந்து தோன்றாதேயன்றோ ?

செறுவில் செந்நெல் கரும்பொடு ஓங்கு திருக்குருகூரதனுள் - வயல்களில் செந்நெற் பயிர்களானவை கரும்போடு ஒக்க ஓங்காநின்றுள்ள திருக்குருகூரதனுள்; [1]பரமபதத்திலே எல்லாரும் ஒருபடிப் பட்டிருக்குமாறு போலே, அவ்வூரில் பொருள்களில் ஒன்றில் ஒன்று குறைந்திருப்பதில்லை. குறிய - கோடியைக் காணியாக்கினாற்போலே, கண்களால் முகக்கலாய் இருக்கும்படி வடிவை அமைத்தபடி. மாண் உருவாகிய - இட்ட போதொடு இடாதபோதொடு வாசியற முகமலர்ந்து போகும் படியாக இரப்பிலே தழும்பு ஏறினபடி. நீள் குடக் கூத்தனுக்கு - [2]குடக்கூத்து ஆடிவிட்ட பின்பும், அம் மநோஹாரி செயலைப் பிற்பட்டகாலத்தில் கேட்டார்க்கும் ஸமகாலத்திலே கண்டாற்போலே பிரீதி பிறக்கும்படியாயிற்றுக் குடக்கூத்து ஆடிற்று. ஆள் செய்வதே - [3]அச் செயல்தானே அடிமையிலே மூட்டும்; நீங்கள் இசையுமத்தனையே வேண்டுவது. (10)

## 442.

ஆட்செய் தாழிப் பிரானைச் சேர்ந்தவன் வண்குரு கூர்நகரான்
நாட்கமழ் மகிழ் மாலை மார்பினன் மாறன் சடகோபன்
வேட்கையால் சொன்ன பாடல் ஆயிரத் துள்இப்பத் தும்வல்லார்
மீட்சி யின்றி வைகுந்த மாநகர் மற்றது கையதுவே.

**பொ - ரை :**—வாசிகமான கைங்கர்யத்தைச் செய்து, ஆழிப் பிரானைச் சேர்ந்தவரும், வளப்பம் பொருந்திய திருக்குருகூர் நகரையுடையவரும், புதிய வாசனையோடு கூடின மகிழம்பூ மாலையைத் தரித்த மார்பையுடையவரும், மாறன் சடகோபர் என்ற திருப்பெயர்களையுடை

---

1. இவ்வுலகத்தில் ஒன்றில் ஒன்று குறையாதிருக்கக் கூடுமோ? என்ன, குறைந்திராமைக்குக் காரணம், 'திவ்யதேசமாகையாலே' என்று கூறத் திருவுள்ளம்பற்றி அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'பரமபதத்திலே' என்று தொடங்கி.

2. "நீள்" என்ற அடைமொழிக்குக் கருத்து அருளிச்செய்கிறார் 'குடக் கூத்து' என்று தொடங்கி. நீட்சி - இனிமையிலே நோக்கு. மநோஹாரி - மனத்தை அழிக்கக் கூடியது.

3. "நீள்குடக் கூத்தனுக்கு ஆட்செய்வது" என்று கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'அச்செயல்தானே' என்று தொடங்கி.

யவருமான நம்மாழ்வார், விருப்பத்தோடு அருளிச்செய்த திருப்பாசுரங்கள் ஆயிரத்துள் இப்பத்துத் திருப்பாசுரங்களையும் கற்று வல்லவர்களது கையிலே இருப்பதாம்; இவ்வுலகத்திற்கு வேறுபட்டதும் சென்றவர்கள் மீண்டு வருதல் இல்லாததுமான வைகுந்தமாநகரமானது என்றவாறு.

வி - கு :—மற்றதுவாகிய வைகுந்தமாநகர், மீட்சியில்லாததான வைகுந்தமாநகர், இப்பத்தும் வல்லார் கையது என்க. இனி, வைகுந்தமாநகர் அது மீட்சி இன்றிக் கையது என்று கூட்டலுமாம். கையது: குறிப்பு வினைமுற்று. ஆழிப்பிரானை ஆட்செய்து சேர்ந்தவன் என்க. மகிழம்பூமாலை ஆழ்வார்க்குரியது; 'வகுளாபரணன்' என்ற திருப்பெயரையும் நினைவு கூர்க.

ஈடு :—முடிவில், [1] இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பரமபதம் எளிது என்கிறார்.

ஆள் செய்து ஆழிப் பிரானைச் சேர்ந்தவன் - அடிமை செய்து சர்வேசுவரனைக் கிட்டினவர். [2] முறையிலே சர்வேசுவரனைப் பற்றினவராயிற்று இவர். [3] என்றது, "வியக்கத் தக்க உடலின் சேர்க்கை ஈசுவரனுக்கு அடிமை செய்யும் பொருட்டு" என்கிறபடியே, அவன் கொடுத்த உபகரணங்களைக்கொண்டு உலக விஷயங்களிலே போகாமல், [4] "தந்த நீ கொண்டாக்கினையே" என்கிறபடியே, வகுத்த விஷயத்துக்கே சேஷமாக்கிக் கொண்டு கிட்டினமையைத் தெரிவித்தபடி. [5] ஆட்கொள்ளுகைக்கு உபாயம் அவன் கையிலே உண்டுபோலே

1. "வல்லார் கையதுவே வைகுந்தமாநகர்" என்றதனைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார்.

2. 'ஆழிப்பிரானைச் சேர்ந்து ஆட்செய்தவன்' என்னாது, "ஆட்செய்து ஆழிப்பிரானைச் சேர்ந்தவன்" என்றதற்கு பாவம் அருளிச்செய்கிறார். 'முறையிலே' என்று தொடங்கி.

3. அடிமை எல்லா ஆத்மாக்களுக்கும் பொதுவாகில் அநுகூலமான முறையில் அவனைக் கிட்டுதல் எல்லார்க்கும் ஒவ்வாதோ? இவரை விசேடித்துக் கூறுவது என்? என்ன, அதற்கு விடை அருளிச்செய்கிறார் 'என்றது' என்று தொடங்கி. 'வியக்கத் தக்க' என்று தொடங்கும் பொருளையுடைய சுலோகம், விஷ்ணு தத்வம்.

4. திருவாய். 2. 3 : 4.

5. "ஆழிப்பிரானை ஆட்செய்து" என்று கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'ஆட்கொள்ளுகைக்கு' என்று தொடங்கி. "ஆழி" என்றதிலே நோக்கு.

காணும். தான் விருத்தவானாய்க் காணும் இவரை விருத்தியிலே சேர்ப்பித்தது. [1] கையில் திருவாழி சேர்ந்தாற்போலே ஆயிற்று இவரும் சேர்ந்தபடி. கெடு மரக்கலம் கரை சேர்ந்தாற்போலே இருத்தலின் 'சேர்ந்த' என்கிறார். [2] ஆட்செய்கையாவது, அடிமை செய்கை. மனத்தால் செய்தல், வாக்கால் செய்தல், சரீரத்தால் செய்தல் என அவ்வடிமைதான் மூன்று வகைப்படும். இவற்றுள், மனத்தாலும் சரீரத்தாலும் செய்யும் அடிமைகட்கு இவர் ஆள் அல்லர். என்றிய? என்னில், [3] "காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்" என்கையாலே. இனி, வாக்கால் செய்யும் அடிமை ஒன்றுமே யானால், வாசிகமாகத் திருவாய்மொழி பாடி அடிமை செய்தார் என்கிறதோ? என்னில், அன்று; அப்படியாமன்று [4] இப்பாசுரம் "முனியே நான்முகனே" என்ற திருவாய்மொழியிலே ஆகவேணும்; இல்லையாகில், எல்லாவற்றிற்கும் சுருக்கமான முதல் திருவாய்மொழியிலேயாகிலும் ஆகவேணும்; இல்லையாகில், இவர் வாசிகமாக அடிமைசெய்த "புகழும் நல்லொருவன்" என்ற திருவாய்மொழியிலே ஆகப்பெறில் சிறப்புடையதாம்; ஆனால், மற்றைத் தேவர்கள் பரம்பொருள் அலர் என்று மறுத்து அறுதியிட்டுப் பேசுதல் மூலமாகச் சர்வேசுவரனுடைய பரத்துவத்தை அருளிச்செய்கையாலே ஆனலோ? என்னில், அதுவாகில், முதல் திருவாய்மொழியிலேயாக அமையும். ஆனல், பரத்துவ நிர்ணயத்திலே பரோபதேசமும் ஆகை

1. "ஆழிப்பிரானைச் சேர்ந்தவன்" என்று கூட்டி பாவம் அருளிச்செய்கிறார் 'கையில்' என்று தொடங்கி.

2. ஆட்செய்கையாவது எது? என்ன, 'இன்னது' என்கிறார் 'ஆட்செய்கையாவது,' என்று தொடங்கி.

3. பாலாழி நீ கிடக்கும் பண்பையாம் கேட்டேயும்
காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்—நீலாழிச்
சோதியாய்! ஆதியாய்! தொல்வினைஎம் பால்கடியும்
நீதியாய்! நிற்சார்ந்து நின்று.

பெரிய திருவந். 34. நன்று; நெஞ்சு அழிந்தால் வாசிகமானதுதான் செய்யக்கூடுமோ? எனின், "முடியானே" என்ற திருவாய்மொழியில் சொல்லப்பட்ட கரணங்களை யுடையவராகையாலே 'மனம் முன்னே, வாக்கு பின்னே' என்னும் நியமம் இல்லை இவர்க்கு என்க.

4. 'இப்பாசுரம்' என்றது, "ஆட்செய்த ஆழிப்பிரானைச்சேர்ந்தவன்" என்றதனை,

யாலே ஆனாலோ? என்னில், அதுவாகில், "திண்ணன் வீடு" என்ற திருவாய்மொழியிலே யாதல், "அணைவதரவணை" என்ற திருவாய்மொழியிலே யாதல் அமையும். ஆனால், அர்ச்சாவதாரத்திலே பரத்துவம் அருளிச்செய்கையாலே ஆனாலோ? என்னில், அதுவாகில், [1]"செய்ய தாமரைக் கண்ணன்" என்ற திருவாய்மொழியிலே யாதல் அமையும். ஆனால், பரோபதேசம் பண்ணுகையாலே சொல்லிற்று ஆனாலோ? என்னில், அதுவும் ஒண்ணாது. என்னை? எனின், "வீடுமின் முற்றவும்" என்ற திருவாய்மொழி தொடங்கிப் பலவிடங்களிலும் பரோபதேசம் செய்தார்; அவற்றிலும் ஆகப் பெற்றதில்லை. ஆனால், ஏது ஆவது? என்னில், இந்த "ஒன்றும் தேவும்" என்ற திருவாய்மொழியிலே, "திருக்குருகூரதனுள் பரன்திறமன்றிப் பல்லுலகீர் தெய்வம் மற்றில்லை பேசுமினே" என்று, பொலிந்து நின்றபிரானே எல்லாப் பொருள்கட்கும் அறப் பெரியவன் என்று இவர் அருளிச்செய்ய, கேட்டு, "கபால நன் மோக்கத்துக் கண்டு கொண்மின்" என்ன, கண்டு உலகமெல்லாம் திருந்தி ஸ்ரீ வைஷ்ணவர்களானார்கள். [2]"இவர் தாம் அவர்களுக்கு மங்களாசாசனம் பண்ணும்படி யன்றோ அவர்கள் தாம் திருந்தினபடி. [3]"பொலிக பொலிக" என்று இதற்கு என்ன ஒரு திருவாய்மொழி நேருகிறாரே யன்றோ? [4]'சர்வேசுவரன் அவதரித்துத் திருத்தப் பார்த்த விடத்தும் திருந்தாத சம்சாரத்திலே இவர் திருத்தத் திருந்தினபடி. இனி, இவர்க்குத் தத்துவ நிர்ணயம் பண்ண வேண்டாதபடி [5]"இடங்கொள் சமயத்தை யெல்லாம் எடுத்துக் களைவன போலத் தடங்கடற் பள்ளிப் பெருமான் தன்னுடைப் பூதங்களே" யாம்படி திருத்துகையாலே, 'ஆட்செய்து ஆழிப் பிரானைச் சேர்ந்தவன்' என்கிறார்.

---

1. "செய்ய தாமரைக் கண்ணன்" என்ற திருவாய்மொழியில் "நெஞ்சினால் நினைப்பான் யவன் அவனாகும் நீள் கடல் வண்ணன்" என்ற ஒன்பதாம் பாசுரத்திலே நோக்கு.

2. திருந்தினார்கள் என்று அறியும்படி எங்ஙனே? என்ன, 'இவர் தாம்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

3. அப்படி மங்களாசாசனம் செய்தாரோ? என்னில், அதற்கு விடை அருளிச்செய்கிறார் "பொலிக பொலிக" என்று தொடங்கி.

4. இவர் இப்படித் திருத்தியது அரிய செயலோ? என்ன, 'சர்வேசுவரன்' என்று தொடங்கி அதற்கு விடை அருளிச்செய்கிறார்.

5. திருவாய், 5. 2 ; 4.

**வண்** குருகூர் நகரான் - இந்த நன்மைக்குக் காரணம் அவ்வூரில் பிறப்பாயிற்று. நாள் கமழ் மகிழ் மாலை மார்பினன்- "நண்ணாதார் முறுவலிப்ப" என்ற திருவாய்மொழியிலே சம்சாரிகள் படுகிற கிலேசத்தை அநுசந்தித்து, சாத்தின மாலையும் வாடி இருந்தது முன்பு; இப்போது, பகவானுடைய பரத்துவத்தை விரித்து அருளிச்செய்து, 'இனி இவர்களுக்கு ஒரு குறை இல்லை' என்று தேறின பின்பு, இட்ட மாலையும் செவ்விபெற்றதாயிற்று; ஆதலின், '**நாள் கமழ் மகிழ் மாலை**' என்கிறது. மாறன் சடகோபன் - பகவானை அடைவதற்குத் தடையாக உள்ளனவற்றிற் கெல்லாம் எமனானவர். வேட்கையால் சொன்ன பாடல் ஆயிரத்துள் இப் பத்தும் வல்லார் - தம்முடைய ஆசையின் மிகுதியாலே அருளிச்செய்த பாடல் ஆயிரத்திலும் இப் பத்தையும் வல்லார். சிலர் ஐம்பொறிகளையும் அடக்கினவர்களாய் வந்து நின்று கேட்கச் சொல்லுகிறாரன்று; தம்முடைய வேட்கையால் சொல்லுகிறாராதலின், '**வேட்கையால் சொன்ன**' என்கிறார். மீட்சி இன்றி வைகுந்த மா நகர் வல்லார் கையது - இரண்டும் இவர்கள் கையது. மீண்டு வருதல் இல்லாத பரமபதமானது இவர்கள் கையது. இந்தப் பத்தும் பத்தாக இவர்கள் கையது பரமபதம். இப் பொருளில் 'மற்றது' இடைச்சொல். அன்றிக்கே, 'மற்றது' என்பதனை வைகுந்தமாநகருக்கு அடைமொழியாக்கி, மற்றையதான - அதாவது, சம்சாரத்துக்கு எதிர்த்தட்டான வைகுந்தமா நகரமானது அவர்கள்கையது என்னலுமாம். அன்றிக்கே, பகவானுடைய பரத்துவஞானமே பிரயோஜனம் போரும்; அதற்குமேல், ஞான பல ரூபமான கைங்கர்யத்திற்கு ஏகாந்த தேசமான பரமபதமும் அவர்களுக்கு எளிதாம் என்னலுமாம். (11)

—

## திருவாய்மொழி நூற்றந்தாதி

ஒன்றுமிலைத் தேவிவ் வுலகம் படைத்தமால்
அன்றினை ஆரும் அறியவே - நன்ருக
முதலித்துப்பேசியருள் மொய்ம்மகிழோன் தாள்தொழவே
காதலிக்கும் என்னுடைய கை. (40)

---

நான்காம்பத்து ஈட்டின் தமிழாக்கம்

முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானர் ஜீயர் திருவடிகளே அரண்.

நம்பிள்ளை நற்ருள் வாழ்க.

வடக்குத் திருவீதிப் பிள்ளை மலரடி வாழ்க.

மாறன் மலரடி வாழ்க.



——(o)——

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன் மலரடி வாழ்க.

## பிற்சேர்க்கை I

—(o)—

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

செய்யுள் அகராதி முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே அரண்.

---

ஸ்ரீ:

# பிற்சேர்க்கை II

—:(o):—

## வியாக்கியானத்தில் வந்துள்ள

# ஐதிஹ்யங்கள்

ஒருநாள் ஸ்ரீவைஷ்ணவ வண்ணாத்தான், திருப்பரிவட்டங்களை அழகியதாக வாட்டிக் கொண்டுவந்து எம்பெருமானார்க்குக் காட்ட, மிக உவந்தாராய் அவனைப் பெருமாள் திருவடிகளிலே கைப்பிடித்துக் கொண்டு புக்கு 'நாயன்தே! இவன் திருவரைக்குத் தகுதியாம்படி வாட்டினபடி திருக்கண் சாத்தியருளவேணும்' என்று இவற்றைக் காட்டியருள, கண்டு உவந்தருளி உடையவரை அருள்பாடு இட்டருளி, 'இவனுக்காக ரஜகன், நம் திறத்தில் செய்த குற்றம் பொறுத்தோம்' என்று திருவுள்ளமாயருளினர். பக். 93.

"நம்மைப் போலே வாய்புகுசோறாகப் பறிகொடாதே, பலகாலம் பூமியிலே ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயோடே 'நாட்டாரோடு இயல்வொழிந்து' என்கிறபடியே, தங்கள் வேறுபாடு தோன்ற இருக்கப் பெறுவர்கள்" என்று சீயர் உருத்தோறும் அருளிச்செய்வர். பக். 109.

நாதமுனிகள், இராஜா சாமந்தன் தலையிலே அடியை இட்டு யானைக்கழுத்திலே புக்கபடியைக் கண்டு, 'சர்வேசுவரன் பிரமன் முதலியோர் தலையிலே அடியிட்டுப் பெரியதிருவடியை மேற்கொள்ளும்படி இதுவாகாதே' என்று மோகித்தார் என்பது பிரசித்தமே அன்றோ? இராஜா! தன் சேனையோடே கங்கைகொண்டசோழபுரத்து ஏறப் போகச் செய்தே, பெரிய முதலியார் மன்னனார் திருவடிகளிலே சேவித்திருக்கச் செய்தே, பெண்பிள்ளை வந்து 'நம் அகத்திலே ஒரு குரங்கும் இரண்டு வில்லிகளும் ஒரு பெண்ணுமாக வந்து புகுந்தார்கள்' என்றவாறே, 'பெருமாளும் இளையபெருமாளும் பிராட்டியும் ஐந்திரவியாகரண பண்டிதனும்' என்று புத்தி பண்ணிப் பின்தொடர்ந்து போய், முன்னே போகின்றவர்கள் 'போகின்றார்கள், போகின்றார்கள்' என்னக் கேட்டுக் கீழை வாசலிலே சென்றவாறே, 'இப்படிப் போகின்றவர்களைக் கண்டீர்களோ'

என்று வாசலிலவர்களைக் கேட்க, அவர்கள் 'கண்டிலோம்' என்ன, அதுவே ஹேதுவாகத் திருநாட்டிற்கு எழுந்தருளினார் அன்றே! பக். 140.

இராஜேந்திர சோழன் என்ற ஊரிலே திருவாய்க் குலத்தாழ்வார் என்று ஒருவர் உண்டு; அவர் கார்காலத்தில் 'பயிர் பார்க்க' என்று புறப்பட்டு மேகத்தைக் கண்டவாறே மோஹித்து விழுந்தார்; அவர் விழுந்ததைக் கண்டு நின்ற குடிமகன் ஓடி வந்து அவரை எடுத்துக்கொண்டு வந்து வீட்டிலே விட்டு, 'இவர் தன்மை அறிந்திருந்தும் இந்நாளிலே இவரை வயல் பார்க்கப் புறப்பட விடுவாருண்டோ' என்றான். பக். 143.

ஆழ்வான் திருக்கண்கள் நோவுபட்டபின்பு எம்பெருமானார் திருவுள்ளம் நோவுபட்டாற்போலே காணும்; திருத்தாயார் திருவுள்ளமும் படுகிறது. பக். 147.

'ஸ்ரீ விபீஷணாழ்வானைப் புகுர வொட்டேன்' என்றார் மஹாராஜர்; 'இவன் புகுராவிடில் நாம் உளோமாகோம்' என்கிறார் பெருமாள்; இப்படி இருவரும் மாறுபடுதற்குக் கருத்து என்' என்று நஞ்சீயர் கேட்க, 'இருவரும் சரணமாகப் பற்றினவர்களை விடோம் என்று மாறுபடுகிறார்கள் காணும்' என்று பட்டர் அருளிச்செய்த வார்த்தை. பக். 185.

'இராவணன் மாயா சிரசைக் காட்டினபோது பிராட்டியும் மற்றைப் பெண்களைப் போன்று சோகித்துக் கண்ணீர் விழவிட்டாளாயிருந்தது; இதற்கு அடி என்? இது கேட்டபோதே முடியவன்றோ தக்கது; என்று சீயரைக் கேட்க, 'அவதாரத்தில் மெய்ப்பாட்டாலே 'மெய்' என்றே சோகித்தாள்; ஞானமின்றியிலே ஜீவிக்கைக்கு ஏது அவருடைய சத்தையாகையாலே உளளாயிருந்தாள்; இவ்வர்த்தம் மெய்யாகில் சத்தையும் இல்லையாம்' என்று அருளிச்செய்தார். பக். 203.

பிள்ளையுறங்காவில்லிதாசருடைய குடிமகன் ஒருவனுக்கு, ஐயனார் ஏறி வலித்து நலிந்தவாறே, 'உனக்கு வேண்டுவது என்' என்று கேட்க, எனக்குப் பாலும் பழமுமாக உண்ண வேணும்; சாந்தும் புழுகும் பூசவேணும்; நல்ல புடைவை உடுக்க வேணும்; நல்ல ஆபரணம் பூணவேணும்; தண்டு ஏறவேணும்; அணுக்கன் இடவேணும்' என்ன, அவர்களும் அப்படியே செய்கிறோம்' என்று பிள்ளையின் திருமாளிகையிலே வந்து,

சாந்து, புழுகு, ஆபரணம் முதலானவைகளை வாங்கிக் கொண்டுபோய் அவற்றை அலங்கரித்துச் சாந்தியும் செய்து விட்டு வந்த அந்த இரவு, பண்டையிலும் இருமடங்கு அதிகமாக அவனை வலிக்க, 'இது என்?' என்று கேட்க, 'பிள்ளை சாத்திக் கொள்ளுகின்றவற்றையெல்லாம் கொண்டு வந்தீர் கோள்; அவர்க்குச் சாத்துகிற அணுக்கனை இட்டீர்கோள்; நான் அதன்கீழ்ப் போவேனோ?' என்னை வெயிலிலே கொண்டு போனீர்கோள்; என் உடம்பிலே நெருப்பை வழியட்டினாற் போலே அவர் சாத்துகிறவற்றைப் பூசினீர்கோள்; அரி கண்டம் இட்டாற்போலே அவர் சாத்துகிற ஆபரணத்தைப் பூட்டினீர்கோள்; நீங்கள் செய்த செயலுக்கு இவனைக்கொண் டல்லது போகேன்; என்று வலித்ததாம். பக். 214.

ஆய்ச்சி மகனுடைய அந்திம காலத்தில் பட்டர் 'அறிய' என்று எழுந்தருளியிருந்தாராய், தம்மை அறியாமலே கலங்கிக் கிடக்கிறபடியைக் கண்டு, பெருமாளிடத்தில் இவருடைய பக்தி இருந்தமையைத் தாம் அறிந்திருக்கையாலே, மெள்ளச் செவி யில் ஊதினாற்போலே, 'அழகிய மணவாளப் பெருமாளே சர ணம்' என்றாராம்; பின்னர், அதிலே உணர்த்தி யுண்டாய் நெடும்போதெல்லாம், 'அழகிய மணவாளப் பெருமாளே சர ணம்' என்று கூறிக்கொண்டே திருநாட்டுக்கு எழுந்தருளி னாராம். பக். 216.

வண்டரும் சொண்டரும் என்கிறவர்களுக்கு அரையன் சொன்ன வார்த்தைக்குப் பிள்ளையுறங்காவில்லிதாசர் பரி ஹாரம் செய்தபடியை இங்கே நினைப்பது. என்றது, என் சொல்லியவாறோ? எனின், அகளங்க நாட்டாழ்வான் இவர் களுக்கு அமணன் பாழியிலே சிங்கத்தைக் காட்டித் 'திரு முற்றம்; திருவடி தொழுங்கோள்' என்ன, அவர்களும் மெய் என்று திருவடி தொழுது, 'அது அமணன் பாழி' என்று அறிந்தவாறே மோஹித்து விழ, பிள்ளையுறங்காவில்லிதாசர் தம் ஸ்ரீ பாததூளியை அவர்களுக்கு இட, உணர்ந்து எழுந் திருந்த உண்மை வரலாற்றினை உணர்த்தியபடி. பக். 229.

திருக்கொட்டாரத்தின் அருகே கைங்கிரை கட்டிக்கொண் டிருக்கிற நாளிலே, சீயர் இத்திருவாய்மொழி அருளிச்செய் கிறாராய் இப்பாசுரத்தளவிலே வந்தவாறே, "தேர்ப்பாக னார்க்கு என்று நோய்க்கு நிதானம் சொன்னாளாகில், அத் தேர்ப்பாகனை இட்டு நீக்கிக் கொள்ளாமல் 'மாயன் தமர் அடி

நீறு கொண்டு அணிய முயலின்' என்று இதனைப் பரிஹார மாகச் சொல்லுவான் என்? நோய்க்கு நிதானம் ஒன்றும் பரிஹாரம் ஒன்றுமேயாயோ இருப்பது?" என்று நான் கேட்டேன்; "மோர்க்குழம்பு இழியாதே மோஹித்துக் கிடந்த சமயத்தில் சுக்கு இட்டு ஊதிப் பின்பு மோர்க் குழம்பு கொடுத்துப் பரிஹரிப்பாரைப் போலே, 'தேர்ப்பாகனார்க்கு' என்றபோதே அவரைக் கொடு வந்து காட்டப் பெருமை யாலே, முற்பட இவ்வழியாலே, தேற்றிப் பின்னை அவரைக் கொடு வந்து காட்டுவதாகக் காணும்" என்று அருளிச்செய் தார். பக். 229.

'ஆழ்வான் பணித்த வரதராஜஸ்தவத்திலே ஒரு சுலோ கத்தைக் கேட்டு, எம்பெருமானார் இப்பாசுரங்கேட்டால் பெரு மாள் இரங்காமை இல்லை; ஆழ்வான்! உன் முகத்தைக் காட்டிக் காணாய்' என்று பார்த்தருளினார். பக். 270.

நஞ்சீயர் இவ்விடத்தில் அருளிச்செய்வதொரு வார்த்தை உண்டு: "பூசுஞ் சாந்து என் நெஞ்சமே" என்கிறபடியே, அன்று அப்படியே இத்தை விரும்பினவன் இன்று இப் படியே உபேக்ஷிக்கையாலே, 'நாயகன் வரவு தாழ்த்தான்' என்று அவன் முன்னே சாந்தைப் பரணியோடே உடைப் பாரைப் போலே, என் நெஞ்சு எனக்கு வேண்டா என்கிறாள் என்பது. பக். 296.

ஆழ்வான், தான் ஓரிடத்திலே வழியிலே போகா நிற்க, ஒரு பாம்பினாலே பிடிக்கப்பட்ட தவளையானது கூப்பிடா நிற்க, 'இது யார் அறியக் கூப்பிடுகிறது?' என்று மோகித் தாராம். பக். 333.

ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவரால் அவிழ்க்க ஒண்கிற தில்லை; ஒரு சர்வ சக்தி, கர்மத்திற்குத் தகுதியாகப் பிணைத்த பிணையை அவனைக் காற் கட்டாதே, இவ்வெலி எலும்பனை சம்சாரியால் அவிழ்த்துக்கொள்ளப்போமோ? என்று பணிப் பர் பிள்ளை திருநறையூர் அரையர். பக். 363.

ஒருவன் பகவானைத் தியானம் செய்து கொண்டிருக்கச் செய்தே, 'இவன் சமாதியில் நின்ற நிலை அறியவேணும்' என்று பார்த்துச் சர்வேசுவரன் இந்திரன் வேடத்தை மேற் கொண்டு ஐராவதத்திலே ஏறிவந்து முன்னே நின்று 'உனக்கு வேண்டுவது என்?' என்ன, 'ஒரு புழுவும் தானு

மாய் வந்து நிற்கிறவன் யார்?' என்றான்; 'சர்வேசுவரன், பெரிய திருவடியை மேற்கொண்டு வந்தான்' என்னுமிடம் அறியானே யன்றோ? கொண்டு வந்த வேடம் இதுவாகை யாலே; வந்தவனைப் பார்த்து, நீ யாவன் ஒருவனை ஆஸ்ரயித்து இந்தச் செல்வம் முழுதும் பெற்றாய், அப்படிப்பட்டவனைக் காண் நான் ஆஸ்ரயிக்கிறது; இப்படி வழியிலே போவார்க் கெல்லாம் பச்சை யிட்டுத் திரியுமவன் அல்லேன் காண்; இப் போது முகங்காட்டாதே போக வல்லையே பிரானே! உன்னைக் கும்பிடுகிறேன்; என்றானே யன்றோ? பக். 425.

பகவானிடத்தில் சரணாகதி செய்து ஞானாதிகரா யிருப்பார் ஒருவர் இருந்து தம்முடைய வஸ்திரத்தைப் புரையா நின்றா ராய், அவ்வளவிலே தேவியும் தேவனுமாகப் போகா நிற்க, இவர் அநாதரித் திருந்தாராய், 'தேவியானவள், நீர் சர்வாதி கராய் இருக்க உம்மைக் கண்ட இடத்தில் இவன் அநாதரித் துக் காலை நீட்டிக் கொண்டிருந்தானே' என்ன, தேவனும் 'பகவத் பக்தன் போலே காண்' என்ன, தேவியும், 'அது தான் இருக்கிறபடி அறிவோம்' என்ன, இருவரும் இவர் பக் கலிலே வந்து, 'நீ என்? தேவர்களை மனிதர்கள் கண்டால் அவர்களிடம்சென்று வேண்டும் வரங்களும் வேண்டிக்கொள் ளக் கடவர்களாயிருப்பர்கள்; நீ நம்மைக் கண்ட இடத்தில் நீட்டின காலை முடக்குதல், சில உபசாரங்களைச் செய்தல், சிலவற்றை வேண்டிக் கோடல் செய்யாமல் இருந்தாயே' என்ன, 'அழகிது! அவையெல்லாம் செய்யக் கடவன், மோக்ஷம் தரலாமோ?' என்ன, 'அது நம்மாலே செய்ய லாமதன்று; பகவானிடத்தில் சரணாகதி செய்து அவன் திரு வருளாலே பெறவேணும்' என்ன, 'ஆகில், இன்று சாவாரை நாளை இறக்கும்படி பண்ணலாமோ?' என்ன, 'அதுவும் கர்மங்களுக்குத் தகுதியாக வன்றோ இருப்பது; நம்மால் செய்யப் போகாது' என்ன, 'ஆகில், நீ செய்யுமது, இந்த ஊசி போகும் வழியே நூலும் போகும்படி அனுக்கிரஹித்து நடக்கு மித்தனை' என்ன, தேவனும் கோபத்தாலே நெற்றி யிற் கண்ணைக் காட்ட, இவரும் காலிலே பல கண்களை உண் டாக்கிக் காட்டினார் என்ற சரிதம் இங்கு அநுசந்திக்கத்தகும். பக். 425.

யயாதி சரித்திரத்தைப் பட்டர் வாசித்துப் போந்திருக்கச் செய்தே, பிள்ளை விழுப்பரையரும் ஆப்பான் திருவழுந்தூர் அரையரும் 'வேதத்தின் பொருளை அறிதற்குக் கருவியாக

வெளிப்போந்த பிரபந்தங்களில் இது எந்த அர்த்தத்தை விரித்துப் பேசுகிறது?' என்று கேட்க, புன் சிறு தெய்வங்கள் தம்தாமை ஆஸ்ரயித்துப் பெற்றாலும் பிறர் பக்கல் ஓர் உயர்வு கண்டால் அது பொறுக்க மாட்டார்கள் என்றும், சர்வேசுவரனே 'பிறர் வாழ்வு நம் வாழ்வு' என்று நினைத்திருப்பான் என்றும் சொல்லி, ஆனபின்பு, மற்றைத் தேவர்கள் வணங்கத்தக்கவர் அல்லர், இவன் ஒருவனுமே வணங்கத் தக்கவன் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது என்று அருளிச் செய்தார். பக். 428.

மஹாபலி, ஸ்ரீ பிரஹ்லாதாழ்வான் பக்கலிலே வந்து "ராஜ்யமடைய ஒளி மழுங்கி வாராநின்றது; என் பலமும் குறைந்து வாராநின்றது; இதற்கு அடிஎன்?" என்ன, 'நீ சர்வேசுவரன் பக்கல் பண்ணின அபராதத்தாலே காண்' என்ன, "இந்த விஷ்ணு எவன்" என்பது போன்ற விருப்பு இல்லாத வார்த்தைகள் சிலவற்றைப் பேச, "எனது தலையை அறுப்பதைக் காட்டிலும் பெரிது இந்த வார்த்தை" என்கிறபடியே, என் தலையை யறுத்து என் கையிலே தந்தாயாகில் 'என் பேரன் செய்த உபகாரம்' என்று இருப்பேன் யான்; "என் முன்பே பகவானை நிந்தை செய்தாய், நீ ராஜ்யப் பிரஷ்டனுவாய்" என்று சபித்துவிட்டான்; இதனை இப்படியே பட்டர் அருளிச்செய்தவாறே, 'பிரகிருதி புருஷ விவேகம் பண்ணியிருக்கிற இவன் ஆத்மாவுக்குக் குறைவு வருவது ஒன்றனைச் சபியாமல் "ராஜ்யத்திலிருந்து நழுவினவனாய் விழுவாயாக" என்று சபிப்பான் என்? என்று கேட்க, 'நாயைத்தண்டிக்கையாவது,மலத்தைவிலக்குகையே யன்றோ, சாந்தை விலக்குகை அதற்கு விருப்பம் இல்லாதது அன்றே? ஆகையால், இவனுக்கு அநிஷ்டம் செய்கையாவது இதுவே யன்றோ?' என்று அருளிச்செய்தார். பக். 412.

'யாதவர்கள் முடிவிலே வந்தவாறே வாட்கோரையை இட்டு ஒருவரை ஒருவர் எறிந்து முடிந்து போனார்கள்' என்று கேட்டவாறே, 'கிருஷ்ணன் இவர்கள் விஷயமாகச் சங்கநிதி பத்மநிதி தொடக்கமானவற்றைக் கொடு வந்து கொடுத்துச் செய்யாதன இல்லை; பின்னையும் முடிவிலே வந்தவாறே இப்படியோயாய் இருந்தது; 'நாம் பகவானை வணங்குகிற வணக்கத்துக்கும் பலம் அங்ஙனே ஆகிறதோ? என்று அஞ்சியிருந்தோம்' என்ன, 'அங்ஙன் ஆகாது; அஞ்ச

வேண்டா; அவர்கள் 'இவன் என் தோழன், மைத்துனன்' என்று சரீர சம்பந்தத்தைக் கொண்டு விரும்புகையாலே அவர் களுக்குத் தேகம் எல்லையாய்விட்டது; நாம் சொரூப ஞானத் தாலே, நித்யனான ஆத்மாவுக்கு வகுத்த பேறு பெறவேணும் என்று பற்றுகையாலே பேறும் உயிர் உள்ள வரையிலும் இருக்கும்' என்று அருளிச்செய்தார். பக். 428.

---

ஸ்ரீ:

## பிற்சேர்க்கை III

—: o :—

# பெரியோர்கள் உரைத்த உரைநயங்கள்

## உள்ள இடங்கள்



---

ஸ்ரீ:

## பிற்சேர்க்கை IV

—:o:—

## வியாக்கியானத்தில் வந்துள்ள உவமைகள்

"பிராட்டியும் ஸ்ரீ விபீஷணாழ்வானும் இராவணனை நோக்கி நலத்தைக் கூறினாற்போன்று" பக். 4.

"வெந்து அற்ற வீட்டிலே 'ஒரு கம்பாகிலும் கிடைக்குமோ' என்று அவிக்கப் பார்ப்பாரைப் போன்று" பக். 4.

"சர்வேசுவரனுடைய ஐஸ்வரியத்தைப் பௌண்ட்ரகவாசுதேவன் அநுகரித்தாற்போலே" பக். 5.

"முந்திரிகை நிலம் உடையவனைப்போலே" பக். 6.

"கடலிலே இழிவாரைப்போலே" பக். 17.

"மருத்துவர்கள் பிழைத்தாரை எண்ணுமாறுபோன்று" பக். 26.

"உதிரம் குடித்து வாய்விட்ட அட்டைபோலே" பக். 29.

"கண்ணை இட்டுக் கண்ணைப் பார்த்தாற்போலே" பக். 37.

"சாணகச் சாற்றைப் போன்று" பக். 37.

"இராம விரஹத்தில் திருவயோத்தியையில் உள்ளார் கூப்பிட்டாற்போலே" பக். 42.

"ஸ்ரீ விபீஷணாழ்வான் இராவணனுக்குச் சொன்ன ஹிதம் அவன் திருந்துவதற்குக் காரணமாகாமல் தான் பெருமானைப் பற்றுதற்குக் காரணம் ஆனாற்போலே" பக். 43.

"ஸ்ரீ பிரஹ்லாதாழ்வான் இரணியனுக்குச் சொன்ன ஹிதம் அவன் நெஞ்சிலேபடாமல் தனக்குப் பகவானிடத்தில் பக்தி மிகுதற்குக் காரணம் ஆனாற்போலே" பக். 43.

"மூன்று களையும் பறித்துச் சங்காயமும் வாரின பயிர் நாறு கிளைகளாகப் பணைத்துப் பலிக்குமாறுபோலே" பக். 43.

"அவன் இளமைப் பருவத்தில் பாதுகாப்பதில் குறிக்கொளாயிருப்பதுபோலே" பக். 48.

"பிராஹ்மணன் பிச்சு ஏறினாலும் ஒத்துச் சொல்லுமாறு போன்று" பக். 48, 136.

"பெருக்காறு வற்றினாற்போலே" பக். 55.

"ஈஶ்வர சந்நிபதிதரைப்போலே" பக். 56.

"வில் முறித்தாலும் இக்ஷ்வாகு வம்சத்தார்க்கு அல்லது பெண் கொடாத ஜனகனைப்போலே" பக். 58.

"அவன் சக்கரவர்த்தி திருமகனாயிருக்கச் செய்தேயும் பிரகிருதி சம்பந்தமில்லாத திவ்விய திருமேனியையுடையவனாய் இருப்பதுபோன்று" பக். 64.

"மலையை எடுத்தாற்போலே" பக். 67.

"அம்புலி அம்மானைப் பிடித்துத் தரவேணும்" என்று அழுத குழந்தைக்குத் தேங்காயைக் கொடுத்து அழுகையை ஆற்றுவாரைப்போலே" பக். 73.

"வீரராய் இருப்பார் எதிரி கையில் ஆயுதத்தை வெறுங் கையோடு சென்று வாங்குமாறுபோலே" பக். 77.

"சேரபாண்டியன் தம்பிரானைப்போன்று" பக். 82.

"பயிரைச் செய்து செய்த்தலையிலே குடி கிடக்குமாறு போன்று" பக். 86.

"இந்திரனுக்கு இராச்சியம் கூறுபட்டாற்போலே" பக். 100.

"'கலியர் சோற்றின்மேல் மனம்' என்னுமாறுபோலே" பக். 101.

"ஒருவனைப் பிடிக்க நினைத்து அவன்பக்கல் உண்டான ஆசையாலே ஊரை வளைவாரைப்போலே" பக். 102.

"உண்டி உடல் காட்டும் என்னுமாறுபோலே" பக். 102.

"கடல் கிடந்தாற்போலே" பக். 105.

"செல்வத்திலே பேராசையுள்ள ஒருவன் கிழிச்சீரையைக் கெடுத்தால் அதனோடு போலியான முடிகளை எல்லாம் அவிழ்த்து அவிழ்த்துப் பார்க்குமாறுபோன்று" பக். 110.

"பித்தத்தால் பீடிக்கப்பட்டவன் சந்தனக் குழம்பில் நின்றும் கைவாங்க மாட்டாததைப்போன்று" பக். 114.

"நமக்கு அவ்விடத்திலும் இவ்விடம் அணித்தாயிருக்குமாறுபோன்று" பக். 115.

"பெருவெள்ளத்தில் புறவடி நனையாமல் இருப்பாரைப் போன்று" பக். 117.

"வீரக் கழலோடே பட்டுக் கிடப்பாரைப்போலே" பக். 118.

"தாய் தந்தையர்கள் சேர இருக்க, அவர்கள் உண்மை யிலே பசி எடுத்து வருந்தும் குழந்தைகளைப்போலே" பக். 119.

"அம்மே! என்பாரைப்போலே" பக். 119.

"மயில்கள் கார்காலத்திலே மகிழ்ச்சியினாலே ஆரவாரித்து ஆடுவதைப்போலே" பக். 128.

"பாம்போடு ஒரு கூரையிலே பயின்றாற்போலே" பக். 131.

"மைத்திரேயர் முதலிய மக ருஷிகளைப்போலே" பக். 136.

"பசுவின் அருகே கட்டிவைத்த கன்று துள்ளுமாறு போலே" பக். 140.

"குழந்தைகள் துவாரங் கண்ட இடங்களில் கையை நீட்டு மாறுபோன்று" பக். 157.

"ஸ்ரீ ஜனகராஜன் திருமகள் பெருமாளைக் கைப்பிடித்த பின்பு ஸ்ரீ மிதிலையை நினையாததுபோன்று" பக். 162.

"ஒரு பிரதேசத்திலே மேகம் மழைபெய்யாநின்றால் அவ்விடம் குளிர்ந்திருக்குமாறுபோலே" பக். 162.

"பனை நிழல்போலே தம்மை ஒருவரையும் நோக்கிக் கொள்ளுதல்" பக். 165.

"கருமுகை மாலை என்னுமாறுபோன்று" பக். 168.

"அருச்சுனனுக்குப் பொறுக்கப் பொறுக்க அருளிச் செய்தாற்போன்று" பக். 173.

"புதுப்புடைவை அழுக்குக் கழற்றுமாறுபோலே" பக். 175.

"தந்தை தண்டிக்கத் தொடர்ந்தால் தீம்பு செய்த குழந்தை தாயின் காலிலே விழுமாறுபோலே" பக். 182.

"நாம் தொடங்கின காரியம் பிரபலமான கர்மத்தாலே முடிக்க ஒண்ணாதததைப்போன்று" பக். 182.

"மலரில் மணத்தை வகுத்தாற்போலே" பக். 183.

"தாய் தந்தையர்கள் குழந்தைகளில் குறைவாளர் பக்கல் இரங்குவது போன்று" பக். 186.

"ஒருகடல் ஒரு கடலோடே சீறிக் கிடந்தாற்போலே" பக். 192.

"கருமுகை மாலையைச் செவ்வி பெறுத்த என்று நெருப்பிலே இடுவாரைப் போலே" பக். 202.

"இருடிகள் கோஷ்டியில் கலக்கம் அரிதாயிருக்குமாறு போலே" பக். 208.

"நதீ மாத்ருகம் போலே பலத்தோடே கூடி இருக்கும்" பக். 217.

"முழங்கால் தகர மூக்கிலே ஈரச் சீரை கட்டுமாறு போலே" பக். 239.

"நீரிலே புக்கு அழுந்தினரை முகத்திலே நீரைத் தெளித்துப் பரிஹரிக்குமாறு போலே" பக். 242.

"துக்கத்தாலே நிரம்பியது ஒரு கடல் கைஎடுத்துக் கூப்பிட்டாற்போலே" பக். 249.

"சேர்ந்து குளிர்ந்த தண்ணீரை விடாயற்கு எட்டாமல் வைப்பாரைப் போலே" பக். 257.

"செவ்வாய்க்கிழமையை மங்களவாரம் என்னுமாறு போன்று" பக். 261.

"கிழிச் சீரையிலே தனம் கிடக்கப் புறங்கால் வீங்குவாரைப் போலே" பக். 272.

"கலியர், கலவரிசிச்சோறு உண்ணவேணும் என்னுமாறு போன்று" பக். 278.

"யசோதைப் பிராட்டி கையும் வெண்ணெயுமாகப் பிடித்துக் கொண்டாற்போலே" பக். 282.

"காணப் பெருமையாலே அன்பு துக்கத்திற்குக் காரணம் ஆகிறாப்போலே" பக். 283.

"கள்ளியை மஹாவிருக்ஷம் என்பது போன்று" பக். 289.

"மலரில் மணத்தையே வடிவாக வகுத்தாற்போலே" பக். 293.

"முக்தன் சம்சார.யாத்திரையை நினையாதாப் போலே" பக். 294.

"தகட்டில் அழுத்தின மாணிக்கம் நிறம் பெறுமாறு போன்று" பக், 300.

"சந்நியாசிகள் தந்தாமுக்கு என்ன ஓர் இருப்பிடம் இல்லாமையாலே மாத்திரை தொடக்கமானவற்றைக் கையிலே கூடக் கொண்டு திரிவதைப் போன்று" பக். 303.

"இராவணனைக் கொன்ற பின்பு பிராட்டி நீராடி எழுந்தருளின போதை நிறம்போலே" பக். 304.

"பாண்டியர்கள் மற்றையார் கருமுகை மாலையைக் கொண்டு வளையம் வைத்தாலும், அவர்களுக்கே உரியதான வேம்பு முதலானவற்றை இட்டுக் கவிபாடுவது போன்று" பக். 308.

"இரண்டாம் பிரிவுக்கு அடியான வனவாச ஞானம் போலே" பக். 309.

"கோடியைக் காணியாக்கிக் கொண்டாற் போலே" பக். 312, 437.

"மரத்தினைப் பற்றியுள்ள நெருப்புப் போலே" பக். 315.

"காவற் காட்டில் துஷ்ட மிருகங்களுக்கு ஊட்டி இட்டு வளர்க்குமாறு போலே" பக். 315.

"செருப்பு வைத்துத் திருவடி தொழச் செல்லுவாரைப் போலே" பக். 327.

"கருவுற்ற மகளிர் பிள்ளைக்குத் தகுதியாக உணவு உட்கொள்ளுமாறு போன்று" பக். 327.

"வாளேறு காணத் தேளேறு மாய்ந்தாற் போலே" பக். 330.

"சருகிலை திரளுமாறு போலே" பக். 346.

"சோற்றை இட்டுப் பணிகொள் என்னுமாறு போலே" பக். 348.

"மொண்டெழு பானை போலே" பக். 348.

"உயிர்க் கழுவில் இருக்குமவன் நீர் வேட்கை கொண்டு தண்ணீரும் குடித்துத் திருப்தனாய் இருக்குமாறு போன்று" பக். 352.

"சரீரத்துக்கு வந்தவற்றுக்குச் சரீரியான ஆத்மா இன்புறுதல் துன்புறுதல் செய்யுமதனைப் போன்று" பக். 357.

"இந்திர ஜாலிகரைப் போலே" பக். 360.

"சேதனையும் மண்ணையும் நீரையும் கூட்டிக் குயவன் குடம் முதலியவற்றைச் செய்யுமாறு போலே" பக். 360.

"உழக்காலே அளக்குமாறு போன்று" பக். 365.

"திருவயோத்தியையில் மண்பாடு தானே ஸ்ரீராம பக்தியைப் பிறப்பிக்குமாறு போலே" பக். 369.

"ஒரு நிலத்திலே ஒரு கூறு உவர்ந்து கிடக்க, மற்றைக் கூறு விளைவதும் அறுப்பதுமாய் இருக்குமாறு போலே" பக். 371.

"உதங்கன் நிர்ப்பந்தித்தாற்போலே" பக். 372.

"அடுப்பிடு கல்லைப் போன்று" பக். 374.

"தாய் சந்நிதி ஒழியக் குழந்தை வளராதாப் போலே" பக். 389.

"கள்ளரைத் தேடிப் பிடிக்குமாறு போலே" பக். 393.

"குழந்தையினுடைய தொட்டிற் காற் கடையிலே கிடக்கும் தாயைப் போலே" பக். 398.

"பெரிய திருநாளுக்கு எல்லாத் திக்குக்களினின்றும் வந்து ஏறுமாறு போன்று" பக். 399.

"கனவில் கிடைத்த தனம்போலே" பக். 410.

"சர்வேசுவரன் தன் ,சர்வாத்ம பாவத்தைச் சொல்லுமாறு போலே" பக். 417.

"மற்றைத் தேவர்கள் விஷயத்தில் சொல்லுகிற உயர்வுகள் ஒன்று ஒழியாமல் பொய்யாய் இருக்குமாறு போலே" பக். 418.

"என் தாய் மலடி என்ன ஒண்ணாதது போன்று" பக். 434.

"இராஜபுத்திரன் ஓர் ஒலியலை உடுத்துத் தாழ இருந்தாலும் ஐஸ்வர்யத்தில் குறைந்து தோன்றாதது போன்று" பக். 436.

"கெடு மரக்கலம் கரை சேர்ந்தாற் போலே" பக். 439.

---

ஸ்ரீ:

# பிழையும் திருத்தமும்

—:o o:—

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 191 | 21 | கடந்தும் | கடந்தும், |
| 374 | 33 | 5. பக். | பக். 5. |
| 389 | 4 | ஒழிய | ஒழியக் |
| ஷை | 5 | ஒழியக் | ஒழிய |
| 417 | 21 | தன்னினின்றும் | தன்னினின்றும், |
| 434 | 19 | ‘ விஷயம் | ‘ விஷயம் ’ |
| ஷை | 21 | ‘ விஷயம் | ‘ விஷயம் ’ |

